முதல் பதிப்பு: 20, ஜூலை, 1967

[இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள மகாத்மாவின் கட்டுரைகள், பிரசங்கங்கள், உரையாடல்கள் முதலியன நவஜீவன் டிரஸ்டின் அனுமதி பெற்றவை.]



விலை ரூ. 7–50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை-29

# மகாத்மா காந்தி நூல்கள்

## 15

இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களே இந்தியாவின் உயிர் நாடி என்பது பற்றியும், கிராம சுயராஜ்யம், சுயாட்சி அரசாங்கத்தின் கீழ் கவர்னர்கள், அமைச்சர்கள், அரசாங்க அதிகாரிகள் ஆகியோரின் கடமைகள், உரிமைகள் பற்றியும் காந்திஜியின் கட்டுரைகள், அறிவுரைகள், லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கங்கள் ஆகியவை இந்தத் தொகுப்பில் அடங்கியுள்ளன.


வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில்]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை - 2

# கிராம சுயராஜ்யம்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :

முதல் இரு பாகங்கள்: அ. இராமசாமி
மூன்றும் பாகம்: ஜெயமணி சுப்பிரமணியம்

# பதிப்புரை

மகாத்மா காந்தி நூல்களின் வரிசையில் பதினைந்தாம் தொகுப்பான இந்நூல் "கிராம சுயராஜ்யம்" என்னும் தலைப்பில் வெளிவருகிறது.

நம் நாட்டில் சென்ற இருபது ஆண்டுகளில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. அவற்றின் பலனாகக் கைத்தொழில்கள் பலவாறாக வளர்ந்திருக்கின்றன. அதன் காரணமாகவும், நகரங்களில் இருக்கும் வசதிகளின் காரணமாகவும், ஏராளமான மக்கள் கிராமங்களிலிருந்து நகரங்களுக்குக் குடியேறியிருக்கின்றனர். அப்படியிருந்தும், நம் நாட்டில் கடைசியாக எடுக்கப்பட்ட ஜன சங்கியைக் கணக்கு(சென்ஸஸ்), இன்னும் நம் நாட்டில் நூற்றுக்குச் சுமார் எண்பது பேர் கிராமங்களில் இருப்பதாகவே காண்பிக்கிறது. நம் தேசீய வருமானத்திலும் நூற்றுக்கு ஐம்பது விகிதம் விவசாயத்திலிருந்துதான் இன்னும் வருகிறது. அது மாத்திரமல்லாமல் நமது வாழ்க்கைக்கு அடிப்படையாக இருக்கும் உணவுப் பொருள்களும், நமது கைத்தொழில்களுக்கு மூலாதாரமாக இருக்கும் பருத்தி, எண்ணெய் முதலிய பொருள்களும் கிராமங்களிலிருந்து தான் வரவேண்டியிருக்கின்றன. எனவே நம் நாடும் மக்களும் க்ஷேமமாக இருக்க வேண்டுமானால், நம் கிராமங்களை நன்றாகப் பராமரிக்க வேண்டியது அவசியம் என்று காந்தி அடிகள் பல இடங்களில் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்.

கிராம வளர்ச்சிக்கும் பராமரிப்புக்கும் அவசியமான சாதனங்கள், கிராம ஆட்சி, கிராம மக்களின் முன்னேற்றம் இவை பற்றி காந்தி அடிகள் சொல்லியிருக்கும்

கருத்துகள் இந்நூலில் தொகுத்து அளிக்கப்பட்டிருக்கின்றன. இதன் இரண்டாம் பாகத்தில் பார்லிமெண்ட், சட்டசபைகள், கவர்னர்கள், அரசாங்க அதிகாரிகள் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டும்? அவர்களின் கடமைகள் என்ன? அவர்கள் மக்களிடையே எப்படி வாழ வேண்டும்? அவர்கள் மக்களின் எஜமானர்களா அல்லது ஊழியர்களா? என்பன போன்ற வினுக்களுக்கு காந்தி அடிகளுக்கே சொந்தமான சீரிய முறையில் விடைகள் காணலாம். முக்கியமாக பார்லிமெண்ட், சட்டசபை அங்கத்தினர்களுக்கும், பல்வேறு உத்தியோகங்களில் வேலை செய்பவர்களுக்கும் இப்புத்தகம் பெரிதும் பயனளிக்கும் என்று நம்புகிறோம்.

இதுவரை வந்த புத்தகங்களை வரவேற்ற தமிழ் மக்கள், இதையும் அன்புடன் ஏற்றுப் பயன் பெறுவார்கள் என்று நம்புகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்,
கோவை ஜில்லா, 3—7—1967.

**தி. சு. அவினாசிலிங்கம்**
தலைவர்
காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்

# பொருளடக்கம்

இரண்டாம் பாகம்

## காந்திஜி எதிர்பார்க்கிறுர்



பகுதி ஒன்று

## அரசியல் சாசனம்



பகுதி இரண்டு

## சட்டசபைகள்



பகுதி மூன்று

## சட்டசபை உறுப்பினர்கள்

பகுதி நான்கு

## சட்டசபை உறுப்பினர்களின் ஊதியம்



பகுதி ஐந்து

## சட்டசபை உறுப்பினர்களுக்கு எச்சரிக்கை



பகுதி ஆறு

## வாக்குகள், வாக்குரிமை, சட்டசபை



பகுதி ஏழு

## பதவி ஏற்பும் அமைச்சர்கள் முன் உள்ள பணியும்

பகுதி எட்டு

## அமைச்சர்களின் ஊதியங்கள்



பகுதி ஒன்பது

## அமைச்சர்கள் கடைப்பிடிக்க வேண்டிய முறைகள்

பகுதி பத்து

## அமைச்சர்களைப் பற்றிய குற்றச்சாட்டு



பகுதி பதினொன்று

## அமைச்சர்களும் அஹிம்சையும்

பகுதி பன்னிரண்டு

## கவர்னர்கள், அமைச்சர்கள் பொறுப்பு



மூன்றும் பாகம்

## லண்டனில் காந்திஜி

## பின்சேர்க்கைப் பகுதி



ஏழை, பணக்காரர் எல்லோரும் தினந்தோறும் செய்யவேண்டிய
கடவுள் ஆராதனை நூற்பு யக்ஞமே. —காந்திஜி.

# வாசகருக்கு

என்னுடைய எழுத்துக்களை விரும்பிப் படிப்பவர்களுக்கும் அவைகளில் அக்கறை கொண்டுள்ளவர்களுக்கும் நான் ஒரு விஷயத்தைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

முன்னல் சொன்னதிலிருந்து முரண்படாது எதையும் கூற வேண்டுமென்பதில் நான் அக்கறைப் பட்டுக் கொள்வதில்லை. சத்தியத்தை நாடி நான் சென்றதில் நான் ஏற்கனவே கொண்டிருந்த பல கருத்துக்களை விட்டு, புதிதாகப் பல விஷயங்களைக் கற்றுக்கொண்டிருக்கிறேன். எனக்கு வயதாகிவிட்டதென்ருலும், எனது ஆன்மா வளர்ச்சியடையாது நின்றுவிட்டதென்றோ அல்லது எனது ஊனுடல் போய்விட்ட பின்பும் என் வளர்ச்சி நின்று விடுமென்றோ நான் எண்ணுவதில்லை. ஆகையால், எனது அக்கறையெல்லாம், க்ஷணத்துக்கு க்ஷணம் சத்தியத்தின் அழைப்புக்கு, எனது ஆண்டவனின் கட்டளைக்குப் பணிந்து செல்வதேயாகும். ஆகவே எனது இரண்டு வாசகங்களுக்கிடையே ஏதாவது முரண்பாடு இருப்பதாக வாசகருக்குத் தெரிந்தால்—அந்த முரண்பாட்டைக் கண்ட பின்பும் எனது மதியின் நன்னிலையில் அவருக்கு நம்பிக்கை இருப்பதாளுல்—ஒரே பொருளைப்பற்றிய இரண்டு வாசகங்களில் எது பிந்தியதோ அதை அவர் எடுத்துக் கொள்வது நலம்.

ஹரிஜன்—29-4-1933

மோ. க. காந்தி

# முன்னுரை

"கிராம சுயராஜ்ய"த்தைப்பற்றி மகாத்மா காந்தி எழுதியவைகளில் முக்கியமானவைகளைப் பொறுக்கி யெடுத்து, ஒரு புத்தக வடிவில் நவஜீவன் பதிப்பகத்தார் வெளியிடுகின்றனர் என்பது உண்மையில் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். விவசாயம், கிராமத்தொழில், கால்நடை வளர்ப்பு, போக்குவரத்து, ஆதாரக் கல்வி, சுகாதாரம், உடல் நலம் உள்படக் கிராம வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப்பற்றி காந்திஜியின் கருத்துக்கள் என்னவென்பது இந்த வெளியீட்டில் அடங்கியிருக்கின்றன. அரசியல், பொருளாதார சக்தியை விரிவான முறையில் பரவல் மயமாக்க வேண்டுமென்ற அடிப்படையில் இந்தியாவில் பஞ்சாயத்து ராஜ்யத்தை ஸ்தாபிக்க நாம் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், ஏராளமான அதிகாரிகளுக்கும் அதிகாரச் சார்பற்ற ஊழியர்களுக்கும் இந்தப் புத்தகம் மிகவும் உபயோகமுள்ளதாய் இருக்கும். பெரும்பாலும் மேற்கு ஜனநாயக நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஏதோ ஒரு வகைத் திட்டம் என்று சமுதாய வளர்ச்சி இயக்கத்தைக் கருதிவிடக்கூடாது; இந்திய நிலைமைகளையும் பரம்பரையையும் அது அனுசரித்து இருப்பது அவசியம். ஆகையால், இந்த இயக்கத்தில் பங்கு கொள்வதற்காகப் பயிற்சி அளிக்கப்படும் எல்லா ஊழியர்களும் கிராமப் புனருத்தாரணத்தின் பல்வேறு அம்சங்களில் போதுமான அறிவுபடைத்தவர்களாய் இருக்க வேண்டுமென்பது தலையாய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்தியாவின் திட்டம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதைப்பற்றி காந்திஜிக்கு இருந்த அனுபவத்தையும் அவர் கொண்டிருந்த கருத்துக்களையும் நாம் கவனியாது விட்டுவிடுவோமானால், நம்முடைய ஜனநாயகம் நல்ல அஸ்திவாரத்தில் உருவாவதற்குப் பெரிய இடையூறு செய்தவர்களாவோம்.

நவீன முறையில் தொழில் மயமாக்குவதைப்பற்றி காந்திஜி பத்தாம்பசலிக் கருத்துக்களைக் கொண்டிருந்தார் என்று எண்ணுவது தவறாகும். உண்மையைச் சொல்லப்போனால், யந்திர மயமாக்குவதை முழுமையாக அவர் எதிர்க்கவில்லை. யந்திரங்கள்மீது கொண்டுள்ள வெறியைத் தான் அவர் வன்மையாக எதிர்த்தார். கிராமங்களில் உள்ள கோடிக்கணக்கான கை

வேலைப்பாட்டுத் தொழிலாளிகளுக்கு வேலைதரக்கூடிய சிறிய யந்திரங்களில் செய்யக்கூடிய ஒவ்வொரு சீர்திருத்தத்தையும் அவர் வரவேற்றூர். பெரிய தொழிற்சாலைகளில் மொத்தமாகப் பொருள்களை உற்பத்திசெய்து குவிப்பதைக் காட்டிலும், பொது மக்கள் தங்களுடைய வீடுகளிலும் குடிசைகளிலும் பொருள்களை உற்பத்தி செய்வதை ஆதரித்தார். இந்தியாவில் உடலால் உழைக்கும் சக்திவாய்ந்த ஒவ்வொரு குடிமகனுக்கும் முழு நேர வேலை அளிக்க வேண்டுமென்பதில் காந்திஜி மிகவும் ஆவலுடன் இருந்தார். நாட்டுப்புறங்களில் கிராம, குடிசைத் தொழில்களைத் திறமையான முறையில் நிறுவுவதன் மூலந்தான் இந்தக் குறிக்கோளைச் சாதிக்கமுடியும் என்பதை அவர் நிலைநாட்டினர். கிராமப்புறங்களில், பயன்படுத்தப்படாது சும்மாயிருக்கும் மனித சக்தியைப் பூரணமாகப் பயன்படுத்தாத எந்தப் பொருளாதாரத் திட்டத்தையும் சரியானதென்றோ அல்லது விஞ்ஞான பூர்வமானதென்றோ கூறமுடியாது. "பஞ்சத்தால் அடிபட்டு, வேலையற்றிருக்கும் மக்களுக்கு, வேலையாகவும், (உணவுக்கான உறுதி என்ற முறையில்) சம்பளமாகவும் கடவுள் தோன்றவேண்டும். அந்த ஏழை மக்கள், கடவுள் இவ்வாறு காட்சி அளிப்பதைத் தான் ஏற்பார்கள்" என்று காந்திஜி ("காந்திஜி பொன்மொழிகள்"—திரு. என். கே. போஸ் திரட்டியவை—பக்கம் 49) கூறியிருக்கிறூர். முழுவேலை அளிக்க வேண்டுமென்ற இந்த லட்சியத்தை இப்போது மேற்குநாட்டுப் பொருளாதார நிபுணர்கள் ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு—அதிலும் குறிப்பாக, நிறைய மக்கள் தொகையுள்ளவையும் மக்கள் தொகை வேகமாகப் பெருகிக் கொண்டு வருகிறவையுமான வளர்ச்சியடையாத நாடுகளுக்கு—இது அடிப்படையானது என்று அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறூர்கள். வேலையில்லாத் திண்டாட்டத்துடன் பொருள் உற்பத்தியை அதிகப்படுத்துவதைக் காட்டிலும், முழுவேலை அளிப்பது மிகவும் விரும்பத்தக்கது என்பது கால்பிரெய்த் கருத்து. ("செழிப்பான சமுதாயம்", பக்கம் 155)

கிராமப் பஞ்சாயத்துக்கள் என்ற அமைப்பின்மூலம் பொருளாதார, அரசியல் சக்தியைப் பரவல் மயமாக்க வேண்டுமென்பதை மகாத்மா காந்தி ஆணித்தரமாக வலியுறுத்தினர். இந்தியாவில் உள்ள பஞ்சாயத்து முறையை விஞ்ஞான பூர்வமாக நாம் அமுல் நடத்துவதினல், நாட்டுப்புறத்தின் பொருளாதார, சமூக பலத்தை அது உருவாக்குமென்பது மட்டுமல்லாது, வெளிநாட்டுப் படையெடுப்பு என்ற அபாயத்துக்கு எதிராக, தேசீயப்

பாதுகாப்புச் சக்திகளையும் பலப்படுத்தும் என்ற திட்டவட்டமான கருத்து அவருக்கு இருந்தது. கிராமதானத்தின் மூலம், இந்தியக் கிராமங்களைக் கூட்டுறவு சமுதாய அடிப்படையில் அமைக்க வேண்டிய உடனடி அவசியத்தை ஆச்சார்ய விநோபா பாவேயும் அதிகம் வலியுறுத்திக் கொண்டு வருகிறார். இவ்வாறு ஜனநாயகத்தைப் பரவல் மயமாக்குவது அல்லது பஞ்சாயத்து ராஜ்யத்தை அமைப்பது என்ற லட்சியத்தை, பத்தாம் பசலி எண்ணங்களை அடிப்படையாகக் கொண்ட, பகுத்தறிவுக்கு இடமில்லாத வெறும் மன உணர்ச்சியாலான திட்டம் என்று கருதிவிடக்கூடாது. மேற்குநாட்டில் தற்போதுள்ள நவீன பொருளாதார, அரசியல் சிந்தனைகளைப் படித்துப் பார்க்கும் போது, ஜனநாயகமானது ஒரு நிலையான அஸ்திவாரத்துடன் ஸ்தாபிதமாவதற்குப் பரவல் மயமான ஸ்தாபனங்கள் அத்தியாவசியம் என்று இப்போது கருதப்படுவதாகத் தெரிகிறது. "சமூக நடவடிக்கையில் மனிதனுக்குள்ள நம்பிக்கையைப் புத்துயிர் பெறச் செய்ய வேண்டுமானால், அரசாங்கத்தைச் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்து அதனுடைய அலுவல்களைப் பரவல் மயமாக விநியோகிக்க வேண்டும்", என்று பேராசிரியர் ஜோட் கூறுகிறார். ("நவீன அரசியல் சித்தாந்தம்", பக்கம் 120-21) "பேபியன் சோஷலிசம்" என்ற நூலில் பேராசிரியர் கோல் வலியுறுத்திக் கூறுகிறார் : "நம்முடைய ஆண்களும் பெண்களும் பரவலாகக் கூட்டுமுறையில் செயலில் ஈடுபடுவதற்கான சக்தியை ஊட்ட, சிறு ஜனநாயகங்களின் மூலமாக நம்முடைய சமுதாயத்தை நிர்மாணிக்கத் தொடங்க வேண்டும்". இந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது, இந்தியாவின் கிராமப் புறங்களில் ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் மேற்கொள்ளப் பட்டுள்ள பஞ்சாயத்து ராஜ்யம் என்ற சோதனையானது, காந்திஜி கனவு கண்ட "கிராம சுயராஜ்யம்" என்னும் லட்சியத்தை அடையச் சரியான வழியாகும்.

இவைகளுக்கெல்லாம் மேலாக, லோகாயத நலன்களை மட்டும் அடிப்படையாகக் கொண்ட சமூக, பொருளாதார அமைப்பு காந்திஜியின் லட்சியமல்ல என்பதை நாம் நம்முடைய மனதில் தெளிவாகக் கொள்ளவேண்டும். எளிய வாழ்க்கையும் உயர்ந்த எண்ணமும் என்ற குறிக்கோளே உயர்ந்தது என்று அவர் கொண்டார். அவர் உயர்ந்த தரமான வாழ்க்கைக்காகப் பாடுபட்டாரே யொழிய, உயர்ந்த வாழ்க்கைத் தரத்துக்காக மட்டும் பாடுபடவில்லை. "உண்மையான நாகரிகம் என்பது நமது தேவைகளைப் பெருக்கிக் கொண்டுபோவதில் இல்லை,

மனமார நமது தேவைகளைக் குறைத்துக் கொள்வதில் தான் இருக்கிறது'', என்று காந்திஜி கூறினர்.

துரதிருஷ்ட வசமாக, பொருளாதார வாழ்க்கையில் உள்ள இந்த தார்மீக, அறநெறி அம்சமானது பெரும்பாலான சந்தர்ப்பங்களில் அலட்சியம் செய்யப்படுகிறது; இதனல் உண்மையான மனித நலனுக்குப் பாதகம் ஏற்படுகிறது. ''விரிவான அடிப்படையில், விரைவாகப் பொருளாதார வளர்ச்சி ஏற்பட வேண்டுமானல், சரக்குகளில் முதலீடு செய்வதுடன், மனிதனிலும் முதலீடு செய்யவேண்டும். இது உடனடியான அவசியம்'', என்று நவீனப் பொருளாதார வல்லுனர்கள் இப்போது வலியுறுத்தி வருகின்றனர். ''பொருளாதார, அரசியல் ஜனநாயகம் வெற்றி பெறுவதற்குத் தக்க திறமையும் ஒழுக்க குணமும் உள்ள தனிப்பட்டவர்கள் போதுமான அளவில் இருக்கவேண்டும்'', என்று பேராசிரியர் ஸ்கும்பீடர் கூறுவது சரியே (''முதலாளித்துவம், சோஷலிசம், ஜனநாயகம்'') இதே கருத்தைத் திரு கிராஸ்லேண்ட், ''செல்வ வளம் நிறைந்த ஒரு சகாப்தத்தை அனுபவிக்க, எந்தெந்தக் கோட்பாடுகள் நமக்கு உதவியாக இருக்குமோ, அந்தக் கோட்பாடுகளை மறந்துவிட்டு, அவ்வித சகாப்தத்தில் நுழைய நாம் விரும்பவில்லை'' என்ற வார்த்தைகளில் அழகாகக் கூறுகிருர். (''சோஷலிச எதிர்காலம்'', பக்கம் 529). ஆகையால் காந்திஜி கனவு கண்ட ஒரு புது இந்தியாவை நிர்மாணிக்கும் பெரிய முயற்சியில் ஈடுபட்டுள்ள ஊழியர்கள், அதிகாரிகள், அதிகாரிகளல்லாதார் ஆகிய எல்லோரும் நம்முடைய திட்டத்தில் உள்ள இந்த மனித, தார்மீக அம்சத்தை நன்கு ஞாபகத்திற் கொள்ளவேண்டும்.

ஸ்ரீமன் நாராயண்

புது டில்லி, 13-11-1962.

# முகவுரை

மனித சமுதாயத்தின் ஐக்கியம் என்னும் லட்சியம் உலக ராஜதந்திரிகளையும் விஞ்ஞானிகளையும் இலக்கிய கர்த்தாக்களையும் பாமரர்களையும் இன்று கவர்ந்திருக்கும் அளவு இதுவரை வேறு எந்தக் காலத்திலுமே கவர்ந்ததில்லை. ஸ்ரீ அரவிந்தரின் வார்த்தைகளில் கூறவேண்டுமானால், "மனித ஒருமைப்பாடு என்னும் லட்சியம் ஓரளவு தெளிவற்ற முறையில், நமது உணர்வின் முன்பகுதிக்கு இன்று வந்துகொண்டிருக்கிறது. நம்முடைய சகாப்தத்தின் அறிவு வளர்ச்சியும் மற்ற லோகாயத சூழ்நிலைகளும் சில குறிப்பிடத்தக்க விஞ்ஞான கண்டுபிடிப்புகளை அளித்திருக்கின்றன. இவ் விஞ்ஞான கண்டுபிடிப்புக்கள், உலகத்திலுள்ள மிகப் பெரிய அரசையும் ஒரு நாட்டிலுள்ள சிறிய மாகாணத்தைப் போன்று கருதும் அளவுக்கு உலகத்தைச் சிறிதாக்கி இருக்கிறது." * ஆர்னல்ட் டாயின்பீயும் சரியாகக் கூறுகிறார்: "தொழில் நுணுக்கத்தில் மேற்கு நாடுகளுக்குள்ள தீரமானது - ஏற்கனவே புலமை அழகுடன் கூறப்பட்டதுபோல - தொலைவு என்பதே இல்லாமற் செய்துவிட்டது. அதே சமயம், வரலாற்றிலேயே முதன் முதலாக, மனிதவர்க்கத்தை அழிக்கக்கூடிய சக்தி வாய்ந்த ஆயுதங்கள் மனிதர்களிடம் கிடைக்குமாறு செய்திருக்கிறது.

## ஒன்றுபடவேண்டும்

நாம் ஏன் ஐக்கிய மடையவேண்டும் என்று கூறுவதற்கான காரணம் ஒருபுறம் வியப்பூட்டக்கூடிய தென்றாலும், மற்றொரு புறம் எல்லோரும் அறிந்ததே. 'உலகம் ஒன்றாகவேண்டும் அல்லது ஒன்றுமே இல்லாமலாகிவிடும்' என்ற அழகான சொற்களில் இது வெட்டு ஒன்று துண்டு இரண்டாகக் கூறப்பட்டுள்ளது. இந்த அணு சகாப்தத்தில் யுத்தத்தை நாம் ஒழிக்காவிட்டால், யுத்தமானது நம்மை ஒழிக்கத்தான் போகிறது என்பது இன்றைய உலகில் அரசியல் உணர்வுள்ள ஒவ்வொரு ஆண், பெண்ணுக்கும் வெளிப்படையாகத் தெரியும்." **

---

* "மனித ஒருமைப் பாட்டு லட்சியம்" என்ற நூலிலிருந்து.

** "ஒரே உலகமும் இந்தியாவும்" என்ற நூலிலிருந்து. இந்த நூலில் குறிப்பிடப்படும் டாயின்பீயின் மேற்கோள்களெல்லாம் இந்தப் புத்தகத்திலிருந்தே எடுக்கப்பட்டுள்ளன.

பிட்ரிம் சோரோகின், தம்முடைய ஒப்பில்லாத சொற்களில், உலகின்முன் தற்போதுள்ள பிரச்னையைக் கீழ்க்கண்டவாறு கூறியிருக்கிறார் : "யுத்தத்தினால் ஏற்பட்ட காயங்களிலிருந்து ஒருபுறம் ரத்தம் வடிந்துகொண்டிருக்கிறது; மற்றொருபுறமோ அணுசக்தியால் எழுந்துள்ள அழிவுப் பூதங்களைக் கண்ட பயம். இந்த நிலைமையில், தற்போது தன் முன்னுள்ள மரண வலையிலிருந்து தப்புவதற்கான ஒரு வழியை மனித வர்க்கம் ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது. பழியுடன் மரணமடைய வேண்டாம்; வாழ்வுவேண்டும் என்று அது கெஞ்சுகிறது. யுத்தத்திற்குப் பதிலாக அமைதியை அது விரும்புகிறது. வேற்றுமையின் இடத்தில் அன்புவேண்டும் என்ற பசி அதற்கு அதிகம். ஒழுங்கின்மை இருக்கும் இடத்தில் ஒழுங்கை நிலை நிறுத்த வேண்டும் என்பதை அது நோக்கமாகக் கொண்டிருக்கிறது. இதைக் காட்டிலும் சிறந்ததாக மனித சமுதாயம் இருக்க வேண்டும்; அதிக விவேகம் வேண்டும். மனிதயந்திர நாகரிகத்தில் உள்ள ரத்தந்தோய்ந்த கந்தல் ஆடைகளைக்காட்டிலும் அழகான, மெல்லிய ஆடைகள் தன் உடலுக்கு வேண்டும் என்றெல்லாம் கனவு காண்கிறது. முட்டாள்தனமாக அது ஒரு மரண வலையில் சிக்கிக்கொண்டதாகையால் இருப்பதா அல்லது இறப்பதா என்ற தவிர்க்க முடியாத பிரச்னை அதற்கு ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் நிரந்தரமாக வாழ்வதற்கும் அமரத்வம் அடைதற்கும் என்ன செய்வது என்ற கேள்விக்கு விடை காண்பதில் முன் எக்காலத்திலும் இருந்ததைக் காட்டிலும் அது அதி தீவிரத்துடன் ஈடுபட்டிருக்கிறது." *

## உலக அரசாங்கம்

மரண அபாயத்தை விளைவிக்கும் ஆயுதங்களால் தற்போது மனித வர்க்கத்துக்கு அறைகூவல் ஏற்பட்டிருக்கிறது. இவ்வித அறைகூவலுக்கு உள்ளாகியிருக்கும் மனிதவர்க்கம், சரியான வழியில் செயல்படத் தவறிவிட்டால், அதற்குள்ள மாற்றுவழி பூரண அழிவுதான். மனித வர்க்கம் காப்பாற்றப்படுவதே உலக அரசாங்கம் ஸ்தாபிக்கப்படுவதில் தான் இருக்கிறது. யுத்தத்தைத் தவிர்க்க வேண்டும் என்பதனால் ஏற்பட்ட அவசியம் இதைத் தவிர்க்க முடியாததாகச் செய்துவிட்டது. உண்மையான உலக அரசாங்கத்தை ஸ்தாபிப்பது என்பதற்கோ, ஏற்கனவே உள்ள தேசீய அரசாட்சிகளை ஒழித்துவிடுவதென்பதுதான் பொருளாகும்.

---

* "மனிதவர்க்கத்தின் புனருத்தாரணம்" என்ற நூலிலிருந்து.

## இம்சைப் பாதை கூடாது

எவ்வாறு உலக அரசாங்கத்தை அமைப்பதென்பது ஒரு முக்கியமான கேள்வி. ஏனென்றால், தேசிய ஆட்சிகளை அகற்றுவதென்பது நடைமுறையில் எளிதான காரியமல்ல. கீழ்க்கண்டவாறு காந்திஜியைப் போன்று கூறக் கூடியவர்கள் உலகில் ஒரு சிலரே இருப்பார்கள்: "உலக நாடுகளெல்லாம் ஒன்றையொன்று சார்ந்திருக்க வேண்டுமென்பதற்குத் தயாராயிருக்கிறோம். சுதந்திரத்தைக் காட்டிலும் இதற்கு நாம் அதிகம் தயார். இவ்வாறு நாம் கூறுவதில் சாத்தியமற்றதோ அல்லது பெருமைப்படத் தக்கதோ எதுவும் இருப்பதாக நான் எண்ணவில்லை...... தன்னல மறுப்பின் இயற்கையான வளர்ச்சி இதுதான். அதாவது, சமூகத்தின் நலனுக்காகத் தனிப்பட்ட மனிதன் தனது சொந்த நலனைத் தியாகம் செய்கிறான். ஜில்லாவின் நலனுக்காக ஒரு சமூகம் தனது நலனைத் தியாகம் செய்கிறது. இதே போன்று, மாகாணத்துக்காக ஜில்லாவும், தேசத்துக்காக மாகாணமும், உலகத்திற்காக தேசமும் தங்கள் நலனைத் தியாகம் செய்கின்றன." ஆர்னால்ட் டாயின்பீ கூறுவதாவது: "இந்த அணு சக்தி யுகத்தில், நம்முடைய ராஜதந்திரிகளிடம் நாம் எதிர்பார்க்கும் மன உணர்வு, அசோகனிடமிருந்த மன உணர்வு தான் (அதாவது அஹிம்சை தான்). ஐக்கியம் இல்லாமல் நாம் எதுவும் செய்ய முடியாது. ஆனால் இந்தத் தவிர்க்க முடியாத குறிக்கோளை வன்முறையின் மூலம் நாம் இனிமேலும் அடைய முடியாது. மனித வர்க்கத்தின் ஐக்கியத்திற்காக நம் காலத்தில் நாம் பயன்படுத்தக்கூடிய ஒரே சாதனம் மனமாற்றம் தானே யொழிய நிர்ப்பந்தம் அல்ல. அணு சக்தி யுகத்தில் பலாத்காரத்தைப் பயன்படுத்துவதானது மனித சமுதாயத்தை ஐக்கியப்படுத்துவதற்கு உதவாது; அதற்குப் பதிலாக நம்மை நாமே அழித்துக் கொள்வதில்தான் போய் முடியும். அசோகன் தன்னுடைய காலத்தில் மனச்சாட்சியின் காரணமாக மட்டும் எந்தக் கொள்கையைப் பின்பற்றினானோ அந்தக் கொள்கையை இந்த சகாப்தத்தில் மனச்சாட்சி மட்டுமல்லாது பயத்தின் காரணமாகவும் நாம் கடைப்பிடிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது." இவ்வாறாக, இம்சைப் பாதையானது மனித வர்க்கத்தைப் பொறுத்தவரை எல்லாக் காலத்துக்குமே மூடப்பட்டு விட்டது என்பது தெளிவாகிறது. ஸ்ரீ பரதன் குமரப்பாவின் "கிராமீயம்" என்ற நூலுக்கு எழுதிய முன்னுரையில், மகாத்மா காந்தி கூறினார்:

"நம்முடைய சந்ததியில் ஏற்பட்டுள்ள கடந்த இரண்டு யுத்தங்களும், இப்படிப்பட்ட பொருளாதார அமைப்புக்கள்

முற்றிலும் பயனற்றவை என்பதை மெய்ப்பித்திருக்கின்றன. தற்செயலாக, இந்த யுத்தங்கள், யுத்தம் என்பதே பயனற்றது என்பதையும் நிரூபித்திருக்கின்றன.'' ஆகவே இப்போது உதயமாகி யிருப்பது அஹிம்சா சகாப்தம் என்று நாம் கூறலாமா? உலகிலுள்ள அரசியல் வாதிகளெல்லாம், அலட்சிய பாவத்துடன் செய்யப்பட்டது போன்று, ஒதுக்கப்பட்டிருந்த இந்த வற்றாத அஹிம்சை என்னும் கருவூலத்திலிருந்து வளம் பெறுவதைத் தவிர உலகத்திற்கு வேறு வழியே இல்லை. இந்தியா நிறைவேற்ற வேண்டிய ஒரு திட்டவட்டமான குறிக்கோள் இருக்கிறது என்று காந்திஜி நம்பினர். அவர் கூறுகிருர் : "துன்பத்தினல் முனங்கிக் கொண்டிருக்கும் ஒரு உலகிற்கு, சுதந்திரமான எழுச்சி பெற்ற இந்தியாவிடம் ஒரு செய்தி இருக்கிறது. அதுதான் சமாதான, நல்லெண்ணச் செய்தி''. மற்ரொரு சமயம் அவர் கூறினர்: "இரத்தம் சிந்தி மரணம் அடைவதன் மீது உலகத்திற்கு வெறுப்பு ஏற்பட்டு விட்டது. இதிலிருந்து மீளுவதற்கான ஒருவழியைக் கண்டு பிடிக்க உலகம் முயன்று கொண்டிருக்கிறது. இந்த வேட்கையில் உலகத்திற்கு வழிகாட்டும் பெருமை இந்தப் புராதன நாடாகிய இந்தியாவுக்குக் கிடைக்கும் என்று நம்பி நான் பெருமைப் பட்டுக் கொள்கிறேன்.'' ஆர்னல்ட் டாயின்பீ கருத்துப்படி, உலகிற்கு இந்தியா விசேஷமாக அளித்தது அதனுடைய தாராளமும் பரந்த மனேபாவமுந்தான்... எதிர்கால சந்ததியினர் திருப்பிப் பார்க்கும்போது, ஐக்கியமடைந்த மனிதகுலத்திற்கு இந்தியா இயல்பாக அளித்த வெகுமதிகள் இவை என்பதை உணருவார்களென நான் நம்புகிறேன்.''

## பரவல் மய அமைப்புகள்

தகராறுகளைத் தீர்த்துக் கொள்வதற்கு, ராணுவ பலமே முடிவான வழியென்று இருக்கும் வரை உலக அரசாங்கத்தின் மூலம் உலக அமைதியை ஸ்தாபிப்பது வீண் கனவாகவே இருக்கும். நமக்கு நிரந்தரமான அமைதி இருக்க வேண்டுமானல், பலாத்காரத்தைப் பூரணமாகக் கைவிட்டு விட வேண்டும். தார்மீக அதிகாரத்துடன் அமைக்கப்பட்ட ஒரு உலக அரசாங்கத்தினல் தான் நிரந்தரமான சமாதானத்தை ஏற்படுத்த முடியும். பெரிய நாடுகளோ, சிறியனவோ எல்லாவற்றிற்கும் சமத்துவமும் சகோதரத்துவமும் வழங்கக் கூடிய அடிப்படையில் அமைந்த ஒரு உலக சமஷ்டி அரசாங்கமானது, உலக அமைதியைப் பாதுகாப்பதில் எவ்வளவோ உதவ முடியும். மற்றப்படி, உலக அரசாங்கம் மட்டும் சமாதானத்துக்கு உறுதி அளித்துவிடமுடியாது. ஏனென்ருல் யுத்-

தத்திற்கான மூலகாரணங்கள், முரண்பாட்டை வளர்க்கக்கூடிய வாறு அமைந்துள்ள பல்வேறு தேசங்களின் சமூக, பொருளாதார முறைகளில் இருக்கின்றன. ஆகவே அடிப்படையிலிருந்து இதை மாற்றினுலொழிய உலக சமாதானம் என்பது ஒரு கற்பனையாகவே இருக்கும். ஆகையால் ஒரு உலக அமைப்பானது, உண்மையான ஜனநாயகம் செயல்படுவதற்கு உறுதி தரவேண்டும். சுரண்டல் எந்த முறையில் அல்லது உருவில் இருந்தாலும், அதை அகற்ற வேண்டும். சிறு சிறு அமைப்புகள்தான் உண்மையான ஜன நாயகம் செயல்படுவதற்கு உதவுகின்றன; தனிப்பட்டவர் முழு வளர்ச்சி அடைவதற்கான வாய்ப்பை அளிக்கின்றன. எந்த அள விற்குப் பெரிதாக அமைப்புகள் இருக்கின்றனவோ அந்த அளவுக் குத் தனிப்பட்டவர் முயற்சியும் சுதந்திரமும் குறைச்சலாக இருக்கும். எல்லாம் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என் பதிலும், எல்லோரையும் ஒருங்கு திரட்டிச் செயல்படுத்துவதிலும் பெரிய அமைப்புகள் அக்கறையாக இருக்கும். ஆகையால் அவை தனிப்பட்ட மனிதர்கள், சிறு குழாம்கள் ஆகியவற்றின் வளர்ச் சியைத் தடுத்துவிடும்; இறுதியில் தேக்கமடைவதிலும் சிதைவு படுவதிலும் போய் முடியும். ஆகையால், நிரந்தரமான உலக சமாதானத்தை அடைவதற்கு, தற்போதுள்ள அரசியல், பொருளா தார முறைகள் சீரமைக்கப்படவேண்டும்; பரவல் மயமான சிறு அமைப்புகளை நிர்மாணிக்கக் கூடிய முறையில், புனரமைக்கப்பட வேண்டும். இல்லையேல், உலக சமாதானத்தை ஸ்தாபிக்கும் குறிக்கோளே கெட்டுவிடும்; உலக அரசாங்கம் அமைப்பதும் அபாயத்திற்குள்ளாகும். இதைத் தொடர்ந்து தீர்க்க முடியாத பல பெரிய பிரச்னைகள் கிளம்பும். ஆகையால், நாம் பரவல் மயமான அரசியல், சமூக அமைப்புகளை வரவேற்பது தவிர்க்க முடியாதது.

## பல்வேறு சுவைகள்

கூட்டு வாழ்க்கையானது சிறுசிறு, எளிய அமைப்புகளில் குவிந்திருக்கும் போது அதிக மகிழ்ச்சிகரமானதாகவும், பல்வேறு சுவைகள் கலந்ததாகவும், பலனளிக்கக்கூடியதாகவும் இருக்கிறது என்பதற்கு மனித வர்க்கத்தின் அனுபவமே சான்று பகர்கிறது. சிறு அமைப்புகளில் தான் வாழ்க்கைச் செறிவு இருக்கிறது. ஒரு விசாலமான பகுதிக்குள் பரந்து கிடக்கும் மக்கள் ஒரு கூட்டு அமைப்பின் கீழ் வாழ்ந்தால் அதில் போதுமான இணைப்போ அல்லது செழிப்போ இருக்காது.

புராதன கிரேக்க நகர அரசுகளும் இந்திய கிராமக் குடியரசு களும், எல்லா வகையிலும் வளமும் ஆக்கமும் நிறைந்த வாழ்க்கை வளர்ச்சிக்கு முன்னுதாரணங்களாகத் திகழ்கின்றன.

## நேருஜியின் கருத்து

பண்டித ஜவாஹர்லால் நேரு எழுதினர்:

"இந்த கிராம சுயாட்சி முறைதான் ஆரிய அரசியலமைப்புக்கு அஸ்திவாரமாக இருந்தது. இதுதான் அதற்குப் பலமும் அளித்தது. மன்னருடைய அனுமதியில்லாமல் எந்தப் படை வீரனும் ஒரு கிராமத்துக்குள் நுழையக் கூடாது என்று கூறும் அளவுக்கு கிராம சபைகள் தங்களுடைய உரிமைகளைப் பாது காத்துக் கொள்வதில் அக்கறையாக இருந்தன. 'ஒரு அதிகாரி யைப் பற்றி கிராமவாசிகள் குறை கூறும்போது, மன்னரானவர் தனது குடிமக்களின் சார்பில் இருக்கவேண்டுமே தவிர, அதிகாரி யின் சார்பில் பேசக் கூடாது' என்று நீதிசாரர் கூறுகிருர். மேலும், "பலபேர் அதிகாரியைப் பற்றி புகார்சொன்னல் அந்த அதிகாரியைப் பதவியிலிருந்து நீக்கி விடவேண்டும். ஏனெனில் பதவி மோகத்தால் போதை அடையாதவர் யார் தான் இருக் கிருர்கள்?" என்றும் அவர் கேட்கிருர். இவைகள் எல்லாம் விவேக மான வார்த்தைகள்—அதிலும் குறிப்பாக, எத்தனையோ அதிகாரி கள் இன்று தவருன முறையில் நடந்து தவருன முறையில் நம்மை ஆட்சி செய்யும் போது!

"மிகவும் சமீப காலத்தில்—1830-இல் இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷ் கவர்னரான சர் சார்லஸ் மெட்கால்ப், கிராம சமுதாய அமைப்புக்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு விவரித்தார்: 'கிராம சமுதாயங்கள் சிறு குடியரசுகளாக விளங்கின. அவைகளுக்குத் தேவையான ஒவ்வொன்றும் அவைகளுக்குள்ளேயே இருந்தன. கிட்டத்தட்ட வெளிநாட்டு உறவுகளிலிருந்து அவை துண்டிக்கப் பட்டவைகளாக இருந்தன. மற்றவைகளெல்லாம் நீடிக்க முடியாத போது அவை நீடித்தன. இந்தக் கிராம சமுதாயங்களின் கூட்டமைப்பு—ஒவ்வொன்றும் ஒரு தனி, சிறு அரசாங்கமாக இருந்து கூட்டாக அமைவது—அவர்கள் மகிழ்ச்சியாக வாழ் வதற்குப் பெருமளவு உதவியது. பெருமளவு சுதந்திரத்தையும் உரிமையையும் அனுபவிக்கவும் உதவியது.'

## கிராம வாழ்க்கைச் சித்திரம்

"இந்த வர்ணனையானது பழைய கிராம முறையை நன்கு பாராட்டுகிறது. கிட்டத்தட்ட எல்லாமே நாட்டுப்புற வாழ்க்கை

முறையாக இருந்த ஒரு சித்திரத்தை நாம் காண்கிறோம். கிராம மக்கள் அனுபவித்த ஸ்தல சுதந்திரம், உரிமை ஆகியவை களெல்லாம் எவ்விதச் சந்தேகத்திற்கும் இடமின்றி நல்லதுதான். இதில் மற்றும் பல நல்ல அம்சங்களும் இருந்தன...... கிராமக் குடியரசுகளைப் புனரமைக்கும் வேலை, அவை புனர் ஜென்மம் அடையுமாறு செய்யும் வேலை இன்னும் நம்மால் செய்யப்பட வேண்டியிருக்கிறது.''*

## அஹிம்சையின் சின்னம்

காந்திஜி கற்பனை செய்த கிராம சுயராஜ்யத்தின் அமைப்பு, பழைய பஞ்சாயத்துக்கள் புத்துயிர் பெறுமாறு செய்வதல்ல. ஆனால் தற்போதைய உலகச் சூழ்நிலையில் சுதந்திரமான கிராம சுயராஜ்ய அமைப்புகளைப் புதிதாக அமைப்பதாகும். கிராம சுய ராஜ்யம் என்பது, அரசியல் பொருளாதாரம், சமூக இயல் ஆகிய துறைகளில் அஹிம்சையின் ஒரு நடைமுறைச் சின்னமாகும்.

## கம்யூனிச சித்தாந்தத்தைவிட உயர்ந்தது

காந்திஜி கருத்தின்படி ஒரு இலட்சிய சமுதாயம் என்பது அரசாங்கம் என்பதே இல்லாத ஒரு ஜனநாயகமாகும்—அதாவது அறிவு விளக்கம் பெற்ற மக்களின் அரசியலற்ற நிலை. இப்படிப் பட்ட சமுதாயத்தில் சமூகம் கொஞ்சமும் குறைபாடில்லாததாகி விடுவதால், தானே தன்னை ஒழுங்கு படுத்திக் கொள்கிறது. ''இலட்சிய சமுதாயத்தில் அரசியல் அதிகாரம் என்பதே இல்லை. ஏனென்றால், அங்கு அரசாங்கமே கிடையாது.'' ஒரு இலட்சியத் தைப் பரிபூரணமாக நிறைவேற்றுவதென்பது இயலாது என்று காந்திஜி நம்பினர். எனினும், ''இலட்சியமானது, ஒரு கோட்டைப் பற்றி யூக்லிட் கூறிய சித்தாந்தத்தைப் போன்றது. யூக்லிட் கருத்தின்படி, ஒரு கோட்டிற்கு அகலம் என்பதேயில்லை. ஆனல் யாரும் இப்படிப்பட்ட கோட்டை இதுவரை வரையவில்லை; வரை யவும் முடியாது. ஆனல் இந்த இலட்சியக் கோட்டை மனதிற் கொண்டுதான் ஜியோமிதி என்னும் கணக்கில் நாம் முன்னேற்றங் காண்கிறோம்.'' அரசியல் துறையில் அவர் நமக்கு கிராம சுயராஜ் யத்தை அளித்தார். கிராம சுயராஜ்யமானது, அவருடைய அரசாங்கமற்ற ஜனநாயக இலட்சியத்தைப் பற்றிய கண் ணோட்டத்தை நெருங்கிவரக் கூடியது. எந்த அரசாங்கம் குறைச் சலாக மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துகிறதோ, அந்த அரசாங்கம்

---

* Glimpses of World History என்ற நூலிலிருந்து.

தான் சிறந்தது என்று அவர் கருதுகிருர். கம்யூனிச சித்தாந்தப் படி, "அரசாங்கம் தானே ஒடுங்கி விடுவதுதான்" இறுதியானது. ஆனல் தனியாதிக்கமுள்ள ருசிய அரசாங்கத்தில், எல்லா அதிகாரங்களுமே அரசாங்கத்திடம் குவிந்து கிடக்கின்றன. எந்தக் காலத்திலாவது அங்கு அரசாங்கம் ஒடுங்கிவிடுமா என்பதை நம்புவது கடினமாக இருக்கிறது. மகாத்மா காந்தி ஒரு காரிய சாத்திய இலட்சியவாதி என்ற முறையில், அரசாங்கமற்ற ஜன நாயகம் என்னும் இலட்சியம் நடைமுறையில் உபயோகமானது என்பதை உணர்ந்து "கிராம சுயராஜ்யம்" என்னும் இலட்சி யத்தை நம்முன் வைத்தார். இந்த இலட்சியமானது அரசாங்கம் ஒடுங்குவதாக இல்லாமல், அரசாங்கம் பரவல் மயமாக விநியோக மாகும்படி செய்வதாகும். இவ்வாறு, கிராம சுயராஜ்யம் என்பது, "அரசாங்கம் ஒடுங்கவேண்டும்" என்ற நீண்டகால இலட்சியத் தைப் போன்றல்லாமல், நடைமுறைசாத்தியமான ஒரு வரம்புக் குள் இருக்கிறது.

## தனிப் பட்டவனுக்கு என்ன இருக்கிறது?

தற்போதைய ஜனநாயக அமைப்புகளெல்லாம் கட்சி ஆதிக்க முள்ள அதிகாரத்தை நோக்கமாகவும், தேர்தலை மத்தியமாகவும் கொண்ட, மத்திய மயமான, சிக்கல் நிறைந்த அமைப்புகளாகும். அநேகமாக எல்லா அரசியல் முறைகளிலுமே—முதலாளித்துவ சோசலிச, கம்யூனிச முறைகளில் எதுவாக இருந்தாலும்—அவற்றில் அதிகாரம் குவிந்து கிடக்கிறது; இதனல் அவை எளிதில் செயல்படமுடியாதபடி பளுவானவையாகவும் அளவுக்கு மீறிய பாரமுள்ளவையாகவும் இருக்கின்றன. வாக்காளர்கள் தான் நாட்டின் எஜமானர்கள் என்று அழகாகக் கூறப்பட்டாலுங்கூட, தனிப்பட்டவர்களுக்கு முக்கியத்துவம் எதுவுமில்லை. அவ்வப் போது நடைபெறும் தேர்தல்களில் வாக்களிப்பதற்காக அவர்கள் வருகிருர்கள். அதன்பின் அடுத்த தேர்தல் வரை தூங்கப்போய் விடுகிருர்கள். ஒரு குறிப்பிட்ட கால வரையறையில், ஒரு தனிப் பட்ட மனிதர் செய்யக் கூடிய ஒரே அரசியல் நடவடிக்கை இது தான். ஒரு மத்திய மயமான கட்சி முறை அமைப்பில் வரும் உத்தரவிற்கிணங்க அவன் இதைச் செய்கிருன். பெரும்பாலும் மத்திய மயமான பொருளாதார சக்திகளின் கைக் கருவிகளாக இருக்கும் பத்திரிகைகள் காட்டும் வழியில் அவன் இதைச் செய் கிருன். அரசாங்கத்தின் கொள்கையை உருவாக்குவதில் தனிப் பட்டவருக்கு இருக்கும் அதிகாரம் கிட்டத்தட்ட எதுவுமே இல்லை

என்று சொல்லலாம். ஒரு சேமநல அரசாங்கமாக இருந்தாலும் சரி, அல்லது ஒரு தனியாதிக்க அரசாங்கமானாலும் சரி, தனிப்பட்ட மனிதனானவன், மனித உருவில் இருந்தாலும், நன்றாக உண்டு, பேசாமடந்தையாக பிறர் செலுத்துகிறபடி நடக்கும் மிருகமாகத் தான் இருக்கிறான்.

## பஞ்சாயத்து அமைப்பு

இந்தியாவில் உண்மையான ஜனநாயகம் செயலாற்ற வேண்டுமென்று காந்திஜி விரும்பினார். ஆகையால் அவர் கூறினார்: "மத்திய அரசாங்கத்தில் இருபது பேர் அமர்ந்து கொண்டு உண்மையான ஜனநாயகம் செயல் படுமாறு செய்யமுடியாது. அது அடித்தளத்திலிருந்து, ஒவ்வொரு கிராமத்தைச் சேர்ந்த மக்களாலும் செயல் படுத்தப் படவேண்டும்." கிராம சுய ராஜ்யத்தில், ஒவ்வொரு கிராமமும் முழு அதிகாரம் படைத்த பரவல் மயமான சிறு அரசியல் யூனிட்டாக இருப்பதால், ஒவ்வொரு தனிப்பட்டவருக்கும் அரசாங்கத்தில் நேரடி அதிகாரம் இருக்கும். தனிப்பட்ட மனிதனே தனது அரசாங்கத்தைத் தான் விரும்பியபடி அமைக்கிற சிற்பியாவான். கிராம அரசாங்கமானது ஐந்து பேர் கொண்ட பஞ்சாயத்தினால் நடத்தப்பெறும். இந்த ஐந்து பேரும் குறைந்த அளவாக நிர்ணயிக்கப்பட்ட சில தகுதிகளைப் பெற்ற வயது வந்த கிராமவாசிகளைக் கொண்டு ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படுவர். இப்பஞ்சாயத்திற்கு, கிராமத்தின் எல்லை முழுவதற்குள்ளும் எல்லாவிதமான அதிகாரமும் இருக்கும். பஞ்சாயத்தில் தண்டனை அளிக்கக்கூடிய எந்த முறையும் இருக்காதாதலால், அது சட்டசபை, நீதி மன்றம், நிருவாகம் ஆகிய மூன்றும் ஒன்றாய் இணைந்ததாக இருக்கும்.

## குடிப்பொறுப்புள்ள பிரஜைகள்

இப்படிப்பட்ட ஒரு அரசாங்க முறையில், அரசாங்கத்தின் அதிகாரத்தினாலல்லாது தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்ளக்கூடிய பிரஜைகள் இருப்பார்கள். எல்லா விஷயங்களுக்கும் அரசாங்கத்தை எதிர்பார்க்கக் கூடியவர்களுக்குப் பதிலாக, நன்கு வளர்ச்சி பெற்ற குடிப்பொறுப்பும் தன் முயற்சியும் உள்ளவர்களாக இவர்கள் இருப்பார்கள்.

## உண்மையான ஜனநாயகத்தின் கடமை

ஒரு உண்மையான அரசியல் முறையின் கீழ், தனிப்பட்ட மனிதன்தான் சரியான அதிகாரம் படைத்தவனாவான். ஆகையால்

உண்மையான ஜனநாயகம், அதாவது சுயராஜ்யம் என்பது தனிப் பட்ட மனிதனின் வளர்ச்சிக்காகவும் முழுச் சுதந்திரத்துக்காகவும் பாடுபடும்.

## அரசியல் நோய்களுக்கு மருந்து

இவ்வாறு காந்திஜி மனதிற்கண்ட கிராம சுயராஜ்ய மானது, ஒரு உண்மையான, ஜீவசக்தி நிறைந்த ஜனநாயக மாகும். தற்போதைய அரசியல் முறைகளில் இருக்கும் பல குறைபாடுகளுக்கு அது ஒரு சக்திவாய்ந்த நிவாரணமாக இருக் கிறது. இப்படிப்பட்ட பரவல் மயமான, உண்மையான ஜன நாயக அமைப்பானது உலக சமுதாயம் முழுவதற்குமே அளிக் கக்கூடிய செய்தியும் இருக்கிறது.

## உயிரளிக்கும் பொருளாதாரம்

காந்திஜியைப் பொறுத்தவரை, நம் குறிக்கோளே அரசியல் அதிகாரம் என்பதல்ல. ஒவ்வொரு வாழ்க்கைத் துறையிலும் மக்கள் தங்களுடைய நிலையை அபிவிருத்தி செய்துகொள்வதற் கான ஒரு சாதனமாகவே அரசியலை அவர் கொண்டார். ஆகை யால் அவர் தமது புகழ்பெற்ற "கடைசி உயிலிலும் ஏற்பாட்டி லும்", "இந்தியா அரசியல் சுதந்திரம் அடைந்துவிட்டது என் ருலும்—இந்தியாவிலுள்ள நகரங்கள், பட்டணங்கள் ஆகியவை களுக்கு அப்பால்—இங்குள்ள ஏழு இலட்சம் கிராமங்களின் சமூக, தார்மீக, பொருளாதார விடுதலையை நாம் அடைந்தாக வேண்டியிருக்கிறது" என்று சொன்னுர். இதில் கிராம சுய ராஜ்யம் அல்லது பஞ்சாயத்து ராஜ்யத்தின் ஒரு சித்திரமும் திட்டமும் இருக்கிறது. வேறு வார்த்தைகளில் சொல்லப் போனுல், இது முழு அதிகாரம் நிறைந்த ஒரு அஹிம்சா பூர்வமான, சுயதேவைப் பூர்த்தியுள்ள, பொருளாதார யூனிட் ஆகும். மேற்கு நாட்டுப் பொருளாதாரமானது செல்வத்தை மையமாகக்கொண் டது. அதைப் போன்றல்லாமல் காந்திஜி கருத்தில் இருந்த கிராம சுயராஜ்யம் மனிதனை மையமாகக் கொண்டது. ஆகவே மேற்குநாட்டுப் பொருளாதாரம் மரணப் பொருளாதாரம் என் ருல், காந்திஜியுடையது உயிரளிக்கும் பொருளாதாரமாகும்.

## கிராம ஊழியர் கடமை

காந்திஜி கருத்தின்படியான கிராம சுயராஜ்யத் திட்டத்தில் கிராம ஊழியன் என்பவன் இயற்கையாகவே கேந்திரமான பதவி வகிக்கிருன். இவனுடைய கடமைகள் என்னவென்பதைக்

காந்திஜி பின்வருமாறு வகுத்துச் சொல்கிறுர்: "கிராம ஊழிய ரானவர், ஒரு கிராமமானது விவசாயம், கைத்தொழில்கள் ஆகியவற்றின்மூலம் சுயதேவைப் பூர்த்தியடையுமாறு செய்வார்; கிராம மக்களுக்குத் துப்புரவையும் உடல்நலத்தையும் போதிப் பார்; கிராம மக்கள் மத்தியில் உடல்நலக் குறைவும் நோயும் ஏற் படாமல் தடுப்பதற்கான நடவடிக்கைகள் எடுப்பார்; ஆதாரக் கல்வி அடிப்படையில் பிறப்பிலிருந்து மரணம்வரை கிராம மக்கள் கல்வி கற்பதற்கு ஏற்பாடு செய்வார்.

## தனிப்பட்ட மனிதனே ஒரு "யூனிட்"

உலக சமாதானத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற ஆர்வங் கொண்ட உலக அரசியல் வாதிகள், மேலேயிருந்து கீழே செயல்படுத்தக்கூடிய திட்டங்களைப்போட எண்ணுவார்கள். ஆனல் காந்திஜியோ கீழேயிருந்து நிர்மாணித்து மேலே செல்லக் கூடிய திட்டம் வகுக்க எண்ணுகிறுர். ஆகையால் அவர் கூறு கிறுர்: "சுதந்திரமானது கீழேயிருந்து ஆரம்பமாகும். ஒவ் வொரு கிராமமும், முழு அதிகாரம் படைத்த ஒரு குடியரசு அல்லது பஞ்சாயத்தாக இருக்கும். ஆகவே, உலகம் முழுவதுமே எதிர்த்து வந்தாலும் தன்னைப் பாதுகாக்கக்கூடிய அளவு தனது நிருவாகங்களைத் தானே நிருவகிக்கக் கூடியதாகவும் சுயபலம் பெற்றதாகவும் ஒவ்வொரு கிராமமும் இருக்கவேண்டும் என்று கிறது. வெளியிலிருந்துவரும் எந்தத் தாக்குதலிலிருந்தும் தன் னைப் பாதுகாத்துக்கொள்ளவும், இயலாவிடில் அழிந்துபோகவும் தயாராயிருக்குமாறு அதற்குப் பயிற்சி அளிக்கப்படும். இவ்வா ருக இறுதியாகப் பார்க்கும்போது, தனிப்பட்ட ஒவ்வொரு மனிதரும் ஒரு யூனிட்டாக இருப்பார்கள்." காந்திஜி கருத்துப் படி, "அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டிருக்க வேண்டும் என்ற ஓயாத முயற்சியே சுயாட்சி—அந்த அரசாங்கம் வெளிநாட்டு அரசாங்கமாய் இருந்தாலும் சரி, அல்லது தேசிய அரசாங்கமாய் இருந்தாலும் சரி. வாழ்க்கையின் ஒவ்வொரு சின்னக் காரியத்துக்கும் மக்கள் அரசாங்கத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தால், சுதந்திர அரசாங்கமென்பதும் வருந்தத்தக்க தாகிவிடும்." கிராம சுயராஜ்யத்தில் முடிவான அதிகாரமானது தனிப்பட்ட மனிதரிடம் தான் இருக்கும். கிராம சுயராஜ்யத்தின் முழுத்தோற்றத்தையும் அவன் காணவேண்டுமென்றுல், முதலில் அவன் சுதந்திரம் பெற்றுக வேண்டும். அணு எப்படியோ அண்ட மும் அப்படி. இவ்வாருக, கிராம சுயராஜ்யம் என்பது—அதில் உள்ள தனிப்பட்ட மனிதர்கள் தங்களுடைய வாழ்க்கையில் எவ்

வளவு சுதந்திர உணர்ச்சி பெற்றவர்களாய் இருக்கிறார்களோ, அதன் பிரதிபிம்பமாக இருக்கும். ஆகையால் கிராம ஊழிய ரானவர் முதலில் உண்மையான கல்வி அளிப்பதில் தனது கவ னத்தைச் செலுத்தவேண்டும். மூளை, இதயம், உடல் ஆகிய மூன்றும் ஒருங்கிணைந்து வளர்ச்சிபெறச் செய்யக்கூடியதாய் இந்தக் கல்வி இருக்கவேண்டும். காந்திஜி செய்த தவத்தின் பலனாகக் கிடைத்ததுதான் நைதலீம் அல்லது ஆதாரக் கல்வி. இந்த மூன்றும் ஒருங்கிணைந்தவராக அவதரித்தவர் தான் காந்திஜி. அஹிம்சா உணர்ச்சி ஆதாரக் கல்வி என்னும் முழுத்திட்டத்தி லும் ஊடுருவிப் பாய்கிறது. கைத்தொழில்மூலம் உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றையும் ஒரு சமமாக வளர்ச்சியடையச் செய்வதுதான் ஆதாரக் கல்வியின் நோக்கம். ஆதாரக் கல்வியின் அடிப்படையில் பெற்ற உண்மையான கல்வி என்னும் மூல தனத்தைக் கொண்டு, கிராம சுயராஜ்யத்தை அமைப்பதில் பிரஜைக்கு ஒரு பெரிய முக்கியத்துவம் உண்டு.

கிராம சுயராஜ்யம் என்பது மனிதனை மையமாகக்கொண்ட, சுரண்டலற்ற, பரவல்மயமான, எளிய பொருளாதார முறையாகும். மக்கள் எல்லோரும் தாமாக முன் வந்து கூட்டுறவாகப் பாடுபடு வது என்ற அடிப்படையில் அது தனது பிரஜைகள் எல்லோ ருக்கும் முழு வேலை அளிக்கும். உணவு, உடை, மற்ற வாழ்க் கையின் அத்தியாவசியத் தேவைகள் ஆகியவற்றில் சுயதேவைப் பூர்த்தி செய்வதற்காகப் பணியாற்றும்.

## நவீன பொருளாதாரமுறை

நவீன பொருளாதார முறைகளெல்லாம் புலன் நுகர்ச்சி யையும், தேவைகளைப் பெருக்கிக் கொள்வதையும், பொருளா தாரம் வேறு, தார்மிகம் வேறு என்று பிரித்துப் பார்ப்பதையும் அடிப்படையாகக் கொண்டவையாகையால், பெரிய இயந்திர மயமான மத்திய மயமான, சிக்கல் நிறைந்த அமைப்புக்களாக உள்ளன. வேலையில்லாத் திண்டாட்டம், போதுமான வேலை யின்மை, பொருளாதார திவால், சுரண்டல், மார்க்கெட்டுகளைப் பிடிப்பதற்காக வெறிபிடித்து அலைவது, மூலப்பொருள்களுக்காகப் பிறநாடுகளை அடிமைப்படுத்துவது போன்ற பல கேடுகள் இருக் கின்றன. போட்டிகள், முரண்பாடுகள், வர்க்கப்போராட்டங்கள் ஆகியவை சமூக அமைப்பையே அரித்து விடுகின்றன; தனிப் பட்ட மனிதனை அடிமையாக்குகின்றன; மனிதனை இயந்திரத்தை ஓட்டுவதற்கு உதவக்கூடியவனாகத்தான் நடத்துகின்றன. அவ னைக் கேவலம் இயந்திரத்துடன் இணைந்த ஒரு பகுதியாக்கி விடு

கின்றன. அவன் தனது ஆன்மாவைக் கொல்லக் கூடியவாறு ஒரேமாதிரியான வேலையைத் திருப்பித்திருப்பிச் செய்வதனுல், தனது நுண்மையான உணர்ச்சியையே இழந்து விடுகிருன். ஆகவே, தொழிற்சாலையில் உடலை அலுக்கவைக்கும் கொடுமையிலிருந்து தப்புவதற்காக, திரைப்படக் கொட்டகைகளுக்கும், மதுக்கடைகளுக்கும், விலை மகளிர் இல்லங்களுக்கும் ஓடுகிருன். சமூகமானது தனிச் சலுகை பெற்றவர்கள், சலுகையற்றவர்கள். பணக்காரர், ஏழைகள் என்று பிரிவினையாகி விடுகிறது. இன்றைய சமுதாயத்தில் உள்ளதைப் போன்ற ஏற்றத்தாழ்வு—கோடீஸ்வரன், வாழ்க்கையில் எவ்வித இலட்சியமும் இல்லாமல் ஆடம்பரத்தில் மூழ்கிக்கிடப்பதும், கஷ்டப்பட்டு உழைப்பவன் தனது உடலையும் உயிரையும் சேர்த்து வைத்திருக்கப் போதுமானது இல்லாமல் இருப்பதும்—ஒரு போதும் இருந்ததில்லை. மிக உயர்ந்த அளவில் தொழில் நுணுக்க முன்னேற்றம் அடைந்துள்ள பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளே வேலையில்லாத் திண்டாட்டத்தை இன்னும் தீர்த்து வைக்க வேண்டியிருக்கிறது. இந்தியாவிலோ இந்த வேலையில்லாத் திண்டாட்டம் மிகப்பெரிய அளவில் உச்ச கட்டத்துக்குப் போய்விட்டது. ஏனெனில், இந்தியாவின் மிகப்பெரிய ஜனத்தொகை அதன் ஏழு இலட்சம் கிராமங்களிலும் பரவிக்கிடக்கிறது; இம்மக்களோ சந்ததி சந்ததியாகப் பிரதானமாய் விவசாயத்தையே நம்பி வாழ்கிருர்கள்.

## உலகிற்கு இதுதான் மருந்து

காந்திஜி நீண்டகாலம் தேடியதன் பயனுகக் கிடைத்தது கிராம சுயராஜ்யம். இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கான மக்களுடன் இதய பூர்வமாக ஒன்றிப்போன காந்திஜி, இந்தியாவின் நோய்களைத் தீர்ப்பதற்கு - ஏன், உலகின் நோய்களையே தீர்ப்பதற்கு - ஒரு தவருத மருந்தாக இந்தச் சஞ்சீவியைக் கூறினுர். உலகின் வரலாற்றை நாம் எடுத்துப் பார்த்தோமானுல், எல்லா இடங்களிலுமே விவசாயிகள் சுரண்டப்பெற்று, பட்டினியாக வாழுங் கட்டத்தில் இருந்திருக்கிருர்கள். 5-10-'45 ஆம் தேதியன்று பண்டித நேருவுக்கு எழுதிய கடிதமொன்றில் காந்திஜி கூறினுர்:

"இந்தியா உண்மையான சுதந்திரம் அடைய வேண்டுமென்ருல், இந்தியாவின் மூலமாக உலகமும் உண்மையான சுதந்திரம் அடைய வேண்டுமென்ருல், இன்ருே நாளையோ ஒரு உண்மையை நாம் ஒப்புக் கொள்ள வேண்டியதாக இருக்கும். அதாவது மக்கள் கிராமங்களில் வாழவேண்டியிருக்குமேயொழிய

நகரங்களில் அல்ல; குடிசைகளில் வாழவேண்டியிருக்குமே யொழிய மாளிகைகளில் அல்ல. இது எனக்கு நிதரிசன உண்மை யாகப் புலப்படுகிறது. நகரங்களிலும் மாளிகைகளிலும், கோடிக் கணக்கான மக்கள், ஒருவருடனொருவர் அமைதியாக வாழமுடி யாது. அப்போது அவர்கள் இம்சையிலும் அசத்தியத்திலும் ஈடு படுவதைத் தவிர வேறு வழி இருக்காது.

## உலகிற்கு வரக்கூடிய கதி

''சத்தியமும் அஹிம்சையும் இல்லாவிட்டால் மனிதர்களுக்கு அழிவைத்தவிர வேறு எதுவுமே இருக்காது என்று நான் கருது கிறேன். கிராம வாழ்க்கையின் எளிமையில் தான் நாம் சத்தியத் தையும் அஹிம்சையையும் உணரமுடியும். இந்த எளிமையைச் சர்க்காவிலும், சர்க்கா எங்தெந்த சித்தாந்தக்களுக்காக இருக் கிறதோ அந்த சித்தாந்தங்களிலும் தான் நாம் சிறந்த முறையில் காண முடியும். உலகம் இன்று தவருன பாதையில் போய்க் கொண்டிருந்தால் அதற்காக நான் அஞ்சக்கூடாது. ஒரு வேளே இந்தியாவும் அந்த வழியாகச் செல்லலாம். விளக்கை வேக மாகச் சுற்றி நர்த்தனமாடிக் கொண்டுவரும் விட்டிற் பூச்சியானது இறுதியில் அதில் விழுந்து மடிவதைப் போன்ற கதி இந்தியா வுக்கும் ஏற்படலாம். ஆனல், அக்கதி இந்தியாவுக்கு ஏற் படாமலும் அதன் மூலம் உலகத்திற்கு ஏற்படாமலும் பாதுகாக்க வேண்டியது, எனது கடைசி மூச்சு உள்ள வரையிலுமுள்ள கடமையாகும்.

## பலதுளி பெரு வெள்ளம்

''தன்னுடைய உண்மையான தேவை என்னவென்பதை அறிந்து அதனுடன் மனிதன் திருப்தியடைவதுடன் சுயதேவைப் பூர்த்தியும் அடைய வேண்டும் என்பதே நான் கூறியதன் சாரம். இந்தக் கட்டுப்பாடு அவனுக்கு இல்லேயேல், அவன் தன்னேத் தானே காப்பாற்றிக் கொள்ள முடியாது. பார்க்கப் போனல், பலதுளி பெருவெள்ளம் ஆவதுபோல் இந்தப் பெரிய உலகம் தனிப்பட்ட மனிதர்களால் ஆனதே........ இது உலகறிந்த உண்மையாகும்.''

## அவசியத் தேவைகள்

இவ்வாறு, தானே முன்வந்து மனிதன் வறிய வாழ்க்கையை ஏற்று எளிமையாக இருப்பதைக் காந்திஜி கொள்கையாகக்

கொண்டிருந்தார். இதனால் மனிதனுக்கு அவசியமான வசதிகளை அவன் அனுபவிக்கக் கூடாது என்பதல்ல. ஒவ்வொருவருக்கும் சத்துள்ள உணவும், தேவையான உடையும், இருப்பிட வசதியும் அளிக்கவேண்டும் என்று அவர் கூறினார்; உயிருடன் வாழும் ஒவ்வொருவருக்கும் உணவு பெற உரிமையுண்டு என்று நம்பினார். அவர் கூறினார்: "இந்தியாவில் ஏற்படவிருக்கும் பொருளாதார அமைப்பில், ஏன், உலகம் முழுவதிலும் அமைக்கப்படும் பொருளாதார அமைப்பில் கூட, யாரும் உணவு இல்லை, உடை இல்லையென்று வருந்துவதாய் இருக்கக் கூடாது. இதுதான் எனது கருத்து. வேறு வார்த்தைகளில் கூறப்போனால், ஒவ்வொருவருக்கும் தனது ஜீவனத்தை நடத்தப் போதுமான வேலை கிடைக்க வேண்டும். வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளை உற்பத்தி செய்யும் சாதனங்கள் மக்கள் கையில் இருந்தால்தான் எல்லா இடங்களிலும் இந்த இலட்சியத்தை நாம் அடைய முடியும். ஆண்டவன் படைத்த காற்றும் தண்ணீரும் எவ்வாறு இலவசமாகக் கிடைக்கிறதோ அல்லது கிடைக்க வேண்டுமோ அவ்வாறு இந்தப் பொருள்களெல்லாம் இலவசமாகக் கிடைக்க வேண்டும்; மற்றவர்கள் சுரண்டலுக்கு வழிகொடுக்கும் சாதனங்களாகி விடக் கூடாது. எந்த நாடோ அல்லது மக்கள் இனமோ இவைகளை ஏகபோகமாக்கிக் கொள்வது நியாயமற்றதாகிவிடும். இந்த எளிய கோட்பாட்டை நாம் புறக்கணிப்பதானது, இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த நாட்டில் மட்டுமல்லாது உலகின் மற்றப் பகுதிகளிலும் நாம் இன்று காணும் ஆதரவற்ற நிலைமைக்குக் காரணமாகும்."

## அஹிம்சைப் பொருளாதார அமைப்பு

எல்லா பிரஜைகளுக்கும் முழு வேலை அளிக்கக்கூடிய இப்படிப்பட்ட அஹிம்சாபூர்வமான பொருளாதார அமைப்பை நிர்மாணிக்க, தொழில் மயமாக்குவது, குவியல் முறையில் தொழில்களை அமைப்பது, அவசியமற்ற இயந்திரங்களைப் பயன்படுத்துவது ஆகியவை கூடா என்று அவர் சொன்னார். நகரங்களை, கிராமங்களைச் சுரண்டும் அமைப்புகளாக அவர் கருதினார். இந்நகரங்களை, நாட்டின் மேனியில் ஏற்பட்டுள்ள கொப்புளங்களென்று கூட அவர் சொன்னார். எதிர்கால உலக அமைப்புக்கு உயிர் தரக்கூடியவை கிராமங்கள்தான் – அதாவது, நிர்ப்பந்தமோ பலாத்காரமோ இல்லாது எல்லா நடவடிக்கைகளும் பரஸ்பர ஒத்துழைப்பின் பேரில் நடைபெறும் சிறிய, அமைதியான கூட்டுறவுகள்தான் என்றார். கிராம சுயராஜ்யம் என்னும் மாளிகையில், உயர்ந்தவர்களும் இல்லை, தாழ்ந்தவர்களும் இல்லை. எல்லோரும் சமமானவர்களே.

அங்கே ஜாதி, இன வேறுபாடுகள் இருக்கமாட்டா; தீண்டாமை இருக்காது; ஹிந்து - முஸ்லிம் சச்சரவுகள் இருக்கமாட்டா. எல்லாத் தனிப்பட்ட மனிதர்களுக்கும் அவரவர்களுடைய இயற்கையான அந்தஸ்தும் உயர் நிலையும் கிடைக்கும்.

## உலகத்திற்கு முன் மாதிரி

முழு வேகத்துடன் செயலாற்றும் கிராம சுயராஜ்யமானது, உலகமே பின்பற்றக்கூடிய ஒரு முன்மாதிரியாக, உலகிற்கு இந்தியா அளிக்கும் ஒரு பரிசாக விளங்கும். உலகமெங்கிலும், தன்னைத் தானே ஆண்டுகொள்ளும் கிராம அமைப்புகள், உயர்ந்த கலாசாரமும் புத்திக் கூர்மையும் தீவிரமும் உள்ள ஆண் பெண்களின் உயிருள்ள சகோதரத்துவமாக இருக்கும். இவ்வித சமுதாயத்தில் வாழ்வது என்பதே ஒரு பெரிய பாட போதனை; வாழ்க்கை இலட்சியம் ஈடேறிய மாதிரி. அங்குள்ள வாழ்க்கையானது ஒருவர் தம்முடைய இயல்பான திறமைகளை வெளிப்படுத்திக் கொள்வதாகவும், பரஸ்பர மரியாதை உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொள்வதாகவும், பரஸ்பர சேவையின் மூலம் அன்பை வெளிப்படுத்திக் கொள்வதாகவும் இருக்கும். கலாசாரம், கலை, கவிதை, வர்ணந் தீட்டுதல், விஞ்ஞானம் ஆகியவையெல்லாம் அங்கு முழு நிறைவை அடையும். அது பூலோகத்தில் நடைபெறும் ஆண்டவன் சாம்ராஜ்யமாக இருக்கும்.

## பஞ்சாயத்துகள் கடமை

கிராம சுயராஜ்யத்திற்கு இப்படிப்பட்ட உயர்ந்த சக்தி இருக்கிறது. அது ஜீவனுள்ளதாகவும் உண்மையானதாகவும் இருக்குமாறு செய்வது நம் எல்லோரையும் பொறுத்ததே. அப்பிதாவின் கனவை நிறைவேற்றுவது, அவருடைய வாரிசுகளின் கடமையாகும். அவரிடமிருந்து ஒரு அழியாத, மதிப்புமிக்க சொத்தை அவர்கள் அடைந்திருக்கிறார்கள். ஆகையால் தற்போதுள்ள மாகாண அரசாங்கங்கள், கிராமப் பஞ்சாயத்துக்கள் அமைப்பதற்கான சட்டங்களை இயற்றியதும் அவைகளுக்கு நிறைய அதிகாரங்கள் வழங்கியதும் நியாயமே. காந்திஜி மனதிற் கண்ட கிராம சுயராஜ்ய அமைப்பின் சித்திரத்தைக் கிராமப் பஞ்சாயத்துக்கள் தங்களுடைய கவனத்திற்கொண்டு, அவரால் கூறப்பட்ட வழி துறைகளில் செயலாற்றுவார்கள் என நம்புகிறோம்.

## கண்ணோட்டம் அவசியம்

காந்திஜி என்ன கண்ணோட்டத்துடன் கிராம சுயராஜ்யத்தைப்பற்றிச் சிந்தித்தாரோ, அதே கண்ணோட்டத்துடன், அதை அமுல் நடத்தவேண்டும். கிராமப் பஞ்சாயத்தின் பொறுப்புக்களை ஏற்பவர்கள், ஜாதி, மத, இன வேறுபாட்டுக்கு அப்பாற்பட்ட சுயநலமற்ற தொண்டுணர்ச்சியும் அன்புணர்ச்சியும் கொண்டுள்ளவர்களாக இருக்கவேண்டும். இல்லையேல் காந்திஜி எதிர்பார்த்த உயர்ந்த பலன்கள் கிராம சுயராஜ்யத்திலிருந்து கிடைக்கமாட்டா.

## உண்மையான சேவா உணர்ச்சி

கிராம அமைப்புகளைப்பற்றிப் பண்டித நேரு கூறிய சொற்களை நாம் இப்போது நினைவுபடுத்திக் கொள்வோம். "ஒரு தனிப்பட்ட மனிதனோ அல்லது கோஷ்டியோ எந்த அளவு பிறரிடமிருந்து ஒதுங்கி இருக்கிறதோ அந்த அளவுக்கு அது தன்னையே மையமாகக் கொண்டதாகவும், தன்னல உணர்ச்சி கொண்டதாகவும், குறுகிய மனோபாவங் கொண்டதாகவும் ஆகக்கூடிய அபாயம் இருக்கிறது." * சமூகவிரோத உணர்ச்சிகளாலும், ஜாதியினாலும், குறுகிய மனோபாவத்தினாலும் நமது கிராமங்கள் தற்போது கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கின்றன. கிராமப் பஞ்சாயத்துக்களை வெற்றியாக்கும் வழியானது பஞ்சணை விரித்து மலர்கள் தூவப்பட்டிருக்கவில்லை. கிராமத்தலைவர்களிடமிருந்து உண்மையான சேவா உணர்ச்சி எதிர்பார்க்கப்படுகிறது. புராதனப் பெருமை மிக்க இந்த நாடு சரியான சந்தர்ப்பத்தில் உயர்ந்து இந்தியாவின் இலட்சியத்தை நிறைவேற்றுமாக. அதன் மூலம் உலகிற்குச் சேவை செய்த பெரும் புகழில் பங்கு பெறுமாக!

## இந்நூல்

கிராம சுயராஜ்யத்தைப்பற்றி மகாத்மா காந்தி எழுதியவைகளை ஒன்றுபடுத்தி, அவருடைய சிந்தனைகளை ஒரு கோர்வையாகக் கூற இந்நூலில் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. ஒரே மாதிரியாக இருக்க வேண்டுமென்பதற்காக, செயப்பாட்டு வினையில் இருந்த சில வாசகங்கள் செய்வினை வாசகங்களாக மாற்றப்பட்டுள்ளன. ஒரு சில இடங்களில் சில வாசகங்கள் சிறிது

---

* Glimpses of World History.

மாற்றப்பட்டுள்ளன அல்லது நீக்கப்பட்டுள்ளன; மற்றப்படி மூலம் அப்படியே பாதுகாக்கப்பட்டுள்ளது.

இத்தொகுப்புக்கு முன்னுரை எழுதி உதவியதற்காக திரு ஸ்ரீமன் நாராயணுக்கு நான் கடப்பாடுள்ளவனுயிருக்கிறேன்.

22—11—'62. எச். எம். வியாஸ்.

# கிராம சுயராஜ்யம்

## அத்தியாயம் 1

## சுயராஜ்யம் என்றால் என்ன?

சுயராஜ்யம் என்பது ஒரு புனிதமான சொல், வேதச்சொல். சுயக்கட்டுப்பாட்டுடன் கூடிய சுய ஆட்சி என்பது இதன் பொருளாகும். விடுதலை என்பதற்கான ஆங்கிலச் சொல் இருக்கிறதே (Independence) அதைப்போன்று, எல்லாக் கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுபட்டிருப்பது என்பது அதன் பொருள் அல்ல. [1]

### தேசத்துக்கு உள்ள உரிமை

ஒவ்வொரு நாடும் எவ்வாறு உணவு உண்ணவும் நீர் அருந்தவும் மூச்சுவிடவும் தகுதிபெற்றதாய் இருக்கிறதோ அதைப்போல, ஒவ்வொரு தேசமும் தனது விவகாரங்களைத் தானே நிருவகித்துக்கொள்ளத் தகுதி உடையதாய் இருக்கிறது - மோசமாக நிருவகிப்பதாக இருந்தாலும் சரி. [2]

வயது வந்தவர்களில் மிகப் பெரும்பாலான மக்கள் - அவர்கள் ஆண்களாய் இருந்தாலும் பெண்களாய் இருந்தாலும், உள்நாட்டில் பிறந்தவர்களாய் இருந்தாலும் வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறியவர்களாய் இருந்தாலும் - அவர்கள் சம்மதத்தைப் பெற்று இந்திய அரசாங்கம் அமைக்கப்படுவதையே சுயராஜ்யம் என்று நான் கூறுகிறேன். இம்மக்கள் தங்கள் உடலுழைப்பால் அரசாங்கத்தின் சேவைக்கு உதவியவர்களாய் இருக்கவேண்டும்; தங்களுடைய பெயர்களை வாக்காளர்களாகப் பதிவு செய்து கொண்டவர்களாய் இருக்கவேண்டும்...ஒரு சிலர் அதிகாரத்தைக் கைப்பற்றுவதனால் உண்மையான சுயராஜ்யம் வந்து விடாது. ஆனால், அதிகாரம் துஷ்பிரயோகமாகும்போது, அதை எல்லோரும் எதிர்ப்பதற்கான சக்தி கிடைப்பதே உண்மையான சுயராஜ்யமாகும். வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால், அதிகாரத்தைக் கட்டுப்படுத்தவும் ஒழுங்குபடுத்தவும் மக்களுக்குள்ள சக்தியை அவர்களுக்குப் பயிற்றுவிப்பதன் மூலமே உண்மையான சுயராஜ்யத்தைப் பெறமுடியும். [3]

## நம் இயல்புக்குத் தக்கமுறை

அரசியல் விடுதலை என்று கூறுவதன் மூலம், பிரிட்டிஷ் காமன்ஸ் சபையையோ அல்லது ருசியாவில் உள்ள சோவியத் கட்சியையோ அல்லது இத்தாலியிலுள்ள பாசிஸ ஆட்சியையோ அல்லது ஜெர்மனியிலுள்ள நாசி ஆட்சியையோ நாம் அப்படியே 'காபி' அடிக்க வேண்டுமென்று நான் கூறவில்லை. அவர்களுடைய இயல்புக்குத் தக்கமுறைகளை அவர்கள் வகுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதே போன்று நம்முடைய இயல்புக்குத் தக்க முறையை நாம் வகுத்துக்கொள்ள வேண்டும். இம்முறை எப்படிப் பட்டதாக விருக்கும் என்பதை நான் கூறமுடியாது. நான் இதை ராமராஜ்யம் – அதாவது, நூற்றுக்கு நூறு தார்மீக சக்தியை அடிப்படையாகக் கொண்ட மக்களாட்சி – என்று விவரித்திருக்கிறேன். [4]

## சுய ஆட்சி

சுய ஆட்சி என்பது முற்றிலும் நமது உள்பலத்தைப் பொறுத்தது, மிகப் பெரிய கஷ்டங்களையும் எதிர்த்துப் போராட நமக்குள்ள சக்தியைப் பொறுத்தது. சுயாட்சியை அடைவதற்கும் அதை நிலை நிறுத்துவதற்கும் ஓயாத முயற்சி செய்ய வேண்டியது அவசியம். உண்மையில், இவ்விதத் தொடர்ந்த முயற்சிக்கு அவசியமில்லாத சுயாட்சியானது அர்த்தமில்லாதது. அரசியல் சுயாட்சி, அதாவது பெரும்பான்மையான ஆண், பெண்களுக்கான சுயாட்சி என்பது தனிப்பட்டவர் சுயாட்சியைக் காட்டிலும் உயர்ந்ததல்ல வென்பதையும், ஆகவே தனிப்பட்ட சுயாட்சியை எந்த முறைகளால் அடைய முடியுமோ அந்த முறைகளாலேயே அரசியல் சுயாட்சியை அடைய வேண்டுமென்றும் சொல்லிலும் செயலிலும் எடுத்துணர்த்த நான் முயன்றிருக்கிறேன். [5]

சுயாட்சி என்பது அரசாங்கக் கட்டுப்பாட்டிலிருந்து – அது தேசீய அரசாங்கமாக விருந்தாலும் சரி, வெளிநாட்டு அரசாங்கமாக விருந்தாலும் சரி – சுதந்திரமாக விருக்க ஓயாது செய்யப்படும் முயற்சியாகும். வாழ்க்கையின் ஒவ்வொரு தேவைக்கும், சுயராஜ்ய அரசாங்கத்தை மக்கள் எதிர்பார்ப்பதாக இருந்தால், சுயராஜ்ய அரசாங்கம் வருந்தத்தக்கதாகப் போய்விடும். [6]

என் கருத்துப்படி, நம்முடைய நாகரிகத்தை அப்படியே சுயராஜ்யம் பாதுகாக்கும். நான் பல விஷயங்களை எழுத விரும்புகிறேன். ஆனல் அவைகளெல்லாம் இந்திய ஸ்லேட்டிலேயே

எழுதப்படவேண்டும். நான் மேற்கு நாடுகளிலிருந்து கடன்பெறத் தயாராக இருப்பேன். ஆனால் அந்தக் கடனை என்னால் வட்டியுடன் திருப்பிச் செலுத்த முடிவதாய் இருக்கவேண்டும்.[7]

## எப்போது பலம் பெறும்

பெரும்பான்மையாக விசுவாசமான, தேசிய மனோபாவம் உள்ள மக்கள் இருக்கும்போது தான் சுயராஜ்யத்தைப் பாதுகாக்க முடியும். தங்களுடைய சொந்த நலன் உள்பட எல்லாவற்றையுங் காட்டிலும் தேசத்தின் நலனே இவர்களுக்குப் பிரதானமானது. "பலரால் ஆளப்படும் ஆட்சி" என்பதுதான் சுயராஜ்யம் என்பதன் பொருளாகும். இந்தப் "பலர்" ஒழுக்கமில்லாதவர்களாகவோ அல்லது சுயநலம் உள்ளவர்களாகவோ இருக்கும்போது, அவர்களுடைய அரசாங்கம் அராஜகமாக விருக்குமேயல்லாது வேறெதுவுமாக இருக்க முடியாது.[8]

## சுய ராஜ்யம் யாருக்கு?

என்னுடைய கனவின்படி ஆன சுயராஜ்யம், அல்லது நம்முடைய கனவின்படியான சுயராஜ்யத்தில் இன, மத வேறுபாடுகள் எதுவும் இருக்கமாட்டா. படித்தவர்களின் ஏக போக ஆதிக்கமாகவோ அல்லது பணக்காரர்களின் ஏகபோக ஆதிக்கமாகவோ அது இராது. சுயராஜ்யம் என்பது விவசாயி உள்பட எல்லோருக்கும் சொந்தமானதாக இருக்கவேண்டும். அதிலும் குறிப்பாக, ஊனமடைந்தவர்கள், குருடர்கள், உடலால் உழைத்தும் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான மக்களுக்கு அது நிச்சயமாகச் சொந்தமானதாய் இருக்க வேண்டும்.[9]

## இந்துக்கள் ஆட்சியா?

இந்திய சுயராஜ்யமானது, பெரும்பான்மை வகுப்பினராகிய இந்துக்களின் ஆட்சியாக விருக்கும் என்று கூறப்படுகிறது. இதைக் காட்டிலும் பெரிய தவறு எதுவும் இருக்க முடியாது. இது உண்மையானால் நான் அதை சுயராஜ்யம் என்று அழைக்க மாட்டேன்; என்னுடைய பலம் உள்ள அளவுக்கு அதை எதிர்த்துப் போராடுவேன். என்னைப் பொறுத்தவரை இந்திய சுய ராஜ்யம் என்பது மக்களுடைய ஆட்சியாகும், அதாவது நீதியின் ஆட்சியாகும்.[10]

## நம் நாகரிகம்

சுயராஜ்ய மென்பது நம்மைப் பண்படுத்துவதற்காகவும், நம்முடைய நாகரிகத்தைப் பரிசுத்தப் படுத்தி, நிலைப்படுத்துவதற்கா

கவும் இல்லாவிட்டால், அதனுல் ஒரு காசுக்குக் கூடப் பயன் இல்லை. நம்முடைய நாகரிகத்தின் சாரமே நமது விவகாரங்கள் எல்லாவற்றிலும்—அது பொது விவகாரமோ அல்லது தனிப்பட்ட விவகாரமோ—ஒழுக்கத்துக்கு நாம் தலையாய முக்கியத்துவம் அளிக்கிறோம் என்பதுதான்.[11]

## பூரண சுயராஜ்யம்

பூரண சுயராஜ்யம் என்றால் என்ன? மன்னரைப் போன்றே விவசாயிகளுக்கும், செல்வ வளம் படைத்த நிலப் பிரபுவைப் போன்றே நிலமில்லாத உழவனுக்கும், இந்துக்களைப் போன்றே முஸ்லிம்களுக்கும், ஜெயின், யூதர், சீக்கியர்களைப் போன்றே பார்சிகளுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் சுயராஜ்யம்; அதாவது சாதி, மத வாழ்க்கை அந்தஸ்து போன்ற எந்த விதமான வேறுபாடும் இன்றி எல்லோருக்கும் சுயராஜ்யம் என்பது பொருள்.[12]

## ஒரு சார்பற்றது

சுயராஜ்யம் என்ற சொல்லைக் கொண்டு நாம் பார்த்தாலும் சரி, அல்லது அதை அடைவதற்காக நாம் உறுதி யெடுத்துக் கொண்டிருக்கிறோமே அந்த மார்க்கம்—அதாவது, சத்தியம் அஹிம்சை ஆகிய எதை எடுத்துக்கொண்டு பார்த்தாலும், அவை எல்லாமே சுயராஜ்யம் ஒருவரைக் காட்டிலும் மற்றவருக்கு அதிகமாக விருப்பதோ அல்லது ஒரு சாராருக்குச் சார்பாகவும் மற்றொரு சாராருக்கு விரோதமாகவும் இருக்கும் என்பதோ சாத்தியமற்றதாகச் செய்து விடுகிறது.[13]

## வாழ்க்கையின் அவசியத் தேவைகள்

நான் கனவு காணும் சுயராஜ்யம் ஏழை மகனின் சுயராஜ்யம். மன்னர்கள், பணக்காரர்கள் ஆகியோர் வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளை அனுபவிப்பதைப் போன்று நீங்களும் அவைகளை அனுபவிக்க வேண்டும். ஆனால் இதற்காக மன்னர்களைப் போன்று நீங்களும் அரண்மனைகள் வைத்துக் கொண்டிருக்க வேண்டு மென்பதல்ல. மகிழ்ச்சியாய் வாழ்வதற்கு இவைகள் அவசியமில்லை. நீங்களோ நானோ அதில் மூழ்கிப் போய்விடுவோம். ஆனால் ஒரு பணக்காரன் அனுபவிக்கக் கூடிய சாதாரண வாழ்க்கை வசதிகளை யெல்லாம் நீங்களும் பெறவேண்டும். இவ்வித வசதிகள் எல்லாம் உங்களுக்கு உத்தரவாதமாக்கப்படாவிட்டால், சுயராஜ்யம் பூர்ண சுயராஜ்யமாகாது என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.[14]

## ஒதுங்கியிருப்பது சுயராஜ்யம் அல்ல

தனித்து ஒதுங்கிய விடுதலையைப் பூரண சுயராஜ்யம் என்று நான் கூறவில்லை. ஆனல் நலமான கண்ணியமான சுதந்திரத்தையே கூறுகிறேன். என்னுடைய தேசியம் வேகமானதாக இருக்கலாம். ஆனலும் அது பிறரிடமிருந்து பூரணமாக ஒதுங்கியதல்ல. எந்த தேசத்தையோ அல்லது தனிப்பட்ட மனிதரையோ துன்பத்திற்குள்ளாக்குவதற்காக அது உருவாக்கப்படவில்லை. சட்டவிதிகள், அவை தார்மிகமானவையாக இருப்பதைப் போன்று அவ்வளவு சட்ட பூர்வமானவையல்ல. அயலானுடைய சொத்திற்குத் தீங்கு விளைவிப்பதற்காக உன் சொந்த சொத்தைப் பயன் படுத்தாதே என்ற நிரந்தர உண்மையில் நான் நம்பிக்கை வைத்திருக்கின்றேன்.[15]

## சித்தாந்தமும் நடைமுறையும்

சத்தியத்தின் மூலமும் அஹிம்சையின் மூலமும் பூரண சுயராஜ்யம் பெறுவதன் பொருள் ஒவ்வொரு அங்கமும் சுதந்திரம் பெறுவதென்பதாகும். ஒரு தேசத்தில் இந்த அங்கம் எவ்வளவு சிறியதாக இருந்தாலும் சரி, இன, நிற, மத வேறுபாடின்றி இந்தச் சுதந்திரம் கிடைக்க வேண்டும். இந்தச் சுதந்திரமானது ஒரு போதும் தான் மட்டும் அனுபவித்துக் கொள்வதல்ல. ஆகையால் உள்ளேயும் வெளியேயும் ஒருவரை யொருவர் சார்ந்து வாழ்வதற்கு முற்றிலும் உகந்ததே இது. யூக்லிட் தனது சித்தாந்தத்தில் கூறியபடி எவ்வாறு கோட்டை வரைய முடியாதோ அதே போன்று ஏட்டில் உள்ள தத்துவத்தை நூற்றுக்கு நூறு நடைமுறையில் கொண்டு வரமுடியாது. நடைமுறையானது சித்தாந்தத்திலிருந்து கொஞ்சம் இறங்கியதாகவே இருக்கும். ஆகையால் சத்தியத்தையும் அஹிம்சையையும் நடைமுறையில் நாம் எந்த அளவுக்கு நெருங்குகிருேமோ அந்த அளவுக்குத் தான் பூர்ண சுயராஜ்யம் பூர்ணமானதாக விருக்கும்.[16]

## அரசியல் அதிகாரம் வேண்டுமா?

இவைகளெல்லாம், பூரண சுயராஜ்யத்துக்கு நாம் என்ன பொருள் கொள்கிருேம், பூரண சுயராஜ்யத்தின் மூலம் நாம் என்ன விரும்புகிருேம் என்பதைத் தான் சார்ந்திருக்கின்றன. பூரண சுயராஜ்யம் என்ருல் மக்களிடையே எழுச்சி ஏற்பட வேண்டும் என்பதும், தங்களுடைய உண்மையான நலன் என்ன வென்பதை மக்கள் அறிந்து உலகமே எதிர்த்து வந்தாலும் அதைக் காப்

பாற்றக் கூடிய திறமையும் அவர்களுக்கு இருக்க வேண்டும் என்பதும் பொருளானல், பூரண சுயராஜ்யத்தின் மூலம் மனப்பூர்வ மான ஒற்றுமை நமக்குத் தேவையானல், உள்ளேயிருந்தோ வெளி யிலிருந்தோ வரும் ஆக்கிரமிப்பிலிருந்து நாம் தப்பிக்க விரும்பினல், பொதுமக்களுடைய பொருளாதார முன்னேற்றத்தில் நாம் படிப் படியாக முன்னேற்றங்காண விரும்பினல், அரசியல் அதிகாரம் வேண்டுமென்பதில்லை. நம்மிடம் உள்ள அதிகாரத்தைக் கொண்டு செயலாற்றுவதன் மூலமே நம் இலட்சியத்தை அடையலாம்.[17]

## நான்கு முக்கிய அம்சங்கள்

சுயராஜ்யத்தைப் பற்றிய எனது கருத்தைக் குறித்துத் தப்பபிப்பிராயப்படவேண்டாம். பிறருடைய ஆட்சியிலிருந்து நாம் முழு விடுதலை பெறவேண்டும், முழுப் பொருளாதார சுதந்திரம் பெற வேண்டும் என்பது தான் சுயராஜ்யத்தைப் பற்றி நான் கொண்டுள்ள கருத்து. ஆகவே, ஒருபுறம் உங்களுக்கு அரசியல் சுதந்திரம் இருக்கிறது; மற்றொருபுறம் பொருளாதார சுதந்திரம் இருக்கிறது. இதைத் தவிர, மற்றும் இரு பக்கங்களும் இதில் உண்டு. இவைகளில் ஒரு புறம் தார்மீக, சமூக அம்சமாகும். அதற்கு இணையான மற்றொரு புறம் தர்மம், அதாவது, மதம் என்பதன் உயர்ந்த நிலை. இதில் இந்து மதம், இஸ்லாம், கிறிஸ்துவ மதங்கள் முதலிய எல்லாம் சேர்ந்திருக்கின்றன.—ஆனல் அவைகளுக்கெல்லாம் இது உயர்ந்தது......இதை நாம் சுயராஜ்யத்தின் சதுர வடிவம் என்று அழைக்கலாம். இவைகளில் எந்தக் கோணம் சரியாக இல்லாவிட்டாலும் இது சதுரமாக இருக்க முடியாது.[18]

## அசத்தியம் கூடாது

நம்முடைய சுயராஜ்யத்தைச் சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின் மூலம் போராடிப் பெறவும், செயலாற்றவும், நிலை நிறுத் தவும் வேண்டும் என்ற உறுதி நம் எல்லோருக்கும் ஏற்பட வேண்டும். அப்போதுதான் எனது கருத்தின்படியான சுயராஜ்யம் கிடைக்கும். அசத்தியமான, பலாத்காரம் உள்ள முறைகளின் மூலம் உண்மையான ஜனநாயகத்தையோ அல்லது சுயராஜ்யத்தையோ நாம் அடைய முடியாது. இதன் காரணம் எளிது. அசத்தியத்தையும் பலாத்காரத்தையும் நாம் பயன்படுத்தினல், அதனல் ஏற்படக் கூடிய இயற்கையான விளைவு எதிரிகளை நசுக்குவது அல்லது ஒழித்துக் கட்டுவதாகவும், அதன் மூலம் எல்லா எதிர்ப்பையும் அகற்றுவதாகவும் இருக்கும். இதன் மூலம் தனிப்பட்டவர் சுதந்திரம் கிட்டாது. கலப்பட மில்லாத

அஹிம்சையைக் கடைப்பிடிக்கும் கட்சியின்கீழ்தான் தனிப் பட்டவருக்குப் பூரண சுதந்திரம் கிடைக்க முடியும். [19]

## கடமைதான் பெரிது

அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட சுயராஜ்யத்தில், மக்கள் தங்களுடைய உரிமைகளை அறிந்திருக்க வேண்டுமென் பதில்லை. ஆனல் அவர்கள் தங்களுடைய கடமைகளை அறிந் திருக்க வேண்டியது மட்டும் அவசியமாகும். உரிய உரிமையை அளிக்காத கடமை எதுவும் இல்லை. ஒருவனுடைய கடமைகளைச் சரிவரச் செய்வதால் கிடைக்கக்கூடியவைதான் உண்மையான உரிமைகளாகும். ஆகையால் தாங்கள் எந்த அரசைச் சேர்ந்தவர்களோ அதற்குத் தொண்டாற்றுபவர்களுக்குத்தான் உண்மையான குடியுரிமை கிடைக்கும். அவர்கள்தான் தங்க ளுக்குக் கிடைக்கும் உரிமைகளைச் சரிவரப் பயன்படுத்த முடியும். ஒவ்வொருவருக்கும் பொய் சொல்லவோ அல் லது காலித்தனத்தில் ஈடுபடவோ உரிமையுண்டு. ஆனல் இப் படிப்பட்ட உரிமையைப் பயன்படுத்துவதானது பயன்படுத்து பவருக்கும் சமூகத்துக்கும் தீங்குசெய்வதாகும். ஆனல் சத்தி யத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிப்பவருக்குத் தன் மதிப் புக் கிடைக்கிறது. இந்தத் தன் மதிப்பானது அவருக்கு உரிமை களை வழங்குகிறது. தங்களுடைய கடமைகளைச் செய்வதன்மூலம் உரிமைகளைப் பெறுபவர்கள், சமூகத்தின் சேவைக்காகத்தான் அவைகளைப் பயன்படுத்துகிருர்கள், ஒருபோதும் தங்களுக்காகப் பயன்படுத்துவதில்லை. தனிப்பட்டவர் சுதந்திரத்தின் மொத்தம் தான் மக்களுடைய சுயராஜ்யம் என்பது. இப்படிப்பட்ட சுய ராஜ்யம், பிரஜைகள் என்ற முறையில் தனிப்பட்டவர்கள் ஆற் றும் கடமையின்மூலம் கிடைப்பதுதான். இதில் யாரும் தங்க ளுடைய உரிமைகளைப்பற்றி எண்ணுவதில்லை. இவைகள் தேவை யாக விருக்கும்போது, கடமையை அதிகச் சிறப்பாகச் செய்தால், இவை கிடைத்து விடுகின்றன. [20]

## அஹிம்சா பூர்வ சுயராஜ்யம்

அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட சுயராஜ்யத்தில், யாரும் யாருக்கும் எதிரியல்ல. பொதுவான இலட்சியத்திற்கு ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பங்கைச் செய்கிருர்கள். எல் லோருக்கும் எழுதப்படிக்கத் தெரியும். அவர்களுடைய அறி வானது நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே செல்கிறது. நோய்

நொடி என்பது மிக மிகக் குறைச்சலாக விருக்கும். பரம ஏழை என்று யாரும் இருக்க மாட்டார்கள். உழைக்க முன்வரும் யாருக்கும் அங்கு வேலை கிடைக்கும். இப்படிப்பட்ட அரசாங் கத்தில் சூதாட்டத்துக்கும் குடிக்கும் ஒழுக்க ஈனத்துக்கும் வகுப்பு வேற்றுமைக்கும் இடம் கிடையாது. பணக்காரர்கள் தங்களு டைய பணத்தைப் புத்திசாலித்தனமாகவும் பயனுள்ள முறையி லும் உபயோகப்படுத்துவார்கள்; ஆடம்பரத்தைப் பெருக்கிக் கொள்வதற்காகவும் உலக இச்சைகளை மேலும் மேலும் பெருக் கிக்கொள்ளவும் விரையம் செய்யமாட்டார்கள். கைவிரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சில பணக்காரர்கள் தங்க மாளிகைகளில் வாழ்வதென்பதும் கோடிக்கணக்கான மக்கள் சூரிய வெளிச் சமோ காற்றோ புகாத பரிதாபகரமான சிறுகுடிசைகளில் வாழ்வ தென்பதும் நடைபெறாது. அஹிம்சா பூர்வமான சுயராஜ்யத்தில், பிறருடைய நியாயமான உரிமைகளில் யாரும் குறுக்கிடமாட் டார்கள்; அதே சமயம் யாரும் நியாயமற்ற உரிமைகளையும் பெற முடியாது. நன்றாக அமைக்கப்பட்டுள்ள ஒரு அரசில், அநியாய மானமுறையில் பதவியையோ சொத்தையோ கைப்பற்றிக் கொள்வது சாத்தியமில்லாத ஒன்றாகையால், அப்படிப்பட்டவர் களிடமிருந்து அவைகளைக் கைப்பற்றிப் பலாத்காரத்தைக் கடைப் பிடிப்பதென்பதற்கு அவசியமே இல்லாமற் போய்விடுகிறது.[21]



காந்திஜி உலாவச் செல்லுகையில் அவருக்கு ஊன்றுகோல்களாக
இருக்கும் பாக்கியம் பெற்ற சிறுமிகள்.



கோடை காலத்தில் உஷ்ணம் தாங்காததால் காந்திஜி ஈரமண் அடங்கிய பையைத் தலையில் வைத்துக்கொண்டு நடமாடுகிறார்.

அத்தியாயம் 2

# இலட்சிய சமுதாயத்தின் சித்திரம்

## உயர்வு தாழ்வு இராது

[புது டில்லியில் உள்ள பங்கி காலனியில் (தோட்டிகள் குடியிருப்பில்) ஒரு நாள் காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டம் நடைபெற்ற போது, ஒரு பாடல் பாடப் பெற்றது. சுதந்திர இந்தியாவைப் பற்றி காந்திஜி மனக் கண்ணில் கண்ட சித்திரத்தின் முக்கிய அம்சங்க ளெல்லாம் அதில் இடம் பெற்றிருப்பதை அவர் உணர்ந்தார். அது அப்படியே அவர் மனதைப் பற்றிக் கொண்டது. அவரே அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, அதைப் பெதிக் லாரன்ஸ் பிரபுவுக்கு அனுப்ப ஏற்பாடு செய்தார். அந்தப் பாடல் பின்வருமாறு:]

துயரம் துன்பம் தோன்றிடும் ஆசை
அயர்(வு) ஏமாற்றம் ஆத்திரம் இல்லா
அன்பின் கங்கை அமைவுறப் பாய்ந்து
இன்பம் எங்கும் இசைவுறப் பொங்கும்
எல்லா மனமும் ஒருதிசை ஏகும்;
செல்லும் காலச் சிந்தனை இல்லா
அனைவரும் வேண்டும் அனைத்தையும் பெற்று
வினைசெய் கொள்முதல் விற்பனை தன்னில்
பண்டங்கள் தம்மைப் பரிமாறுதலாய்,
அண்டம் முழுதும் அச்சினில் வார்த்தாற்
போலே தன்னலப் புகைச்ச லிலாத
ஆண்டான் அடிமை ஆருமிலாத
மாண்புறு நாட்டின் மக்கள் நாமே;
எங்கும் பேரொளி வீசுவ தெனினும்
பொங்கும் வெம்மை புலனுறல் இல்லை;
அத்தகை நா(டு)உன் அகத்தினில் உளது
சுத்த சுராஜ்ய சுதேசியும் அதுவே
உன்னுடை உளமே உன்னுடை வீடு.

வெற்றி! வெற்றி! விழுமிய வெற்றி!
பெற்றிடுவான் இதைப் பேணி விழைபவன்.

[காந்திஜி கனவு கண்ட இந்தியாவின் ஒரு தோற்றமாகவே இந்தப் பாடல் உருவாகியது.]

ஜாதி, இன பேதமற்ற ஒரு சமுதாய அமைப்பின் சித்திரம் இது. இதில் கோபுரத்தைப் போன்று ஒன்றுக்கு மேல் ஒன்ருக இருக்கும் பிரிவுகள் இருக்கமாட்டா. அதற்கு மாருக, ஒரு வட்டத்தில் இருக்கும் பல புள்ளிகளைப் போல் சமத்துவமான பிரிவினைகளே இருக்கும். உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், என்பது இருக்காது; எல்லாப் பதவிகளுக்கும் சம அந்தஸ்தும் சம ஊதியமும் தான் உண்டு; தேவைக்கும் அதிகமாக வைத்திருப்பவர்கள் தங்களுடைய வசதிகளைச் சொந்த நலனுக்காக வைத்துக் கொள்ளாமல், தேவைக்கும் குறைவாய் உள்ளவர்களுக்குத் தொண்டு செய்வதற்குத் தங்களிடம் அளிக்கப்பட்டுள்ள அறநிதியாகக் கருதுவார்கள். எந்த ஒரு தொழிலையும், சொந்த முன்னேற்றத்திற்காக அல்லாமல் சமுதாயத்துக்குச் சேவை செய்வதன் மூலம் திறமையை வெளிப்படுத்தவும் தங்களைத் தாங்களே உணரவும் உதவக்கூடிய ஒரு சாதனமாகக் கருதித் தேர்ந்தெடுப்பார்கள்.

## சுதேசி உலகம்

இந்தச் சமுதாய அமைப்பில் எல்லாப் பதவிகளுக்கும் ஒரே அந்தஸ்தும் ஊதியமுமே இருப்பதால், பரம்பரையாக வந்த திறமைகள் சொந்த லாப ஆசையில் பலியிடப் படமாட்டா. அதற்குப் பதிலாக, அவை சந்ததி சந்ததியாகப் பாதுகாத்து வளர்க்கப்படும். ஜீவனற்ற முறையில் வரம்பில்லாது நடத்தப்படும் போட்டிகளின் இடத்தில் சமுதாய சேவைக் கோட்பாடு இடம் பெறும். ஒவ்வொருவரும் போதுமான ஓய்வும் வாய்ப்பும், கல்வி கலாச்சார வசதிகளும் பெற்ற உழைப்பாளியாக இருப்பார்கள். கைவேலைப் பாடுள்ள குடிசைத் தொழில்களும் சிறுசிறு தீவிர விவசாயக் கூட்டுறவுப் பண்ணைகளும் நிறைந்த கவர்ச்சிமிக்க ஒரு உலகமாக அது இருக்கும்; வகுப்பு வாதத்துக்கோ ஜாதிக்கோ இடம் இருக்காது. முடிவாகச் சொல்லப்போனல் அது ஒரு சுதேசி உலகம். அதில் பொருளாதார எல்லைகள் குறுகலாகவும் தனிப்பட்டவர் சுதந்திரத்தின் எல்லைகள் அதிகபட்ச அளவுக்கு விசாலமாகவும் வரையப் பட்டிருக்கும். ஒவ்வொருவரும் தங்களுடைய

சுற்றுப்புறச் சூழ்நிலைகளுக்குப் பொறுப்பானவர்களாய் இருப் பார்கள்; அதே போன்று, மொத்தமாக எல்லோரும் சமூகத்துக்குப் பொறுப்பானவர்களாய் இருப்பார்கள்; 'ஒன்றை ஒன்று சார்ந்தது, ஒன்றை அளித்தால்தான் மற்றொன்றைப் பெற முடியும்' என்ற கொள்கையின் அடிப்படையில், உரிமைகளும் கடமைகளும் ஒழுங்கு படுத்தப்படும்; ஒரு முழு அங்கத்துக்கும் அதன் பாகத்துக்கும் மோதல் இருக்காது; தேசியம் என்பது குறுகிய, சுயநலமுள்ள, ஆக்கிரமிப்பு மனோபாவங்கொண்ட தத்துவமாகிவிடும் அபாயம் இருக்காது. சர்வ தேசியமானது வெறும் ஏட்டுச் சுரைக்காயாக இராது; தெளிவில்லாத சில பொதுக் கோட்பாடுகளின் குழப்ப மான, மங்கலான தோற்றத்துக்காக நிதர்சனமான ஒன்றை இழந்து விடும் ஆபத்தும் இருக்காது.[2]

## இலட்சிய 'கற்பனை'

அங்கு பாப்பர்களோ, பிச்சைக்காரர்களோ, உயர்ந்தவர் களோ, தாழ்ந்தவர்களோ, இலட்சாதிபதிகளான முதலாளி களோ அல்லது அரைப் பட்டினிகிடக்கும் தொழிலாளிகளோ இருக்கமாட்டார்கள். போதை அளிக்கும் மதுவோ, மருந்தோ இருக்காது. ஆண்களுக்கு இயற்கையாக அளிக்கப்படும் மரியாதை பெண்களுக்கும் அளிக்கப்படும். ஆண்கள், பெண்கள் ஆகிய இரு பாலாரின் கற்பும் பரிசுத்தமும் அக்கறையுடன் பாதுகாக்கப்படும். ஒருவர் எந்த மதத்தைச் சேர்ந்தவராக இருப்பினும், தமது மனைவி யைத் தவிர மற்றப் பெண்களைத் தம்முடைய தாயாகவும் சகோதரி யாகவும் மகளாகவும்—அவரவர் வயதுக்கேற்றவாறு—நடத்துவார். அங்கு தீண்டாமை என்பது இருக்காது. எல்லா மதங்களுக்கும் சமத்துவமான மரியாதை அளிக்கப்படும். மக்கள் எல்லோரும் பெருமையுடனும் மகிழ்ச்சியுடனும் தாமாகவே முன்வந்து உடல் உழைப்பு அளிப்பார்கள். நான் இவ்வாறு கூறுவதைக் கேட்பவர் கள் அல்லது படிப்பவர்கள், நல்ல காலை வெய்யலில் எனது படுக் கையில் நீட்டிப் படுத்துக் கொண்டு, இந்தக் கற்பனை உலகில் சஞ்சரிப்பதற்காக, என்னை மன்னிப்பார்களாக![3]

அத்தியாயம் 3

# எத்திசையில் நம்பிக்கை தோன்றுகிறது?

## தொழில் மயம் ஒரு சாபக்கேடு

தொழில் மயம் என்பது மனித வர்க்கத்திற்கு ஒரு சாபக் கேடாக முடியப் போகிறது என்று நான் அஞ்சுகிறேன். தொழில் மயமென்பது பிறரைச் சுரண்டுவதற்கு உங்களுக்குள்ள சக்தி, உங்களுக்குக் கிடைக்கக்கூடிய வெளிநாட்டு மார்க் கெட்டுகள், போட்டியிடுபவர்கள் இல்லாதிருப்பது ஆகியவை களை முற்றிலும் சார்ந்திருக்கிறது. இந்தச் சாதகமான அம்சங் களெல்லாம் இங்கிலாந்திற்கு இப்போது நாள்தோறும் குறைந்து கொண்டு வருவதனுல்தான், அங்கு வேலையில்லாதிருப்போர் தொகை நாள்தோறும் உயர்ந்து கொண்டே செல்கிறது. இதில் இந்தியர் பகிஷ்காரம் ஒரு கொசுக்கடி மாதிரிதான். இங்கிலாந் தின் நிலைமை இதுவானுல், இந்தியாவைப்போன்ற ஒரு பரந்த நாடு, தொழில் மயமாவதன்மூலம் நன்மை அடையலாம் என எதிர்பார்க்க முடியாது. உண்மையில், இந்தியா பிறநாடுகளைச் சுரண்ட முற்படும்போது - அது தொழில் மயமானுல் அவ்வாறு செய்துதானுக வேண்டும் – பிறநாடுகளுக்கு ஒரு சாபக்கேடாக இருக்கும், உலகிற்கு ஒரு அபாயமாகவும் இருக்கும். பிறநாடு களைச் சுரண்டுவதற்காக, இந்தியாவைத் தொழில் மயமாக்க வேண்டுமென நான் ஏன் எண்ணவேண்டும்? தற்போதுள்ள பரிதாபமான நிலைமையை நீங்கள் அறியவில்லையா? நம்முடைய முப்பது கோடி மக்களுக்கு நம்மால் வேலை தேட முடியும்போது, இங்கிலாந்து அங்குள்ள முப்பது இலட்சம் மக்களுக்கு வேலை தேட முடியவில்லை. இங்கிலாந்திலுள்ள மிகப் பெரிய அறிவாளி களையெல்லாம் திணறவைக்கும் பிரச்னையாக இது இருக்கிறது. தொழில் மயத்தின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாக இருக்கிறது. இங்கிலாந்திற்கு எதிராக அமெரிக்கா, ஜப்பான், பிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகள் வெற்றிகரமாகப் போட்டியிடுகின்றன. இந்தியாவில் உள்ள ஆலைகளைக் கைவிரல் விட்டு எண்ணிவிட

லாம் என்றாலும், அதுவும் இங்கிலாந்துக்கு ஒரு போட்டியே. இந்தியாவில் எழுச்சி ஏற்பட்டிருப்பதைப் போன்றே, இந்தியாவைக் காட்டிலும் மிக அதிகமான இயற்கை, தாது, மனித வளமுள்ள தென்னாப்பிரிக்காவிலும் எழுச்சி ஏற்படலாம். ஆப்பிரிக்காவில் உள்ள பலம் பொருந்திய இனத்தவரின் முன் பலம் பொருந்திய பிரிட்டிஷாரும் சித்திரக்குள்ளர்களாகத்தான் தோன்றுவார்கள். அவர்கள் கண்ணியமானவர்களாயினும் நாகரிகமற்ற இனத்தவர் தானேயென்று நீங்கள் சொல்லலாம். அவர்கள் நிச்சயமாக கண்ணியமானவர்களே; ஆனால் நாகரிகமற்றவர்களல்ல. ஒரு சில ஆண்டுகளில், மேற்கு நாட்டவர் உற்பத்திசெய்யும் பொருள்களின் விற்பனைக் களமாக ஆப்பிரிக்கா இராது என்பதை அவர்கள் காண்பார்கள். ஆகவே, மேல்நாடுகளுக்கே தொழில் மயத்தின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாக இருந்தால், இந்தியாவிற்கு அது இன்னும் அதிக இருள் சூழ்ந்ததாக இராதா? [1]

## இயந்திரம்தான் காரணம்

'தற்போதுள்ள குழப்பங்களுக்கு என்ன காரணம்?' இது பலவீனமான நாடுகளைப் பலம் பொருந்திய நாடுகள் சுரண்டுவது என்று நான் சொல்லமாட்டேன். அதற்குப் பதிலாக, சகோதர நாடுகளைச் சகோதர நாடுகள் சுரண்டுவதாகும். இயந்திரம்தான் இந்த நாடுகள் சுரண்டுவதைச் சாத்தியமாக்கி யிருக்கிறது. இயந்திரங்கள்மீது நான் கொண்டுள்ள ஆட்சேபணைக்கு இந்த உண்மையே அடிப்படையான காரணமாகும். அதை மட்டும் வைத்துக்கொண்டு பார்த்தால் இயந்திரம் ஒரு உயிரற்ற பொருளே. அதை நல்ல காரியத்துக்கோ அல்லது கெட்ட காரியத்துக்கோ பயன்படுத்தலாம். ஆனால் அது எளிதாகக் கெட்ட காரியத்துக்குப் பயன்படுத்தப்படுகிறது. இதை நாம் அறிவோம். [2]

## தொழில் மயத்தை ஒழிப்போம்

உண்மையில், மேற்குநாடுகள் தங்களுக்குத் தெவிட்டும் அளவுக்குத் தொழில் மயத்தையும் சுரண்டலையும் கையாண்டிருக்கின்றன. உண்மையென்னவெனில் இந்தத் தொழில் மய நாகரிகமெல்லாம் தீயதானதால், அது ஒரு நோயேயாகும். வெறும் முழக்கங்கள் அல்லது சொற்றொடர்களில் நாம் மயங்கிவிடக் கூடாது. நீராவிக் கப்பல்கள், தந்திகள் ஆகியவற்றுடன் எனக்கு விரோதம் இல்லை. தொழில் மயமும், மற்றும் அதைச் சார்ந்த

வைகளும் இல்லாமல் இவை இருக்கமுடியும். அவைதான் முடிவானவை என்பதல்ல. மனிதவர்க்கத்தின் நிரந்தரமான நலனுக்கு அவை எந்த வகையிலும் தவிர்க்க முடியாதவையல்ல. நீராவி, மின்சாரம் ஆகியவற்றின் உபயோகமெல்லாம் இப்போது நமக்குத் தெரிந்திருப்பதால், அவைகளை உரிய காலத்திலும் தொழில் மயத்தை எவ்வாறு தவிர்ப்பது என்பதைக் கற்றுக்கொண்ட பிறகும் நாம் பயன்படுத்தலாம். ஆகையால் நம்முடைய முக்கிய அக்கறையெல்லாம் எப்படியாவது தொழில் மயத்தை ஒழிப்பது தான்.[3]

## ஒருவருக்கு உணவு, மற்ருெருவருக்கு விஷம்

இந்த நாகரிகத்தில் தணியாத லோகாயத ஆசை ஒரு புறமும் அதனுல் விளையக்கூடிய யுத்தம் மற்ருெரு புறமும் இருக்கிறது. அதன்மீது அவநம்பிக்கை வைத்துள்ள, விஷயமறிந்தவர்களுடைய தொகை, நாளுக்குநாள் கூடிக்கொண்டு போகிறது. ஆனுல் நல்லதோ கெட்டதோ, மேற்குநாட்டவர் கருத்துப்படி இந்தியா ஏன் தொழில் மயமாகவேண்டும்? மேற்குநாட்டு நாகரிகம் நகரத்தை அடிப்படையாகக் கொண்டது. இங்கிலாந்து அல்லது இத்தாலியைப் போன்ற சிறிய நாடுகள், தங்களுடைய முறைகளை நகர் மயமாக்க முடியலாம். மிகக் குறைந்த ஜனத்தொகையுடைய அமெரிக்காவைப் போன்ற ஒரு பெரிய நாடு ஒரு வேளை வேறு எதுவுமே செய்யமுடியாது. ஆனுல் ஒரு பெரிய நாடு - நெருக்கமான ஜனத்தொகையைக் கொண்டநாடு - இது வரை தனக்காகப் பயன்பட்ட புராதன கிராமப்புற பரம்பரையைக் கொண்ட ஒருநாடு - மேற்குநாட்டின் மாதிரியைப் பின்பற்ற வேண்டிய அவசியமில்லை; பின்பற்றவும் கூடாது. ஒரு சூழ்நிலையில் உள்ள ஒரு நாட்டுக்கு நல்லதாய் இருப்பது, மாறுபட்ட சூழ் நிலையில் உள்ள மற்ருெரு நாட்டிற்கு நல்லதாய் இருக்குமென்பதில்லை. ஒரு மனிதனுக்கு உணவாய் இருப்பது மற்ருெரு மனிதனுக்கு விஷமாகிறது. ஒருநாட்டின் பூகோள அமைப்புக்கு, அதன் கலாசாரத்தை உருவாக்குவதில் பெரும் பங்கு உண்டு. வடதுருவ, தென்துருவப் பகுதிகளில் வாழ்பவர்களுக்கு தோலாலான கோட் அவசியமாக இருக்கலாம். ஆனுல், மத்திய ரேகைப் பகுதியில் வாழ்பவர்களை அது மூச்சுத் திணற வைத்துவிடும்.[4]

## கஷ்டம் எதில் இருக்கிறது ?

தற்போதுள்ள கஷ்டம் பொறுக்க முடியாதது என்பதில் ஐயப்பாடே இல்லை. கொடுமையான வறுமை நீங்கியாகவேண்

டும். ஆனல் தொழில் மயமாவது அதற்குப் பரிகாரம் அல்ல. மாட்டு வண்டிகளை உபயோகப்படுத்துவதனல் கஷ்டம் வந்து விடவில்லை. நம்முடைய சுய நலமும், அண்டை அயலார்களிடம் நமக்கு அனுதாப உணர்ச்சி இல்லாததுந்தான் அதற்குக் காரணம். நம்முடைய அண்டை, அயலார்களிடம் நமக்கு அன்பு இல்லை யென்ருல், எந்த மாறுதலும்—அது எவ்வளவுதான் புரட்சிகரமானதாக இருந்தாலும்—நமக்கு எந்தவிதமான நன்மையும் பயக்க முடியாது.[5]

## மனிதர் வேறு, முறை வேரு?

எனக்கு மட்டும் அதிகாரம் இருந்தால் நான் அந்த முறையை இன்றே அழித்துவிடுவேன். அவைகளை மிகவும் பயங்கரமான ஆயுதங்கள் தான் அழிக்கும் என்ற நம்பிக்கை மட்டும் எனக்கிருந்தால், அவைகளையும் பயன்படுத்துவேன். இந்தப் பயங்கர ஆயுதங்கள் தற்போது நிருவாகத்திலுள்ளவர்களை அழிக்குமானலும், முறையை ஸ்திரப்படுத்தத்தான் செய்யும் என்பதனல் தான் நான் தயங்குகிறேன். மனிதர்கள் கடைப்பிடிக்கும் முறையை அல்லாது மனிதர்களையே அழிப்பவர்கள், பின்னல் அந்த முறைகளையே கடைப்பிடித்து, அவர்கள் யாரை அழித்தார்களோ அவர்களைக் காட்டிலும் மோசமானவர்களாய் விடுகிருர்கள். மனிதர்கள் கடைப்பிடிக்கும் முறை அவர்களுடன் ஒழிந்துவிடும் என்ற தவருன நம்பிக்கையில்தான் இவர்கள் மனிதர்களை அழிக்கிருர்கள். தீமையின் மூல வேர் எங்கேயிருக்கிறது என்பது இவர்களுக்குத் தெரியாது.[6]

## தொழில்கள் எம்முறையில்?

பெரிய அளவில் தொழில் மயமாக்குவதானது, கிராமங்களை எல்லாவகையான சுரண்டலுக்கும் இலக்காக்கத்தான் செய்யும். ஏனென்ருல் போட்டி, விற்பனைக்கான மார்க்கெட் பிடித்தல் என்ற பிரச்னைகளெல்லாம் வந்துவிடுகின்றன. ஆகவே, கிராமம் சுய தேவைப்பூர்த்தி அடையுமாறு செய்வதிலும், பிரதானமாக உபயோகத்திற்காகவே உற்பத்தி செய்வதிலும் நாம் ஒரு மனதான கவனம் செலுத்த வேண்டி யிருக்கிறது. தொழில்களில் இந்த அம்சம் நிலை நிறுத்தப்படுவதாக விருந்தால், கிராமவாசிகள் தாங்களே செய்யவும் வாங்கவும் கூடிய கருவிகளையும் நவீன இயந்திரங்களையும் உபயோகப்படுத்துவதில் எந்தவிதமான ஆட்சேபணையும் இருக்க முடியாது?[7]

## இந்தியாவின் கடமை

எல்லா நாடுகளுக்கும் எல்லா வகையிலும் தொழில் மயம் அவசியம் என்று நான் நம்பவில்லை. இந்தியாவைப் பொறுத்த வரை இது சரியல்ல. புலம்பிக்கொண்டிருக்கும் இந்த உலகத்திற்கு ஒருவகையில் இந்தியா தனது கடமையைச் செய்ய முடியும் என்று நான் நம்புகிறேன்.

ஆயிரக் கணக்கான தனது குடிசைத் தொழில்கள் வளர்ச்சி யடையுமாறு செய்வதன் மூலமும், உலகுடன் சமாதானமாக வாழ் வதன் மூலமும் அது எளிய, ஆனால் உயர்ந்த வாழ்க்கையை மேற் கொள்ள வேண்டும். பணப் பூதத்தை ஆராதனை செய்வதன் மூலம் கிடைத்துள்ள அதிவேகத்தை அடிப்படையாகக் கொண்ட சிக்கல் நிறைந்த லோகாயத வாழ்க்கையானது உயர்ந்த சிந்தனை யுடன் ஒத்துப்போகாது. கண்ணியமாக வாழுங் கலையை நாம் கற்றுக்கொண்டால்தான், வாழ்க்கையின் அழகுகளெல்லாம் சாத் தியமாகும்.

## ஒரு ஐயப்பாடு

“உலகம் இன்று மேலும்மேலும் ஆயுதபாணியாகிக்கொண்டு வருகிறது. ஆடம்பரமான ஒரு சூழ்நிலைக்கு மத்தியில் வாழ்கிறது. இப்படிப்பட்ட ஒரு உலகத்தில், எவ்வளவுதான் பெரிய நாடாக இருந்தாலும், எவ்வளவுதான் மக்கள் தொகை கொண்டதாக இருந்தாலும், அது தனித்து ஒதுங்கி யிருந்து எளிய வாழ்க்கை வாழ முடியுமா?” என்ற கேள்வி ஒரு சந்தேகவாதியின் மனதில் எழலாம். இதற்கான பதில் நேரடியானது, லேசானது. எளிய வாழ்க்கை சிறந்தது என்றால் நாம் முயற்சி செய்து பார்ப்போமே? முயற்சி செய்பவர் ஒருவராய் இருந்தாலென்ன, அல்லது ஒரு சிறு குழுவாய் இருந்தாலென்ன?[8]

## ஐரோப்பிய நாகரிகம்

ஐரோப்பிய நாகரிகம் நிச்சயமாக ஐரோப்பியர்களுக்கு நல்லதுதான். ஆனால் நாம் அதை அப்படியே பின்பற்ற ஆரம்பித் தால், அது இந்தியாவின் அழிவில் முடிந்துவிடும். இதனால், அதில் நல்லதாக இருப்பதை, ஏற்றுக்கொள்ளத் தகுதியாக இருப்பதை, நாம் கடைப்பிடிக்கக் கூடாது என்று நான் கூறவில்லை. அதே சமயம், அதில் என்னென்ன தீமை ஊடுருவி யிருந்தாலும் அதை ஐரோப்பியர்கள் அகற்றக்கூடாது என்று நான் கூறுவதாகவும்

ஆகாது. லோகாயத வசதிகளை ஓயாது தேடுவதும் அவைகளை மேலும் மேலும் பெருக்கிக்கொண்டு செல்வதும் ஒரு தீமையே யாகும். ஆகையால் நான் தைரியமாகக் கூறமுடியும்: தாங்கள் எந்த வசதிகளுக்கு அடிமையாகிக் கொண்டிருக்கிறார்களோ அவைகளின் சுமையால் ஐரோப்பியர்கள் அழிந்து போகாமல் இருக்க வேண்டுமானால், ஐரோப்பியர்களே தங்களுடைய கண்ணோட்டத்தை மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கும் என்று. என்னுடைய கணிப்பு தவறாக இருக்கலாம். ஆனால் இந்தியாவானது ஆடம்பர வாழ்க்கையை நாடிச்சென்றால் மரணத்தை எதிர்நோக்குவதாகவே முடியும். ஆகவே ஒரு மேற்கு நாட்டுத் தத்துவ சாஸ்திரியின் "எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும்'' என்ற கோட்பாட்டை நாம் நமது உள்ளத்தில் பதித்துவைத்துக் கொள்வோம். இன்று கோடிக்கணக்கான மக்கள் உயர்ந்த வாழ்க்கை வாழமுடியாது. பொதுமக்களுக்காகச் சிந்திக்கிறோம் என்று கூறும் நமக்கு ஒரு அபாயம் இருக்கிறது. அதாவது உயர்ந்த வாழ்க்கையை நோக்கிச் செல்ல முயலும் வீண் முயற்சியில், நாம் உயர்ந்த சிந்தனையை இழந்துவிடுவோம்.[9]

## இது புனிதமானதல்ல

"அமெரிக்க செல்வத்தை நாம் அடைவோம்; ஆனால் அதன் முறைகளைமட்டும் விலக்கிவிடுவோம்'' என்று நம்முடைய நாட்டில் பலர் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். இப்படிப்பட்ட ஒரு முயற்சி செய்யப்பட்டால், அதன் தோல்வி அதன் தலையிலேயே எழுதப்பட்டிருக்கும் என்று நான் நிச்சயமாகச் சொல்வேன். ஒரே நிமிஷத்தில் நாம் விவேகமானவராகவும் நிதானமானவராகவும் ஆத்திரமுள்ளவராகவும் இருக்க முடியாது... ஆலைச் சிம்னிகள், தொழிற்சாலைகள் ஆகியவற்றின் புகையாலும் ஓயாத இரைச்சலாலும் கோரமாக்கப்பட்ட இந்த பூமியில் தேவர்கள் கால் வைக்கமாட்டார்கள். இந்த பூமியின் சாலைகளில் எஞ்ஜின்கள் விரைந்தோடிக் கொண்டிருக்கின்றன. இவைகள் எண்ணற்ற கார்களை இழுத்துச் செல்கின்றன. இந்தக் கார்களிலோ மனிதர்கள் மூட்டைகள் போல் அடைந்து கிடக்கிறார்கள். இந்த மனிதர்களுக்கு எங்கே, எதற்காகச் செல்கிறோம் எனத் தெரியாது. பெரும்பாலும் இவர்கள் தாமத புத்தியுடையவர்களாய் இருக்கிறார்கள். மீன்கள் பெட்டிகளில் அடைக்கப்பட்டிருப்பதுபோன்று வசதியில்லாத முறையில் அடைபட்டுச் செல்வதனால் இவர்களுடைய நிதானம் வளராது. இவர்கள் முற்றிலும் அயலவர்கள் மத்தி

யிலேயே செல்கிருர்கள். முடிந்தால் அவர்கள், இவர்களை வெளி யேற்றிவிடுவார்கள். அதேபோன்று இவர்களால் முடிந்தால் அவர்களையும் வெளியேற்றிவிடுவார்கள். இப்படிப்பட்ட உலகில் தேவர்கள் காலடி எடுத்து வைக்கமாட்டார்கள். இவைகளெல் லாம் லோகாயத முன்னேற்றங்களின் சின்னங்களாகக் கருதப்படு வதனுல்தான் நான் இவைகளைக் கூறுகிறேன். உண்மையில் இவை நம்முடைய மகிழ்ச்சிக்கு எள்ளளவு கூடத் துணை செய்வ தில்லை.[10]

## தீமைகள் ஒருபோதும் நீங்கா

தொழில் மயமாக்க வேண்டுமென்று பண்டித நேரு விரும்பு கிருர். ஏனென்ருல், அதைச் சோஷலிச மயமாக்கிவிட்டால், முதலா ளித்துவத்தின் தீமைகளெல்லாம் போய்விடும் என்று அவர் நம்பு கிருர். ஆனல் என்னுடைய கருத்து வேறு. தொழில் மயமாக்கு வதிலேயே இந்தத் தீமைகளெல்லாம் இயற்கையாக இருக்கின் றன, எவ்வளவுதான் சோஷலிச மயமாக்கினலும் இத் தீமைகளைப் போக்க முடியாது என்று நான் கருதுகிறேன்.[11]

## ஆன்மாவை இழந்து வாழ்வா ?

தொழில் மயத்தைத் தெய்வமாக வழிபடும் நாடு ருசியாதான். அந்த நாட்டை எடுத்துக்கொண்டு பார்த்தாலும், அங்குள்ள வாழ்க்கை என்னைக் கவரவில்லை. பைபிளிலுள்ள வாசகத்தை மேற்கோளாகக் காட்டுவதானல்,"ஒரு மனிதன் தனது ஆன்மாவை இழந்து உலகத்தையே பெற்ருலும் அதனல் அவனுக்கு என்ன பயன் ?" இக்காலச் சொற்களில் கூறுவதானல், ஒருவன் தன்னு டைய தனித் தன்மையை இழந்து, ஒரு இயந்திரத்தில் உள்ள ஆணி யைப் போன்று ஆய்விடுவது மனித கௌரவத்துக்கே தாழ்ந்த செயலாகும். ஒவ்வொரு மனிதனும் சமூகத்தில் சக்தியுள்ள, முழு வளர்ச்சியடைந்த அங்கத்தினராக வேண்டும் என்று நான் விரும்பு கிறேன். கிராமங்கள் சுயதேவைப் பூர்த்தி உள்ளவையாக வேண்டும். ஒருவர் அஹிம்சையின் அடிப்படையில் சேவை செய் வதாகவிருந்தால், இதைத் தவிர வேறு எந்தப் பரிகாரமும் எனக் குத் தெரியவில்லை. இப்போது எனக்கு இதில் அழுத்தமான நம்பிக்கை இருக்கிறது.[12]

## ஆண்டவன் காப்பாளுக !

மேற்குநாட்டு முறையில் இந்தியா ஒருபோதும் தொழில் மய மாகாதிருக்க ஆண்டவன் காப்பாற்றுவாராக. ஒரே ஒரு சிறிய

தீவான இங்கிலாந்தின் பொருளாதார ஏகாதிபத்தியம், இன்று உலகத்தைச் சங்கிலிகளால் கட்டிவைத்திருக்கிறது. முப்பது கோடி மக்களைக்கொண்ட ஒரு தேசம் முழுவதும் இப்படிப்பட்ட பொருளாதாரச் சுரண்டலில் இறங்கிவிட்டால், அது அட்டை உறிஞ்சுவது போல் உலகத்தின் ரத்தத்தையே உறிஞ்சிவிடும்.[13]

## தப்பிச் செல்ல விரும்பக் கூடாது

மேற்குநாடுகள் தங்களுடைய ரத்தம் தோய்ந்த வழியில் ஏற்கனவே சோர்வடைந்து போய்விட்டதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. இந்த வழியில் இந்தியாவுக்குக் கதிமோட்சம் இல்லை. எளிய, ஆன்மீக வாழ்விலிருந்து தோன்றும் ரத்தம் சிந்தாத அமைதி வழியில்தான் இருக்கிறது. தன்னுடைய ஆன்மாவை இழந்துவிடக் கூடிய அபாயமான கட்டத்தில் இந்தியா இருக்கிறது. அவ்வாறு இந்தியா தன் ஆன்மாவை இழந்து வாழ முடியாது. ஆகவே சோம்பேறித்தனத்துடனும் உதவியற்ற முறையிலும், "மேற்கு நாடுகளிலிருந்துவரும் மோதுதலிலிருந்து நாம் தப்ப முடியாது," என்று அது கூறமுடியாது. தன்னுடைய நலனுக்காகவும் உலகத்தின் நலனுக்காகவும் அதை எதிர்ப்பதற்கான பலம் இந்தியாவுக்கு இருக்க வேண்டும்.[14]

## இலட்சியமும் நடைமுறையும்

"இலட்சிய அடிப்படையில் பார்த்தால், எல்லா இயந்திரங்களும் கூடாதென்று நீங்கள் கூறுவீர்களல்லவா?"

இலட்சிய அடிப்படையில் எல்லா இயந்திரங்களும் கூடாவென்றுதான் நான் சொல்வேன். மோட்சம் அடைவதற்கு உதவாத இந்த உடல் எவ்வாறு கூடாது என்றும் ஆன்மா பூரண விடுதலை பெற வேண்டுமென்றும் நான் சொல்வேனோ அதே போன்று, எல்லா இயந்திரங்களும் கூடாவென்றுதான் சொல்வேன். ஆனால் இயந்திரங்கள் இருக்கத்தான் செய்யும். ஏனெனில், உடல் எவ்வாறு தவிர்க்க முடியாதோ அதே போன்று இயந்திரங்களும் தவிர்க்க முடியாதவையாக இருக்கும். நான் ஏற்கனவே உங்களிடம் கூறியது போல, இந்த உடம்பே ஒரு பரிசுத்தமான இயந்திரந்தான்; ஆனால், ஆன்மா உயர்ந்த நிலையை அடைவதற்கு இது தடங்கலாக இருந்தால் இதை நாம் நிராகரிக்க வேண்டியதே.[15]

## இந்தியா முழுவதும் ஒருவர் நிலமானுல்?

இயந்திரத்திற்கு அதற்குரிய இடம் உண்டு; அது நிலேத்து விட்டது. ஆனுல் அத்தியாவசியமான மனித உழைப்புக்குள்ள இடத்தை இயந்திரம் ஆக்கிரமித்துக்கொள்ள விடக்கூடாது. அபிவிருத்தி செய்யப்பட்ட ஒரு கலப்பை நல்லதுதான். ஆனுல் ஏதாவதொரு வழியில், இந்தியா முழுவதையும் உழுவதற்குச் சக்திவாய்ந்த ஒரு இயந்திர சாதனத்தை ஒருவர் கண்டுபிடித்து அவரே உழுது உற்பத்தியை எடுத்துக்கொண்டு கோடிக்கணக்கான மக்களுக்கு வேறு வேலே எதுவும் இல்லாமற் போய்விட்டால் அவர்கள் பட்டினி கிடப்பார்கள். ஒரு வேலேயும் இல்லாது சோம்பியிருப்பதால், மந்தம் பிடித்தவர்களாகப் போய்விடுவார்கள். இவ்வாறு ஏற்கனவே பலர் ஆகியும் இருக்கிருர்கள். இந்த விரும்பத்தகாத நிலேக்கு மேலும் பலர் தாழ்ந்து போய்விடுவார்களென்ற அபாயம் ஒவ்வொரு மணிநேரமும் இருந்து கொண்டிருக்கிறது.

## வேறு வேலே தர வேண்டும்

குடிசைத் தொழில் இயந்திரத்தில் ஒவ்வொரு முன்னேற்றம் செய்யப்படுவதையும் நான் வரவேற்பேன். அதே சமயம், கோடிக்கணக்கான விவசாயிகளுக்கு அவர்களது இல்லங்களில் நாம் வேறு வேலே அளிக்கத் தயாராய் இருந்தாலொழிய, மின்சாரத்தால் இயங்கும் நூற்புக் கதிர்களின்மூலம் உடல் உழைப்பிற்கு இடமில்லாமற் செய்துவிடக் கூடாது.[16]

எல்லோருடைய நலன்களேயும் பாதுகாக்கக் கூடியவாறு இயந்திரங்களேப் பயன்படுத்துவதே சட்டபூர்வமானது.[17]

## இராட்டைதான் ஒரே வழி

இந்தியாவில் உள்ள கொடிய வறுமையையும் அதனுல் ஏற்படக்கூடிய சோம்பேறித்தனத்தையும் தவிர்க்க முடியுமானுல், மிகப் பெரிய இயந்திரங்களே உபயோகப்படுத்துவதையும் நான் வரவேற்பேன். வறுமையை ஓட்டுவதற்கும் உழைப்புக்கும் செல்வத்துக்கும் பஞ்சம் இல்லாமற் செய்வதற்கும் கையால் நூல் நூற்பது தான் ஒரே வழியென்று நான் கூறியிருக்கிறேன். நூற்பு யந்திரமே ஒரு விலே மதிக்கவொண்ணு இயந்திரந்தான். இந்தியாவின் விசேஷ நிலேமைக்கு ஏற்றவாறு அதில் சில சீர்திருத்தங்கள் செய்ய நான் முயன்றிருக்கிறேன்.[18]

## வரவேற்கும் இயந்திரங்கள்

*"எல்லா இயந்திரங்களையுமே நீங்கள் எதிர்க்கிறீர்களா?"*

ஆணித்தரமாக, 'இல்லை' என்பதுதான் எனது பதில். இயந்திரம் விவேகமற்ற முறையில் பெருகிக்கொண்டு போவதைத்தான் நான் எதிர்க்கிறேன். இயந்திரம் வெற்றியடைவது போல் தோன்றுகிறது என்றாலும் அதைக் கண்டு நான் மனக் குழப்பமடைந்துவிடவில்லை. அழிவை விளைவிக்கக் கூடிய இயந்திரங்கள் எல்லாவற்றையுமே, விதி விலக்கில்லாமல் நான் எதிர்க்கிறேன். ஆனால், தனிப்பட்டவர்களுடைய உழைப்பை மீதப்படுத்துபவையும் கோடிக்கணக்கான குடிசைகளின் சுமையைக் குறைக்கக் கூடியவையுமான இயந்திரங்கள், மற்ற எளிய கருவிகள், சாதனங்கள் ஆகியவற்றையும் நான் வரவேற்கத்தான் வேண்டும்.[19]

## உழைப்பை மீதப்படுத்துவதில் தவறு

இயந்திரங்கள் மீதுள்ள வெறியைத்தான் நான் ஆட்சேபிக்கிறேனே யொழிய, இயந்திரங்களை யல்ல. உழைப்பை மீதப்படுத்தும் இயந்திரம் என்று சொல்கிறார்களே, அதன் மீதுதான் வெறி இருக்கிறது. ஆயிரக்கணக்கான பேருக்கு வேலை இல்லாமல் போய், அவர்கள் தெருக்களில் பட்டினியால் சாகும்வரை, மக்கள் உழைப்பை மீதப்படுத்திக் கொண்டே போகிறார்கள். நானும் நேரத்தையும் உழைப்பையும் மீதப்படுத்த விரும்புகிறேன். மனித வர்க்கத்தில் ஒரு பகுதியினருக்காகவல்ல, எல்லோருக்காகவும். ஒரு சிலரிடம் மட்டும் செல்வம் குவிவதை நான் விரும்பவில்லை. ஆனால், எல்லோர் கைக்கும் செல்வம் கிடைக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். இன்று இயந்திரமானது கோடிக்கணக்கான மக்கள் மீது ஒரு சிலர் குதிரை ஏறத்தான் உதவுகிறது. இவைகளுக் கெல்லாம் அடிப்படையாக இருக்கக் கூடிய தூண்டுதல் பேராசையே தவிர உழைப்பை மீதப்படுத்த வேண்டுமென்பதல்ல. இவ்விதமான அமைப்பு இருப்பதைத்தான் நான் என்னுடைய பலத்தையெல்லாம் கொண்டு எதிர்க்கிறேன்.

## எப்போது இயந்திரம் உதவும்?

*"அப்படியானால் நீங்கள் இயந்திரங்கள் என்பதற்காக இயந்திரங்களை எதிர்க்கவில்லை. இன்று அவை வேறுவிதமான துஷ்பிரயோகங்களுக்கு வழியாகின்றனவே அவைகளைத்தான் எதிர்க்கிறீர்கள்."*

இதற்கு, எவ்விதத் தயக்கமும் இல்லாமல் 'ஆம்' என்று சொல்வேன். ஒரு விஷயத்தையும் சேர்த்துச் சொல்லலாம். விஞ் ஞானபூர்வமான உண்மைகளும் கண்டுபிடிப்புகளும் பேராசையின் சாதனங்களாய் இருப்பது முதலில் நிற்க வேண்டும். அப்போது தொழிலாளர்கள் தங்கள் சக்திக்கு மீறி உழைக்க வேண்டியது இருக்காது. இயந்திரம் முட்டுக்கட்டையாக இருப்பதற்குப் பதிலாக உதவியாக இருக்கும். இயந்திரங்களை யெல்லாம் ஒழித் துக்கட்ட வேண்டுமென்பதற்காக அல்லாமல் அவைகளை ஒருவரை யறைக்குள் நிறுத்துவதற்காகவே நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

## சில விதி விலக்குகள்

"தர்க்கபூர்வமாக இதை வாதிக்கும்போது, இயந்திரத்தால் இயக்கப்படும் நுணுக்கமான பெரிய இயந்திரங்களெல்லாம் போக வேண்டுமென்று பொருளாகுமல்லவா ?"

அது போக வேண்டியதுதான். ஆனல் ஒரு விஷயத்தை நான் தெளிவாக்க விரும்புகிறேன். இதில் தலையாய முக்கியத் துவம் மனிதனுக்குத்தான். இயந்திரமானது மனிதனுடைய உறுப்புக்களைச் சூம்பிப்போகுமாறு செய்துவிடக்கூடாது. புத்தி சாலித்தனமான முறையில் சில விதி விலக்குகள் அளிக்கலாம் என்று நான் கூறுகிறேன். உதாரணமாக, சிங்கர் தையல் இயந் திரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். இதுவரை கண்டுபிடிக்கப் பட்ட இயந்திரங்களிலேயே உபயோகமான ஒரு சிலவற்றில் அதுவும் ஒன்ருகும். அந்தச் சாதனத்தில் ஒரு பெரிய காதல் காவியமே அடங்கியிருக்கிறது. தன்னுடைய மனைவி தனது கைகளாலேயே அலுப்புத்தட்டும் முறையில் துணியை மடித்துத் தைத்துக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்ததைக் கண்ட சிங்கர், அவள்மீது கொண்ட அன்பின் காரணமாக, அவளுக்கு இந்த அனுவ சியமான வேலை இல்லாமல் செய்வதற்காகத் தையல் இயந்திரத் தைக் கண்டுபிடித்தார். இதனல் அவர் அவளுடைய உழைப் பைக் குறைத்தது மட்டுமல்லாமல், ஒரு தையல் இயந்திரத்தை வாங்க முடிந்த ஒவ்வொருவர் உழைப்பையும் குறைத்துவிட்டார்.

## மக்களுக்காகத் தொழிற்சாலை

"அப்படியானல் இந்த சிங்கர் தையல் இயந்திரங்களைச் செய் வதற்கு ஒரு தொழிற்சாலை இருக்க வேண்டுமே? அதில் மின்

சாரத்தால் இயக்கப்படும் சாதாரணவகை இயந்திரம் இருக்க வேண்டுமல்லவா?''

ஆம். ஆனால், இப்படிப்பட்ட தொழிற்சாலைகளெல்லாம் தேசிய மயமாக வேண்டும் அல்லது அரசாங்கக் கட்டுப்பாட்டின் கீழ் இருக்க வேண்டும் என்று கூறும் அளவுக்கு நான் ஒரு சோஷலிச வாதியாவேன். மிகவும் கவர்ச்சிகரமான, இலட்சிய அடிப் படையில் அமைந்த சூழ்நிலைகளில்தான் செயலாற்ற வேண்டும். இலாபத்திற்காக அல்லாமல், மனிதவர்க்கத்தின் நலனுக்காகச் செயலாற்ற வேண்டும். நோக்கம் பேராசை யாக இல்லாது அன்பாக இருக்க வேண்டும். தொழிலா ளர்களுடைய நிலைமையில் ஒரு மாறுதல் வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். செல்வத்தின் மீதுள்ள இந்தப் பைத்தியக்காரத் தனமான வெறி நிற்க வேண்டும். தொழிலாளர்களுக்கு வாழ்க் கைக்குக் கட்டுப்படியான ஊதியம் கிடைக்கும் என்பது மட்டுமல் லாமல் அலுப்புத்தட்டாத ஒரு வேலையும் தினந்தோறும் கிடைக் கும் என்ற உறுதி வேண்டும். இப்படிப்பட்ட சூழ்நிலையில் இயந் திரமானது அதில் பணியாற்றும் மனிதனுக்கு எந்த அளவு உதவி யாக இருக்கிறதோ அந்த அளவு அரசாங்கத்திற்கோ அல்லது அந்த இயந்திரத்தின் சொந்தக்காரருக்கோ உதவியாக இருக்கும். தற்போதுள்ள பைத்தியக்காரத்தனமான வெறி நிற்கும். நான் ஏற்கனவே கூறியதுபோல, கவர்ச்சிகரமானதும் இலட்சிய பூர்வமானதுமான சூழ்நிலைகளில் தொழிலாளி வேலை செய்வான். என் மனத்திலுள்ள விதிவிலக்குகளில் இது ஒன்றுதான். தையல் இயந்திரத்தின் அடிப்படையில் அன்பு இருக்கிறது. இதில் தலை யாய முக்கியத்துவம் தனிப்பட்ட மனிதனுக்கே. தனிப்பட்ட மனிதனுடைய உழைப்பை மீதப்படுத்துவதே குறிக்கோளாய் இருக்க வேண்டும். உண்மையான மனிதாபிமான உணர்ச்சியே நமது நோக்கமாய் இருக்க வேண்டுமேயொழிய, பேராசையல்ல. பேராசை இருக்குமிடத்தில் அன்பை வையுங்கள். எல்லாம் சரி யாகப் போய்விடும்.[20]

## இயந்திர சகாப்தத்தை எதிர்க்கவில்லை

"ஓ, நீங்கள் இந்த இயந்திர சகாப்தத்தையே எதிர்க்கிறீர் கள், எனக்குத் தெரிகிறது.''

அவ்வாறு சொல்வது என்னுடைய கருத்துக்களைக் கேலி செய்வதாகும். இயந்திரம் என்பதற்காக இயந்திரத்தை நான்

எதிர்க்கவில்லை. ஆனால், அது நம் மீது ஆதிக்கம் செலுத்தும் போது நான் அதைப் பூரணமாக எதிர்க்கிறேன்.

## ஏழ்மை அடைந்தது எப்போது?

*"நீங்கள் இந்தியாவைத் தொழில் மயமாக்கமாட்டீர்கள்?"*

இல்லை. உண்மையில், என்னுடைய கருத்தின்படி அதைத் தொழில் மயமாக்குவேன். கிராம சமுதாயங்கள் மறு மலர்ச்சி அடையுமாறு செய்ய வேண்டும். இந்தியாவிலுள்ள நகரங்களின் தேவைகளை யெல்லாம் கிராமங்கள் ஒரு காலத்தில் உற்பத்திசெய்து அளித்துவந்தன. நம்முடைய நகரங்கள் வெளி நாடுகளின் மார்க்கெட்டுகளான பின், வெளிநாடுகளிலிருந்து மலி வான, போலியான சரக்குகளைக் குவித்து கிராமங்கள் வரட்சி யடையுமாறு செய்த பின், இந்தியா ஏழ்மை அடைந்தது.

## பெருந் தொழிலில் ஏன் ஈடுபடவில்லை?

*"அப்படியானால், நீங்கள் பழைய இயற்கைப் பொருளாதாரத் துக்குக் கொண்டு செல்வீர்கள்?"*

ஆம். இல்லையேல் நான் திரும்பி நகரங்களுக்குச் செல்ல வேண்டியதிருக்கும். என்னால் ஒரு பெரிய தொழில் நடத்த முடியுமானாலும் அந்த ஆசையை நான் வேண்டுமென்றே தியாகம் செய்கிறேன். இதை ஒரு தியாகமாக நான் செய்யவில்லை. என் னுடைய உள்ளமே அதற்கு எதிராகக் கொதித்து எழுந்ததால் அவ் வாறு செய்தேன். நாட்டில் நடைபெற்றுவரும் கொள்ளையிலும் அழிவிலும்—இது நாள்தோறும் நடைபெற்றுக் கொண்டிருக் கிறது—எனக்கும் பங்கு இருக்கக் கூடாது. ஆனால் அதே சமயம் வேறொருவகையில் நான் கிராமத்தைத் தொழில் மயமாக்கிக் கொண்டிருக்கிறேன்.[21]

## உற்பத்தி - விநியோகம்

மனித வர்க்கத்தின் தேவைகளையெல்லாம் இயந்திரம் அளித்து விட முடியும் என்பதை ஒரு கணம் நாம் ஒப்புக் கொள்வோம். ஆனாலும் சில குறிப்பிட்ட பகுதிகளில் உற்பத்தி குவியுமாறு அது செய்துவிடும். அப்போது, விநியோகத்தை ஒழுங்குபடுத்துவதற் காக நீங்கள் சுற்று வழியில் செல்ல வேண்டியதிருக்கும். அதே சமயம், எங்கெங்கு எந்தெந்தப் பொருள்கள் தேவையாக இருக் கின்றனவோ அங்கேயே அவை உற்பத்தியாகி விநியோகமானல்,

அது தானாகவே ஒழுங்குபடுத்தப்படும். அங்கு ஏமாற்றுதலுக்கு அதிக வாய்ப்பு இருக்காது. வணிகச் சூதாட்டத்துக்கு ஒரு வாய்ப்புமே இருக்காது.... உற்பத்தியும் நுகர்வும் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் நடைபெறும் போது, உற்பத்தியை அளவில்லாது எந்த வகையிலும் வேகப் படுத்தும் ஆசை மறைந்து போய்விடும். நம்முடைய தற்போதைய பொருளாதார முறையால் ஏற்படக் கூடிய எண்ணற்ற கஷ்டங்களும் பிரச்னைகளும் முற்றுப் பெற்றுவிடும்.... அதிலும் நிச்சயமாக மொத்த மொத்தமாக உற்பத்தி செய்வது நின்று விடும். ஆனால் தனிப்பட்ட முறையில் மக்களின் சொந்த வீடுகளிலேயே உற்பத்தி செய்வது மட்டும் மொத்தமாக இருக்கும். கோடிக்கணக்கானவர் தங்கள் தங்கள் வீடுகளில் உற்பத்தி செய்வதை மொத்தமாகக் கணக்கிட்டார்களானால், பிரம்மாண்டமான அளவில் மொத்த உற்பத்தி இராதா?....தற்போது நீங்கள் மொத்த உற்பத்தி செய்வது மிகவும் தொழில் நுணுக்கம் நிறைந்த இயந்திரங்களின் உதவியுடன் மிகக் குறைந்த மக்களால் உற்பத்தி செய்யப்படுவதாகும்.........என்னுடைய இயந்திரமானது மிகவும் சாதாரண வகையைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும். இதை நான் கோடிக்கணக்கானவர் வீட்டு உபயோகத்துக்கு அளிக்க முடிய வேண்டும்.[22]

## சுயபலத்தை நம்புவோம்

தொழில் இல்லாமல் மனிதன் வாழ முடியாது என்பதை நான் அறிவேன். ஆகவே, தொழில் மயமாவதற்கு நான் எதிராக இருக்க முடியாது. ஆனால் இயந்திரத் தொழில்களைப் புகுத்துவதைப் பற்றி எனக்கு மிகுந்த கவலை ஏற்படுகிறது, இயந்திரமானது வெகு வேகமாக உற்பத்தி செய்கிறது. அதனுடன், என்னால் புரிந்துகொள்ள முடியாத ஒருவகைப் பொருளாதார முறையையும் கொண்டு வந்து விடுகிறது. ஏதாவது ஒரு பொருள், அதனால் விளையும் நன்மைகளைக் காட்டிலும் அதிகத் தீமைகளைச் செய்வதாக இருந்தால், நான் அப்பொருளை ஏற்றுக்கொள்ள முடியாது. இந்தியாவில் வாயிருந்தும் ஊமையாக இருக்கும் கோடிக்கணக்கான மக்கள் சுகாதாரத்துடனும் மகிழ்ச்சியுடனும் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அவர்கள் ஆன்மீக ரீதியாக வளர்ச்சியடைய வேண்டுமெனவும் விரும்புகிறேன். ஆயினும் இதற்கு இயந்திரம் நமக்குத் தேவையில்லை. எத்தனையோ பேர்—மிக மிக அதிகமான பேர்—வேலையில்லாது இருக்கின்றனர். நாம் மேலும் அறிவு விளக்கம் பெறும்போது, அப்போதும் இயந்திரம் நமக்கு அவசியமெனத் தெரிந்தால், நிச்சயமாக அவைகளை

வைத்துக் கொள்வோம். நமக்குத் தொழில் வேண்டும். நாம் முயற்சியுடன் செயலில் ஈடுபடுபவர்களாவோம். மேலும் மேலும் நம்மையே நாம் நம்பியிருப்போம். அவ்வாறு செய்யும்போது மற்றவர்களுடைய வழி காட்டுதலை அதிகம் பின்பற்ற மாட்டோம். நமக்கு அவசியமானல் - அவ்வாறு அவசியமாகும் போது - இயந்திரங்களைப் புகுத்துவோம். அஹிம்சை அடிப்படையில் நம்முடைய வாழ்க்கையை ஒரு முறை உருவாக்கிக் கொண்டால், இயந்திரத்தை எவ்வாறு நமது கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வருவது என்பதை அறிந்துகொண்டவர்களாவோம்.[23]

அத்தியாயம் 4

# நகரங்களும் கிராமங்களும்

## இருவகைச் சிந்தனையாளர்கள்

இன்றைய உலகில் இருவகைச் சிந்தனையாளர்கள் இருக்கின்றனர். ஒரு வகைச் சிந்தனையாளர்கள் உலகை நகர மயமாக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். மற்றொரு வகைச் சிந்தனையாளர்கள் உலகைக் கிராம மயமாக்க வேண்டுமென்று கூறுகிறார்கள். கிராம நாகரிகமும் நகர நாகரிகமும் முற்றிலும் வேறு பட்டவையாகும். ஒன்று இயந்திரத்தையும் தொழில் மயமாக்குவதையும் சார்ந்திருக்கிறது; மற்றொன்று கைவேலைப்பாட்டுத் தொழில்களைச் சார்ந்திருக்கிறது. நாம் பின்னதற்கே முதன்மை தருகிறோம்.

## வேண்டுவது "பொய்யாமை"

சொல்லப்போனால் தொழில் மயமாக்குவதென்பதும் பெரும் அளவில் உற்பத்தி செய்வதென்பதும் சமீப காலத்தில் வந்தவை தான். எந்த அளவு மகிழ்ச்சி பெருகுவதற்கு அது உதவியாயிருக்கிறது என்பதை நாம் அறிய மாட்டோம். ஆனால் இதைத் தொடர்ந்து அண்மைக் காலத்தில் உலகப் போர்களும் ஏற்பட்டிருக்கின்றன என்பது நமக்குத் தெரியும். இரண்டாவது உலக யுத்தம் முடிந்தாலுங் கூட, மூன்றாவது உலக யுத்தத்தைப் பற்றிப் பேசப்படுவதைக் கேட்கிறோம், நம்முடைய நாடு தற்போது இருப்பதைப் போன்று தரித்திர திசையில், துன்பமான நிலையில் ஒருபோதும் இருந்ததில்லை. நகரத்திலுள்ள மக்களுக்குக் கொள்ளை லாபமும் நல்ல ஊதியமும் கிடைக்கலாம். ஆனாலும் கிராம மக்களின் ரத்தத்தை உறிஞ்சுவதன் மூலமே இது சாத்தியமாகிறது. இலட்சக்கணக்காகவோ அல்லது கோடிக்கணக்காகவோ பணம் வசூலிக்க நாம் விரும்பவில்லை. நம்முடைய வேலைக்கு எல்லாக் காலத்திலுமே பணத்தை நம்பியிருக்கவும் நாம் விரும்பவில்லை. இலட்சியத்துக்காக நம்முடைய உயிரையும் தியாகம் செய்ய நாம் தயாராய் இருந்தால் பணம் என்பது ஒன்றுமேயில்லை. நமக்கு நம்பிக்கை வேண்டும்; நாம் நமது உள்ளத்திற்குப் பொய்யாது நடந்து கொள்ளவேண்டும். இவைகள் மட்டும் நமக்கு இருக்குமானால், நம்முடைய மூலதனமான ரூ 30 இலட்சத்தைப்

பரவல் மயமாகக் கிராமங்களில் முதலீடு செய்து, ரூ 300 கோடி பெறுமான தேசிய சொத்தைச் சம்பாதித்து விடலாம். இந்த முக்கியமான காரியத்தைச் செய்ய, நமக்குத் தேவையானது கிராமங்களைச் சுயதேவைப் பூர்த்தியுள்ளவைகளாகவும் சுயபலத்தில் நம்பிக்கையுள்ளவைகளாகவும் ஆக்குவதே. ஆனால் ஒரு எச்சரிக்கை. சுயதேவைப் பூர்த்தி பற்றிய என்னுடைய தத்துவம் குறுகிய நோக்கம் கொண்டதல்ல. அதில் சுயநலத்துக்கோ வீம்புக்கோ இடமில்லை.[1]

### கிராமங்களின் அவல நிலை

இந்தியாவிலுள்ள நகரங்களில் காணப்படும் செல்வத்தைக் கண்டு, நாம் ஏமாந்துவிடக்கூடாது. இங்கிலாந்திலிருந்தோ அல்லது அமெரிக்காவிலிருந்தோ அது வரவில்லை. ஏழைக்கும் ஏழையாக இருப்பவர்களின் ரத்தத்திலிருந்து வருகிறது. இந்தியாவில் ஏழு இலட்சம் கிராமங்கள் இருப்பதாகக் கூறப்படுகிறது. சில கிராமங்கள் இருந்த இடம் தெரியாமல் அழிந்துவிட்டன. வங்காளத்திலும் கர்னடகத்திலும் மற்ற இடங்களிலும் பட்டினியாலும் நோயாலும் மாண்ட ஆயிரக்கணக்கானேரைப் பற்றி எந்த விதமான · புள்ளி விவரங்களுமில்லை. கிராம மக்களுடைய நிலவரம் என்னவென்பதைப் பற்றி அரசாங்க தஸ்தாவேஜுகளிலிருந்து எதையும் தெரிந்து கொள்ள முடியாது. ஆனால் நானே ஒரு கிராமவாசியாகையால், கிராமங்களில் உள்ள நிலை எப்படியிருக்கும் என்பதை நான் நன்கு அறிவேன். கிராமப் பொருளாதாரமும் எனக்குத் தெரியும். மேலேயிருந்து அழுத்தும் பாரம், கீழேயுள்ளவர்களை நசுக்கிக் கொண்டிருக்கிறது.

நாம் அவர்கள் முதுகில் ஏறியிருப்பதை விட்டுக் கீழே இறங்க வேண்டும். இதுதான் நாம் செய்ய வேண்டியதெல்லாம்.[2]

### ஆலை வளர்ச்சி கூடாது

பம்பாயிலுள்ள ஆலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் அடிமைகளாகி விட்டார்கள். ஆலைகளில் வேலை செய்யும் பெண்களின் நிலையோ அதிர்ச்சி அளிப்பதாய் இருக்கிறது. ஆலைகளே இல்லாதபோது, இந்தப் பெண்களெல்லாம் பட்டினி கிடந்து கொண்டிருந்தார்களா? இயந்திர வெறி வளருவதானல், நம் நாடு துரதிருஷ்டம் பிடித்த நாடாகிவிடும். நான் இப்போது சொல்லப் போவது, எல்லோரும் ஏற்றுக் கொண்ட ஒரு கொள்கைக்கு விரோதமானதாகத் தோன்றலாம். ஆனல் நான் அதைக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன். மாஞ்செஸ்டருக்குப் பணத்தை அனுப்பி, மோசமான மாஞ்செஸ்டர் துணியைக் கூட வாங்கி உபயோகிக்க

லாம். இந்தியாவில் ஆலைகளைப் பெருக்கிக்கொண்டு போவது மட்டும் கூடாது. மாஞ்செஸ்டர் துணியை உபயோகப்படுத்துவதன் மூலம், நாம் பணத்தைத் தான் வீணுக்குகிருேம். ஆனல் அதே மாஞ்செஸ்டரை இந்தியாவில் உருவாக்குவதன் மூலம், நம் ரத்தத்தைக் கொட்டித்தான் அந்தப் பணத்தை மீதப்படுத்துகிருேம். ஏனென்ருல், நம்முடைய தார்மீக அம்சமே உறிஞ்சப்பட்டு விடுகிறது. என்னுடைய அறிக்கைக்கு ஆதரவாக, ஆலை அதிபர்கள் கூறியவைகளே சாட்சியம் கூறுகின்றன. தொழிற்சாலைகளின் மூலம் பணத்தைத் திரட்டியவர்கள் மட்டும் மற்ற பணக்காரர்களை விட நல்லவர்களாக இருந்துவிடப் போவதில்லை. ஒரு இந்திய ராக்பெல்லர் அமெரிக்க ராக்பெல்லரை விடச் சிறந்தவராய் இருப்பார் என்று எண்ணுவது அறிவீனமாகும். ஏழையாக இருக்கும் இந்தியா சுதந்திரம் பெறமுடியும்; ஆனல் ஒழுக்கக் கேடான முறைகளின் மூலம் வளம்பெற்ற இந்தியா தனது சுதந்திரத்தை மீண்டும் அடைவதென்பது மிகக் கடினமானதாகும். இந்தியாவில் உள்ள பணக்காரர்கள் பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரிக்கிருர்கள் என்பதை நாம் அடக்கத்துடன் ஒப்புக் கொள்ள வேண்டியதாகத்தான் இருக்கிறது; அது எவ்வளவு நிலையாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அவர்கள் நிலைமையும் ஸ்திரமாக இருக்கும். பணமானது ஒருவனை நிராதரவானவனுக்குகிறது. இதே அளவு தீமையான மற்ெருன்று காம இச்சையால் இழைக்கப்படும் பாவமாகும். இரண்டுமே விஷங்கள்தான். ஒரு பாம்பின் கடி, இந்த இரண்டையுங் காட்டிலும் குறைந்த நச்சுத்தன்மை வாய்ந்ததாகும். பாம்பின் கடி உடலுக்கு மட்டுந்தான் தீங்கிழைக்கும் என்ருல், இந்த இரண்டும் உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றையும் அழித்துவிடும். ஆகையால் ஆலைத் தொழில் வளர்ச்சியைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைந்துவிட முடியாது.[3]

### உற்பத்தி செய்தும் பட்டினி

ஏழைக் கிராம வாசிகள் வெளிநாட்டு அரசாங்கத்தால் சுரண்டப்படுகிருர்கள். நம்முடைய சொந்த நாட்டு மக்களாலும் – நகர வாசிகளாலும் கூட அவர்கள் சுரண்டப்படுகிருர்கள். அவர்கள் உணவை உற்பத்தி செய்து கொடுத்துவிட்டுப் பட்டினியால் வாடுகிருர்கள்; பால் உற்பத்தி செய்தும் அவர்களுடைய குழந்தைகளுக்ுப் பால் கிடைப்பதில்லை. இது வெட்கப்பட வேண்டிய ஒரு நிலை. ஒவ்வொருவருக்கும் சத்துள்ள உணவும், குடியிருப்பதற்கு வசதியான வீடும், குழந்தைகளின் கல்விக்கு வேண்டிய வசதிகளும் போதுமான வைத்திய வசதியும் இருக்க வேண்டும்.[4]

### நகரங்கள் அவசியமற்றவை

இந்தியாவில் உள்ள சுமார் ஆறு நவீன நகரங்கள் நாடு என்னும் உடலில் உள்ள அவசியமற்ற புடைப்பு அல்லது வீக்கத்தைப் போல இருக்கின்றன. தற்போதைக்கு இவை, கிராமங்களின் ரத்தத்தை உறிஞ்சும் தீயசெயலைச் செய்கின்றன. துடுக்கான முறையில் நகரங்கள் இன்று செய்யும் தவறுகளெல்லாம், கிராமங்களின் வாழ்வுக்கும் சுதந்திரத்துக்கும் ஓயாது தொந்தரவாக அமைந்திருக்கின்றன.[5]

உலக மெங்கிலும் போர் நடைபெற்றதற்கு நகரவாசிகள் காரணமே தவிர, கிராம வாசிகளல்ல.[6]

### சுரண்டல் மயம்

நகரங்களின் வளர்ச்சி கெட்டது, மனித வர்க்கத்துக்கும் உலகத்துக்கும் துரதிருஷ்டமானது; இங்கிலாந்துக்கும், நிச்சயமாக இந்தியாவுக்கும் துரதிருஷ்டமானது. இந்தியாவை அதனுடைய நகரங்களின் வழியாகத்தான் பிரிட்டிஷார் சுரண்டியிருக்கின்றனர். நகரங்கள் கிராமங்களைச் சுரண்டியிருக்கின்றன. கிராமங்களின் ரத்தம் என்னும் சிமெண்டைக் கொண்டுதான், நகரங்கள் என்னும் பெரிய மாளிகைகள் நிர்மாணிக்கப்படுகின்றன. நகரங்களின் ரத்தக் குழாய்களில் அளவுக்கு மீறி ஓடி அவைகளைப் புடைக்க வைக்கும் ரத்தம் மீண்டும் கிராமங்களின் ரத்தக் குழாய்களில் ஓடவேண்டுமென்று நான் விரும்புகிறேன்.[7]

### நோய் எப்போது குணமாகும்?

'நகரம் இந்திய அரசியல் என்னும் உடல் அமைப்பில் உள்ள கட்டி அல்லது வீக்கம், என்று நீங்கள் கூறுகிறீர்கள். இந்தக் கட்டிகள் விஷயத்தில் நாம் என்ன செய்ய வேண்டும்?

ஒரு டாக்டரிடம் சென்றீர்களானல், உடம்பிற்கு வந்துள்ள கட்டி விஷயத்தில் என்ன செய்யவேண்டும் என்று அவர் கூறுவார். கத்தியின் மூலம் அதை அகற்ற வேண்டும்; அல்லது, பிளாஸ்டர் அல்லது மாவு போட்டு அதைக் குணப்படுத்த வேண்டும். எட்வர்ட் கார்ப்பெண்டர், நாகரிகம் என்பது நாம் குணப்படுத்த வேண்டிய ஒரு நோய் என்று கூறினர். பெரிய நகரங்களின் வளர்ச்சி என்பது அந்த நோயின் ஒரு அறிகுறிதான். ஒரு இயற்கை வைத்தியன் என்ற முறையில் இயல்பாகவே, உடல் பரிசுத்தமடைவதன் மூலம் இயற்கையாக அது குணமடை

வதையே நான் விரும்புவேன். நகரங்களில் உள்ளவர்களுடைய உள்ளங்கள் கிராமங்களில் பற்றுக் கொண்டிருந்தால், உண்மையிலேயே அவர்கள் கிராம மனோபாவம் கொண்டவர்களாக இருந்தால், மற்ற எல்லா விஷயங்களும் தானே நடக்கும்; கட்டியும் விரைவில் குணமடையும்.[8]

### தவறான கருத்து

இந்தியா என்பது இங்குள்ள ஒரு சில நகரங்கள் மட்டுமல்ல; அதற்குப் பதிலாக, இங்குள்ள ஏழு இலட்சம் கிராமங்களே இந்தியாவாகும் என்று நான் நம்பி எண்ணற்ற சமயங்களில் கூறியுமிருக்கிறேன். ஆனால், நகரங்களிலேயே இந்தியா இருக்கிறது என்றும் நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்யவே கிராமங்கள் படைக்கப்பட்டன வென்றும் நகரவாசிகளாகிய நாம் கருதி வந்திருக்கிறோம். அந்த ஏழை மக்களுக்கு உண்ணவும் உடுக்கவும் போதிய உணவும் உடையும் கிடைத்ததா என்றோ, அல்லது, வெய்யிலிலிருந்தும் மழையிலிருந்தும் அவர்களைப் பாதுகாக்க அவர்களுக்கு ஒரு குடிசை இருக்கிறதா என்றோ நாம் ஒரு போதும் எண்ணிப்பார்த்தது கிடையாது.[9]

### பரிதாப உணவு

பொதுவாக நகரவாசி கிராமவாசியைச் சுரண்டி வருகிறான். உண்மையில் அந்த ஏழைக் கிராமவாசியின் உழைப்பிலேயே இவன் வாழ்ந்து வருகிறான் என்பதை நான் கண்டிருக்கிறேன். அநேக பிரிட்டிஷ் அதிகாரிகள் இந்திய மக்களின் நிலவரங்களைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். ஆனால் நான் அறிந்தவரை யாரும், இந்திய கிராமவாசி உயிர் வாழ்வதற்குப் போதுமான அளவு வசதிகூட அவனுக்கு இருப்பதாகக் கூறவில்லை. அதற்கு மாறாக, இந்தியாவிலுள்ள மக்களில் பெரும்பாலோர் பட்டினியின் எல்லையில் வாழ்கிறார்கள் என்றும் பத்துச் சதவீதத்தினர் அரைப்பட்டினி கிடக்கிறார்கள் என்றும் கோடிக்கணக்கான மக்கள் சிறிது உப்பு, மிளகாய், கஞ்சி அல்லது வறுத்த தான்யம் ஆகியவைகளுடன் வாழ்ந்தாக வேண்டியிருக்கிறது என்றும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

### ஒரு மாதம் வாழ முடியுமா?

நம்மில் யாராவது இந்த உணவில் வாழவேண்டிய நிலை ஏற்பட்டால், ஒரு மாதத்துக்கு மேல் உயிர் வாழ முடியாது அல்லது

மூளைக் கோளாறு வந்து விடும் என்று நீங்கள் நிச்சயமாக நம்ப லாம். ஆயினும் நம் கிராமவாசிகளோ நாள்தோறும் இந்த நிலை யில் தான் வாழ்கின்றனர்.[10]

## உழைப்பைப் பறித்துக் கொள்வதா ?

மக்கள் தொகையில் எழுபத்தைந்து சதவீதத்தினருக்குமேல் விவசாயிகள். ஆனால் கிட்டத்தட்ட அவர்களுடைய உழைப்பு முழு வதையுமே நாம் பறித்துக் கொண்டாலும் அல்லது பிறர் பறித் துக் கொள்ள அனுமதித்தாலும் சுயாட்சி என்பதற்கு அர்த்தமில் லாமற் போய்விடும்.[11]

## கிராமங்களில் தங்கவேண்டும்

தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் சக்தி நகரங் களுக்கு உண்டு. கிராமத்தைத்தான் நாம் கவனிக்க வேண்டியிருக் கிறது. அவர்களிடமுள்ள தவறான கருத்துக்களை நாம் போக்க வேண்டும். அவர்களுடைய மூட நம்பிக்கைகளையும் குறுகிய கண் ணோட்டத்தையும் நாம் அகற்றவேண்டும். அவர்கள் மத்தியில் தங்கி, கல்வியையும் நல்ல விஷயங்களையும் பரப்பி அவர்களுடைய இன்பதுன்பங்களில் பங்கு கொண்டால்தான் நாம் இதைச் செய்ய முடியும். வேறு எவ்வகையிலும் நாம் இதைச் செய்ய முடியாது.[12]

## இலட்சிய கிராமவாசிகளாக வேண்டும்

நாம் இலட்சிய கிராமவாசிகளாக இருக்கவேண்டும். மற்றப்படி, சுகாதாரத்தைப் பற்றி வேடிக்கையான கருத்துக்களைக் கொண் டுள்ள கிராமவாசிகளாக, எப்படிச் சாப்பிடுகிறோம், என்ன சாப் பிடுகிறோம் என்பதைப் பற்றிய சிந்தனையற்ற கிராமவாசிகளாக நாமும் இருந்துவிடக்கூடாது. அவர்களில் பெரும்பாலானவர்கள் செய்வதைப் போல், எப்படியாவது சமைத்து, எப்படியாவது சாப் பிட்டு, எப்படியாவது வாழ்வோம் என்று நாம் இருக்கக்கூடாது சிறந்த உணவு என்னவென்பதை நாம் அவர்களுக்கு எடுத்துக் காண்பிக்க வேண்டும். வெறும் விருப்பு வெறுப்புகளுக்கு நாம் ஆளாகக் கூடாது. அவைகளின் ஆழத்தை வேரூன்றிச் சிந்தித் துப் பார்க்க வேண்டும்.[13]

## பாட்டாளிகளுடன் ஐக்கியப்படுத்திக் கொள்க

கூனிப்போயுள்ள தங்கள் முதுகில் அடிக்கும் வெய்யிலில் நாளெல்லாம் உழைக்கும் கிராமவாசிகளுடன் நாம் நம்மை

ஐக்கியப்படுத்திக் கொள்ள வேண்டும். கிராமவாசிகள் குளித்து, வேட்டி துவைத்துச் சட்டிபானைகள் கழுவும் ஒரு குளத்திலிருந்து, அவர்களுடைய கால்நடைகள் தண்ணீர் குடித்துப் படுத்துப் புரளும் ஒரு குளத்திலிருந்து, நாம் தண்ணீர் எடுத்துக் குடிக்க நம் மனம் ஒப்புக் கொள்ளுமா என்பதைப் பார்க்கவேண்டும். அப்போது தான் நாம் உண்மையான மக்கள் பிரதிநிதிகளாவோம், அதுவரையில் அல்ல. அப்போது அவர்களும் நம்முடைய வேண்டுகோளுக்குச் செவிசாய்ப்பார்கள். இது உண்மை. நான் இதை எழுதுவது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை.[14]

## அதிகச் செலவில்லாமல்....

அதிகச் செலவில்லாமல் அவர்கள் தங்களுக்கு வேண்டிய காய்கறிகளையும் கீரைகளையும் பயிரிட்டு தங்களுடைய உடல் நலத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்பதை அவர்களுக்கு நாம் எடுத்துக் காண்பிக்க வேண்டும். கீரைகளை வேகவைக்கும் போது, உணவுச் சத்துக்களில் பலவற்றை நாம் இழந்து விடுகிறோம் என்பதையும் அவர்களுக்கு எடுத்துக் கூற வேண்டும்.[15]

## குப்பைமேட்டு வாசம்

நேரத்தையும் சுகாதாரத்தையும் பணத்தையும் எவ்வாறு சிக்கனப் படுத்துவது என்பதை அவர்களுக்கு நாம் கற்றுக்கொடுக்க வேண்டும். நம்முடைய கிராமங்களைக் குப்பை மேடுகளென லயனல் கர்ட்டிஸ் வர்ணித்திருக்கிறார். நாம் அவைகளை 'மாதிரி கிராமங்களாக' மாற்றவேண்டும். நம்முடைய கிராமவாசிகளைச் சுற்றிச் சுத்தமான காற்று இருக்கிறது. ஆனாலும் அவர்களுக்கு அது கிடைப்பதில்லை. புத்தம் புதிய காய்கறிகள் சுற்றி இருந்தாலும் அவர்கள் அவைகளை உண்பதில்லை. இவ்வாறு உணவு விஷயத்தில் ஒரு சமய (மிஷனரி) ஊழியனைப் போன்று நான் பேசுகிறேன். ஏனென்றால், கிராமங்களை அழகு மிக்கவையாக மாற்றவேண்டும் என்பதே என்னுடைய வாழ்க்கைப் பணியாகும்.[16]

## கிராமங்களை நகரங்களாக்குதல்

இந்தியாவிலுள்ள கிராமங்கள் இன்று இருப்பதைப் போலவே என்றும் இருந்தனவா என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்துகொண்டிருப்பதில் லாபமில்லை. அவைகள் ஒருபோதும் தற்போதிருப்பதைக் காட்டிலும் நல்ல நிலையில் இருக்கவில்லையென்றால், நாம் எந்தப் புராதன கலாசாரத்தைப் பற்றிப் பெருமை கொள்கிறோமோ

அதன் குறையைத்தான் இது எடுத்துக் காட்டுகிறது. ஆனல் அதே சமயம், இதைக் காட்டிலும் அவை சிறந்த நிலையில் இருந் திருக்க வில்லையென்றல், நம்மைச் சுற்றிலும் நாம் பார்க்கிறோமே அந்தச் சீரழிவிலிருந்து நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக அது தப்பி உயிர் வாழ்வது எப்படி? தேசத்தின் நலனைக் கருதும் ஒவ்வொருவனுக்கும் உள்ள கடமை, இந்தச் சீரழிவை எவ்வாறு தடுப்பது என்பதுதான். அல்லது இதை வேறு வார்த்தைகளில் சொல்லப் போனல், நகரங்களில் வாழ்வது எவ்வளவு சுகமாக இருக்கிறது என்று கருதுகிறர்களோ அவ்வளவு சுகமாகக் கிராம வாழ்க்கையும் இருக்கிறமாதிரி, இந்தியாவிலுள்ள கிராமங்களைப் புனருத்தாரணம் செய்வது எப்படி? உண்மையில் ஒவ்வொரு தேச பக்தனின் கடமையும் அதுதான். ஒருவேளை, கிராமவாசிகள் சீர் திருத்தத்திற்குத் தகுதியற்றவர்களாய்ப் போயிருக்கலாம். கிராம நாகரிகத்திற்குரிய காலம் கடந்துபோய்விட்டதாய் இருக்கலாம். ஏழு இலட்சம் கிராமங்களும் ஏழு நூறு நகரங்களுக்குத் தற்போ துள்ளதைப்போல் 3 கோடி மக்களையல்லாமல் 30 கோடி மக்களைத் தாங்கும் நகரங்களுக்கு—நன்ருக ஒழுங்கு படுத்தப்பட்ட நகரங் களுக்கு—இடம் அளிக்கவேண்டியதாக இருக்கலாம். இந்தியா வின் கதி அதுவாக இருக்குமானல் அதுவும் ஒரே நாளில் வந்து விடப் போவதில்லை. ஏராளமான கிராமங்களையும் கிராமவாசி களையும் அழிப்பதற்கும் மீதமுள்ளவர்களை நகரவாசிகளாகவும் மீத முள்ளவைகளை நகரங்களாகவும் ஆக்குவதற்கும் காலமாகும்.[17]

## புரட்சிகரமான மாறுதல் வேண்டும்

கிராம இயக்கம் என்பது கிராமவாசிகளைப் போலவே, நகர மக்களுக்கும் பயிற்சி அளிப்பதாகும். நகரங்களிலிருந்து வந்துள்ள ஊழியர்கள் கிராம மனோபாவத்தை வளர்த்துக் கொள்வதுடன், கிராமவாசிகளைப் போலவே வாழும் கலையையும் கற்கவேண்டும். இதன் பொருள், கிராமவாசிகளைப் போன்று அவர்களும் பட்டினி கிடக்க வேண்டும் என்பது அல்ல; பழைய வாழ்க்கை முறையில் ஒரு புரட்சிகரமான மாறுதல் இருக்கவேண்டும் என்பதுதான் இதன் பொருளாகும்.[18]

## ஒரே வழி

இதற்கான ஒரேவழி, அவர்கள் மத்தியில் அமர்ந்து, அவர் களுடைய புரவலர்களாக நம்மைக் கருதிக் கொள்ளாமல் அவர் களுடைய தோட்டிகளாகவும் நர்சுகளாகவும் பணியாட்களாகவும் உறுதியாக இருந்து சேவை செய்வதுடன், நம்முடைய தவருன

எண்ணங்கள், உணர்ச்சிகள் எல்லாவற்றையும் மறந்து விடுவதாகும். ஒரு விநாடி 'சுயராஜ்யத்தை'க்கூட நாம் மறந்துவிடுவோம். யார் இருப்பது ஒவ்வொரு கட்டத்திலும் நம்மை வருத்துகிறதோ அந்தச் செல்வவந்தர்களையும் மறந்து விடுவோம். இந்தப் பிரச்னைகள் (நாம் மறந்து விட்டாலும்) ஒருபுறம் இருக்கத்தான் செய்யும். பெரிய பிரச்னைகளைத் தீர்ப்பதில் பலர் ஈடுபட்டிருக்கிறார்கள். நாமோ கிராமத்தின் அடக்கமான பணியைத் தீர்த்து வைப்போம். இப்போது இது அவசியமாக இருக்கிறது. நம்முடைய இலட்சியத்தை நாம் அடைந்த பிறகும் இது அவசியமாக இருக்கும். உண்மையென்னவெனில், கிராமப்பணி வெற்றியடைந்தபின், அதுவே நம்மை நமது இலட்சியத்தின் அருகே கொண்டுவந்து சேர்க்கும்.[19]

### நகரங்கள் செய்த கேடு

கிராம சமுதாயங்கள் மறுமலர்ச்சி யடையுமாறு செய்ய வேண்டும். இந்திய நகரங்களுக்கு அவைகளுடைய தேவைகளெல்லாவற்றையும் இந்திய கிராமங்கள்தான் உற்பத்திசெய்து கொடுத்தன. ஆனால், நம் நகரங்களெல்லாம் வெளிநாட்டு மார்க்கெட்டுகளாகி, வெளிநாடுகளிலிருந்து விலைகுறைந்த, போலிச் சாமான்களைக் கொண்டுவந்து குவித்து நமது கிராமங்களை வற்ற வைத்தபோது இந்தியா ஏழை நாடாகி விட்டது.[20]

### நகர - கிராம உறவு

கிராமங்களிலிருந்து நகரங்கள் பலமும் பொருளும் பெறுகின்றன. இதற்குப் போதுமான கைம்மாறு அளிக்கவேண்டும் என்பதை நகரங்கள் உணரவேண்டும். சுயநலத்துடன் கிராமங்களைச் சுரண்டுவதற்குப் பதிலாக, இந்த எண்ணம் அவைகளுக்கு வர வேண்டும். அப்போதுதான், நகரங்களுக்கும் கிராமங்களுக்குமிடையே நல்ல, ஒழுங்கான ஒரு உறவு ஏற்படும். இந்த மகத்தான, உயர்ந்த சமூகப் புனருத்தாரணப் பணியில் நகரத்துக் குழந்தைகள் ஏதாவது சேவை செய்ய வேண்டுமென்றால், அவர்கள் எந்தத் தொழில்களின்மூலம் கல்வி கற்கவேண்டுமோ அந்தத் தொழில்கள் கிராமங்களின் தேவைக்கு நேரடியாகத் தொடர்புள்ளவையாக இருக்கவேண்டும்.[21]

### எனது அடிப்படை

நாம் ஒரு கிராமப் பரம்பரையின் வழி வந்தவர்கள் இந்தியாவின் பெரும் பரப்பு, இங்குள்ள மக்கள் தொகை, நிலைமை, சீதோஷ்ண நிலை ஆகியவைகளையெல்லாம் கவனிக்கும்போது இந்த

நாடு கிராம நாகரிகத்திற்காகப் படைக்கப்பட்டதுபோல் எனக்குத் தோன்றுகிறது. அதனுடைய குறைகளெல்லாம் எல்லோரும் நன்கு அறிந்தவைதான். ஆனல் அவைகளில் ஒன்றுகூடத் தீர்க்க முடியாதது என்பதல்ல. இதை வேரோடு பிடுங்கி, இதன் இடத்தில் ஒரு நகர நாகரிகத்தை வைப்பதென்பது சாத்தியமற்றதாகத் தோன்றுகிறது. ஏதாவது கடுமையான நடவடிக்கைகளின் மூலம், மக்கள் தொகையை முப்பது கோடியிலிருந்து முப்பது இலட்சம் அல்லது அதிகமாகப் போனல் மூன்று கோடியாகக் குறைக்க நாம் தயாராக இருந்தாலொழிய, இது சாத்தியமாகாது. ஆகையால் 'தற்போதுள்ள கிராம நாகரிகத்தைத் தொடர்ந்து பாதுகாக்க வேண்டும்; அதில் இருப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்ட குறைகளை யெல்லாம் நீக்க முயற்சி செய்யவேண்டும்' என்ற அடிப்படையி லேயே நான் சில யோசனைகளைக் கூறமுடியும்.[22]

## அத்தியாயம் 5

# கிராமங்களுக்கு உரிய இடம்

### சுயராஜ்யத்தை ஸ்தாபித்தல்

சுயராஜ்யத்தை ஸ்தாபிப்பதென்பதே நம் கிராமங்களுக்குச் சேவை செய்வதுதான். மற்றவையெல்லாம் வீண் கனவே.[1]

நம்முடைய கிராமங்கள் அழிந்தால், இந்தியாவும் அழிந்து விடும். அது மேலும் இந்தியாவாக இருக்காது. உலகில் பாரதத் திற்குரிய பணி அதன் கையை விட்டுப்போய்விடும்.[2]

### நகரத்தின் சுரண்டல் நீங்கவேண்டும்

இந்தியாவிலுள்ள கிராமங்கள் இந்நாட்டைப் போன்றே மிகப் பழமையானவை. நகரங்களோ வெளிநாட்டு ஆதிக்கத்தின் படைப் புகள்தான். இந்த இரண்டில் எது நமக்கு வேண்டும்—கிராம மயமான இந்தியாவா அல்லது நகரமயமான இந்தியாவா—என் பதை நாம் தேர்ந்தெடுக்கவேண்டும். இன்று நகரங்கள்தான் ஆதிக்கம் செலுத்தி, கிராமங்களின் வளத்தைக் கரந்துவிடுகின்றன. இதனுல் கிராமங்கள் நாசமடைந்து கொண்டிருக்கின்றன. இந்த ஆதிக்கம் போய், கிராமங்களுக்கு நகரங்கள் துணையாக இருந்து உதவவேண்டுமென்று என்னுடைய கதர் மனேபாவம் எனக்குக் கூறுகிறது. கிராமங்களேச் சுரண்டுவது திட்டமிட்டு நடைபெறும் பலாத்காரந்தான். அஹிம்சையின் அடிப்படையில் சுயராஜ் யத்தை நிர்மாணிப்பதற்கு, கிராமங்களுக்கு உரிய இடத்தை நாம் அளித்தாக வேண்டும்.[3]

### ஒரு உண்மை

இந்தியா உண்மையான சுதந்திரம் அடையவேண்டுமானுல், அதன்மூலம் உலகமும் உண்மையான சுதந்திரம் பெறவேண்டு மானுல், வெகு விரைவிலோ அல்லது சிறிது காலந் தாழ்த்தியோ ஒரு உண்மையை நாம் உணர்ந்தாகவேண்டும். அதாவது, மக்கள் கிராமங்களில்தான் வாழவேண்டியிருக்கும், நகரங்களிலல்ல; குடிசை களில்தான் வாழவேண்டி யிருக்கும், மாளிகைகளில் அல்ல. கோடிக்

கணக்கான மக்கள் நகரங்களிலும் மாளிகைகளிலும் அமைதியுடன் ஒருபோதும் வாழ முடியாது. அவ்வாறு வாழும் போது இம்சையையும் அசத்தியத்தையும் கடைப்பிடிப்பதைத் தவிர அவர்களுக்கு வேறுவழி இருக்காது.

### இந்தியா அழியவிடக்கூடாது

சத்தியமும் அஹிம்சையும் போய்விட்டால், மனிதவர்க்கத்துக்கு அழிவைத் தவிர வேறு எதுவும் மிஞ்சாது. எளிமையான கிராமிய வாழ்க்கையில்தான் சத்தியத்தையும் அஹிம்சையையும் நாம் கண்டுணர முடியும். இந்த எளிமையை, மிகச் சிறந்த முறையில், ராட்டையில் காணலாம். ராட்டை எதெதன் சின்னமாக இருக்கிறதோ அவைகளிலும் காணலாம். உலகம் இன்று தவறான பாதையில் போய்க் கொண்டிருந்தால் அதற்காக நாம் அஞ்சக்கூடாது. ஒருவேளை இந்தியாவும் அந்த வழியில் சென்று, விளக்கொளியில் வேகமாகச் சுற்றி ஆனந்த நர்த்தனமாடிக் கொண்டுவரும் விட்டிற் பூச்சி முடிவில் அதிலேயே மடிவதைப்போல் தன்னைத்தானே சுட்டுப் பொசுக்கிக் கொள்ளலாம். ஆனால் இப்படிப்பட்ட கதி எதுவும் நேராமல் இந்தியாவையும் இந்தியாவின்மூலம் உலகையும் பாதுகாக்க எனது கடைசி மூச்சு உள்ளவரை நான் முயற்சி செய்ய வேண்டியது என் கடமையாகும்.[4]

### கிராம சுயராஜ்யம்

கிராம சுயராஜ்யத்தைப் பற்றிய என்னுடைய கருத்து என்னவென்றால், அது ஒரு பூரணக் குடியரசாக, தன்னுடைய ஜீவாதாரமான தேவைகளுக்காக அண்டை அயலார்களை எதிர்பார்க்காத பூரணக் குடியரசாக இருக்கும். அதே சமயம் எதெதற்குப் பிறரைச் சார்ந்திருப்பது அவசியமோ அவைகளில் பிறரைச் சார்ந்திருக்கும். ஆகவே, ஒவ்வொரு கிராமமும் தனது உணவுக்குத் தேவையான பயிர்களையும் துணிக்குத் தேவையான பருத்தியையும் விளைவிப்பதில் முக்கிய கவனம் செலுத்தும். கால்நடைகளுக்கான மேய்ச்சல் நிலமும், வயதானவர்கள் ஓய்வு பெறுவதற்கும், குழந்தைகள் விளையாடுவதற்குமான இடமும் கிராமத்தில் இருக்கவேண்டும். இதற்கு மேலும் நிலம் இருப்பதானால், கஞ்சா, புகையிலை, அபின் போன்றவைகளைத் தவிர மற்ற உபயோகமான பணப் பயிர்களை விளைவிக்கலாம். ஒரு நாடக அரங்கு, பள்ளிக்கூடம், பொது மண்டபம் ஆகியவைகளையும் கிராமம் பராமரித்து வரும். சுத்தமான தண்ணீர் விநியோகிக்கக்கூடிய தண்ணீர் விநியோக நிலையமும் சொந்தமாக இருக்கவேண்டும். குடிநீராக மட்டும்

உபயோகப்படுத்த வேண்டுமென்று கட்டுப்படுத்தப்பட்ட குளம் அல்லது கிணறுகளிலிருந்து குடிநீர் விநியோகம் செய்யலாம். ஆதாரப்பள்ளி இறுதி வகுப்புவரை கல்வி கட்டாயமாக இருக்கும். முடிந்தவரை எல்லா நடவடிக்கைகளுமே கூட்டுறவு அடிப்படையில் நடைபெறும். இன்று இருப்பதைப்போன்று படிப்படியாக, பல் வேறு அளவுகளில் தீண்டாமையைக் கொண்ட சாதிகள் இருக்க மாட்டா.

## கிராமப் பஞ்சாயத்து

சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை என்ற ஆயுதங்களுடன் அஹிம்சையே ஒரு கிராமத்தின் 'அதிகார பலமாக' இருக்கும். கிராமத் தொண்டர் படையில் சேவை செய்யவேண்டுமென்பது கட்டாயமாக இருக்கும். கிராமத்தில் உள்ள ஒரு பட்டியலிலிருந்து வரிசைக்கிரமப்படி, இத் தொண்டர் படைக்கு, ஆட்கள் தேர்ந் தெடுக்கப்படுவார்கள். வயது வந்த கிராம மக்களால் ஆண்டு தோறும் தேர்ந்தெடுக்கப்படும் ஐவரைக்கொண்ட பஞ்சாயத்தின ரால், கிராம ஆட்சி நடைபெறும். சில குறிப்பிட்ட தகுதிகள் உள்ள கிராம மக்கள்—ஆண், பெண் ஆகிய இருபாலாரும்—பஞ் சாயத்தைத் தேர்ந்தெடுப்பார்கள். அந்தந்தக் கிராம எல்லைக்குள் இவர்களுக்குப் போதுமான அதிகாரங்கள் இருக்கும். சாதாரண மாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கும் முறையில் தண்டனை எதுவும் இருக்காதாகையால், இந்தப் பஞ்சாயத்தே அந்தந்த ஆண்டில் கிராம சட்ட சபையாகவும் நீதிமன்றமாகவும் ஆட்சிக் குழுவாகவும் இருக்கும். தற்போதுள்ள அரசாங்கத்தில்கூட—கிராமங்களுடன் அதற்குள்ள ஒரே பயனுள்ள தொடர்பு கிஸ்தி வசூல் செய்வது தான்—அதன் குறுக்கீடு அதிகம் இல்லாமல் எந்தக் கிராமமும் மேற்கண்டவாறான ஒரு குடியரசாகலாம். பக்கத்திலுள்ள கிரா மங்களுடனும் அல்லது மத்தியமான ஒரு அமைப்பிருந்தால் அதனுடனும் உள்ள தொடர்புகளைப்பற்றி நான் இங்கு ஆராய வில்லை. ஒரு கிராம அரசாங்கம் எப்படியிருக்கும் என்பது பற்றிய மேற்போக்கான விவரங்களைத் தெரிவிப்பதே எனது நோக்கம். அங்கு தனிப்பட்டவர் சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்ட பரிபூரண ஜனநாயகம் இருக்கும். தன்னுடைய சொந்த அரசாங் கத்தின் சிற்பியாக ஒவ்வொருவரும் இருப்பார்கள். அஹிம்சைப் படிதான் கிராமவாசியும் அவரது அரசாங்கமும் நடக்க முடியும். உலகம் முழுவதையும் எதிர்க்கக்கூடிய சக்தி படைத்தவர்களாக அவரும் அவரது கிராமத்தினரும் இருப்பார்கள். ஏனென்றால், தன்னுடைய கௌரவத்தையும் தனது கிராமத்தின் கௌரவத்தை

யும் பாதுகாப்பதற்காக மரணத்தையும் ஏற்க வேண்டுமென்பதே, ஒவ்வொரு கிராமவாசியும் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறையாக அங்கு கொள்ளப்படும்.

### ஒரு கிராமம் ஒருவருக்கு

மேலே விவரிக்கப்பட்டதில் சாதாரணமாக முடியாதது எதுவும் இல்லே. இப்படிப்பட்ட ஒரு கிராமத்தை அமைக்க ஒருவனுக்கு வாழ்நாள் முழுவதுமே ஆகிவிடலாம். உண்மையான ஜனநாயகத்தையும் கிராம வாழ்வையும் விரும்பும் ஒருவர், ஒரு கிராமத்தை எடுத்துக்கொண்டு, அதைத் தனது உலகமாக எண்ணி, அந்த ஒரு வேலேயிலேயே தனது முழுக் கவனத்தையும் செலுத்தினுல், அவருக்கு நல்ல பலன் கிடைக்கும். உடனடியாகத் தன்னே ஒரு கிராமத் தோட்டியாகவும், நூற்பவராகவும், காவற்காரராகவும், வைத்தியராகவும், பள்ளி ஆசிரியராகவும் ஆக்கிக்கொண்டு அவர் தன் சேவையைத் தொடங்கவேண்டும். யாரும் அவரை அணுகாவிட்டால், தோட்டிவேலே செய்வதுடனும், நூற்பதுடனும் அவர் திருப்தியடையவேண்டும்.[5]

### இலட்சியக் கிராமம்

ஒரு இலட்சிய இந்தியக் கிராமம் நூற்றுக்கு நூறு சுகாதாரம் உள்ளதாக இருக்கும். போதுமான வெளிச்சமும் காற்ருேட்டமும் உள்ள முறையில், ஐந்து மைல் சுற்றளவுக்குள் கிடைக்கும் பொருள்களேக்கொண்டு, அங்கு குடிசைகள் கட்டப்பட்டிருக்கும். அந்தந்த வீட்டுக்காரர் தங்களுடைய சொந்த உபயோகத்துக்காகக் காய்கறிகள் பயிரிட்டுக் கொள்ளவும், தங்கள் கால்நடைகளேக் கட்டுவதற்கும் ஏற்ற முறையில் இந்தக் குடிசைகளில் முற்றங்கள் இருக்கும். கிராமத் தெருக்களிலும் சந்துகளிலும் முடிந்த அளவுக்குத் தூசி இல்லாமல் பார்த்துக் கொள்ளப்படும். அந்தந்தக் கிராமத்தின் தேவைக்கேற்ற அளவுக்கு அங்கு கிணறுகள் இருக்கும். இந்தக் கிணறுகளில் எல்லோரும் தண்ணீர் எடுக்கலாம். எல்லோரும் வழிபடக்கூடிய ஆலயங்கள், ஒரு பொது மந்தை, கால்நடை மேய்வதற்கான பொதுஇடம், ஒரு கூட்டுறவுப் பால்பண்ணே, தொழிற் கல்வியை மையமாகக் கொண்ட ஆரம்ப, உயர்நிலேப் பள்ளிகள் ஆகியவை அங்கு இருக்கும். சண்டை சச்சரவுகளேத் தீர்த்து வைக்கப் பஞ்சாயத்தும் இருக்கும். தனக்கு வேண்டிய தானியங்கள், காய்கறி, பழம், கதர் ஆகியவற்றை அது உற்பத்தி செய்துகொள்ளும். ஒரு மாதிரிக் கிராமத்தைப் பற்றிய எனது பரவலான கருத்து இதுதான்....நல்ல கெட்டிக்காரர்கள் வழிகாட்டுவதானல், கிராமவாசிகள் தங்களுடைய கிராம வருமானத்தை

(தனிப்பட்டவர் வருமானத்தை அல்ல) இரட்டிப்பாக்க முடியும். நம்முடைய கிராமங்களில் எல்லையற்ற வளம் இருக்கிறது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலுமே இது வாணிகத்துக்குப் பயன்படும் என்று கூறமுடியாது. ஆனால், கிட்டத்தட்ட ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இதை ஸ்தல அபிவிருத்திக்காகப் பயன்படுத்தலாம். இதிலுள்ள மிக மோசமான நிலைமை என்னவென்றால், கிராமவாசிகள் தங்களுடைய நிலையை அபிவிருத்தி செய்துகொள்ளக் கொஞ்சங்கூட விரும்பாததுதான்.

### சுகாதாரமே முதல் பிரச்னை

கிராம ஊழியர் தீர்க்கவேண்டிய முதல் பிரச்னை, கிராமத்தின் சுகாதாரம் பற்றியது. எல்லாப் பிரச்னைகளிலுமே மிகவும் அலட்சியம் செய்யப்பட்டிருப்பது இதுவே. இது உடல்நலத்தைப் பாதிப்பது மட்டுமல்லாமல், நோயையும் வளர்க்கிறது. கிராம ஊழியர் மனமுவந்து தோட்டியானால், முதலில் மலத்தை எடுத்து உரமாக்குவார்; தெருக்களைப் பெருக்குவார். இவைகளைச் செய்துவிட்டுத்தான் மற்ற கிராம சேவைகளில் புகுவார். மலஜலத்தை எங்கு எவ்வாறு கழிப்பது என்பதை மக்களுக்கு அவர் எடுத்துக் கூறுவார். சுகாதாரத்தின் அவசியத்தைப் பற்றியும் அதை அலட்சியம் செய்ததால் ஏற்பட்ட பெருந் தீங்கைப் பற்றியும் விளக்குவார். தான் கூறுவதைக் கிராமவாசிகள் பொருட்படுத்திக் கேட்டாலும் கேட்கா விட்டாலும் அந்த ஊழியர் தொடர்ந்து தன் பணியைச் செய்து கொண்டிருப்பார்.[6]

### அறிவுள்ள மக்கள் வாழ்வார்கள்

என்னுடைய இலட்சியக் கிராமத்தில் அறிவுக் கூர்மையுள்ளவர்கள் இருப்பார்கள். மிருகங்களைப்போன்று இவர்கள் அழுக்கிலும் இருட்டிலும் வாழமாட்டார்கள். அங்குள்ள ஆண்களும் பெண்களும் சுதந்திரமானவர்களாக, உலகில் யாரையும் எதிர்த்து நிற்கக்கூடிய சக்திபடைத்தவர்களாக இருப்பார்கள். பிளேக், காலரா, அம்மை போன்ற நோய்கள் அங்கு வரா. யாரும் சோம்பேறியாக இருக்கமாட்டார்கள்; சுகபோகத்திலும் புரளமாட்டார்கள். ஒவ்வொருவரும் தன்னுடைய பங்கு உடல் உழைப்பை அளிக்க வேண்டியிருக்கும்....இப்படிப்பட்ட சமுதாயத்தில் ரயில், தபால், தந்தி போன்றவையும் இருப்பது சாத்தியமே.[7]

அத்தியாயம் 6

# கிராம சுயராஜ்யத்தின் அடிப்படைத் தத்துவங்கள்

## 1. மனிதனின் உயர்வு - முழுவேலை

தலையாய முக்கியத்துவம் மனிதனுக்குத்தான்.[1]

நம்முடைய இலட்சியம் மனித வர்க்கம் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டுமென்பதாகும். அந்த மகிழ்ச்சி மன, தார்மிக சம்பந்தமான முழு வளர்ச்சியுடன் இருக்கவேண்டும். 'ஆன்மிக' என்ற சொல்லின் பொருளிலேயே 'தார்மிக' என்ற சொல்லை நான் பயன்படுத்துகிறேன். பரவல் மயத்தின் கீழ் இந்த இலட்சியத்தை நாம் சாதிக்க முடியும். அஹிம்சாபூர்வமான ஒரு சமுதாய அமைப்பில் குவியல் முறை பொருந்தாது.[2]

### அவசியமான பொருள் உற்பத்தி

யாருமே உணவுக்காகவோ உடைக்காகவோ கஷ்டப்பட நேராமல், இந்தியாவின் பொருளாதார அமைப்பு—ஏன், உலகின் பொருளாதார அமைப்பே—இருக்கவேண்டும் என்பது எனது கருத்து. வேறு வார்த்தைகளில் சொல்லப்போனல், வரவு செலவு கட்டுபடியாகக் கூடியவாறு ஒவ்வொருவருக்கும் போதுமான வேலை கிடைக்கவேண்டும். வாழ்க்கைக்கு அவசியமாகத் தேவைப்படும் பொருள்களை உற்பத்தி செய்யக்கூடிய சாதனம் மக்கள் கையிலேயே இருந்தால்தான் இந்த இலட்சியத்தை எல்லோரும் அடையமுடியும். ஆண்டவன் படைத்த தண்ணீரும் காற்றும் எவ்வாறு இலவசமாகக் கிடைக்கிறதோ அல்லது கிடைக்க வேண்டுமோ அதேபோன்று இவைகளும் எல்லோருக்கும் இலவசமாகக் கிடைக்கவேண்டும். மற்றவர்களுடைய சுரண்டலுக்கு இடமளிக்கக்கூடிய வியாபாரப் பொருளாக அவை ஆகிவிடக்கூடாது. எந்த நாடும் அல்லது மக்கள் கூட்டமும் அதில் ஏகபோக பாத்தியதை கொண்டாடுவது நியாயமற்றதாகும். இந்தச் சாதாரணமான கோட்பாட்டை அலட்சியம் செய்ததுதான், இந்த துரதிருஷ்டம் வாய்ந்த நாடு மட்டுமல்லாமல் உலகிலுள்ள பிற பகுதிகளில்

கூட மக்களிடையே நாம் காணும் ஆதரவற்ற நிலைக்குக் காரணம் ஆகும்.[3]

**தார்மிக அம்சம்**

தார்மிகக் கோட்பாடுகளை அலட்சியம் செய்யக்கூடிய பொருளாதாரம் உண்மையான பொருளாதாரம் அல்ல. பொருளாதாரத் துறையிலும் அஹிம்சையின் நியதியை விரிவுபடுத்தவேண்டும். இதற்கு சர்வதேச வாணிகத்தை ஒழுங்குபடுத்துவதில் தார்மிக கோட்பாடுகளையும் ஒரு அம்சமாகக் கருதவேண்டும். அதற்குக் குறைவான எதுவும் அஹிம்சைக் கோட்பாட்டை விரிவுபடுத்தியதாகாது.[4]

**வாழும் உரிமை**

ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ உரிமையுண்டு. ஆகையால் தனக்கு உணவு தேடிக்கொள்வதற்கான பணத்தைத் தேடிக் கொள்ள உரிமை உண்டு. அவசியமான போது தனக்கு வேண்டிய உடை, இருப்பிட வசதிகளைப் பெறுவதற்கான பணத்தைத் தேடுவதற்கான உரிமை உண்டு.[5]

**சமுதாயத்தின் உரைகல்**

உலகிலுள்ள மத நூல்களெல்லாம், 'நாளைபற்றிக் கவலை வேண்டாம்' என்ற விதியைக் கூறுகின்றன. நன்ருக ஒழுங்கு படுத்தப்பட்ட ஒரு சமுதாயத்தில், ஒருவன் தனது வாழ்க்கையை நடத்துவது மிக எளிதான காரியமாய் இருக்கவேண்டும். அப்படித்தான் இருக்கவும் செய்கிறது. உண்மையில், ஒரு நாட்டில் ஒழுங்கு நிலவுகிறது என்பதற்கான உரைகல், அதில் எத்தனை கோடீஸ்வரர்கள் இருக்கிருர்கள் என்பதல்ல; அந்நாட்டு மக்களிடையே பட்டினி இல்லாமல் இருக்கிறதா என்பதுதான்.[6]

**மனித சக்தி முக்கியம்**

ஒரு நாட்டிலுள்ள மூலப் பொருள்களைவிட, அங்குள்ள மனித சக்தி அதிக ஆற்றல் வாய்ந்தது. ஆகவே, ஒரு நாட்டு மூலப் பொருள்களை மட்டும் பயன்படுத்தி அங்குள்ள மனித சக்தியை அலட்சியம் செய்யும் எந்தத் திட்டமும் சமநிலை வாய்ந்ததாக இருக்கமுடியாது. ஆகவே இவ்விதத் திட்டத்தால் மனித சமுதாயம் ஒரு போதும் சமத்துவம் அடையமுடியாது.

இந்தியாவிலுள்ள மனித சக்தியையெல்லாம் மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவதுதான் உண்மையாகத் திட்டமிடுவதாகும்.[7]

நல்ல உடல் நலமுள்ள ஒரு ஆண் அல்லது பெண் உணவோ வேலையோ இல்லாமல் இருக்கும் வரை, நாம் ஓய்வு பெறுவதற்கோ அல்லது வயிரார உண்பதற்கோ வெட்கப்படவேண்டும்.[8]

### கடமையும் பரிகாரமும்

பறவைகளையும் மிருகங்களையும் போலவே ஒவ்வொரு மனிதருக்கும் தன் வாழ்க்கைக்கு வேண்டிய அத்தியாவசியத் தேவைகளைப் பெறச் சமமான உரிமை இருக்கிறது. ஒவ்வொரு உரிமைக்கும் ஒரு கடமை உண்டு. ஒவ்வொரு உரிமைக்கும் அபாயம் வரும் போது அதை எதிர்ப்பதற்கான ஒரு பரிகாரமும் தேவை. ஆகையால், மூலாதாரமான அடிப்படைச் சமத்துவத்தை உறுதிப் படுத்துவதற்கான கடமைகளையும் பரிகாரங்களையும் காணவேண்டியதுதான். இதற்கு வேண்டிய கடமை, உடலால் உழைப்பதாகும். என்னுடைய உழைப்பின் பலன் எனக்குக் கிடைக்காமல் யார் செய்கிறார்களோ அவர்களுடன் ஒத்துழையாமல் இருப்பது, இந்த உரிமையை நிலைநாட்டுவதற்கான பரிகாரமாகும்.[9]

## 2. உடல் உழைப்பு

உடலால் உழைக்காதவனுக்கு, சாப்பிடுவதற்கு என்ன உரிமை இருக்கமுடியும்?[10]

'நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு உங்களுடைய உணவைச் சம்பாதியுங்கள்,' என்று பைபிள் கூறுகிறது. தியாகங்கள் பல்வேறு விதமான வகைகளில் இருக்கலாம். எல்லோரும் தங்கள் தங்கள் உணவுக்காக உழைத்து விட்டார்களானால், எல்லோருக்கும் போதுமான உணவும் ஓய்வும் கிடைக்கும். அப்போது மக்கள் தொகை அளவுக்குமீறிப் போகிறது என்ற பேச்சே இராது. நாம் தற்போது காண்பதைப் போல வறுமைக்கும் நோய்க்கும் இடமிருக்காது. இப்படிப்பட்ட உழைப்பே மிக உயர்ந்த தியாகமாக இருக்கும். இதைத் தவிர தங்களுடைய உடலாலோ மனதாலோ மக்கள் மற்றும் பல காரியங்களைச் செய்வார்கள். ஆனாலும் இவைகளெல்லாம் பொது நலனுக்காக அன்பினால் மேற்கொள்ளப்படும் உழைப்பாகும். இவ்வாறுசெய்யும் போது பணக்காரரும் இருக்கமாட்டார்கள், ஏழைகளும் இருக்கமாட்டார்கள்; உயர்ந்தவர்களும் தாழ்ந்தவர்களும் இருக்கமாட்டார்கள்; தீண்டத் தக்கவர்களென்றும் தீண்டத்தகாதவர் களென்றும் இருக்கமாட்டார்கள்.[11]

**வேண்டிய கவிதை**

பட்டினிகிடக்கும் மக்களுக்கு வேண்டிய கவிதை ஒன்றே ஒன்றுதான். அதுதான் உயிரூட்டும் உணவு. அதைப் பிறர் அவர்களுக்குக் கொடுக்கமுடியாது. அதை அவர்கள்தான் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். இதை நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுத்தான் அவர்கள் தேடிக் கொள்ளமுடியும்.[12]

**கிராமங்களுக்குத் திரும்புதல்**

கிராமங்களுக்குத் திரும்புங்கள் என்று கூறுவதன் பொருள் என்ன? உடல் உழைப்பு பற்றிய கடமையையும் மற்றும் அதைச் சார்ந்த பொறுப்புகளையும் திட்டவட்டமாக மனமுவந்து ஏற்றுக் கொள்வதாகும்.[13]

அறிவு பூர்வமான வேலை முக்கியமானதுதான். வாழ்க்கையில் அதற்கு ஒரு இடம் இருக்கிறது என்பதில் ஐயமில்லை. ஆனால் நான் வலியுறுத்துவது உடல் உழைப்பின் அவசியத்தையே. இந்தக் கடமையைச் செய்யாமல் யாரும் இருக்கக்கூடாது என்றே நான் கூறுகிறேன்.[14]

தனது உணவுக்காக உழைக்க வேண்டுமென்றே மனிதனை ஆண்டவன் படைத்தார். வேலையில்லாமல் சாப்பிடுபவர்களைத் திருடர்கள் என்று அவர் கூறினார்.[15]

## 3. சமத்துவம்

உண்மையான அறநெறி, நல்ல பொருளாதாரமாக இருக்க வேண்டும் என்பதைப் போலவே உண்மையான பொருளாதாரம் ஒரு போதும் உயர்ந்த அறநெறிக்கு முரணாகப் போவதில்லை. பணப் பூதத்தை ஆராதிக்கும் ஒரு பொருளாதாரம், பலமுள்ளவர்கள் பலமில்லாதவர்களைச் சுரண்டிச் சொத்தைத் திரட்டும் ஒரு பொருளாதாரம், ஒரு தவறான துயர் நிறைந்த விஞ்ஞானமாகும். அது மரணத்திற்குக் காரணமாகிறது. அதற்கு மாறாக உண்மையான பொருளாதாரம் சமூக நீதிக்காகப் பாடுபடும். மிகவும் பலவீனமானவர்கள் உள்பட எல்லோருடைய நலனையும் அது சமத்துவமாக வளர்க்கும். கண்ணியமான வாழ்க்கைக்கு அது இன்றியமையாததாகும்.[16]

எல்லோருக்கும் சமத்துவமான அந்தஸ்தை ஏற்படுத்த நான் விரும்புகிறேன்.[17]

### "சம" விநியோகம்

எல்லோருக்கும் ஒரே அளவாகப் பொருள்களை விநியோகம் செய்யவேண்டும் என்பதே எனது இலட்சியம். ஆனால் நான் அறிந்தவரை, இதைச் சாதிக்க முடியாது என்று தோன்றுகிறது. ஆகையால் அவரவர் தேவைக்கு ஏற்ற அளவு பொருள்களை விநியோகம் செய்ய வேண்டுமென்று நான் பாடுபடுகிறேன்.[18]

### அஹிம்சை அரசு எப்போது சாத்தியம்?

அஹிம்சா பூர்வமான சுதந்திரத்துக்குள்ள ராஜபாட்டை பொருளாதார சமத்துவம்தான். பொருளாதார சமத்துவத்துக்காகப் பாடுபடுவதென்பது, மூலதனத்துக்கும் உழைப்புக்கும் நிரந்தரமாக உள்ள சண்டையை ஒழித்துக்கட்டுவதாகும். ஒரு புறம் நாட்டின் செல்வமெல்லாம் ஒரு சில பணக்காரர்களிடம் குவிந்து கிடக்கிறது. மற்றொருபுறம் உடுக்க உடையின்றி, உண்ண உணவின்றிக் கோடிக்கணக்கான மக்கள் அரைப் பட்டினி கிடக்கின்றனர். ஆகவே பொருளாதார சமத்துவத்துக்காக உழைப்பதென்பது, இந்தப் பணக்காரர்களுடைய செல்வத்தைக் குறைப்பதும், அரைப்பட்டினி கிடக்கும் மக்களுடைய நிலையை உயர்த்துவதுமாகும். பணக்காரர்களுக்கும் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளி இருக்கும் வரை, அஹிம்சை முறையிலான அரசாங்கம் சாத்தியமில்லை என்பது தெளிவு. சுதந்திர இந்தியாவில், மிகப் பெரிய பணக்காரர்களுக்குள்ள அதிகாரம், பரிதாபகரமான குடிசைகளில் வாழும் ஏழைத் தொழிலாளி மக்களுக்கும் இருக்கும். ஆகையால் சுதந்திர இந்தியாவில், புது டில்லியில் உள்ள மாளிகைகளுக்கும் ஏழைகளின் ஓட்டைக் குடிசைகளுக்கு மிடையே உள்ள முரண்பாடு ஒரு நாள்கூட நீடிக்கமுடியாது. பணத்தையும் பணத்தினால் வரும் அதிகாரத்தையும் செல்வவந்தர்கள் தாங்களாகவே விட்டுக்கொடுத்து, பொது நலனுக்காக அவற்றைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளவேண்டும். இல்லையேல் என்றாவது ஒருநாள் பலாத்காரமான, ரத்தப் புரட்சி ஏற்பட்டுவிடும். என்னுடைய தர்மகர்த்தா முறை எவ்வளவோ ஏளனத்துக்கு உட்பட்டிருந்தாலுங்கூட, தர்மகர்த்தா முறையை நான் விட்டு விடப் போவதில்லை. அதைக் கடைப்பிடிப்பது கஷ்டமானது என்பது உண்மையே. அதே போன்று அஹிம்சையைக் கடைப்பிடிப்பதும் கஷ்டமானதே. ஆனால் இந்த உச்சி மலைமீது ஏறியே தீருவதென்று 1920-ஆம் ஆண்டிலேயே நாம் உறுதி செய்து கொண்டோம்.[19]

**தேவைக்கேற்ற வசதி**

ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னுடைய இயற்கையான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய பணவசதி இருக்கவேண்டும். அதற்கு மேலும் இருக்கக்கூடாது. சமத்துவ விநியோகம் என்பதன் உண்மையான பொருளே இதுதான். உதாரணமாக, ஒரு மனிதனுடைய ஜீரணசக்தி பலவீனமானதாய் இருக்கிறது. அவனுக்கு வேண்டிய ரொட்டிக்குக் கால் இராத்தல் மாவு போதும் என்று வைத்துக்கொள்ளுங்கள். மற்றொருவருக்கு ஒரு இராத்தல் மாவு தேவையாக இருக்கிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது இரண்டு பேருக்கும் அவரவர் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய வசதி இருக்கவேண்டும். இந்த இலட்சியத்தை நிறைவேற்ற வேண்டுமானால், சமுதாய அமைப்பு முழுவதையுமே மாற்றியமைக்க வேண்டும். அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமுதாயம் வேறு எந்த இலட்சியத்தையும் பால் வார்த்து வளர்க்க முடியாது. இந்த இலட்சியத்தை அடைய ஒரு வேளை நம்மால் முடியாது போகலாம். ஆனால் இதை நாம் மனதிற் கொண்டு, இதை நெருங்கிச் செல்வதற்காக, ஓயாது உழைக்க வேண்டும். நம்முடைய இலட்சியத்தை நெருங்கி நாம் செல்வதற்கேற்ற அளவு நாம் மனத் திருப்தியும் மகிழ்ச்சியும் அடைவோம். அந்த அளவுக்கு ஒரு அஹிம்சா பூர்வமான சமுதாயம் அமைவதற்கு உதவியவர்களுமாவோம்.

## 4. தர்மகர்த்தா முறை

பணக்காரர்களெல்லாம் தங்களுடைய தேவை போக உபரியாகத் தங்களிடம் உள்ள சொத்துக்குத் தர்மகர்த்தாக்களாக இருக்க வேண்டும் என்பதே சமத்துவக் கொள்கையின் ஆணி வேராக இருக்க முடியும் என்பது உறுதி. ஏனெனில் இந்தக் கொள்கையின்படி அவர்கள் தங்களுக்கு அண்டையில் வாழ்பவர்களைக் காட்டிலும் ஒரு ரூபாய்கூட அதிகமாக வைத்திருக்கக்கூடாது. இந்த நிலையை எவ்வாறு அடைவது? அஹிம்சா பூர்வமாகவா? அல்லது, பணக்காரர்களுடைய சொத்துக்களைப் பிடுங்கிக் கொள்வதன் மூலமாகவா? இவ்வாறு செய்யவேண்டுமானால், நாம் இயற்கையாகவே இம்சையைக் கடைப்பிடிக்க வேண்டியதிருக்கும். இவ்வித இம்சைச் செயல்கள் சமூகத்திற்கு நன்மை செய்யமாட்டா. அவைகளால் சமூகம் நஷ்டமடையத்தான் செய்யும். ஏனெனில் பணம் சம்பாதிப்பது எப்படி என்பதைத் தெரிந்த ஒருவரின் சேவையைச் சமூகம் இழந்துவிடுகிறது. ஆகையால் அஹிம்சா

பூர்வமான வழியே சிறந்ததென்பது தெளிவு. இந்த வழியின்படி, பணக்காரர் அவருடைய சொத்தை வைத்துக்கொள்ள அனுமதிக் கப்படுவார். அதில் தனக்கு அவசியமாகத் தேவையானதை மட்டும் அவர் உபயோகித்துக் கொள்வார். மீதமுள்ள சொத்தைச் சமூகத்தின் நன்மைக்காகப் பயன்படுத்தும் ஒரு தர்மகர்த்தாவாக அவர் விளங்குவார். தர்மகர்த்தாவானவர் நாணயமாக நடந்து கொள்வார் என்ற அடிப்படையிலேயே இந்த வாதத்தை நான் கூறுகிறேன்.

### நம்பிக்கை தோற்ருல்?

எனினும் நாம் எவ்வளவோ முயன்றும் பணக்காரர்கள் ஏழை களின் உண்மையான 'பாதுகாவலர்'கள் ஆகாவிட்டால், ஏழைகள் மேலும் மேலும் நசுக்கப்பட்டுப் பட்டினியால் செத்துக் கொண்டிருந் தால், என்ன செய்வது? இந்தச் சிக்கலான பிரச்னைக்குப் பரி காரம் காண, என்றும் தோல்வியடையாத சரியான வழிகளாக, அஹிம்சா பூர்வமான ஒத்துழையாமையையும் சட்ட மறுப்பையும் நான் கண்டிருக்கிறேன். சமூகத்தில் ஏழைகளுடைய ஒத்துழைப்பு இல்லாமல் பணக்காரர்கள் செல்வத்தைக் குவிக்க முடியாது. இந்த அறிவு ஏழைகளிடம் ஆழ்ந்து பரவினல், அவர்கள் பலம் பெற்றவர்களாவார்கள். தங்களைக் கொடுமையான பட்டினி நிலைக் குக் கொண்டுவந்துள்ள ஏற்றத் தாழ்வுகளிலிருந்து, அஹிம்சா பூர்வமாகத் தங்களை விடுவித்துக் கொள்வது எப்படி யென் பதைத் தெரிந்துகொள்வார்கள்.[20]

## 5. பரவல் மயம்

இந்தியா அஹிம்சை வழியில் செல்ல வேண்டுமானல், அது அநேக காரியங்களைப் பரவல் மயமாக்க வேண்டும். போதுமான பலாத்கார பலம் இல்லாமல், குவியல் முறையை நீடித்துப் பாது காக்க முடியாது. எடுத்துச் செல்வதற்கு எந்தச் சாமானும் இல் லாத எளிய வீடுகளுக்குப் போலீசைக் காவலாகப் போட வேண்டிய தில்லை. கொள்ளைக்காரர்களிடம் இருந்து காப்பாற்றுவதற்காக, பணக்காரர்களுடைய மாளிகைகளுக்குப் பலமான காவல் போட வேண்டும். அதே போன்றுதான் பெரிய தொழிற்சாலைகளும். நல்ல இராணுவ, கடல், விமானப்படைகளைக் கொண்ட நகர மயமான இந்தியாவைக்காட்டிலும் கிராமிய மயமான இந்தியாவில் வெளி நாட்டுப் படையெடுப்பு அபாயம் குறைச்சலாகவே இருக்கும்.[21]

**சுரண்டலும் இம்சையும்**

தொழிற்சாலை நாகரிகத்தை அடிப்படையாக வைத்து நீங்கள் அஹிம்சை என்னும் மாளிகையை நிர்மாணிக்க முடியாது. ஆனால் சுயதேவைப் பூர்த்தியுள்ள கிராமங்களில் அதை நிர்மாணிக்க முடியும். எனது மனக்கண்ணில் நான் கற்பனை செய்துள்ள கிராமியப் பொருளாதாரத்தில் சுரண்டல் என்பதற்கே இடமில்லை. சுரண்டலே இம்சையின் சாரமாகும்.[22]

## 6. சுதேசி

வெகு தூரத்திலிருந்து கிடைப்பவைகளை விலக்கி, நமது சுற்றுப் புறங்களையும் அவைகளில் உள்ள மக்களின் சேவையையும் பயன் படுத்திக்கொள்ளும் உணர்ச்சி இருக்கிறதே அதுதான் சுதேசி யாகும்.

**எது அறிவீனம் ?**

நாம் சுதேசிய தத்துவத்தைப் பின் பற்றுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது உங்களுடைய கடமையும் என்னுடைய கடமையும் என்ன? நமக்குத் தேவையான பொருள் களை அண்மையில் உள்ளவர்கள் அளிக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். என்ன செய்வதென்று தெரியாது இருப்பவர்கள் விஷயத்தில், அப்பொருள்களை அவர்கள் எவ்வாறு நமக்கு வழங்க முடியும் என்று கற்றுக்கொடுக்க வேண்டும். நல்ல யோக்கியமான, வேலையில்லாத அண்டை அயலார்கள் இருக்கிறார்கள் என்ற அடிப் படையிலேயே இதை நான் கூறுகிறேன். இவ்வாறு செய்யும் போது இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கிராமமும் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாகவும் கிட்டத்தட்ட பூரணத்துவம் உடையதா கவும் இருக்கும். மற்ற கிராமங்களில் உற்பத்தியாகாத பொருள் களை மட்டும் அந்தக் கிராமங்களுக்கு ஒரு கிராமம் அனுப்பி வைக் கும். இவ்வாறு நான் கூறுவதெல்லாம் அபத்தமாகத் தோன்றும். அல்லது, இந்தியாவே ஒரு அபத்தமான நாடுதான். அன்பு கனிந்த முகமதியன் ஒருவன் நாம் குடிப்பதற்காகச் சுத்தமான தண் ணீரை அளிக்கத் தயாராய் இருக்கும் போது, தாகத்தால் தொண்டை வரட்சி யடையுமாறு வைத்துக் கொண்டிருப்பது அறி வீனமாகும். ஆயினும் ஒரு முகமதியன் வீட்டிலிருந்து தண்ணீர் வாங்கிக் குடிப்பதைவிட, ஆயிரக்கணக்கான இந்துக்கள் தாகத் தால் செத்துப்போகவும் தயாராயிருப்பார்கள். அதே சமயம், இந்த அறிவீனமான மனிதர்கள், இந்தியாவில் உற்பத்தியான ஆடை

களையே அணிய வேண்டும், இந்தியாவில் உற்பத்தியான உணவுப் பொருள்களையே சாப்பிட வேண்டும் என்று தங்களுடைய மதம் கூறுவதாக உணரும் போது, மற்ற ஆடை எதையும் அணிய மறுத்துவிடுவார்கள், மற்ற உணவை அருந்தவும் மறுத்துவிடு வார்கள்.[23]

**சுதேசி பக்தன்**

உண்மையான சுதேசி பக்தன் அந்நியனிடம் குரோதம் கொள்ள மாட்டான். உலகில் யார் மீதும் அவனுக்கு விரோத உணர்ச்சி இருக்காது. சுதேசி என்பது வேற்றுமை உணர்ச்சியின் வழிவந்தது அல்ல. அது சுயநலமற்ற தொண்டின் தத்துவம். தூய்மையான அஹிம்சை அல்லது அன்பில்தான் அதன் அடிப் படை இருக்கிறது.[24]

## 7. சுயதேவைப் பூர்த்தி

சமூகத்தின் ஒரு மூல அங்கம், அதாவது யூனிட், ஒரு கிராம மாக இருக்க வேண்டும். அல்லது அதை, நிர்வகிக்கத்தக்க ஒரு சிறு மக்கள் தொகுதி என்று கூறலாம். இலட்சிய அடிப்படையில் பார்த்தால் இந்த மக்கள் தொகுதி, தன்னுடைய ஜீவாதாரமான தேவைகளில் ஒரு 'யூனிட்' என்ற முறையில் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாக இருக்கும்.[25]

ஒவ்வொரு கிராமத்தின் முதல் அக்கறை, தனது உணவுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் துணிக்கு வேண்டிய பஞ்சை யும் உற்பத்தி செய்வதாகும்.[26]

ஒவ்வொரு கிராமமும் தனது உணவுக்கும் உடைக்கும் சுய தேவைப் பூர்த்தி உள்ளதாகச் செய்ய வேண்டும் என்பதுதான் கதரின் மைய உண்மை.

**பரவல்மயப் பஞ்சு**

நூல் நூற்பவர்களே தங்களுக்கு வேண்டிய பஞ்சை உற்பத்தி செய்துகொள்ள வேண்டும். அல்லது, ஒவ்வொரு கிராமமும் கிட்டத்தட்டத் தனக்கு வேண்டிய பஞ்சைத் தானே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும். இல்லையேல் கதரில் சுயதேவைப் பூர்த்தி செய்வதென்பது வெற்றி பெறாது. அதாவது குறைந்தது கதர் சுயதேவைப் பூர்த்திக்காவது பஞ்சு உற்பத்தி பரவல் மயமாக வேண்டுமென்கிறது.[27]

**சுய ஆதரவு**

ஒவ்வொரு கிராமமும் சுய ஆதரவு பெற்றதாய் இருக்க வேண்டும். உலகத்தையே எதிர்த்துப் போராட வேண்டியிருந் தாலும், தன்னுடைய விவகாரங்களைத் தானே நிர்வகிக்கத் தக்க சக்தி உடையதாக இருக்க வேண்டும்.[28]

## 8. கூட்டுறவு

கூடியவரை ஒவ்வொரு காரியமும் கூட்டுறவு அடிப்படை யிலேயே நடைபெற வேண்டும்.[29]

பாய் பின்னுபவர்களைக் காட்டிலும் விவசாயிகளுக்குக் கூட் டுறவு முறை எவ்வளவோ அவசியமானதாகும். நிலம் அரசாங்கத் துக்குச் சொந்தமானது. ஆகையால், கூட்டுறவு அடிப்படையில் அதில் பயிரிடும் போது, அதிலிருந்து மிக அதிகமான பலன் கிடைக்கிறது.

கூட்டுறவானது நூற்றுக்கு நூறு அஹிம்சை அடிப்படையி லேயே இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.[30]

## 9. சத்தியாக்கிரகம்

சத்தியாக்கிரக முறையுடனும் ஒத்துழையாமையுடனும் கூடிய அஹிம்சையே ஒவ்வொரு கிராம சமுதாயத்தின் அதிகாரமாக அல்லது ஆயுதமாக இருக்கும்.[31]

## 10. சர்வமத சமத்துவம்

ஒவ்வொரு மதத்துக்கும் அதற்குரிய முழு, சமத்துவ இடம் உண்டு. நாமெல்லாம் ஒரு கம்பீரமான மரத்தில் உள்ள இலைகள். இந்த மரத்தின் வேர் மண்ணுக்குள் ஆழமாகப் பதிந்திருக்கிறது. ஆகையால் இந்த மரத்தை வேருடன் ஆட்டி, அசைத்துவிட முடியாது.[32]

## 11. பஞ்சாயத்து ராஜ்யம்

கிராம ஆட்சியானது ஐந்து பேர்கொண்ட பஞ்சாயத்தினல் நடைபெறும். இந்த ஐந்துபேரும் (ஆண், பெண்கள் உள்பட்ட) வயது வந்த கிராமவாசிகளால், ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்

படுவார்கள். தேர்ந்தெடுக்கும் கிராம மக்களுக்கு இருக்கவேண்டிய சில தகுதிகள் நிர்ணயிக்கப்படும்.[33]

**அதுவே நீதிமன்றம்**

சாதாரணமாகத் தண்டனைகள் என்று எவை கருதப்படு கின்றனவோ அவைகளை விதிக்கும் முறை எதுவும் இருக்காது. ஆகையால் இந்தப் பஞ்சாயத்தில் பதவி வகிக்கும் ஓராண்டுக் காலத்துக்கு இதுவே சட்டசபையாகவும், நீதிமன்றமாகவும், நிர்வாக சபையாகவும் இருக்கும்.[34]

கிராமவாசிகள் அல்லது கிராமிய மனோபாவங் கொண்ட, வயதுவந்த, ஐந்து ஆண் அல்லது பெண்களைக்கொண்ட ஒவ்வொரு பஞ்சாயத்தும் ஒரு யூனிட்டாக இருக்கும்.

ஒன்றுக்கொன்று பக்கத்திலிருக்கும் இவ்வித இரு பஞ்சாயத் துக்கள் ஒரு செயற்குழுவாக இருக்கும். இந்தக் குழுவின் தலைவர் இந்த இரு பஞ்சாயத்துக்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படுவார்.

**தலைவர்கள் தேர்தல்**

இப்படிப்பட்ட நூறு பஞ்சாயத்துக்கள் இருக்கும்போது, ஐம்பது முதல் 'கிரேடு' தலைவர்கள், தங்களிடையே இருந்து ஒரு இரண்டாவது 'கிரேடு' தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். அதே போன்று, தேர்தல் நடைபெறும். முதல் கிரேடு தலைவர்கள் இரண்டாவது 'கிரேடு' தலைவர்களின் கீழ்ப் பணியாற்றுவார்கள். இருநூறு பஞ்சாயத்துக்கள் கொண்ட இணைத் தொகுதிகள் அமைக்கப்படும். இந்தியாவிலுள்ள பஞ்சாயத்துக்களெல்லாம் இவ்வாறு ஒன்று சேர்க்கப்படும் முறையில் இத் தொகுதிகள் அமைக்கப்படும். ஒவ்வொரு தொகுதிப் பஞ்சாயத்தும் தனது இரண்டாவது கிரேடு தலைவரை, அதற்கு முந்திய தொகுதியைப் போன்று தேர்ந்தெடுக்கும். இரண்டாவது கிரேடு தலைவர் களெல்லாம் தங்கள் தங்கள் பகுதிகளுக்குச் சேவை செய்வது போக, கூட்டாக இந்தியா முழுவதற்கும் சேவை செய்வார்கள். இரண்டாவது கிரேடு தலைவர்கள்—தாங்கள் அவசியமென்று கரு தும்போது—தங்களிடையே இருந்து ஒரு தலைவரைத் தேர்ந்தெடுப் பார்கள். இவர், தமக்கு விருப்பமான சந்தர்ப்பத்தில், சம்பந்தப் பட்ட தொகுப்புகளுக்குத் தலைவராக இருந்து அவைகளின் வேலைகளை ஒழுங்குபடுத்துவார்.[35]

## 12. ஆதாரக்கல்வி

உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றிலும் குழந்தையிடமும் மனிதனிடமும் எவை மிகச் சிறந்த அம்சமாகப் பொதிந்து கிடக்கின்றனவோ அவைகள் எல்லாவற்றையும் வெளியே கொண்டு வருவதுதான் கல்வி. கல்வியென்று நான் குறிப்பிடும்போது இதையே கூறுகிறேன். எழுத்தறிவிப்பது என்பது கல்வியின் முடிவு அல்ல, ஏன், அதன் ஆரம்பங் கூட அல்ல. ஆணையும் பெண்ணையும் படிக்க வைக்கக் கூடிய ஒரு சாதனம் அது. அவ்வளவு தான். எழுத்தறிவிப்பதென்பது மட்டும் கல்வியாகாது. ஆகையால் குழந்தைக்கு ஒரு உபயோகமான கைத்தொழிலைக் கற்றுக் கொடுப்பேன். இப்பயிற்சி ஆரம்பமான தேதியிலிருந்து அது ஏதாவதொன்றை உற்பத்தி செய்யுமாறு செய்வேன். இவ்வாறு தான் நான் ஒரு குழந்தைக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்குவேன். இவ்வாருக ஒவ்வொரு பள்ளியும் தன் செலவைத் தானே சரிக் கட்டக் கூடியதாக ஆகும். இதில் ஒரு நிபந்தனை யென்னவென்ருல், இந்தப் பள்ளிகள் உற்பத்தி செய்யும் பொருட்களை அரசாங்கம் வாங்கிக்கொள்ள வேண்டும்.[36]

## அத்தியாயம் 7

# உணவுக்காக உடல் உழைப்பு

### சோம்பேறித்தனம் கூடாது

அந்த மாபெரும் இயற்கை, நாமெல்லோரும் நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு உணவைத் தேடிக்கொள்ள வேண்டு மென்றே விரும்புகிறது. ஆகையால் ஒருவர் ஒரு நிமிஷத்தை வீணுக்குவதாய் இருந்தாலும், அவர் அந்த அளவுக்குத் தனது அண்டையில் உள்ளவர்களுக்கு ஒரு சுமையாக இருக்கிருர். அவ் வாறு செய்வது அஹிம்சையின் முதல் பாடத்தையே மீறுவதாகும். அஹிம்சை யென்பது சமநிலையான, கண்ணியமான முறையில் பிறரைப் பற்றி அக்கறை கொள்வதாகும். இவ்வாறில்லையேல் அஹிம்சைக்குப் பொருளே இல்லை. ஒரு சோம்பேறிக்கு இந்த அடிப்படையான எண்ணம் இல்லாமற் போய்விடுகிறது.[1]

### ருசியர் கருத்து

மனிதன், தன் கையாலேயே உழைத்துச் சாப்பிட வேண்டு மென்ற தெய்வீக நியதியை முதன் முதலில் வலியுறுத்தியவர் டி. எம். ஸாண்டாரெப் என்ற ருசிய எழுத்தாளர் ஆவார். டால்ஸ் டாய் இதை நன்கு விளம்பரப்படுத்தி, பலருக்குத் தெரியுமாறு செய்தார். என்னுடைய கருத்தின்படி, கீதையின் மூன்ருவது அத்தியாயம் இதே கோட்பாட்டைத்தான் வலியுறுத்துகிறது. யக்ஞம் செய்யாது உண்பவன், திருடிய உணவையே உண்டவ ஞகிருன் என்று அங்கு கூறப்பட்டிருக்கிறது. இங்கே யக்ஞம் என்பது உடல் உழைப்பையே குறிப்பிடுகிறது.

### பகுத்தறிவின் முடிவும் இதுவே

பகுத்தறிவின்படி பார்த்தாலும் இதே முடிவுக்குத்தான் நாம் வருவோம். உடல் உழைப்புச் செய்யாத மனிதனுக்கு, சாப்பிடுவ தற்கு எவ்வாறு உரிமை இருக்க முடியும்? 'நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு, நீ உனது உணவை உண்பாயாக!' என்று கூறுகிறது பைபிள். ஒரு கோடீஸ்வரன் நாள் பூராவும் தனது படுக்கையிலேயே படுத்துப் புரள்கிருன், பிறர் அவனுக்கு உணவை ஊட்டி விடுகின்றனர் என்று வைத்துக்கொள்ளுங்கள். இவ்வாறு அவன் நீண்ட காலம் தள்ள முடியாது. அவனுக்கு

வாழ்க்கை அலுத்துப் போய்விடும். ஆகையால் அவன் தேகப் பயிற்சி செய்து பசியை உண்டாக்குகிறான். தனது உணவைப் பிறர் உதவியின்றித் தானே உண்கிறான். ஆகவே, ஏழையோ பணக்காரரோ இவ்வாறு தேகப் பயிற்சி செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறதென்றால், அது ஏன் உபயோகமான, உணவுக்கான உழைப்பாக இருக்கக் கூடாது? சுவாசப் பயிற்சி செய்ய வேண்டுமென்றோ அல்லது கரளாக் கட்டை சுற்ற வேண்டு மென்றோ யாரும் விவசாயிக்குக் கூறுவதில்லை. மனித சமுதா யத்தில் பத்தில் ஒன்பது பேர் மண்ணில் பாடுபட்டுத்தான் வாழ் கிறார்கள். ஆகவே மீதமுள்ள பத்தில் ஒரு பகுதியினரும், இந்த மிகப் பெரும்பாலோருடைய முன் மாதிரியைப் பின்பற்றினால், தங்களுடைய உணவுக்கு வேண்டிய அளவாவது உடல் உழைப்புச் செய்தால், உலகம் எவ்வளவு மகிழ்ச்சியுடனும் ஆரோக்கியத்து டனும் அமைதியுடனும் இருக்கும்?

**உயர்வு தாழ்வு நீங்கும்**

உலகம் முழுவதும் முதலாளி—தொழிலாளி சண்டை இருக் கிறது. ஏழைகள் பணக்காரர்களைப் பார்த்துப் பொறாமைப்படு கிறார்கள். எல்லோரும் உணவுக்காக உழைப்பதானால், உயர்வு தாழ்வுகள் அகன்றுவிடும். அப்போதும் பணக்காரர்கள் இருப் பார்கள். ஆனால் அவர்கள் தங்களுடைய சொத்தின் தர்மகர்த்தாக் களாகத் தான் தங்களைக் கருதிக்கொள்வார்கள்; பெரும்பாலும் பொது நலனுக்காகவே அதைப் பயன்படுத்துவார்கள்.

**உடல் உழைப்புக்கள் எவை?**

அஹிம்சையைக் கடைப்பிடிப்பவருக்கும், சத்தியத்தை ஆரா தனை செய்பவருக்கும், பிரம்மச்சரியத்தை இயற்கையான முறையில் அனுஷ்டிப்பவருக்கும் உணவுக்காக உடல் உழைப்புச் செய்வது ஒரு வரப்பிரசாதமாகும் என்று கூறுவது முற்றிலும் சரி. விவசா யத்தின் விஷயத்தில்தான் இந்த உழைப்புச் சரியாக அமைந்திருக் கிறது. ஆனால் தற்போதைய நிலையில் ஒவ்வொருவரும் அதை மேற்கொள்ளும் நிலைமையில் இல்லை. ஆகையால் ஒருவர் மண்ணில் உழுவதற்குப் பதிலாக நூற்கலாம் அல்லது நெய்யலாம்; கொல்லர் அல்லது தச்சு வேலை செய்யலாம். ஆனால் இவ்வாறு செய்யும் போது, சிறந்த இலட்சியமான வேலை விவசாயமே என்று கருத வேண்டும். ஒவ்வொருவரும் தனக்குத்தானே தோட்டியாக இருக் கலாம். உணவு உண்பதைப் போலவே மலத்தைக் கழிப்பதும் அவசியமான ஒரு செயல். தன்னுடைய கழிவுப்பொருளைத் தானே

அப்புறப்படுத்த வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையுமாகும். இது சாத்தியமில்லையென்றால் ஒவ்வொரு குடும்பமுமாவது, தனது துப்புரவு வேலைகளுக்குத் தானே பொறுப்பேற்க வேண்டும்.

### தோட்டி என்ற உணர்வு

சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் தான் தோட்டி வேலை செய்ய வேண்டுமென்பதில் ஏதாவது பெரிய தவறு இருக்க வேண்டுமென்று நான் பல ஆண்டுகளாகவே கருதி வந்திருக்கிறேன். இந்த அத்தியாவசியமான சுகாதார சேவைக்கு, மிகத் தாழ்ந்த அந்தஸ்தை முதன் முதலாக அளித்தவர் யாரென்பதைப் பற்றி வரலாற்றுப் பூர்வமான எழுத்துச் சான்று எதுவும் நம்மிடம் இல்லை. அது யாராக இருந்தாலும் சரி, அவர் நமக்கு எந்தவித நன்மையும் செய்யவில்லை. நம்முடைய குழந்தைப் பருவத்திலிருந்தே நாமெல்லாம் தோட்டிகள் என்ற எண்ணத்தை நாம் மனதில் பதித்துக்கொள்ள வேண்டும். இதை உணர்ந்த ஒவ்வொருவரும் தோட்டியாக உடல் உழைப்பை மேற்கொள்ளத் தொடங்க வேண்டியதுதான் அதற்கு மிக எளிதான வழி. இவ்வாறு புத்திக் கூர்மையுடன் செய்யப்படும் தோட்டி வேலையானது, மனிதனின் சமத்துவத்தை உண்மையாக நிலைநாட்டுவதற்கு உதவும்.[2]

### கடமை வந்தால் உரிமை

உரிமைகளின் உண்மையான பிறப்பிடம் கடமைதான். நாமெல்லோரும் நம் நம் கடமையைச் செய்வதாக இருந்தால், உரிமைகளை அடைவதற்கு நீண்ட காலமாகாது. கடமைகளைச் செய்யாமல், உரிமைகளைப் பெறுவதில் முனைந்துவிட்டால், கொள்ளிவாய்ப் பேயைப் போன்று அது நம்மை ஏமாற்றிக் கொண்டே சென்றுவிடும். நாம் எவ்வளவு அதைத் துரத்துகிறோமோ அவ்வளவு அது தூரத்தில் பறந்து போய்விடுகிறது. இதே போதனையைத்தான் கீழ்க்கண்ட தெய்வீகச் சொற்களில் கண்ணன் கூறுகிறார்: "செயலில் ஈடுபட வேண்டியதே உன் வேலை. பலனைப் பற்றிக் கருதாதே." செயல் என்பது கடமை; பலன் என்பதுதான் உரிமை.[3]

### கடமை, கழுவாய்

அத்தியாவசியத் தேவைகளைப் பெறுவதில் பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் உரிமையிருப்பதைப் போலவே ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமை இருக்கிறது. ஒவ்வொரு கடமைக்கும் உரிய ஒரு

உரிமை உண்டு. அதற்கு வரும் அபாயத்தைச் சமாளிப்பதற்கான ஒரு கழுவாய் உண்டு. ஆகையால் ஆதாரமான, அடிப்படையான சமத்துவத்தை வெளிப்படுத்துவதென்பது அதற்குரிய கடமைகளையும் கழுவாய்களையும் கண்டுபிடிப்பதுதான். இது தொடர்பான கடமை, உடலால் உழைப்பதாகும். இது தொடர்பான கழுவாய், எனது உழைப்பின் பலனை யார் அபகரிக்கிறார்களோ அவர்களுடன் ஒத்துழையாமையை மேற்கொள்வதாகும்.[4]

### உணவுக்கான உழைப்பு

எல்லோருமே, வேறெதற்காகவு மல்லாமல் தங்களுடைய உணவுக்காக உழைப்பதாக இருந்தால், எல்லோருக்கும் போதுமான உணவும் ஓய்வும் இருக்கும். அளவுக்கு மீறிய மக்கள் தொகை இருப்பதாக அப்போது கூக்குரல் இருக்காது. நோய் நொடி இருக்காது. தற்போது நாம் காண்பதைப் போல், வறுமை தாண்டவமாடாது. இப்படிப்பட்ட உழைப்பானது, தியாகத்தின் உச்சமாக இருக்கும். மனிதர் தங்களுடைய உடலாலோ மனதாலோ வேறு எத்தனையோ காரியங்களைச் செய்யலாம் என்பதில் ஐயமில்லை. ஆனால் இவைகளெல்லாம் பொது நலனுக்காக அன்பின் அடிப்படையில் செய்யப்படுவதாக இருக்க வேண்டும். அப்போது ஏழை, பணக்காரர் என்பது இருக்காது. உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், தீண்டத் தகாதவர்கள், தீண்டத் தக்கவர்கள் என்பவர்களெல்லாம் இருக்கமாட்டார்கள்.

### உழைப்பின் சிறப்பு

நாம் அடைய முடியாத ஒரு இலட்சியமாக இது இருக்கலாம். ஆனால் நாம் அதற்காக முயற்சியைக் கைவிட வேண்டுமென்பதில்லை. தியாகத்தின் நியதியை—அதாவது, நாம் எதற்காக உயிர் வாழ்கிறோமோ அதை—நாம் நிறைவேற்றாமல் இருந்தாலுங்கூட, நம்முடைய அன்றாட உணவுக்கு வேண்டிய உடல் உழைப்பைச் செய்தோமானால், இந்த இலட்சியத்திற்கு மிக அருகில் சென்றவர்களாவோம்.

### செய்து பார்க்கட்டும்

நாம் அவ்வாறு செய்தோமானால், நம்முடைய தேவைகளெல்லாம் மிக மிகக் குறைந்துவிடும். உணவும் எளிமையானதாகிவிடும். அப்போது நாம் உயிர் வாழ்வதற்காகச் சாப்பிட வேண்டும்; சாப்பிடுவதற்காக உயிர் வாழக் கூடாது. இந்தத் தத்துவம் சரிதானா என்ற ஐயப்பாடு உள்ளவர் தன்னுடைய உணவிற்காக நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுப் பார்க்கட்டும்.

தன்னுடைய உழைப்பினுல் கிடைக்கும் பொருள்களிலிருந்து அவர் மிகச் சிறந்த இன்பத்தை அடைவார். அவருடைய உடல் நலம் அபிவிருத்தி அடையும். தான் இதற்கு முன் அனுபவித்த அநேக பொருள்கள் தேவையற்றவை என்பதைக் காண்பார்.[5]

## உடல் உழைப்பும் சமூகத்தொண்டும்

புத்திசாலித்தனமான உடல் உழைப்பு என்றும் மிக உயர்ந்த சமூகத் தொண்டாகும்.

இதில் உடல் உழைப்பு என்பதன்முன் 'புத்திசாலித்தனமான' என்ற சொல்லைச் சேர்த்துள்ளேன். உடல் உழைப்பானது சமூகத் தொண்டாக வேண்டுமானுல், அதற்கு ஒரு திட்டவட்டமான கருத்து இருக்கவேண்டும் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே அச்சொல்லைச் சேர்த்திருக்கிறேன். இல்லையேல் ஒவ்வொரு தொழிலாளியும் சமூகத்தொண்டு செய்வதாகவே ஆய்விடும். ஒருவகையில் அவன் சமூகத் தொண்டு செய்கிருன் என்பது உண்மையே. ஆனுலும், இங்கு நாம் எடுத்துக்கொண்டது அதைக் காட்டிலும் முக்கியமான ஒன்ருகும். எல்லோருடைய பொது நன்மைக்காகவும் உழைக்கும் ஒருவன் சமூகத்துக்காகச் சேவை செய்கிருன், அவன் தனது உழைப்புக்கேற்ற பலனைப் பெறத் தகுதியுள்ளவனுமாகிருன். ஆகையால் அப்படிப்பட்ட உடல் உழைப்பானது, சமூகத் தொண்டிலிருந்து வேறுபட்டதல்ல.[6]

## அரவமில்லாத புரட்சி

மூளையைக்கொண்டு ஒரு மனிதன் தனக்கு வேண்டிய உணவைச் சம்பாதித்துக் கொள்ளக்கூடாதா? கூடாது. உடலின் தேவைகள் உடலால்தான் நிறைவு செய்யப்படவேண்டும். "பிசாசுக்கு உரிய பலியைப் போட்டுத்தான் ஆகவேண்டும்" என்ற பழமொழி இங்கு சரியாகப் பொருந்துகிறது. வெறும் அறிவினுல் மட்டும் ஆகும் உழைப்பு, ஆன்மாவுக்குத்தான். அது ஆன்மாவுக்கு மட்டுந்தான் திருப்தி அளிக்கும். அதற்குப் பணத்தை ஒருபோதும் எதிர்பார்க்கக்கூடாது. ஒரு இலட்சிய சமுதாயத்தில் டாக்டர்களும், வக்கீல்களும், மற்றும் அவர்களைப் போன்றவர்களும் சமூகத்தின் நலனுக்காகவே உழைப்பார்கள்; தங்களுடைய சொந்த நலனுக்காக உழைக்க மாட்டார்கள். உடல் உழைப்பு நியதிக்குப் பணிவதானது சமுதாய அமைப்பில் ஒரு சத்தமில்லாத புரட்சியை ஏற்படுத்திவிடும். உயிர் வாழப் போராடுவதற்குப் பதிலாகப் பரஸ்பரம் சேவை செய்வதற்கான

போராட்டம் வரும். இதுவே மனிதன் அடையக்கூடிய வெற்றி. காட்டு மிராண்டிகளின் சட்டம்போய், மனிதனைப் பற்றிய சட்டம் அங்கு இடம் பெறும்.

### உண்மைப் பொருள் என்ன ?

கிராமங்களுக்குத் திரும்பிச் செல்வது என்பதன் பொருள் என்ன? உடல் உழைப்பு என்னும் கடமையையும், அது எதைக் குறிக்கிறதோ அவைகளையும் ஒருவன் தானாக முன் வந்து ஏற்பதுதான் கிராமங்களுக்குத் திரும்பிச் செல்வதென்பது. ஆனால் குணதோஷ விமர்சனம் செய்யும் ஒருவன், "இந்தியாவின் கோடிக்கணக்கான குழந்தைகள் இன்று கிராமங்களில்தான் வாழ்கின்றன. ஆயினும் அவை அரைப் பட்டினியாகத்தான் இருக்கின்றன" என்று சொல்வான். அந்தோ, இது நூற்றுக்கு நூறு உண்மையே. ஆனால் அதிருஷ்டவசமாக ஒன்றை நாம் அறிவோம். அதாவது அவர்களுடைய பணிவு இருக்கிறதே அது அவர்களுடைய மனமுவந்த பணிவாகாது. தங்களால் உடல் உழைப்பைத் தவிர்க்க முடியுமானால் ஒரு வேளை அவர்கள் அப்படிச் செய்திருக்கலாம். அல்லது அண்மையில் உள்ள நகரம் ஒன்றில் அவர்களுக்கு இடங்கிடைக்குமானால் அங்கு ஓடோடிச் சென்றுவிடலாம். கட்டாயமாக ஒரு எஜமானுக்குப் பணிவதென்பது அடிமையின் நிலையாகும். தகப்பனுக்கு மனமுவந்து பணிவதென்பது மகனுக்குரிய மாண்பாகும். அதேபோன்று, உடல் உழைப்பின் நியதிக்குக் கட்டாயத்தின்பேரில் பணிவதென்பது வறுமை, நோய், அதிருப்தி ஆகியவற்றைத்தான் வளர்க்கிறது. அது ஒரு வகையான அடிமை நிலை. மனமுவந்து பணிவதென்பது திருப்தியையும் உடல் நலத்தையும் அளிக்கும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்; மற்றப்படி வெள்ளியும் தங்கமுமல்ல. [7]

### பிச்சை யெடுத்தல்

உடல் ஆரோக்கியமாக இருந்தும் நாணயமான வழியில் தனது உணவுக்காக உழைக்காத ஒரு மனிதனுக்கு இலவசமாக ஒருவேளை உணவு அளிப்பதைக்கூட எனது அஹிம்சை ஏற்றுக்கொள்ளாது. எனக்கு மட்டும் அதிகாரம் இருந்தால், இலவச உணவுகள் அளிக்கப்படும் ஒவ்வொரு சத்திரத்தையும் நான் நிறுத்தி விடுவேன். இது நம் நாட்டைத் தாழ்த்தி, சோம்பேறித்தனத்தையும், மந்தத்தையும், ஏமாற்றுதலையும் ஊக்குவித்திருக்கிறது. இது சட்டத்தைமீறிக் குற்றம் செய்வதற்கும்

துணை செய்துள்ளது. இவ்வாறு தவறான முறையில் தர்மம் செய்வதானது, ஒரு நாட்டின் ஆன்மிக அல்லது லோகாயத சொத்தைப் பெருக்குவதற்கு எந்த வகையிலும் உதவுவதில்லை. தர்மம் செய்தவருக்குத் தவறான பெருமையை அளிக்கிறது. இவ்வாறு தர்மம் செய்பவர், சில ஸ்தாபனங்களைத் திறந்து, அவைகளுக்காக உழைக்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஆரோக்கியமான, சுத்தமான சூழ்நிலைகளில் உணவு அளிப்பதாக இருந்தால் அது எவ்வளவு அழகான, விவேகமான செயலாக இருக்கமுடியும்? இராட்டையோ அல்லது பஞ்சு சம்பந்தமான ஏதாவதொரு வேலையோ அவர்களுக்குச் சிறந்ததாக இருக்கும் என்று தனிப்பட்ட முறையில் நான் கருதுகிறேன். ஆனால் அவர்கள் இந்த வேலையைத் தேர்ந்தெடுக்காவிட்டால் வேறு ஏதாவது ஒரு வேலையைத் தேர்ந்தெடுக்கலாம். ஆனால், "உழைக்காவிட்டால் உணவு இல்லை" என்பது மட்டும் அனுசரிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு நகரிலும் அததற்குரிய பிச்சைக்காரர்கள் பிரச்னை இருக்கிறது. இந்தப் பிரச்னை கஷ்டமானதாகவும் இருக்கிறது. இப்பிரச்னைக்குப் பணக்காரர்கள்தான் பொறுப்பாவர். சோம்பேறிகளுக்கு இலவச உணவை அள்ளிப்போடுவது எளிய காரியம் என்பதை நான் அறிவேன். ஆனால், உணவு பரிமாறப் படுவதற்குமுன் நாணயமான வேலை செய்தாக வேண்டியிருக்கக் கூடிய ஒரு ஸ்தாபனத்தைக் கட்டிக் காப்பது எவ்வளவோ கஷ்டமானதாகும். பொருளாதார அடிப்படையில் பார்த்தால், ஆரம்பக்கட்டத்தில், வேலை வாங்கிய பின் உணவு அளிப்பதற்கு ஆகும் செலவானது தற்போது இலவசமாக உணவு அளிக்கப்படுவதற்காகும் செலவைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கும். ஆனால் நீண்டகால அடிப்படையில் பார்த்தால் அது மலிவாக இருக்கும்—இந்நாட்டில் ஏற்கனவே வேகமாக வளர்ந்து கொண்டிருக்கும் சோம்பேறிகளின் எண்ணிக்கையை மேலும் பெருக்கிக்கொண்டு போக நாம் விரும்பாவிட்டால்.[8]

## நொண்டி முடம்

பிச்சையெடுப்பதை ஊக்குவிப்பது தவறு என்று நான் கூறினாலும் வேலையும் உணவும் அளிக்காமல் எந்தப் பிச்சைக்காரனையும் நான் வெளியே அனுப்பமாட்டேன். அவன் வேலை செய்யாவிட்டாலோ உணவு இல்லாமலும் அவனை அனுப்பிவிடுவேன். நொண்டி முடமாக இருந்து உடலால் உழைக்க முடியாமல் இருப்பவர்களுக்கு அரசாங்கம் ஆதரவு அளிக்கவேண்டும். எனினும், போலியாகக் குருடனைப்போல் நடித்து - ஏன்,

உண்மைக் குருடனுகை இருப்பதில் கூட எவ்வளவோ ஏமாற்று தல்கள் நடந்துகொண்டிருக்கின்றன - ஏமாற்றிப் பணம் சம்பாதித்து அநேக குருடர்கள் பணக்காரர்களாகி யிருக்கிருர்கள். அவர்களுக்கு இந்த ஆசை ஏற்படுமாறு செய்வதைக் காட்டிலும் அவர்களை ஒரு புகலிடத்தில் சேர்ப்பது நல்லதாக இருக்கும்.[9]

# அத்தியாயம் 8

# சமத்துவம்

### ஏற்றத்தாழ்வு இயற்கையே

சமுதாயத்தைப்பற்றி என்னுடைய கருத்து இதுதான். நாமெல்லோரும் சமத்துவமாகவே பிறக்கிறோம். ஆகவே, சமத்துவ வாய்ப்புப்பெற உரிமையுண்டென்பது அதன் பொருளாகிறது. ஆனாலும் எல்லோருக்கும் சமத்துவமான திறமையில்லை. சமத்துவமான திறமையிருப்பதும் மனித இயற்கையில் சாத்தியம் இல்லை. உதாரணமாக, எல்லோருக்கும் சமமான உயரம், நிறம், புத்திக் கூர்மை முதலியவை இருக்க முடியாது. ஆகையால் இயற்கையாகவே சிலருக்கு அதிகம் சம்பாதிக்கவும் மற்றும் சிலர் குறைச்சலாகச் சம்பாதிக்கவும் திறமை பெற்றவர்களாய் இருப்பார்கள். திறமையுள்ளவர்களிடம் அதிகப் பொருள் இருக்கும். அவர்கள் தங்களுடைய திறமையை இதற்காகப் பயன்படுத்திக்கொள்வார்கள். அவர்கள் மட்டும் தங்களுடைய திறமையை அன்போடு பயன்படுத்துவதாய் இருந்தால், அரசாங்கத்தின் கடமையைச் செய்தவர்களாவார்கள். இப்படிப்பட்டவர்கள் வேறு நிபந்தனை எதுவுமின்றி, தர்மகர்த்தாக்களாக நடந்துகொள்வார்கள். அறிவுத் திறன் உள்ளவன் அதிகமாகச் சம்பாதிப்பதை நான் அனுமதிப்பேன். அவனுக்குள்ள திறமைக்காக நான் மனம் புழுங்கமாட்டேன். ஆனால் அவனுக்கு அதிகப்படியாகக் கிடைக்கும் வருமானமெல்லாம், நாட்டின் நலனுக்காக உபயோகப்படுத்தப்பட வேண்டும்—எவ்வாறு ஒரு தகப்பன், மக்களுடைய வருமானங்களெல்லாம் அந்தக் குடும்பத்தின் பொது நிதிக்குப் போகின்றனவோ அதைப்போல.[1]

### விளைவு என்ன ?

சமத்துவ விநியோகத்தின் உண்மையான விளைவு எம்முறையில் இருக்கும்? ஒவ்வொரு மனிதனுக்கும் அவனது இயற்கையான தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய அளவு பணவசதி இருக்கும், அதற்குமேல் இராது. உதாரணமாக, ஒரு மனிதனுக்கு ஜீரணசக்தி மோசம் என்றும் அவனுக்குக் கால் இராத்தல் மாவு போதும் என்றும் வைத்துக்கொள்வோம்.

மற்றொரு மனிதனுக்கு ஒரு இராத்தல் தேவையாக இருக்கிறது. அப்போது இவ்விருவருமே தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய நிலையில் இருப்பார்கள். இந்த இலட்சியத்தை நடைமுறைக்குக் கொண்டுவர, சமுதாய அமைப்பு முழுவதையுமே திருத்தி அமைக்க வேண்டியிருக்கும். அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமுதாயம் வேறு எந்த இலட்சியத்தையும் கடைப்பிடிக்க முடியாது. நாம் இலட்சியத்தை அடையமுடியாமல் இருக்கலாம். ஆனால் நாம் இதை மனதிற்கொண்டு, அதனை அடைவதற்காக ஓயாது பாடுபட்டு வர வேண்டும். நம்முடைய இலட்சியத்தை நோக்கி நாம் முன்னேறும் அளவிற்கு ஏற்ப, நமக்கு மன நிறைவும் மகிழ்ச்சியும் கிட்டும். அந்த அளவுக்கு நாம் ஒரு அஹிம்சாபூர்வமான சமுதாயத்தை உருவாக்குவதற்கு உதவியவர்களாவோம்.[2]

### வருமானத்தில் சமத்துவம்

உங்களுடைய சேவையைப் பணமாக மாற்றுவதற்குப் பதிலாக, நாட்டின் சேவைக்காகப் பயன்படுத்துங்கள். நீங்கள் ஒரு வைத்தியராக இருந்தால், உங்களுடைய வைத்தியத் திறமையையெல்லாங் காண்பிப்பதற்கு, இந்தியாவில் போதுமான நோய்கள் இருக்கின்றன. நீங்கள் ஒரு வக்கீலாக இருந்தால் இந்தியாவில் போதுமான கருத்து வேறுபாடுகளும் சண்டைகளும் இருக்கின்றன. அதிகப்படியான சச்சரவை வளர்க்காமல், அந்தச் சண்டைகளில் சமரசத்தை ஏற்படுத்தி, வழக்குத் தொடருவதை நிறுத்தலாம். நீங்கள் ஒரு எஞ்ஜினியராக இருந்தால், நம்முடைய மக்களின் தேவைக்கும் வசதிக்கும் ஏற்றதும் அதேசமயம் ஆரோக்கிய வாழ்விற்கு உகந்ததும், தூய காற்று வசதி உள்ளதுமான மாதிரி வீடுகளைக் கட்டுங்கள். நீங்கள் கற்றதில், வீணைப் போவதென்பது எதுவுமே இல்லை. (இந்தக் கேள்வியைக் கேட்டவர் ஒரு சார்ட்டர்ட் அக்கௌண்டண்ட். அவரை நோக்கி காந்திஜி கூறியதாவது:) காங்கிரசின் கணக்குகளையும் அதைச் சார்ந்த ஸ்தாபனங்களின் கணக்குகளையும் தணிக்கை செய்வதற்கு எல்லா இடங்களிலுமே தணிக்கையாளர்கள் தேவையாக இருக்கிறார்கள். இந்தியாவுக்கு வாருங்கள்—நான் உங்களுக்குப் போதுமான வேலையும், அதற்கு வேண்டிய கூலியும்—அதாவது ஒரு நாளைக்கு நான்கு அணா கொடுக்கிறேன். இந்தியாவில் கோடிக் கணக்கான மக்கள் சம்பாதிப்பதைக் காட்டிலும் இது அதிகமாகும்.[3]

வழக்கறிஞராகத் தொழில் செய்வதென்றால், ஒரு கிராமத் தச்சனுடைய ஊதியத்தைக் காட்டிலும் அவர் நாள்தோறும் அதிக ஊதியம் பெறவேண்டும் என்பதல்ல.[4]

## இந்தியாவுக்கு உரிய இலட்சியம்

உலகமெல்லாம் கண்டு பொறாமைப்படக்கூடிய அளவுக்கு இந்தியா ஒரு முன்மாதிரியான சுதந்திர வாழ்க்கை நடத்த வேண்டுமென்றால், இங்குள்ள தோட்டிகள், டாக்டர்கள், வழக்கறிஞர்கள், ஆசிரியர்கள், வணிகர்கள், மற்றவர்கள் ஆகிய எல்லோரும் அன்றாடம் செய்யும் நாணயமான உழைப்பிற்கு ஒரே சமத்துவமான ஊதியம் பெறவேண்டும். இந்திய சமுதாயம் ஒரு போதும் இந்த இலட்சியத்தை எட்டாமல் இருக்கலாம். ஆயினும் இந்தியா மகிழ்ச்சி நிறைந்த நாடாக இருக்க வேண்டுமானால், வேறு எந்த இலட்சியமும் அல்லாமல் இந்த இலட்சியத்தை நோக்கித்தான் ஒவ்வொரு இந்தியனும் தனது வாழ்க்கைக் கப்பலைச் செலுத்திக் கொண்டுபோக வேண்டும்.[5]

அத்தியாயம் 9

# தர்மகர்த்தாக் கொள்கை

### சொத்தில் நியாய உரிமை

ஓர் உதாரணத்திற்கு, பிதுரார்ஜிதமாகவோ அல்லது எனது தொழில் காரணமாகவோ எனக்கு நிறையச் சொத்து ஏற்பட்டு விடுகிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது, அந்தச் சொத்தெல்லாம் எனக்குச் சொந்தமானதல்ல வென்பதை நான் உணர வேண்டும். எனக்குச் சொந்தமானதெல்லாம் நான் கண்ணியமான வாழ்க்கை நடத்துவதற்குரிய உரிமைதான்—அதாவது இந்தியாவிலுள்ள மற்ற கோடிக்கணக்கான மக்கள் அனுபவிப்பதைப்போன்ற ஒரு வாழ்க்கை நடத்துவதற்குள்ள உரிமைதான். என்னுடைய சொத்தின் எஞ்சிய பகுதியெல்லாம் சமுதாயத்திற்குச் சொந்தமானதே—அதைச் சமுதாயத்தின் நலனுக்காகவே பயன்படுத்தவேண்டும். ஜமீன்தார்கள், மன்னர்கள் ஆகியோருடைய சொத்துக்கள் சம்பந்தமாக சோசலிசக் கொள்கை நாட்டின்முன் அறிவிக்கப்பட்டபோது, நான் மேற்கண்ட எனது கோட்பாட்டைக் கூறினேன். இந்தத் தனி உரிமை படைத்த வகுப்பினரை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். நானோ அவர்கள் பேராசைக்கும் சொத்தாசைக்கும் அப்பாற்பட்டவர்களாய் இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அவர்களுக்குச் சொத்து இருந்தாலும் கூட, உடலால் உழைப்பவர்களுடைய நிலைக்கு அவர்கள் இறங்கி வரவேண்டுமென்று விரும்புகிறேன். உழைப்பாளிக்கு ஒரு சொத்து இருக்கிறது. அதுதான் அவன் உழைப்பதற்கு உரிய சக்தி. இந்தச் சொத்தைக் காட்டிலும் ஒரு செல்வந்தர் தனது சொத்துக்குக் குறைச்சலான உரிமை படைத்தவரே என்பதைத் தொழிலாளி உணர்ந்து கொள்ளவேண்டும்.

### நடைமுறையில் சாத்தியமா ?

இந்த வியாக்கியானப்படி, எத்தனைபேர் உண்மையான தர்மகர்த்தாக்களாக இருக்கமுடியும் என்பது வேறு விஷயம். இந்தக் கோட்பாடு சரியானதென்றால், இதைப் பலர் கடைப்பிடித்து வாழ்கிறார்களா அல்லது ஒரே ஒருவர்தான் கடைப்

பிடிக்கிறுரா என்பது முக்கியமல்ல. இதுசரிதான் என்று உணர் கிறீர்களா என்பதுதான் பிரச்னே. நீங்கள் அஹிம்சைக் கொள் கையை ஏற்றுக் கொள்வதாய் இருந்தால், நீங்கள் அதன்படி வாழ முயற்சிசெய்ய வேண்டும் - இதில் வெற்றியடைவதாய் இருந்தாலும் சரி, தோல்வியடைந்தாலும் சரி. இதை நடை முறையில் கடைப்பிடிப்பது கஷ்டம் என்று நீங்கள் கூறலாம். ஆனுலும், இந்தத் தத்துவத்தில், அறிவினுல் புரிந்துகொள்ள இயலாத எதுவும் இருப்பதாகக் கூறமுடியாது.[1]

## அரசும் இம்சையும்

தர்மகர்த்தா முறையென்பது சட்டபூர்வமாக ஒப்புக்கொள் ளப்பட்ட ஒரு கற்பனேயென்று நீங்கள் சொல்லலாம். ஆனுல் மக்கள் அதைப்பற்றி ஓயாது சிந்தனேசெய்து, அதன்படி நடக்க முயன்ருல், உலக வாழ்க்கையானது தற்போதுள்ளதைக் காட்டி லும் எவ்வளவோ அதிகமாக அன்பினுல் இயங்கும். ஒரு புள் ளியைப்பற்றி யூக்லிட் கூறியுள்ள சித்தாந்தம் போன்று முழுத் தர்மகர்த்தா முறை யென்பதும் தத்துவரீதியாகக் கூறக் கூடி யதே. அதே போன்று அடைய முடியாதே. ஆனுல் நாம் அதற்காக முயற்சி செய்தால், மற்ற எந்த முறையைக் காட்டிலும் இதன்மூலம் சமத்துவத்தை நோக்கி அதிகம் முன்னேறமுடியும்.... முதலாளித்துவத்தை இம்சை முறைகளின்மூலம் அரசாங்கம் அடக்கி விடுமானுல், அந்த இம்சைச் சுழலில் அரசாங்கமே அகப்பட்டுக்கொள்ளும். ஒரு போதும் அதனுல் அஹிம்சையை வளர்க்கமுடியாது. ஒரு கட்டுக்கோப்பாக நிறுவப்பட்டும் குவியல் முறையிலும் உள்ள இம்சையின் பிரதிநிதியே அரசாங்கம். தனிப்பட்டவருக்கு ஆன்மா இருக்கிறது. ஆனுல் அரசாங்க மானது ஆன்மா இல்லாத ஒரு இயந்திரமாகும். ஆகையால் இம்சையினுலேயே உயிர்வாழும் அரசாங்கத்தை இம்சையி லிருந்து விலக்க முடியாது. ஆகையால் நான் தர்மகர்த்தாத் தத்துவத்தையே அதிகம் விரும்புகிறேன். அரசாங்கத்துடன் கருத்து வேறுபடுபவர்கள்மீது அரசாங்கம் மிக அதிகமான இம்சையைப் பயன்படுத்தலாம் என்ற அச்சம் எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கிறது. சம்பந்தப்பட்ட மக்கள் தர்மகர்த்தாக்களாக நடந்து கொண்டால், நான் உண்மையி லேயே மிகவும் மகிழ்ச்சியடைவேன். அவர்கள் அதில் தவறி விட்டாலோ, மிகக் குறைந்த அளவு இம்சையைப் பிரயோகம் செய்து அரசாங்கத்தின் மூலமாக நாம் அவர்களுடைய சொத்தை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்குமென நம்புகிறேன்.... (அதனுல்

தான் வட்டமேஜை மகாநாட்டில், "ஒவ்வொரு செல்வந்தரின் சொத்தையும் பரிசீலனைக்கு உட்படுத்தவேண்டும். நஷ்டஈடு கொடுத்தோ, கொடுக்காமலோ அவசியமான இடங்களில் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட வேண்டும்" என்று கூறினேன்.) ஆகையால் நான் தனிப்பட்டமுறையில் அதிகம் விரும்பக்கூடியது, அரசாங்கத்தின் கைகளில் அதிகாரம் குவிந்திருக்கக் கூடாது என்பதைத்தான்.... அதற்குப் பதிலாக, தர்மகர்த்தா எண்ணம் விரிவடைவதைத்தான் அதிகம் விரும்புகிறேன். என்னுடைய கருத்துப்படி, தனிப்பட்டவர் சொத்துரிமையில் உள்ள இம்சையானது அரசாங்கத்தின் இம்சையைக் காட்டிலும் குறைச்சலான தீங்கு பயக்கக் கூடியதே ; எனினும், தவிர்க்க முடியாத நிலையில் மிகக் குறைந்த அளவு அரசாங்க உடைமை இருப்பதை நான் ஆதரிப்பேன். [2]

## சூத்திரம் அன்பே

அஹிம்சை அடிப்படையில் சமூகத்தை அமைக்கவோ அல்லது நடத்தவோ முடியாது என்று கூறுவது இந்தக் காலத்தில் ஒரு நாகரிகமாகப் போய்விட்டது. இந்த வாதத்தை நான் எதிர்க்கிறேன். ஒரு குடும்பத்தில், தகப்பனர் மகனுடைய கன்னத்தில் அறைந்தால் திருப்பி அறைய வேண்டுமென்று மகன் எண்ணுவதில்லை. தகப்பனர் கன்னத்தில் அறைந்ததனல் ஏற்பட்ட வலிக்காக மகன் அவர் சொன்னபடி கேட்பதுமில்லை. அதற்கு மாருக, அதன் பின்னணியில் தகப்பனர் வைத்திருக்கும் அன்பிற்காகத்தான் அவன் பணிகிருன். சமூகம் எவ்வாறு நடைபெறுகிறது அல்லது நடைபெறவேண்டும் என்பதைச் சுருக்கமாக இவ்வாறு கூறலாம் என்பது என் கருத்து. குடும்பத்தின் விஷயத்தில் எது உண்மையோ, அதுவே சமுதாயத்தின் விஷயத்திலும் உண்மை. ஏனென்ருல் சமுதாயம் என்பது ஒரு பெரிய குடும்பமேயாகும்.

## அஹிம்சை சமுதாயப் பண்பு

அஹிம்சையானது தனிப்பட்டவருக்கு இருக்க வேண்டிய சிறப்பு மட்டுமல்ல. மற்றவைகளைப் போன்று பண்படுத்தி வளர்க்க வேண்டிய ஒரு சமுதாயப் பண்புமாகும். சமுதாயத்தில் உள்ள பரஸ்பரத் தொடர்புகளில், பெரும்பாலும் அஹிம்சையின் மூலமே காரியங்கள் நடைபெறுகின்றன. இதை மேலும் விஸ்தாரமாக, தேசிய, சர்வதேசிய அடிப்படையில் விரிவுபடுத்த வேண்டும் என்றே நான் கேட்கிறேன்.

## நிலைக்கும் தத்துவம்

என்னுடைய தர்மகர்த்தாத் தத்துவம் வெறும் தற்காலிக ஏற்பாடல்ல. நிச்சயமாக அது ஏமாற்றுதலுமல்ல. மற்ற தத்துவங்களெல்லாம் போனபின்பு கூட இது நிலைத்து நிற்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இதற்குத் தத்துவ சாஸ்திர அங்கீகாரமும் மத அங்கீகாரமும் உண்டு. சொத்துவைத்திருப்பவர்கள் இத்தத்துவத்தின்படி நடக்கவில்லை யென்பதற்காக இத்தத்துவம் பொய்யென்று ஆகிவிடாது. அது சொத்துள்ளவர்களுடைய பலவீனத்தைத்தான் காண்பிக்கும். வேறு எந்தத் தத்துவமும் அஹிம்சைக்கு உகந்ததாகாது. அஹிம்சை வழியில் தவறு செய்பவர் தன் தவற்றைத் திருத்திக் கொள்ளாவிட்டால், தன்னுடைய முடிவுக்குத் தானே கருவியாக இருக்கிறார். ஏனென்றால், ஒன்று, அஹிம்சா பூர்வமான ஒத்துழையாமைமூலம் அவர் தனது தவற்றை உணருமாறு செய்யவேண்டும். அல்லது, அவர் சமூகத்திலிருந்தே பூரணமாகத் துண்டிக்கப்பட்டு விடுவார்.[5]

## தியாகத்தால் செல்வம்

'பொதுவாகப் பணக்காரர்கள்—சொல்லப்போனால் பெரும்பாலோர்—பணம் சேர்ப்பதில் வழியைப் பற்றி யோசிப்பதில்லை' யென்று ஒரு கருத்து நிலவுகிறது. இந்தக் கருத்தை எவ்விதத் தயக்கமும் இன்றி நான் ஏற்றுக்கொள்கிறேன். அஹிம்சா முறையை அனுஷ்டிக்கும்போது ஒவ்வொருவருக்கும் ஒரு நம்பிக்கை வேண்டும். அதாவது, எவ்வளவுதான் ஒருவன் சீர் கெட்டுப்போயிருந்தாலும் திறமையுடனும் மனிதாபிமானத்துடனும் முயற்சிசெய்தால் அவனைத் திருத்திவிட முடியும் என்று நம்பவேண்டும். மனிதர்களிடமுள்ள நல்லெண்ணத்தை நாம் தூண்டி, அதற்குரிய பிரதிபலன் கிடைக்கும் என எதிர்பார்க்கவேண்டும். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சொந்த இலாபத்திற்காக மட்டுமல்லாமல், எல்லோருடைய நன்மைக்காகவும் தங்கள் திறமையை யெல்லாம் பயன் படுத்துவதானால், அது சமூக சேமத்துக்கு உதவக்கூடியதாகத்தானே இருக்கும்? ஒவ்வொருவரும் தன்னுடைய திறமையைப் பூரணமாகப் பயன் படுத்தமுடியாத அல்லது இதில் அவர்களைச் சக்தியற்றவர்களாக ஆக்கிவிடக்கூடிய ஒரு 'செத்த' சமத்துவத்தை நாம் விரும்பவில்லை. இப்படிப்பட்ட சமூகம் இறுதியில் அழிந்தேபோய் விடும். ஆகையால், எல்லோருடைய நலனுக்கும் ஆன முறையில் பணக்காரர்கள் கோடிக்கணக்காகச் (நாணயமான முறையில் தான்) சம்பாதிக்கலாம் என்று நான் கூறிய ஆலோசனை முற்

றிலும் சரியானது தான் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். *'தேன த்யக்தேன புஞ்ஜீதா:' என்பது அசாதாரணமான ஞானத்தை அடிப்படையாகக்கொண்ட ஒரு மந்திரம். தற்போது ஒவ்வொருவரும் தனக்காகவே வாழ்கிறார்கள். தனது அண்டை அயலாருக்கு என்ன நேருகிறது என்பதைப்பற்றிய அக்கறை இல்லாது வாழ்கிறார்கள். அதற்குப் பதிலாக, மனிதவர்க்கத்தில் உருவாக்க இம்மந்திரமே எல்லோருடைய நலனுக்காகவும் ஒரு புது வாழ்க்கை முறையை நிச்சயமான வழியாகும்.[6]

---

* 'எல்லாவற்றையும் அவருக்கு அர்ப்பணம் செய்து, உங்கள் பங்கை மாத்திரம் அனுபவியுங்கள்.'—ஈச உபநிடதம்.

அத்தியாயம் 10

# சுதேசி

## சுதேசி என்றால் என்ன ?

தூரத்தில் உள்ளவைகளைக் காட்டிலும் நமது அண்டையில் உள்ளவைகளைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நம்மை ஒருவரையறைப்படுத்தும் உணர்ச்சி இருக்கிறதே அதுதான் சுதேசி உணர்ச்சியாகும். இந்த விளக்கத்தின்படி நாம் வாழ வேண்டுமானால், மதத்தைப் பொறுத்தவரை, என்னுடைய புராதன மதத்தையே அனுஷ்டிக்க வேண்டும். அதுதான் என் பக்கத்தில் உள்ள மதச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொள்வதாகும். என் மதத்தில் குறைபாடுகள் இருப்பதாக நான் கண்டால், அதனுடைய குறைகளைப் போக்குவதன் மூலம், அதற்கு நான் சேவை செய்ய வேண்டும். அரசியல் துறையில், நாம் உள் நாட்டு ஸ்தாபன அமைப்புக்களைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அவைகளிடம் குறைபாடுகள் இருப்பதானால், அக் குறைகளை நீக்குவதன்மூலம் அவைகளுக்குச் சேவை செய்ய வேண்டும். பொருளாதாரத் துறையில் என்னுடைய பக்கத்தில் வாழ்பவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை மட்டுமே நான் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் பூரணத்துவம் அடையாமல் இருந்தால், அவைகளிடம் திறமைக் குறைவு தென்பட்டால், அவைகள் திறமையுடன் பூரணத்துவம் பெறுமாறு செய்து அத் தொழில்களுக்குச் சேவை செய்ய வேண்டும். இப்படிப்பட்ட சுதேசியை நடைமுறை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்தால், அது பொற்காலத்துக்கு வழிகோலும்......

## மதத்தில் சுதேசி உணர்ச்சி

நான் மேலே விவரித்துள்ளவாறு, சுதேசியின் மூன்று பிரிவுகளையும் பற்றி நாம் சுருக்கமாக ஆராய்வோம். இந்து மதமானது பழமையைப் பேணும் மதமாகிவிட்டது. ஆகவே அது ஒரு பலம் பொருந்திய சக்தியாக இருக்கிறது. இந்து மதம் இவ்வாறு பலம் பொருந்திய சக்தியாக இருப்பதன் காரணம், அதற்கு அடிப்படையாக உள்ள சுதேசி உணர்ச்சியே ஆகும். அது மிகமிகச் சகிப்புத்

தன்மையுள்ள மதம்—ஏனெனில் மதம் மாற்றுவதில் நம்பிக்கை லாத மதம்; கடந்த காலத்தில் அது எவ்வாறு விரிவடைந்ததோ அதைப் போன்று விரிவடைந்து செல்லும் சக்திவாய்ந்த மதம். அதுதான் புத்த மதத்தைத் துரத்திவிட்டது என்று சிலர் தவருக எண்ணுகிருர்கள். அது புத்தமதத்தைத் தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கிறது, அதில் வெற்றியும் கண்டிருக்கிறது. சுதேசி உணர்ச்சியின் காரணமாக, ஒரு இந்து தன்னுடைய மதத்தை மாற்றிக்கொள்ள மறுக்கிருன். அதுதான் சிறந்தது என்று அவன் கருதுவது அதற்கு அவ்வளவு காரணமல்ல; ஆனல் அதில் சீர் திருத்தங்கள் செய்து நிறைவு செய்துகொள்ளலாம் என்பதை அவன் அறிந்திருக்கிருன். நான் இந்து மதத்தைப் பற்றிச் சொன்னது மற்றப் பெரிய மதங்களின் விஷயத்திலும் உண்மையாகும். ஆனல் இந்து மதத்தின் விஷயத்தில் இது விசேஷ உண்மையாக இருக்கிறது. இங்குதான் நான் சொல்லவந்த முக்கியமான அம்சம் வருகிறது. நான் கூறுவது உண்மையானல், இந்தியாவில் உள்ள பெரிய கிறிஸ்தவ மதச் சபைகள் இதைக் காட்டிலும் சிறந்த முறையில் கிறிஸ்தவ மதப் பண்பிற்காகச் சேவை செய்யலா மல்லவா? அவர்கள் ஏற்கனவே செய்த காரியங்களுக்காக, செய்துகொண்டிருக்கும் காரியங்களுக்காக இந்தியா எவ்வளவோ கடமைப் பட்டிருக்கிறது. ஆகவே, இக்கிறிஸ்து மதச் சபைகள் தங்களுடைய அன்புப் பணியைத் தொடர்ந்து மேற்கொண்டும், மத மாற்றக் கொள்கையைக் கைவிட்டும் கிறிஸ்துவ மதத்திற்குச் சேவை செய்யலாம் அல்லவா?

### சாதி அமைப்பு

இவ்வாறு சுதேசி உணர்ச்சியை நீடித்துக்கொண்டே சென்று, உள்நாட்டு ஸ்தாபனங்களை நான் கவனிக்கும்போது, கிராமப் பஞ்சாயத்துக்கள் என்னைக் கவருகின்றன. இந்தியா உண்மையில் ஒரு குடியரசு நாடு. அது ஏன் குடியரசு நாடாக இருக்கிறது என்பதற்கு, அது குடியரசு நாடு என்பதுதான் காரணம். இதற்கு எதிராக வந்த ஒவ்வொரு அதிர்ச்சியிலிருந்தும் அது உயிர் தப்பி யிருக்கிறது. சிற்றரசர்களும் பேரரசர்களும்—அவர்கள் இந்தியா வைச் சேர்ந்தவர்களாயினும் சரி, வெளிநாட்டைச் சேர்ந்தவர்க ளாயினும் சரி-வரி வசூலித்ததில் தவிர வேறு எவ்வகையிலும் இந் நாட்டிலுள்ள கோடிக்கணக்கான மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவில்லை. குடிமக்களும் அரசனுக்கு எதைக் கொடுக்க வேண்டுமோ அதைக் கொடுத்துவிட்டு, மற்றப் பெரும்பாலான காரியங்களில் தங்கள் விருப்பப்படி நடந்துகொண்டு வந்திருக்கின்




எல்லைப்புறக் கிராமத்துக்கு காந்திஜியின் யாத்திரை.



பாரத நாடெங்கும் புனித யாத்திரை செய்த காந்தியடிகள்.

றனர். சாதிகள் என்ற விரிவான அமைப்பானது, சமுதாயத்தின் மத சம்பந்தமான தேவைகளை மட்டுமல்லாமல், அதனுடைய அரசியல் தேவைகளையும் நிறைவு செய்தது. சாதி முறைகளின் மூலம் கிராமவாசிகள் தங்களுடைய உள் விவகாரங்களை நிருவகித்துக்கொண்டார்கள். மன்னர்களின் அடக்குமுறை ஏதாவது இருந்தாலும் அதன்மூலமே நிவாரணங் கண்டார்கள். சாதி முறையின் மூலம் இவ்வாறு ஆச்சரியமான முறையில் ஒரு அமைப்பை ஸ்தாபித்த ஒரு தேசத்திற்கு ஸ்தாபனத்தைக் கட்டி யமைக்கும் சக்தி இல்லையென்று எவ்வாறு கூறமுடியும்? ஹரித்துவாரில் நடைபெறும் கும்பமேளாவை ஒருவன் பார்த்தால்போதும்...கடுமையான பெரு முயற்சி எதுவும் இல்லாமல் பத்து இலட்சத்துக்கு மேற்பட்ட யாத்திரீகர்களுக்குச் சிறந்த வெற்றிகரமான முறையில் உணவையும் மற்ற தேவைகளையும் அளிக்க முடிந்த ஒரு அமைப்பு எவ்வளவு திறமை வாய்ந்ததாக இருக்க முடியும் என்பது புலனாகும். ஆயினும் பொதுவாக நமக்கு ஒரு அமைப்பை ஸ்தாபிக்கும் திறமையில்லை யென்று கூறுவது இன்று ஒரு நாகரிகம் போலாகிவிட்டது. புதுப் பரம்பரையில் வளர்க்கப்பட்டவர்கள் விஷயத்தில் இது ஓரளவு உண்மை என்பதையும் நான் தயக்கத்துடன் கூறிக்கொள்கிறேன்.

### தாய்மொழிக் கல்வி

நாமே நம்மை அழித்துக்கொள்ளும் அளவுக்கு சுதேசி உணர்ச்சியிலிருந்து விலகிச் சென்றிருக்கிறோம். இதன் காரணமாக, பயங்கரமான ஒரு முட்டுக்கட்டையால் அவதிப்படுகிறோம். படித்தவர்களாகிய நாம் ஒரு வெளிநாட்டு மொழிமூலமாகவே நம்முடைய கல்வியைக் கற்றுக்கொண்டிருக்கிறோம். இதனால்தான் பொதுமக்கள் மத்தியில் எந்தவிதமான பிரதிபலனையும் ஏற்படுத்த முடியவில்லை. பொதுமக்களுடைய பிரதிநிதிகளாக இருக்க நாம் விரும்புகிறோம்; ஆனால் அது நம்மால் முடிவதில்லை. ஆங்கில அதிகாரிகளை அவர்கள் எந்த அளவு அங்கீகரிக்கிறார்களோ அந்த அளவுதான் நம்மையும் அங்கீகரிக்கிறார்கள். அவர்கள் இந்த இரு சாராரிடமுமே தங்களுடைய உள்ளங்களைத் திறந்து காட்டுவதில்லை. அவர்களுடைய அபிலாஷைகளும் நம்முடைய அபிலாஷைகளும் ஒன்றுபடுவதில்லை. இதனால் ஒரு இடைவெளி ஏற்பட்டுவருகிறது. ஆகவே நீங்கள் பார்ப்பது, ஒரு அமைப்பை ஸ்தாபிப்பதற்கான திறமைக் குறைவைக் காண்பிக்கவில்லை. அதற்குமாறாக, பிரதிநிதிகளுக்கும் அவர்கள் யாருடைய பிரதிநிதிகளாக இருக்கிறார்களோ அந்த மக்களுக்கும் தொடர்பு இல்லாமல் இருப்பதையே காண்பிக்கிறது. கடந்த ஐம்பது ஆண்டுகளில் நாம் நமது தாய்

மொழிமூலம் கல்வி கற்றுக்கொண்டிருப்போமானால், நமக்கு மூத்த வர்களும் நமது வேலையாட்களும், நமது அண்டை அயலில் உள்ள வர்களும் நமது அறிவினால் பலன் அடைந்திருப்பார்கள். இராமா யணத்தையும் மகாபாரதத்தையும் போலவே, ஒரு போசும் ஒரு ரேயும் கண்டுபிடித்தவையும் ஒவ்வொரு வீட்டுச் சொத்துமாகி யிருக்கும். தற்போதுள்ள நிலைமையிலோ பொதுமக்களைப் பொறுத்தவரை வெளிநாடுகளைச் சேர்ந்தவர்களுடைய கண்டு பிடிப்புகளும் இவைகளும் ஒன்றாகத்தான் இருக்கின்றன. கல்வி யின் எல்லாத் துறைகளுமே தாய் மொழிமூலம் கற்றுக்கொடுக்கப் பட்டிருந்தால், அவை நம்முடைய வளத்தை வியப்பளிக்கக் கூடிய முறையில் உயர்த்தியிருக்கும் என்பதை நான் தைரியமாகக் கூற முடியும். கிராமத் துப்புரவு முதலிய பிரச்னைகளெல்லாம் நீண்ட காலத்திற்கு முன்பே தீர்க்கப்பட்டிருக்கும். கிராமப் பஞ்சாயத் துக்கள் விசேஷ ஜீவனுள்ள ஒரு சக்தியாகியிருக்கும். அநேக மாக, இந்தியாவும் தனது தேவைகளுக்கு ஏற்ற ஒரு சுயாட் சியை அனுபவித்துக் கொண்டிருக்கும்: அதனுடைய புனித பூமியில் திட்டமிட்டுப் படுகொலைகள் நடக்கக் கூடிய கேவலமான காட்சியைப் பார்க்க நேரிடாது. இப்போதும் இதைச் சீர்திருத்தி அமைக்கக் காலம் பிந்திப்போய்விடவில்லை.

**சுதேசியிலிருந்து விலகக்கூடாது**

இப்போது சுதேசியின் கடைசிப் பிரிவுக்கு வருவோம். பொருளாதார வாழ்விலும் தொழில் துறையிலும் சுதேசியிலிருந்து நாம் விலகிச் சென்று அழிவை ஏற்படுத்திக் கொண்டோம். இன்று பொதுமக்களை வருத்தும் கொடிய வறுமைக்குப் பெரும்பாலும் இதுவே காரணம். இந்தியாவுக்கு வெளியேயிருந்து ஒரு பொருள் கூட இறக்குமதியாகாமல் இருந்தால், இன்று இந்தியா பாலும் தேனும் பெருக்கெடுத் தோடும் ஒரு நாடாக இருந்திருக்கும். ஆனால் அதுதான் இல்லை. நாமும் பேராசையுள்ளவர்களாய் இருந்தோம்; இங்கிலாந்தும் பேராசையுள்ள நாடாக இருந்தது. இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இடையே இருந்த தொடர்பு தவறான அடிப்படை கொண்டதாக இருந்தது என்பது தெளிவு. ஆனால் ஏதோ தவறுதலாக இந்தியாவில் இங்கிலாந்து இருக்க வில்லை. இந்திய மக்களுடைய நலனுக்காக இந்த நாட்டை ஆளு வதே தன்னுடைய கொள்கை என்று அது அறிவித்திருக் கிறது. இது உண்மையாக இருக்குமானால், இலங்காஷயர் ஒதுங் கிக் கொள்ள வேண்டும். சுதேசித் தத்துவம் ஒரு சரியான தத்து வமாக இருக்குமானால். இலங்காஷயர் தனக்கு எந்தவிதமான தீங் கும் ஏற்படுத்திக்கொள்ளாமல்—முதலில் வேண்டுமானால் அதற்கு

ஒரு அதிர்ச்சி ஏற்படலாம்—ஒதுங்கிக் கொள்ளலாம். சுதேசியென்பது பழிக்குப்பழி வாங்குவதற்காக மேற்கொள்ளப்பட்ட ஒரு பகிஷ்கார நடவடிக்கையல்ல என்பதுதான் எனது கருத்து. எல்லோரும் பின்பற்ற வேண்டிய ஒரு மதக் கோட்பாடு அது என்று நான் கருதுகிறேன். நான் ஒரு பொருளாதார நிபுணன் அல்ல; ஆனாலும் இங்கிலாந்து எளிதாக சுயதேவைப் பூர்த்தியுள்ள ஒரு நாடாக முடியுமென்றும், அது தனக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தானே உற்பத்தி செய்து கொள்ள முடியும் என்றும் எடுத்துக் கூறும் சில ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்திருக்கிறேன். இது முற்றிலும் கேலிக் கூத்தான ஒரு சித்தாந்தமாக இருக்கலாம். உலகிலேயே மிகப்பெரிய இறக்குமதியாளர்களில் இங்கிலாந்து ஒன்றாக இருப்பது ஒன்றே ஒரு வேளை இந்தச் சித்தாந்தம் பொய் என்பதற்குச் சிறந்த சான்றாக இருக்கும். ஆனால் இந்தியா தனக்காக வாழ முடிவதற்குள், இலங்காஷயருக்காகவோ அல்லது வேறு எந்த நாட்டிற்காகவோ வாழ முடியாது. அது தன்னுடைய தேவைகளுக்காகத் தனது எல்லைக்குள்ளேயே ஒவ்வொரு பொருளையும் உற்பத்தி செய்து கொள்ளவேண்டும்; உற்பத்தி செய்து கொள்ள நாம் உதவ வேண்டும். அப்போதுதான் அது தனக்குத்தானே சுயதேவைப் பூர்த்தி செய்து கொண்டு வாழமுடியும். பைத்தியக்காரத்தனமான, அழிவை ஏற்படுத்தக் கூடிய போட்டி யென்னும் புயலில் அது சிக்கிக் கொள்ள வேண்டியதில்லை. அப்படிச் சிக்கிக் கொள்ள வேண்டிய அவசியமுங் கிடையாது. இந்தப் போட்டிதான் உடன் பிறப்பாளர் கொலைக்கும் பொறாமைக்கும் மற்றும் பல தீங்குகளுக்கும் வழி கோலுகிறது. ஆனால் இந் நாட்டில் உள்ள பெரிய கோடீஸ்வரர்கள், உலகப் போட்டியில் இறங்குவதை யார் தடுக்க முடியும்? நிச்சயமாகச் சட்டத்தின் மூலம் இதைச் செய்ய முடியாது. பொதுமக்கள் கருத்தின் சக்தியும் சரியான கல்வி முறையும் இத்துறையில் பெருமளவு சாதிக்க முடியும். கைத்தறித் தொழிலானது சாகும் நிலையில் இருக்கிறது. என்னுடைய சுற்றுப் பிரயாணங்களின் போது எத்தனை நெசவாளர்களைப் பார்க்க முடியுமோ அத்தனை பேர்களைப் பார்க்க விசேஷ கவனமெடுத்துக் கொண்டேன். ஒரு காலத்தில் சீருடனும் சிறப்புடனும் நடந்து கொண்டு வந்த இந்தத் தொழிலை அவர்கள் எவ்வாறு இழந்து விட்டார்கள், எத்தனைக் குடும்பங்கள் இத் தொழிலிலிருந்து ஓய்வு பெற்று விட்டன என்பதைக் கண்டபோது எனக்குத் துக்கம் தாளவில்லை.

### அபத்தம் நிறைந்த நாடா ?

நாம் சுதேசித் தத்துவத்தைக் கடைப்பிடிப்பதாக இருந்தால், நம்முடைய தேவைகளை அளிக்கக்கூடிய அண்டை அயலார்களைக் கண்டுபிடிக்க வேண்டும். இது உங்களுடைய கடமையும் என்னுடைய கடமையுமாகும். அவர்களுக்கு எவ்வாறு இதைச் செய்வது என்று தெரியாவிட்டால் நாம் கற்பிக்க வேண்டும். நல்ல வேலை தேடக்கூடிய நிலையில் உள்ள அண்டை அயலார்கள் இருக்கிறார்கள் என்ற கருத்திலேயே இதைக் கூறுகிறேன். அப்போது இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கிராமமும் கிட்டத்தட்ட சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடிய, தனக்கு வேண்டியவைகளெல்லாம் தன்னுள் அடக்கிய, ஒன்றாக இருக்கும். அதில் உற்பத்தியாக முடியாத அவசியமான பொருள்களைத் தான் பிற கிராமங்களுடன் அது பரிமாறிக் கொள்ளும். இது அபத்தமாகத் தோன்றலாம். நல்லது, இந்தியாவே ஒரு அபத்தம் நிறைந்த நாடுதானே? அன்பு நிறைந்த முகமதியன் ஒருவன், குடிப்பதற்குச் சுத்தமான தண்ணீர் கொடுக்க முன் வரும்போது, அதை மறுத்துவிட்டு, ஒருவன் தனது தொண்டையை வரட்சியாக வைத்துக் கொண்டிருப்பது அபத்தந்தான். ஆயினும் ஆயிரக்கணக்கான இந்துக்கள் தண்ணீர்த் தாகத்தினால் சாவார்களே தவிர, ஒரு முகமதியன் வீட்டில் தண்ணீர் வாங்கிக் குடிக்க மாட்டார்கள். இந்தியாவில் உற்பத்தியான துணிகளையே உடுத்தவேண்டும் என்றும் இந்தியாவில் விளைவிக்கப்பட்ட உணவையே உண்ண வேண்டும் என்றும் தங்கள் மதம் கூறுகிறது என்று இதே அபத்தமான மனிதர்கள் உணர்ந்துவிட்டார்களானால், அவர்களே மற்ற துணிகளை உடுக்கவும் பிற உணவை உண்ணவும் மறுத்து விடமுடியும்.

### பாதுகாப்பு வரி

உயர்ந்த மக்கள் வழியையே சாதாரண மக்கள் பின்பற்றுவார்கள்; பகவத் கீதையில் உள்ள ஒரு ஸ்லோகம் சுருக்கமாக இவ்வாறு பொருள்படும். சமுதாயத்தில் சிந்திக்கும் ஆற்றல் படைத்தவர்கள் சுதேசிப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்களானால் — அது ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு எவ்வளவுதான் வசதிக் குறைவாக இருந்தாலும் — தீங்கை அகற்றிவிடும். வாழ்க்கையின் எந்தத் துறையிலும் சட்டத்தின் மூலம் குறுக்கிடுவதை நான் வெறுக்கிறேன். ரொம்ப உயர்ந்த நிலையில் கூட, சட்டம் சற்றுக் குறைந்த தீங்கு பயக்கக் கூடியதாக இருக்குமே தவிர வேறொன்றும் இல்லை. ஆனால் நானே வெளி நாட்டுச்

சரக்குகளுக்குப் பாதுகாப்பு வரி விதிப்பதைச் சகித்துக் கொள்வேன், இல்லை வரவேற்பேன். இல்லை, இல்லை அதற்காக வாதாடுவேன். பிரிட்டிஷ் குடியேற்ற நாடாகிய நேட்டால், மற்றொரு பிரிட்டிஷ் குடியேற்றப் பகுதியான மௌரீஷியசிலிருந்து வந்து சர்க்கரைக்கு வரி விதித்ததன் மூலம் தன்னுடைய சர்க்கரைக்குப் பாதுகாப்பு அளித்தது. ஆனால் இங்கிலாந்தானது இந்தியாவின் மீது சுதந்திர வணிகத்தை வலுக் கட்டாயமாகப் புகுத்தி இந்தியாவுக்குத் தீங்கு செய்து விட்டது. இது இங்கிலாந்துக்கு உணவாக இருந்திருக்கலாம்; ஆனால் நம்முடைய நாட்டுக்கு விஷம்.

## சுதேசி ஒரு மதக் கோட்பாடு

எப்படியும் இந்தியா தனது பொருளாதார வாழ்வில் சுதேசியத்தை ஏற்க முடியாது என்று அடிக்கடி வலியுறுத்தப்பட்டு வருகிறது. இந்த ஆட்சேபணையைக் கூறுபவர்கள், சுதேசியை ஒரு வாழ்க்கை நியதியாகக் கருதுவதில்லை. அவர்களைப் பொறுத்தவரை இது வெறும் தேசிய முயற்சிதான் — தன்னல மறுப்புச் செய்ய வேண்டியிருந்தால் மேற்கொள்ளப்படத் தகாத முயற்சி. ஆனால் நான் இங்கு விவரித்துள்ளபடி, சுதேசி என்பது ஒரு சமயக் கட்டுப்பாடு. தனிப்பட்டவர்களுக்கு உடல் அளவில் எவ்வளவு வசதிக் குறைவை ஏற்படுத்தினாலும் மேற்கொள்ள வேண்டிய கட்டுப்பாடு. இதனுடைய மந்திர சக்தியின் கீழ், இந்தியாவில் உற்பத்தியாகாதது என்பதற்காக ஒரு குண்டூசி அல்லது, குத்தூசி கிடைக்காமல் இருப்பது எவ்வித அதிர்ச்சியையும் ஏற்படுத்த வேண்டியதில்லை. ஒரு சுதேசியவாதி, தான் இன்று அவசியமெனக் கருதும் நூற்றுக்கணக்கான பொருள்கள் இல்லாமலே வாழக் கற்றுக் கொள்வான். ஆனால், நடைமுறைச் சாத்தியமற்றவைகளை யெல்லாம் கூறி, தமது மனத்தில் சுதேசிக்கு இடமளிக்காமல் செய்பவர்கள், விடா முயற்சியின் மூலம் அடைய வேண்டிய ஒரு இலட்சியமே சுதேசி என்பதை மறந்து விடுகிறார்கள். ஒரு சில குறிப்பிட்ட பொருள்களுக்காக மட்டும் சுதேசியைக் கடைப்பிடிப்பது என்று வரையறுத்துக் கொண்டாலும்—அதாவது இந்தியாவில் வாங்கமுடியாத பொருள்களைத் தற்காலிகமாக உபயோகப்படுத்திக் கொள்வது என்று வைத்துக் கொண்டாலும்—நாம் சுதேசி என்னும் இலட்சியத்தை நோக்கிச் சென்றவர்களேயாவோம்.

## நோக்கமும் வாழ்க்கையும்

சுதேசிக்கு எதிராகக் கூறப்படும் மற்றொரு ஆட்சேபணையை நான் இங்கு ஆராய வேண்டியிருக்கிறது. சுதேசி மிகவும் சுயநல

மான ஒரு தத்துவம், நாகரிகமான தார்மிகக் கோட்பாட்டில் அதற்கு எந்தவித இடமுமேயில்லை என்று சில எதிர்ப்பாளர்கள் கூறுகிறார்கள். இவர்கள் கருத்துப்படி, சுதேசியத்தை அனுஷ்டிப்பது காட்டுமிராண்டித் தனத்துக்குத் திரும்பிச் செல்வதாகும். இந்தக் கருத்தை விரிவாக ஆராய்வதில் நான் இறங்க முடியாது. ஆனால் சுதேசியம் தான் அடக்கத்துக்கும் அன்புக்கும் ஏற்ற ஒரே தத்துவமாகும். என்னுடைய குடும்பத்துக்கே என்னால் சேவை செய்யமுடியாத போது இந்தியா முழுவதற்கும் சேவை செய்ய முன்வருவது அதிகப் பிரசங்கித்தனமாகும். இதைக் காட்டிலும் என்னுடைய குடும்பத்தின் விஷயத்தில் எனது முயற்சியை யெல்லாம் ஒருமுகப்படுத்தி, அவைகளின் மூலம் இந்தத் தேசம் முழுவதற்குமே, ஏன், மனித வர்க்கம் முழுவதற்குமே சேவை செய்வதாகக் கருதிக் கொள்வது சிறந்ததாக இருக்கும். இதுதான் அடக்கம், இதுதான் அன்பு. நமது செயலின் தன்மை நம்முடைய நோக்கத்தைப் பொறுத்தே இருக்கிறது. மற்றவர்களுக்கு என்ன கஷ்டங்களை விளைவிக்கிறேன் என்பதை எண்ணிப் பார்க்காது, நான் எனது குடும்பத்துக்குப் பாடுபடலாம். உதாரணமாக, மக்களிடமிருந்து பணம் பிடுங்குவதற்கு இடமளிக்கக் கூடிய ஒரு வேலையை நான் ஏற்கலாம். அதன் மூலம் நான் பணக்காரனாகிக் கொள்கிறேன். குடும்பத்தின் நியாய விரோதமான பல கோரிக்கைகளைப் பூர்த்தி செய்கிறேன். ஆனால், உண்மையில் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் நான் குடும்பத்துக்கும் சேவை செய்தவனாகமாட்டேன். நாட்டிற்கும் சேவை செய்தவனாகமாட்டேன். இதற்குப் பதிலாக, கடவுள் எனக்குக் காலையும் கையையும் கொடுத்திருப்பது என்னுடைய வாழ்வுக்கும் என்னை நம்பியிருப்பவர்களுடைய வாழ்வுக்கும் உழைப்பதற்காகவே யென்பதை நான் ஒப்புக்கொள்ளலாம். அப்போது, என்னுடைய வாழ்க்கையையும் நான் நேரடியாக யாருடன் தொடர்பு கொள்ளமுடியுமோ அவர்களுடைய வாழ்க்கையையும் உடனடியாக எளிமைப் படுத்தியவனாவேன். பிறருக்குத் தீங்கு செய்யாமல் எனது குடும்பத்திற்கு உழைத்தவனாவேன். ஒவ்வொருவரும் இந்த வாழ்க்கை வழியைக் கடைப்பிடிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது ஒரு இலட்சிய சமுதாயம் தானாகவே உருவாகிவிடும். ஆனால் எல்லோருமே ஒரே சமயத்தில் இந்த நிலையை அடைந்து விடமாட்டார்கள். இந்த உண்மையை உணர்ந்து அதை நடைமுறைக்குக் கொண்டுவர முயலும் நம்மைப் போன்றவர்கள், இந்த மகிழ்ச்சிகரமான நாளை முன் கூட்டியே தெளிவாகத் தெரிந்து அது வருவதை வேகப்

படுத்தலாம். இந்த வாழ்க்கைத் திட்டத்தின்படி, வேறுநாடுகளை யெல்லாம் ஒதுக்கிவிட்டு இந்தியாவுக்கு மட்டும்தான் பாடுபடுவதாகத் தோன்றும். ஆனால் இதன்மூலம் நான் வேறு எந்த நாட்டிற்கும் தீங்கு செய்யவில்லை. என்னுடைய தேசபக்தி தனித்து ஒதுங்கியதாகவும் அதே சமயம் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியதாகவும் இருக்கும். மிகுந்த அடக்க மனோபாவத்துடன் எனது கவனத்தை என்னுடைய தாய் நாட்டுடன் வரையறுத்து நிறுத்திக் கொள்கிறேன். அந்த அளவில், அது தனித்து ஒதுங்கிய பிரிவுணர்ச்சியுள்ளது. ஆனால், இதற்காக நான் செய்யும் சேவை போட்டி மனோபாவமோ விரோத உணர்ச்சியோ கொண்டதாக இராததால், பிறருடைய நலனையும் தன்னுள் அடக்கியதாக இருக்கிறது. "அண்டை வீட்டுக்காரர் சொத்துக்குத் தீங்குண்டாகுமாறு உன் சொத்தைப் பயன்படுத்தாதே" என்பது ஒரு சட்ட சம்பந்தமான முதுமொழி மட்டுமல்ல, அது ஒரு மாபெரும் வாழ்க்கைத் தத்துவமுமாகும். அஹிம்சை அல்லது அன்பை நல்ல முறையில் அனுஷ்டிப்பதற்கான ஒரு திறவுகோல் அது. [1]

### குரோதம் கூடாது

மற்ற நல்ல காரியங்களைப் போலவே சுதேசியையும் போலி வணக்கத்திற்குரிய பொருளாக்கிவிட்டால், அதற்குச் சமாதி கட்டியதாகிவிடும். நாம் எச்சரிக்கையாக இருந்து தவிர்க்க வேண்டிய அபாயம் இது. வெளிநாட்டுப் பொருள்கள் என்பதற்காக மட்டும் அவைகளை ஏற்க மறுப்பதும், ஒருநாடு எந்தப் பொருள்களின் உற்பத்திக்குத் தகுதியற்றதாக இருக்கிறதோ அந்தப் பொருள்களை உற்பத்தி செய்வதற்காக நேரத்தையும் பணத்தையும் வீணாக்குவதும் அறிவீனமாகிவிடும்; சுதேசி உணர்ச்சிக்கும் இது விரோதமானதாகும். உண்மையான சுதேசி பக்தன் ஒரு வெளிநாட்டான்மீது எந்த விதமான குரோத உணர்ச்சியும் கொள்ளமாட்டான். பூமியில் யார்மீதும் அவனுக்கு விரோத எண்ணம் இருக்காது. சுதேசி என்பது வெறுப்புணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட பண்பல்ல. பரிசுத்தமான அஹிம்சையை அதாவது, அன்பை மூலமாகக் கொண்ட சுயநலமற்ற சேவைத் தத்துவமே அது. [2]

அத்தியாயம் 11

# சுயதேவைப் பூர்த்தியும் கூட்டுறவும்

### கூட்டுறவும் இயந்திரமும்

நான் மனதில் கற்பனை செய்துள்ள சமுதாய அமைப்புக்கு அடிப்படையானவை சத்தியமும் அஹிம்சையும் ஆகும். நாம் சமூகத்திற்கு ஒரு சுமையாக இருக்கக் கூடாதென்பது நம்முடைய முதற்கடமையாகும். அதாவது நாம், நம்மையே சார்ந்தவர்களாய் இருக்க வேண்டும். இந்தக் கண்ணேட்டத்துடன் பார்த்தால், சுய தேவைப் பூர்த்திசெய்து கொள்வதே ஒருவகைச் சேவைதான். நாம் சுயதேவைப் பூர்த்தியுள்ளவர்களானபின், நம்முடைய ஓய்வு நேரத்தைப் பிறருடைய சேவைக்காகப் பயன் படுத்துவோம். எல்லோருமே சுயதேவைப் பூர்த்தியுள்ளவர்களாய் விட்டால், யாரும் கஷ்டவான்களாக இருக்க மாட்டார்கள். இப்படிப்பட்ட ஒரு நிலைமையில், யாருக்கும் சேவை செய்ய வேண்டுமென்ற அவசியமே இல்லை. ஆனல் நாம் இன்னும் அந்தக் கட்டத்தை அடையவில்லை. ஆகையால், சமூகத் தொண்டைப்பற்றி எண்ண வேண்டியதிருக்கிறது. நாம் சுயதேவைப் பூர்த்தி அடைவதில் பூரணவெற்றி அடைந்துவிட்ட பின்புகூட, மனிதன் ஒரு சமூகப் பிராணியாக இருப்பதால், ஏதாவது ஒருவகையில் சேவையை ஏற்கத்தான் வேண்டிவரும். அதாவது மனிதன் எந்த அளவு தன்னைச் சார்ந்திருக்கிருனே அந்த அளவு பிறரையும் சார்ந்திருக்கிருன். சமூகத்தை நல்ல ஒழுங்கான முறையில் வைத்திருப்பதற்கு ஒருவரையொருவர் சார்ந்திருப்பது அவசியமாகும்போது அது சார்பு ஆகாது, கூட்டுறவு ஆகிவிடும். கூட்டுறவில் இனிமை இருக்கிறது. கூட்டுறவாக வாழ்பவர்களில் யாரும் பலமானவர்கள் அல்லது பலவீனமானவர்கள் என்ற பேச்சுக்கே இடமில்லை. ஒவ்வொருவரும் பிறருக்குச் சமம்தான். பிறரைச் சார்ந்திருப்பதில், நிராதரவான நிலை இருக்கிறது. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எந்த அளவுக்குத் தன்னைச் சார்ந்தவர்களோ அந்த அளவு பிறரையும் சார்ந்தவர்களாவர். அதில் என்னுடையது அல்லது உங்களுடையது என்ற பேச்சுக்கே இடமில்லை. எல்லோருமே கூட்டுறவாளர்கள்தான். அதே போன்று ஒரு சமூகத்தை எடுத்துக்கொண்டால், அல்லது ஒரு தேசத்தையோ அல்லது மனிதவர்க்கம் முழுவதையுமோ எடுத்துக்கொண்

டால், எல்லோருமே கூட்டுறவாளர்கள்தான். இப்படிப்பட்ட ''கூட்டுறவுச் சித்திரம்'' ஒன்றை நாம் கற்பனைசெய்ய முடியு மானால், ஜீவனற்ற இயந்திரத்திலிருந்து நாம் எந்தவிதமான ஆதரவையும் பெறவேண்டிய அவசியம் இல்லை யென்பதைக் காணலாம். இயந்திரத்தினால் மிக அதிகமான உதவியைப் பெறு வதற்குப் பதிலாக, மிகக் குறைந்த பயனைப் பெறுவோம். இதில் தான் சமூகத்தின் உண்மையான பாதுகாப்பும் பந்தோபஸ்தும் இருக்கின்றன.[1]

### கிராம சுயதேவைப் பூர்த்தி

உணவு, உடை, மற்ற அவசியமான பொருள்கள் ஆகியவை களின் விஷயத்தில் கிராமங்கள் சுயதேவைப் பூர்த்தி உள்ளவை களாக இருக்கவேண்டும். சுயதேவைப் பூர்த்தியைப்பற்றி என்னு டைய கருத்து இதுதான். ஆனால் இதில்கூட அளவுக்குமீறி நாம் போய்விட முடியும். ஆகையால் என்னுடைய கருத்தை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவேண்டும். சுய தேவைப் பூர்த்தியென்பது குறுகிய நோக்கமல்ல. சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்வதென்பது, முற்றிலும் நமக்கு வேண்டிய பொருள் களையெல்லாம் நாமே வைத்துக் கொள்வது என்பதாகாது. எந்த விதமான சூழ்நிலையிலும் நமக்குத் தேவையான பொருள்கள் எல் லாவற்றையும் நாம் உற்பத்திசெய்து கொள்ளமுடியாது. ஆகவே, நம்முடைய இலட்சியம் பூரண சுயதேவைப் பூர்த்தியென்றாலும், நம்மால் கிராமத்தில் உற்பத்தி செய்துகொள்ள முடியாத பொருள் களை வெளியிலிருந்து பெறவேண்டும். உற்பத்திசெய்ய முடிந்த பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்தால்தான் அவைகளைக் கொடுத்து, நம்மால் உற்பத்திசெய்ய முடியாத பொருள்களை வாங்க முடியும்.[2]

### சிறந்த இலட்சியம்

எவ்வாறு ஒவ்வொரு குடும்பமும் சொந்தமாக நிலம் வைத் துக்கொண்டு, தனக்கு வேண்டிய உணவுத் தான்யங்களைப் பயி ரிட்டு, சமைத்து, உண்பது சிறந்த இலட்சியமோ அதேபோன்று, ஒவ்வொரு குடும்பமும் தனக்கு வேண்டிய பருத்தியை விளைவித்து நூற்று, நெய்து, உடுத்திக்கொள்வதும் சிறந்த இலட்சியமாகும்.[3]

### சுய பலம்

உணவைப் பொறுத்தவரை, இந்தியாவில் நிறையச் செழிப் பான நிலம் இருக்கிறது, போதுமான தண்ணீர் இருக்கிறது; மனித சக்திக்குப் பஞ்சம் இல்லை... பொது மக்களுக்கு, சுய

பலத்தை நம்பியிருக்குமாறு நாம் பயிற்றுவிக்க வேண்டும். தங்களுடைய சொந்த பலத்திலேயே நிற்கவேண்டும் என்பதை அவர்கள் ஒருமுறை உணர்ந்து விட்டார்களென்றால், சூழ்நிலையே புத்துயிர் பெற்றுவிடும்.

**கதர் சுய உற்பத்தி**

இந்தியாவுக்கு எவ்வளவு பருத்தி தேவையோ அதைக் காட்டிலும் அதிகமாக இங்கு உற்பத்தியாகிறது. மக்கள் தாங்களே நூற்று, ஆடையை நெய்துகொள்ளவேண்டும். தங்களுக்கு வேண்டிய கதரைத் தாங்களே உற்பத்திசெய்து கொள்ளவேண்டும். ஒரு தடவை தங்களுக்கு வேண்டிய உணவையும் உடையையும் உற்பத்தி செய்து கொள்ளத் தொடங்கிவிட்டார்களென்றால், அது அவர்கள் கண்ணோட்டம் முழுவதையுமே மாற்றிவிடும்.[4]

**சுய தேவைப் பூர்த்தி**

சுய தேவைப் பூர்த்தியென்பது ஒரு பெரிய சொல்...... கிராமங்கள் தங்களுடைய ஜீவாதாரமான தேவைகளுக்கு சுயதேவைப் பூர்த்தியுள்ளவைகளாக வேண்டும். திருடர்கள், கொள்ளைக்காரர்கள் ஆகியோரிடமிருந்துவரும் வெளி அபாயம், நோயாலும் கருத்து வேறுபாடுகளாலும் ஏற்படும் உள் குழப்பம் ஆகியவற்றிலிருந்து தங்களைப் பாதுகாப்பதற்குத் தங்களையே நம்பியிருக்கவேண்டும். இவ்வாறு இருக்காவிட்டால், கிராமங்கள் அழிந்து போய்விடும். ஆகையால் சுய தேவைப் பூர்த்தி யென்பதற்குப் பருத்திபயிரிடுதல், உணவுப் பயிர்களும், கால்நடைகளுக்கு வேண்டிய தீனியும் உற்பத்திசெய்தல் என்பது பொருளாகும். இதைச் செய்தாலொழிய, பட்டினிதான் மீதமாக இருக்கும். தன்னைத் தானே சார்ந்திருத்தல் என்பதற்குக் கூட்டு வாழ்க்கை அமைப்பு என்பது பொருளாகும்—அதாவது, கிராமங்களில் உள்ள அறிவாளிகளைக் கொண்டு மத்தியஸ்தம் செய்வதன்மூலம் உள் கருத்து வேறுபாடுகளை அகற்றுதல்—கிராமத் துப்புரவு, சாதாரணமாக வரக்கூடிய நோய்கள் ஆகியவைகளின் விஷயத்தில் கூட்டாகக் கவனம் செலுத்துவதன்மூலம் சுத்தத்தைப் பாதுகாத்தல், இவைகளுக்குத் தனிப்பட்டவர்கள் முயற்சி போதாது. திருடர்கள், கொள்ளைக்காரர்கள் ஆகியோர் ஜம்பம் தங்கள் கிராமங்களில் பலிக்காது என்பதைக் கூட்டு முயற்சியின்மூலம் நிரூபித்து, கிராமவாசிகள் தங்கள் பலத்தை உணரச்செய்யவேண்டும். கூட்டாக அஹிம்சையைக் கடைப்பிடிப்பதன்மூலம் இதைச் சிறந்த முறையில் செய்யமுடியும். ஆனால் அஹிம்சைக்கான வழி ஊழியர்களுக்குத் தெளிவாகாவிட்டால், இம்சையை அடிப்படை

யாகக் கொண்ட கூட்டுப் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்ய அவர்கள் தயங்க மாட்டார்கள். [5]

## கதரில் தன்னிறைவு

நூல் நூற்பவர்களே பருத்தியை விளைவிக்கவேண்டும். அல்லது குறைந்தது ஒவ்வொரு கிராமமுமாவது விளைவிக்கவேண்டும். இல்லையேல், கதரில் சுயதேவைப் பூர்த்தியென்பது ஒரு போதும் வெற்றியடையாது. கதரில் சுயதேவைப் பூர்த்தி பெறுவதற்காகவாவது, பருத்தி விளைச்சலைப் பரவல் மயமாக்கவேண்டும் என்றுகிறது. இதற்கு, நாம் எங்கெந்த கிராமங்களில் சேவை செய்கிறோமோ அந்த கிராமங்களைப்பற்றிய புள்ளி விவரங்கள் நமக்குத் தேவையாக இருக்கும். ஏனென்றால் நூல் நூற்பவர் ஒவ்வொருவருக்குமே பருத்தி பயிரிடுவதற்கு எவ்வளவு குறைச்சலாகவும் நிலம் இருக்கும் என்று சொல்ல முடியாது. கதரில் சுயதேவைப் பூர்த்தி என்ற தத்துவத்தை ஒப்புக்கொண்டால்தான், அகில இந்திய நூல் நூற்போர் சங்கம் இருப்பது நியாயமாகும். ஆனால் இத்துறையில் குறிப்பிடத்தக்க அளவு அது இன்னும் முயலவில்லை. [6]

## அடுத்த வீட்டுச் சேவை

கடவுளுடைய படைப்பில் எது நமக்கு மிகவும் அருகில் இருக்கிறதோ, எது நமக்கு மிக நன்றாகத் தெரியுமோ அதற்குத்தான் நாம் சேவை செய்யமுடியும். நமது அடுத்த வீட்டுக்காரரிடமிருந்து நாம் நமது சேவையைத் தொடங்கமுடியும். நம்முடைய முற்றம் மட்டும் சுத்தமாக இருந்தால் போதாது; அடுத்த வீட்டுக்காரர் முற்றமும் சுத்தமாக இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். நம்முடைய குடும்பத்திற்குச் சேவைசெய்ய வேண்டியதுதான். ஆனால் குடும்பத்திற்காகக் கிராமத்தின் நலனைப் பலியிடக்கூடாது. கிராமத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதிலேயே நம் சொந்த கௌரவமும் அடங்கி இருக்கிறது. ஆனால் நம்மில் ஒவ்வொருவரும் நமக்குள்ள வரம்பைப் புரிந்துகொள்ள வேண்டும். நாம் வாழக்கூடிய உலகத்தைப்பற்றி எந்த அளவு அறிந்து கொண்டிருக்கிறோமோ அந்த அளவுக்குத்தான் நமது சேவைத்திறன் அமைகிறது. இதை இன்னும் எளியமுறையில் விளக்குகிறேன். நம்முடைய அண்டை வீட்டுக்காரர் நலனை, நம்முடைய நலனைவிட அதிகமாக எண்ணவேண்டும். நம்முடைய முற்றத்திலுள்ள குப்பையை அடுத்த வீட்டு முற்றத்தில் கொட்டுவது மனிதவர்க்கத்துக்கு நாம் செய்யும் சேவையாக இராது, அதற்குப் பதிலாகக் கேடாகத்தான் இருக்கும். நம்முடைய பக்கத்து வீட்டுக்காரருக்

குச் சேவை செய்வதிலிருந்து நாம் நமது சேவையைத் தொடங்குவோம்.[7]

### கூட்டுறவு விவசாயம்

விவசாயத்தைப் பொறுத்தவரை, நிலம் மேலும் துண்டுபடாமல் தடுக்க நாம் நம்மால் இயன்றதைச் செய்ய வேண்டும். கூட்டுறவு விவசாயத்தில் ஈடுபடுமாறு மக்களை ஊக்குவிக்க வேண்டும்.[8]

### இதைமட்டும் செய்தால் ?

ஒரு கிராமமானது கூட்டுறவாகத் தனக்கு வேண்டிய பஞ்சை விளைவிக்கலாம். இதை மட்டும் நாம் செய்தால், விலையிலோ உழைப்பிலோ ஸ்தலத்தில் உற்பத்தியான துணியைக் காட்டிலும் இறக்குமதியான எந்தத் துணியும் சிறந்ததாய் இருக்கமுடியாது என்பதை எளிதாகக் காணலாம். நமது சக்தியை மிகவும் பாதுகாக்க இது உதவுகிறது.[9]

### பிறர் சார்பு

மிருகங்களிடமிருந்து மனிதனை வேறுபடுத்துவது அவனுடைய சமூக இயல்புதான். இதையும் நாம் மறந்துவிடக்கூடாது. சுதந்திரமாக இருப்பது மனிதனுடைய உரிமை, ஆனால் அதே அளவு பிறரைச் சார்ந்திருக்க வேண்டியதும் அவனுடைய கடமையாகிறது. 'நான் யாரையும் சாரமாட்டேன். என்னை மட்டுமே சார்ந்தவனாக இருப்பேன்' என்று இறுமாப்புள்ள ஒரு மனிதன் தான் சொல்லமுடியும்....துணித் தேவையைப் பொறுத்தவரை, கிராமவாசிகள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்யக் கூடியவாறு நாம் செய்ய முடியாமற் போகலாம். ஆனால், கூட்டாக ஒவ்வொரு கிராமமும் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாகுமாறு சீரமைப்பது சாத்தியமே.[10]

### கூட்டுறவு முயற்சி

கடந்த ஆண்டில் சென்னையில் நான் ஒரு கூட்டுறவு சங்கத்தில் பேசினேன். அப்போது, கையால் நூல் நூற்பதைப் பரப்புவதன்மூலம் உலகம் இதுவரை அறிந்த மிகப் பெரிய கூட்டுறவு சங்கத்தை நிறுவ முயற்சி செய்து கொண்டிருப்பதாகச் சொன்னேன். இவ்வாறு நான் உரிமை கொண்டாடியது நியாயமற்றதாகாது. வேண்டுமானால், அது எனது ஆசையை வெளிக்காண்பிப்பதாக இருக்கலாம். ஆனால் அதே சமயம் இது பொய்யல்ல. ஏனென்றால், கையால் நூல் நூற்பதில் கோடிக்கணக்கான

மக்கள் ஒத்துழைத்துத்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால், அதன் நோக்கத்தை நிறைவேற்ற முடியாது.

### நூற்புக் கேந்திரம் கூட்டுறவு நிலையம்

ஒரு நல்ல கேந்திரம் எல்வாறு வேலைசெய்கிறது என்பதைப் பார்ப்போம். மத்திய தலைமை அலுவலகத்தில் நூற்போருக்கு வேண்டிய பருத்தி சேகரிக்கப்படுகிறது. பல் வேறு கேந்திரங்களிலும் இந்தப் பருத்தி அறைக்கப்படுகிறது. இதன் பின் அது பட்டை போடுபவர்களிடம் கொடுக்கப்படுகிறது. அவர்கள் அதைப் பட்டைகளாகக் கொடுக்கிறார்கள். இப்போது இப்பஞ்சு நூற்போரிடம் அளிப்பதற்குத் தகுதியானதாகிவிட்டது. நூற்பவர்களோ தங்களுடைய நூலை ஒவ்வொரு வாரமும் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, புதுப்பட்டைகளையும் கூலியையும் பெற்றுச் செல்கிறார்கள். இவ்வாறு கிடைத்த நூல், நெய்வதற்காக நெசவாளர்களிடம் அளிக்கப்படுகிறது. அவர்கள் நூலை வாங்கிக் கொண்டுபோய் நெய்து கதராகக் கொடுக்கிறார்கள். இந்தக் கதரை இப்போது நெசவாளர்களுக்கு—பொது மக்களுக்கு—விற்கவேண்டும். இவ்வாறாக, மத்திய அலுவலகமானது ஓயாது மக்களுடன் தொடர்பு கொள்ளவேண்டியிருக்கிறது. சாதி, மத, நிற வேறுபாடில்லாமல் ஏராளமான மக்களுடன் உயிரோட்டமுள்ள தொடர்பு கொள்ளவேண்டும். ஏனென்றால் இலாபத் தொகையைப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்பது கேந்திரத்துக்கு இல்லை. தன்னைப்பற்றிய சுயநலம் இல்லை. மிகவும் ஏழையான மக்களுடைய நலனைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்புத்தான் அதற்கு இருக்கிறது. இந்தக் கேந்திரம் பயனுள்ளதாக இருக்க வேண்டுமானால், ஒவ்வொரு வகையிலும் பரிசுத்தமாக இருக்க வேண்டும். இந்தப் பரந்த ஸ்தாபனத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் அதற்கும் உள்ள தொடர்பு, முற்றிலும் ஆன்மிகமானது அல்லது தார்மிகமானது. ஆகையால் ஒரு நூற்புக் கேந்திரம் என்பது ஒரு கூட்டுறவு சங்கம். பருத்தி அறைப்பவர்கள், பட்டை போடுபவர்கள், நூற்பவர்கள், நெசவாளர்கள், கொள் முதல் செய்பவர்கள் ஆகிய எல்லோருமே அதன் அங்கத்தினர்கள். இவர்கள் எல்லோரும் ஒரு பொதுப் பிணைப்போடு, பரஸ்பர நல்லெண்ணத்தோடு, சேவா உணர்ச்சியோடு சேர்ந்திருக்கிறார்கள். [11]

### நாணயம் முக்கியம்

கூட்டுறவு முயற்சி வெற்றிகரமாக நடைபெற வேண்டுமானால், அங்கத்தினர்கள் நாணயமானவர்களாக இருக்கவேண்டும்.

கூட்டுறவின் சிறப்பை அறிந்திருக்க வேண்டும். கூட்டுறவு முயற்சிக்குத் திட்டவட்டமான முற்போக்கான இலட்சியம் இருக்கவேண்டும். மிக அதிகமான வட்டி வாங்கி, அதிகப் பணம் சேர்க்கவேண்டும் என்பதற்காகக் கூட்டுறவாகப் பணம் வைத்திருப்பது தவருன இலட்சியமாகும். ஆனல் கூட்டுறவு விவசாயப் பண்ணையோ அல்லது பால் பண்ணையோ அமைப்பது நிச்சயமாக நல்ல இலட்சியம்தான். அது தேசத்தின் நலனை வளர்க்கும். இப்படிப்பட்ட உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டே போகலாம். இந்த எண்ணற்ற சங்கங்கள் எதற்காகத்தான் இருக்கின்றன என்பது எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. இந்தச் சங்கங்களில் தங்கள் வேலையை அறிந்த நாணயமான இன்ஸ்பெக்டர்கள் இருக்கிருர்களா? நிருவாகம் செய்பவர்கள் நாணயமில்லாமல் இருக்கும்போதும் இலட்சியம் நல்ல இலட்சியமாக இல்லாதபோதும் இப்படிப்பட்ட இயக்கங்கள் படுமோசமான விளைவுகளை ஏற்படுத்தியிருக்கின்றன; அடிக்கடி ஏற்படுத்தி யிருக்கின்றன என்றும் சொல்லலாம்.[12]

அத்தியாயம் 12

# பஞ்சாயத்து ராஜ்யம்

## விடுதலைக்கு முந்திய பஞ்சாயத்துகள்

### முறை அவசியம்

'பஞ்சாயத்து' என்ற சொல்லுக்குப் புராதனச் சிறப்பு உண்டு. அது ஒரு நல்ல சொல். கிராமத்தாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து பேரைக் கொண்ட ஒரு சபை என்பது தான் அந்தச் சொல்லின் பொருள். இந்தியாவில் இருந்த எண்ணற்ற கிராமக் குடியரசுகளில் நடந்து வந்த ஆட்சி முறையையே அது குறிக்கிறது. ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கமே, ஈவிரக்கமின்றி, ஒரு தம்பிடியும் விடாது வரி வசூல் செய்தது. அந்த முறையால் இந்தக் கிராமக் குடியரசுகளைக் கிட்டத்தட்ட அழித்துவிட்டது. இந்த வரி வசூல் முறையால் ஏற்பட்ட அதிர்ச்சியை அக்குடியரசுகளால் தாங்க முடியவில்லை. இந்தப் பழைய முறைக்கு உயிர் அளிக்க இப்போது காங்கிரஸ்காரர்கள் முயலுகின்றனர்; பரிபக்குவமற்ற ஒரு முயற்சி செய்கின்றனர்; கிராமத்திலுள்ள வயதான பெரியவர்களுக்கு சிவில், கிரிமினல் அதிகாரங்கள் வழங்க முயலுகின்றனர். 1921-இல் முதன் முதலாக இந்த முயற்சி செய்யப்பட்டது. அது தோல்வியடைந்தது. மீண்டும் அது முயற்சி செய்யப்படுகிறது. விஞ்ஞான ரீதியாக இல்லாவிட்டாலும் முறையாகவும் கண்ணியமாகவும் செய்யப்படாவிட்டால் அது தோல்வியடைவது உறுதி.

### கிரிமினல் அதிகாரமா?

"உத்திரப்பிரதேசத்தில் உள்ள சில கிராமங்களில் கற்பழித்தல் போன்ற கிரிமினல் வழக்குகளைக் கூடப் பஞ்சாயத்துகள் (என்று கூறப்படுபவை) விசாரித்துத் தீர்ப்புக் கூறியுள்ளன" என்று நான் நைனிடால் சென்றிருந்தபோது என்னிடம் கூறப்பட்டது. நீதி அளிக்கும் வகை முறை தெரியாத பஞ்சாயத்துகளாலும் பாரபட்சமான பஞ்சாயத்துகளாலும் கூறப்பட்ட சில விநோதமான தீர்ப்புக்களையும் நான் கேள்விப்பட்டேன். இது உண்மையானால் மிகவும் மோசமாகும். ஒழுங்கற்ற முறையில் செயல்படும் பஞ்சாயத்துகள் தங்கள் சுமையைத் தாங்களே தாங்க முடியாது நொறுங்கிவிடும். ஆகையால் கிராம ஊழியர்

கள் பின்பற்றுவதற்குக் கீழ்க்கண்ட விதிமுறைகளைக் கூறு கிறேன்:—

1. அந்தந்த மாகாண காங்கிரஸ் குழு எழுத்து மூலமாக அனுமதி அளிக்காமல் எந்தப் பஞ்சாயத்தும் அமைக்கப்படக் கூடாது.

2. தண்டோராப் போட்டு, பொதுக்கூட்டம் கூட்டியே பஞ் சாயத்து முதலில் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

3. இந்தப் பஞ்சாயத்தைத் தாலுகாக் குழு சிபார்சு செய்ய வேண்டும்.

4. இப்படிப்பட்ட பஞ்சாயத்துகளுக்குக் கிரிமினல் வழக்கு களில் தீர்ப்புக் கூறும் அதிகாரம் இருக்கக்கூடாது.

5. சம்பந்தப்பட்ட இருதரப்பினரும் தங்கள் வழக்கைப் பஞ்சாயத்துக்கு அனுப்புவதாக இருந்தால், சிவில் வழக்குகளை அது விசாரிக்கலாம்.

6. எந்தப் பிரச்னையையும் பஞ்சாயத்துக்கு அனுப்புமாறு யாரும் நிர்ப்பந்திக்கப் படக்கூடாது.

7. எந்தப் பஞ்சாயத்துக்கும் அபராதம் விதிக்க அதிகாரம் இருக்கக் கூடாது. அதற்கு தார்மிக பலம் இருக்கவேண்டும். அது கண்டிப்பான நடுநிலை வாய்ந்ததாய் இருக்கவேண்டும். சம்பந்தப்பட்ட இருதரப்பினரும் மனமுவந்து அதன் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதாய் இருக்க வேண்டும். இந்த மூன்றுமே, சிவில் வழக்குகளில் தீர்ப்புக் கூறுவதற்கு அதுபெற்ற அதிகார மாய் இருக்கவேண்டும்.

8. தற்போதைக்கு சமூக பகிஷ்காரமோ அல்லது வேறு எந்தவிதமான பகிஷ்காரமோ இருக்கக் கூடாது.

9. ஒவ்வொரு பஞ்சாயத்தும் கீழ்க்கண்ட காரியங்களைச் செய்ய வேண்டும் என எதிர்பார்க்கப்படும்:—

(அ) கிராமத்தில் உள்ள பையன்கள், பெண்களின் கல்வி

(ஆ) கிராமத் துப்புரவு

(இ) அதன் வைத்திய வசதி

(ஈ) கிராமக் கிணறுகள் அல்லது குளங்களை மராமத்துச் செய் தல்; அவைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல்

(உ) தீண்டப்படாதவர்களின் முன்னேற்றத்தையும், அவர்களு டைய அன்றாடத் தேவைகளையும் கவனித்தல்.

*10.* ஒரு பஞ்சாயத்து, தான் தேர்ந்தெடுக்கப்பட்ட 6 மாதங்களுக்குள் மேலே 9-ஆவது பிரிவில் கூறப்பட்டுள்ள கடமைகளை நிறைவேற்றத் தவறி விடுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அல்லது, கிராம மக்களின் நம்பிக்கையைக் காப்பாற்றத் தவறிவிடுகிறது. அல்லது வேறு ஏதாவது குற்றம் செய்து கண்டனத்திற்கு உள்ளாகிறது. இவையெல்லாம் மாகாண காங்கிரஸ் குழு முன் நிரூபணமாகிவிட்டால், அந்தப் பஞ்சாயத்தை மாகாண காங்கிரஸ் குழு கலைத்துவிடலாம். அதன் இடத்தில் வேறொரு பஞ்சாயத்தைத் தேர்ந்தெடுக்கலாம்.

**உண்மையான அதிகாரம்**

ஆரம்ப காலத்தில் அபராதம் விதிக்கவோ சமூக பகிஷ்காரம் செய்யவோ பஞ்சாயத்துகளுக்குக் கட்டாயம் அனுமதி இருக்கக் கூடாது. கிராமங்களில், சமூக பகிஷ்காரம் செய்வதென்பது, கல்வி அறிவில்லாமலும் பகுத்துப் பார்க்கும் திறன் இல்லாமலும் உள்ளவர்கள் கையில், ஒரு அபாயமான ஆயுதமாகிவிடுகிறது. அபராதம் விதிக்கும் அதிகாரம்கூடக் குறும்புத்தனத்துக்கு இடம் அளித்துவிடும். பஞ்சாயத்துகளை அமைக்கும் நோக்கமே பாழ்பட்டுப் போகுமாறு செய்துவிடும். உண்மையிலேயே ஒரு பஞ்சாயத்து மக்கள் ஆதரவு பெற்றதாய் இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். 9-ஆவது பிரிவில் கூறப்பட்டுள்ளது போன்ற ஆக்க வேலைகளைச் செய்து, தனது ஆதரவை மேலும் பெருக்கிக் கொள்கிறது. இப்படிப்பட்ட பஞ்சாயத்தானது, தனது தார்மிக செல்வாக்கின் மூலமே தனது தீர்ப்பும் அதிகாரமும் மக்களால் மதிக்கப்படுமாறு செய்ய முடியும். யாருக்கும் கிடைக்கக் கூடிய எந்த அதிகாரத்தைக் காட்டிலும் இது தான் உயர்ந்தது என்பதில் சந்தேகமே இல்லை. இந்த அதிகாரத்தை யாரும் பிடுங்கிக் கொள்ள முடியாது.[1]

## சுதந்திர இந்தியாவில் பஞ்சாயத்துகள்

**சுதந்திரம் என்பது என்ன?**

சுதந்திரம் என்பது இந்திய மக்களின் சுதந்திரமாக இருக்க வேண்டும். இப்போது அவர்கள் மீது ஆட்சி நடத்துபவர்களுடைய சுதந்திரமாக இருக்கக் கூடாது. ஆட்சி செலுத்துபவர்கள், அவர்களுடைய காலடியின் கீழ் உள்ள மக்களை நம்பி இருப்பவர்களாய் இருக்க வேண்டும். அவர்கள் பொதுஜன சேவகர்களாகவும் மக்களுடைய விருப்பப்படி நடக்கத் தயாராய் இருப்பவர்களாகவும் இருக்க வேண்டும்.

### கிராமத்துக்குப் பயிற்சி

சுதந்திரம் கீழேயிருந்து தான் ஆரம்பிக்க வேண்டும். ஒவ்வொரு கிராமமும் ஒரு குடியரசாகவோ அல்லது முழு அதிகாரம் உள்ள பஞ்சாயத்தாகவோ இருக்கும். ஆகையால் ஒவ்வொரு கிராமமும் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாக இருக்கவேண்டும் என்ருகிறது. உலகம் முழுவதுமே எதிர்த்து வந்தாலும் தன்ஊைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடிய அளவுக்கு அது தனது காரியங்களைத் தானே நிருவகித்துக்கொள்ள வேண்டும் என்ருகிறது. வெளியிலிருந்து வரும் எந்தத் தாக்குதலையும் எதிர்த்துச் சமாளிக்க அதற்குப் பயிற்சி அளிக்கப்படும். அதில் அழியவும் தயாராயிருக்குமாறு பயிற்றுவிக்கப்படும். ஆகவே, இறுதியாகப் பார்த்தால் தனிப்பட்ட ஒவ்வொரு மனிதரையுமே ஒரு 'யூனிட்'டாக எடுத்துக்கொள்ள வேண்டும். இதனல், அண்டையில் உள்ளவர்களுடைய உதவியையோ அல்லது உலகத்தின் உதவியையோ சாராமல் வாழ்வது என்பது அர்த்தமல்ல. அவர்கள் மனமுவந்து அளிக்கும் உதவியை ஏற்றுக்கொள்வதில்லையென்றும் பொருள் அல்ல. நல்லுறவு கொண்ட சக்திகள் சுதந்திரமாகவும் விருப்பத்தின் பேரிலும் இணைந்து வேலை செய்வதாக இருக்கும். இப்படிப்பட்ட ஒரு சமூகமானது உயர்ந்த பண்பாடு உள்ளதாக நிச்சயம் அமையும். இதில் ஒவ்வொரு ஆண் அல்லது பெண்ணுக்கும் தனக்கு வேண்டியது என்னவென்பது தெரியும். அதுமட்டுமல்ல, தனக்குச் சமத்துவமாக உழைக்கும் மற்ருெருவருக்கு எது கிடைக்கவில்லையோ அதை யாரும் விரும்பக் கூடாது என்பதும் இவர்களுக்குத் தெரியும்.

### சத்தியம், அஹிம்சை

இந்தச் சமூகமானது, சத்தியத்தையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்டு இயங்க வேண்டுமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை. கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கையில்லாமல் சத்தியமும் அஹிம்சையும் சாத்தியமில்லை என்பது எனது கருத்து. கடவுள் என்பது என்ன? தானே இயங்கக் கூடிய, எல்லாம் அறிந்த ஒரு ஜீவ சக்தியையே கடவுள் என்று நான் குறிப்பிடுகிறேன். உலகில் நாம் அறிந்த சக்திகளையெல்லாம் தன்னுள் அடக்கிய ஒரு சக்தி இது. ஆனல் இந்தச் சக்தி வேறு எதையும் சார்ந்திருப்பதில்லை. மற்ற சக்திகள் எல்லாம் அழிந்த பின்பும், அல்லது செயலற்றுப் போய்விட்ட பின்பும், இந்தச் சக்தி மட்டும் இருந்துகொண்டேயிருக்கும். எங்கும்

நிறைந்த இந்த ஜீவ சக்தியில் நம்பிக்கை கொள்ளாது, நான் உயிர் வாழ்வதில் பொருளே இருக்க முடியாது.

### கூட்டு வாழ்க்கை

எண்ணற்ற கிராமங்கள் கொண்ட இந்த அமைப்பிலே எப்போதும் விரிவடைந்து கொண்டுபோகும் பல தொகுதிகள் இருக்கும். ஆனால், இவை ஒன்றின் மீது ஒன்று குதிரை ஏறிக் கொண்டிருக்கமாட்டா. வாழ்க்கையென்பது கீழே குறுகி மேலே விரிந்து சொல்லும் கோபுரமாக இராது. அதற்குப் பதிலாக அது ஒரு விசாலமான சமுத்திரத்தைப் போன்ற வட்டமாக இருக்கும். இந்த வட்டத்தின் மையம் தனிப்பட்ட மனிதன் தான். கிராமத்துக்காக அழியவும் அவன் தயாராய் இருப்பான். கிராமமோ பல கிராமங்கள் கொண்ட ஒரு தொகுதிக்காக அழியத் தயாராய் இருக்கும். இறுதியில் எல்லாமே, தனிப்பட்டவர்கள் எல்லோரும் கூட்டாகச் சேர்ந்து நடத்தும் ஒன்றுபட்ட வாழ்க்கையாக இருக்கும். இவர்கள் தற்பெருமை கொண்டு ஒருவரையொருவர் ஆக்கிரமிக்கும் எண்ணம் உடையவர்களாய் இருக்கமாட்டார்கள். எப்போதும் அடக்கமாக இருந்து, அந்த விசாலமான சமூகத்தின் பெருமையைப் பங்கிட்டுக் கொள்வார்கள்.

### சாத்தியமா ?

ஆகையால், வளையம் வளையமாகக் கிராமத் தொகுப்புகளைக் கொண்ட இவ்விதச் சமுதாய அமைப்பில் கடைசி வளையமானது உள்ளே யிருக்கும் பகுதியை நசுக்க எண்ணாது. அதற்குப் பதிலாக உள்ளே யிருக்கும் பகுதிகளுக்கெல்லாம் தன் பலத்தைக் கொடுத்து, அவைகளிடமிருந்து தான் பலம் பெற்றுக் கொள்ளும். 'இவைகள் எல்லாம் வெறுங் கற்பனை; சிந்தனைக்கு உரியவையல்ல' என்று சிலர் என்மீது குறை கூறலாம். யூக்லிட் வர்ணித்துள்ள இலக்கணப்படி ஒரு புள்ளியை யாரும் வரைய முடியாது. ஆனாலும் அதற்கு என்றும் அழியாத ஒரு முக்கியத்துவம் உண்டு. அதைப் போலவே இனிமேல் வரும் மனித வர்க்கத்துக்கு, எனது இந்த விளக்கமும் தனி முக்கியத்துவம் உள்ளதாகும். இந்தச் சித்திரம் சத்தியமானது. அதைப் பூரணமாக ஒருபோதும் அடைய முடியாது. என்றாலும் இந்தியா அதற்காக வாழட்டும். நமது இலட்சியம் என்னவென்பதை நாம் சரியாக வகுத்து அதைப்பற்றித் தெளிவான கருத்துக் கொண்டிருக்க வேண்டும். அதை நாம் நெருங்குவதற்கு முன், இது அவசியம். இந்தியாவில் என்றாவது ஒருநாள் ஒவ்வொரு கிராமமும் ஒரு குடியரசாக விளங்கினால், என்னுடைய கருத்து நிரூபணமாகி

விட்டதாக நான் சொல்வேன். கடையன் எனப்படுபவனும் உயர்ந்தவர்களுக்குச் சமமாக இருப்பான். அதாவது, முதல், கடைசி என்று யாரும் இருக்க மாட்டார்கள்.

**அசைக்க முடியாது**

எனது இலட்சிய சமுதாயத்தைப்பற்றிய இந்தச் சித்திரத்தில், ஒவ்வொரு மதத்துக்கும் சமத்துவமான முழுப் பங்கு இருக்கிறது. நாமெல்லோரும் ஒரு பெரிய விருட்சத்தின் இலைகளைப் போன்றவர்கள். வேர்கள் பூமியில் ஆழப்பதிந்துள்ளதால், அடிமரத்தை இலேசாக அசைத்துவிட முடியாது, எவ்வளவு பலம் வாய்ந்த புயலானாலும் அதை அசைக்க முடியாது.

பல இயந்திரங்கள் மனிதர் உழைப்பைப் போக்கக் கூடியவை. சிலருடைய கையில் அதிகாரத்தைக் குவித்துவிடக் கூடியவை. அப்படிப்பட்ட இயந்திரங்களுக்கு இந்தச் சமுதாயத்தில் இடம் இல்லை. பண்பாடுள்ள மனித குடும்பத்தில் உழைப்புக்குத் தனி இடம் உண்டு. தனிப்பட்ட மனிதனுக்கு உதவக் கூடிய ஒவ்வொரு இயந்திரத்துக்கும் அதில் இடம் உண்டு. ஆனாலும் இந்த இயந்திரம் எதுவாக இருக்கக் கூடும் என்பதை இன்னும் நான் சிந்திக்கவில்லை. சிங்கர் நூற்பு இயந்திரத்தைப்பற்றி நான் யோசித்துப் பார்த்தேன். ஆனால் அதுகூட இன்றியமையாததல்ல. எனது இலட்சிய சித்திரத்தைப் பூர்த்தி செய்ய அது எனக்கு அவசியம் இல்லை.[2]

**என்ன செய்ய வேண்டும்?**

பின் நாம் என்னதான் செய்ய வேண்டும்? நம்முடைய பஞ்சாயத்து ராஜ்யம், அதாவது உண்மையான ஜனநாயகம் என்ற கனவு நிறைவேற வேண்டுமே? இது நிறைவேற வேண்டுமென்றால், மிகத் தாழ்ந்த, கடை நிலையில் உள்ள இந்தியனையும் நாட்டில் உள்ள மிக உயர்ந்தவனுக்குச் சமமாக எண்ண வேண்டும். இந்தியாவையே ஆள்பவருக்குச் சமமாக எண்ணவேண்டும். எல்லோரும் பரிசுத்தமானவர்களே என்பதுதான் இதற்கு அடிப்படை. ஏற்கனவே பரிசுத்தமாக இல்லாவிட்டால்[4] பரிசுத்தமாவார்கள் என்பது அடிப்படை. பரிசுத்தமும் விவேகமும் இணைந்து செல்ல வேண்டும். அப்போது ஒரு வகுப்புக்கும், மற்றொரு வகுப்புக்குமிடையே ஒருவன் வேறுபாடு காணமாட்டான். அரிஜனுக்கும் உயர்ந்தசாதிக்காரருக்குமிடையே வித்தியாசம்பாராட்டமாட்டான். ஒவ்வொருவரும், மற்ற எல்லோரையும் தனக்குச் சமத்துவமாகக் காண்பார்கள். அன்பு என்னும் வலைக்குள் இணைப்பார்கள். யாரும் பிறரைத் தீண்டத்தகாதவர் என்று எண்ணமாட்டார்கள். உழைக்கும் தொழிலாளியையும் பணக்கார முதலாளியையும் நாம்

சமத்துவமாகவே கருதுவோம். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு நாணயமாக வாழ்வதெப்படி என்பதை ஒவ்வொரு வரும் அறிந்திருப்பார்கள். மூளையைக்கொண்டு உழைப்பதற்கும் உடலால் உழைப்பதற்குமிடையே வேறுபாடு பாராட்டமாட்டார் கள். இந்தப் பரிபூரண நிலையை நாம் விரைவாக அடைவதற் காக, நாமே தோட்டிகளாவோம். விவேகமுள்ளவன் அபினியோ, மதுவையோ, மற்ற லாகிரிகளையோ, ஒருபோதும் தொடமாட் டான். ஒவ்வொருவரும் சுதேசியை வாழ்க்கை நியதியாகக் கொள் வார்கள். தனது மனைவி தவிர மற்றப் பெண்களை—அவரவர் வய திற்கு ஏற்பத் தனது தாயாகவும் சகோதரியாகவும் மகளாகவும் கொள்வான். உள்ளத்தில் காமவேட்கை கொள்ளமாட்டான். அவசியம் ஏற்படும்போது, உயிரைப் பலிகொடுக்கத் தயாராய் இருப்பான். மற்றொரு உயிரைப் பலிவாங்க ஒருபோதும் விரும் பான், அவன் ஒரு சீக்கியனாக இருக்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவனுடைய குருவின் ஆக்ஞைப்படி தன்னந் தனியாக இருந்து போரிட அவனுக்குத் தைரியம் இருக்கவேண் டும். அவர்களுடைய ஆக்ஞைக்குக் கீழ்ப்பட்ட "ஒன்றே கால் இலட்சம்" பேருக்கு எதிராக இருந்து, ஒரு அங்குலம்கூட விட் டுக் கொடுக்காது போராட அவனுக்கு தைரியம் இருக்கும். இப்படிப்பட்ட ஒரு பாரத புத்திரனுக்குத் தற்போது அவனுடைய கடமை என்னவென்பதைச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை அல்லவா?[3]

## பஞ்சாயத்தின் கடமைகள்

### அக்கால இந்தியா

சீனாவிலிருந்தும் மற்ற உலக நாடுகளிலிருந்தும் பல பெரிய மனிதர்கள் அக்காலத்தில் இந்தியாவுக்கு வந்தார்கள். ஞானத் தைப் பெற்றுச் செல்லும் ஆவலுடன் இங்கு வந்தார்கள். இதற் காக, பிரயாணத்தில் ஏற்பட்ட எத்தனையோ இடைஞ்சல்களை அவர்கள் தாங்கிக்கொண்டார்கள். இந்தியாவில் அக்காலத்தில் திருட்டே இருந்ததில்லை யென்று அவர்கள் கூறி யிருக்கின்றனர். மக்கள் சத்தியவான்களாகவும் சுறுசுறுப்பானவர்களாகவும் இருந்திருக்கின்றனர். வீட்டுக் கதவுகளுக்குப் பூட்டுப்போட்டுப் பூட்டவேண்டிய அவசியம் இருந்ததில்லை, தற்போது இருப்பதைப் போல ஏராளமான சாதிப் பிரிவினைகளும் அக்காலத்தில் இருந்த தில்லை. ஆகவே அந்தச் சத்தியத்தையும் உழைப்பையும் மீண் டும் உயிர்ப்பிப்பது பஞ்சாயத்துகளின் கடமையாகும். தகராறு களைத் தீர்க்க வேண்டுமானால் நீதி மன்றங்களுக்குச் செல்லக்

கூடாது என்பதைக் கிராமவாசிகளுக்குப் பஞ்சாயத்துகள் போதிக்க வேண்டும். எந்தவிதமான செலவும் இல்லாமல் விரைவாக நீதி கிடைக்க இது உதவும்; போலீசாரும் இராணுவமும் இல்லாமல் செய்யவும் உதவும்.

### கால் நடைகள்

அப்புறம் கால்நடைகள் அபிவிருத்தியிலும் பஞ்சாயத்துகள் கவனம் செலுத்த வேண்டும். பால் உற்பத்தி படிப்படியாக அதிகரிக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். போதிய கவனம் இல்லாததால், நமது கால்நடைகள் இன்று நிலங்களுக்கு ஒரு சுமையாக இருக்கின்றன. பசுவதைக்காக முஸ்லிம்களைக் குறை சொல்வது முற்றிலும் அறியாமையாகும். சரியாகப் பசுக்களைக் கவனிக்காமல் அங்குலம் அங்குலமாகக் கொல்பவர்கள் இந்துக்களே. சித்திரவதை செய்து சிறிது சிறிதாகக் கொல்வதானது, மொத்தமாகக் கொன்று விடுவதைக் காட்டிலும் எவ்வளவோ கொடுமையாகும்.

### கம்போஸ்ட் உரம்

கிராமத்தில் உணவு உற்பத்தியை அதிகரிப்பதிலும் பஞ்சாயத்து கவனம் செலுத்த வேண்டும். நிலத்திற்கு நல்ல உரமிடுவதன் மூலம் இதைச் சாதிக்க முடியும். கால் நடைகள், மனிதர்கள் மலஜலத்தைக் குப்பை கூளத்துடன் கலந்து சிறந்த உரமாக்கலாம். திருமதி மீராபென் முயற்சியின் பேரில் டில்லியில் அண்மையில் நடைபெற்ற கம்போஸ்ட் உர மாநாடு, இதை எடுத்துக் காண்பித்திருக்கிறது. இந்த உரம் நிலத்தின் வளத்தை அதிகரிக்கும். இதன்பின் கிராமமும், கிராம மக்களும் சுத்தமாக இருப்பதில் பஞ்சாயத்து கவனம் செலுத்த வேண்டும். கிராம மக்கள் உடலால் மட்டும் அல்லாமல் மனதிலும் சுத்தமானவர்களாய் இருக்க வேண்டும்.

### திரைப்படக் கொட்டகை

திரைப்படக் கொட்டகை இருக்கக் கூடாது. மக்களுக்கு அறிவைப் புகட்டத் திரைப்படம் ஒரு நல்ல சாதனம் என்று மக்கள் கூறுகிறார்கள். ஒரு காலத்தில் அவ்வாறு ஏற்படலாம். ஆனால் இப்போது திரைப்படங்களால் பெருந் தீமை ஏற்படுவதையே நான் காண்கிறேன். நமது நாட்டு விளையாட்டுகள் இருக்கின்றன. கிராமவாசிகள் மத்தியிலிருந்து போதை அளிக்கும் குடிகளையும் மருந்துகளையும் ஒழிக்க வேண்டும். உங்களுடைய கிராமத்தில் தீண்டாமையின் சாயல் ஏதாவது இருந்தால், அதைப்

போக்குவீர்கள் என்று நம்புகிறேன். இந்துக்களும் முஸ்லிம்களும் சீக்கியர்களும் பார்சிகளும் கிறிஸ்துவர்களும் உடன்பிறந்தவர் களைப் போல வாழ வேண்டும். நான் சொல்லியுள்ளதை யெல் லாம் நீங்கள் நிறைவேற்றினீர்களானல், உங்களுக்கு உண்மைச் சுதந்திரம் வந்துவிட்டதாகும். உங்களுடைய மாதிரி கிராமத் தைப் பார்க்கவும் உற்சாகம் பெறவும் இந்தியாவெங்குமிருந்து மக்கள் வருவார்கள்.[4]

## அத்தியாயம் 13

# ஆதாரக் கல்வி

## I

### ஆதாரக் கல்வி என்ருல் என்ன ?

''ஆதாரக் கல்வி யென்பது கை வேலைமூலம் கல்வி கற்றுக் கொடுத்தல்'', என்று பொதுவாகச் சொல்வார்கள். இது சரி தான். ஆனல் இது முழு உண்மையல்ல. இந்தப் புதுக் கல்வி யின் அடிப்படை இருக்கிறதே, அது இன்னும் எவ்வளவோ ஆழ மானது. மனித சமுதாயத்தின் ஒவ்வொரு வகையான நடவடிக் கையிலும் சத்தியத்தையும் அஹிம்சையையும் அனுஷ்டிப்பதிலேயே ஆதாரக் கல்வி இருக்கிறது—அது தனிப்பட்ட வாழ்க்கையாக இருந்தாலும் சரி, கூட்டு வாழ்க்கையாக இருந்தாலும் சரி, வாழ்க் கையிலுள்ள பல்வேறு நடவடிக்கைகளிலும் ஊடுருவி யிருக்கும். சத்தியத்தையும் அன்பையும் பற்றிச் சிந்தித்தபோதுதான், கை வேலையின்மூலம் கல்வி கற்பிக்கலாம் என்ற சிந்தனை எழுந்தது. அன்பின் அடிப்படையாகப் பார்த்தால், உண்மையான கல்வி யானது எல்லோருக்கும் எளிதாகக் கிடைப்பதாய் இருக்க வேண்டும். ஒவ்வொரு கிராமவாசிக்கும் அவருடைய அன்ருட வாழ்வில் உதவுவதாய் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட கல்வி யைப் புத்தகங்களிலிருந்து பெறமுடியாது. புத்தகங்களையும் அது சார்ந்திராது. பல்வேறு மதப் பிரிவினைகளுக்கும் அதற்கும் சம் பந்தம் இல்லை. அது மதக் கல்வி என்று எப்படிச் சொல்லமுடியு மென்ருல், அது உலகப் பொது மதத்தைக் குறிக்கும். எந்த மதத்திலிருந்து பல்வேறு மதங்களும் தோன்றினவோ அவைகளைக் குறிக்கும். ஆகையால் வாழ்க்கை என்னும் புத்தகத்திலிருந்து அது கற்றுக்கொள்ளப்படுகிறது. இதற்குச் செலவு எதுவும் இல்லை. உலகத்திலுள்ள எந்தச் சக்தியாலும் பறிக்கப்பட முடி யாதது இது. [1]

### உடல், மனம், ஆன்மா

கை, கால், கண், காது, மூக்கு போன்ற அவயவங்களுக்குச் சரியான பயிற்சி அளிக்க வேண்டும். அதன்மூலம்தான் உண் மையான அறிவு தரும் கல்வியைப் பெறமுடியும். இதை வேறு

வார்த்தைகளில் சொல்வதானல், ஒரு குழந்தையின் அவயவங்களை யெல்லாம் புத்திசாலித்தனமான முறையில் பயன்படுத்த வேண்டும். அப்போது, அது அதனுடைய அறிவைச் சிறந்த முறை யிலும் வேகமாகவும் வளர்த்துக் கொள்ள உதவியாக இருக்கும். அதே சமயம், மனதும் உடலும் ஒரே சமயத்தில் வளர்ச்சியடைய வேண்டும். அவைகளுக்கு ஏற்ப ஆன்மாவும் வளர்ச்சிபெற வேண்டும். இவ்வாறு இல்லாமல் மனம் மட்டும் வளர்ச்சியடைவ தானது ஒரு பக்கம் அதிகமான சமநிலையில்லாத வளர்ச்சியாக முடியும். ஆன்மிகப் பயிற்சி என்று நான் கூறுவதன்மூலம் இத யத்தைப் பண்படுத்தும் கல்வியையே கூறுகிறேன். சரியான முறையில் எல்லா வகையிலும் மனம் வளர்ச்சி அடையவேண்டும். இதற்கு, குழந்தையின் உடல், ஆன்மா ஆகிய இரண்டும் எந்த அளவு பயிற்றுவிக்கப்படுகின்றனவோ அந்த அளவு மனமும் வளர்ச்சியடைய வேண்டும். இவையெல்லாமே பிரிக்க முடியாத ஒன்றேயாகும். இந்தத் தத்துவத்தின்படி, இவைகளைத் தனித் தனியாக, ஒன்றின் சார்பு மற்றொன்றுக்கு இல்லாமல், அபி விருத்திசெய்யலாம் என்பது முற்றிலும் தவறாகும்.

### அறிவு சிதறும்

ஆகவே, உடல் மனம், ஆன்மா ஆகிய மூன்றுக்கும் இடையே சரியான, கட்டுப்கோப்பான இணைப்பும் ஒருமைப்பாடும் வேண்டும். அவ்வாறு இல்லாவிட்டால், அதனல் ஏற்படக்கூடிய தீய விளைவுகள் பட்டவர்த்தனமானவை. அவைகளெல்லாம் நம்மைச் சுற்றித்தான் இருக்கின்றன. ஆனல் நம்முடைய தற்போதைய தவருன தொடர்புகளால் அவைகளை அறிய முடிவதில்லை. நம்மு டைய கிராம மக்களுடைய உதாரணத்தை எடுத்துக் கொள் ளுங்கள். அவர்களுடைய குழந்தைப் பருவத்திலிருந்து தங்களு டைய வயல்களில் கஷ்டப்பட்டு உழைக்கிருர்கள். ஆடுமாடுகளின் மத்தியிலேயே வாழ்கிருர்கள். அந்த ஆடுமாடுகள் எவ்வாறு பாடு படுகின்றனவோ அம்மாதிரி அதிகாலையிலிருந்து அந்திப்பொழுது வரை பாடுபடுகின்றனர். அவர்கள் வாழ்வதே அலுப்புத் தட்டிப் போன, யந்திரத்தைப்போன்று ஒரே வேலையைத் திருப்பித் திருப்பி ஓயாது செய்வதுதான். அறிவின் ஒரு சுடரொளியையோ அல்லது வாழ்க்கையின் உயர்ந்த நயங்களையோ அவர்கள் அறிய மாட்டார்கள். அவர்களுடைய மனதையும் ஆன்மாவையும் அபி விருத்தி செய்வதற்கான வாய்ப்பு எதுவும் இல்லாததால், அவர்கள் மிருகங்களின் நிலைக்குத் தாழ்ந்து விட்டனர். அவர்களைப் பொறுத்தவரை, வாழ்க்கை என்பது ஒரு வருத்தந்தரத்தக்க ஒரு குழப்ப மயமாகும். இந்தச் சேற்றிலும் சகதியிலும் அவர்கள் எப்

படியோ காலத்தைக் கடத்திச் செல்கின்றனர். அதற்கு மாருக, இன்று நமது நகர்களில் உள்ள பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கற்றுக் கொடுக்கப்படுவது கல்வி என்று பெயரிட்டு அழைக்கப் படுகிறது. இது உண்மையில் அறிவைச் சிதறச் செய்வதேயாகும். அங்கு அறிவுப் பயிற்சி என்பது, உடல் உழைப்புக்குச் சம்பந்த மில்லாதது என்று கருதப்படுகிறது. ஆனல் உடலை நல்ல ஆரோக் கியத்துடன் வைத்திருக்க ஏதாவதொரு உடல் உழைப்பு அவசிய மாயிருக்கிறது. ஆகையால் ஏதாவதொரு செயற்கையான, ஜீவ னில்லாத உடல் பயிற்சி முறையின்மூலம் இக்குறையைப் பூர்த்தி செய்துகொள்ள முயலுகின்றனர். இது வார்த்தைகளால் விவரிக்க முடியாத கேலிக்கூத்தாகும். இதனல் ஏற்படக்கூடிய முடிவும் படுபாதகமாய் இருக்கலாம். இந்த முறையில் உருவான ஒரு இளைஞனின் உடல், எந்த வகையிலும் ஒரு சாதாரண உழைப் பாளியின் உடலைப் போலத் தாக்குப்பிடிக்காது. மிகச் சிறிய உடல் பிரயாசையும் அவனுக்குத் தலைவலி அளித்துவிடும். வெயி லில் சிறிது நேரம் இருக்க நேரிட்டால் அவனுக்கு மயக்கம் வந்து விடும். இவைகளுக்கெல்லாம் மேலாக, முக்கியமான தென்ன வென்ருல், இவைகளெல்லாம் முற்றிலும் 'இயற்கையாக'க் கரு தப்படுகின்றன வென்பதுதான். இதயத்தின் குணங்களைப் பொறுத்தவரை, அவை ஒன்று அழிந்து போய்விடுமாறு செய்யப் படுகின்றன, அல்லது கட்டுப்பாடு இல்லாமல் விரும்பியபடியெல் லாம் வளர அனுமதிக்கப்படுகின்றன. முடிவோ, தார்மிக, ஆன் மிகச் சீர்கேடுதான். வேடிக்கை என்னவென்ருல், இது ஏதோ பாராட்டத்தக்க காரியம் என்று கருதப்படுகிறது!!

### உள்ளப் பயிற்சி

இதற்குப் பதிலாக, உள்ளத்திற்கு ஆரம்பத்திலிருந்தே பயிற்சி அளிக்கப்படும் ஒரு குழந்தையின் உதாரணத்தை எடுத் துக் கொள்ளுங்கள். நூல் நூற்றல், தச்சு வேலை, விவசாயம் போன்ற ஏதாவதொரு உபயோகமான வேலை அவனுடைய கல்விக் காகக் கற்றுக்கொடுக்கப்படுகிறது என்றும் வைத்துக்கொள்ளுங்கள். அவன் செய்யவேண்டியிருக்கும் வேலையைப்பற்றியும் பயன்படுத்த வேண்டிய கருவிகளின் உபயோகம், உற்பத்தி ஆகியவைபற்றியும் அவனுக்கு விரிவாகப் புகட்டப்படுகிறது. இதனல் அவனுடைய உடல் அழகானதாகவும் சுகாதாரமுள்ளதாகவும் ஆகும். அது மட்டுமல் லாது, அவன் நல்ல, திறனுள்ள அறிவும் பெறுவான். இது வெறும் ஏட்டுப்படிப்பாக மட்டும் இராது. வாழ்க்கை அனுபவத்தை உறுதி யான அடிப்படையாகக் கொண்டதாக விருக்கும். அன்ருட அனு

பவத்தில் பயனுள்ளதென்று மெய்ப்பிக்கப்பட்டதாக இருக்கும். அவனுடைய அறிவுக் கல்வியில், கணக்கும் இடம்பெறும். அவனுடைய தொழிலைப் புத்திசாலித்தனமான முறையிலும் திறமையான முறையிலும் செய்யக்கூடியவாறு பல்வேறு விஞ்ஞானங்கள் பற்றிய போதனையும் இடம்பெறும். இத்துடன் புத்துணர்ச்சியூட்டுவதற்கான முறையில் இலக்கியக் கல்வியும் அளித்துவிட்டால், கல்வி முற்றிலும் சமநிலையான முழுக் கல்வியாகிவிடும். அதில் உடல், அறிவு, ஆன்மா ஆகிய மூன்றுக்குமே முழு இடம் கிடைக்கும். இந்த மூன்றுமே ஒரு இயற்கையான, ஒத்திசைந்த முழுமைப் பொருளாக வளர்ச்சியடையும். மனிதன் வெறும் அறிவு மட்டுமல்ல. அல்லது, வெறும் உடலோ, இதயம் அல்லது ஆன்மாவோ அல்ல. முழு மனிதனுக ஒருவனை உருவாக்குவதற்கு இந்த மூன்றும் சரியானமுறையிலும் இணக்கமான முறையிலும் ஒன்று சேரவேண்டும். இவை மூன்றும் இணைவது கல்வியின் உண்மையான பொருளாதாரமாகவும் அமைகிறது. [2]

## நகரவாசிகளும் கிராமமும்

கிராமவாசிகளின் தேவைகளுக்கு மிகவும் ஏற்ற ஒரு கல்வியைப் புகட்ட நாம் விரும்புகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது நாம் வித்தியா பீடத்தைக் கிராமங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும். நாம் அதை ஒரு பயிற்சிப் பள்ளியாக்க வேண்டும். கிராமவாசிகளின் தேவைகளைப்பற்றி ஆசிரியர்களுக்கு நடைமுறைப் பயிற்சி அளிக்கும் முறையில் அதைப் பயிற்சிப் பள்ளியாக்க வேண்டும். நகரில் உள்ள ஒரு பயிற்சிப் பள்ளியின்மூலம், கிராமங்களின் தேவை என்னவென்பதை ஆசிரியர்களுக்குப் புகட்டமுடியாது. கிராமங்களின்மீது அவர்கள் அக்கறை கொள்ளுமாறும் செய்ய முடியாது. கிராமங்களின்மீது நகரவாசிகள் அக்கறை கொள்ளுமாறு செய்வதும், அவைகளில் அவர்கள் வாழுமாறு செய்வதும் எளிதான வேலையல்ல. சேவா கிராமத்தில் இதை நான் நாள்தோறும் நிதரிசனமாகப் பார்க்கிறேன். ஒரு வருஷம் நாங்கள் சேவா கிராமத்தில் தங்கியிருந்தது எங்களை கிராமவாசிகளாக்கியிருக்கிறதா? பொது நலனுக்காக நாங்களும் அவர்களுடன் ஒன்றுபட்டிருக்கிறோமா? 'ஆம்'' என்று நான் உறுதியாகச் சொல்ல முடியாது.

## எழுத்தறிவு முதலில் அல்ல

ஆரம்பக் கல்விக்கு வருவோம். எழுதப்படிக்க முதலில் சொல்லிக் கொடுப்பதன் மூலம் கல்வி கற்றுக்கொடுப்பது அவர்களுடைய அறிவு வளர்ச்சியைப் பாதிக்கிறது. இதுதான் என்னு

டைய உறுதியான கருத்து. குழந்தைகள் முதலில் வரலாறு, பூகோளம், மனக்கணக்கு, (உதாரணமாக) நூற்புக்கலை ஆகியவற்றின் முதற்படியான சில விவரங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். அதன் பின்புதான் நான் அவர்களுக்கு எழுத்தறிவைப் புகட்டுவேன். இந்த மூன்றின் மூலமாகவும் நான் அவர்களுடைய அறிவை அபிவிருத்தி செய்ய வேண்டும். "தக்ளியின் மூலமோ அல்லது இராட்டையின் மூலமோ எவ்வாறு அறிவை அபிவிருத்தி செய்ய முடியும்?" என்று கேட்கலாம். உயிரின்றி, வெறும் இயந்திரத்தைப் போன்று கற்றுக் கொடுக்கப்படாவிட்டால், இதன் மூலம் பிரமிக்கத்தக்க அளவு நாம் அபிவிருத்தி செய்யலாம். ஒவ்வொரு வேலையின் காரணத்தையும் நீங்கள் குழந்தைக்கு விளக்கினீர்களானல்-தக்ளி அல்லது இராட்டையில் உள்ள இயந்திர நுட்பத்தை எடுத்துச் சொன்னல்-பஞ்சின் வரலாற்றை எடுத்துக் கூறி நாகரிகத்துக்கும் அதற்கும் உள்ள தொடர்பு பற்றி அவனுக்குப் புகட்டினீர்களானல்-எங்கே பருத்தி விளைகிறதோ அந்த வயலுக்கு நீங்கள் அவனை அழைத்துச் சென்றீர்களானல்-அவன் நூற்கும் நூல் சுற்றின் எண்ணிக்கையை எவ்வாறு எண்ணுவது, நூல் ஒரே அளவு பருமனுக இருக்கிறதா என்பதையும் அதன் நம்பரையும் எவ்வாறு கண்டு பிடிப்பது என்பவைகளை அவனுக்குக் கற்றுக் கொடுத்தால்-நீங்கள் அவனுக்குப் படிப்பில் அக்கறை ஊட்டியவர்களாவீர்கள். அதே சமயம் அவனுடைய கைக்கும் கண்ணுக்கும் மனதுக்கும் பயிற்சி அளித்தவர்களாவீர்கள். இந்தப் பூர்வாங்கப் பயிற்சிக்கு ஆறுமாதம் தரவேண்டும். அப்புறம் எழுத்தைக் கற்றுக் கொள்ளக் குழந்தை தயாராவான். அவன் இதை வேகமாகச் செய்ய முடியும்போது, சாதாரணப் படம் போடுவதைக் கற்றுக் கொள்ள அவன் தயாராகிவிடுவான். பட கணிதப் படங்கள், பறவைகளின் படங்கள் முதலியவைகளை வரைய அவன் கற்றுக் கொண்டபோது, எழுத்துக்களை அவன் அழகாக வரைவானேயொழியக் கோணல் மாணலாக எழுதமாட்டான். எனக்கு எழுத்தறிவு புகட்டப்பட்ட குழந்தைப் பருவத்தைப் பற்றி இன்னும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. அது எவ்வளவு சலிப்புத் தட்டும் வேலையாக இருந்தது என்பதை நான் அறிவேன். என்னுடைய அறிவு துருப்பிடித்துக் கொண்டிருந்தது. ஆனல் அதைப் பற்றி யாரும் அக்கறைப்படவில்லை. எழுத்துக்களை எழுதுவது ஒரு நுண்கலை என்று நான் கருதுகிறேன். சிறு குழந்தைகளின் மீது எழுத்துக்களைத் திணிப்பதன் மூலமும், அதை ஆரம்பமாக வைத்தே கல்வி கற்பிப்பதன் மூலமும் நாம் அந்த எழுத்தறிவையே கொலை செய்கிறோம். இவ்வாறு, உரிய காலத்துக்கு முன் நாம்

குழந்தைக்கு எழுத்தறிவைக் கற்றுக் கொடுக்கும்போது எழுதுங் கலைக்கே தீங்கு செய்கிறோம். குழந்தையின் வளர்ச்சியும் தேக்க முற்று நிற்குமாறு செய்கிறோம்.[3]

### இந்தியாவில் உள்ளது கல்வியா?

கிராமக் கைத்தொழில்களைக் கல்வியின் ஆதாரமாகவும் மைய மாகவும் வைக்க வேண்டியது அவசியம் என்பதைப் பற்றியோ அது முக்கியம் என்பதைப் பற்றியோ எனக்கு எந்தவிதமான ஐயப்பாடும் இல்லை. இந்தியாவில் உள்ள கல்வி ஸ்தாப னங்களில் கடைப்பிடிக்கப்படும் முறையைக் கல்வியென்று நான் அழைப்பதில்லை. கல்வியென்பது ஒரு மனிதனிட முள்ள சிறந்த சாராம்சத்தை வெளிக் கொணருவதாகும். ஆனால் அதற்குப் பதிலாக இது மனம் ஒழுக்கக் கேடு அடையச் செய்வ தாகும். எப்படியும் அது மனதிற்குச் சில தகவல்களைப் போதிக் கிறது என்பது உண்மையே. ஆனால், ஆரம்பத்திலிருந்தே கிராமக் கைத்தொழில்களை மையமாகக் கொண்டு மனதிற்குப் பயிற்சி அளிக்கும் முறையானது மனதின் உண்மையான, கட்டுப்பாடான வளர்ச்சியை ஏற்படுத்தும். இதனால் அறிவின் சக்தி கட்டிக் காக்கப் பெறும். அதைப் போன்றுதான் ஆன்மிக சக்தியும்.[4]

### எழுதுவதும் படிப்பதும்

என்னுடைய திட்டப்படி, கைச்சித்திரம் வரையவோ அல்லது எழுதவோ பழக்கப்படுத்தப்படுவதற்கு முன், சில கருவிகளைப் பயன்படுத்துவதற்கு கை பழக்கப்படுத்தப்படும். எழுத்துக்களையும் சொற்களையும் கண்கள் படிக்கும். இவ்வாறு படித்து, வாழ்க்கையில் மற்ற விஷயங்களை எவ்வாறு அவை அறிந்து கொள்ளுமோ அதே போன்று இவைகளையும் தெரிந்து கொள்ளும். பொருள்களின் பெயர்களையும் வாக்கியங்களின் பொருள்களையும் காதுகள் 'புரிந்து கொள்ளும்.' இந்தப் பயிற்சி முழுவதுமே இயற்கையானதாகவும், பலன் தரக்கூடியதாகவும் இருக்கும். ஆகையால் இந்தியாவி லேயே மிகவும் விரைவாகவும் மலிவானதாகவும் இக்கல்வி இருக் கும். எனது பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகள், அவர்கள் எழுதுவதைக் காட்டிலும் விரைவாகப் படிப்பார்கள். அவர்கள் எழுதும்போது கோழி கிண்டுவதுபோல் கிறுக்கமாட்டார்கள். நான் இன்றும் செய்கிறேனே (எனது ஆசிரியர் வாழ்க!) அதைப் போன்று செய்யமாட்டார்கள். அதற்குப் பதிலாக, நேரடியாகப் பார்த்த பொருள்களை அவர்கள் எவ்வாறு அழகான படங்களாக வரைவார்களோ அதே போன்று அழகான படங்களாக எழுத்துக்

களை வரைவார்கள். என்னுடைய கற்பனைப்படி பள்ளிகள் எப்போதாவது அமைவதாக இருந்தால், படிப்பதைப் பொறுத்தவரை மிக விரைவில் அது கற்றுக் கொடுக்கும். உலகத்தில் மிகவும் முன்னேற்றம் அடைந்த பள்ளிக்கூடங்களுடன் போட்டியிடும் அளவுக்குக் கற்றுக் கொடுக்கும். ஏன், எழுதுவதிலும் அவ்வாறே கற்றுக் கொடுக்கும். ஆனால் ஒன்று, எழுதுவதென்பது சரியாக எழுதுவதாய் இருக்கவேண்டும். தற்போது பெரும்பாலான சந்தர்ப்பங்களில் எழுத்துச் சரியாக இருப்பதில்லை.[5]

### ஆதாரக் கல்வி

ஆதாரக் கல்விக்கான காலம் குறைந்தது ஏழு ஆண்டுகளாக நீடிக்கப்பட வேண்டும். மெட்ரிகுலேஷன் பரீட்சை வரை, எவ்வளவு பொது அறிவு கற்றுக்கொடுக்கப்படுகிறதோ அவ்வளவும் (ஆங்கிலம் நீங்கலாக) அதில் இடம்பெற வேண்டும். அத்துடன் கணிசமான தொழிற் கல்வியும் இருக்கவேண்டும்.

### தொழிலின் உபயோகம்

பையன்களும் பெண்களும் முழு வளர்ச்சி அடைய வேண்டும். அவ்வாறு அவர்கள் முழு வளர்ச்சி அடையவேண்டுமென்றால், முடிந்தவரை, எல்லாப் பயிற்சியையுமே இலாபம் தரக்கூடிய ஒரு தொழிலின் மூலமாக அளிக்கவேண்டும். வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால், கைத்தொழில் என்பது இரண்டு வகையாகப் பலனளிக்க வேண்டும். அதாவது, தன்னுடைய உழைப்பின்மூலம் ஒரு மாணவன் தனது பயிற்சிக்கான கட்டணத்தைச் செலுத்த முடிவதாக இருக்க வேண்டும். அதே சமயம் பள்ளியில் கற்றுக்கொள்ளும் இந்தத் தொழில் ஒரு மாணவனோ அல்லது மாணவியோ முழு ஆண் அல்லது பெண்ணாக வளர்ச்சியடைய உதவுவதாகவும் இருக்கவேண்டும்.

நிலம், கட்டிடம், சாதனம் ஆகியவற்றுக்கான செலவையெல்லாம் மாணவன் உழைப்பின்மூலம் வரும் வருவாய் சரிக்கட்ட வேண்டியதில்லை.

### தொழில்கள்

பஞ்சு, கம்பளி, பட்டு ஆகியவைகள் சம்பந்தமான எல்லா வேலைகளும், பருத்தியைச் சேர்ப்பது, சுத்தப்படுத்துவது, அரைப்பது, பட்டை போடுவது, நூற்பது, நூலுக்குச் சாயம் போடுவது, தரம்வாரியாகப் பிரிப்பது, பாவு போடுவது, முறுக்குப் போடுவது, தினுசு போடுவது, நெய்வது, எம்பிராய்டரி, தையல், காகிதம் செய்வது, வெட்டுதல், புத்தகம் பைண்ட் செய்தல், பெட்டி

செய்தல், விளையாட்டுச் சாமான்கள் செய்தல், வெல்லம் தயாரித்தல் ஆகிய வேலைகள் எல்லாம் நிச்சயமாக எளிதில் கற்றுக் கொள்ளக்கூடிய வேலைகள்தான், அதிக மூலதனம் இல்லாமல் நடத்தக்கூடிய தொழில்கள்தான்.

**பிழைப்புக்குத் தயார் செய்தல்**

இந்த ஆதாரக் கல்வியானது பையன்களும் பெண்களும் தங்களுடைய பிழைப்புக்கேற்ற சம்பாத்தியத்தைத் தேட உதவுவதாய் இருக்கவேண்டும். இவர்கள் படித்த தொழில்களில் இவர்களுக்குப் பயிற்சி அளிக்க அரசாங்கம் உறுதிதரவேண்டும். அல்லது இவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை அரசாங்கம் நிர்ணய விலைகளில் வாங்கிக்கொள்ள வேண்டும்.[6]

**கல்வியின் தொடக்கம்**

ஆனல் ஒரு தேசம் என்ற முறையில் நாம் கல்வியில் எவ்வளவோ பின் தங்கியவர்களாய் இருக்கிறோம். ஆகவே, கல்வித் திட்டம் பணத்தை அடிப்படையாகக் கொண்டதாய் இருக்கக் கூடாது. அவ்வாறு இருந்தால், இந்தத் தேசத்தின் விஷயத்தில் நாம் நமது பொறுப்பை நிறைவேற்ற முடியாது. இந்தச் சந்ததியில் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் நிறைவேற்ற முடியவே முடியாது. அதனல்தான், நான் இவ்வளவு தைரியமாக, கல்வியானது சுயதேவைப் பூர்த்தியுள்ளதாக இருக்கவேண்டும் என்று ஆலோசனை கூறியிருக்கிறேன். ஆக்கரீதியான பணியில் எனக்கு மிகுந்த திறமை யிருப்பதாக வெளியே உள்ள பெயரும் புகழும் போய் விடுமே என்ற எண்ணமே இல்லாது துணிச்சலாக இதைக் கூறுகிறேன். கல்வி என்பதன் மூலம், குழந்தையிடமும் மனிதனிடமும் உள்ள சிறந்ததை—மனம், உடல், ஆன்மா ஆகிய எல்லாவற்றிலும், வெளிக்கொணர வேண்டும் என்றே நான் பொருள் கொள்கிறேன். எழுத்தறிவித்தல் என்பது கல்வியின் முடிவு அல்ல. ஏன் ஆரம்பங் கூட அல்ல. ஆகையால், ஒரு உபயோகமான கைத்தொழிலைக் கற்றுக்கொடுப்பதன் மூலம் நான் குழந்தையின் கல்வியைத் தொடங்குவேன். அதற்குப் பயிற்சி அளிக்கும் நாளிலிருந்து அது ஏதாவது ஒன்றை உற்பத்தி செய்யப் பழகிக் கொள்ளும். இவ்வாறு ஒவ்வொரு பள்ளியும் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாகச் செய்யப்படும். இதற்குள்ள ஒரு நிபந்தனை என்னவென்றால், இந்தப் பள்ளிகளில் உற்பத்தியான பொருள்களை அரசாங்கமே வாங்கிக்கொள்ள வேண்டும்.

## பொதுஅறிவு வாய்ப்பாடம்

இப்படிப்பட்ட ஒரு கல்வி முறையின் கீழ் மனதும் ஆன்மாவும் உன்னதமான வளர்ச்சியடைவது சாத்தியமே என நான் நம்புகிறேன். இதற்கு முக்கியமானது என்னவென்ருல், ஒவ்வொரு கைத்தொழிலேயும் கிளிப்பிள்ளேப் பாடம்போல் கற்றுக் கொடுக்காமல், விஞ்ஞான பூர்வமாகக் கற்றுக்கொடுக்க வேண்டும். அதாவது, ஒவ்வொரு வேலேயும், ஏன் எப்படி என்பது குழந்தைக்குத் தெரியவேண்டும். இதைப்பற்றி அழுத்தமான நம்பிக்கை யில்லாமல் நான் இதை எழுதவில்லே. ஏனென்ருல் அனுபவத்தை அடிப்படையாக வைத்தே நான் இதைக் கூறுகிறேன். எங்கெங்கு நூல் நூற்பானது தொழிலாளர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறதோ அங்கெல்லாம், இந்த முறை கிட்டத்தட்டப் பூரணமாக அனுஷ்டிக்கப்படுகிறது. செருப்புத் தைக்கவும், ஏன் நூற்கவும் கூட இதே முறையில் நான் கற்றுக் கொடுத்திருக்கிறேன். அதில் நல்ல பலனும் கிடைத்திருக்கிறது. இந்த முறையில் வரலாறும் பூகோளமும் இடம்பெருமல் இல்லே. இப்படிப்பட்ட பொது அறிவை வாய்ப்பாடமாகச் சொல்லிக் கொடுப்பதில் நல்ல பலன் கிடைக்கிறது என்பதை நான் கண்டிருக்கிறேன். எழுதியும் படித்தும் எவ்வளவு கற்றுக்கொடுக்க முடியுமோ அதைப்போலப் பத்துமடங்கு இந்த முறையின் மூலம் கற்றுக் கொடுக்க முடியும். எழுத்துக்களேப் பின்ஞல் கற்றுக் கொடுத்துக் கொள்ளலாம். அதாவது, அவசியமானது எது, அவசியமில்லாதது எது என்பதை வேறுபடுத்திப் பார்க்க மாணவன் அறிந்து கொண்டபோது, அவன் (அல்லது அவள்) உணர்ச்சிகளே ஓரளவு வளர்த்துக் கொண்டபோது எழுத்தைக் கற்றுக் கொடுக்கலாம். இது புரட்சிகரமான முறைதான். ஆனுல் இது எவ்வளவோ உழைப்பை மீதப்படுத்துகிறது. நீண்டகாலம் கற்றுக்கொள்ள வேண்டிய கல்வியை ஒரே ஆண்டில் கற்றுக்கொள்ள உதவுகிறது. ஆகவே எல்லாவகையிலும் இது சிக்கனமே. மாணவன் தனது கைத்தொழிலேக் கற்றுக் கொள்ளும்போதே கணக்கையும் கற்றுக் கொள்கிருன்.

## மக்களின் அறியாமை

ஆரம்பக் கல்விக்குத்தான் நான் மிகப் பெரிய முக்கியத்துவம் அளிக்கிறேன். என்னுடைய கருத்துப்படி அது, ஆங்கிலம் மட்டும் இல்லாத தற்போதைய மெட்ரிகுலேஷன் படிப்புக்குச் சமமானதாக இருக்க வேண்டும். கல்லூரிப் படிப்பாளிகள் எல்லோரும் திடீரென்று தாங்கள் பெற்ற அறிவை மறந்து விடுகிருர்கள்

என்று வைத்துக்கொள்ளுங்கள். ஒரு சில இலட்சம் கல்லூரிப் படிப்பாளிகளுடைய ஞாபக சக்தி போனதனால் ஒருவகையில் நஷ்டம் ஏற்படும். ஆனால் முப்பது கோடி மக்களைச் சூழ்ந்து இருந்து வந்திருக்கும் அறியாமை இருளினால் ஏற்பட்ட நஷ்டத்துடன் ஒப்பிட்டால் அந்த நஷ்டம் ஒன்றுமேயில்லை. தற்போது கோடிக் கணக்கான கிராமவாசிகள் மத்தியில் அறியாமை நிறைந்து கிடக்கிறது. எழுத்தறிவின்மையை மட்டும் கொண்டு இந்த அறியாமையைச் சரியாக அளவிட முடியாது.

### உயர்தரக் கல்லூரிகள்

கல்லூரிப் படிப்பை நான் புரட்சிகரமாக மாற்றியமைப்பேன். தேசத்தின் அத்தியாவசியத் தேவைகளுக்கும் அதற்கும் தொடர்பு இருக்குமாறு செய்வேன். மெக்கானிகல் என்ஜினியர்களுக்கும் மற்ற என்ஜினியர்களுக்கும் பட்டங்கள் அளிக்கப்படும். அவர்கள் பல்வேறு தொழிற்சாலைகளில் இணைந்து பணியாற்றுவார்கள். இந்தத் தொழிற்சாலைகள், தங்களுக்கு வேண்டிய பட்டதாரிகளின் பயிற்சிக்காகப் பணம் செலவழிக்க வேண்டும். இவ்வாறு, என்ஜினியர்களின் பயிற்சிக்காக டாடா ஸ்தாபனம் ஒரு கல்லூரி நடத்தும் என எதிர்பார்க்கலாம். அரசாங்கத்தின் மேற்பார்வையில் இந்தக் கல்லூரி நடைபெறும். ஆலைகளின் சங்கங்கள் கூட்டாக ஒரு கல்லூரி நடத்தலாம். இதில் தங்களுக்குத் தேவையான பட்டதாரிகளுக்குப் பயிற்சி அளிக்கலாம். இதேபோன்று மற்றும் பல தொழில்களைக் குறிப்பிடலாம். வணிகத்துக்கும் தனிக் கல்லூரி இருக்கும். இதற்குமேல் கலை, மருத்துவம், விவசாயம் ஆகியவை இருக்கின்றன. அநேக தனிப்பட்ட கலைக்கல்லூரிகள் இன்று சுய தேவைப் பூர்த்தி உள்ளவைகளாக இருக்கின்றன. ஆகையால் அரசாங்கம் தனக்குச் சொந்தமான கல்லூரியை நடத்த வேண்டிய அவசியம் இராது. மருத்துவக் கல்லூரிகள், அத்தாட்சி பெற்ற ஆஸ்பத்திரிகளுடன் இணைந்ததாக இருக்கும். தனவந்தர்கள் வைத்தியக் கல்லூரிகளின்மீது ஆசை வைத்திருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் தாங்களாகவே முன்வந்து வைத்தியக் கல்லூரிகளை ஆதரிக்கலாம். விவசாயக் கல்லூரிகள் உண்மையிலேயே விவசாயக் கல்லூரிகளாக இருக்க வேண்டுமானால், சுய தேவைப் பூர்த்தி உள்ளவைகளாக இருக்கவேண்டும். சில விவசாயப் பட்டதாரிகளைப்பற்றி எனக்கு வருந்தத்தக்க அனுபவம் உண்டு. அவர்களுடைய அறிவு வெறும் ஏட்டுப் படிப்புத்தான். அவர்களுக்கு நடைமுறை அனுபவம் இல்லை. வெளி உதவியின்றி சொந்த பலத்தில் கட்டுபடியாகக் கூடிய பண்ணைகளில், நாட்டின்

தேவைகளைப் பூர்த்தி செய்யும் பண்ணைகளில் அவர்கள் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு செய்திருந்தால், தங்களுடைய பட்டங்களைப் பெற்ற பின்பு அவர்கள் நேரடி அனுபவம் பெற வேண்டும் என்ற அவசியம் இருக்காது. தங்களுடைய அதிபர்கள் செலவில் அனுபவம் பெறவேண்டும் என்ற அவசியமும் இருக் காது.[7]

### அறிவுக்கும் உழைப்பு அவசியம்

சரியான ஆசிரியர்களை மட்டும் அளியுங்கள். நம்முடைய குழந்தைகளுக்கு உழைப்பின் பெருமை கற்றுக்கொடுக்கப்பட்டு விடும். அதைத் தங்களுடைய அறிவு வளர்ச்சிக்கு ஒரு இன்றி யமையாத அங்கமாகவும் சாதனமாகவும் கருத அவர்கள் கற்றுக் கொள்வார்கள். தங்களுடைய உழைப்பின்மூலம் தங்களுடைய படிப்புக்கு வேண்டிய கட்டணத்தைச் செலுத்துவதுதான் தேச பக்தியாகும் என்பதையும் உணருவார்கள். என்னுடைய யோசனையின் தாத்பர்யம் இதுதான்: உற்பத்தி வேலைகளுக்காக மட்டும் கைத்தொழில்களைக் கற்கவேண்டும் என்பதல்ல. மாண வர்களின் அறிவு வளர்ச்சிக்காகவும் கற்கவேண்டும். ஏழு வய துக்குமேல் பதினான்கு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளின் பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். உற்பத்திக்கான உழைப்பின்மூலம் அவர்களுடைய உடலுக்கும் மனதுக்கும் பயிற்சி அளிக்கிறது. அப்புறமும் அப் பள்ளிகள் சுயதேவைப்பூர்த்தி உள்ளவைகளாக முடியவில்லை யென்றால், அப்பள்ளிகள் வெறும் ஏமாற்று வித்தைகளாகவும் அதிலுள்ள ஆசிரியர்கள் அடிமுட்டாள்களாகவுந்தான் இருக்க வேண்டும்.[8]

### உழைப்பின்மூலம் கல்வி

"குழந்தைகள் மனதில் எல்லாவிதமான தகவல்களையும் வைத் துத் திணிக்கவேண்டும்"— இதுவரை நாம் ஒருமனதான கவனம் செலுத்தியதெல்லாம் இதில்தான். அந்த மனதைத் தூண்டி வளர்க்க வேண்டுமே என்பதைப்பற்றி நாம் ஒருபோதும் எண் ணிப் பார்த்ததில்லை. இப்போது இதை நாம் நிறுத்திவிடுவோம். உடல் உழைப்பின்மூலம் சரியானமுறையில் குழந்தைக்குக் கல்வி கற்றுக்கொடுப்பதில் ஒரு மனதான கவனம் செலுத்துவோம். உடல் உழைப்பை ஒரு பக்க வேலையாக அல்லாமல், அறிவுப் பயிற் சிக்குப் பிரதான சாதனமாக வைத்துக் குழந்தைக்கு கல்வி கற்றுக் கொடுப்போம்.[9]

**பள்ளிக் கல்வி**

பள்ளிகளில் இப்போது கற்றுக்கொடுப்பவற்றில் ஆங்கிலம் தவிர மற்ற எல்லாம் இருக்கவேண்டும். அவைகளுடன் டிரில், இசை, சித்திரம் வரைதல் ஆகியவைகளும் நிச்சயமாக ஒரு கைத்தொழிலும் இருக்கவேண்டும். பள்ளிகளில் நான் விரும்பும் கல்வி இதுவே. [10]

**பொருளாதார வரவு செலவு**

இந்தியாவில் ஆரம்பக்கல்வி இலவசமாகவும் கட்டாயமாகவும் இருக்கவேண்டும். இதில் உறுதியான நம்பிக்கை உள்ளவன் நான். உபயோகமுள்ள ஒரு கைத்தொழிலைக் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். அவர்களுடைய மன, உடல், ஆன்மீக சக்திகளைப் பண்படுத்துவதற்கு அதை ஒரு சாதனமாகப் பயன் படுத்தவேண்டும். இவ்வாறு கற்றுக்கொடுப்பதன் மூலந்தான் மேலே நான் கூறியதைச் சாதிக்கமுடியும். கல்வி தொடர்பாக நான் கூறும் இந்தப் பொருளாதார வரவுசெலவுக் கணக்குகளைக் கஞ்சத்தனமான யோசனையென்றோ அல்லது சம்பந்தா சம்பந்த மற்ற யோசனையென்றோ யாருங் கருதிவிடவேண்டாம். பொருளா தார வரவு செலவைப் பார்ப்பதால் எதுவுமே கஞ்சத்தனமாகி விடாது. உண்மையான பொருளாதாரம் மிக உயர்ந்த ஆன்மீக நெறிக்கு ஒருபோதும் விரோதமானதல்ல. அதேபோன்று உண் மையான அறநெறி என்பதெல்லாம் நல்ல பொருளாதாரமாகத் தான் இருக்கவேண்டும். [11]

**நகரக் கல்வி**

நகரப்பள்ளிகளில் உள்ள குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்க எப்படிப்பட்ட தொழில்கள் மிகச் சிறந்தவை? இது சம்பந்த மாகத் திட்டவட்டமான விதி எதுவுங் கிடையாது. ஆனல் இதில் என் பதில் தெளிவானது. இந்தியாவில் உள்ள கிராமங் களுக்கு நான் புத்துயிர் கொடுக்க விரும்புகிறேன். இன்று நம்மு டைய கிராமங்களெல்லாம் ஏதோ நகரங்களை ஒட்டிக்கொண் டிருக்கின்றன, அவ்வளவுதான். நகரங்கள் சுரண்டுவதற்காகவே அவை இருப்பதுபோல் தோன்றுகிறது. நகரங்களின் இணக்கத் தையே அவை சார்ந்து இருக்கின்றன. இது இயற்கைக்கு முரண னது. கிராமங்களிடமிருந்துதான் நகரங்கள் பலமும் வாழ்வும் பெறு கின்றன. இந்தக் கிராமங்களைச் சுயநலத்துக்காக நகரங்கள் சுரண்டு வதற்கு விரும்பக் கூடாது. அதற்குப் பதிலாக, அக்கிராமங்களுக் குப் போதுமான அளவு பிரதியுபகாரம் செய்யவேண்டும். அப்

போதுதான் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையே நல்ல, தார்மீக உறவு நிலவும். இந்தச் சமூகப் புனரமைப்பு ஒரு மாபெரும் பணி, பெருமை நிறைந்தபணி. இப்பணியில் நகரங்களில் உள்ள குழந்தைகளும் தங்கள் கடமையைச் செய்யவேண்டும். அவ்வாறு செய்ய வேண்டுமானல், அவர்கள் எந்தத் தொழில்களின் மூலம் தங்கள் கல்வியைப்பெற விரும்புகிருர்களோ அந்தத் தொழில்கள் கிராமங்களின் தேவைகளுடன் நேரடியாகத் தொடர்புள்ளவை களாக இருக்கவேண்டும். நான் அறிந்தவரை பருத்தி சம்பந்த மான பல்வேறு வேலைகள்தான்—பஞ்சு அரைப்பது, சுத்தப்படுத்து வது ஆகியவற்றிலிருந்து நூல்நூற்பதுவரை-இந்த நிபந்தனைகளைப் பூர்த்திசெய்யும். அதன் அளவு வேறு எந்தத் தொழிலும் வெற்றி பெருது. இன்றுகூடக் கிராமங்களில்தான் பருத்தி உற்பத்தியாகிற தென்ருலும் அது அரைக்கப்படுவதும் நூற்கப்படுவதும் நெய்யப் படுவதும் நகரங்களில்தான். ஆனல், ஆலைகளில் பருத்தி சம்பந்தமாக நடைபெறும் பல்வேறு வேலைகள்—ஆரம்பத்திலிருந்து இறுதிவரை —மனிதர்களையும் பொருள்களையும், இயந்திர சக்தியையும் மிகவும் வீணுக்குகின்றன.

**கைத்தொழில் கல்வி அனுகூலம்**

நூல் நூற்பது, பட்டை போடுவது போன்ற கிராமக் கைத் தொழில்களின் மூலம் ஆரம்பக் கல்வியைக் கற்றுக் கொடுக்க வேண்டுமென்பது எனது திட்டம். எனது இந்த திட்டம் ஒரு அரவமுமில்லாத மௌனமான சமூகப் புரட்சிக்கு முன்னேடித் திட்டமாகக் கருதப்படுகிறது. இதனல் மிகப் பெரிய பலன்கள் விளையும் என்று கருதப்படுகிறது. நகரத்துக்கும் கிராமத்துக்கு மிடையே ஒரு நல்ல, தார்மீக உறவுக்கான அடிப்படையை அது ஏற்படுத்தும். தற்போது சமூகம் ஒரு நிலை இல்லாதாக இருக்கிறது. இதனல் பல தீங்குகள் ஏற்படுகின்றன. பல்வேறு வர்க்கங் களுக்குமிடையே உள்ள உறவு கசப்பானதாக இருக்கிறது. இக்குறைபாடுகளை அகற்றுவதில் என்னுடைய திட்டம் உதவும். நம்முடைய கிராமங்கள் நாளுக்குநாள் சீர்கெட்டுக் கொண்டு போவதை இது தடுக்கும்; ஒரு நியாயமான சமுதாய அமைப் புக்கான அஸ்திவாரமிடும். இப்படிப்பட்ட சமுதாய அமைப்பில் செல்வந்தர்களுக்கும் ஏழைகளுக்கு மிடையே இயற்கைக்கு முரணன முறையில் தற்போதுள்ள ஏற்றத் தாழ்வுகள் இருக்கமாட்டா. ஒவ்வொருவருக்கும் கட்டுபடியாகக் கூடிய ஊதியம் கிடைக்கும். சுதந்திரம் பெறுவதற்கான உரிமையும் கிடைக்கும். இரத்தம் சிந்த வேண்டிய ஒரு வர்க்கப் போராட்டம் இல்லாமல் இதை அடைய முடியும். அதுமட்டுமல்ல, இந்தியாவைப் போன்ற ஒரு பறந்த

கண்டத்தைக் கைத்தொழில் மயமாக்குவதில் ஏற்படக்கூடிய பெரும் மூலதனச் செலவு இல்லாமல் இது கிட்டும். மேலும், நிராதரவான முறையில் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான இயந்திரத்தையோ அல்லது தொழில் நுணுக்கத்திறனையோ சார்ந்திருக்க வேண்டிய அவசியமும் இருக்காது. கடைசியாக இதனல் கிடைக்கக்கூடிய அனுகூலம் மிக உயர்ந்த தனித்திறன் எதுவும் இதற்குத் தேவைப்படாது என்பதே. இதனல் மக்களுடைய எதிர்காலம் அந்த மக்களின் கைகளிலேயே இருக்கும். ஆனல் பூனைக்கு மணி கட்டுவது யார்? நகர மக்கள் நான் கூறுவதைக் கேட்பார்களா? அல்லது என்னுடைய குரல் விழலுக்கிறைத்த நீராகிவிடுமா? இந்தக் கேள்விகளுக்கும் மற்றும் இதைப்போன்ற கேள்விகளுக்கும் உரிய பதில் கிடைப்பது, என்னைக் காட்டிலும், நகரங்களில் வாழும் கல்வி அபிமானிகளையே அதிகம் சார்ந்தது.[12]

**மனிதனின் முழு வளர்ச்சி**

இப்படிப்பட்ட கல்வி அளிப்பதானல், அது தனது செலவைத் தானே சரிக்கட்டிக் கொள்ளக் கூடியதாய் இருக்கும். இதுதான் அதனல் நேரடியாக ஏற்படக் கூடிய விளைவு. ஆனல், அதன் வெற்றியைத் தீர்மானிக்கக்கூடிய முக்கிய அம்சம் இதுவல்ல. கைவேலைப்பாட்டுத் தொழிலை விஞ்ஞான பூர்வமான முறையில் கற்றுக்கொடுப்பதன் மூலம், முழுமனிதனை ஒருவன் வளர்ச்சியடைய முடியும் என்பதுதான். உண்மையில், எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் வரவு செலவு சரிக்கட்டக்கூடியதாக இதை ஆக்குவதாய் உறுதிமொழி அளிக்கும் ஒரு ஆசிரியரை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். மாணவன் தனது ஒவ்வொரு திறமைக்கும் வாய்ப்பு இருக்கும் ஒரு கல்வியைக் கற்றுக்கொள்கிறுன். இந்த உண்மையிலிருந்து தர்க்க ரீதியாகப் பெறக் கூடியதென்னவென்றால் இக்கல்வி சுய ஆதாரமுள்ளதாய் இருக்கும் என்பதுதான். ஒரு கைத்தொழிலில் நாள்தோறும் மூன்று மணி நேரம் வேலை செய்யக் கூடிய ஒரு பையன் தனது வாழ்க்கைக்கு வேண்டிய பணத்தைத் தேடிக்கொள்ள முடியுமானல், தனது மன, ஆன்ம வளர்ச்சியின் மூலம் அந்த வேலையைச் சிறப்பிக்கிறவன் எவ்வளவு அதிகமாகச் சம்பாதிக்க முடியும்![13]

**கிராமங்களே இந்தியா**

நாட்டில் நம்மைச் சுற்றியுள்ள சூழ்நிலை இருக்கிறதே அதிலிருந்து இயற்கையாக வளர்ச்சி யடைந்தது ஆதாரக்கல்வி. உண்மையில், இச் சூழ்நிலையின் எதிரொலிதான் அது. ஆகையால் சூழ்நிலையை அனுசரித்து அதுவும் வளரும். இந்தியாவில் உள்ள

ஏழு இலட்சம் கிராமங்களிலும் அதில் வாழும் கோடிக்கணக்கான மக்களிடமும் இந்தச் சூழ்நிலை பரவிக் கிடக்கிறது. நீங்கள் அவர்களை மட்டும் மறந்து விட்டீர்களானால், இந்தியாவையே மறந்தவர்களாவீர்கள். நகரங்களில் உண்மை இந்தியாவைக் காண முடியாது. இங்குள்ள எண்ணற்ற கிராமங்களில்தான் அது இருக்கிறது.

**அடிப்படை அம்சங்கள்**

ஆதாரக் கல்வியின் அடிப்படையான அம்சங்களாவன :—

1. எல்லாக் கல்வியும் தனது செலவைத் தானே சரிக்கட்டிக்கொள்ளக் கூடியதாய் இருக்கவேண்டும். அதாவது, இறுதியில் கணக்குப் பார்த்தால், மூலதனம் தவிர மற்ற நடைமுறைச் செலவுகளை யெல்லாம் அளிக்கக் கூடியதாய் இருக்க வேண்டும். இந்த மூலதனமும் கரையாது அப்படியே இருக்க வேண்டும்.

2. இந்தக் கல்வியின் இறுதிக் கட்டம் வரை, கைவேலைத் திறமைக்கு இடம் இருக்கும். அதாவது, ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட காலம் ஏதாவது ஒரு கைத்தொழிலில் மாணவர்கள் ஈடுபட்டுக்கொண்டிருப்பார்கள்.

3. எல்லாக் கல்வியுமே அந்தந்த மாநில மொழியின் மூலமே கற்பிக்கப்படவேண்டும்.

4. இதில் தனித்தனி மதபோதனைக்கு இடமில்லை. சர்வ மதங்களுக்கும் சமரசமான அடிப்படை அறநெறிக்கு முழு இடமுண்டு.

5. இந்தக் கல்வி குழந்தைகளுக்கோ, அல்லது வயதானவர்களுக்கோ, ஆண்களுக்கோ அல்லது பெண்களுக்கோ, யாருக்கு அளிக்கப்பட்டாலும், அதன் பயன் அம்மாணவர்களின் இல்லங்களுக்கும் கிடைக்கும்.

6. இந்தக் கல்வியைப் பெறக்கூடிய கோடிக்கணக்கான மாணவர்கள், தாங்கள் இந்தப் பரந்த தேசத்தைச் சேர்ந்தவர்கள் என்று கருதுவார்களாதலால், அவர்கள் பல்வேறு மாநிலங்களுக்கிடையே பேசக் கூடியதொரு மொழியைப் படித்துக்கொள்ள வேண்டும். இந்தப் பொது மொழியானது நாகரி அல்லது உருது லிபியில் எழுதப்பட்ட இந்துஸ்தானியாகத்தான் இருக்க முடியும். ஆகையால், மாணவர்கள் இரண்டு லிபிகளிலுமே தேர்ச்சி பெற வேண்டியது அவசியம்.[14]

# II

## தொழிலும் தொடர்பான பொருளும்

எல்லாப் பயிற்சியுமே ஏதாவதொரு ஆதாரமான தொழிலை அடிப்படையாகக் கொண்டதாய் இருக்க வேண்டும். 7 அல்லது 10 வயதான ஒரு குழந்தைக்கு ஒரு தொழிலின் மூலமாக நீங்கள் அறிவைப் போதித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அத்தொழிலுடன் சம்பந்தப்படாத பாடம் எதையுமே நீங்கள் ஆரம்பத்தில் எடுக்கக் கூடாது. நீங்கள் இதைச் செய்து வந்தால் ஆரம்பத்தில் நீங்கள் விலக்கி வைத் திருந்த பல விஷயங்களை அந்தக் கைத்தொழிலுடன் தொடர்பு படுத்துவதற்கான வழி வகைகளை நாளாவட்டத்தில் தெரிந்து கொள்வீர்கள். ஆரம்பத்தில் இவ்வாறு சில விஷயங்களை ஒதுக்கி வைப்பதன் மூலம், உங்களுடைய சக்தியையும் மாணவர்களுடைய சக்தியையும் மீதப்படுத்தியவர்களாவீர்கள். இன்று நம்மிடம் இக்கல்விக்கு வேண்டிய புத்தகங்கள் இல்லை. நாம் பின்பற்றக் கூடிய முன் மாதிரி இல்லை. ஆகையால், நாம் மெதுவாகவே செல்ல வேண்டியிருக்கிறது. இதில் பிரதானமானது என்ன வென்றால், ஆசிரியரின் மனம் புத்துணர்ச்சியுடன் இருக்கவேண் டும் என்பதுதான். கைத்தொழிலுடன் தொடர்புபடுத்த முடியாத ஒரு விஷயத்தைக் காண்கிறீர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது ஆத்திரமடைந்து விடாதீர்கள்; அதைரிய மடைந்து விடாதீர்கள். அதை விட்டுவிட்டு, தொடர்பு படுத்தக் கூடிய மற்ற விஷயங்களுடன் முன்னேக்கிச் செல்லுங்கள். வேறு ஆசிரி யர் சரியான வழியில் சிந்தித்துப் பார்த்து அதையே தொடர்பு படுத்திக் காண்பிக்க முடியலாம். இவ்வாறு பலருடைய அனுப வங்களை நீங்கள் ஒருங்கு திரட்டினீர்களானல், உங்களுக்கு வழி காட்டியாக இருக்கக் கூடிய நூல்கள் கிடைக்கும். உங்களைப் பின்பற்றுபவர்களுடைய வேலையும் எளிதாகிவிடும்.

## வாழ்நாள் முழுதும்

"இவ்வாறு சில பாடங்களை ஒதுக்கிவைக்கும் பணியை எவ்வளவு காலத்துக்குத்தான் செய்துகொண்டு போவது?" என்று நீங்கள் கேட்கலாம். "வாழ்நாள் முழுவதுந்தான்" என்பதே எனது பதில். இவ்வாறு செய்துகொண்டே போகும்போது, முதலில் விலக்கி வைத்த பல விஷயங்களைப் பின்னல் சேர்த்துக் கொண்டிருப்பீர்கள். சேர்ப்பதற்குத் தகுதியான விஷயங்களெல் லாம் சேர்க்கப்பட்டிருக்கும். இறுதிவரை நீங்கள் ஒதுக்கிவைத்த

ஒரு பொருள், மிகவும் மேற்போக்கானதாகவும் விலக்கி வைக்கத் தகுதியானதாகவும் இருக்கும். இவைகளை யெல்லாம் இறுதியில் நீங்கள் காண்பீர்கள். என்னுடைய வாழ்க்கை அனுபவம் இது தான். நான் எவ்வளவு காரியங்களைச் செய்திருக்கிறேனோ அவ் வளவு காரியங்களை ஒதுக்கி வைத்திருக்கிறேன். இல்லையேல் அத்துணை காரியங்களைச் செய்திருக்க முடியாது.

### கலைத்திறன் வளர்ச்சி

நம்முடைய கல்வி முறையைப் புரட்சிகரமாக மாற்றியமைக்க வேண்டும். கையின் மூலமாக மூளைக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். நான் ஒரு கவிஞனாக இருந்திருந்தால் கையிலுள்ள இந்த ஐந்து விரல்களின் அற்புதத்தைப் பற்றி நான் கவி தையே இயற்றி யிருப்பேன். மனம்தான் எல்லாம், கையும் காலும் ஒன்றுமேயில்லை என்று நீங்கள் ஏன் எண்ணவேண்டும்? கைகளுக் குப் பயிற்சி அளிக்காதவர்கள், சாதாரணக் கல்விமுறை என்னும் நொடி நிறைந்த வண்டித் தடத்திலேயே செல்பவர்கள், வாழ்க் கையின் இசையை அறியாதவர்களாவார்கள். அவர்களுடைய கலைத்திறனுக்கெல்லாம் போதிய பயிற்சி தரப்படவில்லை. வெறும் வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டு மூளை அலுத்துப் போகிறது. குழந்தையின் மனம் எங்கோ அலைய ஆரம்பித்து விடுகிறது. கை எதைச் செய்யக் கூடாதோ அதைச் செய்துகொண்டிருக்கிறது. கண்கள் எதைக் காணக் கூடாதோ அதைக் கண்டு கொண்டிருக் கின்றன. காதுகள் எதைக் கேட்கக் கூடாதோ அதைக் கேட்டுக் கொண்டிருக்கின்றன. இவைகள் எல்லாம் எதைச் செய்ய வேண் டுமோ, பார்க்கவேண்டுமோ அல்லது கேட்க வேண்டுமோ, அதை, முறையே, செய்வதோ பார்ப்பதோ கேட்பதோ இல்லை. சரி யானது எது என்பதைத் தேர்ந்தெடுக்க அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படவில்லை. ஆகையால் அவர்களுடைய கல்வியே அவர் களுக்கு அழிவாக முடிகிறது. நல்லதற்கும் கெட்டதற்கும் வேறு பாடு காணக் கற்றுக் கொடுக்காத ஒரு கல்வி, நல்லதை ஏற்க வும் கெட்டதைத் தள்ளவும் கற்றுக் கொடுக்காத ஒரு கல்வி, கல்வி என்ற பெயருக்கே உரித்தானது அல்ல.

### பழைய கருத்து

பழைய கருத்து என்னவென்றால், பள்ளிகளில் ஏற்கனவே உள்ள பாடத் திட்டத்துடன் ஒரு கைத்தொழிலையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதுதான். அதாவது, கல்வியிலிருந்து முற்றிலும் தனியாக இந்தக் கைத்தொழிலை எடுத்துக்கொள்ள வேண்டும். இது அழிவுக்குக் கொண்டு செல்லும் ஒரு தவறு

என்று எனக்குத் தோன்றுகிறது, ஒரு தொழிலை ஆசிரியர் கற்றுக் கொள்ள வேண்டும். அவருடைய அறிவை இந்தத் தொழிலுடன் தொடர்பு படுத்திக் கொள்ள வேண்டும். அப்புறம், அவர் தேர்ந்தெடுத்த கைத்தொழிலின் மூலம் தனது மாணவர்களுக்கு அறிவைப் போதிக்க முடியும்.

**நூல்நூற்பும் கணக்கும்**

உதாரணமாக நூல் நூற்பை எடுத்துக்கொள்ளுங்கள். எனக்குக் கணக்குத் தெரிந்திருந்தாலொழிய, நான் தக்ளியில் எத்தனை கெசம் நூல் நூற்றேன், அது எத்தனை சுற்றுவரும், நான் நூற்ற நூல் என்ன நம்பர் என்பதை யெல்லாம் கணக்கிட முடியாது. இதைச் செய்ய வேண்டுமென்றால் எனக்கு எண்கள் தெரிந்திருக்க வேண்டும். மேலும் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் எல்லாம் கற்றுக் கொள்ள வேண்டும். சிக்கலான கணக்குகளைச் செய்வதற்குச் சில இடுகுறிகளை உபயோகப் படுத்த வேண்டும். அதற்கு அல்ஜீபிராக் கணக்குத் தெரிந்திருக்க வேண்டும். இதில்கூட ரோமன் எழுத்துக்களுக்குப் பதிலாக இந்துஸ்தானி எழுத்துக்களைப் பயன்படுத்த வேண்டுமென்றே நான் வலியுறுத்துவேன்.

**ஜியோமிதியும் தக்ளியும்**

அடுத்தபடியாக ஜியோமிதியை எடுத்துக்கொள்ளுங்கள். ஒரு தக்ளியின் அடித் தகட்டைக் காட்டிலும் ஒரு வட்டத்திற்குச் சிறந்த நேரடி உதாரணப் பொருள் இருக்கிறதா? இவ்வாறு, யூக்லிட் பெயரைச் சொல்லாமலேயே நான் வட்டத்தைப் பற்றிய எல்லாவற்றையும் கற்றுக் கொடுக்க முடியும்.

**வரலாறும் பூகோளமும்**

நூல் நூற்பின் மூலமாக பூகோளத்தையும் வரலாற்றையும் எவ்வாறு கற்றுக் கொடுக்க முடியும் என்று நீங்கள் கேட்கலாம். சிறிது காலத்திற்கு முன்பு ''பஞ்சு—மனித வர்க்கத்தின் வரலாறு'' என்ற புத்தகத்தை நான் படிக்க நேர்ந்தது. அது என்னை மயிர்க்கூச்செரியுமாறு செய்தது. நான் ஒரு காதல் இலக்கியத்தைப் படித்ததைப் போல உணர்ந்தேன். முற்கால வரலாற்றுடன் அது தொடங்கியது. எப்போது, எப்படிப் பஞ்சைப் பயிரிட்டார்கள், அது இப்போது எந்தக் கட்டத்திற்கு வளர்ச்சியடைந்திருக்கிறது, பல்வேறு நாடுகளுக்குமிடையே நடைபெறும் பஞ்சு வாணிகம், மற்றும் இதுபோன்ற விஷயங்கள் ஆகியவை அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டிருந்தன. இவ்வாறு பல்வேறு

நாடுகளின் பெயர்களைச் சொல்ல நேரும்போது, இயற்கை யாகவே அவைகளின் பூகோள அமைப்பையும் வரலாற்றையும் பற்றி நான் சிறிது சொல்லுவேன். யார் யார் ஆட்சிக் காலத்தில், பல்வேறு காலங்களில் ஏற்பட்ட வணிக உடன்படிக்கைகள் கையொப்பமிடப்பட்டன? சில நாடுகள் பஞ்சை இறக்குமதி செய்ய, மற்றும் சில நாடுகள் துணியை இறக்குமதி செய்கின்ற னவே, அது ஏன்? ஒவ்வொரு நாடும் தனக்கு வேண்டிய பஞ்சை ஏன் உற்பத்தி செய்யக் கூடாது?—இவைகளைப்பற்றி யெல்லாம் நான் விளக்குவேன். இது என்னைப் பொருளாதார சாஸ்திரத் துக்கும் விவசாய சாஸ்திரத்தின் அடிப்படையான அம்சங்களுக் கும் கொண்டு செல்லும். பஞ்சின் பல்வேறு வகைகள், எந்தெந்த நிலத்தில் அவை விளையும், அவைகளை எவ்வாறு பயிரிடுவது, எங்கிருந்து அவைகளைப் பெறுவது என்பன போன்ற தகவல் களை யெல்லாம் நான் அவருக்குக் கற்றுக்கொடுப்பேன். இவ்வாறு தக்ளியானது கிழக்கு இந்தியக் கம்பெனியின் வரலாறு முழுவ தற்கும்—அவர்கள் என்ன காரணத்திற்காக இங்கு வந்தார்கள், அவர்கள் எவ்வாறு நம்முடைய நூற்புத் தொழிலை அழித்தார்கள், பொருளாதார நோக்கத்துடன் இந்தியாவுக்கு வந்தவர்கள் பின் னர் எவ்வாறு அரசியல் அபிலாஷை கொண்டவர்களானார்கள், எவ்வாறு அது மொகலாயர்கள், மராத்தியர்கள் ஆகியோருடைய வீழ்ச்சிக்கும், ஆங்கில ஆட்சி ஏற்படுவதற்கும் காரணமாகியது, பின்னால் எவ்வாறு நம்முடைய காலத்தில் மக்களுடைய எழுச் சிக்கு வழி கோலியது என்ற வரலாற்றுக்கெல்லாம்—என்னை அழைத்துச் செல்லும். இவ்வாறாக இந்தப் புதுத் திட்டத்தில் கல்விக்குள்ள சாத்தியக் கூறுகளுக்கு எல்லையே இல்லை. மேலும், குழந்தையானது தனது மனதுக்கோ ஞாபகசக்திக்கோ அனாவ சியமான பாரம் எதையும் ஏற்றிக்கொள்ளாமல் மிக விரைவாக இவைகளை யெல்லாம் கற்க முடியும்?

### தக்ளியின் பல விஞ்ஞானங்கள்

இந்தக் கருத்தை நான் மேலும் விளக்குகிறேன். உடற்கூறு சாஸ்திர விஞ்ஞானி ஒருவர் அதில் நல்ல விஞ்ஞானி ஆவதற்கு, அந்த சாஸ்திரம் தவிர மற்றும் பல விஞ்ஞானங்களையும் கற்றுக் கொள்ள வேண்டும். அதைப் போலவே ஆதாரக் கல்வியையும் ஒரு விஞ்ஞானமாகக் கருதுவதானால், எல்லையற்ற பல்வேறு வகைப் படிப்புக்கு நம்மை அது அழைத்துச் செல்லும். இப்போது தக்ளியின் உதாரணத்தை விரிவுபடுத்திப் பார்ப்போம். ஒரு மாணவ ஆசிரியன் இயந்திரம் போன்று நூற்கும் வேலையில் நல்ல தேர்ச்சி அடைய வேண்டியதுதான். ஆனாலும், அவன் இதுமட்டு

மல்லாது, அதன் அடிப்படை உணர்ச்சியிலும் ஏகாக்ரசித்தமான கவனம் செலுத்த வேண்டும். அப்படிப்பட்ட மாணவ ஆசிரியன் தக்ளியின் மீதும் அதன் பலவேறு அம்சங்களின் மீதும் ஒருமன தான கவனம் செலுத்துவான். "இந்தத் தக்ளியின் தகடு பித்தளை யாலும் கதிர் எஃகினலும் செய்யப்பட்டிருக்கிறதே அது ஏன்?" என்று அவனே தன்னைக் கேட்டுக் கொள்வான். ஆதிகாலத் தக்ளி யில் தகட்டை எப்படியோ செய்தார்கள். அதற்கு முந்திய புராதன காலத் தக்ளியின் ஸ்லேட் அல்லது ஓட்டால் 'தகடு'ம் மரக்குச்சியால் கதிரும் செய்யப்பட்டிருந்தன. இப்போது தக்ளி விஞ்ஞான பூர்வமான வளர்ச்சியடைந்திருக்கிறது. ஆகவே தகட்டைப் பித்தளையாலும் கதிரை எஃகாலும் செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறது. இந்தக் காரணத்தை அவன் கண்டுபிடிக்க வேண்டும். இதன் பின்னர், அந்தத் தகட்டின் விட்டம் அந்தக் குறிப்பிட்ட அளவில்-கொஞ்சங்கூட அதிகமாகவோ குறைச்ச லாகவோ இல்லாமல்-இருக்கிறதே அது ஏன் என்பதை ஆசிரியர் தனக்குத் தானே கேட்டுக்கொள்ள வேண்டும். இந்தக் கேள்வி களுக்குத் திருப்திகரமான முறையில் விடை கண்ட பிறகு, அதில் உள்ள கணக்கைத் தெரிந்துகொண்ட பிறகு, உங்களு டைய மாணவர் ஒரு நல்ல என்ஜினீயர் ஆகிவிடுகிருர்; தக்ளி அவருடைய காமதேனு ஆகிவிடுகிறது. இந்தச் சாதனத்தின் மூல மாகக் கற்பிக்கக்கூடிய அளவுக்கு எல்லையே இல்லாமற் போய்விடு கிறது. உங்களுடைய முயற்சியையும் மனவுறுதியையும் பொறுத் துத்தான் எல்லையே அமைகிறது. நீங்கள் இங்கு மூன்று வாரம் இருந்திருக்கிறீர்கள். இந்தத் திட்டத்தை முழு மனத்துடன் நீங்கள் ஏற்பீர்களானல் இதில் செலவிட்ட நேரத்தை உபயோகமான முறையில் கழித்தவர்களாவீர்கள். 'நான் இதைச் செய்வேன் அல்லது செத்துமடிவேன்' என்று உங்களுக்கு நீங்கள் சொல்லிக் கொள்ளும் அளவிற்கு நீங்கள் அதில் தீவிரங் காட்ட வேண்டும்.

**தச்சனுக இருந்தால்?**

நூற்பைப் பற்றி எனக்குத் தெரியும். அதனல்தான் அதைப் பற்றி விரிவாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நான் ஒரு தச்ச ஞக இருந்தால், இந்த விஷயங்களையெல்லாம் தச்சுத் தொழிலின் மூலமாகக் கற்றுக்கொடுப்பேன். நான் அட்டை வேலை செய்பவனுக இருந்தால், அதன் மூலமாகக் கற்றுக்கொடுப்பேன்.

**புரட்சிகர மாறுதல்**

சொந்தமான மூளையுள்ள கல்வி நிபுணர்கள் நமக்கு வேண்டும். உண்மையான ஆர்வத்தினல் தூண்டப்பட்டவர்கள் வேண்டும்.

தங்களுடைய மாணவர்களுக்கு என்ன கற்றுக் கொடுக்கலாம் என்பதை அன்றுடம் சிந்தித்துப் பார்ப்பவர்கள் வேண்டும். பெரிய பெரிய புஸ்தகக் கட்டுகளில் ஆசிரியர் இந்த அறிவைப் பெற முடியாது. தன்னுடைய குறிப்பறியுந் திறமையையும் சிந்தனு சக்தியையும் அவர் பயன்படுத்த வேண்டும். ஒரு கைத்தொழிலை அடிப்படையாக வைத்துத் தன்னுடைய மாணவர்களுக்குத் தான் பெற்றுள்ள அறிவைப் (பேச்சின் மூலம்) போதிக்க வேண்டும். இதன் மூலம் போதனு முறையில் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்படும். ஆசிரியரின் கண்ணேட்டத்திலும் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்படும். இதுவரைமேற்பார்வை அதிகாரிகளின் அறிக்கைகளை வைத்துக்கொண்டுதான் எதையும் மதிப்பிட்டார்கள். மேற்பார்வை அதிகாரி எதை விரும்புவர் என்பதை யூகித்து அதைத்தான் நீங்கள் செய்ய விரும்பினீர்கள். ஏனென்றால், அப்போதுதான் உங்களுடைய ஸ்தாபனங்களுக்கு அதிகப்பணம் கிடைக்கும். உங்களுக்கு உயர்ந்த சம்பளம் கிடைக்கும். ஆனல் புது ஆசிரியர் இவைகளிலெல்லாம் நாட்டங்கொள்ள மாட்டார். "நான் என்னுடைய மாணவனைச் சிறந்த மனிதனுக்க வேண்டும். அவ்வாறு செய்துவிட்டால், அவ்வாறு செய்யும்போது என்னுடைய திறமையையெல்லாம் பயன்படுத்தியிருந்தால், நான் என்னுடைய கடமையைச் செய்தவனுவேன். அதுவே எனக்குப் போதும்", என்று அவர் கூறுவார்.[15]

## III

### கிராம மக்களுக்காகவே இக்கல்வி

கிராமத்தில் உள்ள குழந்தைகளை முன் மாதிரியான கிராமவாசிகளாக்குவதற்காகவே இந்தக் கல்வி வகுக்கப்பட்டது. இது பிரதானமாக அவர்களுக்காகவே தயாரிக்கப்பட்டது. இதற்கு வேண்டிய உள்ளுணர்ச்சியெல்லாம் கிராமங்களிலிருந்தே வந்தது. சுயராஜ்யத்தை அதன் அடித்தளத்திலிருந்தே நிர்மாணிக்க விரும்பும் காங்கிரஸ்காரர்களுக்குக் குழந்தைகளை அலட்சியம் செய்யத் தைரியம் வராது. வெளிநாட்டு ஆட்சி நம்மை அறியாமல்-ஆனல் அதே சமயம் நிச்சயமாக-குழந்தைகளின் கல்வியுடன் தொடங்கியது. தற்போதுள்ள ஆரம்பக் கல்வியென்பது ஒரு கேலிக் கூத்தாகும். இந்தியாவில் உள்ள கிராமங்களின் தேவையை, ஏன், நகரங்களின் தேவையைக்கூட கவனியாது அது வகுக்கப்பட்டிருக்கிறது. நகரத்தைச் சேர்ந்த குழந்தைகளோ அல்லது கிராமங்களைச் சேர்ந்த குழந்தைகளோ, அவர்களை

யெல்லாம் இந்தியாவில் எது சிறந்ததோ, எது நிலைத்து நிற்கக் கூடியதோ அதனுடன் இணைக்கக்கூடியது ஆதாரக் கல்வி. அது உடலையும் மனதையும் வளர்க்கிறது. குழந்தை யானது இந்தியப் பண்பாட்டில் படிமானம் கொள்ளுமாறு செய் கிறது; எதிர்காலத்தைப் பற்றிய ஒரு மகத்தான திருஷ்டி கொள்ளுமாறு செய்கிறது; அப்படிப்பட்ட எதிர்காலத்தை அடை வதில், ஒரு மாணவன் அல்லது மாணவி தனது பள்ளிப்படிப் பைத் தொடங்கும்போதிருந்தே தனக்குரிய பங்கை ஏற்குமாறு செய்கிறது.[16]

அத்தியாயம் 14

# விவசாயமும் கால்நடை வளர்ப்பும்-1

**விவசாயம்,**
**கால்நடை முக்கியம்**

நமது கிராமவாசிகள் விவசாயத்தையும், உழுவதற்குக் கால் நடையையும் நம்பியிருக்கிருர்கள். இதைப் பற்றி எனக்கு அவ்வளவு தெரியாது; ஏனென்ருல் எனக்கு இதில் நேரடி அனுபவம் இல்லே. ஆனல் விவசாயமோ அல்லது கால்நடையோ இல்லாத ஒரு கிராமம் கூட இல்லே. எருமை இருக்கிறது; ஆனல், கொங்கணம் முதலிய ஒருசில இடங்கள் தவிர, அது விவசாயத்திற்கு அதிகம் உபயோகப் படுத்தப்படுவதில்லே. நம்முடைய ஊழியரானவர் தமது கிராமத் தில் உள்ள கால்நடை வளத்தில் கவனமாக இருக்க வேண்டும். இந்த ஆஸ்தியை நாம் சரிவரப்பயன்படுத்தாவிட்டால், இந்தியா வுக்குப் பெருங்கேடு சூழும்; நாமும் அழிந்துவிடுவோம். ஏனென்ருல் அப்போது இந்த மிருகங்கள்-மேற்கு நாடுகளேப் போலவே-நமக்கு ஒரு பொருளாதாரச் சுமையாகிவிடும். அவைகளேக் கொல்வதைத் தவிர வேறு வழி இருக்காது!

**''விவசாய'' ஊழியர் தேவை**

இந்த நாட்டு மக்களுக்கு எப்போதும் தவருத, நிரந்தர ஆதர வாக இருப்பது விவசாயம் ஒன்றே என்ற நம்பிக்கை ஆரம்ப முதலே எனக்கு இருந்து வருகிறது. நாம் அதை மேற்கொள்வ துடன் எந்த அளவு அதை அடிப்படையாகக் கொண்டு முன்னேற முடியும் என்பதைப் பார்க்க வேண்டும். கதருக்குப் பதிலாக, விவசாயத்தில் நிபுணர்களாகி நாட்டிற்குச் சேவை செய்ய நம் முடைய இளேஞர்களில் சிலர் முன்வந்தால், நான் அதற்காகக் கவலேப்படமாட்டேன். நாம் விவசாயத்தில் கவனம் செலுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. ஆட்சி நம்முடைய கையில் இருந் தாலொழிய விவசாயத்தில் முன்னேற்றங் காண முடியாதென்று இதுவரை நான் நம்பிவந்தேன். இவ்விஷயத்தில் என்னுடைய கருத்து இப்போது சிறிது மாறுதலடைந்து கொண்டு வருகிறது. தற்போதைய சூழ்நிலேகளிலும் நாம் சிறிது முன்னேற்றங் காண லாம்; வரி செலுத்திய பின்பு கூட விவசாயிக்குச் சிறிது வரு

மானம் கிடைக்குமாறு செய்யலாம் என்று இப்போது நான் உணருகிறேன். விவசாய அபிவிருத்தியின் மூலம் விவசாயிக்குக் கிடைக்கும் அதிகப்படியான வருமானம் என்னவாக இருந் தாலும், அதை ஏதாவது ஒரு காரணங்காட்டி அந்நிய அரசாங்கம் விழுங்கி விடும் என்று ஜவாகர்லால் கூறுகிறுர். ஆனல் இவ்வித நிலைமை இருந்தாலும்கூட விவசாயத்தைப் பற்றி நாம் கூடிய வரை அறிவு விளக்கம் பெற்று அதை விவசாயிகளிடையே பரப்புவ தற்கு அந்நிலை தடையாக இருக்கக்கூடாது என நான் உணரு கிறேன். விவசாயத்தை அபிவிருத்தி செய்வதன் மூலம் விவசாயி களுக்கு அதிகப்படியாகக் கிடைக்கும் வருமானத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டால் நாம் அதை ஆட்சேபிக்கலாம்; அதை எதிர்க்குமாறு மக்களுக்கும் கற்றுக் கொடுக்கலாம். இவ்வாறு கொள்ளையடிக்க முடியாது என்பதை அரசாங்கத்திற்குத் தெளிவு படுத்திவிடலாம். ஆகையால் விவசாயத்தில் அக்கறை கொள்ளக் கூடிய ஊழியர்களை நாம் இனிமேல் கண்டுபிடிக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

### ஒரு பானை சோற்றுக்கு...

ஆகவே, விவசாயம், கால்நடை வளர்ப்பு, மற்ற எல்லா வகை யான கிராமக் கைத்தொழில்கள் ஆகியவற்றின் புனருத்தாரணத் தின் மூலம் மக்களுடைய வாழ்க்கை நிலைமையில் அபிவிருத்தி காண்பதற்கான வழி வகைகளைப் பற்றி நான் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறேன். ஐந்து அல்லது ஆறு கிராமங்களில் நான் வெற்றியடைந்தால்கூட, என் பிரச்னை தீர்ந்ததாகும். ஏனென்ருல் ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்.[2]

### எல்லா நேரமும் விவசாயமா?

அஹிம்சையை மேற்கொண்டு, சத்தியத்தை ஆராதித்து, இயற்கையான முறையில் பிரம்மச்சர்யத்தையுங் கடைப்பிடிக்கும் ஒருவனுக்கு, உடல் உழைப்புத் தான் உண்மையான வரப் பிரசாத மாகும். இந்த உழைப்பு விவசாயம் ஒன்றைத் தான் சார்ந்ததாக இருக்க முடியும். ஆனலும் தற்போதைக்காவது, எல்லோரும் அதை மேற்கொள்ளக் கூடிய நிலையில் இல்லை. ஆகையால் ஒருவர் எப்போதும் நிலத்தை உழுது கொண்டிருப்பதைக் காட்டிலும்– அதை லட்சியமாக வைத்துக் கொண்டு நூற்கலாம், நெசவு செய்ய லாம் அல்லது தச்சு, கொல் வேலை செய்யலாம்.[3]

### கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும்

பல ஆண்டுகளுக்கு முன்பு நான் ஒரு கவிதை படித்தேன்; அதில் உலகத்தின் தந்தை விவசாயியே என வருணிக்கப்பட்டிருந்தது. ஆண்டவன் தான் நம்மைப் பராமரிப்பவர் என்றால், விவசாயி அவருடைய கையாக விளங்குகிறான். நாம் அவனுக்குச் செலுத்த வேண்டிய கடனைத் திருப்பிக் கொடுக்க, என்ன செய்யப் போகிறோம்? இதுவரை நாம் அவனுடைய கடின உழைப்பைக் கொண்டு தான் வாழ்ந்து வந்திருக்கிறோம். நாம் மண்ணிலிருந்து நமது பணியைத் தொடங்கியிருக்க வேண்டும்; ஆனால் அவ்வாறு செய்ய முடியவில்லை. இதில் குற்றம் ஓரளவு என்னுடையது தான்.

### நெற்றி வேர்வை நிலத்தில் விழ...

ஆனால் அரசியல் அதிகாரம் இல்லாமல், விவசாயத்தில் அடிப்படையான சீர்திருத்தம் செய்வது சாத்தியமில்லையென்று கூறக்கூடியவர்கள் இருக்கிறார்கள். பெரும் அளவில் நீராவியையும் மின்சாரத்தையும் பயன்படுத்துவதன் மூலம் விவசாயத்தைத் தொழில் மயமாக்கலாம் என்று அவர்கள் கனவு காண்கிறார்கள். விரைவான பலன்கள் கிடைக்க வேண்டுமென்பதற்காக, நிலவளத்துடன் பேரம் பேசுவது, பயங்கரமான விளைவை ஏற்படுத்தக் கூடிய குறுகிய கண்ணோட்டம் கொண்ட கொள்கையாகிவிடும். இது நிலத்தின் சத்து முழுவதையும் அகற்றி விடுவதில் தான் போய் முடியும். வாழ்க்கைக்கு வேண்டிய உணவைப் பெறுவதற்குத் தனி ஒருவன் நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட வேண்டுமென்றே பூமித் தாய் கேட்கிறாள்.

### விவசாயப் பொருளாதாரம்

இந்த முறை மெதுவாகப் பலன்தரத்தக்கது, முற்போக்கற்றது என்று மக்கள் குறை கூறலாம். திடீரென்று பெரும் பலன்கள் கிடைத்து விடுமென்று நான் வாக்குறுதி கூறவில்லை. எனினும், நிலமும் அதில் வாழும் மக்களும் வளமடைவதற்கான திறவுகோல் இதில் இருக்கிறது. கிராமப் பொருளாதாரத்தில் அடிப்படைத் தத்துவமே சுகாதாரமான, சத்துள்ள உணவு கிடைக்க வேண்டுமென்பதிலிருந்துதான் ஆரம்பமாகிறது. ஒரு விவசாயியின் வருமானத்தில் பெரும் பகுதி அவனுக்கும் அவனுடைய குடும்பச் சாப்பாட்டிற்கும் போய் விடுகிறது. மற்ற விஷயங்களெல்லாம் இதற்குப் பின்னால்தான் வருகின்றன. நிலத்தில்



அப்போதுதான் பிறந்த பசுங்கன்றுக் குட்டியை காந்திஜி தடவிக் கொடுக்கிறுர்.



கால்நடைச் செல்வத்துடன் காந்திஜியும், மாளவியாஜியும்.

உழுது பாடுபடுபவனுக்கு நல்ல உணவு கிடைக்கட்டும். நல்ல, சுத்தமான பால், நெய், எண்ணெய் ஆகியவையும் அசைவனாக இருந்தால் மீன், முட்டை, மாமிசம் ஆகியவையும் போதுமான அளவு கிடைக்கட்டும். உதாரணமாக, அவன் அரை வயிற்றுச் சாப்பாடு சாப்பிடுபவனாக இருந்தால், போதுமான சத்துள்ள உணவு சாப்பிடாதவனாக இருந்தால், அழகான ஆடைகளால் அவனுக்கு என்ன பயன்? குடிதண்ணீர் விநியோகம் போன்ற மற்ற விஷயங்களெல்லாம் இதற்குப் பிறகு வருபவைதான். இவைகளைப்பற்றி யெல்லாம் யோசிக்கும்போது, இயற்கையா கவே மேலும் பல பிரச்னைகள் எழும். விவசாயப் பொருளாதா ரத்தில் இயந்திரக் கலப்பைகள் இருக்கும் இடத்திலும் மின்சாரத் தால் தண்ணீர் இறைப்பதிலும் மற்றும் இதுபோன்ற விஷயங் களிலும், கால் நடைகளுக்கு உரிய இடம் என்னவென்ற பிரச்னை யும் அதுபோன்ற மற்றப் பிரச்னைகளும் தோன்றும். இவ்வாறு படிப்படியாக, கிராமப் பொருளாதாரத்தின் முழுத் தோற்றமும் தெரியும். இவ்வாறு அமையும் ஒரு சித்திரத்தில், நகரங்கள் இயற்கையற்றவையாகத் தோன்றாமல், இன்று இருப்பதைப்போல நாட்டின் கொப்புளங்களாக, மக்கள் நெரிசலாக வாழும் இடங்க ளாகத் தோன்றாமல், தங்களுக்கு இயற்கையாக உள்ள இடத்தை வகிக்கும். நம் கைகளின் உபயோகம் என்னவென்பது நமக்கு மறந்து போய்விடுமோ என்ற அபாயம் தற்போது இருந்து கொண் டிருக்கிறது. மண்ணைத் தோண்டுவது எவ்வாறு, பண்படுத்துவது எவ்வாறு என்பதை மறந்து விடுவது நம்மையே மறந்து விடுவது போலாகும். நகரங்களுக்குச் சேவை செய்துவிட்டாலே நீங்கள் மந்திரிப் பதவி வகிக்கும் பொறுப்பை நிறைவேற்றி விட்டதாக எண்ணினால், அது, ஏழு இலட்சம் கிராமங்களில்தான் இந்தியா அடங்கி யிருக்கிறது என்ற உண்மையை மறந்ததாகும். ஒரு வியாபாரத்தில் மனிதன் தனது ஆன்மாவை இழந்து உலகம் முழுவதையுமே பெற்றாலும் அதனால் அவனுக்கு என்ன லாபம்?[4]

### விவசாயியின் ஆன்மிகம்

நீங்கள் இந்திய விவசாயிகளிடமும் அவர்கள் உங்களிடமும் பேச ஆரம்பித்தவுடன், அவர்கள் வாக்கில் விவேகம் நிறைந் திருப்பதைக் காண்பீர்கள். வெளிக்கு அவர்கள் கரடு முரடாகத் தோன்றினாலும் உள்ளே ஆன்மிகக் களஞ்சியமாக விளங்குவதைக் காண்பீர்கள். இதைத்தான் நான் கலாசாரம் என்று கூறுகி றேன்—இப்படிப்பட்ட ஒன்றை நீங்கள் மேல்நாடுகளில் காண

முடியாது. நீங்கள் ஒரு ஐரோப்பிய விவசாயியிடம் உரையாடிப் பாருங்கள். அவர் ஆன்மிக விஷயத்தில் அக்கறை யில்லாமலிருப்ப தைக் காணலாம்.[5]

**முன்னுதாரணமான குடிமகன்**

இந்திய விவசாயியைப் பொறுத்தவரை, அவன் உடம்பு கரடுமுரடானதாக இருக்கலாம். ஆனல் அதற்குள் சந்ததி சந்ததியாக வந்த ஒரு கலாசாரம் மறைந்திருக்கிறது. மேலே தெரியும் இந்தக் காட்டை அகற்றி விடுங்கள்; அவனுடைய ஏழ்மையையும் அறியாமையையும் போக்கி விடுங்கள். அப்போது, கலாசாரம் பொருந்திய பண்பட்ட சுதந்திரமான குடிமகன் எப் படி இருக்க வேண்டும் என்பதற்குச் சிறந்த முன் உதாரணமாக அவன் திகழ்வதைக் காண்பீர்கள்.[6]

**கற்பிக்க வேண்டிய விஷயங்கள்**

நேரத்தையும் பணத்தையும் எவ்வாறு சிக்கனமாக வைத்துக் கொள்ள வேண்டுமென்பதையும் சுகாதாரத்தை எவ்வாறு போற் றிப் பாதுகாக்க வேண்டும் என்பதையும், நாம் அவனுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். நம்முடைய கிராமங்கள் குப்பை மேடுகள் என்று லயனல் கர்ட்டிஸ் விவரித்துள்ளார். அவைகளை நாம் மாதிரி கிராமங்களாக்க வேண்டும். நமது கிராமங்களைச் சுற்றி நல்ல சுத்தமான காற்று இருந்தாலுங்கூட, கிராம மக்களுக்கு அது கிடைப்பதில்லை. புத்தம் புதிய உணவு வகைகள் அவர் களைச் சுற்றி விளைந்து கொண்டிருந்தாலுங் கூட அவர்கள் அந்த உணவு வகைகளை உண்பதில்லை. இந்த உணவு விஷயத்தில் நான் ஒரு இலட்சிய மனிதனைப்போலப் பேசுகிறேன் ; ஏனென்றால் ஒவ்வொரு கிராமமும் அழகு நிறைந்த ஒரு இடமாக வேண்டும் என்பதுதான் எனது வாழ்க்கையின் இலட்சியம்.[7]

**பொறுமை வேண்டும்**

நமது கிராமங்களை இறுக்கிப் பிடித்திருக்கும் மூன்று நோய் களை நாம் குணப்படுத்த வேண்டும்; அவைகளாவன : (1) கிராம சுகாதாரக் குறைவு (2) பற்றாக் குறை உணவு (3) முயற்சி யின்மை.........அவர்கள் தங்களுடைய சொந்த நலனில் அக்கறைப் பட்டுக் கொள்வது கிடையாது; நவீன சுகாதார முறைகளைப் போற்றுவதில்லை. பூமியைக் கிளறுவது, அல்லது வழக்கமாக அவர்கள் செய்து கொண்டு வரும் வேலைகளைச் செய்வது ஆகிய வற்றுக்கு அப்பால் உடம்பை அலட்டிக் கொள்ள அவர்கள் விரும்புவதில்லை. இந்தக் கஷ்டங்களெல்லாம் உண்மையானவை;

கடுமையானவையுங்கூட. ஆனல் இதற்காக நாம் மனக்குழப்பம் அடைந்துவிடக் கூடாது. நம்முடைய இலட்சியத்தில் நமக்குத் தணியாத நம்பிக்கை இருக்க வேண்டும். நாம் மக்களிடம் பொறுமையாக நடந்துகொள்ள வேண்டும். கிராம சேவையைப் பொறுத்த வரை நாமும் கற்றுக்குட்டிகள் தானே? நீண்ட காலமாக இருந்து வரும் ஒரு நோயை நாம் போக்க வேண்டியதிருக்கிறது. பொறுமையும் இடைவிடாத முயற்சியும் மட்டும் நமக்கு இருக்குமானல், மலையைப் போன்ற கஷ்டங்களையும் சமாளிக்க முடியும். குணப்படுத்த முடியாத நோய் இருப்பதாகக் கூறப்பட்டாலும் பிணியாளர்களை விட்டுத் தாதி (நர்சு)கள் விலகிச் செல்ல முடியுமா? அதைப்போன்ற ஒரு நிலையில்தான் நாம் இருக்கிறோம்.[8]

**தொழில் கல்வி**

முறையாகவும் இலாபகரமாகவும் வருடம் பூராவும் கிராமவாசிகள் வேலை செய்யுமாறு அவர்களைத் தூண்டவேண்டும். அல்லது அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும்—அது நிலத்திலாயினும் சரி, கிராமத் தொழில்களிலாயினும் சரி. கிராமங்களில் நாம் கற்றுக் கொடுக்க வேண்டிய மிகப் பெரிய கல்வி இதுவே.[9]

**இயற்கையான பண்பாடு**

கிராமங்களிடம் காணக்கூடிய பண்படாத கரடுமுரடான தோற்றம் ஒருபுறம் இருந்தாலும்—ஒவ்வொரு தரமாக எடுத்துக் கொண்டு பார்த்தால்—மனித இயல்பில் உள்ள நல்ல அம்சங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு பார்த்தால்—உலகில் உள்ள எந்தக் கிராமவாசியையும் விட அவர்கள் சிறந்தவர்களாகவே இருப்பார்கள். யுவான் சுவாங் காலத்திலிருந்து இந்தக் காலம் வரை இங்கு வந்துள்ள யாத்திரீகர்களில் பெரும்பாலானவர்கள் கூறியுள்ளவையே இதற்குச் சான்ருகும். இந்தியாவில் உள்ள கிராமங்களில் இயற்கையாகக் காணப்படும் கலாசாரம், ஏழைகளின் வீடுகளில் ஒருவன் காணும் கலை, கிராம மக்கள் நடந்து கொள்ளும் முறையில் உள்ள கட்டுப்பாடு ஆகியவைகளெல்லாம் நிச்சயமாக, நீண்ட காலமாக அவர்களை ஒன்ருக இணைத்து வைத்திருந்த மதத்தினல் ஏற்பட்டவைதான்.[10]

**சுரண்டலை ஒழிக்க வேண்டும்**

நிலமற்ற தொழிலாளியாகவோ, அல்லது தனது நிலத்தில் தானே பாடுபடும் நிலச் சொந்தக்காரராகவோ உள்ள விவசாயிக்குத்தான் முதலிடம். இந்தப் பூமியைக் காப்பாற்றுபவன் அவனே. நிலம் அவனுக்குத்தான் உரிமையானது; அவனுக்குத்தான் உரிமையாக வேண்டும். பாடுபடாத நிலச்சுவான்

தாருக்கோ அல்லது ஜமீன்தாருக்கோ அல்ல. ஆனால் அஹிம்சையைக் கடைப்பிடிக்கும் தொழிலாளி, உழைக்காத நிலச்சொந்தக்காரரைக் கட்டாயப்படுத்தி வெளியேற்ற முடியாது. நிலச்சுவான்தார் தன்னைச் சுரண்டுவதைச் சாத்தியமற்றதாகச் செய்யும் முறையில் அவன் பணியாற்ற வேண்டும். விவசாயிகளிடையே மிக நெருங்கிய ஒத்துழைப்பு முற்றிலும் தேவை. இதை இலட்சியமாகக் கொண்ட, விசேஷமான அமைப்புகள் அல்லது குழுக்களை அமைக்க வேண்டும். இவ்விதமான அமைப்புகள் அல்லது குழுக்கள் ஏற்கனவே உள்ள இடங்களில், அவைகளில் அவசியமான சீர்திருத்தம் செய்ய வேண்டும். விவசாயிகள் பெரும்பாலும் எழுத்தறிவில்லாதவர்களாய் இருக்கிறார்கள். வயது வந்தவர்கள், பள்ளிக்குச் செல்லும் வயதுள்ள இளைஞர்கள் ஆகிய இருதரப்பினருக்குமே—ஆண்கள், பெண்கள் ஆகிய இருதரப்பினருக்குமே—கல்வி கற்பிக்க வேண்டும். நிலமற்ற தொழிலாளர்களுக்கு, கண்ணியமான வாழ்க்கை அளிக்கக் கூடியவாறு அவர்களுடைய ஊதியம் உயர்த்தப்பட வேண்டும்—அதாவது, அவர்களுடைய உடல் நலத்துக்குத் தேவையான சத்துள்ள உணவும் இருப்பிட வசதியும் ஆடைகளும் கிடைக்கும் அளவுக்கு உயர்த்தப்பட வேண்டும்.[11]

## தலைமை அமைச்சர் பதவி விவசாயிக்கு

எனக்கு மட்டும் அதிகாரம் இருக்குமானால், நம்முடைய கவர்னர்-ஜெனரலும் தலைமை அமைச்சரும் விவசாயிகள் மத்தியிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இந்தப் பூலோக சாம்ராஜ்யத்தின் வாரிசுகள் விவசாயிகளே என்று சிறு பையனாக இருந்தபோது நான் பள்ளிப் புத்தகங்களில் படித்திருக்கிறேன். நிலத்தில் பாடுபட்டு, தாங்கள் உற்பத்தி செய்ததை உண்டு வாழ்பவர்களையே இது குறிப்பிடுகிறது. இப்படிப்பட்ட விவசாயிகள் மேற்கண்ட உயர்ந்த பதவிகளை வகிப்பதற்கு, நல்ல நடைமுறை அறிவும், மகத்தான துணிச்சலும், பிறர் எள்ளளவும் குற்றஞ்சாட்ட முடியாத நாணயமும், ஐயத்திற்கு இடமில்லாத தேச பக்தியும் உடையவர்களாய் இருந்தால் போதுமானது—அவர்கள் எழுத்தறிவு இல்லாதவர்களாக இருந்தாலும் பரவாயில்லை. இப்போது அவர்களை நாம் அடிமைப்படுத்தியிருக்கலாம். ஆனாலும், செல்வத்தை உண்மையாக உற்பத்தி செய்பவர்கள் என்ற முறையில் அவர்கள் தான் உண்மையான எசமானர்கள். அரசு அலுவலகத்தில் உள்ள உயர்ந்த பதவிகளையும் விவசாயிகளே வகிக்க வேண்டும் என்று என்னிடம்

ஆலோசனை கூறப்பட்டது. அவர்கள் தகுதியானவர்களாகவும், அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் வேலை சம்பந்தமான அறிவு உடையவர்களாகவும் இருந்தால் இந்த யோசனையை நான் ஏற்றுக் கொள்வேன். இப்படிப்பட்ட விவசாயிகள் கிடைக்கும்போது, அமைச்சர்களும் மற்றவர்களும் விலகிக் கொண்டு அவர்களுக்கு இட மளிக்க வேண்டுமென்று, பகிரங்கமாகவே நான் வேண்டுகோள் விடுவேன்.[12]

# அத்தியாயம் 15

# விவசாயமும் கால்நடை நலனும்-II

## நிலப் பிரச்னை

### நில உடைமை

இந்தப் பூமியைக் காப்பாற்றுபவன் விவசாயியே. ஆகையால் நியாயமாக நிலம் அவனுக்கே சொந்தமாக வேண்டும்-ஊரிலில்லாத நிலச் சொந்தக்காரருக்கோ அல்லது ஜமீந்தாருக்கோ சொந்தமாக இருக்கக் கூடாது.[1]

நிலமும் மற்ற எல்லாச் சொத்துக்களும், யார் அதில் பாடுபடுகிறார்களோ அவர்களுக்குத்தான் சொந்தம். ஆனால் துரதிருஷ்டவசமாக, இந்தச் சாதாரண உண்மை, பாட்டாளி மக்களிடமிருந்து மறைந்து இருந்து வந்திருக்கிறது; அல்லது மறைத்து வைக்கப்படுகிறது.[2]

### அஹிம்சை தான் ஒரே வழி!

நீங்கள் பயிரிடும் நிலம் உங்களுக்கே சொந்தமாக வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். ஆனால் அது உடனடியாக உங்களுக்குச் சொந்தமாகி விடமுடியாது. நீங்கள் அதைப் பலாத்காரமாக ஜமீன்தார்களிடமிருந்து பெற முடியாது. அஹிம்சைதான் ஒரே வழி. உங்களுடைய பலத்தை நீங்களே உணர்ந்திருப்பது தான் ஒரே வழி.[3]

### வறுமைக்குக் காரணம்

கண்ணியமாக உயிர் வாழ்வதற்கு எவ்வளவு நிலம் தேவையோ அதற்குமேல் எந்த மனிதனும் நிலம் வைத்திருக்கக் கூடாது. இந்தியாவில் உள்ள பாமர மக்களை வருத்தும் வறுமைக்குக் காரணம், அவர்களுக்குத் தங்களுடையது என்று சொல்லக் கூடிய நிலம் இல்லாமலிருப்பது தான் என்ற உண்மையை யார் தான் மறுக்க முடியும்?

### மனதை மாற்றச் சிறிது காலமாகும்

ஆனால், இதற்கான சீர்திருத்தத்தை நொடிப் பொழுதில் கொண்டு வந்து விட முடியாது என்பதை உணர வேண்டும்.

இதை அஹிம்சா வழியில் சாதிக்க வேண்டுமானல், நிலம் வைத்திருப்போர் நிலம் இல்லாதவர்கள் ஆகிய இரு சார்பினரின் மனதையும் மாற்றித்தான் ஆக வேண்டும். நிலச் சொந்தக்காரர்கள் மீது பலாத்காரம் பிரயோகிக்கப்பட மாட்டாது என்ற உறுதியை அவர்களுக்கு அளிக்க வேண்டும். நிலம் இல்லாத ஏழைகளுக்கு, அவர்கள் விருப்பத்திற்கு முரணுக எதுவும் செய்யுமாறு யாரும் அவர்களைக் கட்டாயப்படுத்த முடியாது என்பதையும், அஹிம்சையை அதாவது தன்னைத் தானே வருத்திக் கொள்ளும் கலையைக் கற்பதன் மூலந்தான் அவர்கள் தங்களுடைய உரிமையைப் பெறமுடியும் என்பதையும் போதிக்க வேண்டும்.[4]

நிலம் உங்களுக்கு எவ்வாறு சொந்தமோ அதைப் போன்று அதில் விவசாயம் செய்பவர்களுக்கும் சொந்தம் என்பதை நான் நிலச் சொந்தக்காரர்களுக்குக் கூறுகிறேன்.[5]

## அடிப்படை விரோதமில்லை

இயற்கையாய் அமைந்த எந்த அவசியத்திலும் எல்லா முதலாளிகளும் நிலச் சொந்தக்காரர்களும் சுரண்டல்காரர்களாய் இருக்கிருர்கள் என்று நான் நம்பவில்லை. அல்லது, அவர்களுடைய நலனுக்கும் பொது மக்களுடைய நலனுக்கும் அடிப்படையான, தீர்த்து வைக்க முடியாத முரண்பாடு எதுவும் இருப்பதாகவும் நான் கருதவில்லை...நமக்குத் தேவையானது, நிலச் சொந்தக்காரர்களையும் முதலாளிகளையும் ஒழித்துக் கட்டுவதல்ல. அதற்குப் பதிலாக அவர்களுக்கும் பொது மக்களுக்கும் இடையே உள்ள உறவை, இன்னும் தூய்மையானதாகவும் மகிழ்ச்சிகரமானதாகவும் ஆக்குவதேயாம்.[6]

## நிலச்சுவான்தார்-குத்தகைக்காரர் ஒத்துழைப்பு

என்னுடைய நோக்கம், உங்கள் உள்ளத்தைத் தொட்டு மனதை மாற்றுவதுதான். அப்போது நீங்கள் உங்களுடைய சொந்த சொத்துக்கள் எல்லாவற்றையும், உங்களுடைய குத்தகைதாரர்களின் தர்மகர்த்தா ஆக நினைத்துக் கொண்டு, அவர்களுடைய நலனுக்கே அதிகமாக அதை உபயோகிப்பீர்கள். காங்கிரசுக்குள்ளேயே சோஷலிஸ்ட் கட்சி என்ற ஒரு புதுக் கட்சி உருவாகிக் கொண்டிருக்கிறது என்ற உண்மையை நான் அறிவேன். காங்கிரசைத் தனது கொள்கைக்கு அது திருப்ப முடிந்தால் என்ன நடைபெறுமென்பது எனக்குத்

தெரியாது. ஆனால் நம்முடைய கோடிக் கணக்கான மக்களிடையே முற்றிலும் நாணயமான, குற்றச்சாட்டுக்கு இடமில்லாத பொது வாக்கெடுப்பு நடத்துவதானல், அவர்கள் முழுவதுமாகப் பணக்காரர்களிடமுள்ள சொத்தைப் பறிமுதல் செய்வதற்கு வாக்களிக்க மாட்டார்கள் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். முதலாளிகள்-தொழிலாளர், நிலச்சுவான்தார்-குத்தகைதாரர் ஆகியோருடைய ஒத்துழைப்புக்காகவும் ஒருமைப்பாட்டிற்காகவும் நான் பாடுபட்டுக்கொண்டிருக்கிறேன்.[7]

### வர்க்கப் போராட்டம் வராமல் தடுக்க...

ஆனல் நான் ஒரு எச்சரிக்கை செய்ய வேண்டும். ஆலைச் சொந்தக்காரர்கள், ஆலைகளின் ஏகபோக உரிமையாளர்களல்ல. ஆலைத் தொழிலாளர்களும் அவர்களைப் போன்றே ஆலைகளில் சம பங்குதாரர்களாவர். எப்போதுமே இதை ஆலைச் சொந்தக்காரர்களுக்கு நான் கூறி வருந்திருக்கிறேன். அதே போன்று, உங்களுடைய நிலத்தின் உரிமை உங்களைப் போன்றே விவசாயிகளுக்கும் உள்ளதாகும். ஆகையால் உங்களுக்குக் கிடைக்கும் லாபத்தை ஆடம்பரமான, மிதமிஞ்சிய வாழ்க்கைக்குப் பயன்படுத்தாமல், அவைகளை விவசாயிகளின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும். உங்களுடைய குத்தகைதாரர்கள் உங்களிடம் நல்லுறவு கொள்ளுமாறு ஒருமுறை செய்து விட்டீர்களானல், உங்களுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போன்று அவர்களுடைய நலனும் பாதுகாப்பாக இருக்கும் என்று அவர்கள் உணருமாறு செய்துவிட்டீர்களானல், உங்களுக்கும் அவர்களுக்குமிடையே மோதல் ஏற்படாது, வர்க்கப் போராட்டம் உண்டாகாது என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.[8]

### விவசாயி தன் பலத்தை உணர்ந்தால் ?

ஜமீன்தாரை ஒழித்துக்கட்ட நான் விரும்பவில்லை. அதே போன்று ஜமீன்தார் அவசியமானவர் என்றும் நான் கருதவில்லை. அஹிம்சா முறையின் மூலம் ஜமீன்தார்கள், மற்ற முதலாளிகள் ஆகியோருடைய மனதை மாற்ற விரும்புகிறேன். ஆகையால் என்னைப் பொறுத்தவரை, வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதது என்பதில்லை. எதிர்ப்பு மிகவும் குறைச்சலாக இருக்கும் ஒருவழியில் செல்வதுதான் அஹிம்சையின் முக்கிய அம்சம்.

விவசாயம் செய்பவர்கள் தங்களுடைய சக்தியை உணரும்போது, ஜமீன்தாரி என்னும் கொடுமை சக்தி இழந்துவிடும். தங்களுடைய உணவுக்கும் உடைக்கும் படிப்புக்கும் குழந்தைகளின் கண்ணியமான படிப்புக்கும் போதுமானது அளிக்கப்படாவிடில், தாங்கள் நிலத்தில் பாடுபடப் போவதில்லை யென்று விவசாயிகள் மட்டும் கூறிவிடுவார்களானல், பாவம் ஏழை ஜமீன்தார் என்ன செய்ய முடியும்? உண்மையில், உழைப்பவன்தான், அவன் எதை உற்பத்தி செய்கிருனே அதற்குச் சொந்தக்காரனுவான். கெட்டிக்காரத்தனமான முறையில் உழைப்பாளிகள் ஒன்று சேருவார்களானல், அவர்கள் எதிர்க்க முடியாத ஒரு சக்தியாவார்கள். வர்க்கப் போராட்டம் அவசியமில்லை யென்று நான் கருதுவதற்கு இதுவே காரணம். ஆனல் அதேசமயம், அது தவிர்க்க முடியாதது என்று நான் கருதுவதாக இருந்தால், அதைப் பிரசாரம் செய்யவோ போதிக்கவோ தயங்கமாட்டேன்.

### முன் மாதிரியான ஜமீன்தார்

ஒரு முன் மாதிரியான ஜமீன்தார், தற்போது விவசாயி தாங்கிக் கொண்டிருக்கும் சுமையில் பெரும் பகுதியை உடனடியாகக் குறைத்து விடுவார். அவர் விவசாயிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, அவர்களுடைய குறைகள் என்னவென்பதை அறிந்து கொள்வார். விரக்தியால் இன்று விவசாயிகளின் வாழ்க்கை நசித்துக்கொண்டிருக்கிறது. அதற்குப் பதிலாக அவர்களுடைய வாழ்க்கைக்கு ஜமீன்தார் நம்பிக்கை யூட்டுவார். சுகாதாரத்தையும் உடல் நலத்தையும் பற்றி அவர்களுக்குள்ள அறியாமையைக் காணும்போது அவருக்கு நிம்மதி ஏற்படாது. கிராமவாசிக்கு வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகள் கிடைக்க வேண்டுமென்பதற்காக, அவர் தானே வறுமை வாழ்க்கைக்கு இறங்கி வருவார்; தமது பொறுப்பில் உள்ள விவசாயிகளின் பொருளாதார நிலைமையைப்பற்றி ஆராய்வார்; பள்ளிகளை ஏற்படுத்துவார்; இந்தப் பள்ளிகளில் விவசாயிகள் குழந்தைகளுடன் தனது பிள்ளைகளையும் சேர்த்துப் படிக்க வைப்பார். கிராமக் கிணறையும் குளத்தையும் சுத்தம் செய்வார். தாங்கள் வசிக்கும் சாலைகளைத் தாங்களே கூட்டவும், தங்களுடைய கக்கூசுகளைத் தாங்களே சுத்தம் செய்யவும்—தாமே இவைகளைச் செய்வதன் மூலம்—விவசாயிகளுக்குப் பயிற்சி அளிப்பார்; விவசாயிகள் தங்கு தடையின்றி உபயோகப்படுத்திக் கொள்வதற்காக தன்னுடைய சொந்தத் தோட்டங்களை முற்றிலுமாகத் திறந்துவிட்டு விடுவார்; தமது சொந்த இன்ப வாழ்க்கைக்காக வைத்துக்கொண்டிருக்கும் அவசியமற்ற கட்டி

டங்களில் பெரும்பாலானவற்றை ஆஸ்பத்திரிக்காகவும் பள்ளிக் கூடத்திற்காகவும் மற்றும் இதுபோன்றவற்றிற்காகவும் பயன் படுத்துவார். காலப்போக்கை மட்டும் முதலாளித்துவ வர்க்கத் தினர் அறிந்து கொள்வார்களானல், தங்களுடைய உடைமைகள் மீதெல்லாம் ஆண்டவன் உரிமை அளித்திருப்பதாகக் கொண் டுள்ள கருத்துக்களை மாற்றிக்கொள்வார்களானல், இன்று கிரா மங்கள் என்ற பெயரில் இருக்கும் ஏழு இலட்சம் கிராமங்களை யும் வெகு விரைவில் சாந்தி, சுகாதார, மகிழ்ச்சி ஸ்தலங்களாக மாற்ற முடியும். முதலாளியானவர், ஜப்பானில் உள்ள (நிலப் பிரபுக் களான) சாமுராய்களைப் பின்பற்றுவதானல், அவர் நஷ்டமடை வதற்கு எதுவும் இல்லை. அதற்குப் பதிலாக அவருக்கு எவ் வளவோ இலாபமுண்டு. ஆகவே இரண்டு வழிகள்தான் நம்முன் இருக்கின்றன; அவை தவிர்க்க முடியாதவையுங்கூட. அதா வது, முதலாளியானவர் தாமாக முன்வந்து தம்மிடமுள்ள சொத் துக்களை ஒப்புவித்துவிட்டு உண்மையான மகிழ்ச்சி பெற வேண் டும். முதலாளி காலாகாலத்தில் விழிப்பு அடையாவிட்டால், எழுச்சி பெற்ற, ஆனல் அறியாமையாலும் பஞ்சத்தாலும் பீடிக்கப்பட்ட, கோடிக்கணக்கான மக்கள் நாட்டில் பெருங் குழப்பத்தை ஏற் படுத்தி விடுவார்கள். எந்தச் சக்திவாய்ந்த அரசாங்கமும் பிர யோகிக்கக் கூடிய ஆயுதந்தாங்கிய படையும் இதைத் தவிர்க்க முடியாமற் போய்விடும்.[10]

## ஜமீன்தார் பொறுப்புக்கள்

காலப்போக்கை ஜமீன்தார்கள் உணர்ந்துகொள்வது நலம். வெறும் வரி வசூலிப்பவர்களாக மட்டும் இருப்பதை அவர்கள் விட்டுவிட்டு தர்மகர்த்தாக்களாக வேண்டும்; அவர்களுடைய குத் தகைதாரர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான நண்பர்களாக வேண்டும். ஜமீன் வருமானத்திலிருந்து தங்கள் சொந்தச் செல வுக்காக எடுத்துக்கொள்ளும் பணத்தை, ஒரு வரையறைக்குள் குறைத்துக்கொள்ள வேண்டும். திருமண விழாக்கள் மற்றும் அதைப் போன்ற சந்தர்ப்பங்களில் கட்டாயமாக வாங்கும் வெகு மதிகள், ஒரு விவசாயியிடமிருந்து மற்ருெரு விவசாயிக்கு நிலத்தை மாற்றும்போதோ அல்லது வரி செலுத்தவில்லை யென்பதற்காக நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்ட ஒரு விவசாயிக்கு மீண்டும் அதே நிலத்தை ஒப்படைக்கும்போதே பெறப்படும் தொகைகள் போன்று ஆட்சேபணைக்குரிய மேல் வருமானங்களை அவர்கள் கைவிட்டு விடவேண்டும். வாரத்தை நிர்ணயம் செய்துவிடுவ துடன், விவசாயிகளுடைய நலனில் முழுமனதுடன் அக்கறை காட்டவேண்டும். குழந்தைகளுக்காக நல்லமுறையில் நிர்வகிக்கப்

படும் பள்ளிகளும், முதியோர்களுக்கான இரவுப் பள்ளிகளும், நோயாளிகளுக்கான ஆஸ்பத்திரிகளும் நடத்தவேண்டும். கிராமத்தின் துப்புரவைக் கவனித்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு தாங்கள் செய்யும் பலவகைப்பட்ட சேவைகளுக்கு ஒரு குறிப்பிட்ட கமிஷன் எடுத்துக்கொள்ளும் நண்பர்களே தாங்கள் என்பதைப் பல்வேறு வகைகளில் கிராமவாசிகளுக்கு நிரூபித்துக் காண்பிக்க வேண்டும். சுருக்கமாகச் சொல்லப் போனால் தாங்கள் அப்பதவியில் இருப்பதன் நியாயத்தை அவர்கள் மெய்ப்பிக்க வேண்டும். அவர்கள் காங்கிரஸ்காரர்களை நம்பவேண்டும். அவர்களே காங்கிரஸ்காரர்களாகி மக்களுக்கும் அரசாங்கத்துக்குமிடையே உள்ள ஒரு பாலந்தான் காங்கிரஸ் என்பதை அறிந்துகொள்ளலாம். மக்களுடைய உண்மையான நலனை மனதில் கொண்டுள்ள எல்லோருமே காங்கிரசின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அதேசமயம், விவசாயிகள், ஜமீன்தார்களிடம் தங்களுக்குள்ள பொறுப்புகளை நிறைவேற்றுகிறார்களா என்பதைப் பார்த்துக்கொள்வார்கள். சட்ட பூர்வமான பொறுப்புகளை நான் கூறவரவில்லை; அவர்களே நியாயம் என்று ஒப்புக்கொண்ட பொறுப்புக்களையே கூறுகிறேன். அவர்களிடமுள்ள நிலங்கள் எல்லாம் தங்களுக்கே பூரணமாகச் சொந்தமானவை, ஜமீன்தார்களுக்குக் கொஞ்சமும் சொந்தமானவையல்ல என்ற தத்துவத்தை அவர்கள் நிராகரித்து விடவேண்டும். அவர்கள் எல்லோரும் ஒரு கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களே. அவ்வாறு அவர்கள் இருக்க வேண்டும். இந்தக் குடும்பத்தின் தலைவராக ஜமீன்தார் இருந்து, பிறர் அவர்களுடைய உரிமைகளை ஆக்கிரமிக்காமல் காப்பாற்ற வேண்டும். சட்டம் எதுவாக இருந்தாலும் சரி, ஜமீன்தாரிமுறை ஏற்கக் கூடிய ஒரு கருத்தாக இருக்க வேண்டுமானால், ஒரு கூட்டுக் குடும்பத்தைப் போன்று அது இருக்க வேண்டும்.

**உமர்காலிப்**

இராமர், ஜனகர் ஆகியோருடைய உதாரணங்களை நான் போற்றுகிறேன். மக்களுக்குப் பாதகமான, எதையும் தங்களுக்குச் சொந்தமென அவர்கள் வைத்துக்கொள்ளவில்லை. தாங்கள் உள்பட எல்லாவற்றையுமே மக்களுக்குத்தான் சொந்தமாக்கினர். மக்களால் அடையமுடியாத வாழ்க்கையை அவர்கள் நடத்தவில்லை; மக்களுடன் இணைந்த வாழ்க்கையே நடத்தினார்கள். ஆனால் அவர்கள் வரலாற்றுப் புருஷர்கள் அல்லவே என்று கருதப்படலாம். அப்படியானால் நாம் அந்த மாபெரும் உமர்காலிப் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். அவர் தம்முடைய பேரறிவாலும் அற்புதமான உழைப்பாலும் ஒரு பரந்த இராஜ்யத்தின் சக்கரவர்த்தியான

லும், ஒரு பாப்பரைப் போன்றுதான் வாழ்ந்தார். தமது காலடியில் இருந்த பெரும் கருவூலங்களின் அதிபராகத் தம்மைக் கருதிக் கொள்ளவில்லை. மக்களுடைய பணத்தை ஆடம்பரச் செலவுகளுக்குப் பயன்படுத்திய அதிகாரிகளுக்கு ஒரு சிம்ம சொப்பனமாக விளங்கினர்.[11]

## நிலப்பிரபுக்களுக்கு எச்சரிக்கை

நிலப்பிரபுக்களுக்கு நான் ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அவர்களைப் பற்றிச் சொல்லப்படுவதெல்லாம் உண்மையானல், அவர்களுடைய இறுதிக்காலம் தொலைவில் இல்லையென்று எச்சரிக்க விரும்புகிறேன். அவர்கள் இனிமேலும் பிரபுக்களாகவும் பண்ணையார்களாகவும் இருக்க முடியாது. அவர்கள் ஏழை விவசாயிகளுடைய தர்மகர்த்தாக்களானல், அவர்களுக்குப் பிரகாசமான எதிர்காலம் இருக்கிறது. பெயரளவில் தர்மகர்த்தாக்களாக இல்லாமல் உண்மையிலேயே தர்மகர்த்தாக்களாக இருப்பவர்களையே மனதிற்கொண்டு இதைச் சொல்கிறேன். இப்படிப்பட்ட தர்மகர்த்தாக்கள், தங்களுடைய உழைப்பிற்கும் தாங்கள் செலுத்தும் கவனத்திற்கும் எது நியாயமோ அதை மட்டும்தான் தங்களுக்கென எடுத்துக்கொள்வார்கள். அப்போது அவர்கள், எந்தச் சட்டமும் தங்களைப் பாதிக்க முடியாது என்பதை அறிவார்கள். விவசாயிகள் அவர்களுடைய நண்பர்களாய் இருப்பார்கள்.[12]

## மக்கள் அபிப்பிராயம்

தற்போதுள்ள ராஜாக்களும் மற்றவர்களும் ஏழை மக்களின் தர்மகர்த்தாக்களாவர் என எதிர்பார்க்க முடியுமா என்று கேட்கலாம். அவர்கள் தாங்களாகவே முன்வந்து தர்மகர்த்தாக்களாகாவிட்டால், சூழ்நிலைகள் இந்தச் சீர்திருத்தத்தை வலியுறுத்தத்தான் செய்யும். இல்லையேல், அவர்கள் முற்றிலும் அழிந்துபோவார்கள். பஞ்சாயத்து ராஜ்யம் அமைக்கப்படும்போது, இம்சையால் எதைச் செய்ய முடியாதோ அதை மக்கள் அபிப்பிராயம் செய்யும். பொதுமக்கள் தங்களுடைய பலத்தை உணராதவரைதான், ஜமீன்தார்களுக்கும் முதலாளிகளுக்கும் ராஜாக்களுக்கும் தற்போதுள்ள அதிகாரம் எல்லாம் செல்லுபடியாகும். ஜமீன்தாரி அல்லது முதலாளித்துவத்துடன் மக்கள் ஒத்துழையாவிட்டால், அது சோகை பிடித்து மடிந்துவிடும். பஞ்சாயத்து ராஜ்யத்தில் பஞ்சாயத்துத்தான் அதிகாரம் செலுத்த முடியும். அந்தப் பஞ்சாயத்தோ தானே இயற்றிய சட்டங்களின் மூலந்தான் செயலாற்றும்.[13]

### பரம்பரையாக வந்த சோஷலிசம்

உண்மையான சோஷலிசத்தைப் பரம்பரையாக, நமது முன்னோர்கள் நமக்குக் கற்றுக்கொடுத்தார்கள். அவர்கள் சொன்னார்கள்: 'எல்லா நிலங்களும் கோபாலுக்குச் சொந்தம். ஆகவே எல்லைக்கோட்டிற்கு இடம் ஏது? மனிதன்தான் இந்த எல்லைக் கோட்டை உண்டாக்கினான்; அவனே அதை அழித்து விடலாம்!' கோபால் என்ற சொல்லிற்கு இடையன் என்பது பொருள். அதற்கு ஆண்டவன் என்றும் பொருள். இக்கால மொழியின்படி அதற்கு அரசாங்கம் அல்லது மக்கள் என்றும் பொருள். தற்போது நிலமானது மக்களுக்குச் சொந்தமாக இல்லை யென்பது மிகவும் உண்மை. ஆனால் இந்தத் தவறு போதனையில் இல்லை. அந்த போதனையின்படி வாழாத நம்மிடமே இருக்கிறது.

### இம்சையில்லாத நல்ல வழி

ருசியா உள்பட எல்லா நாடுகளுமே கடைப்பிடிக்கக் கூடிய ஒரு நல்ல வழியை—இம்சை யில்லாத வழியை—நாம் கடைப்பிடிக்கலாம். பலாத்காரமாகச் சொத்துக்களைப் பறிப்பதற்குப் பதிலாக நாம் கடைப்பிடிக்கக் கூடிய பயனுள்ள மாற்று வழி, கைராட்டினமும் மற்றும் அதையொட்டிய சித்தாந்தங்களும்தான்.[14]

### இறுதியில் நிலம் அரசுக்குத்தான்

அஹிம்சா பூர்வமான எதிர்கால அரசியலமைப்பில் நிலமானது அரசாங்கத்திற்குத்தான் சொந்தமாக இருக்கும். ஏனென்றால், 'எல்லா நிலமும் கோபாலுக்குத்தான்' என்று கூறப்பட்டிருக்கிறதல்லவா? இப்படிப்பட்ட தெய்வீக அமைப்பில், யாருடைய திறமையும் உழைப்பும் வீணாகாது. இம்சா முறையின் மூலம் இது சாத்தியமாகாது. இம்சையின் மூலமாக, நிலச் சொந்தக்காரருக்கு முழு அழிவை ஏற்படுத்தினால், அது இறுதியில் தொழிலாளர்கள் அழிவில்போய் முடியும் என்று கூறப்படுவது சரியே. ஆகவே, நிலச் சொந்தக்காரர்கள் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டால், எந்தத் தரப்பினரும் நஷ்டமடைய மாட்டார்கள்.[15]

## அத்தியாயம் 16

# விவசாயமும், கால்நடை நலனும்-III

### கூட்டுறவு

**கூட்டுப் பசுப் பண்ணை**

பசுப் பண்ணை தனிப்பட்டவர்கள் பொறுப்பில் இருக்க வேண்டுமா அல்லது கூட்டாக நடத்தப்பட வேண்டுமா என்பது நாம் ஆலோசிக்க வேண்டிய மிக முக்கியமான ஒரு பிரச்னையாகும். தனிப்பட்டவர் பண்ணையின் மூலம் பசுவை ஒருபோதும் காப்பாற்ற முடியாது என்று நானே தயங்காது கூறியிருக்கிறேன். பசுவின் விமோசனத்தையும் அதனுடன் எருமையின் விமோசனத்தையும் கூட்டு முயற்சியின் மூலமாகத்தான் சாதிக்கமுடியும். தன்னுடைய வீட்டில் உள்ள கால்நடைகளின் நலனை நல்ல விஞ்ஞான பூர்வமான முறையில் ஒரு தனிப்பட்ட விவசாயி கவனிக்க முடியாது. பசுவின் நிலையும் அதனால் பொதுவாகவே கால்நடைகளின் நிலையும் சீர்கெட்டதற்கு, மற்ற பல காரணங்களுடன், கூட்டு முயற்சியின்மையும் ஒரு முக்கிய காரணமாய் இருந்து வந்திருக்கிறது.

**கால்நடை வதை**
**ஆதரவாளர்கள்**

வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் உலகம் இன்று கூட்டு அல்லது கூட்டுறவு முயற்சியை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. இவ்விஷயத்தில் எவ்வளவோ சாதிக்கப்பட்டும் இருக்கிறது; சாதிக்கப்பட்டும் வருகிறது. அது நம்முடைய நாட்டுக்கும் வந்திருக்கிறது. ஆனால் மிகவும் மாறுபட்ட நிலையில் வந்திருப்பதால், நம்முடைய ஏழை மக்களால் அதன் பயன்களை அடைய முடியவில்லை. நம்முடைய ஜனத்தொகை வேகமாகப் பெருகிக் கொண்டு வருவதால், சாதாரண விவசாயியின் நில உடைமை குறைந்து கொண்டே போகிறது. மேலும், தனிப்பட்டவருக்குச் சொந்தமாக இருப்பது பெரும்பாலும் மிகவும் சொற்ப நிலமே. இப்படிப்பட்ட விவசாயிகள் தங்களுடைய வீடுகளில் கால்நடைகளை

வைத்து வளர்ப்பதென்பது, தற்கொலைக்கு ஒப்பானதாகும். ஆனாலும் இன்று அவர்களுடைய நிலைமை இதுதான். பொருளாதாரத்துக்கு மட்டும் முதல் முக்கியத்துவம் அளிப்பவர்கள், மத, அறநெறி, மனித தத்துவ அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளிக்காதவர்கள், "கால்நடைகளுக்கான செலவு அதிகமாய் இருக்கிறது. அவைகளால் கிடைக்கும் பலனுக்கும் அவைகளுக்கான செலவுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை. ஆகையால் கால்நடைகளால் விவசாயி எல்லையற்ற துன்பத்திற்கு ஆளாகிறான் என்று கூறுகிறார்கள். உபயோகமற்ற கால்நடைகளையெல்லாம் கொல்லாமலிருப்பது அறிவீனம்" என்று கூறுகிறார்கள்.

**ஜீவகாருண்ய வழி**

ஆகவே ஜீவகாருண்யம் உள்ளவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பது தான் கேள்வி. இதற்கான பதில் வெளிப்படையாக எல்லோருக்கும் தெரிந்ததே. அதாவது, நாம் கால்நடைகளின் உயிர்களைப் பாதுகாப்பதுடன் அவைகள் நமக்கு ஒரு சுமையாக இல்லாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். கூட்டுறவு முயற்சியானது நமக்கு இதில் பெருமளவு உதவ முடியும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

**ஒன்பது அனுகூலங்கள்**

கீழ்க்கண்ட அனுகூலங்களைக் கவனிப்பது உதவியாக இருக்கும்:

*1.* கூட்டுப் பண்ணை முறையில், எந்த விவசாயியும் தற்போது வைத்துக்கொண்டிருப்பதைப் போல் தனது வீட்டில் கால்நடைகளை வைத்துக்கொண்டிருக்க முடியாது. அவை காற்றை அசுத்தப்படுத்துவதுடன் சுற்றுப்புறங்களையும் அசுத்தப்படுத்திவிடுகின்றன. மிருகங்களுடன் வாழ்வதில் புத்திக்கூர்மையோ அல்லது ஜீவகாருண்ய உணர்ச்சியோ இல்லை. மனிதன் அதற்காகப் படைக்கப்படவில்லை. கூட்டுப்பண்ணை முறை வந்தால் தற்போது கால்நடைகள் ஆக்கிரமித்துக்கொண்டிருக்கும் இடம் விவசாயிக்கும் அவனது குடும்பத்தினருக்கும் கிடைக்கும்.

2. கால்நடைகளின் எண்ணிக்கை பெருகப் பெருக, விவசாயி தன்னுடைய வீட்டில் வாழ்வது சாத்தியமற்றதாகிறது. இதனால் அவன் கன்றுகளை விற்க வேண்டியதாகிறது; எருமைக் கடாக்களைக் கொல்ல வேண்டியதாகிறது; அல்லது அவைகளைப் பட்டினியாகப் போட்டுக் கொல்ல வேண்டியதாகிறது. கூட்டுறவு

அடிப்படையில் கால்நடைகளைக் கவனித்துக்கொள்ள முடியு மானால், இந்த மனிதத் தன்மையற்ற காரியத்தைத் தவிர்க்கலாம்.

3. கூட்டுக் கால்நடைப் பண்ணை வைத்தால், மிருகங்கள் நோயுறும்போது அவைகளுக்கு வைத்திய வசதி அளிக்க முடி யும். எந்தச் சாதாரண விவசாயியும் தனது சொந்தச் செலவில் வைத்திய வசதிசெய்ய முடியாது.

4. இதே போன்று, கூட்டுப் பண்ணை முறையில், பல பசுக்களைக் கருத்தரிக்க வைப்பதற்கு எளிதாக ஒரு நல்ல காளை மாட்டைத் தேர்ந்தெடுத்து வைத்துக்கொள்ளலாம். இப் படிப்பட்ட மாட்டை வைத்திருப்பவர் தர்மத்திற்காகக் கொடுத் தாலொழிய, தற்போது இந்த வசதி தனிப்பட்டவர்களுடைய மாடு களுக்குக் கிடைக்காது.

5. பொதுவான மேய்ச்சல் நிலமோ அல்லது மிருகங்கள் காலாறுவதற்கு வேண்டிய இடமோ, கூட்டுறவு முறையின் கீழ் எளிதாகக் கிடைக்கும். இப்போதோ இப்படிப்பட்ட எதுவும் தனிப்பட்ட விவசாயிகளிடம் இல்லை.

6. கூட்டுப் பண்ணையில் கால்நடைத் தீனிக்கான செலவு, மிகமிகக் குறைச்சலாகும்.

7. நல்ல விலையில் பால் விற்பனை செய்வது மிகவும் எளி தாகிவிடும். தனிப்பட்ட முறையில் பாலில் தண்ணீர் கலப்பது போன்று, கூட்டுப் பண்ணையில் பாலில் தண்ணீர் கலக்க வேண்டிய அவசியமோ ஆசையோ ஒரு விவசாயிக்கு ஏற் படாது.

8. தனிப்பட்டவர்களிடம் உள்ள ஒவ்வொரு கால்நடையை யும் மருத்துவ சோதனை செய்ய ஏற்பாடு செய்வது முடியாத காரியமாகும். ஆனால் ஒரு கிராமம் முழுவதற்குமான கால்நடை களின் விஷயத்தில் இதை எளிதாகச் செய்யலாம். அதன்மூலம் கால்நடைகளின் இனத்தை அபிவிருத்தி செய்வது எளிதாக இருக்கும்.

9. மேலே கூறிய அனுகூலங்களே, கூட்டுறவுப் பண்ணையை ஆதரிப்பதற்குப் போதுமானவையாக இருக்கும். இவை எல்லா வற்றையும்விட ஆணித்தரமான வாதம் என்னவென்றால், இது வரை தனிப்பட்டவர்கள் கால்நடைகளை வளர்த்ததானது, நம்மை யும் சரி, கால்நடைகளையும் சரி பரிதாபமான நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டிருக்கிறது என்பதாகும். இந்த அவசிய

மான மாறுதலைச் செய்வதன் மூலந்தான் நாம் நம்மையும் அவர்களையும் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

**கூட்டுறவு விவசாயப் பண்ணை**

நாம் கூட்டுறவுப் பண்ணையை மேற்கொண்டாலொழிய, விவசாயத்தின் முழு அனுகூலங்களையும் பெற முடியாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். நிலத்தை நூறு துண்டுகளாகப் போடுவதைக் காட்டிலும், ஒரு கிராமத்திலுள்ள நூறு குடும்பங்கள் தங்களுடைய நிலங்களைக் கூட்டாக விவசாயம் செய்வது மிகமிக நல்லதென்பது பகுத்தறிவுக்கு ஒத்ததாகப்படவில்லையா? நிலத்திற்கு எது உண்மையோ அதுவே கால்நடைகளுக்கும் உண்மையாகிறது.

**சுயநலம், மிருகத்தனம்**

உடனடியாக இந்த வாழ்க்கை முறைக்கு மக்களை மாற்றுவது கஷ்டம் என்பது வேறு விஷயம். நேரான குறுகிய பாதையில் செல்வது எப்போதுமே கஷ்டமான காரியந்தான். கோசேவை என்னும் பாதையில் ஒவ்வொரு அடி வைப்பதிலும் முட்கள் போன்ற பிரச்னைகள் நிறைந்து இருக்கின்றன. ஆனால் கஷ்டங்களைச் சமாளித்துத்தான் நாம் நமது பாதையை எளிதாக்க முடியும். தனிப்பட்டவர் முயற்சியைவிடக் கூட்டுக் கால்நடைப் பண்ணை வைப்பது எவ்வளவு உயர்ந்தது என்பதை எடுத்துக் காண்பிப்பதே இப்போது என்னுடைய நோக்கம். மேலும் இதில் தனிப்பட்டவர் முயற்சி தவறு, கூட்டுப்பண்ணை வைப்பதுதான் சரியானது என்பதையும் நான் கூறிக்கொள்கிறேன். உண்மையில், தனிப்பட்ட மனிதன்கூட, கூட்டுறவின் மூலம் தனது சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள முடியும். கால்நடைப்பண்ணை விஷயத்தில், தனிப்பட்டவர் முயற்சியானது சுயநலத்திற்கும் மிருகத்தனமான போக்கிற்கும் இடமளித்திருக்கிறது. ஆனால், கூட்டு முயற்சியோ இந்த இரண்டையும் பூரணமாக ஒழிக்காவிட்டாலும், குறைக்கவாவது செய்யலாம்.[1]

**கூட்டுறவு என்பது என்ன ?**

'விவசாயிகள் தங்களுடைய நிலத்தை ஒன்றாகச் சேர்த்து விவசாயம் செய்து, தங்கள் தங்கள் நிலத்தின் பரப்பிற்கு ஏற்ப விளைச்சலைப் பகிர்ந்துகொள்ள வேண்டுமா?'

கூட்டுறவைப் பற்றிய என்னுடைய கருத்து இதுதான். நிலச் சொந்தக்காரர்கள் தங்களுடைய நிலம் எல்லாவற்றையும் ஒன்றாக

உழுது விவசாயம் செய்வார்கள். இதனால் உழைப்பு, கால் நடை, விதை முதலியவை மீதமாகும். நிலச் சொந்தக்காரர்கள் கூட்டாக உழைப்பார்கள். மூலதனம், கருவிகள், கால்நடைகள், விதைகள் முதலியவையெல்லாம் ஒன்றாகவே இருக்கும். எனது கற்பனையில் உள்ள கூட்டுறவானது நிலத்தின் தோற்றத்தையே மாற்றி விவசாயிகள் மத்தியிலிருந்து வறுமையையும் சோம்பேறித்தனத்தையும் போக்கிவிடும். மக்கள் ஒருவருக்கொருவர் நண்பர்களானால், ஒரே குடும்பத்தவர் போல இருந்தால், இவைகளெல்லாம் சாத்தியமாகும். மகிழ்ச்சிகரமான இந்தக் காரியம் நடைபெறும் போது, வகுப்புவாதப் பிரச்னை என்ற ஆபாசமான புண் உண்டாகாது.[2]

### அதிகப் பலன்

கூட்டுறவு முறையென்பது மற்ற யாரையுங் காட்டிலும் விவசாயிகளுக்கு மிகவும் அவசியமானதாகும். நிலம் நாட்டிற்குச் சொந்தமானது. ஆகையால் கூட்டுறவாக அதில் விவசாயம் செய்யும் போது, மிக அதிகமான பலன் கிடைக்கிறது.

### அஹிம்சை முக்கியம்

கூட்டுறவானது நூற்றுக்கு நூறு அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டதாய் இருக்க வேண்டும் என்பதை எல்லோரும் நினைவிற் கொள்ள வேண்டும். இம்சையை அடிப்படையாகக் கொண்ட கூட்டுறவு வெற்றிபெற்றதென்பதில்லை. ஹிட்லர் இதற்கு ஒரு முக்கியமான உதாரணமாவார். அவரும் கூட்டுறவைப் பற்றித்தான் பேசினார். ஆனால் அது வீணான பேச்சு. கூட்டுறவை மக்கள் மீது திணித்தார். இதன் காரணமாக, ஜெர்மனி என்ன விளைவுக்குள்ளானது என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள்.

### பலாத்காரம் இருந்தால்?

பலாத்காரத்தின் மூலம், கூட்டுறவை அடிப்படையாகக் கொண்ட ஒரு புது சமுதாயத்தை அமைக்க இந்தியாவும் முயற்சி செய்தால், அது வருந்தத்தக்க காரியமாகிவிடும். பலாத்காரத்தால் கிடைக்கும் நன்மை தனித் தன்மையையே அழித்துவிடுகிறது. அஹிம்சா பூர்வமான ஒத்துழையாமையின் மூலம், அதாவது அன்பின் மூலம் மாறுதல் செய்யப்படும் போதுதான், தனித்தன்மை என்னும் அஸ்திவாரத்தை நாம் பாதுகாக்க முடியும்; உலகத்திற்கு உண்மையான, நிலைத்த முன்னேற்றம் உறுதியாகும்.[3]

அத்தியாயம் 17

# விவசாயமும் கால்நடை நலனும்–IV

## உரம்

### கம்போஸ்ட் உரம்

கம்போஸ்ட் உரங்களை நாடெங்கும் பரப்புவது பற்றி ஆலோசிக்க, 1947 டிசெம்பரில் புது டில்லியில் அகில இந்திய கம்போஸ்ட் மாநாடு நடத்தப்பட்டது. திருமதி மீராபென் இந்த யோசனையைக் கூறினர். டாக்டர் இராசேந்திரப் பிரசாத் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர். சர்தார் தத்தார் சிங், டாக்டர் ஆச்சார்யா, மற்றும் இத்துறையில் பெயர்பெற்ற சிலர் மாநாட்டில் பங்கு கொண்டார்கள். நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் ஆன திட்டங்கள் பற்றி, பல முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. திருமதி மீராபென், திரு சிவகுமார் சர்மா, டாக்டர் பி. என். லால், டாக்டர் கே. ஜி. ஜோஷி ஆகியோர், மாகாணங்களுக்கு வேண்டிய மேற்போக்கான திட்டத்தைத் தயாரிப்பதற்காக நியமிக்கப்பட்டனர். இவர்களில் டாக்டர் பி. என். லால் கன்வீனராக நியமிக்கப்பட்டார். "நகரங்களிலிருந்து வரும் சாக்கடை, குப்பை முதலியவற்றை விவசாயத்திற்காக உபயோகிக்க வேண்டும். மிருக வதை செய்யும் இடங்களிலிருந்து கிடைக்கும் உப பொருள்களையும் வியாபாரத்தில் கிடைக்கும் கழிவுப் பொருள்களை (உதாரணமாக, கம்பளி, மில், தோல் கழிவுப் பொருள்களை)யும் உபயோகிக்க வேண்டும். தண்ணீர்க் கோரை, மூங்கில் கழிவுப் பொருள்கள், காட்டு இலைகள் முதலியவைகளை மக்க வைத்து உரமாக்க வேண்டும்," என்று இந்தத் தீர்மானங்கள் வலியுறுத்தின.

### "கம்போஸ்ட்"டின் நன்மைகள்

இந்தத் தீர்மானங்கள் வெறும் ஏட்டளவில் இல்லாவிட்டால் நல்லதுதான், உபயோகமானவையுங் கூட. அவை இந்தியா முழுவதிலும் நடைமுறைக்குக் கொண்டு வரப்படுமா என்பது தான் முக்கியமான விஷயம். அவ்வாறு செய்வதற்குப் பல மீரா பென்களுடைய உழைப்புத் தேவையாக இருக்கும். இந்தியாவில் உள்ள பொதுமக்கள் மனமுவந்து ஒத்துழைத்தால், உணவுப் பற்ருக்குறையைப் போக்கிவிடமுடியும்

என்பதுடன் தேவைக்கு அதிகமான உணவையும் உற்பத்தி செய்யமுடியும். இந்த இயற்கை உரமானது எப்போதுமே மண்ணை வளப்படுத்துகிறதேயல்லாது, ஒருபோதும் அதன் சத்தைக் குறைப்பதில்லை. அன்றாடம் கழிவாகும் பொருள்கள் புத்திசாலித்தனமான முறையில் "கம்போஸ்ட்" ஆக்கப்பட்டால், தங்கமான உரமாக நிலத்துக்குத் திரும்பிவருகின்றன. இதனால் நமக்குக் கோடிக்கணக்கான ரூபாய் மீதமாகும். தான்யங்கள், பருப்பு வகைகள் ஆகியவைகளின் மொத்த உற்பத்தி பலமடங்கு பெருகும். இதைத் தவிர, கழிவுப் பொருள்களை விவேகமான முறையில் உபயோகிப்பதானது, சுற்றுப் புறங்களையும் சுத்தமாக வைக்க உதவுகிறது. தெய்வபக்திக்கு அடுத்தாற்போல் சுத்தம் முக்கியம் என்பது மட்டுமல்லாமல் அது உடல்நலத்தையும் வளர்க்கிறது.[1]

### செயற்கை உரத்தின் தீமை

உற்பத்தியை உயர்த்துவதற்கு ஒரு பயனுள்ள வழி, நல்ல முறையில் உரமிடுவதாகும். செயற்கை உரங்கள் பூமிக்குத் தீங்கு விளைவிக்கும் என நான் கேள்விப்படுகிறேன். கம்போஸ்ட் உரத்தில் துர்நாற்றம் எதுவும் இல்லை. அது இலட்சக்கணக்கான ரூபாய்களை மீதப்படுத்துவது மட்டுமல்லாது, மண் வளத்தைப் பெருக்கும். மண்ணுடைய சத்துக் குறையுமாறு செய்யாது.[2]

### பிரெய்னுடன் ஒரு கருத்து வேற்றுமை

கிராமங்களில் உள்ள உரக்குழிகளை நன்றாகப் பொடி செய்ய வேண்டுமென்பதில் பொதுவாக பிரெய்னுடன்* காந்திஜி உடன்பட்டார். ஆனால் அதே சமயம், இந்த உரக்குழிகள் ஆறு அடி நீளமும் ஆறு அடி ஆழமும் உள்ளவையாக இருக்கவேண்டுமென்று பிரெய்ன் கூறிய கருத்தை அவர் ஏற்கவில்லை. அவர் கூறினார்:-

பிரெய்ன் கூறுவதைப்போன்ற குழிகளைப்பொதுவாகச் சிபாரிசு செய்கிறார்கள் என்பதை நான் அறிவேன். எனது கருத்தைப் பொறுத்தவரை, ஆழமில்லாது மேலே மூடிவைக்கப்படவேண்டுமென்று பூரே கூறியிருப்பது அதிக விஞ்ஞான பூர்வமானதும் பலன் தரக்கூடியதுமாகும். இதனால் குழி தோண்டும் செலவு குறைகிறது. அள்ளிப் போடும் செலவு பூரணமாகத் தவிர்க்கப்படுகிறது அல்லது குறைகிறது. மேலும், சுமார் ஒரு வாரத்திலேயே மலம், சாணி ஆகியவை உரமாகி விடுகின்றன-ஏனென்றால், பூமி

---

* பிரெய்ன் என்பவர் ஐ. சி. எஸ். பட்டம் பெற்ற ஒரு ஐரோப்பிய உயர் அதிகாரி. இவர் பஞ்சாபில் கிராம மறுமலர்ச்சிக்காக அருஞ்சேவை செய்திருக்கிறார்.

மட்டத்துக்குச் சுமார் ஆறு அல்லது ஒன்பது அங்குல ஆழத்தில் இருக்கும் ஜீவ அணுக்களும் காற்றும் சூரிய ஒளியும் இவைகள்மீது பட்டு இவைகளை மிக விரைவாக, அதாவது இவைகள் ஆழமாகப் புதைக்கப்பட்டிருந்தால் எவ்வளவு காலமாகுமோ அதைக் காட்டிலும் மிக விரைவாக, மணமிக்க உரமாக்கி விடுகின்றன. இந்த உண்மையையுங் கவனிக்க வேண்டும்.

### எது முக்கியம் ?

ஆனால், கழிவுப் பொருள்களை எவ்வாறு பயன்படுத்துவதென்பது பற்றிய பல்வேறு முறைகளைக் காட்டிலும் நாம் ஞாபகத்திற் கொள்ள வேண்டிய முக்கிய விஷயம், எல்லாக் குப்பை கூளங்களையும் புதைத்து வைத்துவிட வேண்டும் என்பது தான். இதனுல் கிராமவாசியின் உடல் நலம் அபிவிருத்தி அடையும். உரத்தால், விளைச்சல் அதிகமாகுமாதலால் கிராமவாசிகளின் பொருளாதார நிலையும் அபிவிருத்தியடையும். இவ்வாறு இரண்டு காரியங்களை இது பூர்த்தி செய்கிறது. மலத்தையும் சாணியையும் தவிர மற்ற குப்பை கூளங்களைத் தனியாகப் புதைத்து வைக்க வேண்டும் என்பதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும்.[3]

### மலம் ஒரு உரம்

மனிதனுடைய மலத்தைச் சரியான முறையில் பயன்படுத்தினுல், ஆண்டிற்கு ஆள் ஒன்றுக்கு இரண்டு ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று திரு ஜி. ஐ. பௌலர், ''செல்வமும் குப்பையும்'' என்ற தமது நூலில் கூறுகிருர். மிகப் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இந்த வளமான உரம் வீணுக்கப்பட்டு, நோய்க்கு வரவேற்பு அளிக்கப்படுகிறது. பேராசிரியர் புருல்டினி, ''கழிவுப்பொருள்களின் உபயோகம்'' என்ற நூலில் கூறியிருப்பதைத் திரு. பௌலர் மேற்கோளாக எடுத்துக் காண்பித்திருக்கிருர். ''டில்லியில் வாழும் 2,82,000 மக்களிடமிருந்து கிடைக்கும் நைட்ரஜன் ஆனது, குறைந்தது 10,000 ஏக்கருக்கும் அதிகமாகப் போனுல் 95,000 ஏக்கருக்கும் உரமிடப்போதுமானதாகும்'' என்று புருல்டினி கூறியிருக்கிருர். நம்முடைய தோட்டிகளை எவ்வாறு நடத்துவதென்பது நமக்குத் தெரியாததால். பழங்காலப் பெருமை வாய்ந்த டில்லி மாநகரில், இன்று நாம் வெட்கப்பட வேண்டியவாறு பல தொற்றுநோய்ப் பகுதிகள் இருக்கின்றன. நாம் எல்லோரும் தோட்டிகளாக மாறினேமானுல், நாம் எவ்வாறு நடந்துகொள்வது என்பதை அறிந்துகொண்டவர்களாவோம். அது மட்டுமல்லாது, இன்று எது விஷமாக இருக்கிறதோ

அதைத் தாவரங்களுக்கான சத்துள்ள உணவாக மாற்றுவது எப்படியென்பதையும் அறிந்தவர்களுமாவோம். டாக்டர் பௌலரின் கருத்துப்படி, நாம் மனித மலத்தை விவேகமான முறையில் பயன்படுத்துவதானல், இந்தியாவிலுள்ள 30 கோடி மக்கள் தொகையானது ஆண்டுதோறும் நாட்டிற்கு 60 கோடி ரூபாய் லாபம் அளிக்க வேண்டும்.[4]

## கம்போஸ்ட் உரத் தயாரிப்பு

[இந்தூரில் தாவரத் தொழில் நிலையம் ஒன்று இருக்கிறது. அது யாருக்குச் சேவை செய்வதற்காக ஏற்பட்டதோ அவர்களுக்கு அவ்வப்போது துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டுவருகிறது. இதில் முதல் துண்டுப் பிரசுரமானது, பண்ணைக் கழிவுகளிலிருந்து கம்போஸ்ட் உரம் தயாரிக்கும் முறைகளைப் பற்றியும் அவைகளின் உபயோகத்தைப் பற்றியும் கூறுகிறது. சாணியையும் மலத்தையும் எடுக்கும் கிராம ஊழியர்கள், அரிஜனங்கள் ஆகியோருக்கு இது மிகவும் உபயோகமானதாதலால், கிட்டத்தட்ட அந்தப் பிரசுரம் முழுவதையுமே—செயல்முறை விளக்கத்தைப் பற்றிய அடிக் குறிப்புகளுடன்—கீழே தருகிறேன். —மோ. க. காந்தி]

இந்திய மண்ணில் உள்ள வளத்தைப் போதுமான அளவுக்கு முறையாக அபிவிருத்தி செய்ய வேண்டும். இந்தியாவில் தீவிர விவசாயத் திட்டம் வெற்றியடைய வேண்டுமானல் அதற்கு ஒரு சில அம்சங்கள் அவசியம். அவைகளில் இதுவும் ஒன்று. இது நீண்ட காலமாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஒரு உண்மை. தற்போது கிடைக்கும் பண்ணை உரமானது, நமது தேவையைப் பூர்த்தி செய்ய முடியாது என்பதும் இதே மாதிரி ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. மேலும், பண்ணை உரத்தைத் தயார் செய்யும் போது, நைட்ரஜன் சத்தில் பெரும் பகுதியை நாம் இழந்து வருகிறோம். இறுதியாகக் கிடைக்கும் பொருள் நல்ல பலன் தரக் கூடிய நிலையை அடைவதற்கு நீண்ட காலமாகிறது. இதற்குப் பதிலாகப் பசுந்தழை உரமிடலாம் என்பது ஓரளவு சாத்தியமே. ஆனல் இந்தியாவில் உள்ள பருவ நிலைகளில் இந்நாட்டின் பெரும்பகுதிகளில் பசுந்தழை உரம் நிச்சயமற்றதாக இருக்கிறது. மண்ணிலேயே தாவர உணவு இருக்கிறது. ஆகவே மண்ணில் பசுந்தழை உரத்தைப்போட்டால் அது மக்குவதானது, ஏற்கனவே மண்ணில் உள்ள தாவர உணவு இயற்கையான முறையில் புத்துயிர் பெறுவதில் தற்காலிகமாய்க் குறுக்கிடுகிறது. வெப்ப மண்டலப் பகுதிகளில் மண் வளத்தைப் பாதுகாப்பதற்கு இந்தத் தாவர உணவுதான் மிகவும் கணிசமாக உதவுகிறது. பூஞ்சக் காளானை உற்பத்தி செய்ய வேண்டிய பாரத்தை மண்ணுக்கு அளிக்காமல் தவிர்ப்பதற்கு இதுவே

சிறந்த வழி. மீண்டும் பழைய சக்தியைப் பெறுவதிலும் பயிர் வளர்ச்சியிலும் அது "ஒருமனதான கவனம் செலுத்துவதற்கும்" இதுவே சிறந்த மார்க்கம். பண்ணையில் உள்ள நடைமுறை வேலைகளின் போது ஒரு உபபொருளாகப் பூஞ்சக் காளானை தயார் செய்வதே எளிய வழியாகும். உரமாகவோ அல்லது கால்நடைகளின் தீனியாகவோ தேவைப்படாத எல்லாவகையான விவசாயக் கழிவுப் பொருள்களையும் பயன்படுத்தி இதைத் தயார் செய்யலாம்.

## இந்தூர் முறை

பண்ணை உரத்துக்குப் பதிலாக அதன் இடத்தில் நாம் பயன்படுத்தும் எந்தப் பொருளும் அதன் அமைப்பில் பூஞ்சக் காளானைப் போன்றதாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டியிருக்கிறது. இந்தூர் முறையின் நோக்கம் இது தான். இதை அம்முறை சாதிக்கவும் செய்கிறது. சில முறைகளில் உற்பத்தியாகும் உரத்தின் நோக்கம், நைட்ரஜன் சத்து அதிகமாக இருக்க வேண்டும் என்பதுதான். செயற்கை உரங்களைப் போன்ற ஒரு தனி உபயோகம் உள்ளவை இவை. ஆகவே, இவைகளுக்கும் இந்தூர் முறையின் நோக்கத்துக்கும் அடிப்படையிலேயே மாறுதல் உண்டு.

## நடைமுறைக்கு ஏற்றது

இது சம்பந்தமாக இந்தூரில் உள்ள தாவரத் தொழில் நிலையத்தில் பல வேலைகள் மேற்கொள்ளப்பட்டன. இத்துறையில் ஆல்பர்ட் ஹோவர்டு என்பவர் 20 ஆண்டுகளாக மேற்கொண்ட முயற்சிகளின் பலனை இது நடைபெற்றது. இந்தக் கோட்பாடுகளையெல்லாம் வெகு எளிதாக நடைமுறை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரலாம் என்பதை இப்பணிகள் திட்டவட்டமாக மெய்ப்பித்திருக்கின்றன. கம்போஸ்ட் உரத் தயாரிப்பில் இந்தூர் முறையானது, ஒரு நடைமுறைக்கு ஏற்ற வழியை அளிக்கிறது; அபிவிருத்திக்கான புதுத்துறைகளுக்கு வழி வகுக்கிறது. இதன் மூலம் பண்ணைகளிலிருந்தும் நகரங்களிலிருந்தும் கிடைக்கும் அளவற்ற இயற்கைக் குப்பைகளை விவசாயத்திற்குப் பயன்படுத்தலாம். இவ்வாறு, சாணத்தை எருவாட்டியாகப் பயன்படுத்துவதில் போய்க் குறுக்கிடுவது, பிண்ணாக்கை ஏற்றுமதி செய்வதில் குறுக்கிடுவது போன்ற இயற்கைக்கு விரோதமான வழிமுறைகளை நாடாமல் நிறைய உரம் கிடைப்பதற்கு வழி ஏற்படுகிறது. அதே சமயம் செயற்கை உரங்களைப்பயன்படுத்துவதைச் சிக்கனப்படுத்தலாம். இந்தச் செயற்கை

உரங்களை, இயற்கை உரங்களுடன் கலந்து பயன்படுத்தும் போது சிறந்த பலன் கிடைக்கிறது.

### பொடி உரம்

(*1931*ஆம் ஆண்டு ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி அச்சகத்தார் வெளியிட்டு, ஹோவர்டு அண்டு வார்டு எழுதிய) ''விவசாயக் குப்பையின் உபயோகம்'' என்ற புத்தகத்தில் இந்தூர் முறை விவரமாக விவரிக்கப்பட்டிருக்கிறது. இதில் உள்ள பிரச்னை களும் அடிப்படைக் கோட்பாடுகளும் நூலில் விவாதிக்கப்பட்டுள் ளன. இந்தக் கட்டுரையானது இந்த முறையின் மேற்போக் கான நடைமுறைகளை மட்டும் அளிக்கிறது. அதிலும் இந்திய விவசாயிகளின் சூழ்நிலைகளுக்கு ஏற்றவைகளை மட்டும் அளிக் கிறது.

இந்தியாவில் நீர்ப்பாசன வசதி பெற்ற நிலங்களைப் பொறுத்தவரை பண்ணை உரத்தின் முக்கியத்துவம் நன்கு அங்கீ கரிக்கப்படுகிறது. ஆனால், புன்செய் விவசாயத்துக்கும் அவ்வப் போது ஒரு நிதானமான அளவு இந்த உரமிடுவது அதே அள வுக்கு அவசியந்தான். இந்தூர் கம்போஸ்ட் முறையில் வள முள்ள உரம் நிறைய உற்பத்தியாகிறது. இந்த உரம் பயிர் களுக்குப் போட்ட உடனேயே பலன் அளிக்கக் கூடியதாக இருக்கின்றது. ஆனால் பண்ணை உரம் எப்போதுமே இவ்வாறு உடனடியாகப் பலன் அளிக்கின்றது என்று கூற முடியாது. முறை சரியாக இருந்தால், மூன்று மாதங்களில் இந்தூர் கம் போஸ்ட் தயாராகிவிடுகிறது. இவ்வாறு அது தயாராகும் போது நல்ல பழுப்பு காபி நிறமுள்ள பொடியாக ஆகிவிடு கிறது. இதில் 20 சதவிகிதப் பொருள், ஓரளவு மக்கிய கட்டிப் பொருளாகவும் இருக்கிறது. ஆனால் இந்தக் கட்டிப் பொருளையும் விரல்களால் நசுக்கிவிட முடியும். மீதமுள்ள பொருள்களோ ஈரமாக இருக்கும்போது, பொதுவாக அதிகப் பருமன் உள்ளவைகளாக இருக்கும். அப்படியிருந்தும் ஒரு அங்குல நீளத்தில் 6 துவாரங்கள் உள்ள சல்லடையில் சலிக்கும் அளவுக்குச் சின்னவைகளாக இருக் கின்றன. நாம் எந்தக் கழிவுப் பொருள்களை உபயோகப்படுத்துகி றோமோ அதைப் பொறுத்து நைட்ரஜன் சத்தானது ·8 இலிருந்து 1·0 சதவீதம் வரையோ அல்லது அதற்கு அதிகமாகவோ இருக்கும். ஒவ்வொரு ஜதை காளைமாடுகளுக்கும் சுமார் ஐம்பது வண்டி கம்போஸ்ட் உரம் தயார் செய்யலாம். புதுச்சாணத்தில் நான் கில் ஒரு பங்கும், எல்லாவிதமான பண்ணைக் குப்பைகளி லிருந்து நூற்று இருபத்தைந்து வண்டிகளும், கொட்டத்து

மாட்டுக் கோமியத்தால் நனைந்துள்ள மண்ணில் பாதியும் சேர்த்து இந்தக் கம்போஸ்ட் உரத்தைத் தயார் செய்யலாம். மீதமுள்ள பாதி மண்ணும் நல்ல உரந்தான். ஆனால் அதை நேரடியாக வயலில் கொண்டு போய்ப் போட்டுவிடலாம். எஞ்சியவை அதிகமாக இருந்தால், எல்லாச் சாணத்தையும் கோமியம் பாய்ந்த மண்ணையும் சுமார் 150 வண்டி கம்போஸ்ட் தயாரிக்கப் பயன்படுத்தலாம். இந்தூரில் உள்ள கூலி நிலவரப்படி (ஆண்களுக்கு 7 அணா, பெண்களுக்கு 5 அணா—எட்டுமணி நேர வேலைக்கு) நல்ல கம்போஸ்ட் உரம் தயாரிப்பதற்கு வண்டிக்கு 8½ அணா செலவாகிறது.

**இந்தூர் முறையின்**
**விவரங்கள்**

மற்ற வகைகளில் உபயோகம் இல்லாத பண்ணைக் கழிவுப் பொருள்கள், புதுச்சாணி, மரச்சாம்பல், மாட்டுக் கொட்டத்தில் உள்ள மூத்திர மண் ஆகியவைகளைக் குழிகளில் போட்டு மக்க வைக்க வேண்டும். கம்போஸ்ட் உரத் தயாரிப்பில் இதுவே பிரதான அம்சம். இந்தக் குழிகள் 2 அடிக்கு மேல் ஆழம் இல்லாதவைகளாக இருக்க வேண்டும். அகலம் 14 அடி இருக்க வேண்டும். வசதியான நீளம் 30 அடி. பெரிய அளவிலோ அல்லது சிறிய அளவிலோ கம்போஸ்ட் உரம் தயாரிப்பதற்கு இது பொருந்துகிறது. உதாரணமாக, இரண்டு ஜோடி காளைகளிலிருந்து கிடைக்கும் பொருள்களைக் கொண்டு 6 நாட்களில் 3 அடி நீளமுள்ள குழியை மெத்தலாம். இதற்கு அடுத்த பகுதி பின்னால் மெத்தப்படுகிறது. இவ்வாறு மெத்தப்படும் ஒவ்வொரு பகுதியும் தனித்தனி அங்கமாகக் கருதப்படுகிறது. ஒரு சிறு அளவு சாணம், அடுப்புச் சாம்பல், மூத்திரக் குழி மண், ஏற்கனவே கம்போஸ்ட் தயாரிக்கப்பட்டதிலிருந்து காளான் உற்பத்தி செய்வதற்காக ஒரு சிறிது பூஞ்சக் காளான் முளைத்த குப்பை ஆகியவற்றை எடுத்துக் கலக்கி இந்தக் குழிகளில் ஒரே அளவாகத் தெளிக்க வேண்டும். காளான் பெருகுவதனால் கம்போஸ்ட் மக்கி விரைவில் வெள்ளையாகிறது. மேலும் மேற்கண்டவாறு தெளிப்பதனால் உரம் வேகமாக மக்குமாறு செய்யப்படுகிறது. முதல் தடவையாக கம்போஸ்ட் உற்பத்தி செய்யப்படும்போது, ஏற்கனவே தயாரான கம்போஸ்ட் குப்பை கிடைக்காவிட்டால், உரக் குப்பையை மேடாகப் போட்ட பின் ஒரு சிறிது பசுந்தழைகளை மேலே போட வேண்டும். இதிலிருந்து குப்பை எடுத்து, புதிதாகக் கம்போஸ்ட் உரம் தயாரிப்பதற்குச் சேர்க்கலாம். ஆனால் 3ஆவது அல்லது 4ஆவது தயாரிப்பில்

தான் இவ்வாறு சேர்க்கப்படும் குப்பையிலிருந்து முழுப்பலன் கிடைக்கிறது. மேலே தண்ணீர் ஊற்றிக் கொண்டும் குப்பையைப் புரட்டிப் போட்டுக்கொண்டும் வரவேண்டும். அத்துடன் இரண்டாவது முறையாக, பழைய கம்போஸ்ட் குழியிலிருந்து (இந்தத் தடவை இது முப்பது நாட்களுக்கு மேற்பட்ட குழியாக இருக்க வேண்டும்.) எடுக்கப்பட்ட குப்பையைக் கொண்டு வந்து கலக்க வேண்டும். இவ்வாருகக் குப்பையின் ஈரம் பாது காக்கப்படுமாறும் அதில் காற்றுப்படுமாறும் செய்ய வேண்டும். இந்தக் குப்பை மேடானது அதிகச் சூடுள்ளதாகிறது; நீண்ட காலத்துக்கு அவ்வாறே இருக்கிறது. இவ்வாறு ஒழுங்காக எல்லா வேலைகளையும் செய்தால் நல்ல கம்போஸ்ட் உரம் கிடைக்கும். (எல்லாக் குப்பையும் ஒரே மாதிரியாகத் தோற்றம் அளிப்பதன் மூலம் இது தெரியும்) குப்பை தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் அதற்கு நிறையக் காற்றும் கிடைக்குமாறு செய்ய முடியும். நிதானமாகத் தண்ணீர் தெளிப்பதானது உடனடியாக உரம் மக்குமாறு செய்கிறது. இவ்வாறு மக்குவதானது, நடுவில் நின்றுபோகாமல் இறுதிவரை நடைபெறுகிறது. இதனல் இறுதியில் ஒரே மாதிரியான உரம் தயாராகிறது.

### குழிகள் தயாரித்தல்

மாட்டுக் கொட்டத்துக்கு அருகே நன்ருகத் தண்ணீர் வடியக் கூடிய ஒரு இடத்தைத் தேர்ந்தெடுங்கள். முடிந்தால், தண்ணீர் கிடைக்கக் கூடிய இடமாகவும் அது இருக்கட்டும். ஒரு அடி ஆழத்துக்கு மண்ணைத் தோண்டி அதை ஒரு குழி அமைப்பதற்காக நாலா பக்கங்களிலும் போடுங்கள். இந்தக் குழியின் நீளம் 30 அடி, அகலம் 14 அடி, ஆழம் 2 அடி. இப்படிப்பட்ட குழிகளை ஜோடி ஜோடியாக நீங்கள் அமைக்க வேண்டும். இதில் நீளப்பகுதி கிழக்கு மேற்காக இருக்க வேண்டும். இவ்வாறு ஜோடியாக அமைக்கும் குழிகள் ஒன்றுக்கொன்று ஆறு அடி தூரத்தில் இருக்க வேண்டும். ஒரு ஜோடிக்கும் மற்ருெரு ஜோடிக்கும் இடையே 12 அடி தூரம் இருக்க வேண்டும். இவ்வாறு இடைவெளி விடும்போது கடைசியாகத் தயாரிக்கும் கம்போஸ்டையோ அல்லது அந்தந்தப் பருவகாலத்தில் கிடைக்கும் குப்பையையோ குவியலாகப் போட்டுக்கொள்ளலாம். மேலும், வண்டிகளை நிறுத்திக் குப்பைகளை அள்ளவும் இந்த இடைவெளிகள் உதவும்.

**மண்ணும் சிறுநீரும்**

கால்நடைகளின் சிறுநீரானது உரச்சத்து நிறைந்ததாகும். சாதாரணமாகத் தயாரிக்கப்படும் பண்ணை உரத்தில் இது பெரும்பாலும் வீணாக்கப்படுகிறது. மாட்டுக் கொட்டத்தில் சிமெண்ட் தளம் போடுவதற்கு நிறையச் செலவாகும். கால் நடைகளுக்கும் இது பொருந்தாது. கால்நடைகள் அமர்ந்திருக் கவும் தூங்குவதற்குமான மென்மையான, வெப்பமுள்ள, ஈரமில் லாத ஒரு தளத்தைச் சாதாரண மண்ணைக் கொண்டே போட முடியும். களத்துமேட்டுக் கருக்காய், வடிகால் வடிந்தபின் அதி லிருந்து எடுக்கப்பட்ட வண்டல்மண், பசுந்தழை உரம் போட்டு வைக்கும் குழிகளிலிருந்து எடுக்கப்பட்ட மண் ஆகியவைகளைக் கொண்டு வசதியாக இவைகளைத் தயார் செய்யலாம். 6 அங்குல உயரமுள்ள ஒரு மேட்டுத் தளம் போட்டால், அது எந்தவித மான சிரமமும் இல்லாமல் எல்லாச் சிறுநீரையும் உறிஞ்சிக் கொள்ளும். நனைந்த மண்தரையைத் தினந்தோறும் சுரண்டி எடுத்துவிட்டு, சிறிது புதுமண்ணையும் காடியில் மாடு உண்ணாது வைத்துள்ள வைக்கோலையும் போட்டுவிட்டால் இது எளிதாக இருக்கும். இந்த மூத்திர மண்ணை ஒவ்வொரு நான்கு மாதத் துக்கு ஒரு முறை அகற்றிப் புதுமண் போட்டுவிட வேண்டும். இதில் கட்டி கட்டியாக இருப்பதை நேரடியாக வயலில் போட்டுவிடலாம். மணலாக, மண்ணாக இருப்பவைகளைக் கம் போஸ்ட் செய்வதற்காக வைத்துக்கொள்ள வேண்டும். இது வேகமாகப் பலன்தரக் கூடிய மருந்து. நீர்ப்பாசன வசதியுள்ள எந்தப் பயிருக்கும் மேலே போடக்கூடிய தனித் தகுதிவாய்ந்த உரம்.[5]

**பசுச் சாணமும் சாம்பலும்**

புதிதாக நாள்தோறும் கிடைக்கும் சாணத்தில் நான்கில் ஒருபகுதி தான் தேவைப்படுகிறது. இது தண்ணீருடன் கலந்து கம்போஸ்ட் உரக் குப்பைக்கு மேல் சேருகத் தெளிப்பதற்குப் பயன்படுகிறது. மீதமுள்ள சாணத்தைத் தேவையானால் எரு வாட்டியாக்ப் பயன்படுத்திக் கொள்ளலாம். சமையல் கட்டி லிருந்தும் பிற இடங்களிலிருந்தும் கிடைக்கும் மரச் சாம்பலைக் கவனமாகச் சேகரித்து அதை ஒரு இடத்தில் குவித்து மூடி வைக்க வேண்டும்.

**பண்ணைக் கழிவுகள்**

தாவரங்களிலிருந்து கிடைக்கும் கழிவுப் பொருள் ஒவ்வொன் றையும்-அது வேறு காரியத்துக்குத் தேவையில்லையானால்-கம்

போஸ்ட் உரமாக மாற்றலாம். உதாரணமாக, களைகள், பருத்திக் காம்புகள், பட்டாணி, எள்செடி, குங்குமப்பூ, ஆளிவிதை, கொடி முந்திரிச்செடி, உளுந்துச் செடி, பாசிப் பயற்றுச்செடி ஆகியவற்றின் காம்புகள், கரும்புச்சக்கை, கரும்புச் சோளத் தட்டைகள், உதிர்ந்த இலைகள், புல், வைக்கோல், சோளம் முதலிய தீவனங்களில் மீதப்பட்டவை ஆகியன. கடினமான பொருள்களை நன்றாக நசுக்கவோ பிளக்கவோ வேண்டியதிருக்கும். இந்தப் பொருள்களை வண்டிப் பாதையில் போட்டு வைத்து விடவேண்டும். அவ்வப்போது நசுக்கப்பட்ட பொருள்களை அகற்றி விட்டு, நசுக்கப்பட வேண்டியவைகளை மறுபடியும் அங்கே பரப்பி வைத்துவிட வேண்டும். சிந்து மாநிலத்தில் சாதாரண வண்டிப் பாதைகளில் கூட இது வெற்றிகரமாக நடைபெறுகிறது. அடித் தண்டுகள், வேர்கள் போன்று மிகவும் கடினமாக உள்ள பொருள்களை உடைப்பதுடன் குறைந்தது இரண்டு நாட்கள் தண்ணீரில் ஊறவைக்க வேண்டியதிருக்கும். அல்லது இரண்டிலிருந்து மூன்று மாதங்களுக்கு ஈரமண்ணில் புதைத்துவைக்க வேண்டும். அதற்குப் பின்பு இவைகளை நல்ல முறையில் உபயோகிக்கலாம். இதில் இரண்டாவது கூறப்பட்டதைப் பருவகாலங்களில் எளிதாகச் செய்யலாம். பச்சையாக இருக்கும் பொருள்களை ஓரளவு காயவைத்து அப்புறம் குவித்து வைக்கலாம். சிறுசிறு அளவுகளில் இருக்கும் பல்வேறு விதமான கழிவுப் பொருள்களை ஒரே போராகக் குவித்து வைக்க வேண்டும். அதே போன்று ஒவ்வொரு பொருளும் நிறையக் கிடைப்பதாக இருந்தால் அவைகளைத் தனிக் குவியலாக வைக்க வேண்டும். கம்போஸ்ட் குழிக்குக் கொண்டு போகும்போது எல்லாக் கழிவுப் பொருள்களையும் ஒன்றாகக் கலக்க மறந்து விடக் கூடாது. இவ்வாறு கலக்கப்படும் பொருள்களில் எந்த ஒரு தனிப்பட்ட பொருளும் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் இருக்கக்கூடாது. மிகவும் கடினமாக இருந்து ஊறவைக்கப்பட்ட, அல்லது மெதுவாக்கப்பட்ட பொருள்களை ஒரே சமயத்தில் சிறு அளவில்தான் உபயோகிக்க வேண்டும். பல்வேறு விதமான கழிவுப் பொருள்களையும் ஒன்றாகச் சேகரித்து, அவைகள் வருடம் முழுவதற்கும் வரக்கூடிய அளவில் உபயோகித்து வரவேண்டும். அவ்வாறு செய்தால் மேற்கண்ட விகிதாச்சாரத்தில் இயற்கையாகவே இக்கழிவுப்பொருள்கள் கிடைக்கும். கோடை காலத்தில் விதைக்கப்பட்டு நன்றாக விளைந்த சடம்பு உரச் செடிகளையோ அல்லது மற்ற காய்கறி வகைச் செடிகளில் முற்றி அப்புறப்படுத்தப்பட்ட இலைகளைக் காயவைத்தோ போராக ஒன்று சேர்த்து உபயோகப்படுத்துவதன் மூலம் இந்தக்

கம்போஸ்டின் தரத்தை மேலும் உயர்த்தலாம். இவ்வாறு சடம்பு விளைவிக்கப்பட்ட நிலம், காலப் பயிருக்குத் தயாராக இருக்கிறது என்பது மட்டுமல்ல - இது விளைவிக்கப்பட்டதால் அந்தப் பயிரும் அனுகூலம் அடைகிறது.

**தண்ணீர்**

வீட்டில் கழிவாகப் போகும் தண்ணீர், கம்போஸ்ட் உரம் தயாரிக்கும் இடத்திற்குப் பக்கத்தில் ஒரு சிறு குழி அல்லது (பூமிக்கு அடியில் புதைக்கப்பட்ட) தொட்டியில் விழும்படி ஏற்பாடு செய்யப்பட்டு ஒவ்வொரு நாளும் உபயோகிக்கப்பட்டால், உழைப்பு மீதமாகும், உபயோகமாகவும் இருக்கும். ஒரே இடத்தில் நீண்ட காலம் தேங்கியிருக்கும் எந்தத் தண்ணீரும் தீங்கு பயக்கக்கூடியதே. அதிகப்படியான தண்ணீர் வேண்டுமென்றால் வேறு வழியில் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். ஒரு வண்டி கம்போஸ்ட் உரத்தைத் தயார் செய்ய, பருவகாலத்தைப் பொறுத்து 4 காலன் கொண்ட மண்ணெண்ணெய் டின்களில் 50 இலிருந்து 60 மண்ணெண்ணெய் டின் தண்ணீர் தேவையாக இருக்கும்.

## கம்போஸ்ட் உரம் தயாரிக்கும் விவரம்

**பதம் போடுதல்**

குழிகளில் குப்பையைத் தட்டுத் தட்டாகப் போடுதல்: நான்கு அடி நீளமும் 3 அடி அகலமும் உள்ள சாக்கை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் உள்ள நீளப்பகுதியில் 7 அடி 6 அங்குல நீளம் உள்ள மூங்கில்களைக் கோர்த்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு காளை மாட்டுக்கும் ஒரு சாக்கு அளவு பண்ணைக் கழிவு, ஒவ்வொரு எருமை மாட்டுக்கும் ஒன்றரைச் சாக்குப் பண்ணைக் கழிவுப் பொருள்களைத் தினந்தோறும் மாட்டுக் கொட்டத்தில் பரப்பி வைக்க வேண்டும்: இந்தப் பொருள்கள் மாட்டுச் சிறு நீருடன் கலந்து விடுகின்றன. இந்தப் பொருள்களையும் மாடுகள் நன்றாக மிதித்து விடுகின்றன, காய்ந்து உலர்ந்து போன குப்பையின் இரண்டு தட்டுகளுக்கிடையே ஒரு தட்டு பச்சையான, ஆனால் வாடிப் போயுள்ள குப்பையைச் செருகி வைக்க வேண்டும். காய்ந்த குப்பையை இதற்கென்றே வைத்திருக்க வேண்டும். மழைக் காலத்தில் இவ்வாறு தான் குப்பை உரம் தயாரிக்கப்படுகிறது. தெளிப்பதற்காக எடுக்கப்பட்டது போக மீதமுள்ள சாணத்தை எரு வாட்டிகளாகச் செய்யலாம், அல்லது, சிறு ஆரஞ்சுப் பழத்துக்கும்

மேற்போகாத சிறு சிறு உருண்டைகளாக உருட்டி இந்தக் குப்பைக் கட்டுகளில் பரப்பி வைக்கலாம். கம்போஸ்ட் உரக் குப்பையின் மேல் குழப்பிப் பூசுவதற்காக எடுக்கப்பட்ட கோமிய மண், பூஞ்சக் காளான் உற்பத்திக்காகப் போடப்பட்ட குப்பை ஆகியவைகளில் மீதமுள்ளவை, அடுத்த நாள் காலை குப்பைகளில் பரப்பி விடப்படுகிறது. அப்போதுதான் இக் குப்பைகள் மண் வெட்டியால் தரையின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரை எடுக்கப்பட்டு, குப்பைக் குழிகளில் போடப்பட்டு, பரம்புச் சட்டத்தால் பரப்பிவிடப்படுகின்றன. இப்படிப் பட்ட ஒவ்வொரு அடுக்கும் அப்புறம் சாம்பல், சாணம், மண், காளான் உற்பத்தி உரம் ஆகியவைகளைச் சிறு அளவில் போட்டுக் கரைக்கப்பட்ட சேற்றால், ஒரே அளவு பதம் போடப்படுகிறது. குப்பைகளையெல்லாம் எடுத்த பிறகு, தரையைக் கூட்டி, மீதமுள்ள தூசி துப்பட்டைகளெல்லாம் மேலடுக்காகப் போடப்படுகிறது. இந்த மேலடுக்கின் மீது தண்ணீரைத் தெளித்துப் பதம் போடப்படுகிறது. மாலையிலும் மறுநாள் காலையிலும் தண்ணீரைத் தெளிப்பதுடன், தண்ணீரால் நனைப்பது முடிவடைந்துவிடுகிறது. நமக்குக் கிடைக்கும் குப்பையின் அளவுக்கு ஏற்றபடி ஒரு குழியையோ அல்லது குழியின் ஒரு பகுதியையோ ஆறு நாட்களில் நிரப்பிவிட வேண்டும். இதன் பின்னர் அடுத்த குழியில் அல்லது அடுத்த பகுதியில் குப்பையை நிரப்புவது புதிதாகத் தொடங்கப்பட வேண்டும். இவ்வாறு குப்பையைப் போட்டுக் கொண்டு வரும் போது மிதித்து விடுவது தீங்கு பயக்கக் கூடியதாகும். ஏனெனில் அப்போது குப்பைக்குள் காற்று நுழையாது.

### மழை வரும்போது

பருவ மழை பெய்யும் போது குழிகளில் தண்ணீர் நிரம்பி விடுகிறது. மழை பெய்ய ஆரம்பிக்கும்போது குழியில் உள்ளவைகளைத் தரையில் புரட்டிப் போட வேண்டும். இவ்வாறு புரட்டிப் போடுவதே ஒரு அனுகூலமாக அமையும். மழைக்காலத்தின்போது தரையில் புதுக் கம்போஸ்ட் தயாரிக்கப்பட வேண்டும். 8 அடி நீளம் 8 அடி அகலம், 2 அடி உயரத்துக்குச் செங்குத்தாகக் கும்மிகள் தயாரிக்கப்படவேண்டும். பரந்த வெளிகளில் நெருங்கிக் குப்பையைப் போடவேண்டும். அப்போது தான் குளிர்ந்த காற்றால் குப்பை பாதிக்கப்படமாட்டாது.

### கம்போஸ்டைப் புரட்டி விட்டுத் தண்ணீர் ஊற்றுதல்

மக்கிக் கொண்டு வரும் கம்போஸ்ட் உரத்தின் மேலே வாரந் தோறும் தண்ணீர் தெளித்துக் கொண்டு வரவேண்டும். இவ்வாறு

குப்பையின் மேல் தளத்தைப் பதமாக வைத்துக்கொண்டு வர வேண்டும். உள் பகுதிகளிலும் அவ்வப்போது காற்றும் ஈரமும் படுமாறு செய்யவேண்டும். ஆகையால், மூன்று முறை புரட்டிப் போட வேண்டும். அத்துடன் தண்ணீரையும் தெளிக்கவேண்டும். அப்போதுதான் ஈரம் காய்ந்து போனதற்கு ஈடு செய்ய முடியும். ஈரமான கால நிலை இருக்கும்போது, இவ்வாறு தண்ணீர் விடுவதைக் குறைத்துக்கொள்ளலாம். அல்லது, தண்ணீரே விடாமல் நிறுத்திக் கொள்ளலாம். இவ்வாறு முதன் முதலாகக் குழியை நிரப்பும் போது அல்லது போராகக் குவிக்கும்போது விடப்பட்ட தண்ணீரின் அளவுக்கு எல்லாப் பருவ காலங்களிலும் தண்ணீர் விடவேண்டும்.

### 15 நாட்களுக்குப் பின் முதல் தடவையாகப் புரட்டிப்போடுதல்

முழுக் குழியில் மேலே மக்காமல் இருக்கும் உரத்தை அகற்றி விடுங்கள். அதைப் புதுக் குழியில் போடுங்கள். மேலே 30 நாளான கம்போஸ்ட் உரத்தைப் பரப்பி விடுங்கள். தண்ணீர் விட்டுக் குப்பையை 6 அங்குல உயரத்துக்கு ஈரப்படுத்துங்கள். இவ்வாறு முதல் தடவையாகப் புரட்டிப் போடும் போது, குழி நீள வாட்டத்தில் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. காற்று வரும் பக்கத்தில் உள்ள பாதி அப்படியே வைக்கப்படுகிறது. மீதமுள்ள பாதி இதன்மீது வீசப்படுகிறது. (இதற்கு மரப் பரம்பு ஒன்று வசதியாக இருக்கும்.) குப்பையைத் தட்டுத் தட்டாக எடுக்கக் கூடாது. மேலேயிருந்து கீழே வரை சாய்வாகவோ அல்லது செங்குத்தாகவோ எடுக்க வேண்டும். இவ்வாறு புரட்டிப்போடப் பட்ட ஒவ்வொரு 6 அங்குல உயரத் தட்டையும் தண்ணீர் தெளித்து நனைக்கவேண்டும். பருவ காலத்தில் குப்பை முழுவதையும், அதிக உயரம் இல்லாமல் இருப்பதற்காகப் புரட்டிப் போடலாம்.

### ஒரு மாதத்துக்குப் பின் இரண்டாவது தடவை

குழியின் ஒரு பாதியில் உள்ள குப்பை அப்படியே அடுத்த (காலியாக உள்ள) பகுதிக்குத் தள்ளிச் சமப்படுத்தப்படுகிறது. போதுமான அளவு தண்ணீர் விடப்படுகிறது. மேலேயிருந்து கீழே வரை அதைக் கலப்பதில் இதே அக்கறை எடுத்துக் கொள்ளப்படுகிறது.

### இரண்டு மாதங்களுக்குப் பின் மூன்ருவது முறை

இதே போன்று கம்போஸ்ட் உரமானது மண் வெட்டியால் தரைக்கு வீசியெறியப்பட்டுத் தண்ணீர் விடப்படுகிறது. இரண்டு

குழிகளில் உள்ள குப்பையை அவைகளுக்கு இடையே உள்ள மேட்டில் வசதியாக அள்ளிப் போட்டு, 10 அடி அகலமும் $3\frac{1}{2}$ அடி உயரமும் உள்ள ஒரே குவியலாக்கலாம். நீளத்தைப் பற்றி அக்கறையில்லை. இவ்வாறு பல பகுதிகள் அல்லது குவியல் களை ஒன்ருகச் சேர்க்கலாம். வசதியாக இருந்தால், நன்ருகப் பதப் படுத்தப்பட்டபின் உரத்தை வண்டிகளில் ஏற்றி நேரே வயல் களுக்குக் கொண்டு செல்லலாம். எந்த இடத்தில் உரத்தைப் பயன்படுத்த வேண்டுமோ அந்த இடத்தில் இந்தக் குவியலைப் போட்டு வைக்க வேண்டும். அதன் மூலம் விதைப்புக் காலத் தில் நேரமும் காலமும் மிச்சமாகும்! எல்லாக் குவியல்களையுமே செங்குத்தாகப் போடவேண்டும். மேல் மட்டம் சமதளமாக இருக்க வேண்டும். அப்போது தான் அளவுக்கு மீறிக் குப்பை காய்ந்து போகாமல் தடுக்க முடியும். அளவுக்கு மீறிக்காய்ந்து விட்டால் மக்குவது நின்றுவிடும்.

**நாற்றம் இருந்தால் ?**

நல்ல கம்போஸ்ட் உரமானது எந்தக் கட்டத்திலுமே நாற்ற மடிக்காது. ஆரம்பத்திலிருந்து முடிவுவரை ஒரே மாதிரித் தோற்றத்துடனேயே இருக்கும். ஏதாவது நாற்றம் இருந்தால், அல்லது ஈக்கள் காணப்பட்டால், காற்று அதிகம் தேவை என்ப தற்கு அது அறிகுறியாகும். அப்போது குழியைப் புரட்டிப் போட வேண்டும். சிறிது சாம்பலும் சாணமும் சேர்க்க வேண்டும்.

ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எந்த அளவு குப்பை தேவை என்பதைக் கீழ்க் கண்ட விவரங்களை வைத்துக் கொண்டு எளிதா கக் கணக்கிடலாம்.

**40 கால்நடைகளுக்குத் தேவையான அளவு**

ஆறு நாட்களுக்கு, ஒவ்வொரு நாளும் குழியை நிரப்புதல்: குவித்து வைத்த குப்பை, கூட்டி வந்த குப்பை ஆகியவற்றை ஒருநாள் குழிக்கு எடுத்துச் செல்லவேண்டிய அளவு. 40 அல்லது 50 நீண்ட சாக்குகள், அதன் மீது 18 அங்குல விட்டமும் 6 அங் குல ஆழமும் உள்ள தகரத் தட்டுகள் நிறையக் காளான் உற் பத்திக் குப்பை, 15 தட்டு மூத்திர மண், விறகாக உபயோகமா காமல் இருந்தால் அதிகப்படியாக உள்ள சாணம்.

சேருக்குதல் : கொட்டத்தில் ஒரு நாள் கிடைத்த குப்பைக்கு, 20 மண்ணெண்ணெய் டின் (அதாவது 4 காலன்) தண்ணீர், 5 தட்டுச் சாணம், 1 தட்டுச் சாம்பல், 1 தட்டு மூத்திர மண், 2 தட்டு காளான் உற்பத்திக் குப்பை.

**தண்ணீர் :** *கொட்டத்திலிருந்து வந்த ஒரு நாள் குப்பைக்கு (குழியில் அது நிரப்பப்பட்ட) உடனடியாக 6 டின், மாலையில் 10 டின், மறுநாள் காலையில் 6 டின்.*

**மேலே தண்ணீர் தெளித்தல்:** *ஒவ்வொரு முறையும் 25 டின்.*

**புரட்டிப் போடும் போது தண்ணீர்:** *முதல் தடவை 60 இலிருந்து 100 டின், இரண்டாவது தடவை 40 இலிருந்து 60 டின், மூன்றுவது முறை 40 இலிருந்து 80 டின் - பருவ காலத்துக்கு ஏற்றவாறு.*

**முதல் தடவை, பூஞ்சக் காளான் உற்பத்திக் குப்பை:** *12 தட்டு.*

## பட்டியல்

*ஒரு தட்டு அல்லது கூடையில் எடுக்கப்படும் பொருள் எத்தனை கையளவு அல்லது என்ன எடை இருக்கும் என்ற விவரம்.*

| பொருள் | அளவு இரண்டு கை நிறைய | நிறை இராத்தல் கணக்கில் |
|---|---|---|
| புதுச்சாணம் | 6 முதல் 7 | 40 |
| மூத்திரமண் | 20 ,, 21 | 22 |
| மரச் சாம்பல் | 15 | 20 |
| பூஞ்சக் காளான் உற்பத்திக் குப்பை | 5 | 20 |
| முதல் தடவை பூஞ்சக் காளான் உற்பத்திக் குப்பை | 6 | 20 |

## செயல் முறைப் பட்டியல்

| நாட்கள் | வேலைகள் |
|---|---|
| 1 | குழியை நிரப்பும் வேலை ஆரம்பம் |
| 6 | குழியை நிரப்பும் வேலை முடிகிறது |
| 10 | பூஞ்சக்காளான் உற்பத்தி |
| 12 | முதல் தடவையாகத் தண்ணீர் ஊற்றுதல் |
| 15, 16 | முதல் தடவையாகப் புரட்டி விட்டு ஒரு மாதத்திய கம்போஸ்டைச் சேர்த்தல் |
| 24 | இரண்டாவது முறையாகத் தண்ணீர் விடுதல் |
| 30, 32 | இரண்டாவது முறையாகப் புரட்டி விடுதல் |
| 38 | மூன்றுவது முறையாகத் தண்ணீர் விடுதல் |
| 45 | நான்காவது முறையாகத் தண்ணீர் விடுதல் |
| 60 | மூன்றுவது முறையாகப் புரட்டி விடுதல் |

| | |
|---|---|
| 67 | ஐந்தாவது முறையாகத் தண்ணீர் விடுதல் |
| 75 | ஆருவது முறையாகத் தண்ணீர் விடுதல் |
| 90 | கம்போஸ்ட் இப்போது உபயோகத்துக்குத் தயார். |

இந்தூர் முறையை அப்படியே பின்பற்றுவதற்குச் சூழ்நிலை அனுமதியாவிட்டால், கீழ்க்கண்ட முறையில் அதன் அனுகூலங்களை ஓரளவு நாம் பெறலாம்:

### கொட்டத்துக் குப்பை

கலப்படம் செய்யப்பட்ட குப்பையானது கொட்டத்தில் கால் நடைகள் அமரும் இடத்தில் விரிக்கப்படுகிறது. அதை அகற்றுவதற்கு முன்னுல், ஏற்கனவே விவரித்துள்ளவாறு போதுமான அளவு சாணம், கோமிய மண், சாம்பல் ஆகியவை அதன்மீது பரப்பப்படுகிறது. இதன் பின் இப்பொருள், எந்த வயலில் நாம் அதை உபயோகப்படுத்த வேண்டுமென்று விரும்புகிருேமோ அந்த வயல் ஓரத்துக்குக் கொண்டு செல்லப்படுகிறது. அல்லது, நன்ருகத் தண்ணீர் வடியக் கூடிய ஒரு தகுதியான இடத்துக்குக் கொண்டு செல்லப்படுகிறது. அங்கு 3 அங்குல உயரத்துக்கும் 8 அங்குல அகலத்துக்கும் மேலே போகாமல் சிறு சிறு குவியல்களாகக் குவித்து வைக்கப்படுகிறது. வசதியைப் போன்று நீளத்தை எவ்வளவு வேண்டுமானுலும் வைத்துக் கொள்ளலாம். மழை பெய்தபின், சுமார் ஒரு மாதத்தில் பூஞ்சக் காளான் வந்துவிடும். மழை மேகம் உள்ள அல்லது நிதானமாக மழை பெய்த ஒரு நாளன்று ஒரு தடவை முழுதாகப் புரட்டிப் போட வேண்டும். இதற்கு ஒரு மாதங் கழித்து ஒரு முறை அல்லது இரண்டு முறை திருப்பிப் போ்டவேண்டும். அப்போது, அப் பருவகால முடிவிற்குள் - மழையும் அவ்வப்போது உரிய காலத்தில் பெய்தால் – உரம் நன்ருக மக்கிவிடும்.

மழை பொய்த்து விட்டால் உரம் கிடைப்பதற்கு ஒரு ஆண்டும் அதற்கு மேலும் கூட ஆகலாம்.

### திருத்தப்பட்ட முறையும் நல்லதே

இவ்வாறு கிடைக்கும் உரமானது தரமான முறையில் தயாரிக்கப்பட்ட கம்போஸ்ட் உரத்திற்கும் மட்டமானதாகவே இருக்கும் என்ருலும் சாதாரணப் பண்ணை உரத்தைக் காட்டிலும் உயர்ந்ததாக இருக்கும். ஏனென்ருல் இவ்வாறு மாறுதல் செய்யப்பட்ட முறையில் கூட, கடினமான மரத்தாலான பொருள்களையும் எளி

தாக மக்க வைக்கலாம். ஏற்கனவே கிராமத்தில் நடைமுறைப் பழக்கத்தில் உற்பத்தியாகும் உரத்தைக் காட்டிலும் அதிக உரம் உற்பத்தி செய்யலாம்.

**கிராமப் பயிர்கள்**

ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய உணவுப் பயிர்களையும், துணி மணிகளுக்கு வேண்டிய பருத்தியையும் உற்பத்தி செய்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு கிராமத்தின் முதல் கவனமும் இதில்தான் இருக்கிறது. கால்நடைகள் மேய்ச்சலுக்கான ஒரு இடமும், வயது வந்தவர்கள் பொழுது போக்குக்கும் சிறுவர்கள் விளையாட்டுக்கும் ஆன இடமும் அங்கு இருக்கவேண்டும். இதற்குமேல் அங்கு அதிகப்படியான நிலம் இருந்தால், பயனுள்ள பணப் பயிர்களைப் பயிரிடலாம். இப் பணப் பயிர்களில் கஞ்சா, புகையிலை, அபினி போன்றவைகளை விலக்கி விடவேண்டும்.[7]

அத்தியாயம் 18

# விவசாயமும் கால்நடை நலனும்-V

## உணவுப் பற்ருக் குறைப் பிரச்னை

### உணவுப் பற்ருக் குறை

இயற்கையாகவோ செயற்கையாகவோ ஏற்படும் பஞ்சங்களி ஞல் கோடிக்கணக்கில் இல்லாவிட்டாலும் பதினயிரக்கணக்கில் மக்கள் பட்டினியால் வாடி மடிவது இந்தியாவில் பழகிப்போன ஒரு விஷயமே. நன்ருக ஒழுங்குபடுத்தப்பட்ட ஒரு சமுதாயத்தில், தண்ணீர், உணவுப் பொருள்கள் ஆகியவற்றின் பற்ருக்குறையைச் சமாளிக்க எப்போதுமே முன்னேற்பாடான முறைகள் இருக்க வேண்டும் என்பது எனது கருத்து. ஒழுங்குபடுத்தப்பட்ட சமு தாயம் என்ருல் என்ன? இப்பிரச்னையை அது எவ்வாறு சமாளிக் கும்?-என்பதையெல்லாம் எடுத்து விளக்குவதற்கு இது சந்தர்ப்ப மல்ல. இன்று நம்முடைய அக்கறையெல்லாம், தற்போது ஏற்பட் டுள்ள உணவு நெருக்கடியை நம்பிக்கையுடனும் வெற்றிகரமாகவும் நாம் சமாளிக்க முடியுமா என்பதை ஆலோசிப்பது தான்.

### இறக்குமதி கூடாது

நம்மால் சமாளிக்க முடியும் என்றே நான் எண்ணுகிறேன். சுய உதவியும் தன்னம்பிக்கையும் தான் நாம் படித்துக் கொள்ள வேண்டிய முதற் பாடங்கள். நாம் வெளிநாடுகளைச் சார்ந்திருப்பது அபாயகரமானது; அவ்வாறு சார்ந்திருப்பது இறுதியில் நாம் திவாலாவதில் கொண்டு போய்விட்டுவிடும். நாம் மேற்கண்ட சுய உதவிப் பாடத்தைக் கற்றுக் கொள்வதாளுல், உடனடியாக இந்த அபாயத்திலிருந்து தப்பிவிடலாம். இறுமாப்பில் நான் இதைக் கூறவில்லை; உண்மையாகவே கூறுகிறேன். இந்தியா, தனது உணவிற்காக வெளிநாடுகளை எதிர்பார்க்க வேண்டிய ஒரு சிறு பகுதியல்ல. நம் நாடு ஒரு உபகண்டம்; சுமார் 40 கோடி மக்களைக் கொண்ட தேசம். மாபெரும் நதிகளும் நல்ல வளம் பொருந்திய விவ சாய நிலங்களும் வளங்குன்ருத கால்நடைச் செல்வமும் உள்ள நாடு. நம்முடைய பசுக்களிடமிருந்து நமக்குக் கிடைக்கும் பால் நமது தேவைக்கும் குறைச்சலாக இருக்கிறதென்பது முற்றிலும் நம் தவறே. நம்முடைய கால்நடைச் செல்வம் நமக்குத் தேவையான

பாலை என்றென்றும் கொடுக்கக் கூடிய சக்தி வாய்ந்தது. கடந்த ஒரு சில நூற்றாண்டுகளாக நம்முடைய நாடு புறக்கணிக்கப்படா திருந்தால், இன்று அது இந்தியாவுக்குப் போதுமான உணவை உற்பத்தி செய்து கொள்வது மட்டுமல்லாமல், வெளி உலகத்திற் கும் உணவுப் பொருள்கள் வழங்கக் கூடிய உபயோகமான பங்காற் றும். கடந்த யுத்தமானது, நடைமுறையில், உலகம் முழுவதை யுமே உணவுப் பற்றாக்குறையுள்ளதாகச் செய்திருக்கிறது. இதில் இந்தியாவும் உள்பட்டதுதான். இந்தத் துயரம் நாளுக்கு நாள் அதிகமாகிறதே யொழியக் குறையும் வழியைக் காணோம். ஏதாவ தொரு வெளிநாடு இலவசமாக நமக்கு உணவு அளிக்க முன்வந் தால், அதை நன்றியில்லாது நிராகரிக்க வேண்டுமென்று நான் கூற வில்லை. நாம் பிச்சை எடுக்கக் கூடாது என்றே சொல்ல வரு கிறேன். அது நாம் சீர்குலையுமாறு செய்துவிடும். இத்துடன், உள் நாட்டிலேயே ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு உணவுப் பொருள்கள் போக்குவரத்திற்கு ஆகும் கஷ்டத்தையும் எண்ணிப் பாருங்கள். தான்யங்களையோ மற்ற உணவுப் பொருள்களையோ ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு விரைவாகக் கொண்டு செல்வதற்குத் தேவையான வசதி நம்மிடம் இல்லை. மேலும் உண் பதற்கு லாயக்கில்லாத பொருள்கள் நமக்கு அனுப்பப்படலாம் என்ற சாத்தியமும் இல்லாமற் போய்விடவில்லை. மனிதர்களு டன் தானே நாம் பேரம் செய்ய வேண்டியிருக்கிறது என்ற உண் மையை நாம் புறக்கணிக்க முடியாது. மனித இயற்கையானது உலகின் எந்தப் பகுதியிலுமே நூற்றுக்கு நூறு பரிசுத்தமான தாகவோ அல்லது அதை அனுசரித்ததாகவோ இல்லை.

### வெளிநாட்டு உதவி

இதற்கு அடுத்தாற் போன்று, நாம் என்ன வெளிநாட்டு உதவி பெறுவது சாத்தியம் என்பதைப் பார்ப்போம். நம்முடைய தேவை களில் மூன்று சதவீதத்திற்கு மேல் வெளிநாடுகளிலிருந்து பெற முடியாது என்று நான் அறிகிறேன். இந்தத் தகவல் சரியாக இருந்தால்-நான் இதைப் பல நிபுணர்களிடம் தெரிவித்ததில் இப் புள்ளி விவரம் சரிதான் என்று அவர்கள் உறுதி செய்கின்றனர்- வெளிநாட்டு உதவியை நம்பியிருக்கலாம் என்பது பொருளற்ற தாகப் போய்விடுகிறது. அவ் உதவியை நாம் ஒரு சிறிதளவு நம்பி யிருப்பது கூட, நம்முடைய உள்நாட்டுச் சாத்தியக் கூறுகளை முழு அளவில் பயன்படுத்திக் கொள்ளாமல் வேறு பக்கம் திருப்பிவிடு கிறது. பணப்பயிர்கள் பயிர் செய்வதற்குப் பதிலாக, உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வதானால், ஒவ்வொரு அங்குல பூமியும்

வீணுகப் போகாமல் தவிர்த்தோமானுல், நம்முடைய உள்நாட்டுச் சாத்தியக் கூறுகள் அளவு கடந்ததாக இருக்கும். உடனடியாக விவசாயத்திற்குக் கொண்டுவரக் கூடிய தரிசு நிலங்களையும் நாம் பண்படுத்த வேண்டும்.

### பரவல் மயத்தில் உள்ள இலாபம்

உணவுப் பொருள்களைக் குவியல் மயமாக்குவது அழிவுக்குக் கொண்டு போய்விடக் கூடியது என்று நான் அஞ்சுகிறேன். பரவல் மயமானது கள்ளச் சந்தையை எளிதாக ஒழித்துக்கட்டுவதுடன், போக்குவரத்தில் செலவாகும் நேரத்தையும் பணத்தையும் மீதப் படுத்துகிறது. மேலும் இந்தியாவின் தான்யங்களையும் பருப்பு வகைகளையும் உற்பத்தி செய்யும் கிராமவாசியானவன் எலி, அணில் போன்றவைகளிடமிருந்து தன்னுடைய பயிர்களை எவ்வாறு காப் பாற்றுவது என்பதை அறிந்திருக்கிறுன். ஒரு இடத்திலிருந்து மற்ருெரு இடத்திற்குத் தான்யங்களைக் கொண்டு செல்வதானது, அவைகளை இப்பிராணிகள் சாப்பிட்டுவிடுவதற்கு இடமளிக் கிறது. இதனுல் கோடிக்கணக்கான ரூபாய் சேதம் ஏற்படுகிறது. நமக்கு ஒவ்வொரு அவுன்சும் முக்கியமானதாய் இருக்கும்போது, டன் கணக்கான தான்யங்களை நஷ்டப்படுத்திவிடுகிறது. எங் கெங்கு பயிரிட முடியுமோ அங்கெல்லாம் உணவு உற்பத்தி செய்வ தன் அவசியத்தை ஒவ்வொரு இந்தியரும் உணர்ந்துவிட்டால், இந்தியாவில் உணவுப் பற்ருக்குறை ஒரு காலத்தில் இருந்ததென் பதையே மக்கள் மறந்துபோய் விடுவார்கள். அதிக உணவு உற் பத்தி செய்வது குறித்த, உள்ளத்தை ஈர்க்கக்கூடிய விஷயத்தைப் பற்றிப் பூரணமாக நான் விளக்கிவிடவில்லை. ஆயினும் இந்தப் பாராட்டத் தக்க முயற்சியில் ஒவ்வொரு தனிப்பட்ட மனிதரும் எவ்வாறு உதவ முடியும் என்ற சிந்தனையில் விவேகம் உள்ளவர் களைத் திருப்புவதற்கும் அவர்கள் அக்கறையைத் தூண்டுவதற்கும் நான் போதுமானதைக் கூறியிருக்கிறேன் என்று நம்புகிறேன்.

### விரதம் ஒரு வழி

வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யக்கூடிய மூன்று சத வீத உணவுத் தான்யங்கள் இருக்கின்றனவே அவைகளின் விஷ யத்தில் நாம் என்ன செய்ய முடியும் என்பதை இப்போது நான் விளக்குகிறேன். ஒவ்வொரு பட்சத்திலும் (இரண்டு வாரங்கள்) பதினேருவது நாளன்று இந்துக்கள் முழு உண்ணு நோன்போ அல்லது அரைகுறையான உண்ணு நோன்போ மேற்கொள் கின்றனர். முஸ்லிம்களும் மற்ற மதத்தவர்களும், இதே போன்று

தங்கள் உணவை மறுப்பது தடைசெய்யப்படவில்லை. அதிலும் குறிப்பாக, பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்காக விரதம் மேற்கொள்வதற்குத் தடையே இருக்காது. இவ்வாறு ஒரு சிறிதளவு சுய தியாகம் செய்யும் இன்பத்தை இந்திய தேசம் முழுவதுமே உணர்ந்துவிட்டால், வெளிநாட்டு உதவியை நாமாக மறுப்பதனால் ஏற்படக்கூடிய பற்றாக்குறை சரிக்கட்டப்பட்டுவிடும்.

**உணவுக் கட்டுப்பாடு வேண்டாம்**

தனிப்பட்ட முறையில் என்னுடைய கருத்து என்னவென்றால் உணவுப் பங்கீட்டால் பயனே இல்லை. அப்படியே பயன் இருந்தாலும் அது மிகமிகச் சொற்பமே. உற்பத்தியாளர்களை எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் அனுமதிப்பதாக இருந்தால், அவர்கள் தாங்கள் உற்பத்தி செய்த உணவுப் பொருள்களை மார்க்கெட்டுக்குக் கொண்டு வந்துவிடுவார்கள். ஒவ்வொருவருக்கும் நல்ல சாப்பிடக் கூடிய தான்யம் கிடைக்கும். ஆனால் இன்றோ இப்படிப்பட்ட தான்யம் எளிதில் கிடைப்பதில்லை.

**சுய உதவி முக்கியம்**

அமெரிக்க மக்களுக்கு, குடியரசுத் தலைவர் ட்ரூமன் கூறியதாக வெளிவந்துள்ள அறிவுரையைச் சுட்டிக் காட்டுவதுடன், உணவு நெருக்கடி குறித்து வேகமாக நான் எழுதியுள்ள இந்தப் பரிசீலனையை முடித்துக் கொள்கிறேன். அமெரிக்கர்கள் தங்களுடைய உணவைக் குறைத்துக் கொண்டு பட்டினி கிடக்கும் ஐரோப்பாவுக்கு இன்றியமையாது தேவைப்படும் தான்யங்களை மீதப்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று அவர் கூறினார். இவ்வாறு சுய தியாகம் செய்வதால் அமெரிக்கர்களுடைய உடல் நலம் பாதிக்கப்படமாட்டாது என்றும் அவர் கூறியிருக்கிறார். அந்தத் தாராள மனோபாவத்துக்காக, குடியரசுத் தலைவர் ட்ரூமனை நான் பாராட்டுகிறேன். இந்தத் தாராளத்துக்கு அடியில், அமெரிக்காவுக்குப் பணந் தேடும் இழிந்த நோக்கம் மறைந்திருக்கிறது என்று சிலர் சொல்கிறார்கள். இந்த யோசனையை நான் ஏற்கத் தயாராயில்லை. ஒரு மனிதனை அவனுடைய செயலைக் கொண்டுதான் மதிப்பிட வேண்டுமேயொழிய அவன் என்ன நோக்கத்துடன் செய்திருப்பான் என்பதை வைத்து மதிப்பிடக் கூடாது. ஆண்டவன் ஒருவனுக்குத்தான் மனிதன் உள்ளத்தில் இருப்பது தெரியும். பட்டினி கிடக்கும் ஐரோப்பாவுக்காக அமெரிக்கா இவ்வாறு தியாகம் செய்ய முடியுமானால், நமக்கு நாமே இந்தச் சிறிய தியாகத்தைச் செய்யத்

தவறலாமா? சுயஉதவியே ஒரு தேசத்தின் மதிப்பை உயர்த்துகிறது. ஆகவே பட்டினியால் பலர் இறக்க நேரிட்டாலும், சுய உதவிக்கு நம்மால் இயன்றதைச் செய்திருக்கிறோம் என்ற பெருமையையாவது தேடிக் கொள்வோமாக.[1]

## பற்றாக்குறைக் காலத்தில்

### மீதப்படுத்துவதே உற்பத்திதான்

யார் மீதப்படுத்துகிறானோ அவன் அந்த அளவு லாபம் பெற்றவனாகிறான். அதாவது எந்த அளவு உணவுப் பொருள்களை மீதப்படுத்துகிறானோ அந்த அளவு அதிகமாக உற்பத்தி செய்தவனாகிறான். ஆகவே ஏழைகளின் கஷ்டத்தை உணருபவர்கள், அவர்களுடன் ஒன்றுபடுபவர்கள், தங்களுடைய தேவைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும். இதற்குப் பல வழிகள் இருக்கின்றன. ஒரு சில வழிகளை மட்டும் நான் இங்குக் கூறுகிறேன். பணக்காரர்கள் சாப்பிடுவதிலும் வீணாக்குவதிலும் மிக மிக அதிகமாக உணவுப் பொருள்களைச் செலவழிக்கின்றனர்.

### நல்ல உணவு வகை

ஒரு சமயத்தில் ஒரு தான்யத்தை மட்டும் உபயோகியுங்கள். சாதாரணமாக வீடுகளில் சப்பாத்தி, அரிசி, பருப்பு வகைகள், பால், நெய், வெல்லம், எண்ணெய் ஆகியவை உபயோகப்படுத்தப்படுகின்றன. இது தவிரக் காய்கறிகளையும் பழங்களையும் உபயோகப்படுத்துகிறார்கள். இவைகள் சரியான சேர்க்கையல்லவென்று நான் கருதுகிறேன். பால், வெண்ணெய், முட்டை மாமிசம் ஆகியவைகளின் மூலம் (மிருகப்) புரதச் சத்து அடைபவர்கள் பருப்புக்களை உபயோகிக்க வேண்டியதேயில்லை. ஏழை மக்களுக்குக் காய்கறிகளின் மூலமே புரதச் சத்துக் கிடைக்கிறது. பருப்பு, எண்ணெய் ஆகிய இரண்டையும் உபயோகிப்பதைப் பணக்காரர்கள் விட்டு விடுவார்களானால், இந்த இரண்டு அத்தியாவசியமான பொருள்களும் ஏழை மக்களுக்குக் கிடைக்குமாறு செய்தவராவார்கள். ஏனென்றால் ஏழைகளுக்குக் காய்கறிப் புரதச் சத்தோ அல்லது மிருகப் புரதச்சத்தோ கிடைப்பதில்லை, இது தவிர, நிறையக் குழம்பு ஊற்றியும் நாம் சாப்பிடக் கூடாது. குழம்பில்லாமல் நாம் சாப்பிடும் போது பாதி தான்யமே போதுமானதாக இருக்கும். வெங்காயம், முள்ளங்கி, காரெட், கொத்தமல்லி, தக்காளி ஆகியவைகளைப் பச்சையாக நறுக்கி வைத்துக் கொண்டு அல்லது பச்சடி செய்து கொண்டு உணவுடன் சாப்பிடு

வது நல்லது. இவ்வாறு நாம் பச்சையாகச் சாப்பிடும் ஒன்று அல்லது இரண்டு அவுன்சுக் காய்கறியானது, சமையல் செய்யப் பட்ட எட்டு அவுன்சுக் காய்கறிக்குச் சமமாகும். சப்பாத்தி அல்லது ரொட்டியைப் பாலுடன் சேர்த்துச் சாப்பிடக் கூடாது. ஆரம்பத்தில் நாம் ஒரு வேளைச் சாப்பாட்டைச் சப்பாத்தி அல்லது ரொட்டியுடன் பச்சைக் காய்கறி சேர்த்து உட்கொள்ள லாம். மற்றொரு சாப்பாட்டை, சமைக்கப்பட்ட கறியை பால் அல் லது தயிருடன் சேர்த்தும் வைத்துக் கொள்ளலாம்.

### இனிப்புப் பதார்த்தங்கள்

இனிப்புப் பலகாரங்களைப் பூரணமாக அகற்றி விடவேண்டும். அதற்குப் பதிலாக, சிறு அளவில் சர்க்கரை அல்லது வெல்லத்தைப் பாலில் போட்டோ அல்லது ரொட்டியுடன் வைத்தோ சாப்பிட லாம். அல்லது அவைகளைத் (அதாவது சர்க்கரை அல்லது வெல்லத்தைத்) தனியாகவும் சாப்பிடலாம்.

### பழங்கள்

புதுப் பழங்கள் சாப்பிடுவதற்கு நல்லனவே. ஆனால் உட லுக்கு ஒரு சிறிது பழம் சாப்பிட்டால் போதும். அது ஒரு விலை உயர்ந்த பொருள். பணக்காரர்களைவிட ஏழைகளுக்கும் நோயாளி களுக்கும் தான் பழங்கள் மிகவுந் தேவை. ஆனால் பணக்காரர்கள் அதிகப்படியாகப் பழங்களைச் சாப்பிட்டு விடுவதால் ஏழைகளுக் கும் நோயாளிகளுக்கும் அவை கிடைப்பதில்லை.

### தீங்கு செய்யா

நான் இதுவரை கூறியுள்ள யோசனைகள் உடலுக்கு எந்த விதமான தீங்கும் செய்யமாட்டா என்பதற்கு உணவுச் சாஸ் திரத்தைப் படித்துள்ள எந்த மருத்துவரும் சான்று கூறுவார். அதற்கு மாறாக அவை உடல் நலத்தை அபிவிருத்தி செய்யும்.

### ஒரே ஒரு வழிதான்

உணவுப் பொருள்களை மீதப்படுத்துவதற்கு இது ஒரே ஒரு வழிதான். இது வெளிப்படையானதுங்கூட. ஆனால் இதைச் செய் வதால் மட்டும், கண்களுக்குப் புலனாகும் அளவு - கணிசமான அளவு - பலன் கிடைத்துவிடாது.

### உணவுத் தான்ய வணிகர்

உணவுத் தான்ய வணிகர்கள் தங்களுடைய பேராசையை விட்டுவிடவேண்டும். முடிந்த அளவு லாபம் சம்பாதிக்கப் பார்க்

கும் வழக்கத்தையும் விட்டுவிட வேண்டும். முடிந்த அளவு குறைச் சலாகச் சாப்பிடுவதுடன் திருப்தியடைய வேண்டும். ஏழை களின் நன்மைக்காக உணவுத் தான்யம் வைத்திருக்கிறார்கள் என்ற நற்பெயரை அவர்கள் சம்பாதிக்க வேண்டும். இல்லையேல் அவர்கள் கடைகளே கொள்ளையடிக்கப்படக் கூடிய அபாயம் இருக்கிறது. அவர்கள் தங்கள் அண்டையில் உள்ள மக்களுடன் தொடர்பு கொண்டிருக்கவேண்டும்.

**அதிக விளைச்சல்**

தங்களிடம் உள்ளதைப் பத்திரமாக வைத்திருக்குமாறு கிராம வாசிகளுக்குப் போதிக்க வேண்டும். எங்கெங்கு தண்ணீர் கிடைக் கிறதோ அங்கெல்லாம் புது விளைச்சல் எடுக்குமாறும் தூண்ட வேண்டும். இதுவரை சொல்லப்பட்டவைகளிலெல்லாம் மிக முக் கியமான வேலை இதுவே. இதற்குப் பரந்த அடிப்படையில் புத்தி சாலித்தனமாகப் பிரசாரம் செய்வது அவசியம். வாழை, உருளைக் கிழங்கு, பீட்ரூட், சேனைக் கிழங்கு, கருணைக் கிழங்கு ஆகியவை களும் ஓரளவு பூசணிக்காயும் உணவுப் பயிர்களே. இவைகளை எளிதாக விளைய வைக்க முடியும் என்பது பொதுவாக மக்களுக் குத் தெரிவதில்லை. அவசியமான காலங்களில் இவைகளை ரொட் டிக்குப் பதிலாகப் பயன்படுத்தலாம்.

**வேலை வேண்டும்**

தற்போது பணக் கஷ்டம் அதிகமாய் இருக்கிறது. உணவுத் தான்யம் கிடைக்கலாம். ஆனால் அதை வாங்குவதற்குப் பணம் இல்லை. ஏன் பணமில்லை? ஏனென்றால் வேலை இல்லை. ஆகவே வேலையைக் கண்டு பிடித்தாக வேண்டும். உடனடியாகக் கிடைக் கக் கூடியதும் எளிதில் செய்யக் கூடியதுமான தொழில் நூல் நூற் புத்தான். ஆனால் ஸ்தல தேவைகளின் காரணமாக மற்ற வேலை களுங் கிடைக்கலாம். ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்தி, வேலையில்லையென்பது இல்லாமற் செய்வோம். சோம்பேறிகள் தான் பட்டினி கிடக்க வேண்டிய அவசியம் இருக்கும். அவர்கள் பட்டினி கிடக்கவும் வேண்டியதுதான். பொறுமையுடன் முயன்றே மானால், இந்த வகுப்பினரும் சோம்பேறித்தனத்தை உதறித்தள்ளு மாறு செய்யலாம்.[2]

தற்போதுள்ள (உணவு நெருக்கடி) நிலைமையில், கீழ்க்கண்ட காரியங்களை உடனடியாகக் கவனிக்க வேண்டும் :

**ஒதுக்க வேண்டிய பொருள்கள்**

*1.* உணவைப் பொறுத்தவரை, ஒவ்வொருவரும், தங் களுடைய உடல் நலத்துக்கு எவ்வளவு தேவைப்படுகிறதோ அங்

தக் குறைந்த அளவுடன் தங்களுடைய அன்றாடத் தேவைகளை நிறுத்திக் கொள்ள வேண்டும். நகரங்களைப் போன்று, எங்கெல்லாம் பால், காய்கறி, எண்ணெய், பழம் ஆகியவை கிடைக்கின்றனவோ அங்கெல்லாம் தான்யங்கள், பருப்பு வகைகள் ஆகியவைகளைக் குறைத்துக் கொள்ளவேண்டும். இதை எளிதாகவும் செய்யலாம். காரெட், உருளைக்கிழங்கு, சேனைக் கிழங்கு, வாழை ஆகியவைகளில் மாவுச் சத்து இருக்கிறது. ஆகவே இவைகளிலிருந்து மாச் சத்தை அடையலாம். இதன் நோக்கம் என்னவென்றால் தற்போதுள்ள உணவுத் தான்யங்கள், பருப்பு வகைகளில் முடிந்தவைகளை விலக்கி, இருப்பு வைக்க வேண்டும் என்பது தான். கோடிக்கணக்கான பேர்களுக்குக் கொஞ்சமும் காய்கறிகள் இனிப்பதில்லை. புன்செய்த் தான்யங்களும் பருப்பு வகைகளும் பற்றாக்குறையாக இருப்பதால் இவர்கள் பட்டினி கிடக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் நாக்கின் ருசிக்காக அல்லது இன்பத்துக்காக மட்டும் காய்கறிகளை நாம் சாப்பிடக்கூடாது.

**வீட்டில் காய்கறி**

2. ஏதாவது தண்ணீர் வசதி கிடைக்கக்கூடிய ஒவ்வொருவரும் தங்களுடைய சொந்த உபயோகத்துக்காகவோ அல்லது பொது உபயோகத்துக்காகவோ, உணவுப்பொருள்களை உற்பத்தி செய்ய முயல வேண்டும். அதற்கு எளிதான வழியாவது:— நல்ல மண்ணை எடுத்துக் கொள்ளுங்கள். முடிந்த இடத்தில் அதனுடன் இயற்கை உரத்தைச் சேருங்கள். காய்ந்த சாணி ஒரு சிறிது கிடைத்தாலும் அது நல்ல உரந்தான். இந்த இரண்டையுங் கலந்து அதை மண்பானை அல்லது தகர டின்னில் போட்டு வையுங்கள். அதில் கடுகு, மற்ற காய்கறி விதைகளை விதைத்துத் தினந்தோறும் தண்ணீர் ஊற்றி வரவேண்டும். வெகு விரைவாக இவை வேர்விட்டு, உண்ணத்தக்க பச்சிலைகள் அளிப்பதைக் காணும்போது நமக்கு ஆச்சர்யமாக இருக்கும். இவைகளைச் சமைக்கக்கூட வேண்டியதில்லை. பச்சையாகவே சாப்பிடலாம்.

**துண்டுப் பிரசுரங்கள்**

3. பூந்தோட்டங்கள் எல்லாவற்றையும் காய்கறிகள், கீரைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்வதற்காக உபயோகப் படுத்த வேண்டும். இவ்விஷயத்தில் வைசிராயும் கவர்னர்களும் மற்ற உயர்தர அதிகாரிகளும் வழிகாட்ட வேண்டுமென்பது எனது யோசனை. அதை எவ்வாறு எளிதாகப் பயிரிடலாம் என்பதைப்

பாமர மக்களுக்கு எடுத்துக் கூற மத்திய அரசிலும் மாகாண அரசுகளிலும் உள்ள தலைமை அதிகாரிகள் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவேண்டும். இந்தத் துண்டுப் பிரசுரங்களை ஏராளமாக அச்சடித்து நாடெங்கும் விநியோகிக்கவேண்டும். இவைகளை அந்தந்த மாகாண மக்களின் தாய்மொழியில் அச்சடிக்கவேண்டும்.

### இராணுவத்தினர் சிக்கனம்

4. பொதுமக்கள் மட்டும் தங்களுடைய உணவைக் குறைத்துக் கொண்டால் போதாது. இராணுவத்தினரும் அவர்களுக்குச் சமமாக-சொல்லப் போனால் அதிகமாகவுங்கூட—உணவைக் குறைத்துக் கொள்ளவேண்டும். இராணுவத்தினர் பிரதானமாகக் குறைக்கவேண்டும் என்று நான் கூறுவதற்குக் காரணம் உண்டு. அதாவது, இராணுவத்தினர் கண்டிப்பான (இராணுவக்) கட்டுப்பாட்டில் வாழ்கின்றனர்; ஆகையால், அவர்கள் எளிதாகச் சிக்கன நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும்.

### வித்துக்கள் ஏற்றுமதி

5. எண்ணெய் வித்துக்களைப் போன்ற வித்துக்கள், எண்ணெய்கள், பிண்ணாக்குகள், கொட்டைகள் முதலியவற்றின் ஏற்றுமதியை—ஏற்கெனவே நிறுத்தியிரா விட்டால் இனிமேலாவது—நிறுத்திவிடவேண்டும். விதைகளிலுள்ள மண்ணையும் மற்ற அழுக்குப் பொருள்களையும் நீக்கி விட்டால் எண்ணெய்ப் பிண்ணாக்கானது, மனிதர்களுக்கு நல்ல உணவுப் பொருளாகும். அதில் நிறையப் புரதச் சத்து இருக்கிறது.

### ஆழமான கிணறுகள்

6. எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம், எங்கெங்கு நீர்ப்பாசனத்துக்காகவும் குடிதண்ணீர்க்காகவும் தேவைப்படுகிறதோ அங்கெல்லாம் அரசாங்கம் நல்ல ஆழமான கிணறுகளைத் தோண்டவேண்டும்.

### அரசாங்கம்—மக்கள் ஒத்துழைப்பு

7. அரசாங்க ஊழியர்களும் பொதுமக்களும் இதயபூர்வமான ஒத்துழைப்பு மட்டும் அளிப்பதாய் இருந்தால், இந்தக் கஷ்டத்தை நாடு சமாளித்து விடலாம். இதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. பீதியானது நிச்சயமாகத் தோல்விக்கு வழிகோலும். பரவலாகக் கஷ்டம் இருந்து, உடனடியாக நடவடிக்கை எடுக்காத போதும் அதைப் போன்ற நிலைதான் ஏற்படும். துன்பத்தின் காரணம் என்னவென்பதைப் பற்றி நாம் சிந்தித்துப் பார்த்துக்கொண்டிருக்க வேண்டாம். காரணம் என்னவாக இருந்தாலும் சரி, பொறுமை

யாகவும் தைரியமாகவும் அரசாங்கமும் பொதுமக்களும் இந்த நெருக்கடியை அணுகவேண்டும். இல்லையேல் பெரு நாசம் ஏற்படுவது நிச்சயம்.

**கள்ளமார்க்கெட்**

8. இவைகளுக்கெல்லாம் மேலாக, இந்த நெருக்கடியைப் பொறுத்தவரை, கள்ளமார்க்கெட்டும் மோசடியும் பூரணமாக ஒழிய வேண்டும். எல்லாத் தரப்பினரும் தவறாது மனமுவந்து ஒத்துழைக்கவேண்டும்.[3]

**உணவுப் பற்றுக்குறையும் அதிக ஜனத்தொகையும்**

"ஜனத்தொகை அதிகமாக இருக்கிறது. ஆகையால் கர்ப்பத் தடை அவசியம்" என்று கூறப்படுவதாக இருந்தால், நான் அந்தச் சித்தாந்தத்தை ஆட்சேபிக்கிறேன். இது ஒரு காலத்திலும் மெய்ப்பிக்கப்படவில்லை. நிலமுறை சரியாக இருந்து, விவசாயம் அபிவிருத்தி செய்யப்பட்டு, ஒரு உபதொழிலுக்கும் வகைசெய்வதாக இருந்தால் தற்போதுள்ளதைப் போன்று இருமடங்கு மக்களை நமது நாடு தாங்கும்; அதற்கு அந்தச் சக்தி இருக்கிறது என்பது எனது கருத்து.

**நீண்ட வரலாறு**

நம்முடைய இந்தச் சிறிய பூமி நேற்று உண்டான ஒரு விளையாட்டுப் பொருள் அல்ல. கோடிக்கணக்கான ஆண்டுகளாக அது இருந்து வந்திருக்கிறது. இந்த நீண்ட காலத்தில், அளவுக்கு மீறிய ஜனத்தொகையின் சுமையால் அது கஷ்டப்பட்டதேயில்லை. ஆகவே, கர்ப்பத்தடைச் சாதனங்களின் மூலமாகப் பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்தினலொழிய, உணவுப் பற்றுக்குறையால் அழிந்து விடக்கூடிய அபாயம் அதற்கு எவ்வாறு ஏற்படக் கூடும்?[4]

அத்தியாயம் 19

# கதரும் நூல் நூற்பும்

**எதன் சின்னம்?**

நாட்டில் எல்லோருக்கும் பொருளாதார சமத்துவமும், சுதந்திரமும் கிடைக்க ஆரம்பித்துவிட்டதன் சின்னம்தான் கதராகும். அதனுடன் சம்பந்தப்பட்ட அம்சங்களையெல்லாம் சேர்த்து நாம் அதை ஏற்கவேண்டும். கதர் என்ருல் முழுச் சுதேசி மனேபாவம்; இந்தியாவில் வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்ய—அதிலும் கிராமவாசிகளின் உழைப்பின் மூலமும் புத்திக் கூர்மையின் மூலமும் பூர்த்தி செய்யவேண்டுமென்ற உறுதியின் சின்னமாகும். கிராமவாசிகள், பெரும்பாலும் சுயதேவைப் பூர்த்தியுள்ளவர்களாய் இருப்பார்கள். தாமாகவே முன்வந்து நகரங்களுக்கும், ஏன் வெளி உலகத்துக்குங்கூட,—இருதரப்புக்கும் அது அனுகூலமாக இருக்கும்வரை—சேவை செய்வார்கள்.

**புரட்சிகர மாறுதல் தேவை**

பலருடைய மனேபாவத்திலும் ரசனைகளிலும் புரட்சிகரமான மாறுதல் ஏற்படவேண்டியது இதற்கு அவசியமாகும். பல அம்சங்களில் அஹிம்சை வழிதான் எளிதானதாய் இருக்கிறது. ஆனுலும் மற்றும் பலவழிகளில் அதுவே மிகவும் கஷ்டமானது. ஒவ்வொரு இந்தியனின் வாழ்க்கையையும் அது தொடுகிறது; அவனிடம் மறைந்து கிடக்கும் சக்தியைப் பற்றிய உணர்ச்சி அவனிடம் கொழுந்து விட்டெரியுமாறு செய்கிறது; இந்திய சமுதாயம் என்னும் மாபெருங்கடலின் ஒவ்வொரு துளியுடனும் அவனை ஐக்கியப்படுத்தி அவனைப் பெருமையடையுமாறு செய்கிறது.

**சீருடை**

இந்திய சமுதாயத்தின் ஐக்கியத்திற்குக் கதர் ஒரு சின்னம். அதன் பொருளாதார சுதந்திரம், சமத்துவம் ஆகியவைகளுக்கும் அது சின்னமாகும். ஆகையால், ஜவாஹர்லால் நேரு கவிதாநயத்துடன் கூறியது போல, முடிவாக அது இந்திய சுதந்திரத்தின் சீருடையாகும்.

**சுய தேவைப் பூர்த்தி**

மேலும் கதர் மனோபாவம் என்றால், வாழ்க்கையின் அத்தியா வசியத் தேவைகளின் உற்பத்தியையும் விநியோகத்தையும் பரவல் மயமாக்குவது என்பது பொருளாகும். ஆகையால் இதுவரை உருவாக்கப்பட்டுள்ள திட்டம் இதுதான். அதாவது, ஒவ்வொரு கிராமமும் தனது தேவைக்கு வேண்டிய துணியை உற்பத்தி செய்து கொள்ளவேண்டும். அத்துடன் நகரங்களின் தேவைகளுக் காக ஒரு சிறிது அதிகமாகவும் உற்பத்தி செய்யவேண்டும்.

**கதரில் அடங்குவன**

கதர் சம்பந்தப்பட்ட அம்சங்களை நான் விளக்கி விட்டேன். ஆகையால், கதரின் வளர்ச்சிக்காகக் காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டும் அல்லது செய்யக் கூடும் என்பதை இப்போது நான் சொல்ல வேண்டும். கதர் உற்பத்தியில் பருத்தி விளைவிப்பது, பருத்தி எடுப்பது, அரைப்பது, சுத்தப் படுத்துவது, பட்டை போடுவது, நூல் நூற்பது, தரவாரி யாகப் பிரிப்பது, சாயம் போடுவது, நெசவில் பாவு நூலும் குறுக்கு நூலும் போடுவது, நெய்வது, வெளுப்பது ஆகிய எல்லாம் அடங்கும். இவைகளில் சாயம் போடுவதைத்தவிர மற்ற எல்லாமே அத்தியாவசியப் பணிகள் தான். இவைகளில் ஒவ்வொரு பணியை யும் கிராமங்களில் வெற்றிகரமாகச் செய்ய முடியும். அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் இந்தியாவில் செயலாற்றும் பல கிராமங்களில் இது அவ்வாறு நடந்து கொண்டிருக்கிறது.

**காங்கிரஸ்காரர்களுக்குச்**
**சில விதி முறைகள்**

கதர்த் திட்டத்தில் காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய முடியும் என்பது குறித்து அகில இந்திய நூற்போர் சங்கம் அவ்வப்போது சில அறிவுரைகளைத் தெரிவித்து வருகிறது. கதர் விஷயத்தில் காங் கிரஸ் என்ன கூறுகிறதோ அதைக் காங்கிரஸ்காரர்கள் உண்மை யாக அனுஷ்டிக்க விரும்பினால், அவைகளை நிறைவேற்றி வரலாம்.

சில பரந்த விதிகளை மட்டும் நான் இங்கு கூறுகிறேன்:

1. ஒரு சிறிதளவாவது நிலம் உள்ள ஒவ்வொரு குடும்பமும், குடும்ப உபயோகத்திற்காவது அங்கு பருத்தி பயிரிட முடியும். பருத்தி பயிரிடுவதென்பது எளிதான வேலை. பீகாரில், பயிரிடக் கூடிய நிலங்களிலெல்லாம் 3/20 பகுதி நிலத்தில் அவுரி பயிரிடுமாறு விவசாயிகள் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். வெளிநாடுகளைச்

சேர்ந்த அவுரி பயிரிடுவோரின் நலனுக்காக இந்த ஏற்பாடு. ஆகவே நாட்டினுடைய நலனைக் கருதி, நம்முடைய நிலத்தில் ஒரு பகுதியில் ஏன் நாமாகவே பருத்தி விளைவிக்கக் கூடாது? கதர் வேலையுடனேயே பரவல் மயம் தொடங்குகிறது என்பதை வாசகர் கவனிக்க வேண்டும். இப்போது பருத்திப் பயிர்களெல்லாம் ஒரு மத்தியமான இடத்தில் விளைவிக்கப்படுகிறது. ஆகையால் அதை இந்தியாவின் தூரப் பகுதிகளுக்கு அனுப்ப வேண்டியிருக்கிறது. யுத்தத்துக்கு முன்னால் அது பிரதானமாக ஜப்பானுக்கும் பிரிட்டனுக்கும் தான் அனுப்பப்பட்டு வந்தது. அது பணப் பயிராகவே இருந்தது, இன்றும் இருக்கிறது; ஆகையால் மார்க்கெட் ஏற்றத் தாழ்வுகளுக்குப் பலியாகிறது. கதர்த் திட்டத்தின் கீழ்ப் பகுதி விளைச்சலானது, இந்தச் சூதாட்டத்திலிருந்தும் நிச்சயமற்ற தன்மையிலிருந்தும் விடுபடுகிறது. பயிரிடுபவர் தனக்கு எது தேவையோ அதைப் பயிரிட்டுக் கொள்கிறார். விவசாயி தன்னுடைய சொந்தத் தேவைக்காகப் பயிரிட வேண்டும் என்பதையும் அவருடைய முதல் கடமை இதுதான் என்பதையும் விவசாயி தெரிந்துகொள்ள வேண்டும். அவர் அதைச் செய்யும் போது, மார்க்கெட் வீழ்ச்சியால் அவர் பாதிக்கப்படும் நிலை குறையும்.

2. நூல் நூற்பவருக்கு வேண்டிய பஞ்சு அவரிடமே இல்லாவிட்டால், தனக்கு வேண்டிய பருத்தியை அவர் அரைப்பதற்காக வாங்க வேண்டும். கையால் இயக்கப்படும் 'ரோலர் பிரேம்' இல்லாமலேயே இதை எளிதாக அவர் செய்யலாம். ஒரு பலகையையும், இரும்பு உருளையையும் வைத்துக்கொண்டு அவர் தனக்கு வேண்டிய பஞ்சை அரைக்கலாம். இது நடைமுறைச் சாத்தியமில்லாத போது, கையால் அரைக்கப்பட்ட பஞ்சை வாங்கி அதைப் பட்டை போட்டுக்கொள்ள வேண்டும். ஒரு சிறிய அம்பில் அதிகக் கஷ்டமில்லாமல் நமக்கு வேண்டிய பட்டைகளைப் போட்டுக் கொள்ளலாம். உழைப்பு எவ்வளவு அதிகமாகப் பரவல் மயமாகிறதோ அந்த அளவு கருவிகளும் லேசானவையாகவும் மலிவானவையாகவும் ஆகின்றன. பட்டைகள் போட்டபின் நூற்பு ஆரம்பமாகிறது.

**சகோதரத்துவம்**

நூல் நூற்பது வரையான இந்த வேலைகளிலெல்லாம் தேசம் முழுவதுமே ஒரே சமயத்தில் ஈடுபடுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது இந்தத் தேசம் முழுவதும் எவ்வளவு ஐக்கியமடையும்! ஏழை, பணக்காரர் ஆகிய இரண்டு சாராரும் பொதுவாக இவ்வேலையைச் செய்தால், அதனால் ஏற்படக் கூடிய இணைப்பு, எவ்வளவு தூரம் சமத்துவத்தை ஏற்படுத்தும்!

**உழைப்பும் அறிவும்**

காங்கிரஸ்காரர்கள் உள்ளப் பூர்வமாக இந்த வேலையில் ஈடுபடும்போது இதற்கான சாதனங்களை அபிவிருத்தி செய்வார்கள். புதிதாகப் பலவற்றையும் கண்டு பிடிப்பார்கள். நம் நாட்டில் உழைப்புக்கும் அறிவுக்குமிடையே ஒரு பெரிய இடைவெளி இருக்கிறது. இதனால் தேக்க நிலைதான் ஏற்படுகின்றது. இந்த இரண்டிற்குமிடையே பிரிக்க முடியாத ஒரு பிணைப்பு இருந்தால்-அதிலும் நான் இங்கே கூறிய முறையில் இருந்தால்-அதனால் ஏற்படக்கூடிய நன்மை அளவிடற்கரியதாக இருக்கும்.

**ஒருமணி போதும்**

இவ்வாறு ஒரு யக்ஞமாகத் தேசம் முழுவதுமே நூற்கும் திட்டத்தில், சாதாரண ஆணோ பெண்ணோ இதற்காக ஒரு மணி நேரத்திற்கு மேல் செலவிட வேண்டுமென்று நான் எதிர்பார்க்கவில்லை.

**இராட்டையின் செய்தி**

இராட்டை அளிக்கும் செய்தியானது, அச்சிறிய கருவியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, எவ்வளவோ விசாலமானதாகும். எளிய வாழ்க்கை வாழ்வது, மனித வர்க்கத்திற்குத் தொண்டு செய்வது, மற்றவர்களுக்குத் தீங்கு செய்யாமல் வாழ்வது, ஏழை-பணக்காரர், முதலாளி-தொழிலாளி, மன்னர்-பிரஜை ஆகியோரிடையே பிரிக்க முடியாத ஒரு சகோதரத்துவத்தை ஏற்படுத்துவது ஆகியவையே இராட்டினத்தின் செய்தியாகும்[2].

**'கடையனுக்கும்'**

'கடையனுக்கும் கடைத்தேற்றம்' என்ற சொற்றொடரில் உள்ள கருத்தை நான் அப்படியே ஆதரிக்கிறேன். உலகம் நமக்கு என்ன செய்ய வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கிறோமோ அதை இந்தக் 'கடையர்களுக்கும்' நாம் செய்ய வேண்டும். எல்லோருக்கும் சம சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும். வாய்ப்பு மட்டும் அளிக்கப்படுமானால், ஒவ்வொரு மனிதனும் சமமான ஆன்மிக வளர்ச்சி அடைவான். இதன் சின்னமாகத்தான் இராட்டை இருக்கிறது.[3]

**நூற்பு ஒரு யக்ஞம்**

"ஒரு யக்ஞமாக இருக்கக் கூடிய உடல் உழைப்பு என்று நாம் ஏற்றுக்கொள்ளக் கூடியது நூற்புத்தான்; அதற்கு மிகமிகத் தகுதியானதும் நூற்பே" என்று தான் நான் எண்ணுகிறேன்.

இதைக் காட்டிலும் கண்ணியமானது அல்லது தேசிய மயமானது எதையும் நான் கற்பனை செய்ய முடியாது. ஏனென்றால், சுமார் ஒரு மணி நேரத்திற்காவது ஏழைகள் செய்ய வேண்டிய உழைப்பை நாமும் செய்து, அவர்களுடன் நாம் இரண்டற ஒன்று படவேண்டும். அதன் மூலம் மனித வர்க்கத்துடனும் ஒன்று படவேண்டும். ஏழைகள் எவ்வாறு தங்களுடைய வாழ்வுக்காக உழைக்கிறார்களோ அதைப் போன்று நான் அவர்களுடைய வாழ்வுக்காக உழைக்க வேண்டும். இதை ஆண்டவன் பெயரால் செய்ய வேண்டும். இதைக் காட்டிலும் ஆண்டவனை ஆராதிப்பதற்கான சிறந்த முறையை என்னால் கற்பனை செய்து பார்க்கவும் முடியவில்லை. இராட்டினத்தால் உலகத்திலுள்ள செல்வங்கள் இன்னும் அதிக சமத்துவமான முறையில் விநியோகமாகும்.[4]

### பொருளாதார மறுமலர்ச்சி

இந்தியாவின் பொருளாதார, தார்மிக மறுமலர்ச்சிக்குக் கையால் நூற்பதும் நெய்வதும் மிகப் பெரிய சாதனங்களாக இருக்கும் என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கையுண்டு. இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு விவசாயத்திற்குத் துணையாக இருக்கக்கூடிய ஒரு எளிய தொழில் வேண்டும். நீண்ட காலத்திற்கு முன்பு நூற்புத்தான் குடிசைத் தொழிலாக இருந்தது. இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களைப் பட்டினியிலிருந்து காப்பாற்ற வேண்டுமானால், அவர்களுடைய வீட்டில் மீண்டும் இராட்டினம் சுழல்வதற்கு நாம் உதவ வேண்டும். ஒவ்வொரு கிராமமும் மீண்டும் தனக்கென்று ஒரு நெசவாளரை வைத்துக்கொள்ள வேண்டும்.[5]

### ''துணை'' வேலை

வாசகர் தனது மனதில் இந்தியா என்னும் எலும்புக் கூட்டைப் பற்றிக் கற்பனை செய்து பார்ப்பாரானால், இங்குள்ள மக்களில் எண்பது சதவீதத்தினரைப் பற்றி எண்ணிப் பார்க்கவேண்டியதிருக்கும். இவர்கள் தங்களுடைய வயல்களில் வேலை செய்பவர்கள்-ஆண்டில் குறைந்தது நான்கு மாதங்களில் இவர்களுக்கு வேலை இருப்பதில்லையாதலால், கிட்டத்தட்டப் பட்டினியின் எல்லையிலேயே வாழ்கிறார்கள். இதுதான் சாதாரணமான நிலை. கட்டாயமான சூழ்நிலையில் இவ்வாறு வேலையில்லா நிலை ஏற்படுகிறது. இதனுடன் திரும்பத் திரும்ப ஏற்படும் பஞ்சங்களும் சேர்ந்து கொள்கின்றன. தங்களுக்குக் கிடைக்கும் சொற்ப வருவாய்க்குத் துணையாக, தங்களுடைய சொந்தக் குடிசைகளிலேயே இந்த ஆண்களும் பெண்களும் செய்யக்கூடிய வேலை என்ன இருக்கிறது? கையால்

நூல் நூற்பதைத் தவிர வேறு எதுவுமே இல்லையென்பதில் இன்னும் யாருக்கும் சந்தேகம் உண்டா?[6]

**வீட்டுச் சாப்பாடு**

நம் வீட்டில் சமைக்கப்படும் உணவுக்கு அதிகச் செலவாகாது. ஹோட்டல் சமையலின்மூலம் வீட்டுச் சமையலை ஈடுகட்ட முடியாது. அதைப் போலவே வீட்டில் நூல்நூற்றுத் துணி உற்பத்தி செய்வதும் அதிகம் செலவாவதாக இருக்க முடியாது. இருபத்தைந்து கோடிக்கு மேற்பட்டவர்கள் தங்களுடைய கையாலேயே நூற்பார்கள். இவ்வாறு நூற்ற நூலைத் தாங்கள் வாழும் இடங்களுக்கு அருகிலேயே நெய்து கொள்வார்கள். இந்த மக்கள் நிலத்தை நம்பி வாழ்பவர்கள்; வருஷத்தில் குறைந்தது நான்கு மாதங்கள் சோம்பியிருப்பவர்கள்.

**மலிவான துணி**

வேலையில்லாது இருக்கும் நேரத்தில் இவர்கள் நூற்று, அவ்வாறு நூற்ற நூலை நெய்யச் சொல்லி அணிந்து கொண்டார்களானால், இவர்களுடைய கதருடன் எந்த ஆலைத்துணியும் போட்டியிட முடியாது. இவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட துணி, அவர்களுக்கு மிகமிக மலிவானதாக இருக்கும்.[7]

**11 நன்மைகள்**

நூற்பதால் கிடைக்கக்கூடிய நன்மைகளாவன :

1. ஓய்விருந்து, சொற்பப் பணமும் தேவைப் படுவோருக்கு இது உடனடியாக வேலை அளிக்கிறது.

2. இது ஆயிரக்கணக்கான பேருக்குத் தெரிந்தது.

3. இது எளிதாகக் கற்றுக்கொள்ளக் கூடியது.

4. இதற்குக் கிட்டத்தட்ட மூலதனமே தேவையில்லை.

5. இராட்டையை எளிதாகவும் அதிகச் செலவில்லாமலும் செய்து கொள்ளலாம். ஒரு ஓடு, ஒரு குச்சி ஆகியவற்றின் உதவியுடனேயே நூல் நூற்பை மேற்கொள்ள முடியும் என்பதை நம்மில் பெரும்பாலோர் இன்னும் அறியவில்லை.

6. மக்களுக்கு இதன்மீது வெறுப்பில்லை.

7. பஞ்சம், பற்றுக்குறை ஆகிய காலங்களில் இது உடனடியாக நிவாரணம் அளிக்கிறது.

8. வெளிநாட்டுத் துணியைக் கொள்முதல் செய்வதற்காக வெளிநாடுகளுக்குச் செல்லும் செல்வத்தைத் தடுத்து நிறுத்தக் கூடியது இது ஒன்றே.

*9.* இவ்வாறு மீதப்படும் கோடிக்கணக்கான ரூபாய்களை இது உடனடியாக உண்மையான ஏழை மக்கள் மத்தியில் விநியோகம் செய்துவிடுகிறது.

*10.* இதில் மிகச் சிறிய வெற்றி பெற்றாலும் அது மக்களுக்குப் பெரும் லாபந்தரக்கூடியதாக இருக்கும்.

*11.* மக்கள் மத்தியில் ஒத்துழைப்பைப் பெறுவதற்கான மிகச் சிறந்த சாதனம் இதுவே. [8]

**வேலை தருகிறது**

பொதுமக்களுக்கு உள்ள நோய், வேலையில்லை என்பதுதானே யொழியப் பணமில்லை என்பதல்ல. உழைப்புத்தான் பணம். கோடிக்கணக்கான மக்களுக்கு அவர்களுடைய இல்லங்களில் கண்ணியமான வேலை அளிக்கக்கூடியவர் உணவும் துணியும் அளித்தவராகிறார். இவைகளை அளிப்பதும் பணம் அளிப்பதும் ஒன்றே. சர்க்காவானது இப்படிப்பட்ட உழைப்பை அளிக்கக்கூடிய தாக இருக்கிறது. ஆகையால் இதைக் காட்டிலும் சிறந்த ஒரு சாதனத்தைக் கண்டு பிடிக்கும்வரை, இதுவே நடைமுறையில் இருக்க வேண்டும்.... [9]

**மூலவேர்**

எல்லாத் தீமைகளுக்குமே மூலகாரணம் வேலையில்லாது சோம்பியிருப்பதுதான். ஆகவே இந்த மூலவேரைக் கிள்ளி எறிந்து விட்டால், பெரும்பாலான தீமைகளை மேலும் எவ்வித முயற்சியும் செய்யாமலே குணப்படுத்திவிட முடியும். பட்டினிகிடக்கும் நாட்டிற்கு சுய முயற்சியோ தன்னம்பிக்கையோ இருக்காது. சுகாதாரமின்மை, நோய் ஆகியவற்றைப்பற்றியெல்லாம் அது எண்ணாது. எந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டு போனாலும் 'இதனால் பயன் என்ன?' என்றுதான் அது கேட்கும். இவ்வாறு பீடித்துள்ள விரக்தி என்னும் குளிரைப் போக்கித் தன்னம்பிக்கை என்னும் சூரியன் கோடிக்கணக்கான மக்கள் மத்தியில் உதயமாகுமாறு செய்ய வேண்டுமானால், சர்க்கா என்னும் உயிரூட்டுங் கருவியின் மூலமே அது முடியும். [10]

**அரும் பலன்கள்**

ஒன்றுமேயில்லாத ஒரு நிலையிலிருந்து ஏதாவது கொஞ்சம் உற்பத்தி செய்யவேண்டும் என்ற முயற்சியே இராட்டையாகும். இராட்டையின் மூலம் நாம் தேசத்துக்கு அறுபது கோடி ரூபாய் மீதப்படுத்திக் கொடுக்க முடியுமானால்,—இது நிச்சயமாக நம்மால் முடியும்—அந்தப் பெருந்தொகை நம் தேசிய வருமானத்துடன் சேரும். இந்த வேலையில் தானாகவே கிராமப் புனரமைப்பு

வேலையும் நடைபெற்று விடுகிறது. கிட்டத்தட்ட இந்தத் தொகை முழுவதுமே இந்தியாவில் உள்ள பாமர ஏழைகளிடையே விநியோகிக்கப்படுமாதலால், இவ்வளவு செல்வத்தையும் நியாயமாகவும் கிட்டதட்டச் சமமாகவும் நாம் விநியோகம் செய்தவர்களாகிறோம். இதனுடன் இவ்வாறு விநியோகம் செய்வதனால் ஏற்படக்கூடிய அளவு கடந்த தார்மிகப் பலனையும் சேர்த்துக் கொள்ளுங்கள். சர்க்காவின் நிலை அசைக்க முடியாததாகி விடும். [11]

### ஏழைகளுக்கு ஆதாரம்

சில இடங்களில் உள்ள நெசவாளர்கள், அவ்வேலையின் காரணமாகத் தீண்டத் தகாதவர்களாகக் கருதப்படுவது உண்மையே. இவர்களில் பெரும்பாலோர், எந்தவிதமான அழகும் இல்லாத முரட்டுக் கதரை உற்பத்தி செய்பவர்கள். இந்தத் தொழிலே மடியும் கட்டத்தில் இருந்தபோது, கதர் அவர்களுடைய உதவிக்கு வந்தது. அவர்கள் உற்பத்திசெய்த முரட்டுத் துணிக்கு ஒரு தேவையை ஏற்படுத்தியது. அப்போதுதான் நூற்பைக் கொண்டு வாழ்ந்த ஏராளமான அரிஜனக் குடும்பங்கள் இருந்தனவென்பது கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வாறு, ஏழை மக்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாகக் கதர் இருக்கிறதென்பதில் ஐயமில்லை. இது மிக மிக ஏழைகளாக இருப்பவர்களுக்கு—அரிஜனங்கள் உள்பட, (ஏழைகளிலேயே மிகவும் நிராதரவாக இருப்பவர்கள் இவர்கள்தான்)—இது உதவுகிறது. அரிஜனங்கள் இவ்வாறு நிராதரவாய் இருப்பதற்குக் காரணம், மற்றவர்களுக்குக் கிடைக்கக்கூடிய பல வேலைகள் அரிஜனங்களுக்குக் கிடைக்கவில்லை என்பதுதான். [12]

### பிரம்மச்சாரிகளுக்கு இராட்டை

பிரம்மச்சர்யத்தை அனுஷ்டிக்க விரும்புவோருக்கும் நான் இராட்டையையே அளிப்பேன். இது இகழத்தக்க ஒரு பொருளல்ல. ஏனென்றால் அனுபவம் இதற்குச் சான்று பகர்கிறது. ஆசைகளை அடக்க விரும்பும் ஒருவன் அமைதியாக இருக்க வேண்டியிருக்கிறது. அவனுக்குள்ளே மன எழுச்சிகள் அடங்க வேண்டும். இராட்டையைச் சுற்றுவதானது மிகவும் மென்மையும் இனிமையும் வாய்ந்ததாக இருக்கிறது. ஆகையால் அதை நம்பிக்கையுடன் சுற்றுபவர்களுடைய மன உணர்ச்சிகளை அடக்குகிறது...... மனித உணர்ச்சிகள் காற்றைவிட வேகமானவை. அவைகளைப் பூரணமாக அடக்குவதற்கு எல்லையற்ற பொறுமை வேண்டும். இதில் நான் கொண்டாடும் உரிமையெல்லாம்,

இராட்டையானது மனதை நிலைப்படுத்துவதற்கு உதவக்கூடிய சக்திவாய்ந்த ஆயுதமாக இருக்கும் என்பதுதான்.[13]

### மாபெரும் பணி

நூல் நூற்பானது கோடிக் கணக்கான மக்களை ஒரு கூட்டு முயற்சியில் இணைக்கும்; கோடிக்கணக்கான மக்களுடைய சக்தியைப் பாதுகாப்பதுடன் அதைப் பயன்படுத்தவும் உதவும்; கோடிக்கணக்கான மக்கள் தங்களுடைய வாழ்க்கையைத் தாய் நாட்டுக்கு அர்ப்பணிக்குமாறு செய்யும். மேலும், இப்படிப்பட்ட ஒரு மாபெரும் பணியை நிறைவேற்றுவதானது, நம்முடைய பலத்தை நாமே உணருவதற்கு உதவக் கூடியதாயும் இருக்கும். நூற்பினல் ஏற்படக் கூடிய நுணுக்கமான, ஏராளமான சிக்கல்களில் நாம் பூரணமான தேர்ச்சி பெற்றவர்களாக வேண்டியதுமிருக்கும். உதாரணமாக, ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்கு வைத்துக் கொள்வது, கிராமங்களில் துப்புரவான, சுகாதாரமான சூழ்நிலைகளில் வாழக் கற்றுக் கொள்ளுதல், முட்டுக் கட்டைகளாக இருக்கும் கஷ்டங்களை அகற்றுதல், மற்றும் இவை போன்றவை. ஏனென்றால், இவைகளை யெல்லாம் நாம் கற்றுக் கொண்டாலொழிய, நாம் இந்தக் கடமையை நிறைவேற்றி வைக்க முடியாது. அப்போதோ இராட்டையானது நம்மிடம் இந்தச் சக்தியை வளர்ப்பதற்கான ஒரு சாதனமாக அமைகிறது.[14]

### மற்றத் தொழில்கள்

கோடிக்கணக்கான மக்கள் மேற்கொள்ளக்கூடிய ஒரே தொழில் நூற்புத்தான், வேறெதுவும் இல்லை. இதற்காக, மற்றத் தொழில்களையெல்லாம் பொருட்படுத்த வேண்டியதில்லை அல்லது மற்றத் தொழில்களெல்லாம் பலனற்றவை என்பது பொருளல்ல. உண்மையில், தனிப்பட்ட கண்ணேட்டத்துடன் கவனித்தால், மற்ற எந்தத் தொழிலும் நூற்பைக் காட்டிலும் அதிக வருவாய் அளிக்கக் கூடியதாய் இருக்கும். உதாரணமாக, கடிகாரங்கள் செய்வதானது அதிக வருமானம் அளிக்கக் கூடியதாகவும் மனதைக் கவரக் கூடியதாயும் இருக்கும். ஆனல் எத்தனை பேர் அத்தொழிலில் ஈடுபட முடியும்? கிராமங்களில் உள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு அதனல் ஏதாவது உபயோகமுண்டா? ஆனல் கிராம மக்கள் தங்களுடைய வீடுகளைப் புனரமைப்புச் செய்து மூதாதையர்களைப் போல வாழ ஆரம்பித்தால், தங்களுடைய வேலையற்ற நேரத்தை நல்ல முறையில் பயன்படுத்த ஆரம்பித்தால், மற்றத் தொழில்களெல்லாம் தாமாகவே உயிர்பெறும்.[15]

### எப்போது முடியும்?

அறிவுக் கூர்மையும் தேச பக்தியும் நிறைந்த சுயநல மற்ற இந்தியர்களைக் கொண்ட ஒரு படையே வேண்டும். சர்க்காவின் செய்தியைக் கிராமங்களில் பரப்பவும் ஒளி இழந்த கிராம வாசிகளின் கண்களில் நம்பிக்கை ஒளி வீசுமாறு செய்யவும் இவர்கள் மன ஒருமையோடு பாடுபடவேண்டும். இப்படிப்பட்டவர்களுடைய அணி இல்லாவிட்டால், சர்க்காவைப் புனருத்தாரணம் செய்ய முடியாது. இது ஒரு மகத்தான கூட்டுறவு முயற்சி; சரியான முதியோர் கல்வி. எப்படி ஓசையின்றி, உறுதியோடு, உயிரூட்டத்துடன் சர்க்கா சுற்றுகிறதோ அதைப் போன்று ஓசையில்லாத ஆனால் நிச்சயமான ஒரு புரட்சியை அது உண்டாக்குகிறது.

### சர்க்காவின் சேவை

இங்கே நான் கூறும் வாதம் சரிதான் என்பதை, இருபது ஆண்டுகளாக நான் சர்க்காவில் செய்துவரும் பணி உறுதிப் படுத்துகிறது. ஏழை இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சர்க்கா கிட்டத்தட்டச் சமத்துவமான முறையில் சேவை செய்து வந்திருக்கிறது. பகட்டான பேச்சும் பறைசாற்றுதலும் இன்றி, இலட்சக் கணக்கான கிராமக் கைத்தொழிலாளர்களின் கைகளுக்கு சுமார் கோடி ரூபாய் போய்ச் சேர்ந்திருக்கிறது.

### சுதந்திரம் தரும்

அதனல்தான் நான் தயக்கமின்றிச் சொல்லுகிறேன், பல்வேறு விதமான மதப் பிரிவுகளையும் சேர்ந்த நம் எல்லோரையும் சர்க்கா சுதந்திரத்தை நோக்கி அழைத்துச் செல்லுமென்று. கிராமங்களுக்கு உரிய இடத்தைச் சர்க்கா மீண்டும் அளிக்கிறது. உயர்ந்தவர்களுக்கும் தாழ்ந்தவர்களுக்கு மிடையே உள்ள ஏற்றத்தாழ்வைப் போக்குகிறது.[16]

### எதிர்காலம் வாழ்த்தும்

இராட்டையானது, வணிக அடிப்படையிலான போரின் சின்னமல்ல; வணிக அடிப்படையிலான சமாதானத்தின் சின்னம். உலக நாடுகளுக்கிடையே அது குரோத உணர்ச்சியைப் பரப்பாது நல்லெண்ணம், சுய முயற்சி ஆகியவற்றை வாரி வழங்குகிறது. உலக அமைதிக்குப் பங்கமாக இருந்து அதன் வளங்களைச் சுரண்டிக் கொண்டிருக்கும் ஒரு கடற்படையின் பாதுகாப்பு அதற்குத் தேவையாய் இராது. அதற்குப் பதிலாகக் கோடிக்கணக்கான பேர் இன்று எவ்வாறு தங்களுடைய இல்லங்களில் தங்கள் உணவைத் தயாரித்துக் கொள்கிறார்களோ அதை போன்று, தங்களுக்கு வேண்டிய நூலைத்

தாங்களே நூற்றுக் கொள்ளவேண்டும் என்ற பக்தி பூர்வமான உறுதிப்பாடு மட்டும் வேண்டும். நான் செய்யத் தவறியவைகள், செய்த தவறுகள் பலவற்றுக்காக எதிர்கால சந்ததியினரின் நிந்தனைக்கு நான் ஆளாகலாம். ஆனால் சர்க்காவைப் புனருத்தாரணம் செய்ததற்காக மட்டும் நிச்சயமாய் அதன் வாழ்த்தைப் பெறுவேன் என உறுதியாக நம்புகிறேன். எல்லாவற்றையும் நான் அதற்காகப் பணயம் வைக்கிறேன். ஏனெனில் சர்க்காவின் ஒவ்வொரு சுற்றும் நூலை நூற்பது மட்டுமல்லாமல், அமைதி, நல்லெண்ணம், அன்பு ஆகியவைகளையும் 'நூற்கிறது.'[17]

**ஏகாதிபத்திய எண்ணங்கூடாது**

கதரையும் மற்றக் கிராமக் கைத்தொழில்களையும் புனருத்தாரணம் செய்வதன் மூலமே மக்களுடைய உள்ளத்தில் பதிந்துள்ள எளிமை, வீட்டுப் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் தேசிய வாழ்க்கையையே புதுப்பித்து அமைக்கும் அளவுக்கு நாம் வளர்ச்சியடைய முடியும் என்பது எனது கருத்து. உலகிலுள்ள பலவீனமான இனங்களைச் சுரண்டி அதை அஸ்திவாரமாகக் கொண்டு எழுப்பப்படும் ஒரு ஏகாதிபத்தியத்திற்கு நாம் ஆளாக மாட்டோம். கடல், விமானப் படைகள் சமாதானமான வாழ்க்கையென்பதைக் கிட்டத்தட்டச் சாத்தியமற்றதாகச் செய்துவிட்டன. அவைகளால் பாதுகாக்கப்படும் ஒரு மயக்கந்தரும் லோகாயத நாகரிகத்தை ஏற்க வேண்டியதும் அப்போது இருக்காது. அதற்கு மாறாக, அப்போது, இவ்வித ஏகாதிபத்தியத்தைப் பல்வேறு நாடுகளின் பொதுநல உறவாக நாம் மாற்றியமைக்க முடியும். இவ்வாறு நாடுகள் ஒன்று சேருவதாக இருந்தால், தங்களிடம் உள்ள சிறந்த அம்சங்களை உலகத்திற்கு அளிக்கவும், மிருகத்தனமான பலாத்காரத்தினால் அல்லாமல் தாங்களே கஷ்டத்தை அனுபவித்து, உலகிலுள்ள பலவீனமான இனங்களையும் நாடுகளையும் பாதுகாக்கவும் அவ்வாறு ஒன்று சேரும். இராட்டை பூரண வெற்றியடைந்த பின்புதான், இப்படிப்பட்ட சிறந்த மாறுதல் ஏற்படமுடியும். இந்தியா புறக் கவர்ச்சிகளுக்கு ஆளாகாமல், தன்னுடைய பிரதான தேவைகளான உணவு, உடை ஆகிய இரண்டிலும் தன்னிறைவு பெற்ற நாடாக வேண்டும். அவ்வாறு ஆகி வெளியிலிருந்து தாக்குதல்கள் ஏற்படமுடியாத அளவு அது பலம் பெறும் போதுதான் இந்தியா இப்படிப்பட்ட செய்தியை உலகிற்கு அளிக்கத் தகுதியான நாடாகும்.[18]

**அஸ்திவாரம் இராட்டை**

இந்த ஒரே தொழிலை (அதாவது, கதரை) நாம் புனருத்தாரணம் செய்யும்போது, மற்றத் தொழில்களெல்லாம் தாமே

வளர்ச்சியடையும். ஒரு பழுதில்லாத கிராம வாழ்க்கையை அமைக்கக் கூடிய அஸ்திவாரமாக இராட்டையையே நான் ஆக்கு வேன். மற்ற நடவடிக்கைகளெல்லாம் இந்த இராட்டையைச் சுற்றி அமையுமாறு செய்வேன்.[19]

**சிறந்த சாதனம்**

கிராமங்களின் புனர் வாழ்வுக்கு எப்போதுமே கதர் என்னும் இலட்சியம் மிகச் சிறந்த சாதனமாக இருந்து வந்திருக்கிறது. இவ்வித கிராமப் புனர்வாழ்வின் மூலம், பொது மக்களிடையே உண்மையான பலத்தை—இந்த பலம் தான் உண்மையில் சுயராஜ் யத்தைக் கொண்டுவரும்—அளிக்கக் கூடியதாகவும் இருக்கும்.[20]

**நூல்-கதர் பரிமாற்றம்**

நகரங்களிலும் கிராமங்களிலும் ஒருங்கே கதர் கிடைக்க வேண்டுமானல், நூலைக் கொடுத்தே அதைப் பெற்றுக் கொள்வதாய் இருக்க வேண்டும். இது எனது அனுபவத்தில் கண்ட உண்மை. காலம் போகப் போக, நூல் என்னும் செலாவணியை அளித்துக் கதரை வாங்க வேண்டுமென்று தான் மக்களே வலியுறுத்துவார் கள். எனினும் இது நடைபெருவிட்டால்—வேண்டா வெறுப்புட னேயே மக்கள் நூலை அளிப்பதாய் இருந்தால்—அஹிம்சை மூலமாக சுயராஜ்யம் பெறுவதென்பது சாத்தியமற்றதாகப் போய்விடும்.

**நகரங்கள், ஆலைகள்**
**பெருக்கத்தின் தீமைகள்**

நகரங்களும் ஆலைகளும் பெருகிக் கொண்டு போவதானது, இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களுடைய செல்வ வளத் துக்கு நிச்சயமாக உதவாது. அதற்கு மாருக, வேலையற்றிருப் போரின் வறுமையை அது அதிகப்படுத்தும்; பட்டினியால் வரக் கூடிய அத்தனை நோய்களும் வரும். இப்படிப் பட்ட காட்சியை, ஒன்றும் நேராதது போல, நகர மக்கள் பார்த்துக்கொண்டிருப்ப தானல் நாம் அப்புறம் என்ன சொல்வதற்கு இருக்கிறது? இப்படிப்பட்ட காலம் வரும்போது, இந்தியாவில் இம்சையின் ஆட்சி நடைபெறும். சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின் ஆட்சி இருக்காது. இயல்பாகவே கதருக்கு அங்கு எவ்வித இடமும் இருக்காது என்பதை நாம் ஒப்புக் கொண்டுதானக வேண்டும். அப்போது இராணுவப் பயிற்சி எல்லோருக்கும் கட் டாயமாகும். ஆனல் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களை அடிப்படையாக வைத்தே எதையும் நாம் சிந்திக்க வேண்டும். அவர்களைப் பழைய நிலைக்குக் கொண்டு வருவதானல் அவர்கள் மீண்டும் வாழவேண்டுமானல், நூல் நூற்பதே மையமான

தொழிலாக இருக்க வேண்டும். மக்கள் பிறர் கட்டுப்பாடின்றித் தாங்களாகவே நூல் நூற்க வேண்டும்.[21]

**கதரின் முன்னேற்றம்**

எங்களுடைய வேலை மிகமிகச் சிறிய அளவிலேயே ஆரம்ப மாயிற்று. நான் கதர் வேலையை ஆரம்பித்தபோது, என்னுட னேயே வாழ்ந்து மடிவதென்று விரதம் பூண்டிருந்த மகன்லால் பாயும் மற்றவர்களும் அதில் இருந்தார்கள். அவர்களைத் தவிர வித் தல் தாஸ் பாயும் மற்றும் சில சகோதரிகளும் இருந்தார்கள். அன் றைய நிலையைக் காட்டிலும் இப்போது நாம் எவ்வளவோ முன் னேறி யிருக்கிறோம். இன்று சுமார் இரண்டு கோடிப் பேர் சர்க்கா வைச் சுற்றுகிறார்கள். அதனுடைய உதவியுடன், கிராம மக்களுக்கு நிறையப் பணம் கிடைக்குமாறு நாம் செய்ய முடிந்திருக்கிறது. ஆனால், நாம் எப்போதும் கூறிவந்துள்ளது போல் இப்போதும் சர்க்கா இல்லாமல் சுயராஜ்யம் சாத்தியமில்லையென்று கூற முடியுமா? இவ்வாறு உரிமை பாராட்டுவது நியாயம் என நாம் ஒப்புக்கொள்ளாத வரை சர்க்கா என்பது ஏதோ ஒரு கஷ்ட நிவா ரண சாதனந்தான்; வேறு ஒன்றுமே செய்ய முடியாத நிலைமையில் இதை நாடுகிறோம் என்றாகிவிடும். அப்போது அது நம்முடைய விமோசனத்திற்கான சாதனமாகாது.

**செய்தியைப் பரப்பத் தவறினோம்**

இரண்டாவதாக, நம்முடைய செய்தியைக் கோடிக்கணக் கான மக்களிடம் கொண்டு செல்ல நாம் தவறிவிட்டோம். சர்க்கா வால் அவர்களுக்கு என்ன உதவி செய்ய முடியும் என்பது அவர் களுக்குத் தெரியாது; தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையும் அவர்களுக்கு இல்லை.

**காங்கிரஸ் மனமார ஏற்றதா?**

சர்க்காவைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளத்தான் செய்தது. ஆனால் மனமுவந்து ஏற்றுக் கொண்டதா? இல்லை, எனக்காகவே அதைச் சகித்துக் கொள்கிறது. அதை நூற்றுக்கு நூறு சோஷ லிஸ்டுகள் ஏளனம் செய்கிறார்கள். அதற்கு எதிராக அவர்கள் எவ்வளவோ எழுதியும் பேசியும் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தெளிவாகவும், அவர்கள் மனதைத் திருப்பக் கூடிய முறையிலும் நாம் அளிக்கக் கூடிய மறுமொழி நமக்குத் தெரியவில்லை. சர்க்கா தான் சுயராஜ்யத்தின் திறவுகோல் என்பதை என்னால் அவர் களுக்கு உணர்த்த முடியுமானால் நான் எவ்வளவோ மகிழ்ச்சியடை

வேன்! இத்தனை வருஷங்களாக இந்தக் கோரிக்கையின் நியாயத்தை என்னால் உணர்த்த முடியவில்லை.

### அஹிம்சை இங்கேயே பலன் தரும்

இப்போது, நான் கூறவந்த மூன்றாவது அம்சத்துக்கு வருவோம்: அஹிம்சையென்பது ஏதோ மறு உலகத்தைச் சேர்ந்த ஒரு விஷயமல்ல. அப்படியிருப்பதானால், நான் அதைப் பற்றி அக்கறைப்படவில்லை. நான் இந்த உலகில் வாழ்பவனே. அஹிம்சையானது உண்மையிலேயே பயனுள்ளதாய் இருந்தால், நான் உயிருடனிருக்கும் போதே, இந்த உலகத்திலேயே, அதன் பயனை அனுபவிக்க விரும்புகிறேன். இரக்கமும் மற்றும் அதைப் போன்ற பண்புகளும் கொண்ட ஒரு சமுதாயத்திலல்லாமல் வேறு எங்கு, எவ்வாறு அதை உணர முடியும்?

### இம்சையில் நம்பிக்கை உள்ளோர் வீடுகள்

இம்சையில் நம்பிக்கை கொண்ட ஒருவருடைய இல்லத்துக்குச் சென்றீர்களானால், அவருடைய வரவேற்பு அறையானது புலித் தோல்கள், மான் கொம்புகள், பட்டாக் கத்திகள், துப்பாக்கிகள், மற்றும் இது போன்ற பொருள்கள் ஆகியவற்றினால் அலங்கரிக்கப் பட்டிருப்பதைக் காண்பீர்கள். நான் வைசிராயின் மாளிகைக்குச் சென்றிருக்கிறேன்; முசோலினியையும் பார்த்தேன். இவர்கள் இருவருடைய மாளிகைகளிலுமே சுவர்களில் ஆயுதங்கள் தொங்க விடப்பட்டிருப்பதைக் கண்டேன். படையின் அணிவகுப்பு மரியாதையொன்றும் எனக்கு அளிக்கப்பட்டது. அதுவும் இம்சையின் சின்னமே.

### அஹிம்சைச் சித்திரம்

எப்படி ஆயுதங்கள் இம்சையின் சின்னமாக இருக்கின்றனவோ அதைப் போன்று சர்க்காவும் அஹிம்சையின் சின்னமாய் இருக்கிறது. ஏனென்றால், அதன் மூலம் மிகமிக நேரடியாக நாம் அஹிம்சையை அடைய முடியும். ஆனால் அதன் உட்கருத்தின்படி நாம் செயலாற்றாதவரை அது அஹிம்சையின் சின்னமாய் இருக்க முடியாது. முசோலினியின் அறையில் உள்ள பட்டாக் கத்தியானது, "என்னை மட்டுந் தொடுங்கள், நான் உங்களை இரண்டாக வெட்டி விடுகிறேன்" என்று கூறுவது போல் இருந்தது. அது இம்சையின் ஒரு தெளிவான தோற்றத்தை அளித்தது. அதை மட்டும் தொட்டுப் பார்த்து அதன் சக்தியை உணருமாறு உங்களை அது கேட்பது போல இருந்தது. இதே மாதிரி சர்க்காவின்

சக்தியையும் நாம் சித்தரிக்க வேண்டும். அதைப் பார்த்த மாத்திரத்திலே அது அஹிம்சையைப் பற்றி நம்மிடம் பேச வேண்டும். ஆனால் இன்று நாம் ஓட்டாண்டிகளாய் இருக்கிறோம். சோஷலிஸ்டுகளுக்கு நாம் என்ன பதில் கூறுவது? 'வருஷக் கணக்காக நாம் சர்க்காவைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசிக் கொண்டிருக்கிறோமாயினும் நாம் சாதித்தது ஒன்றும் இல்லை'யென்று அவர்கள் புகார் செய்கிறார்கள்.

### இம்சையின் சின்னமான சர்க்கா

முஸ்லிம்கள் ஆட்சிக் காலத்தின் போதும் சர்க்கா இருந்தது. டாக்கா, மஸ்லின் துணிகளுக்காகப் பெயர் பெற்றிருந்தது. ஆயினும், அப்போது சர்க்கா, ஏழ்மையின் சின்னமாக இருந்ததே தவிர, அஹிம்சையின் சின்னமாய் இருக்கவில்லை. மாதர்களிடமும் தாழ்த்தப்பட்டவர்களிடமும் மன்னர்கள் கட்டாயமாக வேலை வாங்கினர். இதையே பின்னால் கிழக்கு இந்தியக் கம்பெனியும் திருப்பிச் செய்தது. இப்படிக் கட்டாயமாக வேலை வாங்குவது இருந்ததென்பதைக் கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் கூறுகிறார். இவ்வாறு, பல சகாப்தங்களாக, சர்க்கா இம்சையின் சின்னமாகவும், பலாத்காரத்தையும் கட்டாயத்தையும் உபயோகப்படுத்துவதற்கான சின்னமாகவும் விளங்கி வந்தது. நூல் நூற்பவருக்கு ஒரு கையளவு தான்யம் கிடைக்கும்; அல்லது இரண்டு காசுகள் கிடைக்கும், அவ்வளவுதான். ஆனால், அரண்மனையில் இருந்த பெண்களே மிக நேர்த்தியான மஸ்லின் துணிகளை—இவை உழைப்பைச் சுரண்டிப் பெற்ற பொருள்கள்—ஆடம்பரமாக அணிந்துகொண்டிருந்தார்கள்.

### "என் தவறே"

இதற்கு மாறாக, சர்க்காவை அஹிம்சையின் சின்னமாக நான் உங்களுக்கு அளித்திருக்கிறேன். இதை இதுவரை உங்களுக்கு நான் தெளிவு படுத்தவில்லையென்றால் அது என்னுடைய தவறே. மூடமாகிவிட்டவர்களில் நானும் ஒருவன் என்பதையும், என்னால் மெதுவாகவே ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்ல முடியுமென்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஆயினும் இதுவரை செய்த வேலை வீணாகப் போகவில்லையென்று நான் நம்புகிறேன்.

### சர்க்கா, காங்கிரஸ்

நான்காவது அம்சத்துக்கு வருகிறேன். சர்க்கா இல்லாமல் சுயராஜ்யம் இல்லையென்பதை இதுவரை நாம் நிரூபிக்கவில்லை. இதைக் காங்கிரஸ்காரருக்கு நீங்கள் விளக்கிக் கூறாதவரை,

இதை மெய்ப்பிக்க முடியாது. சர்க்காவும் காங்கிரசும் ஒரே பொருளைக் கொண்டவைகளாக இருக்கவேண்டும்.

### வரலாற்றை மாற்றி அமைக்கவேண்டும்

அஹிம்சையின் உயர்வை நிரூபிக்கும் பணி கடினமானதாகும். அஹிம்சையின் உண்மையை உணர வேண்டுமானால், நாம் அதன் அடி ஆழத்திற்குச் செல்லவேண்டும். இந்த உலகம் என்னை அந்தச் சோதனைக்கு உள்ளாக்கப் போகிறது. சர்க்காவைப் பற்றி நான் வானளாவப் பேசுவதற்காக, என்னை ஒரு முட்டாளென அது அறிவிக்கலாம். பல நூற்றாண்டுகளாக, வறுமை, நிராதரவு, அநீதி, கட்டாய உழைப்பு ஆகியவற்றின் சின்னமாக இருந்த சர்க்காவை இப்போது மகத்தான பலம் பொருந்திய அஹிம்சையின் சின்னமாகவும், புது சமுதாய அமைப்பு, புது பொருளாதார அமைப்பு ஆகியவற்றின் சின்னமாகவும் ஆக்கும் பொறுப்பு நமது தலைமீது விழுந்திருக்கிறது. வரலாற்றை நாம் மாற்றியமைக்க வேண்டியிருக்கிறது. உங்கள் மூலமாக நான் அதைச் செய்ய விரும்புகிறேன்.

### நம்பிக்கை இல்லையேல்?

நான் சொல்வதை நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்களென நம்புகிறேன். இதன்பிறகும் சர்க்காவுக்கு சுயராஜ்யத்தைப் பெறக்கூடிய சக்தியில்லை யென்று நீங்கள் நம்பினால், என்னை விட்டு விலகிச் சென்றுவிடுங்கள் என்றுதான் உங்களைக் கேட்டுக் கொள்வேன். இப்போது நீங்கள் முன்னுக்குப்பின் முரணான ஒரு நிலைமையில் இருக்கிறீர்கள். நம்பிக்கை இல்லாமல் என்னுடன் தொடர்ந்து இருந்தீர்களானால், என்னை ஏமாற்றியவர்களாவீர்கள்; நாட்டிற்கும் ஒரு பெரிய தீங்கு செய்தவர்களாவீர்கள். என்னுடைய வாழ்க்கையின் இந்தக் கடைசிக் கட்டத்தில் என்னை ஏமாற்ற வேண்டாம் என்று உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்.

### குறைகளுக்கெல்லாம் பொறுப்பு

இதுவரை நம்முடைய வேலைத் திட்டத்தில் உள்ள குறைகளுக்கெல்லாம் நான்தான் பொறுப்பாவேன். தவறு என்னுடையது. ஏனென்றால், அதனுடைய குறைபாடுகள் என்னவென்பது எனக்குத் தெரிந்திருந்த போது கூட, நானே தலைவனாக இருந்திருக்கிறேன். ஆனால் போனவை போகட்டும். சர்க்கா அஹிம்சையின் சின்னம் என்று உண்மையிலேயே இப்போது நாம் நம்புகிறோமா? நம்முடைய இதயத்தின் ஆழத்திலிருந்து இவ்வாறு நம்புபவர்கள் நம்மில் எத்தனை பேர்?

**மூவர்ணக் கொடி**

இப்போது மூவர்ணக் கொடியை எடுத்துக்கொள்வோம். ஒரு குறிப்பிட்ட நீள, அகலமுள்ள கதர்த் துணியென்பதைத் தவிர அது வேறு என்ன? அதற்குப் பதிலாக வேறொரு துணியை நீங்கள் பயன்படுத்தலாம். ஆனால் இந்தக் கதர்த் துணிக்கும் பின்னால், உங்களுடைய உணர்ச்சிகளெல்லாம் அடங்கிக் கிடக்கின்றன. அது சுயராஜ்யத்தின் சின்னம். தேசிய விமோசனத்தின் சின்னம். நாம் அதை மறக்கமுடியாது. நாம் அதை அகற்றவும் போவதில்லை. அதற்காக இறக்கவும் தயாராய் இருக்கிறோம். அதைப் போன்றே சர்க்காவும் அஹிம்சையின் சின்னமாக விளங்க வேண்டும்.

**பொருளாதார சின்னம்**

அஹிம்சையின் சின்னம் என்ற முறையில், பொருளாதாரத் துறையில் சர்க்கா எதைக் குறிக்கிறது? அதை நீங்கள் சுய தேவைப் பூர்த்தி என்று அழையுங்கள். அல்லது வேறு ஏதாவது பெயரிட்டு அழையுங்கள். சுயதேவைப் பூர்த்தி என்ற பெயரிலும் தேசியப் புனரமைப்பு என்ற பெயரிலும் மேற்கு நாடுகளில் கோடிக்கணக்கான பேர் இரத்தத்தைக் கொட்டுகிறார்கள். அவர்களுடைய நலனுக்காக வெளிநாடுகளில் உள்ளவர்களும் இரத்தம் சிந்துகிறார்கள். நம்முடைய சுயதேவைப் பூர்த்தியானது அப்படிப்பட்ட சுயதேவைப் பூர்த்தியல்ல. சுரண்டலையும் பிறருடைய ஆதிக்கத்தையும் அகற்றுவதற்குச் சர்க்கா ஒரு வழியாகும். பொருள் தான் எனக்கு முக்கியமே தவிர, வார்த்தை அல்ல.

**பின்பற்றுங்கள் அல்லது ஒதுங்குங்கள்**

கடவுளுக்கு ஒரு உருவம் இருக்கிறதா இல்லையா என்பதைப் பற்றி நம்முடைய மதத்தில் வாக்குவாதம் நடைபெறுகிறது. இது நம்மெல்லோருக்கும் நன்றாகத் தெரியும். உருவத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் ஒரு சின்னத்தை வைத்துக் கடவுளை வழிபடுவதையே அதிகம் விரும்புகிறார்கள். அதைப் போலவே, அஹிம்சையை ஒரு இலட்சியமாகக் கடைப்பிடிக்க வேண்டுமானால், சர்க்காவையே அதன் உண்மையான உருவமாகவும் சின்னமாகவும் ஏற்று எப்போதும் நமது மனக்கண்ணில் பதித்து வைத்துக் கொள்ள வேண்டும். அஹிம்சையைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் கண் முன் சர்க்கா வந்து நிற்கிறது. அஹிம்சையை, எந்தவிதமான உருவமும் இன்றி நாம் நினைத்துப் பார்க்க முடியாது. ஆகையால் உருவமற்ற ஒன்றைச் சித்தரிப்பதற்காக நாம் உருவம் ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறோம். என் விஷயத்தில் சர்க்கா அந்த நிலையில் தான் இருக்கிறது. அதனால்தான் சர்க்காவை நான் ஆராதிக்

கிறேன். இவ்வாறு சர்க்காவை நான் ஆராதிப்பதன் பின்னணியி லுள்ள இந்த உணர்ச்சியை நீங்கள் புரிந்து கிரகித்துக்கொள்ளா விட்டால், இன்னும் நூறு வருஷங்களில் கூட நீங்கள் அஹிம்சை யைப் புரிந்து கொள்ளமாட்டீர்கள். என்னுடைய உள்ளப் பாங்குடன் நீங்கள் அணுகினால்தான் சர்க்காவில் நான் காணும் அஹிம்சா சக்தியை நீங்களும் காணமுடியும். அதனால்தான் நான் சொல்கிறேன்: என்னைப் பின்பற்றுங்கள், அல்லது, விலகிச் செல் லுங்கள். நீங்கள் என்னைப் பின்பற்ற விரும்பினீர்களானால் நான் உங்களுக்கு ஒரு திட்டம் அளிக்கிறேன்; என்னால் இயன்றதை யெல்லாம் செய்கிறேன். நான் கூறுவதன் பொருளென்ன வென் பதை நீங்கள் புரிந்து கொள்ளாவிட்டால், நாள் முழுவதும் உட் கார்ந்து உங்களுடன் அதைப் பற்றி விவாதிக்கவும் தயாராய் இருக் கிறேன். ஆனால் நான் கூறுவதன் பொருளை நீங்கள் விளங்கிக் கொள்ளாத போது விளங்கிக் கொண்டதாகக் கூறுவீர்களானால், நீங்கள் என்னை ஏமாற்றியவர்களாவீர்கள், உங்களையும் ஏமாற்றிக் கொண்டவர்களாவீர்கள். நம்முடைய சங்கம் லாப நோக்கத் திற்காக ஏற்பட்டதல்ல. சுயநலத்திற்காக நாம் தொண்டாற்ற வில்லை. ஆயிரக்கணக்கான துறைகளில் நாம் இந்த நாட்டிற்குத் தொண்டாற்ற முடியும். பின் ஏன் நாம் சர்க்கா வேலையில் இருந்து கொண்டு கபடநாடகமாடவேண்டும்? ஆகவே தவறான மனோ பாவத்துடன் தயவு செய்து என்னுடன் இருக்க வேண்டாம். நான் எனது வழியில் செல்கிறேன். நானே ஒரு மாயையில்தான் கட்டுண்டு கிடந்தேன். என்றும் சர்க்கா மீது நான் கொண்டிருந்தது வெறும் மூட நம்பிக்கை தான் என்றும் மெய்ப்பிக்கப்பட்டால், சர்க் காவில் உள்ள மரத்தைக் கொண்டே நீங்கள் என்னைச் சாம்பலாக எரித்து விடலாம்; அல்லது, நானே, என் கையாலேயே, சர்க்கா வுக்குத் தீ வைத்துவிடுவேன்.

**முட்டாள்கள் சங்கமா?**

சர்க்கா சங்கம் போய்விடவேண்டுமென்றால், நம்முடைய கைகளாலேயே நாம் அதை மூடிவிடுவோம். அது நம் முடைய போராட்டத்திற்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்து விடும். நம்மைப் பல சிக்கலான கஷ்டங்களுக்குள் ளாக்கும் சர்க்காவானது அதில் நம்பிக்கை கொண்ட ஒரு சிலர் கைகளுக்குப் போய்ச்சேரும். அவர்கள் கைகளில் அது பலம் பொருந்திய ஆயுதமாக விளங்கும். சர்க்காவைச் சுழற்றுவது அறிவீனம் என்று நீங்கள் நினைத்தீர்களானால், முட் டாள்கள் சங்கத்தை நடத்தி அதன்மூலம் நாட்டை இழிவுபடுத்த வேண்டுமென்ற ஆசை எதுவும் எனக்குக் கிடையாது. அதற்கு

மாருக, சர்க்காவின் மூலமாக நீங்கள் அஹிம்சையை வெளிப் படுத்த முடியுமானல் அது முன்னே செல்வது மட்டுமல்லாது ஒரு பெரிய வெள்ளம்போல் நம் கஷ்டங்களையெல்லாம் அடித்துச் சென்றுவிடும். அப்போது அதை உயிரோடு பாது காக்க வேண்டுமென்று நீங்கள் கவலைப்பட வேண்டியதிருக்காது.

### எழுத்துமூலம் உறுதி

மீண்டும் நான் கூறிக் கொள்ளுகிறேன். ஒன்று என்னைத் தனியாக விட்டு விடுங்கள், அல்லது நான் கூறுவதைப் புரிந்துகொண்டு என்னைப் பின்பற்றுங்கள். இரண்டு ஆண்டு களாகத் தவம் செய்ததுபோல் சிந்தித்துப்பார்த்து, இந்தப் புதிய சிந்தனையை உங்கள்முன் வைத்தேன். என்னுடைய கருத்தை உங்களுக்குத் தெரிவிப்பதில் நான் வெற்றி பெற்று விட்டேனு என்பதை நான் அறியமாட்டேன். அவ்வாறு உங்க ளிடம் நான் மனமாற்றத்தை ஏற்படுத்திவிட்டேனென்ருல் தயவு செய்து ஒரு காரியம் செய்யுங்கள். என்னுடன் இருக்க விரும்புவோர், சர்க்காவை அஹிம்சையின் சின்னமாகக் கருதுவ தாக எழுத்து மூலமாக உறுதி அளியுங்கள். உங்களுடைய முடிவை நீங்கள் இன்றே செய்யவேண்டும். சர்க்காவை நீங்கள் அஹிம் சையின் சின்னமாகக் கருதவில்லையென்ருல், அல்லது கருதமுடிய வில்லையென்ருல், அப்புறமும் நீங்கள் என்னுடன் இருப்பதன் மூலம் உங்களை மோசமான நிலைக்கு உள்ளாக்கிக் கொள் கிறீர்கள்; என்னையும் உங்களுடன் கீழே இழுக்கிறீர்கள்.[22]

### சுயதேவைப் பூர்த்தி

கதரின் ஒரு சகாப்தம் முடிவடைந்துவிட்டது. ஏழைகளின் நலனுக்காகக் கதர் சில காரியங்களைச் சாதித்திருக்கிறது. ஏழைகள் எவ்வாறு தங்களுடைய வரவையும் செலவையும் தாங்களே சரிக்கட்டிக் கொள்ளலாம் என்பதை இப்போது நாம் நிருபித்துக் காண்பிக்க வேண்டியிருக்கிறது.[23]

ஒவ்வொரு இல்லத்துக்கும் சர்க்காவின் செய்தியை நாம் கொண்டு செல்லவேண்டும். அதுவரை, நம்முடைய வேலை முடி வடைந்ததாகாது.[24]

### அஹிம்சைப் பொருளாதாரம்

அஹிம்சாபூர்வமான பொருளாதார சுயதேவைப் பூர்த் திக்குச் சர்க்கா ஒரு சின்னமாகும். சர்க்காவின் இந்த முக்கி



'இந்தியாவையும் உலகத்தையும் பாதுகாக்கவல்ல ஆயுதம் இராட்டையே' —காந்திஜி.



காந்திஜி, சர்தார் பட்டேல், நேருஜி முதலிய தலைவர்கள் நூற்கும் காட்சி.

யத்துவத்தை நாம் உணர்ந்து கொண்டோமானல், சர்க்காவின் பிரசாரத்துக்காக ஒரு தம்பிடிகூடச் செலவழிக்க வேண்டிய தில்லை. பிச்சைக் காசுக்காகப் பணக்காரர்களை எதிர்பார்க்க வேண்டியதுமிராது. எவ்வித முயற்சியும் இல்லாமல் நாம் நம் பிக்கையின் கேந்திரங்களாக விளங்குவோம். மக்கள் தாங்க ளாகவே நம்மிடம் வருவார்கள். வேலைதேடி அவர்கள் வேறு எங்கும் செல்லமாட்டார்கள். ஒவ்வொரு கிராமமும் இந்தியாவின் இதயமாக விளங்கும். அப்போது பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களால் இந்தியாவின் பெயர் விளங்காது. அதற்குப் பதிலாக, இந்நாட்டிலுள்ள 7 இலட்சம் கிராமங்களிலுள்ள நாற் பது கோடி மக்களால் விளங்கும். அப்போது இந்து-முஸ்லிம் வேறுபாடுகள், தீண்டாமை, சண்டை சச்சரவுகள், தவருன கருத்துக்கள், போட்டி பொருமைகள் ஆகியவை யெல் லாம் சூரியனைக்கண்ட பனிபோல் மறைந்துவிடும். இதுதான் சங்கத்தின் உண்மையான வேலை. நாம் அதற்காக வாழ்ந்து சாகவேண்டியதிருக்கிறது. [25]

### மூலநதி

கிராமக் கைத்தொழில்கள், ஆதாரக் கல்வி முதலிய பல் வேறுவிதமான மற்ற நடவடிக்கைகளுக்கெல்லாம் சர்க்காவே மூலநதியாக இருக்கவேண்டும். சர்க்காவை நாம் புத்திக் கூர் மையான முறையில் உபயோகிப்பதாக இருந்தால், நம்முடைய கிராமங்களின் பொருளாதார வாழ்வு மீண்டும் புத்துயிர் பெறு மாறு செய்யமுடியும். [26]

### விமோசன சாதனம்

சர்க்காவின் உதவியால் கிராம மக்களுக்கு நிறையப் பணம் கிடைக்குமாறு நாம் செய்திருக்கிறோம். ஆனல், ஏற்கனவே நாம் பலமுறை கூறி வந்திருப்பதுபோல, சர்க்கா இல்லாமல் சுய ராஜ்யம் சாத்தியமில்லையென்று இப்போதும் நாம் கூறமுடியுமா? இந்த சித்தாந்தத்தை நாம் ஒப்புக்கொள்வதாக இருந்தாலொழிய, ஒரு கஷ்டமான காலத்தில், நாம் வேறு ஒன்றும் செய்யமுடி யாத நிலையில், நாம் நாடிச்செல்லும் வெறும் நிவாரணமாகவே சர்க்கா இருக்கும். அப்போது அது நம்முடைய விமோசனத்திற் கான சாதனமாக இராது. [27]

### கைத்தொழில்கள்

கதர்மட்டும் நம்முடைய கிராமங்களைப் புனருத்தாரணம் செய்யமுடியாது என்று இப்போது நான் உணருகிறேன். கிராம

வாழ்க்கை முழுவதற்குமே நாம் புத்துயிரூட்டவேண்டும். எல்லாக் கிராமக் கைத்தொழில்களையுமே மறுமலர்ச்சியடையச் செய்யவேண்டும். கிராமம் முழுவதுமே சுறுசுறுப்பாக வேலையில் ஈடுபடுமாறு செய்யவேண்டும். இவ்வாறு செய்யும்போதுதான் கிராம முன்னேற்றமென்பது சாத்தியமாகும். [28]

### ஒரே வழி

கதர் என்பது வாழ்க்கைக்கு வேண்டிய பணத்தைச் சம்பாதிக்கும் தொழில் அல்லது வேலைமட்டுமல்ல. நம்மில் யாருக்கும் இந்த எண்ணம் இருக்கவேண்டாம். [29]

கதரை நாம் மக்கள் முன்னால் வைப்பதற்குக் காரணம் உண்டு. சோம்பேறித்தனம், அலட்சிய மனோபாவம் ஆகிய நோய்களிலிருந்து மக்களை விடுவித்துக் காப்பாற்றுவதற்குரிய ஒரே வழி அதுதான். சுதந்திரத்துக்கு வேண்டிய பலத்தை அவர்களிடம் உண்டாக்குவதற்கான ஒரேவழியும் அதுவே. மற்ற கைத்தொழில்களும் இவ்வாறு புத்துயிர் பெறச் செய்துவிட்டால், நம்முடைய கிராம மக்கள் புத்துயிர்பெற்று சுய நம்பிக்கை உடையவர்களாகுமாறு செய்யமுடியும். [30]

ஆனால், ஒரு பலம்பொருந்திய அஹிம்சா பூர்வமான கிராமப் பொருளாதாரத்தை அமைப்பதற்குக் கதர் அவசியம் என்பதை நாம் நிலைநிறுத்தவேண்டும். மற்ற எல்லாவற்றையுங் காட்டிலும் இதையே நாம் மெய்ப்பிக்க வேண்டியவர்களாய் இருக்கிறோம். [31]

### சர்க்கா ஜெயந்தி

அஹிம்சை, சுதந்திரம் ஆகியவற்றின் சின்னம் இராட்டைதான். இந்த இராட்டையின் இன்னிசை ஒவ்வொரு வீட்டிலும் கேட்குமாறு செய்யவேண்டும். அவ்வாறு செய்யும்போதுதான் உண்மையில் சர்க்கா ஜெயந்தி கொண்டாடப்பெற்றதாகும். ஒரு சொற்பத் தொகையைச் சம்பாதிப்பதற்காக ஒரு சிலர் நூற்கிறார்கள், ஏன், ஒரு கோடிப் பெண்களே நூற்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது, சர்க்கா ஜெயந்தியைக் கொண்டாடுவதனால் அவர்களுக்கு என்ன பலன் ஏற்படும்? அது என்ன சாதனையாக இருக்கமுடியும்? எதேச்சாதிகார ஆட்சியிலேகூட இது நடைபெறமுடியுமே? மூலதனத்தின் ஆதிக்கம் எங்கெங்கெல்லாம் இருக்கிறதோ அங்கெல்லாம் இன்று

இது காணப்படுகிறது. கோடீஸ்வரர்கள் தாங்கள் ஏழைகளுக்குத் தர்மமாகவும் கூலியாகவும் கொடுக்கும் பணத்தினுல் அழியாது காப்பாற்றப்படுகிருர்கள்.

### எப்போது பயனுண்டு?

ஆண்டவன் முன் அனைவரும் சமம். ஒவ்வொருவரும் தன்னுடைய இடத்தில் உடல் உழைப்பின் மூலம் தனக்கு வேண்டிய உணவைச் சம்பாதிக்க வேண்டும். எல்லோருடைய சுதந்திரமும் பாதுகாக்கப்படும்-துப்பாக்கிகள், வெடி மருந்துகள் ஆகியவற்றினுலல்ல, கையால் நூற்கப்பட்ட நூல் பந்துகள் என்னும் குண்டுகளால்-அதாவது, இம்சையினுலல்லாமல் அஹிம்சையினுல். ஏழை, பணக்காரர் எல்லாருமே இவைகளைப் புரிந்துகொள்ளும்போது தான், சர்க்கா ஜெயந்தியைக் கொண்டாடுவது உண்மையிலேயே பயனுள்ளதாயிருக்கும்.[32]

### தங்கச் சுரங்கம்

300 கோடி ரூபாய் பெறுமான துணியை இந்திய மக்கள் தங்களுடைய கைகளாலேயே கிராமங்களில் உற்பத்தி செய்து கொள்வதானுல், அது இந்தியாவுக்கு எவ்வளவு பெரிய செல்வமாய் இருக்கும் என்பதை எண்ணி, உணர்ந்து பாருங்கள். இது அவர்களுக்கு ஒரு உண்மையான தங்கச் சுரங்கமாய் இருக்கும். கதரை எல்லோரும் பயன்படுத்துவதாய் இருந்தால், கிராமங்கள் எவ்வளவோ உயர்ந்து விடும். இன்று நம் நாட்டு மக்களெல்லாம் வறுமையில் அடிபட்டவர்களாய் இருக்கிருர்கள். அவர்களுடைய கண்களில் நம்பிக்கை ஒளியோ அல்லது அறிவின் ஒளியோ வீசுவதில்லை. நூல் நூற்பவர்களுடைய உழைப்பு, அவர்களுக்காக இந்த அதிசயத்தைச் செய்ய முடியும். இதில் ஒவ்வொருவரும் உதவலாம். கதர் முரடாய் இருந்தாலுங்கூட, அதில் உள்ள அழகைக் காணும் கண்களும், புரிந்துகொள்ளும் இதயங்களும் அவர்களுக்கு வேண்டும். மெல்லிய ஆலைத் துணியின் கவர்ச்சிக்கு அவர்கள் ஆளாகக் கூடாது. இது உண்மையில் ஒரு போதும் அவர்களுடைய நிர்வாண நிலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றமுடியாது. அவர்கள் தங்களுடைய உணவைத் தாங்களே விளைவித்துக்கொள்வதும் தங்களுடைய உடையைத் தாங்களே உற்பத்தி செய்து கொள்வதும் தான் நிர்வாணத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றி, பட்டினியைப் போக்குவதற்கான ஒரே வழியாகும். இந்த மகிழ்ச்சிகரமான பூரணத்துவ நிலையை அடைய முடியுமானுல், உலகின் கவனம் முழுவதும் இந்தியாவின் பக்கந் திரும்பி விடும்.[33]

**சாத்தியமே**

சர்க்கா வகுப்பு முழு வேகத்துடன் நடைபெறுவதுடன் மற்ற வைகளை ஒப்பிட்டுநோக்கும்போது, மற்றவையெல்லாம் எனக்குச் சப்பென்று உயிரற்றவையாகத் தென்படுகிறது. ஏனென்ருல், ஒவ் வொரு நூல் நூற்பிலும் என்னுடைய இராமன் நர்த்தனமாடுவதை நான் காண்கிறேன்; சுயராஜ்யத்தைக் காண்கிறேன். நாற்பது கோடிக் கைகளினுல் நூற்கப்படும் நூலின் பலத்தை நான் எண்ணிப் பார்க்கும்போது, எனது உள்ளம் இன்பத்தில் திளைக்கிறது. "ஓ, இருபது கோடி மக்கள் எப்போது நூற்கப்போகிருர்கள்?" என்று நீங்கள் கேட்பீர்கள். இது சாத்தியம் என்று நம்ப மறுப்பது, நம் முடைய அறியாமையையும் நம்பிக்கையின்மையையும் காண்பிக்க வில்லையா? மக்கள்தொகையில் பாதிப்பேர் ஒவ்வொரு நாளும் ஒரு மணி நேரம் நூற்பார்கள் என்று எதிர்பார்ப்பது முடியாத காரியமா? நம்முடைய தாய்நாட்டுக்காக இதைக் கூடத் தியாகம் செய்யக் கூடிய சக்தி நமக்கு இல்லாவிட்டால், நம்முடைய நாட்டின் மீது நாம் கொண்டிருக்கும் பக்திக்குத் தான் என்ன பொருள்?[34]

அத்தியாயம் 20

# மற்ற கிராமக் கைத்தொழில்கள்

## ஏன் கிராமக் கைத்தொழில்கள் ?

**கதர் இல்லையேல்?**

*1920*இல், சுதேசி இயக்கத்தைத் தொடங்கவிருந்த தருவாயில் பசல்பாயுடன் நான் நடத்திய உரையாடலை இப்போது நினைவு படுத்த விரும்புகிறேன். "காங்கிரஸ்காரர்களாகிய நீங்கள் எங்களுடைய சரக்குகளின் விளம்பர ஏஜெண்டுகளாய்விட்டால், எங்களுடைய உற்பத்திப் பொருள்களின் விலையை உயர்த்தி அவைகளின் லாபத்தை அதிகப்படுத்துவதைத் தவிர நாட்டிற்கு நீங்கள் வேறு எவ்வித நன்மையும் செய்யப்போவதில்லை," என்று அவர் கூறினர். அவருடைய வாதம் சரியாகவே இருந்தது. ஆனல் கதரை-இதுவரை பரிதாபகரமான முறையில் அலட்சியம் செய்யப்பட்ட கதரை-வேலையின்றிப் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்ருல் எதைப் புனருத்தாரணம் செய்ய வேண்டுமோ அந்தக் கதரை—கையால் நூற்று, நெய்யப்பட்ட கதரை—நான் ஊக்குவிக்கப் போகிறேன் என்று அவரிடம் கூறியபோது அவரால் பதில் பேச முடியவில்லை.

**கதர் மட்டுமல்ல**

ஆனல் இவ்வாறு உயிருக்காக மன்ருடும் தொழில் கதர் மட்டுமல்ல. ஆகையால், மக்கள் ஆதரவு இன்று தேவைப் படக்கூடிய கட்டுக்கோப்பில்லாத சிறிய தொழில்களின் விஷயத்திலெல்லாம் உங்களுடைய கவனத்தையும் முயற்சியையும் திருப்புமாறு நான் கூறுகிறேன். அவைகளின் சார்பாக ஒரு முயற்சியும் செய்யாவிட்டால், அவை அப்படியே அழிந்துபோய்விடும். இன்று இத் தொழில்களில் சில, பெரிய தொழில்களால் நசுக்கப்படுகின்றன. இந்தப் பெரிய தொழில்களின் உற்பத்திப் பொருள்கள் மார்க்கெட்டுகளில் வந்து குவிகின்றன. இவ்வாறு நசுக்கப்படும் சிறு தொழில்கள்தான் உங்களுடைய உதவிக்காக அலறித் துடிக்கின்றன.[1]

**யாருக்குச் சிறுதொழில்**

சிறு தொழில்களுக்கு நாம் உதவினல், தேசிய செல்வத்துக்கு உதவியவர்களாவோம் என்பதில் எனக்கு எவ்வித ஐயமும் இல்லை. உண்மையான சுதேசியம் இந்தக் குடிசைத் தொழில்களைப் புனருத்

தாரணம் செய்து ஊக்குவிப்பதிலேயே இருக்கிறது என்பதிலும் எனக்கு எவ்வித ஐயப்பாடும் கிடையாது. இதுதான் வாயில்லாத கோடிக்கணக்கான மக்களுக்கு உதவக் கூடியதாய் இருக்கும். மக்களுடைய ஆக்க சக்தியையும் அறிவுத் திறனையும் வெளிப்படுத்தக்கூடிய ஒரு சாதனமாகவும் இருக்கும். நாட்டில் வேலையற்றிருக்கும் நூற்றுக்கணக்கான இளைஞர்களையும் அதில் உபயோககரமான முறையில் பயன்படுத்தலாம். தற்போது வீணாகிக் கொண்டிருக்கும் சக்தியையெல்லாம் அதன்மூலம் ஒருங்கு திரட்டமுடியும். அதிகப் பண வருவாயில் ஈடுபட்டிருப்பவர்கள் அவைகளை விட்டு விட்டுச் சிறு தொழில்களை மேற்கொள்ள வேண்டுமென்று நான் விரும்பவில்லை. சர்க்கா விஷயத்தில் நான் செய்ததைப் போன்று, வேலையில்லாத் திண்டாட்டத்தினாலும் வறுமையினாலும் கஷ்டப்படுபவர்களைத்தான், இந்தத் தொழில்களில் ஈடுபட்டு, தங்களுடைய குறைந்த வருமானத்தை ஒரு சிறிதளவு உயர்த்திக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

### சிறுதொழிலுடன் நில்லுங்கள்

இவ்வாறு நமது செயல் துறையை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று நான் கூறியுள்ளது எந்த வகையிலும் பெரிய தொழில்களுக்கு முரணானதாகாது என்பதைக் காணலாம். ஆனால் ஒன்றே ஒன்றை மட்டும் நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன். அதாவது, தேசிய சேவகர்களாகிய நீங்கள் உங்களுடைய சேவையைச் சிறு தொழில்களுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். தற்போது இருப்பதைப் போன்று, பெரிய தொழில்கள் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ளட்டும். எனது கருத்தில் உள்ள சிறிய தொழில்கள், பெரிய தொழில்களை அகற்றிவிடமாட்டா. அதற்குப் பதிலாக அவைகளுக்கு ஆதரவாகத்தான் இருக்கும்.[2]

### கைத்தொழில் பொருள்களைக் காப்பாற்ற வேண்டும்

நாம் மிகுந்த தாராள மனோபாவத்துடன் பஞ்சாலை, சர்க்கரை ஆலை, அரிசி ஆலை ஆகியவற்றுக்கு உதவுவதாகக் கூறிக் கொள்ளலாம். ஆனால் அதன் மூலம் சர்க்கா, கைத்தறி, அதன் உற்பத்திப் பொருள்கள், கதர், கரும்பு ஆட்டும் தொழில், அதிலிருந்து உற்பத்தியாகும் பொருள்கள், உணவுச் சத்தும் ஊட்டமும் உள்ள வெல்லப்பாகு, கைக்குத்தல் தொழில், அதன் பொருள்கள், தீட்டப்படாத அரிசி – கைக்குத்தலின் மூலம் வைட்டமின் சத்துள்ள தவிடு அகற்றப்படாத அரிசி – ஆகியவை நசித்துப் போய்விடும். ஆகையால் நம்முடைய கடமை தெளிவானது. அதாவது, சர்க்காவும்

கரும்பாலேயும் கைக்குத்தல் தொழிலும் மடியாது வாழும் சாத்தியக் கூறுகள் பற்றி நாம் ஆராயவேண்டும். அவைகளுடைய பொருள் களே விளம்பரப்படுத்துவதன் மூலமும், அவைகளின் தரத்தை வரையறுப்பதன் மூலமும், தொழிலாளர்கள் நிலே, இயந்திரத் தினுல் வேலே இழந்தோர் எண்ணிக்கை ஆகியவற்றைக் கணக் கிடுவதன் மூலமும், ஆலேகளின் போட்டியைச் சமாளிக்கக் கூடிய வாறு கிராமக் கைத்தொழில்களுடைய கிராமிய அம்சத்தைப் பாது காத்துக் கொண்டே அவைகளே அபிவிருத்தி செய்வதற்கான வழி வகைகளேக் கண்டுபிடிப்பதன் மூலமும் மேற்கண்ட தொழில்கள் மடியாதிருக்கச் செய்யவேண்டும். எவ்வளவு கொடுமையாகவும் பயங்கரமான முறையிலும் நாம் இவைகளே அலட்சியம் செய் திருக்கிறேம்! இதில், ஜவுளி ஆலேகள் மீதோ அல்லது சர்க்கரை அல்லது அரிசி ஆலேகள் மீதோ எதிர்ப்பு அல்லது வெறுப்பு என்பது இல்லே. ஆலேகள் என்று மட்டும் எடுத்துக்கொண்டால் வெளிநாட்டு ஆலேப் பொருள்களேவிட சுதேசி ஆலேப் பொருள் களேயே நாம் விரும்பவேண்டும். வெளிநாட்டுப் போட்டியால் சுதேசி ஆலேகள் அழிந்து விடும் என்ற அபாயம் இருந்தால், பின்னவைக்குத் தேவையான ஆதரவை நாம் அளிக்கவேண்டும். ஆனுல் இப்படிப்பட்ட அவசியம் எதுவும் அவைகளுக்கு இல்லே. வெளிநாட்டுப் போட்டிக்கிடையில் அவை செழிப்பாக வளர்ந்து கொண்டிருக்கின்றன. இப்போது தேவையானதெல்லாம் இயந் திரத்தால் இயக்கப்படும் தொழில்களின் - இவை இந்தியாவில் இருந்தாலும் சரி, வெளிநாட்டில் இருந்தாலும் சரி - கடும் போட்டியிலிருந்து கிராமக் கைத்தொழில்களேயும் அவைகளே நம்பியிருக்கும் தொழிலாளர்களேயும் பாதுகாப்பதுதான். கதருக்கும் வெல்லத்துக்கும் தீட்டப்படாத அரிசிக்கும் சொந்தச் சிறப்பு எது வும் இல்லாமல் அவை மடிய வேண்டியதிருக்கலாம். தற்போது, கதர் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களேத் தவிர, கரும்பை ஆட்டியும் நெல்குத்தியும் பிழைக்கும் இலட்சக்கணக்கான மக்களின் கதியைப் பற்றி எதையும் அறிய எவ்வித முயற்சியும் செய்யப்படவில்லே.[3]

## பெரிய தொழில்கள்

கட்டுக்கோப்பாக அமைக்கப்பட்டுள்ள பெரிய தொழில்களே நான் இவைகளில் சேர்க்கவில்லே. அவை சுதேசி அல்ல என்பதற் காக அல்லாமல் அவைகளுக்கு விசேஷ ஆதரவு தேவையில்லே என் பதற்காகவே நான் அவைகளேச் சேர்க்கவில்லே. அவை தங் களுடைய சொந்த பலத்தை நம்பியே இருக்க முடியும். தற்போது நம்மிடையே ஏற்பட்டுள்ள எழுச்சியை வைத்துப் பார்த்தால், அவை களுக்கு நிச்சயமாக மார்க்கெட் உண்டு.[4]

## கிராமப் பொருள்களையே வாங்குங்கள்

சுருக்கமாகச் சொல்லப் போனால், நாம் உபயோகப்படுத்துவதற்குக் கிராமங்களில் உற்பத்தியாகும் பொருள்களையே வாங்க வேண்டும். அவை, நாகரிகமாக உற்பத்தி செய்யப்படாதிருக்கலாம். அப்போது அவர்களுடைய வேலைப்பாட்டை அபிவிருத்தி செய்யுமாறு நாம் தூண்ட வேண்டும். நகரங்களில் உள்ள பெரிய தொழில்களிலோ அல்லது வெளி நாடுகளிலோ உற்பத்தியாகி வரும் பொருள்கள் இவைகளைக் காட்டிலும் உயர்ந்தவையாக இருக்கின்றனவென்பதற்காக, இவைகளை ஒதுக்கிவிடக் கூடாது. வேறு வார்த்தைகளில் சொல்லப் போனால், கிராமவாசியின் கைவேலைப்பாட்டுத் திறன் வெளிவருமாறு செய்யவேண்டும். இவ்வாறாக, நாம் அவர்களுக்குப் பட்டுள்ள கடனைத் திருப்பிச் செலுத்துவோம். இப்படிப்பட்ட முயற்சியில் நாம் என்றைக்காவது வெற்றி பெற முடியுமா என்று எண்ணி அச்சமடைய வேண்டாம். நம்முடைய நாட்டின் முன்னேற்றத்துக்கு ஒரு கடமையைச் செய்வது அவசியமாக இருக்கிறதென்று அறிந்தால், அதில் உள்ள கஷ்டத்தை எண்ணி அஞ்சாது நாம் செய்துள்ள காரியங்கள் பல. நம்முடைய வாழ்நாளிலேயே இதற்கு உதாரணங்களைக் கூற முடியும். ஆகவே, நம்மில் ஒவ்வொரு தனிப்பட்ட மனிதரும், நம்முடைய நல் வாழ்வுக்கு இந்திய கிராமங்களைப் புனருத்தாரணம் செய்வது அவசியம் என்று நம்பினால், அதன் மூலந்தான் தீண்டாமையைப் போக்க முடியுமென்று நம்பினால், ஒருவர் எந்த மதம் அல்லது வகுப்பைச் சேர்ந்தவராக இருந்தாலும் அவரும் நாமும் ஒன்று என்ற உணர்வைப் பெறமுடியும் என்று நம்பினால், நம்முடைய மனம் மீண்டும் கிராமங்களுக்குத் திரும்பிச் செல்ல வேண்டும். நகர வாழ்க்கையை அவர்கள் பின்பற்றுமாறு செய்யாமல் அவர்கள் வாழ்க்கைதான் நாம் பின்பற்றக் கூடிய முன் மாதிரி எனக் கருத வேண்டும். இதுவே சரியான கண்ணோட்டம் என்று நாம் ஏற்றுக் கொண்டுவிட்டால், இயற்கையாகவே, மற்றவர்களை எதிர்பார்க்காமல் நாமே முதலில் இதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆலைகளில் உற்பத்தியான காகிதத்தைக் காட்டிலும் கையால் செய்யப்பட்ட காகிதத்தை, பவுண்டன் பேனா அல்லது பேனாக் கட்டைகளுக்குப் பதிலாகக் கிராமங்களில் விளையும் நாணல் குச்சிகளை பெரிய தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் மைக்குப் பதிலாகக் கிராமங்களில் உற்பத்தியாகும் மையை, மற்றும் இது போன்றவற்றை உபயோகிக்க வேண்டும். இதைப் போன்ற உதாரணங்களை நான் அடுக்கிக் கொண்டே போகலாம்

நாம் வீட்டில் அன்றாடம் உபயோகப்படுத்தும் பொருள்களில், கிராம வாசிகள் முன்பு செய்திராத எதுவும் இல்லை. இப்போது செய்ய முடியாததும் இல்லை. நமக்கு மனமாற்றம் மட்டும் வேண்டும். அவர்கள் மீது நம் கடாட்சத்தைச் செலுத்த ஆரம்பித்து விட்டோமென்றால், உடனடியாகக் கிராமவாசிகளுக்குக் கோடிக் கணக்கான ரூபாய்களை அளித்து உதவியவர்களாகிறோம். தற்போதோ, கிராமவாசிகளுக்குப் பிரதியுபகாரமாக உருப்படியான எதையும் செய்யாமல், அவர்களைச் சுரண்டி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்தப் படுகொலை போன்ற செயல் மேலும் மேலும் வளர்ந்து கொண்டு போகாமல் தடுத்து நிறுத்தப்படவேண்டிய தருணம் வந்துவிட்டது.[5]

**நிலம் கட்டுபடியாகாது**

படிப்படியாக, கிராமமக்கள், பூமியைக் கிளறி, வாய்க்குங் கைக்குமாக வாழவேண்டிய கட்டத்துக்கு வந்துவிட்டார்கள். இந்தியாவில் உள்ளவாறு (அங்கொன்றும் இங்கொன்றுமாக) ஒழுங்கற்றமுறையில் சிறு சிறு நிலத் துண்டுகளை வைத்துக்கொண்டிருப்பது கட்டுபடியாகாது என்பதை இன்று அறிந்துள்ளவர்கள் ஒரு சிலரே. கிராமவாசிகள் உற்சாகமின்றி வாழ்க்கை நடத்துகிறார்கள். அவர்கள் வாழ்வதென்பதே ஓரளவு பட்டினி கிடப்பதுதான். மேலும், அவர்கள் கடன் சுமையாலும் நசுக்கப்படுகிறார்கள்.[6]

**ஆட்கள் அதிகமாகும்போது**

கிராமக் கைத்தொழில்களை ஒழித்து விடுவது இந்தியாவில் உள்ள ஏழு இலட்சம் கிராமங்களுக்கும் பூரண அழிவை ஏற்படுத்திவிடும்.[7]

நாம் செய்யவிரும்பும் வேலைக்கு, ஆட்கள் மிகமிகக் குறைச்சலாக இருந்தால், இயந்திரமயமாக்குவது நல்லதுதான். ஆனால் இந்தியாவில் உள்ளதுபோன்று, வேலையின் தேவைக்கு மேற்பட்ட ஆட்கள் இருக்கும்போது அது தீமை பயக்கும்.[8]

**அரிசி, மாவு மில்கள்**

ஆலைகளில் உற்பத்தியாகும் துணி கிராம மக்களுடைய வேலையைத்தான் பறித்திருக்கிறது. ஆனால் அரிசி மில்களும் மாவு மில்களும் ஆயிரக்கணக்கான ஏழைப் பெண் தொழிலாளிகளுக்கு வேலையில்லாமல் செய்துவிட்டதோடு, எல்லா மக்களுடைய உடல் நலத்தையும் பாதித்திருக்கின்றன. மாமிச உணவு உண்ணக் கூடியவர்களுக்கு, அதற்கான பணவசதியும் இருக்குமானால், வெள்ளை மாவோ தீட்டப்பட்ட அரிசியோ எவ்விதக் கெடுதலும்

செய்யாமல் இருக்கலாம். ஆனால் இந்தியாவிலோ, மாமிசம் அருந்துவதுபற்றி எவ்வித ஆட்சேபணையும் இல்லாத மக்களுக்குக்கூட அது கிடைப்பதில்லை. ஆகையால் முழுக் கோதுமைக் கஞ்சியிலும் தீட்டப்படாத அரிசியிலும் உள்ள உணவுச் சத்தையும் ஜீவ சத்துக்களையும் போக்குவது பாவமாகும். வெள்ளைக் கோதுமை மாவாலும் தீட்டப்பட்ட அரிசியாலும் ஏற்படக்கூடிய அபாயத்தை டாக்டர்களும் மற்றவர்களும் சேர்ந்து மக்களுக்கு எடுத்துணர்த்துவதில் இனியும் காலதாமதம் செய்யக்கூடாது. [9]

கிராமவாசிகளுக்கு வேலைகிடைக்குமாறு செய்வதற்குரிய வழி இயந்திரமயமாக்குவதல்ல; அதற்குப் பதிலாக இதுவரை நாம் செய்துவந்த கைத்தொழில்களை மீண்டும் புனருத்தாரணம் செய்வதுதான். [10]

## கிராமக் கைத்தொழில் சங்கம்

ஆகையால் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம், தற்போதுள்ள கைத்தொழில்களை ஊக்குவிக்கப் பாடுபட வேண்டும். எங்கெங்கு முடியுமோ, எங்கெங்கு விரும்பத் தக்கதோ அங்கெல்லாம் செத்த, அல்லது செத்துக்கொண்டிருக்கும் கிராமக் கைத்தொழில்களை மீண்டும் புனருத்தாரணம் செய்யவேண்டும். அதுவும் கிராமிய முறைப்படி புனருத்தாரணம் செய்யவேண்டும். அதாவது, வரலாற்றுக்கு முந்திய காலத்திலிருந்து செய்து வந்ததுபோல், தங்கள் குடிசைகளில் இக் கைத்தொழில்களைக் கிராமவாசிகள் செய்து வருவதாக இருக்க வேண்டும். கைக்குத்தல், கையால் பட்டை போடுதல், நூல் நூற்றல், நெசவு நெய்தல் ஆகியவைகளில் ஏற்பட்டுள்ளதைப் போல் இந்த எளிய முறைகளையும் இன்னும் நன்கு அபிவிருத்தி செய்யமுடியும். [11]

## வானமண்டலத்தின் சூரியன்

கதர்தான், கிராமக் கைத்தொழில் என்னும் வான மண்டலத்தில் பிரகாசிக்கும் சூரியனாகும். மற்ற கிரகங்கள் சூரியனிடமிருந்து எவ்வாறு வெப்பம் பெறுகின்றனவோ அதுபோல, மற்றக் கைத்தொழில்களெல்லாம் கதரிடமிருந்து வாழ்வுபெற்று அதற்குப் பிரதியுபகாரமாக அத்தொழிலுக்குத் துணைபுரிகின்றன. கதர் இல்லாமல், மற்றக் கைத்தொழில்கள் வளர்ச்சிபெற முடியாது. ஆனால் நான் அண்மையில் மேற்கொண்ட சுற்றுப்பிரயாணத்தில், மற்றத் தொழில்கள் புனருத்தாரணம் செய்யப்படாமல் கதர் வளர்ச்சியடைய முடியாது என்பதையும் கண்டேன். கிராம வாழ்வில் உள்ள பல்

வேறு பிரிவுகளையும் நாம் செம்மை செய்தால்தான், கிராம வாசிகள் தங்களுடைய ஓய்வு நேரத்தை உபயோகமான முறை யில் பயன்படுத்த முடியும். [12]

## வேறு தொழில்

கட்டாயமான சூழ்நிலைகளாலும், வேலை செய்யத் தங் களுக்கே விருப்பமில்லாமலும் கிராமவாசிகள் சோம்பேறிகளாய் இருக்கின்றனர். இதனால் அவர்கள் வெளிநாட்டு, உள்நாட்டுச் சுரண்டல்களுக்குத்தொடர்ந்து இரையாகிக்கொண்டுவருகின்றனர். இந்தச் சுரண்டல்காரர் வெளியிலிருந்து வந்தாலும் சரி, அல்லது இந்திய நகரங்களிலிருந்து வந்தாலும் சரி, கிராம மக்களுடைய நிலை ஒன்றேதான். அவர்களுக்குச் சுயராஜ்யம் வரப்போவதில்லை. ஆகையால் எனக்குள்ளேயே நான் சொல்லிக் கொண்டேன்: 'வேறு ஏதாவது ஒன்றைச் செய்யுமாறு இந்த மக்களுக்கு நாம் கூறு வோம். இவர்கள் கதரில் ஈடுபாடு கொள்ளாவிட்டால், தங்களுடைய மூதாதையர்கள் செய்து இப்போது மறைந்து போயிருக்கும் ஏதாவ தொரு தொழிலை இவர்கள் செய்யட்டும்.' அப்படி ஒன்றும் நீண்ட காலமாகி விடவில்லை, அண்மையிலேயே இவர்கள் உற்பத்தி செய்த பல பொருள்கள் உண்டு. இந்தப் பொருள்கள் அன்றாட உபயோகத்துக்குப் பயன்பட்டு வந்தன. இப்போது நாம் இவை களுக்காக வெளி உலகத்தை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. நகரங்களில் வாழ்பவர்கள் கிராமங்களிலிருந்து எதிர்பார்க்க வேண்டிய பல பொருள்கள் உண்டு. ஆனால் இந்தப் பொருள் களுக்காக வெல்லாம் இப்போது அவர்கள் வெளி உலகத்தைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். தங்களுடைய ஓய்வு நேரத்தை உபயோகமான முறையில் பயன்படுத்துவதென்று கிராமவாசிகளும், அவர்கள் உற்பத்திசெய்யும் பொருள்களைப் பயன்படுத்துவதென்று நகரவாசிகளும் முடிவுசெய்துவிட்ட அந்தக் கணமே கிராமவாசிகளுக்கும் நகரவாசிகளுக்குமிடையே துண்டு பட்டுப் போயிருந்த தொடர்பு மீண்டும் ஏற்பட்டுவிடும். [13]

## கற்பிக்க வேண்டும்

நகர மக்கள் கிராமங்களுக்குப்போய் அங்கே வாழ வேண்டு மென்று நான் கூறவில்லை. ஆனால் கிராமவாசிகளுடைய உரிமை எதுவோ அதை அவர்கள் அளித்துவிடவேண்டும். கிராமவாசிக ளிடமிருந்தல்லாது, நகரவாசிகள் பெறக்கூடிய மூலப்பொருள் ஏதாவது இருக்கிறதா? இல்லையேல், அதை அவர் செய்யும் முறையை, முன்பு செய்து வந்தது போல் நம்முடைய சுரண்டல் மட்டும் இல்லாவிட்டால் இப்போதும் அவர் செய்து

வந்திருக்கக்கூடியதுபோல்—நாம் ஏன் அவருக்குக் கற்றுக்கொடுக்கக்கூடாது? [14]

## முதல் வேலை

முதன் முதலாக, கிராமவாசிகள் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்து கொண்டவர்களாக வேண்டும். அதன்பின், நகர மக்களுடைய தேவைகளைப் பூர்த்திசெய்யவேண்டும். [15]

## கதரின் பணிப்பெண்கள்

மற்ற கிராமக் கைத்தொழில்களெல்லாம் கதரின் பணிப் பெண்கள் என்ற இடத்தையே பெறுகின்றன. கதர் இல்லாமல் அவை நிலைக்கமுடியாது. அவை இல்லாமல் கதருக்கும் கம்பீரம் இல்லை. கையால் மாவு அரைத்தல், நெல் குத்துதல், சோப் செய்தல், காகிதம் செய்தல், தீப்பெட்டி செய்தல், தோல் பதனிடுதல், எண்ணெய் ஆட்டுதல் முதலிய அத்தியாவசியமான கிராமக் கைத்தொழில்கள் இல்லாமல் கிராமப் பொருளாதாரம் பூரணத்துவமடைய முடியாது. காங்கிரஸ்காரர்கள் இத்தொழில்களில் அக்கறை செலுத்தலாம். அவர்கள் கிராமவாசிகளாக இருந்தால், அல்லது கிராமங்களில் அவர்கள் குடியேறினால், இந்தத் தொழில்களுக்கு அவர்கள் புத்துயிர் அளிப்பதுடன் ஒரு வகைப் புதுக்கவர்ச்சியையுங் கொடுப்பார்கள். எங்கெங்கு கிராமியப் பொருள்கள் கிடைக்கின்றனவோ அங்கெல்லாம் அவைகளையே உபயோகிப்பதென்று ஒவ்வொருவரும் உறுதிகொள்ள வேண்டும். கிராக்கிமட்டும் இருந்தால், நம்முடைய தேவைகளில் பெரும்பாலானவற்றை கிராமங்கள் உற்பத்திசெய்து அளித்துவிடும் என்பதில் ஐயமில்லை. நாம் கிராமிய மனோபாவம் உள்ளவர்களானபின் மேற்குநாட்டு 'இமிட்டேஷன்'களையோ அல்லது இயந்திரத்தால் செய்யப்பட்ட பொருள்களையோ விரும்பமாட்டோம். வறுமை, பட்டினி, சோம்பேறித்தனம் என்பதையே அறியாத ஒரு நவ இந்தியாவின் தோற்றத்தை மனதிற்கொண்டு நமது தேசம் முழுதிலும் ஒரு புது எண்ணத்தை வளர்ப்போம். [16]

## மேற்கு நாட்டிலும் உண்டு

கதரைப் பரப்புவதற்கான முயற்சியின் ஒரு அம்சமே, கிராமக் கைத்தொழில்களைப் புனருத்தாரணம் செய்வதாகும். கையால் நூற்ற நூலினால் ஆன துணி, கையால் செய்யப்பட்ட காகிதம், கைக்குத்தல் அரிசி, வீட்டில் உற்பத்தியான ரொட்டி, ஜாம் ஆகியவைகளை மேற்கு நாடுகளில் கூட சாதாரண

மாகக் காணலாம். ஆனல் இந்தியாவில் இவைகளுக்குள்ள முக்கியத்துவத்தில் நூறில் ஒரு பங்கு கூட அங்கு இல்லை. ஏனென்ருல், இங்கு நம்மைப் பொறுத்தவரை, அவைகளைப் புனருத்தாரணம் செய்வதென்பது நமது கிராம மக்களுக்குப் புத்துயிர் அளிப்பதாகும். அவைகளின் அழிவு மரணத்துக்குச் சமம். இதை ஒரு குருடன் கூட அறிவான். இயந்திர சகாப்தம் என்ன தான் செய்தாலும், அது மொத்தமாகப் புகுத்தும் இயந்திரங்களினுல் வேலையிழந்துவிடும் இலட்சக்கணக்கான மக்களுக்கு அதனுல் ஒருபோதும் வேலை கொடுக்க முடியாது.[17]

### அஹிம்சைச் சின்னம்

சர்க்காதான் அஹிம்சாபூர்வமான பொருளாதார சுயதேவைப் பூர்த்தியின் சின்னம். இது நம் எல்லோருடைய மனதிலும் ஆழப் பதிய வேண்டும்.[18]

கிராமக் கைத்தொழில்கள், ஆதாரக் கல்வி போன்ற மற்ற பல்வேறு நடவடிக்கைகளுக்குச் சர்க்காவைச் சுழற்றுவதுதான் ஜீவ ஊற்ருகும். சர்க்காவை விவேகமான முறையில் நாம் பயன் படுத்த முடிந்தால், நமது கிராமங்களின் பொருளாதார வாழ்வுக்கு நாம் மீண்டும் புத்துயிரூட்ட முடியும்.[19]

### ஐக்கியப்படுத்திக் கொள்க

கிராமங்களில் நாம் என்னென்ன செய்யவேண்டுமோ அவைகளுடனெல்லாம், நம்முடைய ஊழியர்கள் தங்களை ஈடுப்படுத்திக் கொள்ள வேண்டும். அதாவது கிராம வாழ்க்கை முழுவதுடனுமே அவர்கள் தங்களை ஈடுப்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஈடுப்படுத்திக் கொள்ளும்போது அதனுல் தங்களுக்கு சிறு கஷ்டம் ஏற்பட்டதாகக் கூட அவர்கள் எண்ணுவதாய் இருக்கக் கூடாது.[20]

### எண்ணெய்ச் செக்கு

சர்க்காவைக் கிராம அபிவிருத்தியின் மத்தியப் பொருளாக நான் கருதுகிறேன். இத்துடன் ஒரு கிராமத்தில் வேறு என்ன கைத்தொழில்கள் செழித்து வளரமுடியுமென்பதை ஒரு ஊழியன் யோசித்துப் பார்க்க வேண்டும். இப்படிப்பட்ட தொழில்களில் நாட்டு எண்ணெய்ச் செக்கு முதலாவதாக இருக்கும். ஊழியருக்கு இதன் தொழில் நுணுக்க முறை தெரிந்திருக்க வேண்டும். மகன் வாடியில் இது விஞ்ஞான பூர்வமாக அபிவிருத்தி செய்யப்பட்டிருக்

கிறது. கிராமத்தில் புகுத்தக் கூடிய மற்றொரு தொழில், கையால் செய்யப்படும் காகித உற்பத்தியாகும். நாடு முழுவதற்கும் இந்தக் காகிதத்தையே விநியோகம் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன் அல்லாது, கிராமங்களைச் சுயதேவைப் பூர்த்தி உள்ளவைகளாக ஆக்குவதற்காகவும், அவைகள் சிறிது அளவு வருமானத்தை உயர்த்திக் கொள்ளும் சக்தி உடையவைகளாக் கவும் இதைக் கற்றுக் கொள்ளவேண்டியதிருக்கிறது.

### சக்கி

நாட்டுச் செக்கு, கைக்காகிதம் ஆகியவற்றுக்கு அடுத்தபடியாக, கையால் இயக்கப்படும் சக்கி (ஆட்டு உரல் திரிகை) யை நாம் புனருத்தாரணம் செய்யவேண்டும். ஒவ்வொரு கிராமத்துக்கும் இது மிக முக்கியம். இல்லையேல் மாவு மில்கள் தான்—பல ஆண்டுகளாக இவைகளைப் பற்றி நான் கவலை அடைந்து வருகிறேன் - நம்முடைய தலைவிதியாக இருக்கும். இதைப் போன்றுதான் அரிசியும். கைக்குத்தல் அரிசியையோ அல்லது சக்கியால் திரிக்கப்படும் அரிசியையோ கிராம மக்கள் உபயோகிக்குமாறு செய்யவேண்டும். ஏனெனில், மில்களிலிருந்து வெள்ளையாக அரைத்து வரும் அரிசி உடல் நலத்தைக் கெடுக்கிறது என்பது ஒரு நிலைத்த உண்மையாகும்.[21]

### எல்லா அறிவும்

எல்லா வகைகளிலும் கிராமத்தை நிர்மாணிப்பதற்கான சகல அறிவையும் கிராம ஊழியன் பெறவேண்டும். கிராமத்தில் ஓரளவு நூற்பு வேலை இருக்கும். அதே போன்று கொல், தச்சு, தோல் வேலைகள், விவசாயம் முதலியவையும் இருக்கும். இவ்வாறு பல் வேறு தொழில்களில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்கள் மத்தியில் கூட்டுறவை ஏற்படுத்தி, அவர்கள் எல்லோரும் ஒரே கிராமத்தின் ஒன்றுபட்ட அங்கங்களாகப் பணியாற்றுமாறு செய்யவேண்டும்.[22]

### தவறு இருந்தால்?

எல்லா வகைகளிலும் கிராமம் அபிவிருத்தி அடைய வேண்டும் என்ற குறிக்கோளுடன் இந்த வேலையைப் புதிதாக நாம் செய்ய வேண்டியிருக்கிறது. அதே சமயம் இதில் எந்த அளவு நாம் முன்னேற முடியும் என்பதைப் பார்ப்போம். இதற்கான மாறுதல்களின் காரணமாகத் தற்போது நாம் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளை நாம் குறைத்துக்கொள்ள வேண்டியதிருந்தாலும், அல்லது அவைகளைப் பூரணமாக நிறுத்தி வைக்க வேண்டியிருந்தாலும் அதைப் பற்றிப் பரவாயில்லை. நாம் கதரைப்பற்றி மக்களிடையே ஓரளவு ஆதரவான கருத்தை

உருவாக்கியிருக்கிறோம். ஆனல் கதரின் முக்கியத்துவத்தைப் பற்றி மக்களுக்கு நாம் சொன்னவற்றில் ஏதாவது தவறு இருக்கு மானல், நாம் ஆரஅமர யோசிக்க வேண்டும். நம்முடைய கோரிக்கை தவருனதாக இருந்தால், நம்முடைய தவறை நாம் பகிரங்கமாக அறிவிப்பதுடன், கோரிக்கையையும் வாபஸ் பெற வேண்டும்.

### அஸ்திவாரத்தில் கவனம்

நகரங்களில் வாழ்பவர்கள் தங்களுக்கு வேண்டிய கதரைத் தாங்களே உற்பத்தி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள் வேன். அவர்களுக்குக் கதர் அளிக்கும் எண்ணத்தைக் கைவிட்டு விடுவேன். நாம் கிராமங்களுக்குப் போய்க் குடியேறுவோம். இந்த மாறுதலின் காரணமாக, ஊழியர்கள் நம்மை விட்டு விலகிச் செல்ல விரும்பினல், நாம் அவர்களை விட்டுவிடுவோம். நம்முடைய உள்ளத்திலும் அறிவிலும் இந்த அளவுக்கு மாற்றம் ஏற்பட்டா லொழிய, நாம் விரும்பும் பலனை அடைய முடியாது. அகில இந்திய நூற்போர் சங்கத்தைச் சேர்ந்தவர்களாகிய நாம், கொள்கையை மட்டும் எடுத்துக் கூறுவோம். நம்முடைய வேலையை எவ்வளவு பரவல் மயமாக்க முடியுமோ அவ்வளவு பரவல் மயமாக்குவோம். அன்றுடக் கதர் வேலையிலிருந்து நாம் பூரணமாக விடுபடுவோம். அதன் பின்பு, நாம் எந்தக் கிராமத்தில் குடியேறுகிறோமோ அந்தக் கிராமப் பகுதியில் நடைபெறும் மற்ற நடவடிக்கைகள் அல்லது கைத்தொழில்களில் கவனம் செலுத்துவோம். அப்போதுதான் நம் முடைய வேலையின் உண்மையான சாரத்தை நாம் அடைய முடியும். நம்முடைய வேலைக்கு எவ்வளவு ஆழமான அஸ்திவாரம் போட முடியுமோ அவ்வளவு ஆழமான அஸ்திவாரம் போடுவதிலேயே தற் போது நமது கவனமெல்லாம் இருக்கும்.[23]

### கிராமங்களில் வெற்றி பெற்றுல் போதும்

விவசாயம், கால்நடை வளர்ப்பு, மற்றும் கிராமக் கைத் தொழில்கள் எல்லாவற்றையும் புனருத்தாரணம் செய்வதன் மூலம், மக்களுடைய நிலைமையை உயர்த்துவதற்கான வழி வகைகளைப் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு அரை டஜன் கிராமங்களில் நான் வெற்றி பெற்றுல் கூட என்னுடைய பிரச்னை தீர்ந்துவிடும். ஏனென்றுல் பிண்டம் போலத்தான் அண்டமும்.[24]

### உங்களிடமிருந்தே தொடங்குங்கள்

கிராமக் கைத்தொழில் வேலைகளை எவ்வாறு ஆரம்பிப்பது, எதை முதலில் செய்யவேண்டும் என்றெல்லாம் கேட்டுப் பலர்

கடிதம் எழுதுகிறார்கள். நண்பர்கள் என்னை வந்து பார்த்துக் கேட்கிறார்கள்.

இதற்கு ஒரு பதில் தெளிவு. அதாவது, "உங்களிடமிருந்து தொடங்குங்கள். எது மிகவும் எளிதாக இருக்கிறதோ அதைச் செய்யுங்கள்."

எனினும், மேற்கண்ட கேள்விகளைக் கேட்டவர்களுக்கு இந்தப் பதில் திருப்தியளிக்கவில்லை. ஆகையால் நான் இதை மேலும் சற்று விளக்குகிறேன்.

### சில உதாரணங்கள்

ஒவ்வொருவரும் தான் அன்றாடம் பயன்படுத்தும் உணவு, உடை, மற்ற பொருள்கள் ஆகியவற்றை ஆராய்ந்து பார்க்கட்டும். இவைகளில் வெளிநாடுகளில் செய்யப்பட்ட பொருள்கள் அல்லது நகரங்களில் உற்பத்தியான பொருள்கள் இருந்தால், அவைகளை நீக்கி, அவைகளுக்குப் பதிலாகக் கிராமவாசிகளால் செய்யப்பட்ட பொருள்களைப் பயன்படுத்தட்டும். அதாவது, கிராமவாசிகள் தங்களுடைய வீடுகளில், தாங்கள் எளிதாகப் பயன்படுத்தவோ செம்மை செய்துகொள்ளவோ கூடிய எளிய, செலவில்லாத கருவிகளால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைப் பயன்படுத்தட்டும். இவ்வாறு மாற்றம் செய்வது ஒன்றே, ஒரு சிறந்த பயிற்சியாக இருக்கும். ஒரு உருப்படியான தொடக்கமாகவும் இருக்கும். இதற்கு அடுத்த நடவடிக்கை தானாகவே அவருக்குத் தெரியும். உதாரணமாக, ஒருவர் இதுவரை பம்பாய்த் தொழிற்சாலை ஒன்றில் உற்பத்தியான 'பல் பிரஷ்'ஷை உபயோகிக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் அதை நிறுத்திவிட்டு கிராமத்தில் செய்த ஒரு 'பிரஷ்'ஷை உபயோகிக்க விரும்புகிறார். அவர் ஒரு ஆலங்குச்சியை உபயோகிக்கலாம் என்று ஆலோசனை கூறுவேன். அவருடைய பல் பலவீனமாய் இருந்தால், அல்லது அவருக்குப் பல்லே இல்லாமல் இருந்தால், அவர் இந்த ஆலங்குச்சியின் ஒரு நுனியை ஒரு கல்லினாலோ சுத்தியினாலோ நன்கு தட்டிப் பயன்படுத்திக்கொள்வார். மற்றொரு நுனியைக் கத்தியினால் பிளந்து, அதை நாக்கு வழிப்பதற்காகப் பயன்படுத்திக் கொள்வார். சுகாதாரமற்ற முறையில் தொழிற்சாலைகளில் செய்யப்படும் பல் 'பிரஷ்'களைக் காட்டிலும் இவை சுத்தமானவையாகவும் விலை மலிவானவையாகவும் இருப்பதை அவர் காண்பார். நகரங்களில் உற்பத்தியாகும் பல்பொடிக்குப் பதிலாக, சுத்தமான, நன்கு பொடி செய்யப்பட்ட, அடுப்புக் கரியையும் உப்பையும் சம அளவில்

கலந்து அதைப் பற்பொடியாகப் பயன்படுத்தலாம். ஆலைத் துணிக்குப் பதிலாக கிராமத்தில் நெய்யப்பட்ட கதர், அரிசி ஆலையில் அரைக்கப்பட்ட அரிசிக்குப் பதிலாக கையால் குத்தப்பட்ட, தீட்டப்படாத அரிசி, வெல்லச் சர்க்கரைக்குப் பதிலாகக் கிராமத்தில் உற்பத்தியாகும் வெல்லம் ஆகியவற்றை அவர் பயன்படுத்தலாம். இவைகளை ஒரு உதாரணமாகவே நான் எடுத்துச் சொல்லியிருக்கிறேன்...அதாவது, இந்தப் பிரச்னையைப் பற்றி என்னுடன் வாதித்தவர்கள் குறிப்பிட்ட கஷ்டங்களுக்கு விளக்கம் அளிக்கும் முறையிலேயே கூறியிருக்கிறேன்.[25]

## கால்நடை விடுதிகள்

நம்முடைய கால்நடைகள் படுமோசமான முறையில் அலட்சியம் செய்யப்பட்டதே அவைகளின் தற்போதைய பரிதாபகரமான நிலைக்குக் காரணமாகும். நம்முடைய கால்நடை விடுதிகள் நம் இரக்க உணர்ச்சியின் சின்னமாக இருக்கின்றனவென்பது உண்மையே. ஆனாலும் அருவருக்கத்தக்க முறையில் அவை நடத்தப்படுகின்றன. முன் மாதிரியான பால் பண்ணைகளாகவும் பெரிய, லாபகரமான உதவி ஸ்தாபனங்களாகவும் இருப்பதற்குப் பதிலாக, வயதான கால்நடைகளைக் கொண்டு வந்து நிறுத்தும் கொட்டமாகவே அவை பயன்படுகின்றன. பசுப் பாதுகாப்பு என்பதை வானளாவ நாம் பேசிக் கொண்டிருக்கிறோமென்றாலும் நாம் பசுவையும் அதன் சந்ததிகளையும் அடிமைப்படுத்தி அதனால் நாமும் அடிமைகளானோம்.[26]

## இலட்சிய கோசாலை

ஒரு இலட்சிய கோசாலையானது அதில் உள்ள பசுக்களிலிருந்து தான் எந்த நகர் அருகேயிருக்கிறதோ அதற்கு நல்ல சத்துள்ள பாலைக் குறைந்த விலையில் விநியோகிக்கும். வதை செய்யப்பட்ட மாடுகளிலிருந்து அல்லாமல், இறந்த மாடுகளிலிருந்து எடுக்கப்பட்ட எளிய, நன்கு உழைக்கக்கூடிய மிதியடிகளைச் செய்து கொடுக்கும். அப்படிப்பட்ட கோசாலையானது நகரின் மத்தியில் ஒன்று அல்லது இரண்டு ஏக்கர் பரப்பில் இருக்காது; அல்லது அதற்கு வெகு அருகாமையில் கூட இருக்காது; ஆனால் அது கொஞ்ச தூரத்தில், ஆனால் அதே சமயம் அதிக தூரமும் இல்லாத ஒரு இடத்தில் நிறுவப்படும். இது ஐம்பதிலிருந்து நூறு ஏக்கர் பரப்புக் கொண்டதாய் இருக்கும். அங்கு ஒரு நவீன பால்பண்ணையும் நவீன தோல் பதனிடும் சாலையும், நூற்றுக்கு நூறு வியாபார அடிப்படையில், அதேசமயம் தேசிய அடிப்படையில் நிறுவப்பெறும். இவ்வாறாக அதில் பங்குதாரர்களுக்கு இலாபத் தொகை அளிக்க வேண்டிய பிரச்னை இருக்காது. அதே சமயம் நஷ்டமும் இருக்

காது. நீண்ட கால அடிப்படையில் இப்படிப்பட்ட ஸ்தாபனங்கள் இந்தியா முழுவதிலும் நிறுவப்படும். அவை இந்து மதத்துக்கு ஒரு வெற்றியாகவிருக்கும்; பசு வளர்ச்சியில், கால்நடைப் பாதுகாப்பில் இந்துக்கள் எவ்வளவு அக்கறையுள்ளவர்களாய் இருக்கிறார்கள் என்பதற்கு ஒரு சான்றாகவிருக்கும். மேலும் படித்தவர்கள் உள்பட ஆயிரக்கணக்கான பேர்களுக்கு இது கண்ணியமான வேலை அளிக்கும். ஏனென்றால், பால் பண்ணை, தோல் பதனிடுந்தொழில் ஆகிய இரண்டுக்குமே சிறந்த விஞ்ஞான அறிவு தேவைப்படுகிறது. பால் பண்ணை சம்பந்தமான மிகச் சிறந்த ஆராய்ச்சிகளுக்கு டென்மார்க் அல்லாமல் இந்தியாவே முன் மாதிரியான நாடாக விளங்க வேண்டும். தற்போது, இறந்த கால்நடைகளின் ஒன்பது கோடி ரூபாய் பெறுமான தோலை ஏற்றுமதி செய்துவிட்டு நமது உபயோகத்திற்காக, வதை செய்யப்பட்ட கால்நடைகளின் தோலை உபயோகப் படுத்த வேண்டிய நிலை இருக்காது. இது வெட்கக் கேடானது. இந்தியாவுக்குப் பொதுவாக இது வெட்ககரமானது என்றால், குறிப்பாக, இந்துக்களுக்கு இது அதிக வெட்ககரமானதாகும். கிரிதியில் நிகழ்த்திய சொற்பொழிவில் நான் சொன்ன கருத்துக்களை எல்லாக் கோசாலைக் குழுக்களும் மனதில் பதித்துக்கொண்டு, தங்களுடைய கோசாலைகளை இலட்சிய பால் பண்ணைகளாகவும் தோல் பதனிடும் நிலையங்களாகவும் ஆக்கும் என்றும் வயதான, வலுவிழந்த கால்நடைகளுக்கெல்லாம் ஒரு புகலிடமாக ஆக்கும் என்றும் நம்புகிறேன்.[27]

### தோல் பதனிடுதல்

ஒவ்வொரு கோசாலை அல்லது முதிய கால்நடைகள் தொழுவத்திலும் அதன் தேவைக்கேற்ற ஒரு தோல் பதனிடும் நிலையம் இருக்க வேண்டும். வேறு வார்த்தைகளில் சொல்வதாக இருந்தால் இப்படிப்பட்ட ஸ்தாபனங்களின் நிருவாகிக்குச் சிறந்த கால்நடைகளின் உடற்பகுதிகளைப் பயன்படுத்துவதற்கு உடனடியாக எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி நன்கு தெரிந்திருக்க வேண்டும். இவ்வாறு செய்யப்படுவதாய் இருந்தால், ஒரு குறிப்பிட்ட கோசாலையில் எத்தனை கால்நடைகள் இருக்க வேண்டும் என்ற பிரச்னைக்கே இடமில்லை.

### ஒரு மாடு உள்ளவரை

கோசாலையில் கால்நடைகளின் இறப்பு விகிதம் என்னவென்பது எனக்குத் தெரியாது. அது நான் எடுத்துக்கொண்டுள்ள விஷயத்துக்கு வேண்டியதும் அல்ல. ஒரு கோசாலையில் ஒரு கால்நடை இருக்கும் வரை, அது இறந்தபின் அதன் உடலை எவ்வாறு பயன்

படுத்துவதென்பதை அந்த கோசாலையின் நிருவாகி தெரிந்திருக்க வேண்டும். அது உயிருடன் இருக்கும் போது அதை எப்படிப் பராமரிக்க வேண்டுமென்பது அவருக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்று எவ்வாறு எதிர்பார்க்கிறோமோ, அதே போன்று இதுவும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

**தர்ம ஸ்தாபனங்களின் பொறுப்பு**

நான் ஏற்கனவே விவரித்துள்ளதைப் போன்று, பொதுவாக கால்நடைகள் பாதுகாப்புக்காக அமைக்கப்பட்டுள்ள இப்படிப் பட்ட தர்ம எண்ணமுள்ள ஸ்தாபனங்கள், கிராமத்தில் இறக்கும் கால்நடைகளின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும். இதில் ஒரே மாதிரியாக கால்நடை, தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பொது மக்கள் ஆகியோருடைய நலன்களெல்லாம் அடங்கிக்கிடக்கின்றன. கோசாலைகளோ அல்லது அதைச் சார்ந்த தோல் பதனிடும் நிலையங்களோ இல்லாத ஊர்களில், பசுப் பாதுகாப்பில் நம்பிக்கை கொண்ட யாராவது ஒரு ஊர்வாசி, இறந்த கால்நடைகளின் உடல்களைப் பக்கத்திலுள்ள தோல் பதனிடும் நிலையத்துக்கு அப்புறப்படுத்தும் பொறுப்பை ஏற்க வேண்டும். அல்லது, அந்த உடலை வெட்டி அதிலுள்ள உபயோகமான பகுதிகளை எடுத்து அதைத் தோல்பதனிடும் நிலையத்திற்கு அனுப்பும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**மூலதனம்**

நான் ஏற்கனவே கூறியுள்ளதைப் போன்ற தோல் பதனிடும் நிலையங்கள் அமைப்பதற்கு அதிக மூலதனம் தேவையில்லை. இந்த வேலையில் ஊழியர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான ஒரு சிறிதளவு ஆரம்ப மூலதனந்தான் தேவைப்படும்.[28]

## கையால் நெல்குத்துதல், மாவு அரைத்தல்

**"நூற்றுக்கு நூறு சுதேசி"**

"நூற்றுக்கு நூறு சுதேசி" என்னவென்பதைப் பற்றி நான் எழுதியபோது, அதனால் ஏற்படும் சில பிரச்னைகளை எவ்வாறு சமாளிப்பது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறேன். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுடைய உடல் நலத்துக்கும் சுகாதாரத்துக்கும் உதவக் கூடிய முறையில் இப்பிரச்னைகளை உடனடியாக எவ்வாறு தீர்க்கலாம் என்று கூறியிருக்கிறேன். இந்த நாட்டில் உள்ள மிகப் பெரிய பணக்காரருக்கும், இதனால் வரக் கூடிய லாபத்தில் பங்கு உண்டு. பழைய கால முறைப்படி கிராமங்

களிலேயே நெல் குத்திக் கொள்ள முடியுமானல், நெல் குத்தும் சகோதரிகளுடைய வீட்டுக்குப் பணம் போய்ச் சேரும். தீட்டப் பட்ட அரிசியிலுள்ள 'ஸ்டார்ச்' என்னும் பொருளை மட்டும் சாப்பிடு வதற்குப் பதிலாக தீட்டப்படாத அரிசியில் கொஞ்சம் சத்துள்ள உணவை மக்கள் பெறுவார்கள். மனிதனுடைய பேராசையானது தனது காலடியில் உள்ள மக்களின் உடல் நலத்தையோ, செல்வ வளத்தையோ பற்றி அக்கறை கொள்வதில்லை. நெல் விளையும் பகுதிகளிலெல்லாம் நாம் காண்கிறோமே விகாரமான அரிசி ஆலைகள், அவைகளுக்கு இந்தப் பேராசை தான் காரணம். பொது ஜன அபிப்பிராயம் மட்டும் பலமாக இருந்தால், தீட்டப்படாத அரிசி மட்டுமே தங்களுக்கு வேண்டும் என்று வலியுறுத்துவதன் மூலமும், ஒரு தேசத்தின் சுகாதாரத்தையே பாழ்படுத்துவதும், நேர்மை யாகப் பிழைக்கக்கூடிய ஏழை மக்களுக்குத் தொழில் இல்லாமல் செய்யக் கூடியதுமான ஒரு தொழிலை நிறுத்த வேண்டு மென்று கோருவதன் மூலமும் அரிசி ஆலைகள் இருப்பதையே மக்கள் சாத் தியமில்லாமற் செய்து விடுவார்கள்.[29]

### மாவு அரைக்கும் ஆலைகள்

ஆயிரக்கணக்கான கிராமங்களில் மாவு அரைப்பதற்கு மின் சாரம் பயன்படுத்தப்படுகிறது. இது நம்முடைய நிராதரவான நிலையின் கடைசி எல்லை என்றே நான் கருதுகிறேன். அல்லது மாவு அரைக்கும் இயந்திரங்கள், மற்ற இயந்திரங்கள் எல்லாம் இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்பட்டவையல்லவென்று நான் எண்ணுகிறேன்...இப்படிப் பட்ட இயந்திரங்களைக் கிராமங்களில் பெரும் அளவில் நிறுவுவது பேராசையின் சின்னமேயாகும். ஏழை மக்களுக்குக் கஷ்டத்தை ஏற்படுத்தி இவ்வாறு ஒருவர் பையை நிரப்புவது சரியாகுமா? இப்படிப்பட்ட இயந்திரம் ஒவ்வொன் றுமே கையால் இயக்கப்படும் ஆயிரக்கணக்கான சக்கிகளுக்கு வேலையில்லாமற் செய்துவருகிறது. இந்தச் சக்கிகளைச் செய்யும் ஆயிரக்கணக்கான தொழிலாளிகளுக்கும், இவைகளிலிருந்து மாவு திரித்துக் கொடுக்கும் ஆயிரக்கணக்கான வீட்டுப் பெண்களுக்கும் வேலையில்லாமற் செய்துவிடுகிறது. மேலும், இவ்வாறு கையால் செய்யப்படும் வேலைக்கெல்லாம் மின்சாரத்தைப் பயன்படுத்து வதானது, ஒரு தொற்று நோயைப் போலிருந்து, ஒவ்வொரு கிராமக் கைத்தொழிலுக்கும் பரவிவிடும். கிராமக் கைத்தொழில் அழிவது கலையின் அழிவுக்கும் வழிகோலும். பழைய கைத்தொழில்களை அகற்றிவிட்டுப் புதிய தொழில்களை அவற்றின் இடத்தில் கொண்டுவருவதில் யாருக்கும் அவ்வளவு ஆட்சேபணை இராது. ஆனல், தற்போது நடைபெறுவது இது

வல்ல. மின்சாரத்தினுல் இயக்கப்படும் இயந்திரங்கள் உள்ள ஆயிரக்கணக்கான கிராமங்களில், மாவு அரைக்கும் திரிகைகளின் இன்னிசையை அதிகாலையில் ஒருவர் கேட்க முடிவதில்லை.[30]

## 'மிஷின்' எண்ணெயும் செக்கு எண்ணெயும்

### நாட்டுச் செக்கின் பிரச்னை

கிராமச் செக்கின் வீழ்ச்சிக்கு என்ன காரணம் என்பதைத் திரு ஜாவர்பாய் ஆராய்ந்திருக்கிருர். மிகவும் முக்கியமான காரணம், ஒழுங்காக வித்துக் கிடைப்பதற்குச் செக்கான் ஏற்பாடு செய்து கொள்ள முடியாதது தான். பருவகாலத்துக்குப் பின் கிராமங்களில் எண்ணெய் வித்து என்பதே இருப்பதில்லை. செக்கானுக்கு, விதையை இருப்புக் கட்டுவதற்குப் பணம் இருப்பதில்லை. நகரங்களிலிருந்து வித்து வாங்குவதற்கும் பணம் கிடையாது. ஆகையால் அவனுடைய தொழில் ஏற்கனவே மறைந்து விட்டது, அல்லது, மறைந்து கொண்டிருக்கிறது. இலட்சக்கணக்கான செக்குகள் தற்போது வேலையில்லாது இருக்கின்றன. இதனுல் நாட்டின் பொருளாதாரம் எவ்வளவோ வீணுகிறது. விதைகள் உற்பத்தியாகும் இடங்களிலேயே அவைகளை இருப்பு வைத்து, நியாயமான விலையில் அது செக்கானுக்குக் கிடைக்குமாறு செய்து அதன் மூலம் ஏற்கனவே உள்ள செக்குகள் புத்துயிர் பெறுமாறு செய்வது நிச்சயமாக அரசாங்கத்தின் கடமையாகும். இந்த உதவி செய்வதால் அரசாங்கத்துக்கு நஷ்டம் எதுவுமில்லை. இதைக் கூட்டுறவு சங்கங்கள் மூலமோ அல்லது பஞ்சாயத்துக்கள் மூலமோ அளிக்க முடியும் என்று திரு. ஜாவர்பாய் கூறுகிருர். இதைச் செய்வதனுல் 'மிஷின்' எண்ணெயுடன் செக்கு எண்ணெய் போட்டியிட முடியும். கிராமவாசிக்கு தற்போதுள்ளதைப் போன்று கலப்படமான எண்ணெய் வாங்கும் துயர அனுபவம் இருக்காது என்றும் திரு ஜாவர்பாய் கூறுகிருர். விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டே அவர் இதைக் கூறுகிருர். கிராமவாசிக்கு கொழுப்புச் சத்து உணவில் கிடைப்பதாக இருந்தால், அது எண்ணெயின் மூலம் கிடைப்பதுதான். நெய்யை அவன் பொதுவாகப் பார்த்திருக்கமாட்டான்.

### அனுகூலங்கள்

செக்கு எண்ணெயைக் காட்டிலும் மிஷின் எண்ணெய் எப்படித்தான் மலிவாக இருக்கிறது என்பதை அவர் (திரு ஜாவர்பாய்) கண்டுபிடித்திருக்கிருர். இதற்கு அவர் மூன்று காரணங்கள் கூறுகிருர். இவைகளில் இரண்டு தவிர்க்க முடியாதவை.

அவையாவன : ஒன்று மூலதனம்; மற்றொன்று, வித்தில் உள்ள கடைசிச் சொட்டு எண்ணெயையும்—அதுவும் எண்ணெய்ச் செக்கைக் காட்டிலும் குறுகிய காலத்தில்—மிஷின் செக்கால் பிழிய முடிகிறது என்பது. ஆனால் இவைகளால் கிடைக்கும் அனுகூலம் எல்லாம் இடைத்தரகர்களுக்கு எண்ணெய் ஆலையின் சொந்தக்காரர் கமிஷன் செலுத்த வேண்டியிருப்பதால் சரிக்கட்டிப்போய் விடுகிறது. ஆனால் மூன்றாவது காரணம் இருக்கிறதே அதாவது கலப்படம், அதனுடன் ஜாவர்பாய் போட்டியிடமுடியாது, அவரும் கலப்படம் செய்தாலொழிய. இயற்கையாகவே அவர் இதைச் செய்யமாட்டார். ஆகையால் கலப்படத்தைச் சட்டத்தின் மூலந்தான் தீர்க்கமுடியும் என்று அவர் யோசனை கூறுகிறார். ஏற்கனவே கலப்படத் தடைச் சட்டம் இருந்தால், அதை அமுல் நடத்துவதன் மூலமும், இல்லாவிட்டால் எண்ணெய் ஆலைகளுக்கு லைசென்சு வழங்குவதன்மூலம் இச்சட்டத்தைக் கொண்டுவந்தும் அரசாங்கம் இதைச் செய்யலாம். [31]

**வெல்லமும் பனங்கற்கண்டும்**

சர்க்கரைத் தொழிலை எடுத்துக் கொள்ளுங்கள். பஞ்சாலைத் தொழிலுக்கு அடுத்தபடியான மிகப் பெரிய தொழில் சர்க்கரை உற்பத்தித் தொழில்தான். அதற்கு நம் உதவி தேவையில்லை. சர்க்கரை ஆலைகள் வேகமாகப் பெருகிக்கொண்டு போகின்றன. இந்தத் தொழில் பெருகுவதற்கு, பொது ஸ்தாபனங்கள் எவ்வித உதவியும் செய்யவில்லை. அனுகூலமான சட்டமே இதன் வளர்ச்சிக்குக் காரணம். இச்சட்டங்களுக்கு அது கடமைப்பட்டிருக்கிறது. இன்றோ வெல்லம் என்பது கடந்தகாலப் பொருள் என்று கூறும் அளவுக்குச் சர்க்கரை ஆலைத்தொழில் வளம்பெற்றிருக்கிறது, விரிவடைந்திருக்கிறது. வெள்ளைச் சர்க்கரையைக் காட்டிலும் வெல்லமானது உயர்ந்த உணவுச் சத்துள்ளது. இந்த அரிய தொழில்தான் இப்போது உங்களுடைய உதவிக்காகக் கதறுகிறது. இது குறித்துப் பெரும் அளவில் ஆராய்ச்சி செய்வதற்கும் கணிசமான உதவி அளிப்பதற்கும் இடம் இருக்கிறது. இது நீடிப்பதற்கான வழி வகைகளை நாம் ஆராயவேண்டும். நான் என்ன சொல்ல விரும்புகிறேனோ அதற்கு ஒரு சான்றாகத்தான் இதைக் கூறுகிறேன். [32]

**பனை வெல்லம்**

கள்ளினால் கிடைக்கக்கூடிய நன்மைகள் என்று கூறுகிறார்களே அவை மற்ற உணவுப் பொருள்களிலிருந்தும் கிடைக்கின்றன. கள் என்பது பதனீரிலிருந்து உற்பத்திசெய்யப்படுகிறது.

புத்தம் புதிதாக எடுக்கப்பட்ட பதனீர் மயக்கந்தரும் பொருள் அல்ல. இதை ஹிந்துஸ்தானியில் 'நீரா' என்று சொல்லுகிறார்கள். பதனீர் அருந்துவதனல் அநேகருக்கு மலச்சிக்கல் குணமாகி யிருக்கிறது. நானே அதைக் குடித்திருக்கிறேன். ஆனால் அது என் விஷயத்தில் மலமிளக்கியாக இல்லை. கரும்புச் சாறுக்கு எந்த உணவுச் சத்து இருக்கிறதோ அது பதனீரில் இருப்பதை நான் கண்டேன். தேயிலை முதலியவற்றை அருந்துவதற்குப் பதிலாக ஒருவர் காலையில் பதனீர் குடிப்பாரானல், காலை ஆகா ரத்துக்கு வேறு எதுவும் தேவைப்படமாட்டாது. கரும்புச் சாறைப் போன்றே, பனையிலிருந்து எடுக்கப்படும் பதனீரைக் கொதிக்கவைத்து பனை வெல்லம் செய்யலாம். 'கஜூரி' என்பது ஒருவகைப் பனை மரம். அநேகவகைப் பனை மரங்கள் நம் நாட்டில் தானகவே உற்பத்தியாகின்றன. அவைகள் எல்லாவற்றிலிருந்தும் நாம் அருந்தக் கூடிய பதனீர் கிடைக்கிறது. பதனீரானது விரை வில் புளிப்புக்கட்டுவதால் அதை உடனடியாக நாம் உபயோகப் படுத்த வேண்டியிருக்கிறது. ஆகையால், அந்தந்த இடத்தி லேயே அதை நாம் உபயோகப்படுத்தியாகவேண்டும். ஒரு குறிப்பிட்ட அளவுக்குத் தவிர, மற்றபடி இவ்வாறு செய்வது கடினம். ஆகையால் பதனீரைப் பனை வெல்லமாக நாம் மாற்றிவிட வேண்டும். கரும்பு வெல்லத்தின் இடத்தைப் பனை வெல்லம் நல்ல முறையில் நிரப்பமுடியும். உண்மையில், சிலர் கரும்பு வெல் லத்தைக் காட்டிலும் பனை வெல்லத்தையே அதிகம் விரும்புகின்ற னர். கரும்பு வெல்லத்தை விடப் பனை வெல்லத்தில் உள்ள ஒரு அனுகூலம், பின்னது இனிப்புக் குறைந்ததாதலால், ஒருவர் அதை அதிகம் சாப்பிடலாம். பனை வெல்லம் அதிகமாகப் பரவுவதற்கு அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் எவ்வளவோ செய்திருக்கிறது, இன்னும் நிறையச் செய்ய வேண்டியதுமிருக் கிறது. கள்ளிறக்குவதற்காகப் பயன்படுத்தப்படும் பனைமரங்கள், வெல்லம் செய்வதற்காகப் பயன் படுத்தப்பட்டால் இந்தியாவில் ஒருபோதும் சர்க்கரைப் பஞ்சம் இருக்காது. மிகக் குறைந்த செலவில் நல்ல வெல்லம் ஏழை மக்களுக்குக் கிடைக்கும். பனை வெல்லத்தை வெல்லப் பாகாகவும் சுத்தமான சர்க்கரையாகவும் மாற்றலாம். ஆனல் வெல்லமானது சுத்தம் செய்யப்பட்ட சர்க் கரையைக் காட்டிலும் அதிக உபயோகமானது. வெல்லத்தில் உள்ள உப்புச் சத்துக்கள், சுத்தம்செய்யப்படும்போது இழக்கப்படு கின்றன. தீட்டப்பட்ட அரிசியிலும் தீட்டி அரைக்கப்பட்ட கோதுமை மாவிலும் தவிட்டுச் சத்து போவதனல் சில உணவுச் சத்துக்களை அவை இழந்து விடுகின்றன. அதேபோன்று, வெல்

லத்தில் உள்ள உணவுச் சத்தில் ஒரு சிலவற்றைச் சுத்தம் செய்யப் பட்ட சர்க்கரை இழந்து விடுகிறது. எல்லாப் பொருள்களையுமே முடிந்தவரை அதனதன் இயற்கையான நிலையில் உண்டால்தான் அதிக உணவுச் சத்து இருக்கிறது என்று பொதுவாக நாம் கூறலாம்.[33]

### தேனீ வளர்ப்பு

தேனீ வளர்ப்புக்கு அளவு கடந்த வாய்ப்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அதற்கு கிராமத்தில் உள்ள முக்கியத்துவம் ஒருபுறம் இருக்க, பணம் படைத்த இளைஞர்களும் பெண்களும் தேனீ வளர்ப்பை ஒரு ஓய்வு நேரப் பணியாக மேற்கொள்ளலாம். அது நாட்டின் செல்வத்தை உயர்த்த உதவும்; அதுமட்டுமல்லாமல், நமக்குச் சிறந்த உடல் நலத்திற்குகந்த சர்க்கரையையும் கொடுக்கும். நமக்குத் தாராளமான மனோபாவம் இருக்குமானால் நாம் அதை நோயால் அவதிப்படும் அரிஜனக் குழந்தைகளுக்கு அவர்களுடைய உடல் நலத்தை அபிவிருத்தி செய்வதற்கான உணவாகக் கொடுத்து உதவலாம். அது பணக்காரர்களின் ஆடம்பரப் பொருளாக இருக்கவேண்டும், அல்லது ஹகீம்கள், வைத்தியர்களுடைய கையில் விலை உயர்ந்த மருந்துப் பொருளாக இருக்கவேண்டும் என்பதற்குக் காரணமே இல்லை. ஆனால் ஒன்று, வெறும் புள்ளிவிவரங்களை அடிப்படையாகக் கொண்டுதான் இந்த நம்பிக்கையைக் கூறுகின்றேன். கிராமங்களிலும் நகரங்களிலும் இளைஞர்களும் பெண்களும் சோதனை செய்து, தேனானது சாதாரண உணவுப் பொருளாக முடியுமா அல்லது தற்போதிருப்பதைப் போல் ஒரு விசேஷப் பொருளாகத்தான் இருக்க முடியுமா என்பதைப் பார்க்கலாம்.[34]

## தோல் பதனிடுதல்

### நஷ்டம்

ஒன்பது கோடி ரூபாய் பெறுமான கச்சாத் தோல் ஆண்டு தோறும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகிக் கொண்டிருக்கிறதென்றும், இதில் பெரும் பகுதி உற்பத்தியான பொருள்களாகத் திரும்பி வருகிறது என்றும் மதிப்பிடுகின்றனர். இதனால் பொருள் நஷ்டம் மட்டும் அல்ல, அறிவு நஷ்டமும் இருக்கிறது. தோல் பதனிடுவதிலும், நமக்கு அன்றாடம் தேவையான தோலாலான எண்ணற்ற பொருள்களைத் தயார் செய்வதிலும் நாம் பயிற்சி பெற இயலாமல் போய்விடுகிறது.



சேவா கிராமத்தில் பனைவெல்லம் உற்பத்தி செய்யப்படுவதை
காந்திஜி பார்வையிடுகிறார் (1940)



1940-ல் சேவா கிராமத்திற்கு வந்த ஓர் அந்நிய நாட்டுப் பத்திரிகை நிருபருடன் காந்திஜி அளவளாவுகிறார்.

## இரசாயன அபிவிருத்தி

தோல் பதனிடுவதற்குச் சிறந்த தொழில் நுணுக்கத் திறமை வேண்டும். இந்தப் பெரிய தொழிலில் ஏராளமான இரசாயன வாதிகள் தங்களுடைய திறமையைக் காட்டுவதற்கு இடம் உண்டு. இதன் அபிவிருத்திக்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று அரிஜனங்கள் அபிவிருத்தி. கிராமங்களில் குடியிருக்கும் சிறுவர் களுக்கு உயிர்வாழ்வதற்கும் போதாத வருமானம் கிடைக்கிறது. இவர்கள் குப்பை கூளங்களில் வாழ்ந்து வருகின்றனர். கிராமங் களுக்கு அப்பால் தனியாக ஒதுக்கப்பட்ட சேரிகளில் வாழ்ந்து வருகின்றனர், இந்த வழியின் மூலம் கிராமங்கள் ஓரளவு சீரமைக் கப்படும். கலை, கல்வி, துப்புரவு, நல்வாழ்வு, கண்ணியம் ஆகியவை யெல்லாம் அவர்கள் அருகில் வந்துசேரும். இதன் மூலம் இரசாயனக் கண்டு பிடிப்புகளையும் நாம் கிராம அபிவிருத்திக் காகப் பயன்படுத்திக் கொள்கிறோம். தோல் பதனிடும் இரசாயன விஞ்ஞானிகள், தோல் பதனிடுவதற்கு அபிவிருத்தியடைந்த வழி துறைகளைக் கண்டுபிடிக்கவேண்டிய திருக்கிறது. கிராம இரசாயன வாதியோ அடக்கத்துடன்தான் வெற்றி பெறவேண்டியதிருக் கிறது. கிராமத்தில், பண்படாத, பக்குவமற்ற தோல் பதனிடும் முறை இருக்கிறதே அதை அவன் கற்றுக்கொள்ளவேண்டும். இன்னும் இந்த முறை இருக்கிறது. ஆனால் போதுமான ஆதரவு இல்லாததனால் அல்ல, நம்முடைய அலட்சியத்தினால் இது வேக மாக மறைந்துகொண்டு வருகிறது. ஆனால் இந்தப் பண்படாத முறையை நாம் பூரணமாக ஒதுக்கித் தள்ளிவிட வேண்டியதில்லை; குறைந்தது அதைப்பற்றி அனுதாபமாக ஆராய்ச்சி செய்து பார்க் கும் வரையாவது ஒதுக்கித் தள்ளிவிட வேண்டியதில்லை. பல நூற்றாண்டுகள் அது செயல்பட்டு வந்திருக்கிறது. அதற்குக் கொஞ்சங்கூடத் தகுதியில்லாதிருந்தால், அது அவ்வாறு செய் திருக்க முடியாது. இது சம்பந்தமான ஒரே ஆராய்ச்சி நான் அறிந்தவரை சாந்தி நிகேதனத்தில்தான் நடந்து வருகிறது. அதன் பின் பழைய சபர்மதி ஆசிரமத்தில் தொடங்கப்பட்டது. சாந்தி நிகேதனத்தில் நடைபெற்ற சோதனையின் அபிவிருத்திகளை நான் தொடர்பேற்படுத்தித் தெரிந்துகொள்ளவில்லை. தற்போது சபர்மதி ஆசிரமம் அரிஜன் ஆசிரமம் ஆகியிருக்கிறது. இந்த அரிஜன் ஆசிரமத்தில் தோல்பதனிடுந் தொழில் புத்துயிர் பெற ஒவ்வொரு வாய்ப்பும் உண்டு. அதேசமயம் இந்தச் சோதனை களெல்லாம் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய ஆராய்ச்சியென்னும் சமுத்திரத்தில் ஒரு சில துளிகளே.

## இறந்த மாட்டிறைச்சி

பசுப்பாதுகாப்பு என்பது ஒரு இந்துமதக் கோட்பாடாகும். அரிஜனன் என்று சொல்லத் தக்க எவனும் கால்நடையை உணவுக்காகக் கொல்லமாட்டான். ஆனால், இவன் தீண்டத் தகாதவனாக இருப்பதால், இறந்த மாட்டு இறைச்சியை உண்ணும் தீய பழக்கத்தைக் கற்றுக் கொண்டிருக்கிறான். அவன் ஒரு பசுவைக் கொல்லமாட்டான்; ஆனால் ஒரு சிறந்த பசுவின் இறைச்சியைச் சுவைத்து உண்பான். உடல்கூறு சாஸ்திரப்படி இது அவனுக்குத் தீங்கு செய்யாமல் இருக்கலாம். ஆனால் மனோதத்துவ சாஸ்திரப்படி பார்த்தால், இறந்த மாட்டு இறைச்சியைச் சாப்பிடுவதைவிட அருவருக்கத்தக்கது எதுவுமே இல்லை. ஆயினும் தோல் பதனிடும் ஒரு அரிஜனுடைய வீட்டுக்கு ஒரு இறந்த பசுவின் உடல் கொண்டுவரப்பட்டால், அது அந்த வீடு முழுவதற்குமே ஒரு பெரிய கொண்டாட்டமாகும். அந்த இறந்த உடலைச் சுற்றி குழந்தைகள் ஆனந்த நர்த்தனம் ஆடுகிறார்கள். அந்த மிருகத்தின் தோல் உரிக்கப்படும் போது, அதில் உள்ள எலும்புகளை அல்லது மாமிசத் துண்டுகளைக் குழந்தைகள் எடுத்து ஒருவர் மீதொருவர் வீசியெறிகின்றனர். தற்போது அரிஜன ஆசிரமத்தில் இருக்கும் தோல் பதனிடுபவர் ஒருவர் தாம் விட்டுவந்த தனது பழைய வீட்டில் நடந்த காட்சிகளை வருணித்துக் கூறுகையில், சிறந்த மிருகத்தைக் கண்டவுடன் குடும்பம் முழுவதுமே ஆனந்தத்தால் புளகாங்கிதமடைந்து விடுகிறது என்று கூறுகிறார். இறந்த மாட்டு மாமிசத்தைச் சாப்பிடுவது ஆன்மாவை அழிக்கும் ஒரு பழக்கம். இந்தப் பழக்கத்திலிருந்து அரிஜனங்களைத் திருப்ப நான் எவ்வளவோ பாடுபட்டிருக்கிறேனாதலால், அது எவ்வளவு கஷ்டம் என்பதை அறிவேன். சீர்திருத்தமான தோல் பதனிடும் முறையால், இறந்த மாட்டு மாமிசத்தைச் சாப்பிடுவதானது இயற்கையாகவே மறைந்து விடும்.

### பசுவின் உபயோகங்கள்

நல்லது, உயர்ந்த அறிவுக்கும் இறந்த உடலைக் கூறு போடும் கலைக்கும் இங்கே உபயோகம் இருக்கிறது. இது பசுப் பாதுகாப்புக்கு முன்னேக்கிச் செல்லும் ஒரு நடவடிக்கையும் ஆகும். பசுவுக்குள்ள பால் கொடுக்கும் சக்தியை எவ்வாறு பெருக்குவது என்பதை நாம் கற்றுக்கொள்ளவேண்டும். அதனுடைய வர்க்கத்தை நாம் அபிவிருத்தி செய்ய வேண்டும் அது போடும் ஆண் கன்றை, நிலத்தில் உழுவதற்கும் பாரவண்டி இழுப்பதற்கும் அதிக உபயோகமுள்ள மாடாக நாம் ஆக்கவேண்டும். அது போடும்

சாணத்தையும் அதன் கோமியத்தையும் விஞ்ஞான பூர்வமான முறையில் உரமாக உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும். பசுவும் அதன் சந்ததிகளும் இறக்கும்போது அவைகளின் தோலையும், எலும்பையும், மாமிசத்தையும், குடலையும், மற்றும் இது போன்றவைகளையும் உபயோகமான முறையில் பயன் படுத்தத் தயாராய் இருக்கவேண்டும். இவைகளையெல்லாம் நாம் செய்யாவிட்டால், பசுவானது கசாப்புக் கடைக்காரன் கையில் இறக்கத்தான் நேரும்.

## தோல் பதனிடுவோர் கஷ்டங்கள்

நான் இங்கு இறந்த பிராணியின் உடலைப் பற்றியே குறிப்பிடுகிறேன். நல்ல வேளையாக, கிராமத்தில் தோல் பதனிடுபவனுக்குக் கிடைப்பது இறந்த பிராணியின் உடலே தவிர, வெட்டப்பட்ட மிருகத்தின் உடலல்ல. இறந்த மிருகத்தைக் கண்ணியமான முறையில் தோல் பதனிடும் இடத்திற்குக் கொண்டு சேர்க்க அவனிடம் சாதனம் இல்லை. அவனே அதைத் தூக்குகிறான்; இழுக்கிறான். இது அம் மிருகத்தின் தோலுக்குக் காயம் ஏற்படுத்தி விடுகிறது; அந்தத் தோலின் மதிப்பையே குறைத்து விடுகிறது. கிராமத்தில் தோல் பதனிடுபவன் செய்யக் கூடிய விலை மதிப்பற்ற, கண்ணியமான சேவையைக் கிராமவாசிகளும் பொது மக்களும் அறிவார்களானால், தோலுக்குக் கேடு இல்லாமல் அதைச் சுமந்து செல்வதற்கு இலகுவான, எளிதான வழிகளைச் செய்து கொடுப்பார்கள்.

## தோலை உரித்தல்

அடுத்த வேலை தோலை உரிப்பதாகும். இதற்கு அதிகத் திறமை வேண்டும். ஒரு கிராமத்தில் தோல் பதனிடுபவன் நாட்டுக் கத்தியால் தோலை உரிப்பதை விட வேகமாகவோ, சிறந்த முறையிலோ வேறு யாரும் - அறுவை சிகிச்சையில் ஈடுபட்டுள்ள டாக்டர்கள் கூட - செய்ய முடியாது என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இதைப் பற்றி அறிந்தவர்களை நான் கேட்டிருக்கிறேன். கிராமத் தோல் பதனிடுபவன் செய்வதில் அபிவிருத்தியான ஒரு சிறு மாறுதலைக் கூட அவர்களால் கூற முடியவில்லை. இதனால் இதைக் காட்டிலும் சிறந்த முறையே இல்லை என்பதல்ல. என்னுடைய மிகக் குறுகிய அனுபவத்தினால் கிடைத்த நன்மையையே நான் வாசகருக்குத் தெரிவிக்கிறேன். கிராமத்தில் தோல் பதனிடுபவனுக்கு எலும்பால் எந்த விதமான உபயோகமும் இல்லை. அவன் அதை எறிந்து விடுகிறான். இறந்த பிராணியின் உடலிலிருந்து தோல் உரிக்கப்படும்போது நாய்கள் கூடி விடு

கின்றன, எலும்புகள் எல்லாவற்றையும் அல்லாவிட்டாலும் ஒரு சிலவற்றைக் கவ்விச் சென்று விடுகின்றன. இது நாட்டுக்கே ஒரு பெரிய நஷ்டமாகும். இந்த எலும்புகளைப் பொடி செய்தால்— மற்ற உபயோகங்கள் ஒரு புறம் இருக்க - சிறந்த உரமாகும். நாய்கள் எடுத்துச் சென்றது போக, மீதமுள்ளவை வெளிநாடு களுக்கு ஏற்றுமதியாகி, கைப்பிடிகளாகவும், பித்தான்கள் முதலிய பொருள்களாகவும் நமக்கே திரும்பி வருகின்றன.

**நகர மயமாக்குதல்**

இதற்கு அடுத்த வழி இந்தப் பெரிய தொழிலை நகர மயமாக்கு வதாகும். இந்தியாவில் இந்த வேலையைச் செய்யக் கூடிய அநேக தோல் பதனிடும் நிலையங்கள் இருக்கின்றன. இந்தக் கட்டுரை யின் நோக்கம் அவைகளைப் பற்றி ஆராய்வதல்ல. இத் தொழிலை நகர மயமாக்குவதானது அரிஜனங்களுக்கோ அல்லது கிராமங் களுக்கோ நன்மை செய்யாது, கிராமங்களின் செல்வத்தை இரட்டை மடங்கு வேகத்தில் விரயம் செய்வதற்கே வழிகோலும். இந்தியாவில் நகர மயமாக்குவது மெதுவாகத்தான் நடைபெறு கிறது. ஆனாலும் அது கிராமங்களுக்கும் கிராம வாசிகளுக்கும் நிச்சயமாக அழிவைத்தான் விளைவிக்கும். இந்தியாவின மொத்த ஜனத்தொகையில் தொண்ணூறு சதவீதம் இங்குள்ள ஏழு இலட்சம் கிராமங்களில்தான் இருக்கிறது. நகரமயமாக்குவது, ஒரு காலும் இந்தத் தொண்ணூறு சதவிகித மக்களுக்கு வாழ்வளிக்க முடியாது. இந்தக் கிராமங்களிலிருந்து தோல் பதனிடுவது போன்ற தொழில் களை அகற்றிவிடுவதானது, மூளையையும் கையையும் திறமையான முறையில் உபயோகப்படுத்துவதற்கு அங்கு தற்போதுள்ள சிறிய வாய்ப்பையும் அகற்றி விடுவதாகும். கிராமக் கைத்தொழில்கள் மறையும்போது, வயலில் கிராமவாசிகள் தங்களுடைய கால்நடை களுடன் உழைப்பது தான் மிஞ்சும். அதிலும் அவர்களுக்கு ஆண் டில் நான்கிலிருந்து ஆறுமாதங்கள் வேலை இருக்காது. ஆகையால் மதுசூதன்தாஸ் கூறுகிறார்: "இவர்கள் மிருகங்களின் நிலைக்குத் தாழ்ந்து விடுவார்கள். உடலுக்கோ மனதுக்கோ போதிய உண வூட்டம் இல்லாது போய்விடும். ஆகையால் அவர்களுக்குச் சந் தோஷமோ, நம்பிக்கையோ இருக்காது."

**3 நன்மைகள்**

நூற்றுக்கு நூறு சுதேசியை விரும்புபவருக்கு இங்கே வேலை இருக்கிறது. ஒரு மாபெரும் பிரச்னையைத் தீர்ப்பதற்குத் தொழில் நுணுக்க அறிவையெல்லாம் ஒன்று திரட்டுவதற்கான வாய்ப்பும் உண்டு. இதில் ஒரே அம்பில் மூன்று பழங்களை வீழ்த்துவது

போன்றது இப்பணி. இது அரிஜனங்களுக்குத் தொண்டு செய்வதாகும்; கிராமவாசிகளுக்குத் தொண்டு செய்வதாகும்; வேலை தேடித் திரியும் மத்திய தர படித்த வகுப்பினருக்குக் கௌரவமான வேலை தேடித் தருவதுமாகும். இத்துடன், படித்தவர்கள் கிராமவாசிகளுடன் சரியான நேரடித் தொடர்பு கொள்ள உதவுகிறது என்ற உண்மையையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.[35]

**சோப்**

'சஜ்ஜி' களிமண்ணிலிருந்து கிராமவாசிகள் தங்களுக்கு வேண்டிய சோப்பை உற்பத்தி செய்து கொள்வார்கள். டாடா அல்லது காட்ரெஜ் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் சோப்புகளுக்கு உள்ள வாசனை, இந்த சோப்புக்கு இருக்காது. அதன் மேலுள்ள காகித உறையும் அவ்வளவு கவர்ச்சிகரமாய் இராது. ஆனாலும், கதரைப் போன்று சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளும் அம்சம் அதில் இருக்கும்.[36]

## கையால் செய்யப்படும் காகிதம்

**குறைந்த விலை**

போதுமான ஆர்டர்கள் மட்டும் இருந்தால், ஆலைகளில் உற்பத்தியாகும் காகிதத்தின் விலைக்கே கையால் செய்யப்படும் காகிதத்தையும் விற்கலாம் என்று கேள்விப்படுகிறேன். நாள் தோறும் காகிதத்தின் தேவை கூடிக்கொண்டே வருகிறது. இந்தத் தேவையைக் கையால் செய்யப்பட்ட காகிதம் பூர்த்தி செய்ய முடியாது என்பதை நான் அறிவேன். ஆனால், ஏழு இலட்சம் கிராமங்கள், அதில் உற்பத்தியாகும் கைத்தொழில் பொருள்கள் ஆகியவற்றின் அபிமானிகள், கையால் செய்யப்படும் காகிதம் எளிதாகக் கிடைப்பதானல் அதை வாங்குவார்கள். கையால் செய்யப்படும் காகிதத்தை வாங்குபவர்கள், அதற்கு என்று ஒரு தனிக் கவர்ச்சி இருக்கிறதென்பதை அறிவார்தள். புகழ்பெற்ற ஆமதாபாத் காகிதத்தை யார் தான் அறியமாட்டார்கள்? பளபளவென்று இருப்பதிலோ அல்லது நீடித்து உழைப்பதிலோ எந்த மில் காகிதம் தான் அதைத் தோற்கடிக்க முடியும்?

**ஊக்கம் தரவேண்டும்**

பழங்கால முறையில் வரவு செலவுக் கணக்குப் புத்தகங்கள் இன்னும் அக் காகிதத்திலேயே செய்யப்படுகின்றன. ஆயினும் இப்படிப்பட்ட மற்ற பல தொழில்களைப் போலவே இந்தத் தொழிலும் அழிந்து கொண்டுதான் இருக்கிறது. ஒரு சிறிது

ஊக்கமளித்தால், அது அழியாது காப்பாற்றலாம். இத்தொழிலை மேற்பார்வை செய்து வந்தால், இதில் கையாளப்படும் முறைகளை அபிவிருத்தி செய்யலாம். கையால் செய்யப்படும் சில வகைக் காகிதங்களில் காணப்படும் குறைபாடுகளை வெகு எளிதில் அகற்றிவிடலாம். இவ்வாறு, சரியாக வெளியே தெரியாத தொழில்களில் ஈடுபட்டிருக்கும் மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பற்றி ஆராய்வது பயனுள்ளதாகவிருக்கும். அவர்களுக்கு யாரும் வழிகாட்டி, ஆலோசனை கூற உதவுவதானால் அவர்கள் நிச்சயமாக அதற்கு உடன்பட்டே நடப்பார்கள்; அவர்கள் விஷயத்தில் அக்கறை எடுத்துக்கொள்வோருக்கு நன்றி செலுத்துவார்கள்.[37]

### மை

நான் இப்போது எழுதிக் கொண்டிருக்கும் மை தெனலியிலிருந்து வந்தது. அங்கு மை உற்பத்திசெய்யும் தொழிலால் பன்னிரண்டு தொழிலாளர்கள் பிழைக்கிறார்கள். எவ்வளவோ கஷ்டங்களுக்கு மத்தியில் அது முன்னேறிக் கொண்டிருக்கிறது. இதே போன்று வேறு மூன்று இடங்களிலிருந்தும் எனக்கு வெவ்வேறு மைகளை மாதிரியாக அனுப்பியிருந்தார்கள். இவர்களும் தெனலியில் உள்ளவர்களைப்போலவே தங்கள் தொழிலுக்காக போராடிக்கொண்டிருக்கிறார்கள். இவைகளெல்லாம் என் மனதைக் கவர்ந்தன. நான் அவர்களுடன் கடிதப்போக்குவரத்து நடத்தினேன். ஆயினும் என்னால் அவர்களுக்குப் புதிதாக எவ்வித அனுகூலமும் செய்ய முடியவில்லை. ஒரு சுதேசி ஸ்தாபனம் இந்த மைகளை விஞ்ஞான பூர்வமாக ஆராயும்; அவைகளுக்கு வழிகாட்டும். நல்ல எதிர்காலம் இருப்பவைகளை ஊக்குவிக்கும். இரசாயனத்தில் நல்ல தொழில் நுணுக்க அறிவுள்ளவர்கள் தேவைப்படக்கூடிய ஒரு நல்ல, வளருந்தொழிலாகும் இது.[38]

### கிராமப் பொருட்காட்சிகள்

கிராமங்கள் உயிருடன் வாழ்வது மட்டும் போதாது; அவை பலத்துடன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சியடையவும் வேண்டுமென்று விரும்பினீர்களானால், அதில் உங்களுக்கு நம்பிக்கையிருந்தால், கிராமக் கண்ணோட்டந்தான் அதற்குரிய ஒரேவழி. இது சரியாக விருந்தால் அப்புறம், நம்முடைய பொருட்காட்சிகளில் நகரங்களின் பகட்டுக்கும் படாடோபத்துக்கும் இடமே இருக்கமுடியாது; நகரங்களுக்குரிய விளையாட்டுக்கள், கேளிக்கைகள் ஆகியவைகளுக்கும் அவசியம் இருக்காது. ஒரு பொருட்காட்சி ஒரு கேளிக்கை ஆகிவிடக்

கூடாது; வருமானம் தேடக்கூடிய தொழிலாகவும் ஆய்விடக் கூடாது; வணிகர்கள் விளம்பரம் செய்வதற்கான சாதனமாகவும் ஒருபோதும் ஆய்விடக்கூடாது. அங்கு எந்த விற்பனையையும் அனுமதிக்கக்கூடாது. கதர், கிராமக் கைத்தொழில் பொருள் களைக்கூட அங்கு விற்கக்கூடாது; ஒரு பொருட்காட்சியென்பது சில விஷயங்களில் அறிவைப் புகட்டக்கூடிய இடமாக இருக்க வேண்டும்; அது கவர்ச்சிகரமாக இருக்கவேண்டும்; ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபடுமாறு கிராமவாசியைத் தூண்டக்கூடிய தாகவும் இருக்கவேண்டும். தற்போதுள்ள கிராம வாழ்க்கையில் இருக்கும் தவறுகளையும் குறைபாடுகளையும் அது எடுத்துணர்த்த வேண்டும்; அவைகளைச் செம்மைப்படுத்துவதற்கான வழிதுறை களையும் காண்பிக்கவேண்டும்; கிராம அபிவிருத்தித் திட்டம் தொடங்கப்பட்டதிலிருந்து ஒரு துறையில் எந்த அளவு சாதிக் கப்பட்டிருக்கிறது என்பதையும் அது விளக்கிச் சுட்டிக்காட்ட இயலவேண்டும்; கிராம வாழ்க்கையை எவ்வாறு கலை அழ குள்ளதாக்கமுடியும் என்பதையும் அது கற்பிக்கவேண்டும்.

**மாதிரி கிராமங்கள்**

மேற்கண்ட நிபந்தனைகளின்படி ஒரு பொருட்காட்சி எப்படி யிருக்கும் என்பதை இப்போது பார்ப்போம்.

1. மாதிரி கிராமங்கள் இரண்டு அமைக்கப்படவேண்டும்— ஒன்று தற்போது இருப்பது மாதிரி, மற்றொன்று அபிவிருத்தி அடைந்த மாதிரி. அபிவிருத்தி அடைந்த கிராமம் முற்றிலும் சுத்தமாக விருக்கும். அதனுடைய வீடுகளும், சாலைகளும், சுற் றுப்புறங்களும், வயல்களும்—எல்லாம் சுத்தமாக விருக்கும். கால்நடைகளின் நிலையும் அபிவிருத்தி அடையவேண்டும். "எப் படிப்பட்ட தொழில்கள் அதிகப்படியான வருமானத்தைக் கொடுக்கும், அவை எப்படி அதிகப்படியான வருமானத்தைக் கொடுக்கும்" என்பதை எடுத்துக் காட்டுவதற்குப் புத்தகங்கள், விளக்க அட்டைகள், படங்கள் ஆகியவை பயன்படுத்தப் பட வேண்டும்.

**காட்சியில் காண்பிக்க வேண்டியவை**

2. பல்வேறு கிராமக் கைத்தொழில்களை எவ்வாறு நடத்த வேண்டும், அவைகளுக்குத் தேவையான கருவிகளை எங்கே வாங்கலாம், அவைகளை எப்படிச் செய்யலாம் என்பனவற்றையெல் லாம் எடுத்துக் காட்டவேண்டும். ஒவ்வொரு தொழிலும் எவ் வாறு செயல்படுகிறது என்பதை நேரடியாகக் காண்பிக்க

வேண்டும். இவைகளுடன் கீழ்க்கண்டவைகளும் இடம் பெற வேண்டும் :

(அ) இலட்சிய கிராம உணவு.

(ஆ) கிராமக் கைத்தொழிலுக்கும் இயந்திரத் தொழிலுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள்.

(இ) கால்நடை வளர்ப்புக்குச் சில முதல் பாடங்கள்.

(ஈ) கலைப்பிரிவு.

(உ) கிராமக் கக்கூசின் மாதிரி.

(ஊ) தொழு உரத்துக்கும் இரசாயன உரத்துக்கும் உள்ள தராதரம்.

(எ) கால்நடைகளின் தோல், எலும்பு முதலியவைகளைப் பயன்படுத்துதல்.

(ஏ) கிராம இசை, கிராம இசைக் கருவிகள், கிராம நாடகங்கள்.

(ஐ) கிராம விளையாட்டுக்கள், கிராம தேகப் பயிற்சி முறைகள்.

(ஒ) ஆதாரக் கல்வி.

(ஓ) கிராம மருந்து.

(ஔ) கிராம மருத்துவ நிலையம்.

### மேலும் விரிவுபடுத்தலாம்

ஆரம்பத்தில் கூறப்பட்ட கொள்கையின் அடிப்படையில், இந்தப் பட்டியலை மேலும் விஸ்தரித்துக்கொண்டு போகலாம். ஒரு முன்மாதிரியாகச் சிலவற்றை நான் கூறியிருக்கிறேன். அதற்குமேல் ஒன்றும் இல்லை என்று எண்ணிவிடவேண்டாம். சர்க்காவையும் கிராமக் கைத்தொழில்களையும்பற்றி நான் எதுவும் கூறவில்லை. ஏனெனில் அவை நிச்சயம் இடம்பெறும் என்ற அடிப்படையிலேயே மற்றவைகளைக் கூறியிருக்கிறேன். அவைகளில்லாமல் பொருட்காட்சி உபயோகமற்றதாய்ப் போய்விடும்.[39]

அத்தியாயம் 21

# கிராமப் போக்குவரத்து

## மாட்டு வண்டிக்கு ஆதரவு

### எந்த சக்தி முக்கியம் ?

பரோடாவைச் சேர்ந்த திரு ஈஷ்வர்பாய் எஸ். அமீன் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறுர். அதில், மிருக சக்தி முக்கியமா, இயந்திர சக்தி முக்கியமா என்பதுபற்றி ஆராய்ந் திருக்கிறுர். இப்போது எடுத்துக்கொண்டுள்ள விஷயத்துக்குப் பொருத்தமான ஒரு பகுதியை அதிலிருந்து எடுத்து அளிக் கிறேன்.

### கால்நடை போட்டியிடலாம்

"வயல்வேலையிலோ அல்லது குறுகிய தூரப் பிரயாணத்துக்கோ இயந்திர சக்தியைக் காட்டிலும் கால்நடைகளுக்கு அதிகச் செலவு ஏற்படுவதில்லை. ஆகை யால் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இயந்திரங்களுடன் கால்நடைகள் போட்டியிட முடியும். ஆனால் கால்நடைகளுக்குப் பதிலாக இயந்திரங்களை விரும்புவதே இன்று மக்களின் மனப்பாங்காக இருக்கிறது.

### மாட்டு வண்டியும் லாரியும்

"உதாரணத்துக்காக மாட்டு வண்டி ஒன்றை எடுத்துக்கொள்வோம். வண்டியின் விலை ரூ. 100; மாடுகளின் விலை ரூ. 200; 16 மணங்கு பாரத்துடன் கரடு முரடான மணற்பாங்கான கிராமப் பாதைகளில் நாள்தோறும் 15 மைல் தூரம் வண்டியை மாடுகள் இழுத்துச் செல்லமுடியும். இதற்கு, காளை களுக்கு ரூ. 0—12—0ம், கட்டை வண்டிக்கு ரூ. 0—6—0ம், வண்டி யின் தேய்மானச் செலவுக்கு ரூ. 0—4—0ம், ஆக மொத்தம் தினந்தோறும் ரூ. 1—6—0 செலவாகும். ஒரு டன் பாரத்தை ஏற் றிச் செல்லக்கூடிய மோட்டார் லாரிக்கு 15 மைல் தூரம் செல்லக் குறைந்தது ஒரு காலன் பெட்ரோல் பிடிக்கும். அத்துடன் லூப்ரிகேடிங் (மசகாகப் பயன் படும்) எண்ணெய் வேண்டும். இவை தவிர, நிறைய மராமத்து, நடைமுறைச் செலவுகள் இருக்கின்றன. உயர்ந்த சம்பளத்தில் ஒரு கார் டிரைவரை நியமிக்க வேண்டியதும் இருக்கிறது. இந்த லாரி 15 மைல் தூரம் பாரம் ஏற்றிச்செல்ல, லூப்ரிகேடிங் எண்ணெய் உள்படப் பெட்ரோல் செலவு ரூ. 1—12—0 ஆகும். 8 மணி நேரம் கொண்ட ஒரு நாளைக்கு ரூ. 6—0—0 நடைமுறைச் செல வாகும் என்ற கணக்கில், அதற்கு ரூ. 0—12—0ம் காரோட்டி, கிளீனர், மூட்டையை ஏற்றி இறக்குபவர் ஆகியோருக்கு ரூ. 0—8—0ம் ஆகும். ஆகையால் மொத்தச் செலவு ரூ. 2—12—0 ஆகி றது. அதாவது 16 வங்காள மணங்குகொண்ட ஒரு வண்டி பாரத்துக்கு

ரூ. 1—6—0 ஆகிறது. கிராமத்திலிருந்து அரை மைல் தூரத்தில் உள்ள வயலுக்கு, ஒரு மாட்டு வண்டி, ஒரு நாளில் 7 இலிருந்து 8 வண்டி பார உரம் ஏற்றிச் செல்லமுடியும். இதற்கு வண்டிச் செலவு ரூ. 1—6—0 ஆகும். வண்டியில் குப்பையை அள்ளிப்போட்டு, அதைக் கீழே தட்டிவிடுப வருக்கு கூலி ரூ. 0—6—0 ஆகும். இதே வேலையை ஒரு மோட்டார் லாரி செய்வதாக இருந்தால். அதற்கு இதைக்காட்டிலும் குறைந்த செலவு ஆகாது. நல்ல தார் அல்லது சிமெண்ட் ரஸ்தாக்களில் ஒரே பயணமாக நீண்ட தூரம் செல்வதற்கு மாட்டு வண்டியைக் காட்டிலும் லாரி அனுகூலமானதாய் இருக்கக்கூடும். இப்படிப்பட்ட பயணங்களில் மாட்டு வண்டி மிக மிக மெது வாகவே செல்லக்கூடியதாகவும், சிக்கனமில்லாததாகவும் தோன்றுகிறது. மேலும், கால்நடைகளை, ஒரே சமயத்தில் நீண்டதூரப் பிரயாணம் செய்வதற்கு உபயோகப்படுத்தக்கூடாது. இதனால் அவைகளுடைய பலமும் சக்தியும் மிகவும் பாதிக்கப்படும். எனினும், ரயில்வே நிலையங்களிலிருந்து உள்பகுதிகளுக்கு நீண்டதூரம் செல்வதில், லாரிகளுடன் போட்டிபோட்டுக்கொண்டு நாட்டு வண் டிகள் இரவும் பகலுமாகச் செல்வதை நாம் கண்டிருக்கிறோம். இவ்விதப் பிர யாணங்களில் உபயோகப்படுத்தப்படும் மாடுகளின் நிலை மிகவும் வருந்தத்தக்க தாய் இருக்கிறது. ஏனெனில், மாட்டுவண்டிக்காரருக்குக் கிடைக்கும் குறைந்த வருமானத்திற்கு ஏற்றபடி அவர் மாடுகளுக்காகச் செலவிடும் தொகை சொற் பமே. ஆகவே ஆட்களோ சரக்கோ ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத் துக்கு வேகமாகச் செல்வது முக்கியம் என்று கருதப்படும்போது, மாட்டு வண்டி களுக்கு உள்ள ஒரே பிரதிகூலம் அவை மெதுவாகச் செல்கின்றன என்பது தான். ஆயினும் கிராமவாசிகளைப் பொறுத்தவரை, ஓய்வான நேரம் எதுவும் அவர்களுக்கு வருமானம் அளிக்கக்கூடியதாய் இல்லை. ஆகையால், மோட்டார் களில் செல்வதனால் நேரம் மீதப்படுகிறதென்பது அவர்களுக்கு முக்கியமான தல்ல. ஆகையால், குறுகிய தூரப்பிரயாணங்களுக்குக் கிராமவாசிகள் கால் நடையாகவே போகவேண்டும். நீண்டதூரப் பிரயாணங்களுக்கு மாட்டு வண்டி களை உபயோகிக்கவேண்டும். ஒரு விவசாயிக்குச் சொந்த வண்டியிருந்து அவர் அதில் பிரயாணம் செய்வாரானால், ரொக்கமாக அவர் செலவழிக்கவேண் டியது எதுவும் இல்லை. தனது சொந்த வயலில் விளைந்த வைக்கோலையே வண் டியின் இயந்திர சக்திக்காக, அதாவது, மாடுகளின் தீனிக்காக உபயோகப் படுத்திக்கொள்ளலாம். உண்மையில் புல்லையும் மாட்டுக்கு வைக்கும் தான் யங்களையும் பெட்ரோலாக விவசாயி கருதவேண்டும். மாட்டுவண்டியைத் தனது மோட்டார் லாரியாகவும், புல்லை வண்டி ஓட்டும் சக்தியாக மாற்றக் கூடிய இயந்திரமாக மாடுகளையும் விவசாயி கருதவேண்டும். இயந்திரத் திற்குப் புல் பயன்படாதென்றால், மிக மிக முக்கியத்துவம் வாய்ந்த உரத் தையும் அதனால் நமக்கு அளிக்கமுடியாது. கிராமவாசிகளுக்கு எப்படியும் மாடு தேவையாக இருக்கிறது. எவ்வகையிலும் அவனுக்குப் புல் கிடைக் கிறது. ஆகவே அவனுக்கு ஒரு வண்டியிருந்தால், கிராமத் தச்சனுக்கும், கொல்லனுக்கும் வேலை அளித்தவனாகிறான். அவனிடம் ஒரு பசு இருந் தாலோ, தாவர எண்ணெயைச் சுத்தமான கட்டிவெண்ணெயாகவோ, நெய் யாகவோ மாற்றக்கூடிய இயந்திரம் அவனிடம் இருப்பதாகவே பொருள். அதுமட்டுமல்ல, கானிகளை உற்பத்திசெய்து கொடுக்கும் இயந்திரமும் ஆகும் இந்தப் பசு. இவ்வாறு இரண்டுவகைக் காரியங்களை அது ஒரே சமயத்தில் நிறைவேற்றி வைக்கிறது.''

கிராமங்களில் இப்போது மோட்டார் லாரி படை யெடுத் திருக்கிறது. அது வெற்றி அடையலாம் அல்லது அடையாமற் போகலாம். கெட்டிக்கார ஊழியர்கள் லாரியினுல் ஏற்படும் நன்மை தீமைகளேப் பகுத்துப் பார்க்க வேண்டும். கிராமவாசி களுக்குத் திட்டவட்டமான வழிகாட்ட வேண்டும். இது விவேக மான செயலாக விருக்கும். ஸ்ரீ. ஈஷ்வர்பாயின் குறிப்பு—அவர் காட்டிய வழியில்—கிராம ஊழியர்கள் எல்லோரும் சிந்திக்கு மாறு தூண்டும் என்று நம்புகிறேன்.

### வெற்றி யாருக்கு? மோட்டாருக்கா, வண்டிக்கா?

கிராமப் பிரசாரத்துக்கு மோட்டார் வான் சிறந்ததா? அல்லது மாட்டு வண்டி சிறந்ததா? இதன் தார தாம்மியங்களே "கிராம உத்யோக் பத்திரிகை"—அதன் ஆகஸ்ட் (1939) இதழில் - பரிசீலனே செய்திருக்கிறது. இதில் முக்கியமான பகு தியை மட்டும் நான் கீழே தருகிறேன்:

### மோட்டார் வான் நல்லதா ?

"கிராம சேவைக்காக ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கச் சில ஜில்லா போர்டுகளும், அவைகளேப் போன்ற ஸ்தாபனங்களும் விரும்புகின் றன. 'கிராமங்களில் பிரசாரம் நடத்துவதற்கு மோட்டார் 'வான்'கள் வாங்குவது நல்லதா?' என்று இவர்கள் எங்களேக் கேட்டிருக்கிருர்கள். இந்த ஸ்தாபனங்கள், தாங்கள் கிராமங்களுக்குச் செய்யவேண்டிய கடமையை உணர்ந்துள்ளன. கிராமங்களுக்கும் நகரங்களுக்கும், படித்தவர்களுக்கும் படி யாதவர்களுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வைச் சமப்படுத்த ஆரம்பித்துள்ளன. இது மகிழ்ச்சி அளிக்கக்கூடிய ஒரு அறிகுறியாகும். மோட்டார் வான்கள் மூலம் ஒரே இரவில் பல கிராமங்களுக்குச் செல்லலாம். ஆகையால் மோட் டார் வான்கள் வாங்கி விரைவாகப் பிரசாரம் செய்வது நல்லதா என்பதே இப்போதைய கேள்வி.

### பணம் எங்கே செலவாகிறது?

"நாம் பணத்தைச் செலவிடும்போதெல்லாம், அதுவும் குறிப்பாகக் கிராமவாசிகள் நன்மைக்காகப் பணத்தைச் செலவிடும்போதெல்லாம், அந்தப் பணம் கிராமத்துக்கே செல்கிறதா என்பதைக் கவனிப்பது அவசியம். ஜில்லா போர்டுகளுக்கும், ஸ்தலஸ்தாபனங்களுக்கும் பொதுமக்களிடமிருந்தே பணம் கிடைக்கிறது. ஆகவே அவைகளின் கொள்முதல் மக்களிடையே பணப் புழக்கத்தை ஏற்படுத்தும் முறையிலேயே இருக்கவேண்டும். அதற்குப் பதிலாகக் கிராமவாசிகளிடமிருந்து வரியாகப் பெறும் பணம் அந்தப் பகுதிக்கு வெளியே போய்விடுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். மக்கள் மேலும் வறுமை அடைவதில்தான் அது முடியும். இதனுல் ஜில்லா போர்டுகள், ஸ்தல ஸ்தாபனங்கள் ஆகியவைகளின் பண வருமானம் மேலும் குறையும்.

## அபத்தமான செயல்

"ஒரு ஸ்தலஸ்தாபனமானது கிராம வேலைகளுக்காக ஒரு சில ஆயிரம் ரூபாய்களுக்குமேல் ஒதுக்குவதில்லை. ஆகவே அது ஒரே ஒரு மோட்டார் 'வான்' வாங்கவேண்டுமென்று முடிவுசெய்தால்கூட அதன் கிரயமாகச் சுமார் 5,000 ரூபாய் அந்தப் பகுதியிலிருந்து வெளியேறிவிடுகிறது. அதுமட்டுமல்ல. டயர்கள் வாங்கவும் மற்ற சிறு சிறு சாமான்கள் வாங்கவும் அவ்வப்போது பணச்செலவு ஏற்படும். அன்றுடம் பெட்ரோல் செலவு வேறு இருக்கிறது. இவைகள் எல்லாம் இறக்குமதியாகும் பொருள்களே. ஆகையால் பணம் வெளியே போகவேண்டியதிருக்கும். ஆனல் இப்பணத்தை ஸ்தலஸ்தாபனங்கள் செலவிடும் முக்கிய நோக்கமோ கிராம நலன் ஆகும். விவசாயம், சுகாதாரம், மதுவிலக்கு, குழந்தைகள் நலன் போன்ற விஷயங்களில் அவ்வப்போது பிரசங்கங்கள் கேட்கவும் கிராமபோன் அல்லது வானெலியைக் கேட்கவும் இந்தப் பெரிய செலவைக் கிராமவாசிகள் ஏற்கவேண்டியிருக்கிறது—அதுவும், அவனும் அவனுடைய குடும்பத்தினரும் மாதம் 2 ரூபாயில் வாழ்க்கை நடத்தவேண்டியிருக்கையில், அதிக ஊதியம் தரக்கூடிய வேலையே கிராமவாசிக்கு முக்கியம் தேவை. இறக்குமதியாகும் சாமான்களை வாங்குவதன் மூலம் நாம் கிராமவாசிக்கு ஏற்கனவே உள்ள வேலையையும் குறைக்கிறேம். அதற்கு ஈடாகப் பிரசங்கங்கள், திரைப்படக் காட்சிகள், டப்பா சங்கீதம் ஆகியவைகளை அளிக்கிறேம். அதுவும் அவன் பணத்தை வாங்கியே அவனுக்கு செய்கிறேம். இதைச் செய்வதில், ஏதோ அவனுடைய நன்மைக்காக நாம் பாடுபட்டு விட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்கிறேம். இதைக்காட்டிலும் அபத்தமான காரியம் இருக்கமுடியுமா?

## வேகமான வேலையல்ல

"மோட்டார் வானுக்குப் பதிலாக எல்லோரும் வெறுக்கும் அந்த மாட்டு வண்டியை உபயோகப்படுத்துகிறேம் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது என்ன நிலைமை ஏற்படும் என்பதை ஒப்பிட்டுப் பாருங்கள். அது மோட்டார் வானைப்போல் அவ்வளவு அதிர்ச்சியை ஏற்படுத்தாது; கிராமங்களுக்காக ஏதோ அதிசயமான காரியம் செய்யப்படுவதாக, உலகத்தின் முன்னர் பறைசாற்றுது. ஆனல் வெறும் நடிப்பும் கொட்டுமேளம் அடிப்பதும் மட்டும் நம்முடைய நோக்கமாக இல்லாமல் உண்மையான, அமைதியான நிருமாணவேலையை நாம் விரும்புவதானல், மாட்டுவண்டியே அதிக நன்மை அளிக்கும் என்பது எங்கள் கருத்து. மூலைமுடுக்கில் உள்ள கிராமங்களுக்கெல்லாம் மோட்டார் லாரி செல்லமுடியாது. ஆனல் மாட்டு வண்டி செல்ல முடியும். ஒரு 'வானு'டைய கிரயத்தில் ஒரு சிறு பகுதியே ஒரு மாட்டு வண்டி வாங்குவதற்கு ஆகிறது. ஆகையால் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆங்காங்கு பல கிராமங்களுக்கு ஒன்று சேர்த்து வேலைசெய்வதற்காகப் பல மாட்டுவண்டிகள் வாங்க முடியும். அந்த மாட்டு வண்டிகளில் நாம் போடும் பணம் கிராமத் தச்சன், கொல்லன், வண்டி ஓட்டுபவன் ஆகியவர்களுக்கே போகிறது. அதில் ஒரு தம்பிடிகூட அந்த ஜில்லாவைவிட்டு வெளியே செல்ல அவசியம் இல்லை. விஞ்ஞான முறையிலான விட்டங்கள், அச்சுக்கள், நல்ல முறையில் அமைக்கப்பட்ட எஃகு பேரிங்குகள், குடம், ஆரக்கால் முதலியவைகளுடன் வண்டி செய்தால், அது மற்றவர்களெல்லாம் பார்த்துப் பின்பற்றக் கூடிய பொருளாக அமையும். இதற்கு வேண்டிய

சாமான்கள் போடுவதற்காகும் செலவு, கிராமச் செல்வத்தை வெளியே கொண்டுபோவதற்குப் பதிலாக அங்கே கொண்டுவந்து சேர்க்கும். வேகமாகச் செய்யவேண்டிய வேலையாக இருந்தால் மோட்டார் அவசியந்தான். ஆனால் கிராம நலத்தைப்பற்றிக் கிராமங்களில் செய்யப்படும் பிரசாரத்துக்கு, இது அவசியம் என்று கூறமுடியாது. அதற்கு மாறாக மெதுவான, நிலையான முறைகளே அதிகப் பயன் அளிக்கும். ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்குப் பறந்து சென்று கொண்டிருக்காமல், ஒவ்வொரு கிராமத்திலும் சிறிது நேரம் இருந்து செல்வது அனுகூலமாகவும் இருக்கும். இவ்வாறு செல்வதன் மூலந்தான் ஜனங்களுடைய வாழ்க்கையையும் அவர்களுடைய பிரச்னைகளையும் அறிந்துகொள்ளமுடியும்; அந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வேலையும் பலனுள்ளதாய் இருக்கும்.

### பொருத்தமில்லை

"ஆகையால் கிராம சேவைக்கும் மோட்டார் 'வான்'களுக்கும் பொருத்தம் இல்லையென்றே தோன்றுகிறது. வேண்டியதெல்லாம் நிலையான ஆக்கமுயற்சிதான். மின்னல் வேகமோ அல்லது வெத்துவேட்டோ அல்ல. ஆகையால் எங்களுடைய ஆலோசனை இதுதான். கிராமங்களில் உண்மையிலேயே அக்கறையுள்ள ஸ்தலஸ்தாபனங்களும் பொதுஸ்தாபனங்களும் கிராமத்தில் செய்யப்படும் பொருள்களைக் கொண்டே தங்கள் கிராம சேவையைத் தொடங்கவேண்டும். கிராமங்களில் நிலையான வறுமையை உண்டாக்கிக் கொண்டிருக்கும் சூழ்நிலைகளை அறிந்து, அவைகளை ஒவ்வொன்றாக நீக்குவதில் ஒரு மனிதன் கவனம் செலுத்தவேண்டும். கிராம வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலுமே நன்கு சிந்தித்து முடிவு செய்யப்பட்ட தீவிர முயற்சி அவசியம். ஆகையால் திடீரென்று ஒரே நாளில் கிராம முன்னேற்றத்தை ஏற்படுத்த முயலும் வழிகளில் பணத்தை இறைப்பது வீண் விரயமே."

### வேலியே பயிரை...?

நாட்டு வண்டிக்கு ஆதரவாக உள்ள இந்த அம்சங்கள் வெளிப்படையானவை. ஆகையால் கிராம நலனில் அக்கறையுள்ளவர்கள் இவைகளை நன்றாக மனதிற் கொள்வார்கள் என்று நம்புகிறேன். கிராம நலனுக்காக அமைக்கப்பட்ட ஒரு ஸ்தாபனத்தின் மூலமே கிராமப் பொருளாதாரத்தை அழிப்பது ஒரு கொடுமையான செயலாகும்.[2]

## மாடுகள் – போக்குவரத்து சாதனங்கள்

### போக்குவரத்துக்கு மாடுகள்

நம்முடைய கிராமங்களிலெல்லாம் மாடுகளே போக்குவரத்துச் சாதனங்களாக இருக்கின்றன. சிம்லாவைப் போன்ற ஒரு நகரில் கூட அவை இந்த ஸ்தானத்தை இழக்கவில்லை. அங்கு ரயிலும் காரும் செல்கின்றன. ஆனால் மலைப்பாங்கான அந்தச் சாலையில்

பெரிய பாரத்தை இழுத்துக் கொண்டு மாடுகள் ஏறி இறங்குவதை நான் கண்டேன். நமது வாழ்க்கையின் ஒரு அங்கமாகவும் நாகரிகத்தின் ஒரு பகுதியாகவும் இப் போக்குவரத்துச் சாதனம் விளங்குகிறது என்று கூறலாம். நமது கைத்தொழில் நாகரிகம் நிலைக்க வேண்டுமானால், மாடுகள் இருந்தாக வேண்டும்.

### வளர்ப்பில் கவனம்

யாருடைய மாடுகள் நன்றாக இருக்கின்றனவென்பதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். அவர் எவ்வாறு அவைகளை அவ்வளவு நல்ல முறையில் வைத்திருக்கிறார் என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும். யாருடைய பசு அதிகமாகப் பால் தருகிறது என்பதை நீங்கள் காணவேண்டும். அவர் எவ்வாறு அவைகளை வளர்க்கிறார், அவைகளுக்குத் தீனி அளிக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். உங்கள் கிராமத்தில் உள்ள சிறந்த காளை மாட்டுக்கும் பசுவுக்கும் நீங்கள் ஏதாவது பரிசு வழங்கலாம். முன் மாதிரியான கால் நடைகள் இல்லாமல் முன் மாதிரியான கிராமத்தை நாம் அமைக்க முடியாது.[3]

அத்தியாயம் 22

# நாணயம், பரிமாற்றம், வரி

### உழைப்புத்தான் பணம்

எனது முறையில் உழைப்புத்தான் செலாவணியாகும் நாணயமே தவிர, உலோகம் அல்ல. யார் தன்னுடைய உழைப்பைப் பயன்படுத்த முடியுமோ அவனிடம் அந்த நாணயம் இருக்கும்; சொத்து இருக்கும்; அவன் தன்னுடைய உழைப்பைத் துணியாக்கிக் கொள்வான்; உழைப்பைத் தான்யமாக்கிக் கொள்வான். அவனுக்கு மெழுகு எண்ணெய் வேண்டியிருக்கிறது; அதை அவன் உற்பத்தி செய்ய முடியாது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அந்த எண்ணெயை வாங்குவதற்காக, தன்னிடம் உபரியாக உள்ள தான்யத்தைப் பயன்படுத்திக் கொள்வான். சுதந்திரமான, நியாயமான, சமத்துவமான அடிப்படையில் உழைப்பைப் பரிமாறிக் கொள்வதே இது. ஆகையால் இது கொள்ளை அல்ல. இது பண்டமாற்று இருந்த நாகரிகமற்ற காலத்திற்குத் திரும்பிச் செல்வதாகும் என்று கூறி நீங்கள் இதை ஆட்சேபிக்கலாம். ஆனல், சர்வதேச வியாபாரம் எல்லாமே பண்டமாற்றை அடிப்படையாகக் கொண்டதுதானே?[1]

அப்போது இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கிராமமும் கிட்டத்தட்ட சுயதேவைப் பூர்த்தி உள்ளதாகவும் இருக்கும். சில அவசியமான பொருள்கள் மற்றக் கிராமங்களில் உற்பத்தியாகாமல் இருக்கலாம். இப்படிப்பட்ட பொருள்களை மட்டும் அந்தக் கிராமங்களுடன் பரிமாற்றம் செய்து கொள்ளலாம்.[2]

### நூல் செலாவணி மூலம் கதர்

நகரங்கள், கிராமங்கள் ஆகிய எல்லா இடங்களிலும் கதர் பரவ வேண்டுமென்ருல், நூலுக்காகக் கதரைப் பரிமாற்றம் செய்து கொள்ளலாம் என்ற ஏற்பாடு இருக்க வேண்டும். இதுதான் எனது அனுபவம். காலம் செல்லச் செல்ல, நூல் செலாவணி மூலம் கதர் கிடைக்க வேண்டும் என்பதை மக்களே வற்புறுத்த ஆரம்பித்து விடுவார்கள் என்று நம்புகிறேன்.[3]

### உழைப்பும் பணமும்

உண்மையில் உழைப்பு என்பது உலோகத்தால் ஆன நாணயத்தைப் போலவே பணம்தான். ஏதாவது ஒரு ஸ்தாபனத்தில் யாராவது ஒருவர் பணத்தைப் போடுகிருர்கள் என்ருல், நீங்கள் உழைப்பைப் போடுகிறீர்கள். பணம் இல்லாமல் எப்படி உங்களுடைய உழைப்பு பயனற்றதாக இருக்குமோ, அதைப் போன்றே உழைப்பு இல்லாவிட்டால் உலகத்தில் உள்ள பணம் உபயோகமற்றதாகவே இருக்கும்.[4]

### சுயதேவைப் பூர்த்தி : பொருள்

சுயதேவைப் பூர்த்தி என்பது குறுகிய நோக்கம் அல்ல. சுய தேவைப் பூர்த்தி என்ருல், ஒரு கிராமம், தனக்கு வேண்டிய எல்லாவற்றையும் பூரணமாகத் தன்னிடமே கொண்டிருக்க வேண்டும் என்பதல்ல. நமக்குத் தேவையான பொருள்களையெல்லாம் நாமே உற்பத்தி செய்து கொள்வதென்பது எந்தச் சூழ்நிலையிலுமே முடியாத காரியமாகும். ஆகவே நம்முடைய இலட்சியம் பூரண சுயதேவைப் பூர்த்தி என்ருலுங்கூட, நம்முடைய கிராமத்தில் உற்பத்தி செய்ய முடியாததை வெளியே இருந்து வாங்கிக் கொள்ளவேண்டும். நம்மால் எவ்வளவு உற்பத்தி செய்ய முடியுமோ அவ்வளவு உற்பத்தி செய்ய வேண்டும். அப்போது தான், நம்மால் உற்பத்தி செய்ய முடியாததை நாம் பெற முடியும்.[5]

### நூல் பாங்க்

நாணய சாலையிலிருந்து தங்கமும் வெள்ளியும் நாணயமாக வெளி வருகின்றன. அதைப் போலவே, நூல் பாங்கிலிருந்து கதர் மட்டுமே உருவாகி வர வேண்டும்.[6]

### நூற்பு: ஒரு செலாவணிப் பொருள்

நான் பிறந்த பகுதியில் சிப்பிகளும் விதையில்லாத, காய்ந்த வாதுமைக் கொட்டைகளும் நாணயங்களாகப் பயன்படுத்தப் பட்டன. இதை மக்களும் ஏற்றுக்கொண்டார்கள்; அரசாங்கக் கருவூலங்களும் ஒப்புக்கொண்டன. அவைகளுக்குத் தன் சொந்த மதிப்பு என்பது இல்லை. மக்களுடைய கொடிய வறுமையின் சின்னங்கள் அவை. மிகக் குறைந்த மதிப்புள்ள உலோக நாணயத்தைக்கூட அவர்களால் பயன்படுத்த முடியாத நிலை. ஐந்து சிப்பிகளைக் கொண்டு போனுல் ஒரு சிறிது காய்கறியோ அல்லது ஒரு ஊசியோ வாங்கலாம். நான் இப்போது செலாவணிக்கு

ஒரு பொருளை யோசனை கூறியிருக்கிறேன். இந்தப் பொருளானது வெறும் அடையாளச் சின்னமாக மட்டும் இராது. அத்துடன் அதற்குத் தன் சொந்த மதிப்பு இருக்கும். அதுதான் அதனுடைய கடை மதிப்பாகவும் இருக்கும். இந்த முறையிலே அது ஒரு இலட்சிய அளவையாகவும் இருக்கும். ஒரு பாவு நீளமுள்ள ஒற்றை நூலைக் குறைந்த பட்ச அளவையாக வைத்துக் கொள்ளலாம் என்று தற்போதைக்குச் சோதனை முறையாக ஒரு யோசனை கூறி யிருக்கிறேன். குறிப்பாக நூல் நூற்பவர்கள் விஷயத்திலும், பொதுவாகக் கதர் அபிமானிகள் விஷயத்திலும் இதைப் பயன்படுத்தலாம். ஒரு குறிப்பிட்ட அளவு நூலைப் பெற்றுக்கொண்டு, நூற்போர்களுக்கு அவர்களுடைய அன்றாடத் தேவைகளை யெல்லாம் விநியோகம் செய்யலாம். அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தின் கூட்டுறவுடனும், முடிவாக, இதற்கு வேண்டிய ஒத்துழைப்பு அளிப்பவர்களுடைய கூட்டுறவுடனும் நடத்தலாம். அகில இந்திய நூல் நூற்போர் சங்கம் இதற்கான கடையை நடத்தி வரலாம். என்னுடைய கருத்தின்படி, இதைப் பரவல் மயமாக்கினால் இம்முறையை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியும். இது அதனுடைய குறையல்ல, நிறையேயாகும்.[7]

### உழைப்பால் வரி

உழைப்பாலேயே வரியைச் செலுத்துவதென்பது ஒரு தேசத்துக்குப் புத்துயிர் அளிக்கிறது. எந்த ஒரு தேசத்தில் மக்கள் தாமாக முன்வந்து சமுதாயத்தின் சேவைக்காகத் தங்களுடைய உழைப்பை அளிக்கிறார்களோ அங்கெல்லாம் பணச் செலாவணி யென்பது அவசியமற்றதாகிறது. வரியை வசூலித்து, கணக்கு வைத்துக் கொள்வதற்கான உழைப்பு வேண்டியதில்லை. ஆனால் அதே சமயம் அதற்குச் சமமான நல்ல பலன் கிடைக்கிறது.[8]

## அத்தியாயம் 23

# கிராமத் துப்புரவு

### கிராமங்களில் துப்புரவின்மை

அறிவு வேறு, உழைப்பு வேருக இப்போது பிரிக்கப்படுகிறது. கிராமங்களைக் கொடுமையாக அலட்சியம் செய்வதில் இது முடிந்திருக்கிறது; நாடு முழுவதிலும் அழகான குக்கிராமங்கள் இருப்பதற்குப் பதிலாக, இப்போது குப்பை மேடுகள் தான் காட்சி தருகின்றன. பல கிராமங்களுக்குள் நுழையும் பாதையானது மகிழ்ச்சி தருவதாய் இருப்பதில்லை. பெரும்பாலான சந்தர்ப்பங்களில் ஒருவர் கண்ணை மூடிக் கொள்ளவோ, மூக்கைப் பிடித்துக்கொள்ளவோ வேண்டியதிருக்கும். சுற்றியிருக்கும் குப்பை கூளமும் நாற்றமும் அப்படி யிருக்கின்றன. பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் கிராமங்களிலிருந்து வந்தவர்களாகத்தான் இருக்கவேண்டும். அவ்வாறு அவர்கள் கிராமங்களிலிருந்து வந்தவர்களாய் இருந்தால், அவர்கள் தம்முடைய கிராமங்களை ஒவ்வொரு வகையிலும் சுத்தத்துக்கு முன் மாதிரியாகச் செய்ய வேண்டும். ஆனல், கிராமவாசிகளுடைய அன்ருட வாழ்வில் ஒன்றுபட்டு உழைப்பதை அவர்கள் ஒருபோதும் தங்கள் கடமையாகக் கொண்டதில்லை. தேசிய அல்லது சமூகத் துப்புரவு உணர்ச்சி நம்மிடையே ஒரு சிறப்பாக இல்லை. நாம் குளிப்பதாகக் கூறிக்கொள்ளலாம். ஆனல் குளம் அல்லது கிணறு அல்லது ஆற்றின் பக்கத்தில் மலஜலம் கழித்து அதை அசுத்தப்படுத்த நாம் தயங்குவதில்லை. அது ஒரு பெரிய பாவம் என்று நான் கருதுகிறேன். நம்முடைய கிராமங்களும், புனிதமான நதிகளின் புனிதமான துறைகளும் இப்போது இவ்வளவு அலங்கோலமான நிலையில் இருப்பதற்கு இதுவே காரணம் என்று நான் நம்புகிறேன். துப்புரவின்மையால் ஏற்படக் கூடிய வியாதிகளுக்கும் இதுவே காரணம் என்று எண்ணுகிறேன்.[1]

### துப்புரவில் தொண்டர்கள்

கிராமங்களில் குளங்களையும் கிணறுகளையும் சுத்தப்படுத்த வேண்டும். அவைகளுக்கு அருகில் உள்ள குப்பை கூளங்களை அப்புறப்படுத்திவிட்டு, அவைகளைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். சுகாதாரம் சம்பந்தமாகக் கிராமங்களில் செய்ய

வேண்டிய வேலைகள் இவை. தொண்டர்களே இந்த வேலையைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். சம்பளம் கொடுத்து நியமிக்கப்பட்டுள்ள தோட்டிகளைப் போலத் தினந்தோறும் செய்துவர வேண்டும்; இதில் கிராமவாசிகளும் சேர்ந்து கொள்ள வேண்டும் என்பதையும், முடிவில் அவர்களே இந்த வேலைகளைச் செய்து வரவேண்டும் என்பதையும் எடுத்துக் கூறவேண்டும்; இவ்வாறு செய்வதானால், விரைவிலோ அல்லது சிறிது காலங் கழித்தோ கிராமவாசிகள் தங்களுடன் ஒத்துழைப்பதைக் காண்பார்கள்.

## குப்பைகளைப் பிரித்தல்

தெருக்களிலும் சந்து பொந்துகளிலும் உள்ள குப்பை கூளங்களைக் கூட்டிச் சுத்தப்படுத்த வேண்டும்; இந்தக் குப்பைகளை வகை வகையாகப் பிரிக்க வேண்டும்; இவைகளில் உரமாகக் கூடியவை இருக்கின்றன. அப்படியே புதைத்துவிடக் கூடியவை இருக்கின்றன. உடனடியாகச் செல்வமாகக் கூடியவை இருக்கின்றன. குப்பைகளிலிருந்து பொறுக்கப்படும் ஒவ்வொரு எலும்பிலிருந்தும் உபயோகமான பொருள்களை உற்பத்தி செய்யலாம்; அல்லது, நல்ல சத்துள்ள உரத்தைத் தயார் செய்யலாம். கந்தைகளையும் கழிவுக் காகிதங்களையும் கொண்டு நல்ல காகிதம் உற்பத்தி செய்யலாம். மலஜலமோ கிராமங்களுக்குத் தங்கமான உரமாகும்.

## எல்லாவற்றுக்கும் ஒரே குளம்

குளிப்பது, வேஷ்டி துவைப்பது, குடிக்கவும் சமையல் செய்யவும் வேண்டிய நீர் எடுப்பது போன்ற எல்லாக் காரியங்களுக்குமே கிராமங்களில் ஒரே குளம் உபயோகப்படுத்தப்படுகிறது. அநேக கிராமங்களில் கால்நடைகளும் குளங்களைப் பயன்படுத்திக் கொள்கின்றன. எருமைகள் அவைகளில் சுகமாகப் புரண்டு கொண்டிருப்பதை நீங்கள் காணலாம். இவ்வளவு பாவமான முறையில் கிராமக் குளங்களைத் துஷ்பிரயோகம் செய்துங்கூடத் தொற்று நோய்களால் கிராமங்கள் அழியவில்லையே என்பதுதான் ஆச்சரியம். இவ்வாறு, கிராமங்களில் சுத்தமான தண்ணீர் வசதி செய்து கொள்ளாமல் இருப்பது பல நோய்களுக்குக் காரணமாகிறது. ஒருவர் தவறாது எல்லா வைத்திய நிபுணர்களுமே இதைக் கூறியிருக்கிறார்கள்.

## செலவில்லாத சேவை

ஆகையால் இது ஒரு மகத்தான, ஆர்வம் ஊட்டக்கூடிய, அறிவூட்டக் கூடிய சேவை என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்

வார்கள். இந்தச் சேவையால், இந்தியாவில் இன்று அவதி யுறும் மக்கள் அளவில்லாத அனுகூலம் அடைவார்கள். இந்தப் பிரச்னையை எவ்வாறு தீர்ப்பது என்பதற்கான வழிகளை நான் ஏற்கனவே விளக்கி யிருக்கிறேன். பென்சிலையும் பேனாவையும் போலத் துடைப்பக் கட்டையையும் மண் வெட்டியையும் கௌரவ மானவையாகக் கருதுபவர்களும் அவ்வேலையைப் பழக்கமாகச் செய்யக் கூடியவர்களும் வேண்டும். இப்படிப்பட்ட ஊழியர்கள் மட்டும் கிடைத்தால், செலவே இல்லாமல் இச்சேவையைச் செய்துவிடலாம். நமக்குள்ள செலவெல்லாம் துடைப்பக்கட்டை, ஒரு வாளி, மண்வெட்டி, கோடாலி ஆகியவை வாங்குவதற்கான செலவுதான். கிருமி நாசினி மருந்துகளும் தேவையாக இருக்கும். உலர்ந்த சாம்பல்கள் நல்ல கிருமி நாசினிகளே. மருந்துக்கடைக் காரர் விற்கும் கிருமி நாசினிகளைப் போன்ற சத்து உள்ளவை களே அவைகளும் எனக் கருதுகிறேன். எனினும் மேலே கூறி யுள்ள சந்தர்ப்பங்களில் குறைந்த விலையில் உபயோகிக்கக் கூடிய சிறந்த கிருமி நாசினி எதுவென்பதை ரசாயன நிபுணர்களே முடிவு செய்யட்டும்.[2]

அத்தியாயம் 24

# கிராமத்தில் உடல்நலம், சுகாதாரம்

### நோய்க்குக் காரணம்

நன்ருக ஒழுங்கு படுத்தப்பட்ட ஒரு சமுதாயத்தில், குடி மக்கள் உடல்நலம், சுகாதாரம் பற்றிய விதிமுறைகளை அறிந்திருப்பார்கள், அனுஷ்டிப்பார்கள். மனிதவர்க்கம் பல நோய்களுக்குச் சந்ததி சந்ததியாக உள்ளாகி வருகிறது. உடல் நலம். சுகாதாரம் சம்பந்தமான விதிமுறைகளை மக்கள் அறியாமல் இருப்பது அல்லது அறிந்திருந்து அலட்சியம் செய்வதுதான் இந்த நோய்களில் பெரும்பாலானவை வருவதற்குக் காரணம். இது எந்தவிதமான ஐயத்திற்கும் இடமின்றி மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. நம் மக்கள் மத்தியில் மரண விகிதம் மிக அதிகமாக இருக்கிறது. நம் மத்தியில் உள்ள கொடிய வறுமையே இதற்குப் பெரும்பாலும் காரணம். ஆயினும் உடல்நலம், சுகாதாரம் ஆகியவைகளைப்பற்றி மக்களுக்குச் சரியானமுறையில் போதித்தால், இந்த மரண விகிதத்தை நாம் தணிக்கலாம்.

### மனமும் உடலும்

நல்ல உடல் உள்ளவர்களுக்கு மனமும் நல்லதாகவே இருக்கும் என்பது ஒரு பழமொழி. இது மனித வர்க்கத்தின் முதல் நியதியாகும். இது பிறர் விளக்கத்திற்கு அவசியமில்லாது, தானே புலனுகும் சத்தியம். மனதிற்கும் உடலுக்கும் இடையே ஒரு பிரிக்கமுடியாத தொடர்பு இருக்கிறது. நம்முடைய மனம்மட்டும் நன்ருக இருந்தால், நாம் பலாத்காரத்தையெல்லாம் கைவிட்டுவிடுவோம். மேலும் இயற்கையாகவே, சுகாதார விதிகளுக்குப் பணிந்து நடந்து கொண்டோமானுல், எவ்வித முயற்சியும் இல்லாமலேயே நம்முடைய உடல்கள் நலத்துடன் இருக்கும். [1]

### சுகாதாரம் என்ருல் என்ன ?

'சுகாதாரம்' என்ற சொல்லின் பொருளை நாம் அறிந்து கொள்வது அவசியம் என்ருல், உடல் எளிதாகச் செயல்படுவதே சுகாதாரம் ஆகும். ஒருவனுடைய உடல் எந்தவிதமான நோயும் அற்று இருந்தால், அவன் சுகாதாரமாக இருக்கிருன் என்று பொருள். அவனுடைய அன்ருட வேலைகளை எந்தவிதமான

களைப்பும் இன்றி அவன் செய்துகொண்டு போவான். இப்படிப் பட்ட ஒரு மனிதனால் ஒரு நாளைக்குப் பத்து அல்லது பன்னி ரெண்டு மைல்கள் எளிதாக நடக்கமுடியும்; சாதாரண உடல் உழைப்பு வேலையை எவ்விதக் களைப்பும் இல்லாமல் செய்ய முடியும்; சாதாரண எளிய உணவை ஜீரணிக்க முடியும்; அவருடைய ஐம்புலன்களும் மனமும் நல்ல நிலையில் இருக்கும்.[2]

## அடிப்படை விதிகள்

சுகாதாரம், உடல்நலம் சம்பந்தமான அடிப்படை விதிகள் எளியவை, இலகுவாகக் கற்றுக்கொள்ளக் கூடியவை. அவைகளை அனுஷ்டிப்பதில்தான் கஷ்டம் இருக்கிறது.

சில அடிப்படை விதிகளாவன :

பரிசுத்தமான சிந்தனைகளையே சிந்தியுங்கள். பரிசுத்தமற்ற, காலத்தை வீணாக்கக்கூடிய சிந்தனைகளில் ஈடுபடாதீர்கள்.

பகலிலும் இரவிலும் மிகவும் சுத்தமான காற்றையே சுவாசி யுங்கள்.

உடல் உழைப்புக்கும் மன உழைப்புக்கும் ஒரு சம நிலை ஏற் படுத்திக்கொள்ளுங்கள்.

நேராக நில்லுங்கள். நேராக உட்காருங்கள். உங்களுடைய ஒவ்வொரு செயலிலும் சுத்தத்தைக் கடைப்பிடியுங்கள். உங்க ளுடைய ஒவ்வொரு செயலும் உள் ஆன்மாவை வெளிப்படுத்துவ தாய் இருக்கவேண்டும்.

சகோதர மனிதர்களுக்குச் சேவை செய்வதற்காக வாழ வேண்டும்; அதற்காகச் சாப்பிடவேண்டும். நீங்கள் இன்பம் துய்ப்பதற்காக வாழாதீர்கள். உங்களுடைய மனதையும் உடலை யும் நல்ல நிலையில் வைத்திருப்பதற்கு எவ்வளவு போதுமோ அவ்வளவு உணவை மட்டும் உட்கொள்ளுங்கள். மனிதன் என்ன சாப்பிடுகிறானோ அதுவே ஆகிறான்.

## நோய்க்கு இயற்கை வைத்தியம்

நீங்கள் சாப்பிடும் தண்ணீரும், உணவும், காற்றும் சுத்தமாக இருக்கவேண்டும். நீங்கள் மட்டும் சுத்தமாய் இருப்பதுடன் திருப்தி அடையக் கூடாது. எவ்வாறு இந்த மூன்று அம்சங் களிலும், சுத்தமாக இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புவீர் களோ அதே சுத்தம் உங்கள் சுற்றுப்புறங்களிலும் இருக்குமாறு செய்யவேண்டும்.[3]

### எளிமையே சாரம்

இயற்கை வைத்தியப் பயிற்சி பெறுவதற்கு உயர்ந்த பட்டப் படிப்பு எதுவும் தேவையில்லை. ஆழ்ந்த புலமையும் தேவை யில்லை. எளிமைதான் உலக இயற்கையின் சாரம். கோடிக்கணக்கான மக்களின் நன்மைக்கான எதற்கும் அதிகப் புலமை தேவையில்லை. புலமையை ஒரு சிலர் தான் பெறமுடியும். ஆகையால் பணக்காரர்கள் மட்டும்தான் அதன் அனுகூலத்தைப் பெறமுடியும். ஆனால் இந்தியா தேசம் என்பது இங்குள்ள ஏழு இலட்சம் கிராமங்களில்தான் இருக் கிறது; இருளடைந்த சிறிய, சரியான போக்கு வரத்து வசதியில்லாத கிராமங்களில்தான் இருக்கிறது. இந்தக் கிராமங்கள் சிலவற்றில் சில நூற்றுக்கணக்கான மக்கள் தான் வாழ்கின்றனர். பல சந்தர்ப்பங்களில் நூறுக்கும் குறைவு. இப்படிப்பட்ட கிராமங்களில்தான் இந்தியாவே இருக் கிறது. இப்படிப்பட்ட ஒரு கிராமத்தில்போய்க் குடியேற நான் விரும்புகிறேன். அதுதான் உண்மை இந்தியா, எனது இந்தியா, நான் எந்த இந்தியாவிற்காக வாழ்கிறேனே அந்த இந்தியா. இந்த அடக்கமான மனிதர்கள் மத்தியில் மிக உயர்ந்த பட்டம் பெற்ற டாக்டர்கள், அவர்களுக்கு வேண்டிய மருத்துவ சாத னங்கள் ஆகியவைகளைக் கொண்டு செல்லமுடியாது. அவர்க ளுடைய ஒரே நம்பிக்கை எளிய, இயற்கையான மருந்துகளிலும் இராம நாமத்திலும்தான் இருக்கிறது.[4]

### நூற்றுக்கு நூறு சுத்தம்

தனிப்பட்டவர்களும் குடும்பங்களும் பொது இடங்களும் துப் புரவு விதிகளைக் கண்டிப்பாக அனுஷ்டித்தால்—உணவு, உடற் பயிற்சி ஆகியவற்றில் போதிய கவனம் எடுத்துக்கொண்டால்— நோய்க்கு இடமே இருக்காது. உள்ளேயும் வெளியேயும் பூரண பரிசுத்தம் இருக்கும்போது, நோயே வரமுடியாது. கிராம மக்கள் மட்டும் இதைப் புரிந்து கொள்வார்களானல், அவர்களுக்கு டாக் டர்களோ, ஹகீம்களோ, வைத்தியர்களோ தேவைப்படமாட் டார்கள்.

### ஆண்டவன் திருநாமம்

இயற்கை வைத்தியம் என்பது ஒரு இலட்சிய வாழ்க்கை வழியாகும். அதாவது, நகரங்களிலும் கிராமங்களிலும் இலட்சிய வாழ்க்கைக்கான சூழ் நிலைகள் இருக்க வேண்டும். ஆண்டவன் திருநாமம்தான் இதற்கு அச்சு என்பதில் ஐயமில்லை. இயற்கை

வைத்தியம் என்னும் சக்கரம் இந்த அச்சைச் சுற்றித்தான் ஓடு கிறது. [5]

### இயற்கை வைத்தியம் : பொருள்

இயற்கை வைத்தியம் என்றால் அதில் அளிக்கும் சிகிச்சை மிக மலிவானதாகவும் எளியதாகவும் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட சிகிச்சை கிராமங்களுக்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்பதே இலட்சியம். இதற்கு வேண்டிய பணத்தையும் சாதனங்களையும் கிராம மக்களால் அளிக்க முடிய வேண்டும். கிராமங்களில் எது கிடைக்கவில்லையோ அதை வெளியிலிருந்து வாங்கிக்கொண்டு வரவேண்டும். இயற்கை வைத்தியம் என்பதன் பொருள்தான் என்ன? ஒருவன் தனது வாழ்க்கைக் கண்ணோட்டத்திலேயே சிறப்பான மாற்றங்காண வேண்டும் என்பதே, அதாவது, சுகாதார விதிகளுக்கு ஏற்ப ஒருவன் தனது வாழ்க்கையை ஒழுங்குபடுத்தி அமைத்துக் கொள்ளவேண்டும் என்பது அதன் பொருளாகும். ஆஸ்பத்திரியிலிருந்து இலவசமாக மருந்து வாங்குவதா அல்லது பணங் கொடுத்து மருந்து வாங்குவதா என்பதல்ல பிரச்னை. ஆஸ்பத்திரியிலிருந்து இலவச சிகிச்சை பெறுபவன் பிச்சை வாங்குகிறான். இயற்கை வைத்தியத்தை ஏற்கும் ஒருவன், ஒருபோதும் பிச்சையெடுக்க மாட்டான். தனக்குத்தானே உதவிசெய்து கொள்வதானது சுய மரியாதையை உயர்த்துகிறது. உடலிலுள்ள விஷச் சத்துக்களை அகற்றி நோயைக் குணப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை அவன் மேற்கொள்வான். மீண்டும் நோய்க்கு ஆளாகாதிருக்கத் தகுந்த முன்னெச்சரிக்கைகளை எடுத்துக்கொள்வான்.

### உணவு முக்கிய அம்சம்

நல்ல உணவும் எல்லா உணவுச் சத்துக்களும் சமநிலையில் கலந்த உணவு அவசியமாகும். இன்று, நாம் எப்படியிருக்கிறோமோ அதைப்போலவே நம்முடைய கிராமங்களும் திவாலாக இருக்கின்றன. கிராமங்களில் போதுமான அளவு காய்கறிகளையும் பழங்களையும் பாலையும் உற்பத்தி செய்யவேண்டும். இயற்கை வைத்தியத் திட்டத்தில் இது ஒரு முக்கியமான அம்சமாகும். இதற்காகச் செலவழிக்கப்படும் காலத்தை வீணாக்கப்பட்டதாகக் கருதக்கூடாது. இது கிராமவாசிகள் எல்லோருக்கும் இலாபகரமானதாக இருக்கும்; இறுதியில் இந்தியா முழுவதற்குமே இலாபகரமானதாய் இருக்கும். [6]

## கிடைப்பதைக் கொண்டு

கிராமத்தில் எது கிடைக்குமோ அதைக்கொண்டு கிராம வாசிகளுக்கு உதவி அளிக்கவேண்டும். நான் நினைக்கும் இயற்கை வைத்தியம் - கிராமவாசிகளுக்கான இயற்கை வைத்தியம் - இது தான். உதாரணமாக, அவர்களுக்கு மின்சாரமோ அல்லது பனிக் கட்டியோ வேண்டுமென்று நான் நினைக்கமாட்டேன். என்னைப் போன்று கிராமீய மனோபாவம் படைத்தவர்கள்தான் இந்த வேலையை மேற்கொள்ள முடியும்.[7]

## "ராஜ வைத்தியம்"

என்னுடைய இயற்கை வைத்தியம், பிரதானமாகக் கிராம வாசிகளையும் கிராமங்களையும்தான் நோக்கமாகக்கொண்டது. ஆகை யால் அதில் பூதக்கண்ணாடி, எக்ஸ்ரே, மற்றும் அதைப் போன்ற பொருள்கள் ஆகியவைகளுக்கு இடமே இல்லை. மேலும் கொய்னா, எமெடின், பெனிசிலின் போன்ற மருந்துகளுக்கும் அங்கு இட மில்லை. தனிப்பட்டவர்கள் சுகாதாரமும், அவர்கள் உடல்நலத்துடன் வாழ்வதும்தான் முக்கிய அம்சங்கள். இதுவே போதுமானது. இக் கலையில் எல்லோரும் பூரணத்துவம் அடைய முடியுமானால், வியா தியே வராது. நோயைப் போக்குவதற்கு இயற்கையின் விதி முறைகளை அனுஷ்டித்த பின்பும் நோய் வருமானால், ராஜவைத் தியம் ஒன்று எப்போதும் இருக்கவே இருக்கிறது. அதுதான் இராம நாமம். ஆனால் இராம நாமம் என்னும் இந்தச் சிகிச்சை ஒரே நிமிஷத்தில் உலக முழுவதும் ஏற்றுக் கொள்ளும் மருந்தாகி விட முடியாது. இராம நாமத்தின் சக்தியை நிரூபணம் செய்யக் கூடிய பிரத்தியட்ச உதாரணமாக வைத்தியர் இருக்க வேண் டும். அப்போதுதான் நோயாளிக்கு இதில் நம்பிக்கை ஏற்படும். இதற்கிடையே, பஞ்ச பூதங்களில் கிடைக்கும் பொருள்களை யெல்லாம் இயன்ற அளவு பயன்படுத்த வேண்டும். மண், நீர் வெளி, நெருப்பு, காற்று என்பவைதான் பஞ்ச பூதங்கள் என்பவை. இயற்கை வைத்தியத்தின் வரம்பே இதுதான் என்பது எனது கருத்து. உருளி காஞ்சன் என்னும் கிராமத் தில் நான் நடத்திய சோதனை இதுதான். அதாவது சுகாதாரத் துடனும் உடல் நலத்துடனும் வாழ்வதெப்படி என்பதைக் கிராமவாசிகளுக்குக் கற்றுக் கொடுப்பது; பஞ்ச பூதங்களைப் பயன்படுத்தி, வியாதிகளைக் குணப்படுத்துவது. அவசியமானால் ஆங்காங்கு விளைந்து கிடக்கக் கூடிய மூலிகைகளை உபயோகிக்க வேண்டும். எல்லா உணவுச் சத்துகளும் சமநிலையாக அமைந்த

உணவானது இயற்கை வைத்தியத்தில் இன்றியமையாத அம்சம் என்பதில் ஐயமில்லை.[8]

### பஞ்ச பூதங்கள்

உடல் எந்தப் பஞ்ச பூதங்களால் ஆகியிருக்கிறதோ அதே பஞ்ச பூதங்களால், நோயைக் குணப்படுத்த வேண்டும். இயற்கை வைத்திய விஞ்ஞானம் இந்தக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டதாகும்.[9]

### மண்

ஜஸ்ட் என்னும் வைத்திய நிபுணர், மண்ணின் உபயோகத்துக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிறார். இதைச் சோதித்துப் பார்க்க வேண்டுமென்று நான் எண்ணினேன். மலச்சிக்கல் ஏற்பட்டால் அடிவயிற்றில் பச்சை மண்ணைப் பொடிசெய்து பற்றுப் போடலாம் என்று அவர் கூறுகிறார். சுத்தமான, காய்ந்த, மண்ணைத் தண்ணீர் ஊற்றிப் பிசைந்து அதை ஒரு மெல்லிய துணியில் வைத்து இரவு முழுவதும் அடிவயிற்றில் கட்டி வைத்திருந்தேன். நல்ல திருப்திகரமான பலன் கிடைத்தது.[10]

இந்த மண் பற்று—3 அங்குல அகலத்திலும் 6 அங்குல நீளத்திலும் ½ அங்குல கனத்திலும் இருக்க வேண்டும்.[11]

### தலைவலிக்கு

தலையில் மண்பற்று வைத்துக் கட்டினால் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் அது தலைவலியைப் போக்குகிறது. இதை நூற்றுக்கணக்கான சந்தர்ப்பங்களில் நான் சோதித்துப் பார்த்திருக்கிறேன். பல்வேறுவித காரணங்களால் தலைவலி வந்திருக்கலாம். ஆனால் காரணம் என்னவாக இருந்தாலும் சரி, மண்பற்றுப் போடுவதானது, தற்காலிகமாகத் தலைவலியைப் போக்குகிறது.

### கொப்புளங்கள்

மண்பற்று சாதாரண கொப்புளங்களைக் குணப்படுத்தவும் உதவும். பெரிய கட்டிகளைக் குணப்படுத்தவும் மண்ணை நான் பயன்படுத்தி யிருக்கிறேன். இதற்கு நான், பொடாசியம் பெர்மாங்கனேட் மருந்தில் முதலில் அமுக்கி வைக்கப்பட்ட ஒரு சுத்தமான துணியில் மண்ணைக் கட்டி வைக்கிறேன். கட்டியைப் பெர்மாங்கனேட் மருந்தை வைத்துக் கழுவுகிறேன். அதன்பின்

மேற்கண்ட மண்பற்றைக் கட்டியில் வைத்துக் கட்டுகிறேன். பெரும்பாலான சந்தர்ப்பங்களில், இந்தச் சிகிச்சை பூரண குண மளிக்கிறது. என்னைப் பொறுத்தவரை, இந்தச் சிகிச்சை ஒரு போதும் தோல்வியுற்றதில்லை. குளவி கொட்டிய வலியை மண் பற்று உடனே குணப்படுத்துகிறது. பல சந்தர்ப்பங்களில் தேள் கொட்டியதற்கும் நான் இதைப் பயன்படுத்தி யிருக்கிறேன். ஆனால் அதில் மண்பற்று அவ்வளவு நல்ல பலனைக் கொடுக்க வில்லை.[12]

### கடுமையான காய்ச்சல்

காய்ச்சல் கடுமையாக இருக்கும்போது, தலையிலும் அடி வயிற்றிலும் மண்பற்றுப் போடுவது மிகவும் உபயோகமாய் இருக் கும். எல்லாச் சமயங்களிலுமே இது காய்ச்சலைக் குறைத்து விடுவதில்லை யென்றாலும், அது நோயாளிக்கு ஒரு இதமான உணர்ச்சியைக் கொடுக்கத்தான் செய்கிறது. குணமாகியிருப் பதுபோல் நோயாளி உணருகிறான். ஆகையால் நோயாளிகளே மண்பற்றுப் போட வேண்டுமென்று கேட்கிறார்கள்.

### டைபாய்டு

டைபாய்டு காய்ச்சல் விஷயத்தில் பலமுறை நான் இதைப் பயன்படுத்தி யிருக்கிறேன். காய்ச்சல் எப்படியும் அதன்போக் குப்படிதான் இறங்குகிறது. ஆயினும் நோயாளிக்கு இருக்கும் அமைதியற்ற நிலையை மண்பற்று போக்குகிறது, கஷ்டத்தைக் குறைக்கிறது.[13]

### ஆண்டிபிளாஜிஸ்டின்

சேவா கிராமத்தில், ஆண்டிபிளாஜிஸ்டின் (ஒருவகைப் பிளாஸ்திரி பற்று) போடுவதற்குப் பதிலாக, சூடாக்கப்பட்ட மண் பற்றுக்களை நாங்கள் தாராளமாகப் பயன்படுத்துகிறோம். மண் ணுடன் சிறிது எண்ணெயும் உப்பும் சேர்த்தபின் கிருமிகளைப் பூரணமாக அகற்றுவதற்காக அது போதுமான அளவு சூடாக்கப் படுகிறது.[14]

### எப்படிப் பயன்படுத்துவது?

மென்மையான வண்டல் களிமண்ணை—மணல் இல்லாத, பிசுபிசுவென்று இல்லாத களிமண்ணை—பத்திரமாக உபயோகப் படுத்தலாம். உரம் போட்ட வயலிலிருந்து யாரும் மண்ணை எடுத் துப் பயன்படுத்தக் கூடாது. மண்ணைக் காயவைத்து, தூள் செய்து, நல்ல சல்லடையால் சலிக்க வேண்டும். அதனுடைய

சுத்தத்தைப்பற்றி ஏதாவது ஐயப்பாடு இருந்தால், அதை நன்கு சூடாக்கி அதில் கிருமியோ புழுவோ இல்லாமற் செய்துவிட வேண்டும்.[15]

### உட்கொள்ளலாமா ?

மலச்சிக்கலைப் போக்குவதற்குச் சுத்தமான மண்ணை உட்கொள்ளலாம் என்று ஜஸ்ட் எழுதுகிறார். மிகவும் அதிகப்படியாகப் போனால் ஐந்திலிருந்து பத்து கிராம் மண்ணைச் சாப்பிடலாம். இதுபற்றிய விளக்கமாவது: மண்ணானது ஜீரணிக்கப்படுவதில்லை. இது ஒரு மல மிளக்கியாகப் பயன்படுகிறது. இது வெளியே வந்தாக வேண்டும். ஆகவே இது மலத்தையும் சேர்த்து வெளியே தள்ளுகிறது. இதை நான் என் விஷயத்தில் பயன்படுத்திப் பார்த்ததில்லை. ஆகையால், இதைச் சோதனை செய்து பார்க்க விரும்புபவர்கள், தங்கள் சொந்தப் பொறுப்பிலேயே அவ்வாறு செய்து பார்க்க வேண்டும். ஓரிருமுறை சோதனை செய்து பார்ப்பதானது யாருக்கும் தீங்கு விளைவித்து விடாது என்று கருதுகிறேன்.[16]

## தண்ணீர்

### எவ்வாறு இடுப்பு ஸ்நானம் செய்வது?

நீர்ச்சிகிச்சை முறைக்குக் கூனே செய்துள்ள தொண்டில் மிகவும் முக்கியமானது நின்றும் உட்கார்ந்தும் குளிக்க அவர் வகுத்துக் கொடுத்த இடுப்பு ஸ்நான முறையாகும். இவ்வாறு குளிப்பதற்கு விசேஷத் தொட்டி ஒன்றை அவர் அமைத்திருக்கிறார். ஆயினும் அந்தத் தொட்டியில்லாமலே இதைச் செய்யலாம். நோயாளியின் உயரத்திற்கு ஏற்றபடி முப்பதிலிருந்து முப்பத்தாறு அங்குல நீளமுள்ள எந்தத் தொட்டியும் பொதுவாக இக்காரியத்துக்கு உபயோகமாகும். அனுபவத்தில் ஒருவருக்குச் சரியான அளவு தொட்டி எதுவென்பது தெரிந்துவிடும். தொட்டியில் புதிதாக எடுக்கப்பட்ட தண்ணீரை நிரப்ப வேண்டும். பிணியாளர் உட்காரும்போது தண்ணீர் கீழே வழிந்தோடாத அளவு நிரப்பப்பட வேண்டும். கோடைக் காலத்தில், தண்ணீர் போதுமான அளவு குளிர்ச்சியாக இல்லாவிட்டால், நோயாளிக்கு ஒரு இதமான உணர்ச்சியை அளிப்பதற்காக, தண்ணீரில் ஐஸ் போட்டுக் கொள்ளலாம். பொதுவாக, முந்தின இரவு எடுத்து மண்பானையில் ஊற்றி வைக்கப்பட்ட தண்ணீர் இதற்குப் போதுமானதாய் இருக்கும். தண்ணீரின்மேல்தளத்தில் ஒரு துணியைப் போட்டு அதை விசிறி

யால் வேகமாக வீசுவதனலும் அதைக் குளிர வைக்கமுடியும். குளிக்கும் அறைச் சுவர் ஓரத்தில் தொட்டியை வைக்கவேண்டும். முதுகுப்புறம் சாய்ந்து கொள்வதற்காகத் தொட்டியில் ஒரு பலகை வைக்கவேண்டும். நோயாளி, தொட்டிக்குள் உட்கார்ந்து, தனது கால்களை வெளியே நீட்டிக் கொள்ளவேண்டும். தண்ணீருக்கு வெளியே உள்ள அங்கங்களை நன்ருகப் போர்த்திக் கொள்ள வேண்டும். அப்போதுதான் குளிரால் நடுங்க வேண்டிய அவசியம் ஏற்படாது. தொட்டிக்குள் வசதியாக நோயாளி உட்கார்ந்து கொண்டபின், ஒரு மென்மையான துண்டைக்கொண்டு அவருடைய அடிவயிற்றைத் தேய்த்து விட வேண்டும். இவ்வாறு ஐந்து முதல் முப்பது நிமிஷம்வரை குளிக்கலாம். இது முடிந்த பின்பு, உடம்பை நன்ருகத் துடைத்துவிட்டு நோயாளியைப் படுக்க வைத்துவிட வேண்டும்.

### கெடுதலும் இல்லை

இடுப்பு ஸ்நானமானது, நல்ல காய்ச்சலைக்கூடக் குறைத்து விடுகிறது. மேலேயுள்ளவாறு ஸ்நானம் செய்தால், எந்தவிதமான கெடுதலும் இல்லை. அதற்குப் பதிலாக அதனல் பெரும் நன்மையும் ஏற்படலாம். அது மலச்சிக்கலைப் போக்கி, ஜீரணிக்கும் சக்தியை வளர்க்கிறது. இவ்வாறு ஸ்நானம் செய்தபின், நோயாளிக்கு நல்ல புத்துணர்ச்சியும் சுறுசுறுப்பும் ஏற்படுகின்றன. மலச்சிக்கல் உள்ளவர்கள், இந்த ஸ்நானம் செய்த உடனே ஒரு அரைமணி நேரம் சுறுசுறுப்பாக நடந்து உலாவிவிட்டு வரவேண்டும் என்று கூனே ஆலோசனை கூறுகிருர். நன்ருக முழு வயிற்றுக்குச் சாப்பிட்ட பின்பு, ஒரு போதும் இந்த ஸ்நானம் செய்விக்கக்கூடாது.

### நல்ல வெற்றி தரும்

இடுப்பு ஸ்நானம் செய்வதை நான் எத்தனையோ பேருக்குச் சோதித்துப் பார்த்திருக்கிறேன். நூற்றுக்கு எழுபத்தி ஐந்து சந்தர்ப்பங்களுக்குமேல் அது வெற்றியளித்திருக்கிறது. நோயாளிக்குப் பிரக்ஞையில்லாத அளவு அளவுக்குமீறிக் கடுமையாகக் காய்ச்சல் இருக்கும்போதுகூட, அவரைத் தொட்டியில் அமர வைக்கக்கூடிய அளவு மட்டும் அவருடைய் நிலைமை இருந்தால், உடனடியாக வெப்பம் இரண்டு அல்லது மூன்று டிகிரி குறைகிறது. ஜன்னிகண்டு புலம்புவதும் நிற்கிறது.[17]

### அமர்ந்த ஸ்நானம்

இப்போது அமர்ந்த ஸ்நானம் அல்லது தேய்ப்பு ஸ்நானத்தை எடுத்துக்கொள்வோம். உடலில் மிக அதிகமான உணர்ச்சி

உள்ள பகுதிகளில் ஜனனேந்திரிய உறுப்பும் ஒன்ருகும். ஆண் குறியின் நுனிப்பகுதி அல்லது அதைச் சுற்றியுள்ள தோலில் உள்ள உணர்ச்சியில் ஏதோ ஒருவகையான மாயம் இருக்கிறது. அதை எப்படி விவரிப்பதென்றே எனக்குத் தெரியவில்லை. இந்த ஞானத்தை மருத்துவக்கலைக்குக் கூனே பயன்படுத்தியிருக்கிருர். ஜனனேந்திரிய உறுப்பின்மேல் புற நுனியில் ஒரு மென்மையான ஈரத்துணியால் தேய்த்துக் கொடுக்கவேண்டும் அப்போது மேலே குளிர்ந்த தண்ணீரை ஊற்றிக்கொண்டிருக்க வேண்டும் என்று கூறுகிருர். ஆண்கள் உறுப்பைப் பொருத்த வரை, ஆண் குறியின் நுனிப்பகுதியைத் தோலால் மூடிவைத்து அதைத் தேய்த்துக்கொடுக்க வேண்டும். கூனே கூறியுள்ளமுறை இதுதான். குளிர்ந்த தண்ணீர் இருக்கும் ஒரு தொட்டியில், ஒரு ஸ்டூலை வைக்க வேண்டும். தொட்டியில் எந்த மட்டத்தில் தண்ணீர் இருக்கிறதோ அந்த உயரத்தில் ஸ்டூலின் மேற்பாகம் (அமரும் இடம்) இருக்கவேண்டும். நோயாளி ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டு கால்களை வெளியே நீட்டிக்கொள்ள வேண்டும். அப்போது, நோயாளியின் ஆண் (அல்லது பெண்) குறி தண்ணீரைத் தொட்டும் தொடாமலும் இருக்கும். ஆண் (அல்லது பெண்) குறியை மெதுவாகத் தேய்த்துக் கொடுக்கவேண்டும். ஒருபோதும், வலியெடுக்கும் அளவுக்குத் தேய்த்துவிடக்கூடாது. அதற்கு மாருக, இது நோயாளிக்கு இன்பகரமானதாய் இருக்க வேண்டும். இவ்வாறு ஸ்நானம் செய்தபின் நோயாளிக்கு ஓய்வும் மன அமைதியும் பெற்றதுபோன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட வேண்டும். என்ன நோயாக இருந்தாலும் சரி அமர்ந்த ஸ்நானத்தின் மூலம் தற்காலிகமாகவாவது அபிவிருத்தி ஏற்பட்டதுபோன்ற ஒரு உணர்ச்சியை நோயாளி அடைகிருர். அமர்ந்த ஸ்நானங்கள் இடுப்பு ஸ்நானங்களைவிட உயர்ந்தவையென்று கூனே கருதுகிருர். எனக்கு அமர்ந்த ஸ்நானங்களைக் காட்டிலும் இடுப்பு ஸ்நானங்களைப்பற்றிய அனுபவம்தான் மிக அதிகம். அது பெரும்பாலும் என் குற்றந்தான் என்று எண்ணுகிறேன். நான் சிரத்தையில்லாமல் இருந்துவிட்டேன். அமர்ந்த ஸ்நானங்கள் எடுக்குமாறு நான் சிலருக்கு ஆலோசனை கூறினேன். ஆனல் அவர்கள் பொறுமையுடன் இந்தச் சோதனையைச் செய்து பார்க்கவில்லை. ஆகையால் இந்த ஸ்நானங்களைப்பற்றி—எனது சொந்த அனுபவத்தைக் கொண்டு—நான் எந்தவிதமான கருத்தும் கூற முடியாது. இது ஒவ்வொருவரும் சோதித்துப் பார்க்கத் தகுந்ததே. ஒரு தொட்டி கிடைப்பது கஷ்டமாக இருந்தால், ஒரு கூஜா அல்லது லோட்டாவிலிருந்து தண்ணீரை ஊற்றித் தேய்ப்பு

ஸ்நானம் செய்து கொள்ளலாம். இதனல் நோயாளிக்கு ஓய்வு பெற்றது போன்ற உணர்ச்சியும் மன அமைதியும் ஏற்படுகிறது. பொதுவாக, ஜனனேந்திரியத்தைச் சுத்தப்படுத்துவதில் மக்கள் அக்கறை செலுத்துவதில்லை. தேய்ப்பு ஸ்நானமானது இதை எளிதாகச் செய்ய உதவுகிறது. ஒருவர் மிகவும் எச்சரிக்கையாக இருந்தாலொழிய, ஆண் குறிக்கும் மேல் தோலுக்கும் இடையே அழுக்குச் சேர்ந்துவிடுகிறது. இதை அகற்றவேண்டும். ஆண் (அல்லது பெண்) குறியைச் சுத்தமாக வைத்துக்கொள்வதும் மேற்கண்ட சிகிச்சையைப் பொறுமையாக மேற்கொள்வதும் பிரம்மச்சர்யத்தை அனுஷ்டிப்பதை எளிதாக்கும். இதனல் நுனியிலுள்ள நரம்புகளில் ஏற்படும் கூச்ச உணர்ச்சி குறையும். விரும்பத்தகாத இந்திரிய ஸ்கலிதங்களும் அநேகமாக ஏற்படமாட்டா. இந்திரிய ஸ்கலிதங்கள் ஏற்பட அனுமதிப்பது விரும்பத்தக்கதேயல்ல என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. சுத்தமாயிருப்பதைப்பற்றி நாம் அதிகம் வலியுறுத்துவதற்கு ஏற்ப, இந்திரிய ஸ்கலிதத்தின்மீதும் வெறுப்பு ஏற்படும். அப்படி ஏற்படத்தான் வேண்டும். அவைகளைத் தவிர்ப்பதற்கு ஒருவர் அதிகமாக முன்னெச்சரிக்கை எடுத்துக்கொள்ளுமாறும் செய்யும்.[18]

### அம்மை நோய்

உடம்பு எரிச்சல், நமைச்சல், வெடிப்புப் புண்கள், சின்னம்மை, வைசூரி முதலியவைகளைக் குணப்படுத்துவதற்கும் ஈரத்துணியால் சுற்றிவைப்பது நல்ல பலன் அளிக்கும். இந்த நோய்களின் விஷயத்தில் இம்முறையை நான் விரிவான அளவில் சோதித்துப் பார்த்திருக்கிறேன். வைசூரி, சின்னம்மை ஆகியவைகளைப் பொறுத்தவரை, தண்ணீர் இளஞ்சிவப்பு நிறம் அடையக்கூடியவாறு அதில் போதுமான பொட்டாசியம் பெர்மாங்கனேட் கலந்திருக்கிறேன். நோயாளியைச் சுற்றி வைத்த துணியைப் பின்னல் கொதிக்கிற நீரில் போட்டு அதில் உள்ள கிருமிகளைச் சாகடிக்கவேண்டும். நீர் போதுமான அளவு குளிராகும்வரை துணியை அதிலேயே போட்டு வைத்திருக்கவேண்டும். அதன்பின், துணியை எடுத்துச் சோப்புப் போட்டுத் துவைத்துவிட வேண்டும்.

### கால் உளைச்சல்

இரத்த ஓட்டம் குறைந்து கால்தசை வேதனைதருகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். காலில் ஒருவிதமான வலி உண்டாகும்; உளைச்சல் இருக்கும். அப்போது ஐஸ் வைத்துப்

பிடித்துவிடுவது எவ்வளவோ நன்மைதரும். கோடைகாலத்தில் இந்தச் சிகிச்சை அதிகப் பலன்தரும். குளிர்காலத்திலோ ஒரு நோயாளியை ஐஸ் வைத்துப் பிடித்து விடுவது அபாயத்தில் முடிந்தாலும் முடியலாம்.

### வெந்நீரின் பலன்கள்

இப்போது வெந்நீர்ச் சிகிச்சையால் கிடைக்கக்கூடிய பலன் களைப்பற்றிச் சில வார்த்தைகள் கூறுவோம். வெந்நீரைப் புத்தி சாலித்தனமான முறையில் பயன்படுத்துவதானது, பலவழிகளில் குணம் தருகிறது. எல்லாவிதமான காயங்களுக்கும் மற்றும் அது போன்றவைகளுக்கும் ஐயோடின் என்ற மருந்துபோடப்படுவது எல்லோரும் அறிந்ததே. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பெரும் பாலானவற்றில் வெந்நீரைப் பயன்படுத்துவதும் அதே அளவு பலன்தரும். ஊமைக் காயங்களுக்கும் வீக்கங்களுக்கும் டிங்சர் (ஐயோடின்) போடலாம். இவைகளுக்கு வெந்நீர் ஒத்தடம் கொடுப்பது இதே அளவு பலன்தரும். சொல்லப்போனால் இதைக் காட்டிலும் அதிகப் பலன்தரும். மேலும் காதுவலிக்கு ஐயோடின் துளிகளைப் பயன்படுத்துகிறார்கள். இவ்வித காதுவலிகளுக்குப் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இளஞ்சூடான வெந்நீர் ஊற்றிக் கழுவி விடுவது வலியைப் போக்கிவிடலாம். ஐயோடின் உப யோகத்தில் சில அபாயங்கள் இருக்கின்றன. நோயாளிக்கு இந்த மருந்து ஒத்துக்கொள்ளாமல் போகலாம். வேறு ஏதா வது மருந்து என்று எண்ணி ஐயோடினை எடுத்துச் சாப்பிட்டு விட்டால், பெரும் அபாயமாக முடிந்துவிடும். ஆனால் வெந்நீரைப் பயன்படுத்துவதில் எந்தவிதமான அபாயமும் இல்லை. டிங்சர் ஐயோடினைப் போலவே கொதிக்கும் நீரும் ஒரு நல்ல கிருமி நாசினியாகும்.. இதனால் ஐயோடின் உபயோகத்தை நான் குறைத்துப் பேசுகிறேன் என்பதல்ல. அல்லது எல்லாச் சந்தர்ப் பங்களிலுமே ஐயோடினுக்குப் பதிலாக வெந்நீரைப் பயன்படுத்தி விடலாம் என்றும் நான்கூற வரவில்லை. மிகவும் உபயோகமான தும் அவசியமானதும் ஆன ஒரு சில மருந்துகள் என்று கருது வனவற்றில் ஐயோடினும் ஒன்றாகும். ஆனால் அது பணச் செல வுள்ள ஒரு பொருள். ஏழைகளுக்கு அது கட்டுபடியாகாது. எல் லோரும் அதைப் பத்திரமான முறையில் உபயோகப்படுத்தி விடவும் முடியாது. ஆனால் தண்ணீர் எல்லா இடங்களிலும் கிடைக்கும். அது மிக எளிதாகக் கிடைப்பதால், அதற்குள்ள மருந்துச் சக்தியை நாம் அலட்சியம் செய்யக்கூடாது. சாதாரண வீட்டு மருந்துகளைப்பற்றித் தெரிந்து வைத்திருப்பதானது பல

நெருக்கடியான சந்தர்ப்பங்களில் வரப்பிரசாதமாகப் பயன் படுகிறது.[19]

**நீராவி ஒரு மருந்து**

நீராவி ஒரு சக்திவாய்ந்த மருந்துச் சாதனமாகும். நோயாளிக்கு வேர்க்குமாறு செய்ய இதைப் பயன்படுத்தலாம். முடக்கு வாதத்துக்கும் மற்ற முடக்கு வலிகளுக்கும் நீராவி ஸ்நானம் மிகவும் உபயோகமானதாய் இருக்கும். நீராவி ஸ்நானம் செய்வதற்கு மிகவும் எளிதானதும் அதேசமயம் மிகப் பழமையானதுமான முறையாவது: நெருக்கமில்லாது, அதேசமயம் இறுக்கமாகப் பின்னப்பட்ட ஒரு கட்டிலின் மீது ஒன்று அல்லது இரண்டு போர்வைகளை விரியுங்கள். அதற்கு அடியில் கொதிக்கும் நீர் உள்ள ஒன்று அல்லது இரண்டு பாத்திரங்களை மூடிவையுங்கள். நோயாளியைக் கட்டிலில் நீட்டிப் படுக்க வையுங்கள். அவர்மீது போர்வையை வைத்துப் போர்த்துங்கள். இந்தப் போர்வையானது கட்டிலைச் சுற்றி விழுந்து நீராவி வெளியே போகாமலும் வெளியே உள்ள காற்று உள்ளே வர இயலாமலும் தடுக்கவேண்டும். இவ்வாறு எல்லாவற்றையும் ஏற்பாடு செய்தபின், கொதிநீர் உள்ள பாத்திரங்களின் மேல்மூடி அகற்றப்படுகிறது. நீராவியானது, போர்வைகளுக்கு அடியில் உள்ள நோயாளியிடம் வேகமாகச் சென்று விடுகிறது. அடியில் உள்ள கொதி நீரை ஒன்று அல்லது இரண்டு முறை மாற்ற வேண்டிய அவசியம் இருக்கலாம். வழக்கமாக இந்தியாவில் தண்ணீர் கொதித்துக் கொண்டே யிருக்குமாறு செய்வதற்காக, ஒரு கரி அடுப்பு வைப்பது வழக்கம். இதனால் இடைவிடாது நீராவி வந்துகொண்டிருக்கும். என்றாலும், இதில் விபத்துக்கள் ஏற்படக் கூடிய அபாயம் இருக்கிறது. ஒரே ஒரு நெருப்புப் பொறி பறந்து வந்தாலும் அது போர்வையிலோ அல்லது கட்டிலிலோ நெருப்புப் பற்றும்படி செய்துவிடலாம். அதன் மூலம் நோயாளியின் உயிருக்கு அபாயம் ஏற்படலாம். ஆகையால் நான் கூறிய முறையே-அது மெதுவானதும் சலிப்பு ஏற்படக் கூடியதுமான முறையாக இருந்தாலும்—உகந்தது ஆகும்.

**இலைகள் சேர்த்தல்**

இவ்வாறு நீராவி உற்பத்தி செய்யப்படும் நீரில் சிலர் வேப்ப இலைகளையோ அல்லது மற்ற மூலிகைகளையோ சேர்க்கிறார்கள். இவ்வாறு சேர்ப்பதால், நீராவிக்கு அதிகச் சக்தி ஏற்படுகிறதா என்பது எனக்குத் தெரியாது. நீராவி பிடிப்பதன் நோக்கம் வியர்வை சொட்டுமாறு செய்வதுதான். அதை நீராவி ஒன்றினால் மட்டுமே நாம் சாதித்து விடலாம்.

### "பாத ஸ்நானம்"

கால்கள் ஜில்லிட்டுப் போனால், அல்லது, கால் உளைச்சல் இருந்தால், நோயாளியானவர் முழங்கால்வரை கால்களையும் பாதங்களையும் வெந்நீரில் முக்கிவைத்து உட்கார்ந்திருக்க வேண்டும். இந்த வெந்நீர், அவரால் தாங்க முடிந்த அளவு வெப்பம் உள்ளதாய் இருக்க வேண்டும். இந்த வெந்நீரில் சிறிது கடுகுப் பொடியையும் கலந்து கொள்ளலாம். இவ்வாறு "பாத ஸ்நானம்" செய்வது பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் நீடிக்கக் கூடாது. இந்தச் சிகிச்சையானது அந்த இடத்தில் ரத்த ஓட்டத்தை வேகப்படுத்தி உடனடியான நிவாரணம் அளிக்கிறது.

### ஆவி பிடித்தல்

சாதாரண ஜலதோஷத்துக்கும் தொண்டைக் கட்டுக்கும் சாதாரண தேநீர்க் கெட்டிலைப் போன்றதும் மூக்கு நீளமாக உள்ளதுமான ஒரு நீராவிக் கெட்டிலைப் பயன்படுத்தி மூக்குக்கும் தொண்டைக்கும் ஆவி பிடிக்கலாம். அல்லது சாதாரணமான எந்தக் கெட்டிலிலும் நமக்குத் தேவையான அளவு நீளமான ரப்பர்க் குழாயை மாட்டிக்கொண்டு இக்காரியத்துக்குப் பயன்படுத்தலாம்.[20]

## ஆகாயம்

### ஆகாயம் என்பது என்ன?

பூமியையும் அதைச் சுற்றியுள்ள வாயு மண்டலத்தையும் சுற்றிச் சூழ்ந்துள்ள வெற்றிடத்தை ஆகாயம் என்று கூறலாம்.[21]

வானம் அல்லது ஈதர் என்பது வாயுமண்டலத்தின் உறைவிடமாகும். ஒரு காலி புட்டியிலிருந்து காற்றை வெளியே இழுத்துவிட்டு அங்கு வெற்றிடத்தை ஒருவர் ஏற்படுத்திவிடலாம். ஆனால் அந்த வெற்றிடத்தை யார் வெளியேற்ற முடியும்? அதுதான் ஆகாசம்.

நமது உடல் நலத்தைப் பாதுகாக்கவும் இழந்த உடல் நலத்தை மீண்டும் பெறவும் இந்த ஆகாசத்தை நாம் பயன்படுத்த வேண்டியிருக்கிறது.[22]

### ஆகாயத்தை "அண்டிய" வாழ்க்கை

இந்த மாபெரும் பொருளான ஆகாயத்தை நாம் எவ்வளவு அதிகமாகப் பெறுகிறோமோ அவ்வளவு அதிக உடல் நலம் உள்ளவர்களாவோம். நாம் கற்றுக் கொள்ளவேண்டிய முதற் பாடம், நமக்கும் ஆகாயத்திற்கும்—அதாவது எல்லையற்ற பொருளுக்கும்—இடையே எந்தவிதமான பிரிவினையையும் ஏற்படுத்தக் கூடாது என்பதுதான். இந்த ஆகாயமானது மிக அருகாமையில் இருக்கிறது; அதே சமயம் மிகமிக அப்பாலும் இருக்கிறது. வீடுகள், கூரைகள், ஏன் ஆடைகள் ஆகியவைகளின் குறுக்கீடுகூட இல்லாமல் நம்முடைய உடல்கள் ஆகாயத்துடன் தொடர்புகொள்ள முடியுமானால், நமக்கு நல்ல உன்னதமான உடல் நலம் கிட்டும். ஒவ்வொருவருக்கும் இது சாத்தியமில்லை. ஆனால் இந்த வாசகத்தில் உள்ள உண்மையை ஏற்று அதற்கு ஏற்ப வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம். நாம் நடைமுறையில் எந்த அளவு இந்த நிலையை அடைய முடிகிறதோ அந்த அளவு திருப்தியும் மன நிம்மதியும் பெறுவோம்.[23]

### வீண் அலங்காரம்

இப்படிப்பட்ட சிந்தனைப் போக்கு ஏற்பட்டுவிட்டாலோ ஒருவன் தன்னுடைய சுற்றுப்புறங்களைத் திறவையாகவே வைத்துக் கொள்வான். அவன் தன்னுடைய வீட்டில் அனாவசியமான மேசை, நாற்காலிகளைப் போட்டு வைக்கமாட்டான். எவ்வளவு குறைச்சலான ஆடைகளை உபயோகிக்க முடியுமோ அவ்வளவு குறைச்சலாகவே உபயோகிப்பான். அநேக வீடுகளில் எல்லா விதமான அவசியமற்ற அலங்காரங்களும், மேசை நாற்காலிகளும்—இவைகள் இல்லாமலேயே ஒருவன் தனது வாழ்க்கையை நடத்த முடியும்—நிரம்பிக் கிடக்கின்றன. எளிய வாழ்க்கை நடத்தும் மனிதன் ஒருவன் சென்றால் மயக்கம் போட்டுவிடும் அளவுக்கு இந்த அலங்காரங்களும் மேசை, நாற்காலிகளும் நிறைந்து கிடக்கின்றன. இவை தூசிதுப்பட்டையும் கிருமிகளும் பூச்சிகளும் அடைந்து பெருக உதவும் சாதனங்களே தவிர வேறொன்றும் இல்லை.[24]

திறந்த இடத்தில் தூங்குவதை ஒருவன் முக்கியமாகக் கொள்ளவேண்டும். குளிர், பனிபோன்று சீதோஷ்ண நிலைமையால் ஏற்படக் கூடிய மாறுதல்களில் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்குப் போதுமான அளவு ஒருவன் துணியைப் போர்த்திக் கொள்ள வேண்டும். மழைகாலத்தில் கொடையைப் போன்று அமைந்த கூரை—சுற்றுச் சுவர்கள் இல்லாத கூரை

இருக்க வேண்டும். மழையில் நனையாமல் இருக்க இதை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மற்ற காலங்களைப் பொறுத்த வரை, நட்சத்திரங்கள் மிளிரக் கூடிய நில விதானம் நமக்குக் கூரையாக அமைய வேண்டும். அப்போது, ஒருவன் தனது கண் களைத் திறந்தால் விதவிதமாக மாறுதலடைந்து கொண்டிருக்கும் அழகான சுவர்க்க பூமிகளைக் காண முடிவதாய் இருக்கவேண்டும். இந்தக் காட்சி ஒருபோதும் அலுப்புத் தட்டாது. அது கண் களைக் கூசவைக்காது,கண்களுக்குக் கெடுதலும் செய்யாது. அதற்கு மாருக, அவைகளுக்கு இதமான உணர்ச்சியைக் கொடுக்கும். பல் வேறு நட்சத்திரக்கூட்டங்களும் கம்பீரமாக மிதந்து கொண்டிருப் பதைக் கவனித்துப் பார்ப்பது கண்களுக்கு ஒரு விருந்தாக அமை யும். தன்னுடைய சிந்தனைகளுக்கெல்லாம் நட்சத்திரங்களைச் சாட்சியாகக்கொண்ட ஒருவன், ஒருபோதும் தனது மனதில் தீய சிந்தனைகள் புக விடமாட்டான், புத்துணர்ச்சியூட்டும் நிம்மதி யான துயிலை அனுபவிப்பான்.

### வயிற்றை அடைக்கக் கூடாது

மேலே உள்ள ஆகாயத்திலிருந்து நாம் இறங்கி வரு வோம். இங்கு நமக்குள்ளும் நம்மைச் சுற்றியும் உள்ள ஆகாயத் துக்கு வருவோம். தோலில் இலட்சக் கணக்கான துவாரங்கள் இருப்பதைக் காணலாம். இத்துவாரங்களில் உள்ள காலி இடங் களை நாம் அடைத்து விட்டோமானல், நாம் இறந்துவிட்டோம். இத்துவாரங்களில் ஏதாவது அழுக்கு அடைத்துக் கொண்டால், அது நம்முடைய உடல் நலத்தைப் பாதிக்கும். இதேபோன்று, நம்முடைய ஜீரணேந்திரியங்களில் அனுவசியமான உணவுப் பொருள்களைப் போட்டு நிரப்பக் கூடாது. நமக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவுதான் சாப்பிட வேண்டும். அதிகமாகச் சாப்பிடக் கூடாது. பெரும்பாலான சந்தர்ப்பங்களில் மனிதர்கள் தங்களை அறியாமலே அளவுக்கு மீறி உண்கிருர்கள், அல்லது, ஜீரணிக்காத பொருள்களை உண்கிருர்கள். ஒருவாரம் அல்லது இரு வாரங்களுக்கு ஒருமுறை உண்ணுவிரதம் இருப்பதானது அதில் சமநிலையைப் பாதுகாக்க மிகவும் உதவும். ஒருவரால் முழுநாளும் உண்ணுது இருக்க முடியவில்லையென்ருல், பகலில் ஒன்று அல்லது இரண்டு வேளைகள் சாப்பிடாமல் இருக்கவேண்டும்.(காற்றில்லாத) வெற்றிடம் இருப்பதை இயற்கை வெறுக்கிறது என்று கூறுவது ஓரளவுதான் உண்மை; காலி இடம் வேண்டுமென இயற்கை ஓயாது விரும்புகிறது. நம்மைச் சுற்றியுள்ள பரந்த காலி இடமே, இந்த உண்மைக்கு நிலையான சான்ருகும்.[25]

## சூரியன்

### வெயில் ஸ்நானம்

தண்ணீரில் குளிப்பது எவ்வளவு உபயோகமோ அவ்வளவு வெயில் ஸ்நானமும் உபயோகமானதாகும். ஆனால் இந்த இரண்டில் ஒன்றுக்காக மற்றொன்றை நிறுத்தமுடியாது. உடல் பலவீனமாகவும் ரத்த ஓட்டம் குறைவாகவும் உள்ளபோது, திறந்த உடலில் காலை வெயில் படுமாறு செய்யவேண்டும். அப்போது அது எல்லாவிதமாகவும் உடல்நலத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய ஒரு பொதுவான டானிக் ஆக இருந்து ஜீவ சக்தியை வளர்க்கும். அல்ட்ரா-வயலெட் கதிர்கள் சூரிய வெயிலில் மிகவும் அதிகமாக உள்ள நேரம் காலைதான். இவை சூரியனுடைய கதிர்களிலேயே மிகவும் சக்தி பொருந்தியவையாகும். நோயாளிக்குக் குளிராக இருந்தால், அவர் நன்றாகப் போர்த்திக் கொண்டு வெயிலில் படுத்து, முடிந்த அளவு படிப்படியாக போர்த்தியிருக்கும் துணியை அகற்றி, தனது உடலில் அதிகப் படியான பகுதியில் வெயில் படுமாறு செய்ய வேண்டும். ஒரு அந்தரங்கமான இடத்தில், அல்லது, மக்கள் கண்ணுக்குப்படாத அளவுதூரம் தொலைவான ஒரு இடத்தில் ஒருவர் துணி எதுவும் இல்லாது வெயிலில் இங்கும் அங்குமாக நடந்து வெயில் ஸ்நானம் செய்யலாம். இப்படிப்பட்ட இடம் எளிதாகக் கிடைக்காவிட்டால், ஒரு கோவணம் அல்லது லங்கோட்டை மட்டும் கட்டித் தனது மர்மப்பகுதியை மறைத்துவிட்டு, தனது உடலில் உள்ள மற்ற பகுதிகளிலெல்லாம் வெயில் படுமாறு செய்யலாம்.[26]

வெயில் ஸ்நானங்களால் அனுகூலமடைந்த பலரை நான் அறிவேன். க்ஷயரோகத்துக்கு அது ஒரு நல்ல சிகிச்சையாகும்.[27]

ஆறாத புண்கள்கூடப் பல சந்தர்ப்பங்களில் வெயில் ஸ்நானத்தால் ஆறியிருக்கின்றன.[28]

## காற்று

### காற்றின் அவசியம்

பஞ்சபூதங்களில் ஐந்தாவது பொருளான காற்று, முந்திய பக்கங்களில் விவரிக்கப்பட்ட மற்ற நான்கு பூதங்களையும் போன்றே முக்கியமான ஒன்றாகும். மனித உடலே பஞ்ச பூதங்களால் ஆகியிருக்கிறது. ஆகையால் இவைகளில் ஒன்று இல்லாமல்கூட மனித உடல் செயல்படமுடியாது. ஆகையால் யாரும் காற்றைப்பற்றி அஞ்சவேண்டியதில்லை. பொதுவாக நம்முடைய மக்கள் எங்கெல்லாம் செல்கிறார்களோ அங்கெல்லாம் வெயிலும் காற்றும் தங்கள்மீது படாமல் இருக்க என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளை யெல்லாம் செய்து தங்கள் உடல் நலத்தைக்

கெடுத்துக்கொள்கிறார்கள். நல்ல, சுத்தமான காற்று உள்ள திறந்த வெளியில் வாழும் பழக்கத்தை ஒருவர் கைக்கொள்வாரானால், உடல் கெட்டிப்படும். இப்படிப்பட்டவருக்கு ஜலதோஷமோ மற்றும் அதைப்போன்ற நோய்களோ வரா.[29]

## வைத்திய உதவியின் வரம்பு

### மருந்து தருவது உண்மை உதவியா?

அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் செயல் படத் தொடங்கியபின், பல ஊழியர்களின் வேலைத் திட்டத்தில் வைத்திய உதவி ஒரு முக்கிய அங்கம் வகிக்கிறது. சிலர் விஷயத்தில் அதுதான் கிட்டத்தட்ட ஒரே அங்கமாக இருக்கிறது. அலபதி அல்லது ஆயுர் வேதம் அல்லது யூனானி அல்லது ஹோமியோபதி மருந்துகளைத் தனித்தனியாகவோ அல்லது சேர்த்தோ இலவசமாக வழங்கி இந்த உதவியைச் செய்கின்றனர். மருந்து வியாபாரிகளை ஊழியர்கள் அணுகி ஒரு சில மருந்துகளைக்கேட்டால், அவர்கள் அதைத் தரத் தயாராய் இருக்கிறார்கள். ஏனெனில் இந்த மருந்தின் கிரயம் மிகவும் குறைச்சலே. மேலும் சுயநல அடிப்படையில் கவனித்தாலும் இந்த மருந்தை இலவசமாக மேற்கண்ட வியாபாரிகள் கொடுப்பதால் அவர்களுக்கு அதிக வாடிக்கைக்காரர்கள் வந்து சேருவார்கள். இவ்வாறு, நல்ல எண்ணம் படைத்த, ஆனால் போதிய அளவு விஷயம் அறியாத, அல்லது அளவுக்குமீறி உற்சாகம் கொண்ட ஊழியர்களுக்கு ஏழை நோயாளிகள் பலியாகின்றனர். இந்த மருந்தில் முக்கால் பங்குக்கு மேல் உபயோகமற்றவை. அதுமட்டுமல்ல, யார் உட்கொள்கிறார்களோ அவர்களுடைய உடலுக்கும் கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலும் தீங்கு பயக்கக் கூடியவை. நோயாளிகளுக்கு இது ஏதாவது தற்காலிக நிவாரணம் அளிப்பதாயிருந்தாலும் இவைகளைப்போன்ற (நிவாரணம் அளிக்கக்கூடிய) பொருள்களை நாம் கிராமக் கடைகளிலேயே வாங்கலாமே?

### நோயற்ற வாழ்வே முக்கியம்

ஆகையால் நான் விவரித்த மாதிரியான வைத்திய உதவியை அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் தனியாக விட்டுவிடுகிறது. அதனுடைய பிரதான நோக்கம், சுகாதார சம்பந்தமான விஷயங்களையும் சிக்கனத்தையும் கற்பிப்பதாகும். இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவையல்லவா? கோடிக்கணக்கான மக்களுடைய விஷயத்தில் நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமல்லவா? இவர்களுடைய உடல் தான், இவர்

களுக்கான சொத்தை உற்பத்திசெய்து கொடுக்கும் சாதனம்; இவர்களுடைய அறிவல்ல. ஆகையால், இந்தச் சங்கம், நோய்த் தடுப்புமுறைகளைக் கற்றுக்கொடுக்கிறது. கோடிக்கணக் கான மக்களுடைய உணவில் போதிய உணவுச்சத்து இல்லை யென்பது எல்லோரும் அறிந்ததுதான். அதேசமயம் தாம் சாப் பிடும் பொருள்களையும் அவர்கள் துஷ்பிரயோகம்தான் செய் கிறார்கள். அவர்களுக்கு சுகாதாரத்தைப்பற்றிய அறிவு கொஞ்ச மும் இல்லை. கிராம சுகாதாரம் எவ்வளவு மோசமாக இருக்க முடியுமோ அவ்வளவு மோசமாய் இருக்கிறது. ஆகவே, இந்தக் குறைபாடுகளைச் சரியாக்க வேண்டுமானால், மக்கள் சாதாரண மான சுகாதார விதிகளை அறிந்துகொள்ள வேண்டுமானால், அதிக முயற்சியோ பணச்செலவோ இல்லாமல் இப்போது அவர்களை வருத்திக்கொண்டிருக்கிற பல நோய்கள் அகல வேண்டும். அதனால் தான் கிராமக் கைத்தொழில் சங்கம் ஆஸ்பத்திரிகள் திறப்பதைப் பற்றி எண்ணவில்லை. கிராமங்களில் என்னென்ன மருந்துகள் கிடைக்கும் என்பதைக் கண்டுபிடிக்க இப்போது ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. *சதிஷ்பாபு மலிவான மருந்துகளைப் பற்றி எழுதியுள்ள நூல் இப்படிப்பட்ட ஒரு முயற்சியாகும். இந்த மருந்துகள் எல்லாம் மிகமிக எளியமுறையில் தயாரிக்கக் கூடியவைதான். ஆயினும் இவைகளின் வேகம் குறையாமலே, (மருந்துகளின்) எண்ணிக்கையைக் குறைப்பதுபற்றி அவர் இப் போது ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார். அவர் கடை மருந்து களைச் சோதனைசெய்து பார்க்கிறார். பிரிட்டிஷ் மருந்து நூலில் (British Pharmacopoeia) கூறப்பட்டுள்ள மருந்துகளின் தரப்படி அவை இருக்கின்றனவா என்பதையும் ஒப்பிட்டுவரு கிறார். எண்ணற்ற விந்தையான மாத்திரைகள், ஊசிகள் ஆகிய வற்றின் பயங்கரத்திலிருந்து எளிய கிராமவாசிகளைக் காப் பாற்றுவதே அவர் நோக்கம்.[30]

### வைத்திருக்கவேண்டிய மருந்துகள்

காய்ச்சல், மலச்சிக்கல், அல்லது இவைகளைப்போன்ற சாதா ரண வியாதிகளுக்குக் கிராமவாசிகள் ஊழியர்களின் உதவியை நாடி வந்தால், அவர்கள் தங்களால் இயன்ற உதவி அளிக்க வேண்டியதுதான். நோய் இன்னது என்று நிச்சயமாகத் தெரிந் தால், கிராமக் கடைமருந்துதான் விலை குறைந்ததும் சிறந்ததும் ஆகும். மருந்துகளை யாரும் சொந்தமாக இருப்பு வைத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்பினால், விளக்கெண்ணெய்,

* "வீட்டு, கிராம வைத்தியர்"; சதிஷ் சந்திர தாஸ் குப்தா இயற்றியது: வெளியிட்டோர்: காதி பிரதிஸ்தான், 15, காலேஜ் ஸ்கொயர், கல்கத்தா.

கொயினு, வெந்நீர் ஆகிய மூன்றுந்தான் சிறந்த மருந்துகள். விளக்கெண்ணெயை உள்ளூரிலேயே வாங்கலாம். நிலவாகை இலையும் இதே பலன் அளிக்கும். கொயினு மருந்தை அடிக்கடி உபயோகிக்கக்கூடாது. எல்லாக் காய்ச்சலுக்குமே கொயினு மருந்து அவசியம் இல்லை. எல்லாக் காய்ச்சலுமே கொயினு மருந்தினுல் இறங்கி விடுவதுமில்லை. பெரும்பாலான சந்தர்ப்பங் களில், அரைகுறை உண்ணுவிரதம் இருப்பதாலோ (உணவைக் குறைத்துக்கொள்வதாலோ) அல்லது முழு உண்ணுவிரதம் இருப்ப தாலோ காய்ச்சல் இறங்கி விடுகிறது. தானியங்கள், பருப்பு, பால் ஆகியவற்றை உண்ணுது, பழச்சாறு அல்லது கொதிக்க வைத்த திராட்சை ரசம் சாப்பிடுவது அல்லது வெல்லம் கலந்த வெந்நீருடன் புது எலுமிச்சை அல்லது புளிரசம் சேர்த் துச் சாப்பிடுவது ஆகியவைகளை "அரைகுறை உண்ணுவிரதம்" என்று சொல்லலாம். கொதித்த நீரானது ஒரு சக்திவாய்ந்த மருந்தாகும். அதனுல் நன்கு மலம் கழியும், வியர்வை வரும், காய்ச்சல் குறைந்துவிடும். அதுதான் மிகவும் பாதுகாப்பான, விலை மலிவான கிருமிநாசினி. வெந்நீர் குடிக்க விரும்பும்போது, எவ்வளவு சூடு தாங்குமோ அவ்வளவு சூடுவரை வெந்நீரைக் குளிர வைக்கவேண்டும். தண்ணீரை முதலில் கொதிக்க வைக்க வேண்டும்; சூடாக்குவது மட்டும் போதாது. தண்ணீர் நன்ருகக் கொதித்து, நுரை கிளம்பி ஆவியாக மாறுந்தருணத்தில்தான் அது கொதித்ததாகும்.

### வைத்தியர் உதவி எப்போது ?

என்ன செய்வதென்று ஊழியர்களுக்குத் தெளிவாகத் தெரியாவிட்டால், அந்தந்தக் கிராமத்தில் இருக்கும் நாட்டு வைத்தியர் தனது விருப்பப்படி சிகிச்சை அளிக்க விட்டுவிட வேண்டும். ஆனுல் சில கிராமங்களில் இப்படிப்பட்ட வைத்தி யர்கள் கிடைக்காமல் போகலாம். அல்லது இருக்கும் வைத்தியர் களும் நம்பிக்கைக்கு ஏற்றவர்களாக இல்லாமல் இருக்கலாம். அவ்வித சந்தர்ப்பங்களில், பக்கத்தில் தாராள மனேபாவங் கொண்ட டாக்டர் இருந்து, அவரும் கிராம ஊழியருக்குத் தெரிந் தவராக இருந்தால், அவருடைய உதவியை நாடலாம்.

### இயற்கைதான் சிறந்த வைத்தியர்

ஆனுல் நோயைக் குணப்படுத்துவதற்குக் கூடத் துப்புரவில் கவனம் செலுத்துவதுதான் சிறந்த வழி. இதைக் கிராம ஊழியர் களும் அனுபவத்தில் காணுவார்கள். இயற்கைதான் சிறந்த வைத்தி

யர் என்பதை ஊழியர்கள் ஞாபகத்தில் கொள்வார்களாக! மனிதன் எதைச் சேதப்படுத்துகிருனே அதை இயற்கை செம்மை செய்கிறது. இதை அவர்கள் நிச்சயமாக நம்பலாம். ஆனல் தொடர்ந்து மனிதன் முட்டுக்கட்டை போடும்போது, இயற்கையும் சக்தியற்றதாகிவிடுகிறது. அப்போதுதான், மராமத்துச் செய்ய முடியாத நிலையில், கடைசியாகவும் மறுக்க முடியாதவாறும் மரண மென்னும் தனது கடைசி மருத்துவனை இயற்கை அனுப்பி வைக்கிறது. அப்போது இந்த உடல் என்னும் ஆடை கிழிக்கப்பட்டு, இந்த ஆத்மாவுக்கு வேருெரு ஆடை அளிக்கப்படுகிறது. ஆகையால் கிராமத் துப்புரவு, சுகாதாரம் ஆகியவற்றுக்காகச் சேவை செய்யும் தொண்டர்களே சிறந்த உதவியாளர்கள். ஒருவருக்கு இது தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் அவருக்குச் சிறந்த வைத்தியர்களும் இவர்கள்தான்.[31]

**நன்கொடையின் பலாபலன்**

பல ஸ்தாபனங்களின் கிராமப் பணியிலும் சமூக சேவையிலும் வைத்திய தர்மம் முக்கிய பங்கு வகிக்கிறது. எனக்குக் கிடைக்கும் இந்த ஸ்தாபனங்களின் அறிக்கைகளிலிருந்து இதை அறிகிறேன். நோயாளிகளுக்கு மருந்துகளை விநியோகிப்பதன் மூலம் இந்தச் சேவை செய்கிருர்கள். இவ்வாறு மருந்துகளை விநியோகிப்பதாக அறிவிப்பவரிடம் மக்களும் ஏராளமாக வந்து கூடுகின்றனர். மருந்து கொடுப்பவருக்கு இது ஒன்றும் அதிகக் கஷ்டமில்லை. நோய்களைப் பற்றியோ அவைகளின் அடையாளங்களைப் பற்றியோ அவர் தெரிந்திருக்க வேண்டியதில்லை. இவைகளை அளிக்கும் சில மருந்துக் கடைக்காரர்களிடமிருந்து இந்த மருந்துகளை இலவசமாக அவர் வாங்குகிருர். சில நன்கொடையாளர்கள் தாங்கள் எதற்காக நன்கொடை அளிக்கிருர்கள் என்பதை ஆராய்ந்து பார்த்துக்கொண்டிருப்பதில்லை. துன்புறும் சமுதாயத்துக்கு உதவும் ஏதாவதொரு தர்ம காரியத்துக்கு நன்கொடை அளிக்க முடிந்தால் அவர்கள் மனச்சாட்சி திருப்தி அடைகிறது. அவர்களிடமிருந்து எப்போதுமே நன்கொடை வாங்கலாம்.

**''குறும்பான'' சமூக சேவை**

இப்படிப்பட்ட சமூக சேவை மிக மிகச் சோம்பேறித்தனமானது என்பது எனது கருத்து. பல சந்தர்ப்பங்களில் குறும்புத்தனமானதுங்கூட. ''கொடுத்த மாத்திரையை விழுங்கினல் போதும்; நோயாளி வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை''

என்ற நிலைமையில் அது குறும்புத்தனமாகிவிடுகிறது. இந்த மருந்து சாப்பிடுவது அறியாமையே. சொல்லப்போனால் முன் இருந்ததற்கும் மோசமான நிலையிலேயே அவன் இருக்கிறான். "இலவசமாகவோ அல்லது மிகக் குறைந்த செலவிலோ மாத்திரை அல்லது மருந்து வாங்கலாம்; அது நமது நோயையும் குணப்படுத்தி விடும்" என்ற எண்ணமானது, மறுபடியும் அவ்வாறு செய்யுமாறு தான் அவனைத் தூண்டும். இப்படிப்பட்ட உதவியை இலவசமாக அடைவதால், அவனுடைய சுயமரியாதையும் பாதிக்கப்படுகிறது. சுயமரியாதை உள்ள ஒரு மனிதன் இலவசமாக எதையும் பெற மறுத்துவிட வேண்டும்.

**வைத்திய உதவி**
**கடைசி அம்சம்**

ஆனால் வைத்திய உதவியிலேயே வரப்பிரசாதமான ஒரு முறை இருக்கிறது. வியாதிகளின் தன்மையை அறிந்தவர்கள் அளிக்கும் உதவிதான் அது. குறிப்பிட்ட நோய்களின் காரணம் என்ன, அதைத் தடுப்பது எப்படி என்பதை இவர்கள் விளக்குவார்கள். இப்படிப்பட்ட தொண்டர்கள் இரவு, பகல் என்று பாராது எல்லா நேரத்திலும் உதவி அளிக்கத் தயாராய் இருப்பார்கள். இப்படிப்பட்ட உதவி சுகாதாரத்தில் பாடங் கற்பிப்பதாகும்; எவ்வாறு சுத்தமாக இருக்க வேண்டும், எவ்வாறு உடல்நலத்துடன் இருக்க வேண்டும் என்பதைக் கற்றுக் கொடுப்பதாகும். ஆனால் இத்தகைய தொண்டு அபூர்வமானதாகவே இருக்கிறது. வைத்திய உதவி பற்றிப் பல ஸ்தாபனங்கள் தங்களுடைய அறிக்கைகளில் குறிப்பிடுவனவற்றில் பெரும்பாலானவை வெறும் விளம்பரமே. இதைப் போன்று இலகுவான முயற்சியுடனும் குறைந்த அறிவைக் கொண்டும் செய்யக் கூடிய மற்ற நடவடிக்கைகளுக்கு நன்கொடை வாங்குவதற்காக இந்த விளம்பரம் செய்யப்படுகிறது. ஆகையால் நகரங்களிலும் கிராமங்களிலும் சேவை செய்யும் சமூக ஊழியர்களை நான் ஒன்று கேட்டுக்கொள்கிறேன். வைத்திய உதவி அளிப்பதைத் தங்களுடைய சேவையில் கடைசி அம்சமாகவே அவர்கள் வைத்துக்கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட உதவியைப் பற்றிக் குறிப்பிடாமலே விட்டு விடுவதும் நலமாகும். தங்கள் தங்கள் பகுதிகளில் நோய் வராமல் தடுக்க முயல்வதே ஊழியர்கள் செய்யக் கூடிய சிறந்த சேவை. மிக மிகக் குறைந்த அளவிலேயே அவர்கள் தங்களிடம் மருந்துகளை வைத்துக்கொள்ள வேண்டும். கிராமக் கடைகளில் கிடைக்கும் மருந்துகளின் குணங்களை அவர்கள் அறிந்திருக்க வேண்டும். முடிந்தவரை அவைகளையே உப

யோகப்படுத்த வேண்டும். அப்போது அவர்கள் வெந்நீரும் வெயி லும் சுத்தமான உப்பும் சோடாவும்—அவ்வப்போது சில சந்தர்ப்பங் களில் விளக்கெண்ணெய் அல்லது கொயினு சேர்த்துக்கொண் டால்—பல நோய்களைத் தீர்க்கும் என்பதை அறிவார்கள். சிந்தியில் (வார்தா அருகேயுள்ள ஒரு கிராமம்) நாங்கள் கண்ட அனுபவத்தை அவர்களும் காண்பார்கள். கடுமையான நோய் உள்ளவர்களையெல் லாம் நாங்கள் அரசாங்க ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிடுகிறோம். சுகா தாரம் பற்றியும் நோய் வராது தடுப்பது எப்படியென்பதையும் அறிந்து கொள்வதற்காக மீரா பென்னிடம் நோயாளிகள் வந்து கூடி விடுகின்றனர். ஏதாவது ஒரு பொடி அல்லது 'மிக்ஸ்சர்' மருந் தைக் கொடுக்காமல், இவ்வித வைத்திய உதவி அளிப்பது நோயாளிகளிடம் மனவருத்தத்தை ஏற்படுத்துவதில்லை.[32]

# அத்தியாயம் 25

# உணவு

### உணவின் அவசியம்

மனிதன் காற்றும் தண்ணீரும் இல்லாமல் வாழ முடியாது என்பது உண்மையே. ஆனல் அதே சமயம் உடலுக்கு வலுக் கொடுப்பது உணவுதான். அதனல்தான் உணவே வாழ்வு என்று கூறுகிருர்கள்.

### பால், முட்டை

உணவை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்; சைவ உணவு, புலால் உணவு, கலப்பட உணவு என்பவை அவை. இதில் புலால் உணவு என்பதில் கோழி, மீன் ஆகியவைகளும் அடங்கும். பால் என்பது மிருகங்களிலிருந்து கிடைக்கும் ஒரு உணவு. ஆகையால் அதை நூற்றுக்கு நூறு சைவ உணவில் சேர்க்க முடியாது. அது பெரும் அளவு மாமிசத்தின் தேவையைப் பூர்த்தி செய்கிறது. வைத்தியர்களுடைய பரிபாஷையில் அது 'பிராணி உணவு' என்றே அழைக்கப்படுகிறது. ஆனல் ஒரு சாதாரண மனிதன் அதை மிருக உணவாகக் கருதுவதில்லை. அதற்கு மாருக, முட்டைகளைச் சாதாரண மனிதர்கள் கூட மாமிச உணவாகக் கருதுகிருர்கள். உண்மையிலோ அவை மாமிச உணவல்ல.

### மனிதன் "இயற்கையில் சைவன்"

உடற் கூறு அமைப்பின்படி பார்த்தால், மனிதன் சைவ உணவினனுகவே இருக்க வேண்டும் என்று வைத்தியத் துறையில் உள்ளவர்களில் ஒரு சார்பினர் ஆணித்தரமாகக் கருதுகின்றனர். இவர்களுடைய எண்ணிக்கை வளர்ந்து கொண்டும் வருகிறது. ஆனுலும், மருத்துவத் துறையில் உள்ளவர்களில் பெரும்பாலானவர்கள் கலப்பட உணவையே ஆதரிக்கிருர்கள். மனிதனுடைய பல், அவன் வயிறு, குடல் முதலியவைகளை கவனித்தால் அவன் சைவ உணவினனுக இருக்கப் பிறந்தவன் என்பதை இயற்கை மெய்ப்பிப்பதாகவே தோன்றுகிறது.

### சைவ உணவுப் பொருள்கள்

சைவ உணவில் தான்யங்கள், பருப்புவகைகள், உண்ணக் கூடிய வேர்கள், கிழங்குகள், இலைகள் ஆகியவற்றைத் தவிர

காய்ந்தோ, அப்போதுதான் பழுத்தோ உள்ள பழங்களும் அடங்கும். இவைகளில் வாதுமை, அக்கு ரோட்டு, பிஸ்தா முதலிய கொட்டை களும் அடங்கும்.

### பால் பற்றிய பிரதிக்ஞை

சுத்தமான சைவ உணவையே நான் எப்போதும் ஆதரித்து வந்திருக்கிறேன். ஆனல் நல்ல ஆரோக்கியத்துடன் உடல் இருக்க வேண்டுமானல், சைவ உணவில் பாலும் பாலில் இருந்து உற்பத்தி செய்யப்பட்ட தயிர், வெண்ணெய், நெய் போன்ற பொருள்களும் அவசியம் என்பதை அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது. நான் முதலில் கொண்டிருந்த கருத்தில் ஏற்பட்ட முக்கியமான மாறுதல் இது. என்னுடைய உணவில் ஆறு ஆண்டுகள் நான் பாலை விலக்கி வைத்திருந்தேன். இவ்வாறு விலக்கி வைத்ததால் எவ் விதக் கெடுதலும் ஏற்பட்டதாக அப்போது எனக்குத் தெரிய வில்லை. ஆனல் 1917 ஆம் ஆண்டில் என்னுடைய சொந்த அறி யாமையின் காரணமாகக் கடுமையான சீதபேதிக்கு நான் உள்ளா னேன். அதனல் எலும்புந் தோலுமாக நான் ஆய்விட்டேன். அப் படிப்பட்ட நிலையிலும் எந்த மருந்தையும் உட்கொள்ள நான் கண் டிப்பாக மறுத்து விட்டேன். அதே கண்டிப்போடு பாலையோ அல்லது மோரையோ உட்கொள்ளவும் மறுத்துவிட்டேன். ஆனல் என்னல் எனது உடலைக் குணப்படுத்தவோ அல்லது படுக்கையை விட்டு எழுந்திருக்கும் அளவு பலம் பெறவோ முடியவில்லை. பாலை உட்கொள்வதில்லையென்று நான் பிரதிக்ஞை எடுத்துக்கொண் டிருந்தேன். “இப்படிப்பட்ட பிரதிக்ஞை எடுத்துக் கொண்ட போது நீங்கள் பசு அல்லது எருமை மாட்டுப் பாலை மட்டும்தான் நினைத்துக் கொண்டிருந்திருப்பீர்கள். ஆகை யால் ஆட்டுப்பாலை உட்கொள்வதற்கு உங்கள் பிரதிக்ஞை தடையாக இருக்க முடியாது” என்று வைத்திய நண்பர் ஒருவர் எனக்கு ஆலோசனை கூறினர். என்னுடைய மனைவி இந்தக் கருத்தை ஆதரித்தாள். நானும் இணங்கினேன். உண்மையைச் சொல்ல வேண்டுமானல், பாலை விட்டு விடுவதென்று முடிவு செய்த ஒருவன்—அவன் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டபோது அவ னுடைய மனதில் பசு அல்லது எருமைப் பாலைத்தான் நினைத்துக் கொண்டு இருந்திருக்கலாமென்ருலும்—எல்லாப் பாலையுமே விலக்கி விடத்தான் வேண்டும். எல்லா மிருகங்களிடமிருந்து கிடைக்கும் பாலிலும் ஒரே வகையான உணவுச் சத்துக்களே சேர்ந்திருக் கின்றன. ஆனல் ஒவ்வொரு மிருகத்தின் பாலுக்கும் இந்த உணவுச் சத்துக்கள் கலந்திருக்கும் விகிதம் வேண்டுமானல் வேறுபடலாம்.

ஆகையால் இந்தப் பிரதிக்ஞையின் 'வாசகத்தை' நான் காப் பாற்றினேனே தவிர, அதன் உண்மையான சாரத்தைக் காப் பாற்றவில்லை யென்று கூறலாம். இது ஒரு புறம் இருக்க, உடனடி யாக ஆட்டுப்பால் கொண்டு வரப்பட்டது. நானும் அதைக் குடித்து விட்டேன். அது எனக்குப் புத்துயிர் அளித்தது போல் தோன்றியது. வேகமாக எனது உடல் நலம் அபிவிருத்தி அடைந்தது. விரைவில் நான் படுக்கையை விட்டு எழுந்தேன். இதனுலும் மற்றும் இது போன்ற பல அனுபவங்களாலும், கண்டிப் பான சைவ உணவில் பாலைச் சேர்க்க வேண்டியது அவசியம் என் பதை நான் ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனல் ஒன்று மட்டும் எனக்கு உறுதியாகத் தோன்றுகிறது. பாலி லிருந்தும் மாமிசத்திலிருந்தும் நாம் பெறும் அத்தியாவசியப் பொருள்களை அளிக்கக்கூடிய ஒரு பொருள் உலகில் இருக்கும். இவ் வளவு பரந்த தாவர உலகில் இப்படிப்பட்ட ஏதாவது ஒரு பொருள் இருக்கத்தான் செய்யும். மாமிசத்திற்கும் பாலுக்கும் உள்ள குறை கள் - அவை தார்மிகக் குறைபாடுகளாக இருந்தாலும் சரி, மற்றக் குறைபாடுகளாக இருந்தாலும் சரி - இல்லாததாகவும் இப்பொருள் இருக்கும்.

### மாமிசம், பாலில் குறைபாடு

பால் அல்லது மாமிசம் சாப்பிடுவது நிச்சயமாகக் குறைபாடு உள்ளதுதான் என்பது எனது கருத்து. மாமிசம் கிடைப்பதற்காக நாம் மிருகங்களைக் கொல்ல வேண்டியிருக்கிறது. மேலும், நம் முடைய குழந்தைப் பருவத்தில் நாம் அருந்தும் தாய்ப்பாலைத் தவிர வேறு எந்தப் பாலுக்கும் நமக்கு உரிமை கிடையாது. இந்த உணவு களை உண்பதனல் தார்மிக அடிப்படையில் குறைபாடுகள் உள்ளன. அது மட்டுமல்லாது, சுகாதாரத்தை மட்டும் எடுத்துக் கொண்டா லும் குறைபாடுகள் இருக்கின்றன. மிருகத்தினிடம் உள்ள நோய் அதன் மாமிசம் அல்லது பாலிலும் இருக்கத்தான் செய்யும். வீட்டில் நாம் வளர்க்கும் கால்நடைகள் எப்போதுமே பூரண உடல் நலம் உள்ளவைகளாய் இருக்கும் என்பதில்லை. மனிதனைப்போலவே கால்நடைகளுக்கும் எண்ணற்ற வியாதிகள் வருகின்றன. இந்தக் கால்நடைகளை நாம் அவ்வப்போது வைத்திய பரிசோதனை செய்தாலுங்கூட, அவைகளுக்குள்ள சில வியாதிகளைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடுகிறோம். மேலும், இந் தியாவில் உள்ள கால்நடைகளையெல்லாம் வைத்திய பரி சோதனை செய்வதென்பதும் சாத்தியமற்ற ஒரு பகீரதப் பிரயத் தனம். குறைந்தது தற்போதைக்காவது அப்படித்தான் நிலைமை

இருக்கிறது. சேவாகிராம ஆசிரமத்தில் நான் ஒரு பண்ணை நடத்துகிறேன். மருத்துவ நண்பர்களிடமிருந்தும் நான் எளிதாக உதவி பெற முடியும். ஆயினும் சேவா கிராமத்துப் பண்ணையில் உள்ள எல்லாக் கால்நடைகளுமே உடல் நலத்துடன் இருக்கின்றன வென்று நான் கூற முடியாது. அதற்கு மாறாக, எல்லோரும் நல்ல உடல் நலத்துடன் இருப்பதாகக் கருதிய ஒரு பசுவுக்கு க்ஷயரோகம் இருப்பது பின்னால் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த நோயைக் கண்டு பிடிப்பதற்கு முன், இந்தப் பசுவின்பால் ஆசிரமத்தில் நாள்தோறும் பயன்படுத்தப்பட்டு வந்தது. சுற்றுப்புறங்களிலுள்ள விவசாயிகளிட மிருந்தும் ஆசிரமத்திற்குப் பால் வாங்குகிறார்கள். அவர்களுடைய கால்நடைகள் வைத்திய பரிசோதனை செய்யப்பட்டவையல்ல. ஒரு குறிப்பிட்ட பால், அருந்துவதற்குத் தகுதியானதா இல்லையா என் பதைத் தீர்மானிப்பது கடினமானதாகும். பாலைக் கொதிக்க வைப்ப தால் என்ன பாதுகாப்புக் கிடைக்கிறதோ, அந்தப் பாதுகாப்புடன் நாம் திருப்தியடைய வேண்டியிருக்கிறது. ஆசிரமத்திலேயே கால் நடைகளை நூற்றுக்கு நூறு வைத்திய பரிசோதனை செய்ய முடியா தென்றால், தனது பால் பண்ணையில் உற்பத்தியாகும் பொருள்கள் பாதுகாப்பானவைதான் என்பதை உறுதிப்படுத்த முடியா தென்றால், மற்ற இடங்களில் இதைக் காட்டிலும் எப்படி நல்ல நிலைமை இருக்கும் என்று சொல்ல முடியும்? பால் தரும் கால்நடை களின் விஷயத்தில் எந்த அளவு இது உண்மையோ அதைக் காட்டி லும் பன்மடங்கு மாமிசத்துக்காக வதை செய்யப்படும் கால் நடை களின் விஷயத்தில் உண்மையாகும். பொதுவாக, இப்படிப்பட்ட அபாயங்களிலிருந்து தப்புவதற்கு மனிதன் தனது அதிர்ஷ்டத் தையே நம்பியிருக்கிறான். அவன் தன்னுடைய உடல் நலத்தைப் பற்றி அதிகம் அலட்டிக் கொள்வதில்லை; டாக்டர்கள், வைத்தியர் கள், ஹகீம்கள் ஆகியவர்களைக் கொண்ட வைத்தியக் கோட் டைக்குள் தான் பத்திரமாய் இருப்பதாகக் கருதுகிறான். எப்படிச் சொத்துத் தேடுவது, சமூகத்தில் எவ்வாறு அந்தஸ்துப் பெறுவது என்பதிலேயே பிரதானமாய் அவனுடைய அக்கறையும் மனக்கவலையும் இருக்கிறது. இந்தக் கவலை ஒன்றே மற்றவைகளை யெல்லாம் மறைத்து விடுகிறது. ஆகையால் சுயநல மற்ற விஞ்ஞானி ஒருவன் பொறுமையாக ஆராய்ச்சி நடத்திப் பாலுக்கும் மாமிசத்திற்கும் பதிலாக, தாவரப் பொருள் ஒன்றைக் கண்டுபிடித்தாலொழிய, மனிதன் மாமிசத்தையும் பாலையும் சாப் பிட்டுக் கொண்டுதான் இருப்பான். சைவம், அசைவம் ஆகிய இரண்டும் கலந்த உணவைப் பற்றி இப்போது நாம் கவனிப்போம். தசை வளர்ச்சிக்கான சில பொருள்கள் உடம்புக்குத் தேவைப்படு

கின்றன. உடம்பின் வளர்ச்சிக்கு உதவவும், அன்றாடம் செல வாகும் சக்தியை ஈடுகட்டவும் இப்பொருள்கள் அவசியம். ஆகை யால் இப்பொருள்களை அளிக்கக்கூடிய உணவு மனிதனுக்குத் தேவைப்படுகிறது. உடலுக்கு வேண்டிய சக்தி, கொழுப்பு, சில வகை உப்புக்கள் ஆகியனவும் கழிவுப் பொருள்களை வெளியே தள்ளக்கூடிய பொருள்களும் அதில் இருக்க வேண்டும். தசையை வளர்க்கக்கூடிய பொருள்கள் "புரதம்" என அழைக்கப்படுகின்றன. பால், மாமிசம், முட்டை, பருப்பு, கொட்டை ஆகியவற்றில் புரதம் கிடைக்கிறது. இவைகளில் பாலிலும் மாமிசத்திலும் உள்ள புரத மானது எளிதாக ஜீரணிக்கக் கூடியதும் உடலில் சாரக் கூடியது மாகும். ஆகையால் தாவர புரதங்களைக் காட்டிலும் இது அதிக மதிப்பு வாய்ந்ததாகும். மாமிசத்தைக் காட்டிலும் பால் உயர்ந்தது. மாமிசம் ஜீரணமாக முடியாதவர்களுக்குக்கூடப் பால் எளிதாக ஜீரணமாகிறது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். சைவ உணவு உண்பவர்களுக்கு மிருக புரதத்தை அளிக்கக் கூடிய ஒரே பொருள் பால்தான். ஆகையால் அது ஒரு முக்கியமான உணவுப் பொருளாகும். எல்லாப் புரதங்களிலுமே மிக எளிதாக ஜீரணமா கக் கூடியது பச்சை முட்டைகளிலிருந்து கிடைக்கக் கூடிய புரதம் தான் என்று கருதப்படுகிறது.

**ஆடையெடுத்த பால்**

ஆனால் எல்லோருமே பால் சாப்பிட முடியாது. எல்லா இடங் களிலுமே பால் கிடைப்பதும் இல்லை. மேலும் பாலைப் பொறுத்த வரை மிக முக்கியமான ஒரு விஷயத்தை இங்கு கூற விரும்பு கிறேன். சாதாரணமாக மக்கள் நினைப்பதற்கு மாறாக, ஆடை யெடுத்த பால் நல்ல உணவுப் பொருளாகும். ஆடையெடுக்காத பாலைவிட இது அதிக உபயோகமாகவிருக்கும் சந்தர்ப்பங்களும் உண்டு. தசை வளர்ச்சிக்கும் சத்திழந்த தசைக்குச் சத்து அளிப் பதற்கும் வேண்டிய மிருக புரதச் சத்து அளிப்பதுதான் பாலின் முக்கிய உபயோகம். பாலிலிருந்து ஆடையை எடுப்பதால், ஓரளவு கொழுப்புச் சத்துப் போய்விடுகிறது என்றாலும், அது புரதங் களையே பாதிப்பதில்லை. மேலும் தற்போது ஆடையெடுக்கப் பயன் படுத்தப்படும் சாதனங்களில் எதுவுமே, பாலில் உள்ள கொழுப் பைப் பூரணமாக அகற்றிவிட முடியாது. அப்படி எடுக்கக்கூடிய கருவியைச் செய்வதும் சாத்தியமாகத் தோன்றவில்லை.

**உணவுத் தான்யங்கள்**

ஆடையெடுத்த அல்லது எடுக்காத பாலைத் தவிர மற்றப் பொருள்களும் உடம்புக்குத் தேவையாய் இருக்கின்றன.

கோதுமை, அரிசி, சோளம், கம்பு முதலிய உணவுத் தான்யங் களுக்கு நான் இரண்டாவது இடமே அளிக்கிறேன். இவைகள் தான் பிரதான உணவுப் பொருள்களாக உபயோகப்படுத்தப்படு கின்றன. இந்தியாவில் வெவ்வேறு மாகாணங்களில், வெவ் வேறு உணவுத் தான்யங்கள் பிரதான உணவுப் பொருளாக உப யோகப்படுத்தப்படுகின்றன; பல இடங்களில் ஒரே சமயத்தில், ஒன்றுக்கு மேற்பட்ட தான்யங்கள் உண்ணப்படுகிறன. உதாரண மாக, கோதுமை, கம்பு, அரிசி ஆகியவை அடிக்கடி சேர்த்துப் பரி மாறப்படுகின்றன. உடல் ஊட்டத்திற்கு இவ்வாறு சேர்க்க வேண் டியதில்லை. உட்கொள்ளப்படும் உணவின் அளவை ஒழுங்கு படுத்துவதை இது கஷ்டமாக்கி விடுகிறது; ஜீரணிப்பதிலும் கஷ் டத்தை ஏற்படுத்தி விடுகிறது. இத்தனை வகைப்பட்ட தான்யங் களும் "ஸ்டார்ச்" என்ற மாவுப் பொருளையே பிர தானமாக அளிப்பதால், இவைகளில் ஒன்றே ஒன்றை மட்டும் ஒரு சமயம் சாப்பிட்டால் போதுமானது. உணவுத் தான்யங்களுக்கே மன்னன் கோதுமை தான் என்று கூறலாம். உலகப் படத்தை நாம் பார்த்தோமானால், கோதுமைதான் முதல் இடம் வகிக்கிறது. சுகாதாரக் கண்ணோட்டத்துடன் பார்த்தாலும் கோதுமை மட்டும் நமக்குக் கிடைப்பதானால் அரிசியும் மற்ற உணவுத் தான்யங்களும் அவசியமற்றவையாய் விடுகின்றன. கோதுமை கிடைக்காதிருந் தாலும், மனதிற்குப் பிடிக்காததாலோ அல்லது ஜீரணிப்பதற்குக் கஷ்டமாக இருப்பதாலோ சோளம் முதலிய உணவுத் தான்யங் களை உட்கொள்ளா விட்டாலும், அரிசியைத்தான் நாட வேண்டும்.

**அரிசியும் தவிடும்**

உணவுத் தான்யங்களை நன்றாகக் கழுவி விடவேண்டும்; திரிகையில் போட்டு அரைக்க வேண்டும். இவ்வாறு அரைத்த மாவை அப்படியே உபயோகிக்க வேண்டும். மாவைச் சல்லடை போட்டுச் சலிப்பது கூடாது. இது அதன் மேல்தொலியை அகற்றி விடலாம். இதுதான் உப்புச் சத்து, உணவுச் சத்து ஆகிய இரண் டிற்குமே பிரதானமான மூலஸ்தானம். உணவு ஊட்டத்தைப் பொறுத்தவரை உப்புச் சத்தும் உணவுச் சத்தும் மிகமிக முக்கிய மானவையாகும். இந்த மேல் தோலி மலத்தை இளக்க உதவக் கூடிய கனமான பொருள்களையும் அளிக்கிறது. அரிசித் தான்ய மானது ஒரு நுண்மையான பொருளாக இருப்பதால், அதற்கு வெளியே ஒரு மூடியை அதாவது உமியை இயற்கை அமைத்திருக் கிறது. இது ஜீரணிக்கக் கூடியதல்ல. ஜீரணிக்க முடியாத இப்பகு

தியை அகற்றுவதற்காக, அரிசியை நாம் குத்த வேண்டியதிருக் கிறது. ஆனால் இவ்வாறு நாம் நெல்லைக் குத்தும்போது, வெளியில் உள்ள உமியை மட்டும் அகற்றுவதுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். ஆனால் இயந்திரத்தில் நெல்லை அரைப்பதானது இந்த உமியை அகற்றுவது மட்டுமல்லாது, அரிசியில் உள்ள தவிட்டையும் அகற்றி அரிசியை வெள்ளை வெளேரென்று தீட்டி விடுகிறது. இவ் வாறு நன்கு தீட்டப்பட்ட அரிசி பிரபல்யமடைந்திருப்பதற்குக் காரணம் நீண்ட காலம் வைத்திருப்பதற்கு இது உதவியாக இருக் கிறது என்பதுதான். தவிடு இனிப்பாக இருக்கிறது. ஆகவே அதை அகற்றினாலொழிய அரிசியில் சில வகைப் பூச்சிகள் எளிதாக விழுந்துவிடும். தீட்டப்பட்ட அரிசியும் தவிடு இல்லாத கோதுமை யும் நமக்கு மாவுப் பொருளை மட்டுமே தரும். தவிட்டுடன் உணவுத் தான்யத்தில் உள்ள முக்கியமான பொருள்கள் போய்விடு கின்றன. அரிசித் தவிடு தனியாக விற்கப்படுகிறது. இதையும் கோதுமைத் தவிட்டையும் சமைத்துச் சாப்பிடலாம். இவைகளைச் சப்பாத்தியாகவோ அல்லது பலகாரமாகவோ செய்து சாப்பிட லாம். அரிசிச் சோற்றைக் காட்டிலும் அரிசிச் சப்பாத்தியானது எளிதாக ஜீரணிக்கக் கூடியதாக இருக்கலாம். ஆகையால் அவை களைக் குறைத்துச் சாப்பிட்டால்கூடப் பூரண திருப்தியளிக் கின்றன.

### மென்று சாப்பிடுதல்

சப்பாத்தியின் ஒவ்வொரு துண்டையும் காய்கறிக் கூட்டிலோ அல்லது பருப்பிலோ தொட்டுக் கொண்டு சாப்பிடுவதுதான் நமக் குப் பழக்கம். இதன் பலனாக, அநேகர் நன்றாக மெல்லாமலேயே தங்களுடைய உணவை விழுங்கி விடுகிறார்கள். ஜீரணிப்பதில் உள்ள பல கட்டங்களில் — அதுவும் மாவுப் பொருளைப் பொறுத்த வரை யில் — மென்று சாப்பிடுவது ஒரு முக்கியமான காரியமாகும். வாயில் உள்ள உமிழ் நீருடன் கலக்கும்போதுதான் ஸ்டார்ச்சின் ஜீரணம் தொடங்குகிறது. ஆகையால் ஸ்டார்ச்சினால் ஆக்கப் பட்ட பொருள்களை அதிகமாக 'ஊற வைக்காது' சாப்பிட வேண்டும். இவ்வாறு செய்வதனால் அதிகமான உமிழ் நீர் ஊறு கிறது; நன்றாகச் சுவைத்துத் தின்பதையும் அவசியமாக்குகிறது.

### பருப்பு அவசியமில்லை

மாவுப் பொருள்களைக் கொடுக்கும் உணவுத் தான்யங்களுக்கு அடுத்தபடியாக புரதச் சத்தை அளிக்கக் கூடிய பீன்ஸ், துவரை, காராமணி போன்ற பருப்பு வகைகள் இருக்கின்றன. உணவில் பருப்பு ஒரு அத்தியாவசிய அம்சம் என்று எல்லோருமே நினைப்

பதாகத் தோன்றுகிறது. மாமிசம் சாப்பிடுகிறவர்கள் கூடப் பருப்பு வேண்டுமென்கிறுர்கள். கடினமான உடல் உழைப்புச் செய்ய வேண்டியிருப்பவர்கள், பால் சாப்பிடுவதற்கு வசதியில்லாத வர்களாய் இருந்தாலும் இருக்கலாம். ஆனல் பருப்பில்லாமல் இருக்க முடியாது என்பது உண்மைதான். ஆனல் நான் எவ் விதத் தயக்கமும் இல்லாமல் இதை உறுதியாகச் சொல்ல முடியும்: உட்கார்ந்து வேலே செய்யும் குமஸ்தாக்கள், வியாபாரிகள், வழக் கறிஞர்கள், டாக்டர்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கும் பால் வாங் கக்கூடிய அளவு வசதியுள்ளவர்களுக்கும் பருப்பு அவசியமில்லே. சாதாரணமாக, பருப்பு வகைகளே ஜீரணிப்பது மிகவும் கஷ்டமாகும். பொதுவாக, உணவுத் தான்யங்களேக் காட்டிலும் இவை குறைந்த அளவிலேயே உட்கொள்ளப்படுகின்றன. பருப்பு வகைகளில் பட்டாணி, கடலே, பீன்ஸ் ஆகியவை மிகக் கடினமாக ஜீரணிக்கக் கூடியவை யென்றும் பாசிப் பருப்பு, மசூர் பருப்பு ஆகிய வகைகள் மிக எளிதாக ஜீரணிக்கக் கூடியவை யென்றும் கருதப்படுகின்றன.

**காய்கறி, பழம்**

காய்கறிகளும் பழங்களும் நம்முடைய பட்டியலில் மூன்ருவது இடத்தைத்தான் பெற வேண்டும். இந்தியாவில் இவை மலிவா கவும் எளிதாகவும் கிடைக்கும் என்றுதான் யாரும் எதிர்பார்ப் பார்கள். ஆனல் உண்மையில் அப்படியில்லே. அவைகள் நகர மக்களுக்கான உயர்ந்த உணவுப் பொருள் வகைகளாகவே பொது வாகக் கருதப்படுகிறது. கிராமங்களில் புத்தம் புதிய காய்கறிகள் என்பவை கிடைப்பது அரிதாக இருக்கிறது. பெரும்பாலான இடங் களில் பழமே கிடைப்பதில்லே. இவ்வாறு காய்கறிகளும் பழங்களும் பற்ருக் குறையாக இருப்பது இந்தியாவில் ஆட்சி நடத்துபவர்களு டைய குறையைத்தான் காண்பிக்கிறது. கிராம மக்கள் விரும்பினல், நிறையக் காய்கறிகளேப் பயிரிட முடியும். பழத்தைப் பற்றிய பிரச்னேயை அவ்வளவு எளிதாகத் தீர்க்க முடியாது. கிரா மத்தார் கண்ணேட்டத்தில் பார்த்தால் நிலச்சட்டம் தவருனதாகும். ஆனல் நான் இப்போது எடுத்துக்கொண்ட விஷயத்தைவிட்டு விலகிச் செல்கிறேன்.

**காய்கறிகள்**

புத்தம் புதிய காய்கறி வகைகளில், இலேகள் உள்ள காய்களே ஒவ்வொரு நாளும் சாப்பிட வேண்டும். மாவுச் சத்தைப் பிரதான மாக அளிக்கக் கூடிய உருளேக் கிழங்கு, சர்க்கரைவள்ளிக் கிழங்கு, சேப்பங் கிழங்கு முதலிய கிழங்கு வகைகளே நான் இதில் சேர்க்க வில்லே. மாவுப் பொருள்களேத் தரக்கூடிய உணவுத் தான்யங்களில்

ஒன்றாகவே இவைகளைக் கருத வேண்டும். சாதாரண புதுக் காய் கறிகளை ஒரு குறிப்பிட்ட அளவு சேர்த்துக்கொள்வது நலமாய் இருக்கும். வெள்ளரிக்காய், தக்காளி, உணவுக்கு உதவும் காரச் சத்துள்ள இலை வகைகள், மற்ற கீரை வகைகள் ஆகியவற்றைச் சமைக்க வேண்டியதில்லை. அவைகளை நன்றாகக் கழுவிவிட்டு, ஒரு அளவில் அப்படியே பச்சையாகச் சாப்பிட்டுவிட வேண்டும்.

### பழங்கள்

பழங்களைப் பொறுத்தவரை, அந்தந்தப் பருவ காலங்களில் கிடைக்கும் பழங்களை நமது அன்றாட உணவில் சேர்த்துக்கொள்ள வேண்டும். உதாரணமாக, மாம்பழம், நாவல்பழம், கொய்யாப் பழம், திராட்சை, பப்பாளி, எலுமிச்சை—புளிக்கும் எலுமிச்சை அல்லது இனிக்கும் எலுமிச்சை—ஆரஞ்சு, சாத்துக்குடி முதலியவை. பழங்கள் சாப்பிடுவதற்குச் சிறந்த நேரம் அதிகாலையே யாகும். பழத்தையும் பாலையும் காலை ஆகாரமாக உட்கொண்டால் அது முழு மனத் திருப்தி அளிக்கும். அதிகாலையில் சாப்பிடும் பழக்கம் உள்ளவர்கள், காலை ஆகாரமாகப் பழத்தை மட்டும் சாப்பிடலாம்.

### வாழைப் பழம்

வாழைப் பழம் ஒரு நல்ல பழம். ஆனால் மாவுச் சத்து அதில் நிறைய இருப்பதால், ரொட்டிக்குப் பதிலாக அது பயன்படுகிறது. பாலும் வாழைப் பழமும் ஒரு நல்ல உணவாகும்.

### நெய், எண்ணெய்

ஒரு குறிப்பிட்ட அளவு கொழுப்புச் சத்தும் அவசியமே. நெய் அல்லது எண்ணெயாக இதை உட்கொள்ளலாம். நெய் கிடைப்பதாக இருந்தால், எண்ணெய்க்கு அவசியமே இல்லை. எண்ணெயை ஜீரணிப்பது கஷ்டம். மேலும் அது சுத்தமான நெய்யைப் போன்று உணவு ஊட்டம் உள்ளதாகவும் இல்லை. ஒவ்வொரு நாளைக்கும் தலைக்கு ஒன்றரை அவுன்சு நெய் கிடைத்தால் அது நம்முடைய உடலின் தேவைகளைப் பூர்த்தி செய்யப் போதுமானதாகும். ஆடை யெடுக்கப்படாத பாலும் நெய்ச் சத்தை அளிக்கக் கூடியதுதான். நெய் சாப்பிட முடியாதவர்கள், கொழுப்பின் தேவையை ஈடுகட்டுவதற்குப் போதுமான எண்ணெயை உட்கொள்ள வேண்டும். எண்ணெய்களில் நல்லெண்ணெய், கடலை எண்ணெய், தேங்காயெண்ணெய் ஆகியவைகளுக்கு முதலிடம் தர வேண்டும். எண்ணெய் புதிதாக எடுக்கப்பட்டதாய் இருக்க வேண்டும். செக்கு எண்ணெய் கிடைப்பதாக இருந்தால்

அது சிறந்தது. பொதுவாக, கடையில் விற்கப்படும் எண்ணெயும் நெய்யும் மோசமானவை. இது மிகவும் வருந்தத் தக்கதும் வெட்கப்படத் தக்கதுமாகும். ஆனால், சட்டத்தின் மூலமோ கல்விமூலமோ வாணிக நெறியில் சத்தியம் இன்றியமையாத அம்சமாக வேண்டும். அவ்வாறு ஆகாதவரை, பொறுமையுடனும் எச்சரிக்கையாகவும் இருந்து சுத்தமான சாமானை நாம் வாங்க வேண்டும். தரத்தைப் பார்க்காது, கிடைத்தது போதும் என்று ஒருவர் திருப்தியடைந்துவிடக் கூடாது. நாற்றமடித்த எண்ணெயையும் கலப்படமான எண்ணெயையும் உட்கொள்வதற்குப் பதிலாக நெய்யும் எண்ணெயும் உபயோகிக்காமலே விட்டு விடுவது எவ்வளவோ நல்லதாகும். கொழுப்பைப் போலவே ஒரு குறிப்பிட்ட அளவு சர்க்கரையும் அவசியமானதாகும். இனிப்புப் பழங்களில் நிறையச் சர்க்கரை இருக்கிறதென்றாலும், ஒரு நாளைக்கு ஒன்றிலிருந்து ஒன்றரை அவுன்சு சர்க்கரை-பழுப்புச் சர்க்கரையோ வெள்ளைச் சர்க்கரையோ-சாப்பிடுவதில் தீங்கு எதுவும் இல்லை. ஒருவருக்கு இனிப்புப் பழங்கள் கிடைக்காவிட்டால் சர்க்கரை அவசியமாக இருக்கும். ஆனால் தற்போது இனிப்புப் பண்டங்களுக்கு அளவுக்கு மீறி முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அது தவறாகும். நகர மக்கள் அளவுக்குமீறி இனிப்புப் பண்டங்கள் சாப்பிடுகிறார்கள். பால் கோவா, மற்றும் பாலால் செய்யப்பட்ட இனிப்புப் பண்டங்கள், மற்றவகை இனிப்புப் பண்டங்கள் ஆகியவைகளை நிறையச் சாப்பிடுகிறார்கள். அவைகள் எல்லாம் அவசியமற்றவை. மிகச் சிறிய அளவில் உட்கொண்டாலொழியத் தீங்கு பயக்கக் கூடியவை. கோடிக்கணக்கான மக்களுக்கு இந்தியாவில் வயிறார உணவுகூடக் கிடைப்பதில்லை. அப்படிப்பட்ட ஒரு நாட்டில் இனிப்புப் பண்டங்களையோ மற்ற நல்ல உணவு வகைகளையோ சாப்பிடுவது கொள்ளையடிப்பதற்குச் சமமாகும். இவ்வாறு நான் கூறுவது மிகைப்படுத்திக் கூறுவதாகாது.

**நெய்யில் வறுப்பது அவசியமா ?**

இனிப்பு விஷயத்தில் எது உண்மையோ அது அதே அளவு நெய், எண்ணெய் விஷயத்திலும் உண்மையேயாகும். எண்ணெய், அல்லது நெய்யில் வறுக்கப்பட்ட பொருள்களைச் சாப்பிட வேண்டிய அவசியமே இல்லை. பூரிகளும் லட்டுகளும் செய்வதற்காக நெய்யை உபயோகப்படுத்துவது யோசனையற்ற வீண் விரயமாகும். இப்படிப்பட்ட உணவு வகைகளைச் சாப்பிட்டுப் பழக்கமில்லாதவர்கள், இவைகளைச் சாப்பிடவே முடியாது. உதாரணமாக, நம்முடைய நாட்டுக்கு முதன் முதலாக ஆங்கிலேயர்கள் வந்தபோது அவர்களால் நம்முடைய இனிப்புப் பண்டங்களையும்

வறுவல்களையும் சாப்பிடவே முடியவில்லை. இவைகளை உண்பவர்களும் அடிக்கடி நோய் வாய்ப்படுவதை நான் பார்க்கிறேன். ருசி என்பது நம்முடன் கூடப் பிறந்தது அல்ல; பழக்க வழக்கத்தினால் வருவது. பசியால் உணவுக்கு ஒரு ருசி ஏற்படுகிறதே அந்த ருசியை உலகிலுள்ள தின்பண்டங்களெல்லாம் சேர்ந்தாலும் தர முடியாது. பசியால் வாடும் ஒரு மனிதன் ஒரு காய்ந்த ரொட்டித் துண்டை மிகுந்த ருசியுடன் சாப்பிடுவான். ஆனால் பசியில்லாதவனோ மிகவும் ருசியாக உள்ள ஒரு இனிப்புப் பண்டத்தையும் மறுத்துவிடுவான்.

**பசியிலிருந்து ருசி**

எந்த அளவு, எத்தனை தடவை ஒருவன் சாப்பிட வேண்டும் என்பதை இப்போது பார்ப்போம். உடம்பைக் காப்பாற்றுவதற்கான ஒரு கடமையாக நாம் உணவைச் சாப்பிட வேண்டும். மருந்தைப் போல் சாப்பிட வேண்டும். ஒரு போதும் ருசிக்காகச் சாப்பிடக் கூடாது. ஆகவே, உண்மையான பசியைத் தீர்ப்பதன் மூலம் ஒரு இன்ப உணர்ச்சியைப் பெறுகிறோம். ஆகையால் பசியிலிருந்து ருசி வருகிறதே தவிர அதற்கு வெளியேயிருந்தல்ல என்று நாம் கூற முடியும். தவறான பழக்க வழக்கங்களின் காரணமாகவும் செயற்கையான வாழ்க்கை முறையின் காரணமாகவும் தங்களுடைய உடலுக்குத் தேவையான உணவு என்ன வென்பதையே மக்கள் அறியாதவர்களாய் இருக்கின்றனர். நம்மை உலகிற்கு அளிக்கிறார்களே அந்தப் பெற்றோர்களும் பொதுவாக மனக் கட்டுப்பாடு உள்ளவர்களாய் இருப்பதில்லை. அவர்களுடைய பழக்க வழக்கங்களும் வாழ்க்கை முறையும் குழந்தைகளுடைய வாழ்க்கையில் ஓரளவு எதிரொலிக்கின்றன. கர்ப்பமாக இருக்கும் காலத்தில் ஒரு பெண் உட்கொள்ளும் உணவானது நிச்சயம் குழந்தையைப் பாதிக்கத்தான் செய்யும். இதற்குப் பின்னாலும் குழந்தை வயிற்றுக்குள் நிறைய ருசியான உணவுப் பண்டங்களைத் தாய் திணிக்கிறாள். தான் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் உணவுப் பொருளில் குழந்தைக்கு ஒரு சிறிது கொடுத்துக் கொண்டேயிருக்கிறாள். இதனால் குழந்தையின் ஜீரணக் கருவிகள் அப் பருவத்திலிருந்தே தவறான இயல்புடையவையாகிவிடுகின்றன. ஒரு தடவை ஒரு பழக்க வழக்கம் உண்டாகிவிட்டால் அதைப் போக்குவதென்பது கடினம். ஒரு சிலர்தான் கெட்ட பழக்க வழக்கங்களை அகற்றுவதில் வெற்றி பெறுகிறார்கள். “நானே எனக்கு மெய்க் காவலன். என்னுடைய உடல் சேவைக்காகப் படைக்கப்பட்டது” என்ற உணர்வு ஒரு மனிதனுக்கு ஏற்பட்டுவிடும் போது உடம்பை நல்ல நலத்துடன் வைத்திருப்பதற்கான விதி முறைகளைக் கற்றுக்

கொள்ள விரும்புகிருன்; அவைகளைக் கடைப்பிடிக்கவும் கஷ்டப் பட்டு முயற்சி செய்கிருன்.

## உணவின் அளவு

பல்வேறு வகை உணவுகளும் ஒரு மனிதனுக்கு எந்த அளவுக் குத் தேவை என்பதைக் கவனிக்க வேண்டிய கட்டத்துக்கு நாம் வந்துவிட்டோம். இந்தப் புஸ்தகத்தைப் படிப்பவர்களில் பெரும் பாலான ஆண்களும் பெண்களும் அதிகச் சரீர உழைப்பு இல்லாத வர்களாய் இருப்பார்கள். ஆகையால், இவர்களுடைய உணவுப் பொருள்கள் எவ்வாறு அமைந்திருக்க வேண்டும் என்பதைப் பார்ப் போம் :—

| | | |
|---|---|---|
| பசும் பால் | 2 | இராத்தல் |
| உணவுத் தான்யங்கள் | 6 | அவுன்சு |
| (கோதுமை, அரிசி, கம்பு எல்லாம்) | | |
| கீரை | 3 | ,, |
| காய்கறி | 5 | ,, |
| பச்சைக் காய்கறி | 1 | ,, |
| நெய் | 1½ | ,, |
| (அல்லது) | | |
| வெண்ணெய் | 2 | ,, |
| வெல்லம் அல்லது வெள்ளைச் சர்க்கரை | 1½ | ,, |

ஒருவருடைய விருப்பத்துக்கும் அவரால் செலவிட முடிந்த அளவுக்கும் ஏற்றவாறு பழம் சாப்பிடலாம். ஒரு நாளைக்கு இரண்டு எலுமிச்சம் பழம் சாப் பிடுவது நல்லதாகும். எலுமிச்சம் பழச்சாரைப் பிழிந்து காய்கறிகளுடன் சேர்த்துச் சாப்பிடலாம். அல்லது தண்ணீரிலேயோ வெந்நீரிலேயோ கலந்து சாப்பிடலாம்.

நான் மேலே குறிப்பிட்டுள்ள நிறுவைகளெல்லாம் சமைக்கும் முன்பு உள்ள நிறுவைகள். எவ்வளவு உப்புச் சேர்க்க வேண்டும் என்பதை நான் கூறவில்லை. ஒருவர் ருசிக்கு ஏற்றபடி கடைசியில் உப்பைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

## 3 வேளைச் சாப்பாடு

ஒரு நாளைக்கு ஒருவன் எத்தனை தடவை சாப்பிடுவது என்ற பிரச்னைக்கு இப்போது வருவோம். அநேகர் ஒரு நாளைக்கு இரண்டு முறை சாப்பிடுகிருர்கள். மூன்று முறை சாப்பிட வேண் டும் என்பது பொது விதி; காலையில் வேலைக்குப் போகும் முன்பு சாப்பிடும் ஆகாரம், மதிய உணவு, மாலை அல்லது இரவில் இராச் சாப்பாடு. மூன்று வேளைக்குமேல் சாப்பிட வேண்டிய அவசியம் இல்லை. நகரங்களில் சிலர் ஓயாதுமென்றுகொண்டேயிருக்கிருர் கள். இந்தப் பழக்கம் தீங்கு பயக்கக் கூடியது. ஜீரணக் கருவி களுக்கு ஓய்வு வேண்டும்.[1]

## அத்தியாயம் 26

# கிராமப் பாதுகாப்பு

### சாந்தி சேனை

கலவரங்களை — குறிப்பாக, வகுப்புக் கலவரங்களைச் சமாளிப்பதில் தங்களுடைய உயிரையும் பலிகொடுக்கக்கூடியவர்களைக்கொண்ட ஒரு சாந்தி சேனையை அமைக்கவேண்டும். சில காலத்திற்கு முன்பு நான் இந்த யோசனையைக் கூறினேன். அவ்வாறு நான் கூறியதன் நோக்கம், இந்தப்படை, போலீசாருக்குப் பதிலாக, ஏன் இராணுவத்திற்குப் பதிலாகக் கூடப் பணியாற்றவேண்டும் என்பதே. இது அளவுக்கு மீறிய ஆசை எனக் கருதப்படலாம். இது சாதிக்க முடியாததாகவும் இருக்கலாம். ஆயினும் காங்கிரஸ் தனது அஹிம்சைப் போராட்டத்தில் வெற்றியடைய வேண்டுமானல், இப்படிப்பட்ட நிலைமைகளைச் சமாதானமாகச் சமாளிக்கத் தகுந்த சக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

### தகுதிகள்

ஆகவே, இவ்வித சாந்தி சேனையில் உறுப்பினனாக விரும்பும் ஒருவனுக்கு என்னென்ன தகுதிகள் இருக்கவேண்டும் என்பதைப் பார்ப்போம்.

(*1*) அவனுக்கு அஹிம்சையில் அழியாத நம்பிக்கை இருக்க வேண்டும். ஆனல் இதுவோ ஆண்டவன்மீது ஆழ்ந்த நம்பிக்கை இல்லாமல் சாத்தியமில்லை. கடவுளின் சக்தியும் கிருபையும் இல்லாது, அஹிம்சாவாதி எதுவும் செய்ய முடியாது. அவை இல்லாவிட்டால், கோபமோ அச்சமோ இன்றி பதிலுக்குப் பதில் எதுவும் செய்யாமல் சாகும் தைரியம் அவனுக்கு வராது. கடவுள் எல்லோருடைய இதயத்திலும் இருக்கிறார், கடவுள் முன்னிலையில் பயம் என்பதே இல்லை என்ற நம்பிக்கையிலிருந்து தான் இவ்விதத் தைரியம் ஏற்படுகிறது. கடவுள் எங்கும் இருக்கிறாராதலால், எதிரிகள் என்றும் குண்டர்கள் என்றும் கூறப்படுபவர்கள் உயிருக்கும் நாம் மதிப்பு வைக்க வேண்டும் என்றாகிறது. மனிதனுடைய மிருக சக்தி அதிகமாகி அவனுடைய கோபம் மிகும்போது அதை அமைதிப்படுத்த இவ்வித எண்ணம் உதவுகிறது.

(2) உலகிலுள்ள முக்கியமான மதங்களையெல்லாம் இந்தச் சமாதானத் தூதுவன் சமமாக மதிக்கவேண்டும். உதாரணமாக, அவன் ஒரு இந்துவாயிருந்தால் இந்தியாவில் உள்ள மற்ற மதங்களுக்கு அவன் மரியாதை செலுத்தவேண்டும். ஆகையால் நாட்டில் உள்ள மற்ற மதங்களின் முக்கிய கோட்பாடுகளை அவன் அறிந்திருக்க வேண்டும்.

(3) பொதுவாகக் கூறினல், ஒவ்வொரு பகுதியிலும் உள்ள மக்கள் அந்தந்தப் பகுதிகளில்தான் இந்தச் சமாதான சேவையைச் செய்ய முடியும்.

(4) தனிப்பட்ட ஒருவராக இருந்து இந்தச் சேவையைச் செய்யலாம். கூட்டமாகச் சேர்ந்தும் செய்யலாம். ஆகையால் யாரும் சகாக்களுக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. எனினும் ஒருவர் தன் பகுதியில் உள்ள சகாக்களைச் சேர்த்துக் கொண்டு ஒரு படையை அமைப்பார்.

(5) இந்த சமாதானத் தூதுவர், தான் வாழும் பகுதியிலோ அல்லது தான் சேவை செய்யும் பகுதியிலோ உள்ள மக்களுடன் பழகித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அப்போது தான் கலகம் ஏற்படும் சமயத்தில் அவர் அந்த இடத்துக்குச் சென்ருல், கூட்டத்தில் இருப்பவர்கள் அவரை ஒரு அந்நியர் என்ரே, சந்தேகிக்கப்படத் தக்கவர் என்ரே, விரும்பத் தகாதவர் என்ரே கருதமாட்டார்கள்.

(6) சமாதானத் தூதுவர், யாருங் குறைகூற முடியாதவாறு பரிசுத்தமான ஒழுக்கமுடையவராய் இருக்கவேண்டும்; பாரபட்சமற்றமுறையில் கண்டிப்பாக நடந்து கொள்வார் என்ற பெயர் பெற்றவராய் இருக்கவேண்டும் என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை.

(7) பொதுவாகப் புயல் வருமுன், அதன் அறிகுறி தோன்றும். ஆகவே, ஏதாவது கலவரம் நடக்கப்போவதற்கான அறிகுறிகள் தோன்றினல், கலவரம் வரட்டும் என்று சாந்தி சேனை காத்திருக்காது. முன்கூட்டியே நிலைமையைச் சமாளிக்கும் பணியில் முனைந்துவிடும்.

(8) இந்த இயக்கம் வளர்ச்சியடைந்தால் முழுநேர ஊழியர்கள் சிலர் இருப்பது நல்லதுதான். ஆனலும், கட்டாயம் முழுநேர ஊழியர்கள் இருந்தாகவேண்டும் என்பதில்லை. அதாவது, எவ்வளவு அதிகப்படியான நல்ல, உண்மையான ஆண்களையும் பெண்களையும் சேர்க்கவேண்டுமோ, அவ்வளவு அதிகமானவர்களைச் சேர்க்கவேண்டும் என்பது நோக்கம். இது சாத்தியமாக

வேண்டுமானல், வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் இருப்பவர்கள் தொண்டர்களாகச் சேரவேண்டும். தங்கள் தங்கள் பகுதிகளில் வாழும் மக்களுடன் நல்லுறவுத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளப் போதுமான ஓய்வு உள்ளவர்கள் தொண்டர்களாகச் சேரவேண்டும். மற்றவகைகளிலும் சாந்தி சேனை உறுப்பினர்களாகச் சேருவதற்கு வேண்டிய தகுதி உள்ளவர்களாக இவர்கள் இருக்கவேண்டும்.

(9) சாந்தி சேனையைச் சேர்ந்தவர்கள் ஒரு குறிப்பிட்ட ஆடையை அணிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான், காலப்போக்கில் எவ்விதச் சிறு கஷ்டமும் இல்லாமல் இவர்களை அடையாளம் தெரிந்து கொள்ளமுடியும்.

இவைகளெல்லாம் பொதுவான ஆலோசனைகள்தான். இவைகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு சாந்தி சேனை நிலையமும் தனது சொந்த விதியமைப்பை வகுத்துக்கொள்ளலாம்.[1]

### போலீஸ் படைபற்றி என் கருத்து

ஒரு அஹிம்சை அரசாங்கத்தில் கூட, போலீஸ் படை அவசியமாகவே இருக்கும். இவ்வாறு நான் கூறுவது, பூரணத்துவம் அடையாத என்னுடைய அரைகுறை அஹிம்சையின் ஒரு சின்னமாக இருக்கலாம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இராணுவம் இல்லாமல் நாம் வாழமுடியும் என்று கூற எனக்குத் தைரியம் இருக்கிறது. ஆனல் அதைப் போன்று போலீஸ் படையில்லாமல் நாம் வாழமுடியும் என்று கூற எனக்குத் தைரியம் வரவில்லை. போலீஸ் அவசியமில்லாத ஒரு காலத்தை என்னல் கற்பனை செய்து பார்க்க முடிகிறது; கற்பனைசெய்தும் பார்க்கிறேன். ஆனல் அதை அடைவதில் நாம் வெற்றி பெறுவோமா என்பதை எதிர்காலம்தான் நமக்கு உணர்த்தவேண்டும்.

### அஹிம்சைப் போலீஸ்

நான் கற்பனைசெய்யும் போலீஸ் படையானது நாம் இப்போது பார்க்கும் போலீஸ் படையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அஹிம்சையில் நம்பிக்கை கொண்டவர்களே அதில் இருப்பார்கள். அவர்கள் மக்களுடைய ஊழியர்களாக இருப்பார்களே தவிர எஜமானர்களாக இருக்க மாட்டார்கள். மக்கள் இயற்கையாகவே அவர்களுக்கு எல்லா வகையான உதவிகளும் செய்வார்கள். பரஸ்பர ஒத்துழைப்பின்மூலம், கலவரங்களை எளிதாகப் போலீசார் சமாளிப்பார்கள். கலவரங்கள் நடைபெறுவதும் குறைந்துகொண்டுபோகும். போலீஸ் படையிடம் ஏதாவது ஒரு

வகை ஆயுதம் இருக்கும். ஆனால் அது உபயோகப்படுத்தப்பட மாட்டாது. அப்படியே உபயோகப்படுத்தப்பட்டாலும் மிக அபூர்வ மாகவே உபயோகப்படுத்தப்படும். உண்மையில் போலீஸ் காரர்கள் சீர்திருத்தவாதிகளாய் இருப்பார்கள். திருடர்கள், கொள்ளைக்காரர்கள் ஆகியோருடைய விஷயத்தில் மட்டுந்தான் போலீஸ் வேலை நடைபெறும். அஹிம்சை அரசாங்கத்தில் தொழி லாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே நடைபெறும் சச்சரவுகள் குறைவாக இருக்கும். வேலை நிறுத்தங்களும் மிகமிகக் குறைவாக இருக்கும். ஏனென்றால், அஹிம்சையில் நம்பிக்கை கொண்டவர்கள் மிகப் பெரும்பாலானவர்களாய் இருப்பார்கள். சமுதாயத்தில் உள்ள முக்கிய சக்திகளின் நன்மதிப்பைப் பெற்றவர் களாய் அவர்கள் இருப்பார்கள். அதே போன்று, வகுப்புவாதக் கலவரங்களுக்கும் இடம் இருக்காது.[2]

### அஹிம்சைத் தொண்டர் படை

நான் தூண்டியதன்பேரில், சிறிது காலத்திற்கு முன்பு சாந்தி தளங்கள் அமைக்க முயற்சி நடந்தது. ஆனால் ஒருவிதப் பலனும் ஏற்படவில்லை. ஆயினும் ஒரு பாடத்தைக் கற்றுக்கொண்டோம். இப்படிப்பட்ட ஸ்தாபனங்களில் உறுப்பினர்களுடைய எண் ணிக்கை அதிகமாக இருக்கமுடியாது என்பதுதான் அப்படிப்பினை. சாதாரணமாக, இம்சையை அடிப்படையாகக் கொண்ட ஒரு பெரிய தொண்டர் படை திறமையுடன் செயலாற்ற வேண்டு மானால், அதன் கட்டுப்பாடு மீறப்படும்போது அது இம்சையைப் பிரயோகிக்கும் சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. இப்படிப் பட்ட அமைப்புகளில் மனிதனுடைய ஒழுக்கத்துக்கு முக்கியத் துவமே கொடுப்பதில்லை. உடல்பலம்தான் முக்கிய அம்சம். அஹிம்சை ஸ்தாபனங்களில் இதற்கு மாறான நிலைமை இருக்க வேண்டும். அவைகளில், ஒழுக்கம் அல்லது ஆன்மிக சக்திக்குத் தான் எல்லாவிதமான உயர்வும் அளிக்கப்படவேண்டும். உடல் பலத்துக்கு இரண்டாவது இடம்தான் அளிக்கவேண்டும். இவ்வாறு ஒழுக்கம் அல்லது ஆன்மிக சக்தி உள்ள பலரை நாம் பார்க்கமுடியாது. ஆகவேதான் அஹிம்சைப் படை ஒன்று திறமையுடன் செயலாற்ற வேண்டுமானால், அது சிறிதாக இருக்கவேண்டியிருக்கிறது. இவைகள் நாடெங்கும் பரவலாக அமைக்கப்பட்டிருக்கலாம். ஒவ்வொரு கிராமம் அல்லது மொகல்லாவிற்கும் ஒன்றுவீதம் அமைக்கப்பட் டிருக்கலாம். இதில் உள்ள உறுப்பினர்கள் ஒருவரை யொருவர் நன்றாக அறிந்திருக்கவேண்டும். ஒவ்வொரு படையும் அதன் தலை

வரைத் தானே தேர்ந்தெடுத்துக்கொள்ளும், எல்லா அங்கத்தினர்களுக்கும் சம அந்தஸ்து இருக்கும். ஆனல் பலர் ஒரு வேலையைச் செய்து கொண்டிருக்கும் ஒரு இடத்தில், எல்லோரும் கட்டுப்பாட்டுடன் பணியக்கூடிய ஒரு தலைவர் இருக்கவேண்டும். இல்லையேல் வேலை சரிவர நடைபெருது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட படைகள் இருக்கும்போது, அவற்றின் தலைவர்கள் தங்களுக்குள் கலந்து ஆலோசித்துக் கொள்ளவேண்டும்; பொதுவாக என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பதை முடிவுசெய்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான் வெற்றி கிட்டும்.

### உடற்பயிற்சி

மேற்கண்ட வழிதுறைகளில் அஹிம்சைத் தொண்டர்படை அமைக்கப்பட்டால், எந்தக் கலவரம் அல்லது தொந்தரவையும் அவை எளிதாக நிறுத்திவிடும். குஸ்திச் சண்டையில் அளிக்கப்படும் எல்லாவித உடற்பயிற்சிகளும் இப்படிப்பட்ட படைக்குத் தேவைப்படாது. ஆனல் அதில் ஒரு பகுதி அவசியமாய் இருக்கும்.

### கடவுள் நம்பிக்கை

இப்படிப்பட்ட அமைப்புகளைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் பொதுவாக இருக்கவேண்டிய ஒரு குணம்சம் இருக்கிறது. அது தான் ஆண்டவனிடம் அழியாத நம்பிக்கை. அவர்தான் நம்முடைய ஒரே சகா. அவர்தான் எல்லாவற்றையும் இயக்குபவர். அவரிடம் நம்பிக்கை இல்லாமல் இந்த சாந்தி சேனைகளெல்லாம் உயிரற்றவையாகிவிடும். ஒருவர் ஆண்டவனை என்ன பெயரிட்டு அழைத்தாலும் சரி, அவனுடைய பலத்தின்மூலந்தான் பணியாற்ற முடியும் என்பதை உணரவேண்டும். அப்படிப்பட்ட மனிதர் ஒருபோதும் மற்றொருவருடைய உயிரைப் பலிவாங்கமாட்டார். தான் பிறரால் கொல்லப்படுவதா யிருந்தாலும் அதை ஏற்கத் தயாராயிருப்பார். அதன்மூலம் மரணத்தையும் வெற்றி கண்டு உயிர்வாழ்வார்.

### குழப்பம் இருக்காது

இவ்வித உணர்வு வரப்பெற்ற ஒரு மனிதருடைய மனமானது நெருக்கடியான சூழ் நிலையிலும் குழப்பம் அடையாது. எது சரியான வழி என்பதை அவர் இயல்பாகவே உணர்ந்து செயல்படுவார்.

**சில விதிகள்**

எனினும் நான் மேலே கூறியவைகளெல்லாம் ஒருபுறம் இருக்க என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து சில விதிமுறைகளைக் கூற விரும்புகிறேன்:

1. ஒரு தொண்டர் எந்தவிதமான ஆயுதமும் கொண்டு செல்லக்கூடாது.

2. சாந்தி சேனையைச் சேர்ந்தவர்களை அடையாளங் கண்டு கொள்வது எளிதாயிருக்கவேண்டும்.

3. ஒவ்வொரு தொண்டரும் முதல் உதவி அளிப்பதற்காக, காயக்கட்டுத் துணிகள், கத்திரி, நூல், ஊசி, இரண சிகிச்சைக் கத்தி முதலியவைகளைக் கொண்டு செல்லவேண்டும்.

4. காயமடைந்தவர்களை எவ்வாறு தூக்கிச்சென்று அப்புறப் படுத்துவது என்பதை அவர் அறிந்திருக்கவேண்டும்.

5. எவ்வாறு நெருப்பை அணைப்பது, எவ்வாறு தன்னைக் காயப்படுத்திக்கொள்ளாமல் தீப்பிடித்த பகுதிக்குள் நுழைவது, நிவாரண வேலைகளுக்காக உயரமான இடங்களுக்கு ஏறிப் பத்திரமாக இறங்குவது எப்படி என்பதெல்லாம் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

6. தனது பிராந்தியத்தில் வாழ்பவர்களை யெல்லாம் அவர் நன்ருக அறிந்திருக்கவேண்டும். (இதுவே ஒரு சேவைதான்.)

7. அவர் ஓயாது இராமநாமத்தை மனதிலேயே சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். நம்பிக்கையுள்ள மற்றவர்களும் அவ்வாறு சொல்லுமாறு செய்யவேண்டும்.

மனிதன் பெரும்பாலும் கிளிப்பிள்ளையைப் போன்று ஆண்டவன் பெயரை உச்சரிக்கிருன். அவ்வாறு செய்வதற்குப் பலன் கிடைக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கிருன். ஆனல் உண்மையான பக்தனுக்கு அசையாத நம்பிக்கை வேண்டும். இவ்வித நம்பிக்கையானது, கிளிப்பிள்ளைபோன்று மனனம் செய்யும் அசத்தியம் அவனுக்குள்ளே யிருந்தால் அதைப் போக்கிவிடும். அது மட்டுமல்ல. பிறருடைய உள்ளங்களிலிருந்தும் போக்கக்கூடிய சக்தி வாய்ந்ததாக இருக்கும்.

## அத்தியாயம் 27

# கிராம ஊழியர்

## இலட்சிய கிராம ஊழியர்

வேலையையும் வாழ்க்கையையும் குறித்து, நீங்கள் கருத்தில் கொண்டு உழைக்க வேண்டிய இலட்சியத்தைப் பற்றி உங்களிடம் நான் பேச விரும்புகிறேன்.

### ஊழியம் உத்தியோகமல்ல

தற்போதுள்ள கருத்துப்படியான உத்தியோகத்திற்காக நீங்கள் இங்கு வரவில்லை. இன்று மனிதனின் மதிப்பு ரூபாய், அணா, பைசாக்களில் மதிப்பிடப்படுகிறது. ஒருவனுடைய கல்விப் பயிற்சியானது வர்த்தகப் பொருளாக இருக்கிறது. உங்கள் மனதிலும் அந்த அளவுகோலுடன் நீங்கள் வந்திருந்தீர்களானால், நீங்கள் நிச்சயம் ஏமாற்றமடையத்தான் செய்வீர்கள். உங்களுடைய படிப்புக்குப் பின், உங்களுக்குக் கௌரவ ஊதியமாகப் பத்து ரூபாய் கிடைக்கும். அந்தச் சம்பளம் அப்படியே உயராமல் நின்றுவிடும். ஒரு பெரிய தொழிற்சாலையின் நிருவாகியோ அல்லது ஒரு உயர்தர அதிகாரியோ வாங்கும் சம்பளத்துடன் நீங்கள் அதை ஒப்பிட முடியாது.

### சில புதுத் தராதரங்கள்

தற்போது நிலவும் சில தராதரங்களை நாம் மாற்ற வேண்டியிருக்கிறது. நாங்கள் உங்களுக்குப் பட்டம், பதவி எதையும் தருவதாக உறுதி கூறவில்லை. உண்மையில், இப்படிப்பட்ட ஆசையிலிருந்து உங்களைத் திருப்பவே விரும்புகிறோம். உங்களுடைய உணவுக்காகும் செலவை மாதம் 6 ரூபாய்க்குள் கட்டுப்படுத்திவிட வேண்டுமென நாங்கள் எதிர்பார்க்கிறோம். ஒரு ஐ. சி. எஸ். அதிகாரியின் உணவுக்கு மாதம் 60 ரூபாய் ஆகலாம். ஆனால் அதற்காக அவர் உடல் நலனிலோ, அறிவிலோ, தார்மிக ரீதியிலோ உங்களைக் காட்டிலும் உயர்ந்தவரா யிருப்பார் என அர்த்தமாகாது. இவ்வளவு அதிகமான செலவுள்ள வாழ்க்கை நடத்தினாலும், அவர் இந்த விஷயங்களில் உங்களுக்கு மட்டமாக இருக்கக் கூடும். நீங்கள் உங்களுடைய தகுதிகளைப் பணங்காசுகளில் அளந்து பார்க்கவில்லை யென்பது இந்த ஸ்தாபனத்துக்கு வந்ததி

லிருந்தே தெரிகிறது என்று நான் நம்புகிறேன். சொற்பத் தொகை பெற்றுக்கொண்டு நாட்டிற்கு உங்களுடைய சேவையை அளிப்பதில் நீங்கள் பேரானந்தம் அடைகிறீர்கள். பங்கு மார்க் கெட்டில் ஒருவர் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் சம்பாதிக்கலாம்; அதே சமயம் நம்முடைய காரியங்களுக்கு அவர் உபயோகமற்ற வராய் இருக்கலாம். நம்முடைய அடக்கமான சூழ்நிலைகளில் அவர் சந்தோஷமாய் இருக்க முடியாது; அவருடைய சூழ்நிலைகளில் நாமும் மகிழ்ச்சியாய் இருக்க முடியாது. நாட்டின் இலட்சியத்திற் காகப் பாடுபடக்கூடிய முன்னுதாரணமான தொழிலாளர்கள் நமக்குத் தேவை. என்ன உணவு கிடைக்கிறது, தாங்கள் தொண்டு செய்யும் கிராமவாசிகள் தங்களுக்கு என்னென்ன வசதிகள் அளிப் பதாக உறுதி கூறுகிறார்கள் என்பதைப் பற்றியெல்லாம் அவர்கள் கவலைப்பட மாட்டார்கள். தங்களுக்குத் தேவையானவற்றிற்கு ஆண்டவனையே நம்பித் தங்களுக்கு வரும் சோதனைகள், இக்கட் டுகள் ஆகியவற்றிலெல்லாம் அவர்கள் வெற்றி பெறுவார்கள். நாம் அக்கறைப்பட வேண்டிய ஏழு இலட்சம் கிராமங்கள் நம் நாட்டில் இருக்கும்போது இது தவிர்க்க முடியாதது. ஒழுங்கான சம்பள உயர்வு, சேமிப்பு நிதி, ஓய்வுகால ஊதியம் ஆகியவற்றிலெல்லாம் ஒரு கண் வைத்திருக்கும் ஊழியர்களை—சம்பளம் வாங்கும் ஊழியர் களை—வைத்து வேலை வாங்க நம்மால் முடியாது. கிராமவாசி களுக்கு விசுவாசமாகச் சேவை செய்வதுதான், அவர்களுக்கு கிடைக்கும் திருப்தி.

### கிராமவாசிகளுக்கு இந்நிலையில்லை

"இதுதான் கிராமவாசிகளின் நிலையுமா?" என்று உங்களில் சிலர் கேட்க விரும்பலாம். இல்லவே இல்லை. இந்தக் கஷ்ட நஷ்டங்களெல்லாம் ஊழியர்களாகிய நமக்கே யொழிய எஜமானர் களாகிய கிராமவாசிகளுக்கல்ல. இத்தனை வருஷங்களாக நாம் அவர்கள் முதுகின்மேல் குதிரை ஏறி உட்கார்ந்து கொண்டிருந் திருக்கிறோம். நம்முடைய எஜமானர்களுடைய நிலை இன்றிருப் பதைக் காட்டிலும் நன்கு அபிவிருத்தி அடைய வேண்டும் என்பதற் காக நாமாகவே முன்வந்து அதிக வறுமையை ஏற்க விரும்புகிறோம். இன்று சம்பாதிப்பதைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமாக அவர்கள் சம்பாதிக்க, நாம் அவர்களுக்கு உதவ வேண்டும். கிராமக் கைத்தொழில் சங்கத்தின் நோக்கமே அதுதான். நான் முன்னால் விவரித்துள்ளது போன்ற ஊழியர்கள் நிறையக்கிடைத்தா லொழிய அது வளம்பெற முடியாது. நீங்கள் அப்படிப்பட்ட ஊழி யர்களாய் இருப்பீர்களாக!

## இருக்க வேண்டிய தகுதிகள்

[ஒவ்வொரு சத்தியாக்கிரகிக்கும் கீழேயுள்ள தகுதிகள் இருக்க வேண்டுமென காந்திஜி கூறியிருக்கிறார். மகாத்மா கருத்தின்படி கிராம ஊழியரும் ஒரு உண்மையான சத்தியாக்கிரகியாகையால், இந்தத் தகுதிகள் ஊழியருக்கும் பொருந்தும்.]

—ஆசிரியர்

*1.* கடவுளிடம் அவருக்கு அழியாத நம்பிக்கை இருக்க வேண்டும்; ஏனென்றால் ஆண்டவன்தான் அவருடைய ஒரே புகலிடம்.

*2.* சத்தியத்தையும் அஹிம்சையையும் தன்னுடைய மதக் கோட்பாடாக அவர் கொள்ள வேண்டும். ஆகவே, மனித இயற்கையில் இயல்பாகவுள்ள நல்ல குணத்தில் நம்பிக்கை வைத்து, எந்தக் கஷ்டத்தையும் தான் ஏற்க முன்வர வேண்டும். அதன் மூலம் தனது சத்தியத்தையும் அன்பையும் வெளிப்படுத்திப் பிறருடைய நல்ல குணத்தைத் தூண்ட முயல வேண்டும்.

*3.* தூய்மையான வாழ்க்கை வாழ வேண்டும். தன்னுடைய இலட்சியத்துக்காகத் தனது உயிரையும் பொருளையும் மனப்பூர்வமாகத் தத்தம் செய்யத் தயாராய் இருக்க வேண்டும்.

*4.* வழக்கமாகக் கதர் அணிபவராகவும் நூல் நூற்பவராகவும் இருக்க வேண்டும். இந்தியாவைப் பொறுத்தவரை இது முக்கியம்.

*5.* அவர் மது அருந்துபவராக இருக்கக் கூடாது. போதை தரும் மற்ற பொருள்களையும் விலக்கிவிட வேண்டும். அப்போது தான் அவருடைய பகுத்தறிவு தெளிவாகவும் மனம் கலங்காமலும் இருக்கும்.

*6.* அவ்வப்போது பிறப்பிக்கப்படும் கட்டுப்பாடுகளை மனமுவந்து நிறைவேற்றி வைக்க வேண்டும்.

இவை தவிர வேறு தகுதிகளும் இருக்கின்றன; மாதிரிக்காகவே இவைகள் கூறப்பட்டுள்ளன.[2]

### ஊழியர் கடமைகள்

*1.* ஒவ்வொரு ஊழியரும், தானே நூற்ற நூலிலிருந்து நெய்யப்பட்ட கதரையோ அல்லது அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெற்ற கதரையோ வழக்கமாக அணிபவராய் இருக்க வேண்டும். மதுவை விலக்க வேண்டும். ஒரு இந்துவாக இருந்தால் எந்த முறையிலும் அவரோ அல்லது அவருடைய குடும்பமோ தீண்டாமையை அனுஷ்டிக்கக் கூடாது. வகுப்பு

ஒற்றுமையிலும், மத சமத்துவத்திலும், இன, மத, பால் வேறு பாடு இல்லாது எல்லோருக்கும் சம வாய்ப்பும் அந்தஸ்தும் இருக்க வேண்டுமென்பதிலும் நம்பிக்கை உள்ளவராய் இருக்க வேண்டும்.

2. தமது பகுதியில் உள்ள ஒவ்வொரு கிராமவாசியுடனும் நேரடித் தொடர்புகொள்ள வேண்டும்.

3. கிராமவாசிகளிலிருந்து ஊழியர்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி அளிக்க வேண்டும்; அவர்களுடைய பட்டியலைத் தயாரித்து வைத்திருக்க வேண்டும்.

4. அன்றாடம் செய்யும் வேலைகளைப் பதிவு செய்து வைக்க வேண்டும்.

5. விவசாயத்தின் மூலமும் கைவேலைப்பாட்டுத் தொழில்கள் மூலமும் கிராமங்களை சுய ஆதரவும் சுய தேவைப் பூர்த்தியும் உள்ளவைகளாக்க வேண்டும். இதற்காகக் கிராமங்களை அவர் ஒருங்கு திரட்ட வேண்டும்.

6. கிராம மக்களுக்குச் சுகாதாரத்தையும் உடல் நலத்தையும் போதிக்க வேண்டும். அவர்கள் மத்தியில் உடல் நலக் குறைவோ நோயோ ஏற்படாது தவிர்க்க எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுக்க வேண்டும்.

7. இந்துஸ்தானி தாலிமி சங்கம் வகுத்துள்ள கொள்கையின் படி, கிராமவாசிகளுக்குப் பிறப்பிலிருந்து இறப்பு வரை ஆதாரக் கல்வி முறையில் கல்வி கற்பிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

8. சட்டபூர்வமான வாக்காளர் பட்டியலிலிருந்து விட்டுப் போன பெயர்கள் உரியமுறையில் காலாகாலத்தில் அதில் இடம் பெறுமாறு செய்ய வேண்டும்.

9. வாக்குரிமைக்கு வேண்டிய சட்ட பூர்வமான தகுதிகளை ஏற்கனவே பெறுதவர்கள் அவைகளைப் பெறுமாறு ஊக்குவிக்க வேண்டும்.[3]

## கிராம சேவை

### மையம் இராட்டைதான்

கிராம ஊழியர்களின் வாழ்க்கையில் மையமாக இருப்பது கைராட்டினந்தான். கதரின் பின்னணியில் இருக்கும் தத்துவம், அது விவசாயத்திற்கு ஒரு உப தொழிலாக இருக்கிறதென்பதும் அதனுடன் சேர்ந்து மேற்கொள்ளக்கூடியதாக இருக்கிறது என்

பதுந்தான். நம் கிராமங்களில் உள்ள சோம்பேறித்தனத்தைப் போக்கி, ஒவ்வொரு கிராமத்தையும் ஒரு தேன்கூடு போன்று சுறுசுறுப்புள்ள இடமாக மாற்றும்வரை, நம் வாழ்க்கையில் இராட்டைக்குரிய இடத்தை நிலையாக அளித்துவிட்டோம் என்று கூற முடியாது.

**2 ஆழாக்கு உற்பத்தி**

கிராம ஊழியரானவர், ஒழுங்காக நூல் நூற்பது மட்டும் அல்லாது, தன் உணவுக்காக தன் வசதிப்படி வாய்ச்சி அல்லது மண்வெட்டி அல்லது செருப்புக் தைக்கும் கருவிகொண்டு வேலை செய்வார். ஓய்வுபெறும் நேரம், தூங்கும் நேரம் ஆகிய எட்டு மணி நேரம் தவிர மீதி நேரமெல்லாம், ஏதாவதொரு வேலையில் பூரணமாக ஈடுபட்டிருப்பார். வீண்பொழுது போக்க அவருக்கு நேர மிருக்காது. அவர் தானும் சோம்பேறியாக இருக்கமாட்டார்; பிறர் சோம்பேறியாய் இருப்பதையும் அனுமதிக்கமாட்டார். உற்சாகமாகப் பாடுபடக்கூடிய ஓயாத உழைப்பில் அவருடைய அண்டை அயலாருக்கு அவருடைய வாழ்க்கை ஒரு நிதரிசன முன்னுதாரணமாயிருக்கும். கட்டாயத்தின் பேரிலோ அல்லது நாமாகவோ சோம்பேறித்தனத்துக்கு இடமளித்து விடக்கூடாது. சோம்பேறித்தனம் நீங்காவிட்டால், எந்தப் பரிகாரமும் பயன்படாது. தற்போதுள்ளதைப் போன்றே என்றென்றும் அரைப்பட்டினி ஒரு பிரச்னையாக இருந்துகொண்டிருக்கும். ஒரு ஆழாக்கு உண்பவர் இரண்டு ஆழாக்கு உற்பத்தி செய்யவேண்டும். இந்த விதியை நாம் ஏற்றுக்கொண்டாலொழிய, எந்த அளவுக்குத்தான் நாம் நமது ஜனத்தொகையைக் குறைத்தாலும் அது பிரச்னையைத் தீர்க்காது. அதே சமயம், இந்த விதியை ஏற்று அனுஷ்டித்தாலோ, இதற்கு மேலும் கோடிக்கணக்கான மக்களுக்கு நாம் சாப்பாடு போட முடியும்.

**ஊழியர் வேலைகள்**

இவ்வாறாக, கிராம ஊழியரானவர் உழைப்பின் உயிருள்ள சின்னமாய் இருப்பார். பருத்தி விதை விதைப்பது, பருத்தி எடுப்பது ஆகியவற்றிலிருந்து நெசவுவரையான எல்லா வேலைகளிலும் அவர் நிபுணத்துவம் பெறுவார். அவைகளை நூற்றுக்கு நூறு சரிவரச் செய்வதிலேயே அவருடைய சிந்தனையையெல்லாம் செலுத்துவார். அவர் அதை ஒரு விஞ்ஞானமாகக் கொண்டாரானால் அது அவருக்கு வெறுப்பைத் தராது. அதனுடைய மகத்தான சாத்தியக் கூறுகளையெல்லாம் அவர் மேலும் மேலும் உணருவதற்கேற்ப அவருக்கு அதிலிருந்து நாள்தோறும் புது இன்பம் கிடைக்கும். அவர் கிராமத்துக்கு ஒரு ஆசிரியராகச் சென்றாலும்

அதே அளவுக்கு மாணவராகவும் போவார். எளிய கிராம வாசிகளிடமிருந்து எவ்வளவோ கற்றுக்கொள்ள வேண்டியிருக் கிறது என்பதை விரைவில் கண்டுகொள்வார். கிராம வாழ்க்கை யின் ஒவ்வொரு நுணுக்கத்தையும் அலசி ஆராய்வார். கிராமக் கை வேலைப்பாட்டுத் தொழில்களைப் புதிதாகக் கண்டு பிடிப்பதுடன் அவைகளின் முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்குமான சாத்தியக் கூறுகளைப்பற்றியும் ஆராய்வார். கதரைப்பற்றிய விஷயங்களில் கிராமவாசிகள் கொஞ்சங்கூட அக்கறையில்லாமல் இருப்பதை அவர் காணக்கூடும். ஆனாலும் அவர் தன்னுடைய சேவை நிறைந்த வாழ்க்கையினால் அதில் கட்டாயம் அக்கறையும் கவனமும் இருக்கு மாறு செய்வார். நிச்சயமாக அவர் தனது வரம்பை மறக்கமாட் டார். அவரைப் பொறுத்தவரை, விவசாயிகள் கடன்பட்டிருப்ப தைத் தீர்க்கும் வீண்வேலையிலும் ஈடுபடமாட்டார்.

### துப்புரவும் உடல்நலமும்

துப்புரவும் சுகாதாரமும் அவர் கவனத்தில் பெரும் பகுதி யைக் கவரும். அவருடைய வீடும் சுற்றுப்புறங்களும் சுத்தத்திற்கு ஒரு முன் மாதிரியாக இருக்கும். அது மட்டுமல்லாது, அவரே துடப்பத்தையும் கூடையையும் எடுத்துச்சென்று கிராம முழுவதி லும் துப்புரவு வளர்ச்சியடைய உதவுவார்.

### வைத்தியசாலை வேண்டாம்

கிராம ஆஸ்பத்திரி எதையும் நிறுவவோ அல்லது கிராம டாக்டர் ஆகவோ அவர் முயற்சி செய்யமாட்டார். இந்தப் படுகுழி களில் விழாமல் தப்பவேண்டும். என்னுடைய ஹரிஜன சுற்றுப் பிரயாணத்தின்போது தற்செயலாக நான் சென்ற ஒரு கிராமத்-தில் ஒருவர்—இவருக்கு இன்னும் நல்ல யோசனை இருந்திருக்க வேண்டும்—ஒரு பெரிய கட்டிடத்தைக் கட்டி அதில் ஆஸ்பத்திரி வைத்து, சுற்றுப்புற கிராமங்களுக்கு இலவசமாக மருந்துகளை விநியோகித்துக் கொண்டிருந்தார். உண்மையில் இந்த மருந்துகளை ஊழியர்கள் வீடுவீடாகக் கொண்டுபோய்க் கொடுத்தும் வந் தார்கள். அந்த ஆஸ்பத்திரியில் மாதந்தோறும் 12,000 நோயாளி கள் மருந்து வாங்குவதாய்ப் பதிவாகியிருப்பதாகப் பெருமை பாராட்டிக் கொள்ளப்பட்டது. எனது இயல்பின்படியே, நான் இதை வன்மையாகக் கண்டித்தேன். இது கிராம சேவைசெய்யும் வழியல்லவென்று அவ்ரிடம் கூறினேன். கிராமவாசிகளின் மத்தி யில் உடல் நலத்தையும் சுகாதாரத்தையும் பற்றிய பாடங்களைப் போதிக்கவேண்டும். அதன்மூலம், வந்த நோயைக் குணப்படுத்து

வதற்கான முயற்சிக்குப் பதிலாக நோயைத் தடுப்பதற்கான வழிவகைகளை எடுத்துரைக்க வேண்டும். இதுதான் அவரது கடமை. பெரிய அரண்மனை போன்ற அந்தக் கட்டிடத்தை விட்டுக் காலிசெய்யுமாறும், அதை ஸ்தலஸ்தாபனத்துக்கு வாடகைக்கு விட்டுவிடுமாறும், கூரை வேய்ந்த குடிசையில்போய் வாழுமாறும் நான் அவரைக் கேட்டுக்கொண்டேன். மருந்துகள் என்ற முறையில் ஒருவர் இருப்பு வைக்க வேண்டியவைகளெல்லாம் கொய்னு, விளக்கெண்ணெய், ஐயோடின் ஆகியவையும் மற்றும் இவைகளைப்போன்ற ஒரு சிலவும் தான். தனிப்பட்டவர்களின் சுத்தத்தையும் கிராம சுகாதாரத்தையும் பாதுகாத்து, அதை எந்த வகையிலும் நிலை நிறுத்தும் அவசியத்தை மக்கள் உணருமாறு உதவுவதில் ஊழியர் மேலும் மேலும் ஒருமித்த கவனம் செலுத்த வேண்டும்.

### அரிஜனங்கள் நலன்

இத்துடன் அவர் கிராம அரிஜனங்கள் நலனிலும் அக்கறை செலுத்துவார். அவரது இல்லம் அவர்களுக்காகத் திறந்திருக்கும். உண்மையில், தங்களுடைய கஷ்ட நஷ்டங்களில் இயற்கையாகவே அவருடைய உதவியை அவர்கள் எதிர்பார்ப்பார்கள். கிராமவாசிகள் மத்தியில் வாழ்ந்து கொண்டே அவர், தமது இல்லத்துக்குள் அரிசனங்களை அனுமதிப்பதைக் கிராமவாசிகள் அனுமதிக்க மாட்டார்களென்றால், அவர் தம்முடைய இல்லத்தை அரிஜனங்கள் வாழும் இடத்திற்கு மாற்றிக்கொள்ள வேண்டும்.

### எழுத்தறிவு முதல் முக்கியமல்ல

எழுத்தறிவுபற்றி ஒரு வார்த்தை. அதற்குரிய இடம் இருக்கத்தான் செய்கிறதென்றாலும் அளவுக்குமீறி அதை வலியுறுத்தக் கூடாது. இதை நான் எச்சரிக்கத்தான் வேண்டும். குழந்தைகள் அல்லது பெரியவர்களுக்கு முதலில் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்காமல் கிராமப் புறத்துக்கான விஷயங்களைக் கற்றுக் கொடுக்கமுடியாது என்ற அடிப்படையில் நீங்கள் உங்கள் பணியை ஆரம்பிக்கவேண்டாம். தற்போதைய உலக விவகாரங்கள், வரலாறு, பூகோளம், கணிதம் ஆகியவற்றில் எவ்வளவோ விஷயங்களை, எழுத்தைப்பற்றிய அறிவு இல்லாமலே, வாய் மூலமாகக் கற்றுக்கொடுக்க முடியும். கை வேலை செய்வதற்குமுன், கண்கள், காதுகள், நாக்கு ஆகியவை வேலை செய்கின்றன. எழுதுவதற்கு முன்பு படிப்பு, எழுத்துக்களை வரைவதற்கு முன்புசித்திரம் வரைதல், இதுவே இயற்கையான முறை. இம்முறையை நாம் பின்பற்றினால், எழுத்தறிவுடன் குழந்தைகள் பயிற்சியைத் தொடங்கும்

போது அது தடைப்படுவதைப்போல் அல்லாமல், குழந்தைகளின் விஷய ஞானம் வேகமாக வளர்ச்சியடையும் வாய்ப்பு ஏற்படும்.

**ஊழியர் உணவு**

ஊழியரின் வாழ்க்கை, கிராம வாழ்க்கையை ஒட்டியதாக இருக்கும். புத்தகங்களில் மூழ்கிக்கிடக்கும் ஒரு இலக்கிய மேதையாக, சந்தடிமிக்க சாதாரண வாழ்க்கையின் விவரங்களைக் கேட்க விரும்பாதவராக அவர் தம்மைக் காட்டிக்கொள்ளமாட்டார். அதற்கு மாருக, அவரை மக்கள் காணும்போதெல்லாம் இராட்டை, கைத்தறி, வாய்ச்சி, மண்வெட்டி போன்ற ஏதாவதொரு கருவியைக்கொண்டு உழைத்துக்கொண்டிருப்பதைப் பார்ப்பார்கள். தங்களுடைய மிகத் தாழ்ந்த வினுக்களுக்கும் அவர் எப்போதும் பதிலளிக்கத் தயாராய் இருப்பதைக் காண்பார்கள். தனது உணவுக்காகத் தானே உடல் உழைப்புச் செய்ய வேண்டுமென்பதை அவர் வலியுறுத்துவார். தமது அன்ருடத் தேவைகளுக்கும் அதிகமாக ஒவ்வொருவரும் உற்பத்தி செய்வதற்கான சக்தியை ஆண்டவன் அவர்களுக்கு அளித்திருக்கிருர். ஒருவர் மட்டும் தன்னுடைய அறிவைப் பயன்படுத்துவதானல், அவரது சக்திக்கு ஏற்ற ஒரு வேலை—அவர் திறமை எவ்வளவுதான் மட்டமாக இருந்தாலும்—கிடைக்காமற் போகாது. மக்கள் சந்தோஷமாக அவரைப் போஷிப்பார்கள் என்பது பெரும்பாலும் உண்மை. ஆனல் சில இடங்களில் அவருக்குச் சரியான வரவேற்பு இருக்காமற் போகலாம் என்பதும் உண்மைதான். அவ்வாறிருந்தாலும் அவர் தொடர்ந்து பாடுபட்டுக்கொண்டே யிருப்பார். அரிஜனங்களுக்கு ஆதரவான மன நோக்கு அவருக்கு இருப்பதால், சில கிராமங்களில் அவர் பகிஷ்கரிக்கப்படலாம். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அவர் அரிஜனங்களை அணுகி, தமது உணவுக்கு அவர்களை எதிர்பார்ப்பாராக! எப்போதுமே உழைப்புக்குத் தக்க பலன் உண்டு. அவர் உண்மையாகவே அரிஜனங்களுக்குச் சேவைசெய்வதானல், அவர்களிடமிருந்து தனக்கு வேண்டிய உணவைப் பெறத் தயங்கக்கூடாது. ஆனல் ஒன்று. எப்போதுமே அவர் வாங்குவதைக் காட்டிலும் கொடுப்பது அதிகமாய் இருக்கவேண்டும். நிச்சயமாக, ஆரம்பக்கட்டத்தில் சாத்தியமான இடங்களிலெல்லாம் ஒரு மத்திய நிதியிலிருந்து சொற்பத் தொகையை அவர் தனது படியாகப் பெறலாம்.

**அடிப்படை ஆன்மிகம்**

நம்முடைய ஆயுதங்கள் ஆன்மிக மயமானவை. இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். அதன் சக்தி வெளிக்குத் தெரியாத

தாக இருக்கலாம். ஆயினும் அதை வேறு எந்தச் சக்தியும் எதிர்த்து வெல்லமுடியாதபடி அது செயலாற்றும். அதன் முன்னேற்றம் படிப் படியாகச் செல்வதற்குப் பதிலாகப் பறந்துசெல்லும். பின்னல் ஒரு தூண்டுகோல் இருக்கும்வரை, அது ஓய்ந்து நிற்பதென்பதே இல்லை. ஆகையால் உங்களுடைய நடவடிக்கைகளின் பின்னணி யெல்லாம் ஆன்மிகமாகத்தான் இருக்கவேண்டும். ஒழுக்கத் திலும் நடத்தையிலும் நூற்றுக்கு நூறு பரிசுத்தமாக இருக்க வேண்டியது அவசியம்.

**உங்களுக்குத் தகுதி இல்லையா ?**

இத்திட்டம் சாத்தியமற்றது என்றோ இதற்கு வேண்டிய தகுதிகள் உங்களிடம் இல்லை யென்றோ என்னிடம் சொல்லமாட்டீர் கள். நீங்கள் இதை இதுவரை நிறைவேற்றவில்லையென்பதும் உங் களுக்குத் தடங்கலாக இருக்கக்கூடாது. உங்களுடைய பகுத்தறி வுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்றதாக இருந்தால், நீங்கள் அதை நிறைவேற்றத் தயங்கக்கூடாது. இந்தச் சோதனையில் ஈடுபடாது ஒதுங்காதீர்கள். இச்சோதனையே மேலும் மேலும் அதிக முயற்சி யில் இறங்குவதற்கு வேண்டிய தூண்டுகோலை அளிக்கும்.[4]

**கிராம ஊழியத்தின் அம்சங்கள்**

கிராம ஊழியர் முதன் முதலில் செய்ய வேண்டிய வேலை அதன் துப்புரவு பற்றியது தான். கிராமத்தில் பல பிரச்னைகள் ஊழியர்கள் மனதைக் குழப்புகின்றன; உடல் நலத்தைப் பாதித்து நோயை உண்டாக்குகின்றன. இந்தப் பிரச்னைகளி லெல்லாம் மிகவும் அலட்சியம் செய்யப்பட்டிருப்பது கிராமத் துப்புரவைப் பற்றியதுதான். ஊழியரானவர் தானாகவே முன்வந்து ஒரு தோட்டியாகவேண்டும். அவர் முதலில் மலத்தை எடுத்து உரமாக்கவேண்டும், கிராமத் தெருக்களைக் கூட்டவேண்டும். எங்கு எவ்வாறு மல ஜலம் கழிக்க வேண்டு மென்பதை மக்களுக்கு எடுத்துக் கூறவேண்டும். கிராமத் துப்புரவின் மகிமையைப் பற்றியும் அதை அலட்சியம் செய்ததால் ஏற்பட்ட பெருந்தீங் கைக் குறித்தும் மக்களுக்கு விளக்கவேண்டும். தான் சொல்வதைக் கிராம வாசிகள் கேட்டாலும் கேட்காவிட்டாலும், ஊழியரானவர் தனது பணியைத் தொடர்ந்து செய்துவர வேண்டும்.[5]

**தோட்டியாக வேண்டும்**

கிராமப் புனருத்தாரணத்தில், கிராமத் துப்புரவு இடம்பெரு விட்டால், நமது கிராமங்கள் இன்று இருப்பதைப் போன்றே தொடர்ந்தும் குப்பை மேடுகளாகத்தான் இருக்கும். கிராமத்

துப்புரவு என்பது கிராம வாழ்க்கையின் ஒரு முக்கியமான அம்சம் அது எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு கஷ்டமானதுங்கூட. சந்ததி சந்ததியாக இருந்துவரும் துப்புரவின்மையை அகற்ற வீராவேசத்துடன் முயற்சி செய்ய வேண்டும். கிராமத் துப்புரவு விஞ்ஞானத்தைப்பற்றி அறியாதவரும் ஒரு நல்ல தோட்டியல்லாதவருமான கிராம ஊழியர் கிராமத் தொண்டுக்குத் தன்னைப் பூரணத் தகுதியுள்ளவராக்கிக்கொள்ள முடியாது.

### ஆதாரக் கல்வி

புது ஆதாரக் கல்வி யில்லாமல் இந்தியாவில் உள்ள கோடிக் கணக்கான குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதென்பது கிட்டத் தட்டச் சாத்தியமல்ல. இது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆகையால் கிராம ஊழியரானவர் இதில் நன்ருகத் தேர்ச்சி பெறவேண்டும். தானே ஒரு ஆதாரக் கல்வி ஆசிரியராக வேண்டும்.

### முதியோர் கல்வி

ஆதாரக் கல்வியைத் தொடர்ந்து முதியோர் கல்வியும் வந்து விடும் என்பதில் ஐயமில்லை. இந்தக் கல்வி எங்கெங்கு வேர் விட்டிருக்கிறதோ அங்கெல்லாம், குழந்தைகளே தங்களுடைய பெற்ருேர்களின் ஆசிரியர்களாகி யிருக்கிருர்கள். இது எவ்வாறிருந்தாலும் கிராம ஊழியரானவர், முதியோர் கல்விப் பயிற்சியும் அளிக்கவேண்டி யிருக்கிறது.

### மாதர்களுக்கு மரியாதை

ஆணும் பெண்ணும் சரி பாதியாக இருக்கும் மனித சமுதாயத்தில், ஆணைக்காட்டிலும் சிறந்த பகுதி பெண்ணே என்று கூறப்பட்டிருக்கிறது. ஆணைப்போன்றே பெண்ணுக்கும் சம உரிமை கிடைக்காதவரை, ஒரு பெண் பிறப்பதானது ஆண் பிறப்பதைப் போன்றே உற்சாகத்துடன் வரவேற்கப்படும் வரை, இந்திய சமுதாயத்தை ஒருவித பக்கவாத நோய் பீடித்திருக்கிறது என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும். மாதர்களை அடக்கிவைப்பது அஹிம்சையை மீறுவதாகும். ஆகையால் ஒவ்வொரு கிராம ஊழியரும் ஒவ்வொரு பெண்ணையும் அவரவர் வயதிற்கு ஏற்பத் தனது தாயாகவும் சகோதரியாகவும் மகளாகவும் கருதவேண்டும்; உரிய மரியாதை செலுத்த வேண்டும். இப்படிப்பட்ட ஊழியர்தான் கிராம மக்களின் நன்னம்பிக்கையைப் பெறுவார்.

### உடல் நலம்

உடல் நலமற்ற மக்கள் சுயராஜ்யம் பெற முடியாது. ஆகை யால், நம்முடைய மக்களின் உடல் நலத்தைப் புறக்கணித்த குற்றத்திற்கு நாம் ஆளாகக்கூடாது. ஒவ்வொரு கிராம ஊழிய ருக்கும் சுகாதாரத்தின் பொது விதிகளைப் பற்றிய ஞானம் இருக்க வேண்டும்.

### பொது மொழி

ஒரு பொதுமொழி இல்லாது, எந்தத் தேசமும் உருவாக முடி யாது. ஆகவே கிராம ஊழியரானவர் இந்தியா—இந்துஸ்தா னியா—உருதுவா என்ற தகராறுகளிலெல்லாம் தன்னை அலட்டிக் கொள்ளாமல் ராஷ்டிர பாஷையைப் படிக்கவேண்டும். இந்த ராஷ்டிர பாஷையானது இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இரு சாராரும் புரிந்துகொள்ளக் கூடியதாக இருக்கவேண்டும்.

### மாநில மொழிகள்

ஆங்கிலத்தின்மீது நமக்குள்ள மயக்கம், நம்மை மாநிலமொழி களிடம் விசுவாசமற்றவர்களாக்கிவிட்டது. இதற்கு ஒரு பிரா யச்சித்தம் செய்யவேண்டு மென்பதற்காகவாகிலும், கிராம ஊழி யர் கிராமவாசிகள் மத்தியில் தாய்மொழிப்பற்றை ஏற்படுத்த வேண்டும். அதே சமயம் இந்தியாவிலுள்ள மற்ற எல்லா மொழிகள் மீதும் அவர் சமமான மதிப்பும் வைத்திருக்க வேண்டும். அவர் எந்தப் பகுதியில் தொண்டு செய்கிறாரோ அப் பகுதி மொழியும் அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். இதன்மூலம் அப்பகுதியில் உள்ள கிராமவாசிகளுக்குத் தங்கள் மொழியின்மீது மதிப்பும் மரி யாதையும் ஏற்படுமாறு ஊக்குவிக்க அவரால் முடியும்.

### பொருளாதார சமத்துவம்

ஆனால், பொருளாதார சமத்துவம் என்னும் உறுதியான அஸ்திவாரத்தின்மீது இந்தத் திட்டம் முழுவதும் எழுப்பப்படா விட்டால், இது மணல்மேல் கட்டிய மாளிகையாகிவிடும். பொரு ளாதார சமத்துவம் என்பதற்கு லோகாயத பொருள்களை எல் லோருக்கும் சமமாகப் பிரித்துக்கொடுப்பது என்பது பொருளா காது. அதற்குப் பதிலாக, ஒவ்வொருவரும் வாழ்வதற்கு நல்ல வீடும் போதுமான சத்துள்ள உணவும் உடுத்திக்கொள்ளப் போதிய கதர் ஆடையும் கிடைக்குமாறு செய்யவேண்டும் என் பது அதன் பொருளாகும். தற்போது நிலவும் கொடுமையான சமத்துவ மின்மை, முற்றிலும் அஹிம்சாமார்க்கத்தில் அகற்றப்பட வேண்டும் என்பதும் அதன் பொருளாகும்.[6]

**கதரே பிரதானம்**

கிராமக் கைத்தொழில்களில் கதரே மையமான இடத்தை வகிக்கும் என்பது நிச்சயம். ஆனல் ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். கிராமங்கள் கதரில் சுயதேவைப் பூர்த்தி உள்ளவைகளாகுமாறு செய்வதில் நாம் ஒருமித்த கவனம் செலுத்தவேண்டும். சுய தேவைப் பூர்த்தியான கதரிலிருந்து நிச்சயமாக வியாபாரத்திற்கான கதரும் கிடைக்கும்.

**கைத்தொழில்**

நீங்கள் கிராமங்களில் நடைபெறும் ஏதாவதொரு தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்பதில் ஐயமில்லை. இந்தத் தொழிலில் உற்பத்தியாகும் பொருள்களுக்கு உங்களால் மார்க்கெட் பிடிக்க முடியவேண்டும். ஒரு எச்சரிக்கை. எந்தக் கடையையும் நஷ்டத்தில் நடத்தக்கூடாது. மார்க்கெட் கிடைக்காத எந்தப் பொருளையும் உற்பத்தி செய்யக்கூடாது. தினந்தோறும் எட்டு மணி நேரம் நீங்கள் விரும்பும் ஏதாவதொரு கைத்தொழிலைச் செய்யுங்கள். நீங்கள் எவ்வாறு உங்கள் ஊழியத்தைப் பெறுகிறீர்களோ அதேபோன்று அவர்களும் எட்டு மணிநேரம் வேலைசெய்து ஊதியம் பெறலாம் என்பதைக் கிராமவாசிகளுக்கு எடுத்துக் காண்பியுங்கள்.

**சகா கூடாது**

உங்களுடன் வேலைசெய்ய ஒரு சகாவை நீங்கள் கூட்டிக் கொண்டு செல்லக்கூடாது. ஒவ்வொரு கிராமம் அல்லது கிராமத் தொகுதிக்கு ஒரே ஊழியரைத்தான் அனுப்பவேண்டும் என்பது நமது கொள்கை. அவருடைய முழுத் திறமையையும் வெளிப்படுத்துவதற்கு இது உதவும். கிராமத்திலிருந்து அவர் எத்தனை சகாக்களை வேண்டுமானலும் சேர்த்துக்கொள்ளலாம். அவருடைய மேற்பார்வையின் கீழ் அவர்கள் வேலைசெய்யலாம். ஆயினும் தாம் சேவை செய்யும் கிராமத்திற்கு அவரே பிரதான பொறுப்பாளி யாவார்.

**இது உங்கள் கடமை**

இயந்திர காலத்தின் கவர்ச்சிகளில் நாம் மயங்காது இருப்போமாக! நம்முடைய உடல்கள் என்னும் இயந்திரங்களைப் பரிசுத்தமானவையாகவும் திறமையான சேவா சாதனங்களாகவும் ஆக்குவதில் ஒருமித்த கவனம் செலுத்த வேண்டும். அவைகளிலிருந்து நாம் மிகச் சிறந்த பலனைப் பெறுவோம். இவ்வாறு செய்வது உங்கள் கடமை. பின் வாங்காமல் இதில் முன்னேறிச் செல்லுங்கள்.[7]

## கிராமங்களில் வாழ முடியும்

அநேக ஊழியர்கள் கிராம வாழ்க்கையைக் கண்டு மிகவும் அஞ்சுகிறார்கள். ஏதாவதொரு ஸ்தாபனம் தங்களுக்கு ஊதியம் அளித்தாலொழிய, கிராமங்களில் பாடுபட்டுத் தங்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய ஊதியத்தைப் பெறமுடியாது—அதிலும் குறிப்பாகத் தங்களுக்குத் திருமணமாகித் தாங்கள் காப்பாற்ற வேண்டிய ஒரு குடும்பம் இருந்தால் இது முடியவே முடியாது—என்று எண்ணுகிறார்கள். இந்த எண்ணம் மனதை அதைரியமடையச் செய்யும். நகர மனோபாவத்துடன் ஒருவர் கிராமத்துக்குச் செல்வாரானால், கிராமங்களில் நகர வாழ்க்கையே வாழ வேண்டுமென்று எண்ணினாரானால், அவர் நகர மக்களைப்போல், கிராமவாசிகளைச் சுரண்டினாலொழியப் போதுமான அளவு சம்பாதிக்கமாட்டார். ஆனால் ஒரு மனிதர் கிராமத்திலேயே குடியேறி, கிராம மக்களைப்போன்று வாழ முயற்சி செய்தாரானால், அவர் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு வாழ்வதில் எவ்விதக் கஷ்டமும் இராது. பரம்பரையாகவே புத்திக்கூர்மை தேவைப்படாத, முறைகளின் மூலம் வருஷம் முழுதும் பாடுபடத் தயாராயிருக்கும் கிராமவாசிகள் தங்களுடைய வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்க முடியுமானால், இந்த ஊழியரும் ஒரு சாதாரண கிராமவாசியின் அளவு சம்பாதிக்க முடியவேண்டும். ஒரு கிராமவாசியின் பிழைப்பைக்கூடக் கெடுக்காமல் அவர் இதைச் செய்யமுடியும். ஏனென்றால் அவர் ஒரு உற்பத்தியாளராகக் கிராமத்துக்குச் செல்கிறாரே தவிர, அட்டைபோன்று கிராமவாசிகளை உறிஞ்சுவதற்குச் செல்லவில்லை.

## உழைத்து வாழ வழி

ஊழியருடைய குடும்பமானது சாதாரண அளவு குடும்பமாக இருந்தால், அவருடைய மனைவியும் (அவர் குடும்பத்தில்) மற்றும் ஒருவரும் முழுநேர ஊழியர்களாக இருக்கவேண்டும். இப்படிப்பட்ட ஊழியர் உடனடியாக ஒரு கிராமவாசியைப் போன்று உடல் உழைப்புச் செய்யமுடியாது. ஆனால் இவர் தன்னுடைய தயக்கத்தையும் அச்ச மனப்பான்மையையும் விட்டு விட்டாரானால், உடல் வலுவில்லாத குறையைத் தனது அறிவுத்திறமையின் மூலம் சரிக்கட்ட முடியும். முழுநேரமும் கிராமவாசிகளுக்கே சேவை செய்யும் அளவு கிராமவாசிகளின் ஆதரவு இருந்தாலொழிய பிறர் உழைத்துத் தாம் வாழ்பவராக அவர் இருக்கமாட்டார். தாமே உற்பத்தியில் ஈடுபடுவார். அவர்

முழுநேரமும் கிராம சேவையில் ஈடுபடும்போது, அவருடைய சேவையால் கூடியிருக்கும் அதிக உற்பத்தியில் ஒரு பகுதியைக் கமிஷனைக் பெற அவருக்கு உரிமை உண்டு. அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தின் ஆதரவில் கடந்த சில மாதங்களாக நடைபெற்றுள்ள கிராமப் பணியிலிருந்து ஒரு அனுபவம் தெரிகிறது. கிராமவாசிகள் மத்தியில் பலன் கிடைப்பது மிகவும் மெதுவாக இருக்கும். ஊழியரானவர் கிராமவாசிகளின் முன் நற்குணத்திற்கும் சேவைக்கும் ஒரு சான்றாகத் திகழவேண்டும். இவ்வாறு அவர் இருப்பது, கிராமவாசிகளுக்கு மிகச் சிறந்த முன்னுதாரணமாக இருக்கும். அவர் மட்டும், உயர்ந்த ஆசனத்திலமர்ந்து தூரத்திலிருந்து வணங்க வேண்டியவராக இராமல் அவர்களுடன் சேர்ந்து பழகினாரென்றால், இன்றோ அல்லது நாளையோ அவர்கள் மனதைக் கவர்ந்து விடுவார்.

### வேலையைத் தேர்ந்தெடுத்தல்

ஆகவே இப்போதுள்ள கேள்வி, தாம் தேர்ந்தெடுத்துள்ள கிராமத்தில் இலாபகரமான முறையில் அவர் எந்தப் பணியை ஆற்றலாம் என்பதுதான். அவரும் அவருடைய குடும்பத்தினரும் - கிராமவாசிகள் அவருக்கு உதவினாலும் உதவாவிட்டாலும் - கிராமத்தைச் சுத்தப்படுத்துவதில் சிறிது நேரம் செலவிடுவார்கள். தம்முடைய சக்திக்கு இயன்ற எளிய வைத்திய உதவியையும் அவர் அளிப்பார். ஒவ்வொரு நோயாளியும் ஆரம்பத்தில் என்ன மருந்து சாப்பிடலாம் என்பதை அவர் கூறலாம்; கொய்னா சாப்பிட வேண்டுமானால் அதைக் கூறலாம்; ஒரு புண் அல்லது கொப்புளத்தைக் கழுவலாம்; அழுக்கடைந்த கண்களையும் காதுகளையும் கழுவிவிடலாம்; ஒரு புண்ணுக்குச் சுத்தமான களிம்பு போடலாம். கிராமங்களில் நாள்தோறும் வரும் பல சாதாரணமான நோய்களைக் குணப்படுத்துவதற்கு எளிய மார்க்கங்களைக் கூறக்கூடிய ஒரு புத்தகத்தைக் கண்டுபிடிக்க நான் முயற்சி செய்துகொண்டிருக்கிறேன். எப்படியும் இந்த இரண்டு விஷயங்களும் கிராம சேவையில் ஒரு முக்கிய அங்கமாய் இருக்க வேண்டும். அதே சமயம், வேலைகளுக்கு ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆகக் கூடாது. ஒரு கிராம ஊழியர் ஒரு நாளைக்குச் சரியாக எட்டு மணி நேரந்தான் வேலை செய்ய வேண்டுமென்பதில்லை. கிராமவாசிகளுக்காக உழைப்பதென்பது அவருக்கு ஒரு அன்புச் சேவையாகும். ஆகவே, மேற்கண்ட இரண்டு மணி நேரத்துடன் தம் பிழைப்புக்கு அவர் குறைந்தது எட்டு மணி நேரம் உழைத்தாக வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம்

ஆகியவை வெளியிட்டுள்ள புதுத் திட்டத்தின்படி எல்லா உழைப் புக்கும் சமத்துவமான குறைந்தபட்ச மதிப்பு உண்டு. இதை அவர் ஞாபகத்திற்கொள்ள வேண்டும். ஆகவே, ஒரு மணி நேரம் பஞ்சுப் பட்டை போடும் ஒருவர், சாதாரணமாக ஒரு மணி நேரத் தில் எத்தனை பட்டைகள் போட முடியுமோ அத்தனை பட்டைகள் போடுபவர், ஒரு நெசவாளியோ நூற்பவரோ அல்லது காகிதம் செய்பவரோ ஒரு மணி நேரத்தில் செய்யும் வேலைக்கு எவ் வளவு ஊதியம் பெறுகின்றாரோ அந்த ஊதியம் பெறத் தகுதி வாய்ந்தவராவார். ஆகையால், எந்த வேலையை எளிதாகச் செய்ய முடியும் என்பதைத் தேர்ந்தெடுத்துக் கற்றுக்கொள்ள ஊழியருக்கு உரிமை உண்டு. ஆனால் எப்போதுமே இப்படிப்பட்ட வேலையைத் தேர்ந்தெடுக்கு முன் ஒரு விஷயத்தில் கவனம் செலுத்த வேண்டும். அதாவது, இதில் உற்பத்தியாகும் பொருள் கள் அந்தப் பகுதியிலோ அல்லது சுற்றுப்புறக் கிராமங்களிலோ விற் பனையாகக் கூடியவையாக இருக்க வேண்டும். அல்லது, மேற் கண்ட சங்கங்களில் கிராக்கியுள்ளதாய் இருக்க வேண்டும்.

### நியாயக் கடை

ஒவ்வொரு கிராமத்திலும் நியாயக் கடை ஒன்று இருக்க வேண்டும். இங்கே கலப்படமற்ற உணவுப் பொருள்களும் மற்றப் பொருள்களும் வாங்கிய விலையுடன் ஒரு நிதானமான இலா பம் சேர்த்து விற்பனையாக வேண்டும். இது மிகவும் அவசியமான காரியம். இப்படிப்பட்ட கடைக்கு—அது எவ்வளவு சிறியதாக இருந்தாலும்—ஒரு மூலதனம் வேண்டும். ஆனால் ஒரு குறிப்பிட்ட பகுதியில் தனது சேவையின் மூலம் மக்களுக்கு அறிமுகமான ஊழி யர், மொத்த விலையில் சிறு அளவில் சரக்குகளைக் கடனுக்கு வாங் கக் கூடிய அளவு நாணயம் பெற்றவராக இருப்பார்.

### நூதனமான புது வேலைகள்

இந்த நடைமுறை யோசனைகளை நான் விரிவுபடுத்திக் கொண்டு போகக் கூடாது. உன்னிப்பாகக் கவனிக்கும் திறன் உடைய ஒரு ஊழியர், எப்போதுமே புதிது புதிதாகக் கண்டு பிடித்துக் கொண்டுதானிருப்பார். தன்னுடைய பிழைப்புக்கு வேண் டிய ஊதியத்தைப் பெறவும், அதே சமயம் தான் யாருக்குச் சேவை செய்யச் செல்கிறாமோ அந்தக் கிராமவாசிகளுக்கு ஒரு முன்னுதார ணமாக விளங்கவும், தான் எவ்வித உழைப்பை மேற்கொள்ள வேண் டும் என்பதை அவர் விரைவில் அறிந்துகொள்ள வேண்டும். ஆகவே கிராமவாசிகளைச் சுரண்டாததும், அவர்களுடைய உடல்நலத்,

தையோ ஒழுக்கத்தையோ பாதிக்காததுமான உழைப்பை அவர் தேர்ந்தெடுக்க வேண்டும். தங்களுடைய ஓய்வு நேரத்தில் எந்தெந்தத் தொழில்களைச் செய்து தங்களுடைய குறைந்த வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளலாம் என்பதைக் கிராமவாசிகளுக்குக் கற்றுக் கொடுக்கக் கூடிய உழைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதைப் பற்றி அவர் யோசிக்கும்போது களைகள் உள்பட கிராமக் கழிவுப் பொருள்களை எவ்வாறு பயன்படுத்துவது என்பதிலும் கிராமங்களிலுள்ள உபரியான இயற்கை வளங்களை எவ்வாறு பயன்படுத்துவது என்பதிலும் அவருடைய கவனம் திரும்பும். இவைகளில் பலவற்றை உபயோகமான காரியங்களுக்குப் பயன்படுத்தலாம் என்பதை அவர் விரைவில் காண்பார். களைகளிலேயே உண்ணக் கூடியவை இருந்து அவைகளை அவர் கண்டு பிடித்துவிட்டால், அவருடைய உணவில் ஒரு பகுதியைச் சம்பாதித்துவிட்டதாகவே அர்த்தமாகும். அழகான பளிங்கு போன்ற கற்களை ஏராளமாக எனக்குத் திருமதி மீராபென் பரிசாக வழங்கியிருக்கிறார். எனக்கு மட்டும் ஓய்வு இருந்தால், அவைகளைக் கடைச் சரக்காக மாற்றிவிடுவேன். அதனால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு அவைகளையே நாம் விரும்பும் உருவத்தில் செதுக்குவதற்கு உதவக் கூடிய சிறு கருவிகளை வாங்குவேன். அடுப்பில் போட வேண்டிய கழிவு மூங்கில்களை காகா சாகிபிடம் அளித்த போது அதை அவர் பிளந்து ஒரு பதமில்லாத கத்தியினால் காகிதக் கத்திகளாகவும் மரக் கரண்டிகளாகவும் செய்துவிட்டார். இந்த இரண்டையுமே ஒரு குறிப்பிட்ட அளவில் நாம் விற்க முடியும். மகன்வாடியில் உள்ள சில ஊழியர்கள் ஒரு பக்கம் எழுதாத கழிவுக் காகிதங்களிலிருந்து கவர்க் கூடுகள் செய்வதில் தங்களுடைய ஓய்வு நேரத்தை பயன்படுத்துகின்றனர்.

### நம்பிக்கையுடன் செல்லுங்கள்

உண்மை யென்னவெனில் கிராமவாசிகள் நம்பிக்கை இழந்துவிட்டனர். ஒவ்வொரு அந்நிய மனிதனுமே தனது கழுத்தில் கையை வைக்கவும் தங்களைச் சுரண்டவுமே வருகிறான் என்று அவர்கள் எண்ணுகிறார்கள். அறிவுக்கும் உழைப்புக்கு மிடையே ஏற்பட்ட வேறுபாடானது, அவர்களுடைய சிந்தனா சக்தியையே சீர்குலைத்துவிட்டது. உழைக்கும் நேரத்தை மிகச் சிறந்த பலன் அடையும் முறையில் பயன்படுத்துவதில்லை. இப்படிப்பட்ட கிராமங்களுக்குள் முழு நம்பிக்கையுடனும் அன்புடனும் ஊழியர் நுழைய வேண்டும். ஆண்களும் பெண்களும் புத்திசாலித்தனத்தைப் பயன்படுத்தாது உழைக்கும் ஒரு இடம் அது. பாதி

வருஷம் அவர்கள் வேலையில்லாமல் இருக்கும் இடம் அது. அப்படிப்பட்ட இடத்தில், தான் உழைப்பையும் அறிவையும் இணைத்து, ஆண்டுமுழுதும் உழைத்து, கிராமவாசிகளின் நன்னம்பிக்கையை நிச்சயம் பெறமுடியும் என்றும் அவர்கள் மத்தியில் உழைத்தே நாணயமாக, நல்ல ஊதியம் பெற முடியும் என்றும் அவர் மன உறுதி கொள்ள வேண்டும்.

### கிராம ஊழியரின் குழந்தைகள்

'ஆனல் என்னுடைய குழந்தைகள் கதி என்ன? அவர்களுடைய படிப்பு என்ன ஆவது?' என்று ஊழியராக வர விரும்புபவர் கேட்பார். நவீனமுறைக் கல்வியை அவர்கள் பெற வேண்டுமானல், நான் உபயோகமான எந்த வழியையும் காண்பிக்க முடியாது. ஆனல், அவர்களை நல்ல உடல் நலம் உள்ளவர்களாகவும் - நரம்பு முறுக்கேறியவர்களாகவும் - சத்தியமுள்ள, புத்திக்கூர்மையுள்ள கிராமவாசிகளாகவும் - எந்த நாளிலும் தங்கள் வீட்டில் தங்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய ஊதியத்தைச் சம்பாதித்துக் கொள்ளக்கூடியவர்களாகவும் செய்வது போதுமானல் அவர்கள் தங்ளுடைய தகப்பனர் இல்லத்திலேயே தங்களுக்கு வேண்டிய கல்வியெல்லாம் பெற முடியும். விவரம் தெரிந்த பிராயத்திலிருந்தே தங்களுடைய கைகளையும் கால்களையும் பயன்படுத்தத் தெரியும் பிராயத்திலிருந்தே ஓரளவு ஊதியம் தேடக் கூடியவர்களாய் அவர்கள் ஆவார்கள். ஒரு கண்ணியமான வீட்டைக் காட்டிலும் பெரிய பள்ளிக்கூடம் எதுவும் இல்லை. நேர்மையான, நல்ல குணம் படைத்த பெற்றேர்களுக்குச் சமமான ஆசிரியர்களும் இல்லை. நவீன உயர் நிலைப்பள்ளிப் படிப்பென்பது, கிராமவாசிகளுக்கு ஒரு பயனும் இல்லாதது. அவர்களுடைய குழந்தைகள் ஒரு போதும் அக்கல்வி வசதியைப் பெற முடியாது. ஆனல் நல்ல வேலையாக, கண்ணியமான வீட்டின் கண்ணியமான பயிற்சி மட்டும் இருந்தால், அவர்களுக்கு ஒரு நஷ்டமுமில்லை. கிராம ஊழியரானவர் ஒரு கண்ணியமான குடும்பத்தை நடத்தக் கூடிய அளவு கண்ணியமான ஆண் அல்லது பெண்ணாக இருக்க வேண்டும். அவ்வாறு இருக்காவிட்டால், கிராம ஊழியராகும் உயர்ந்த சிறப்பையும் கௌரவத்தையும் பெற அவர் ஆசைப்படக் கூடாது.[8]

### கிராம ஊழியர்களின் கேள்விகள்

[ஒரு கிராம ஊழியர்கள் கூட்டத்தில், சொற்பொழிவாற்றுமாறு காந்திஜியைக் கேட்டுக்கொள்ளாமல், சில கேள்விகளை எழுதி அவரிடம் கொடுத்தார்கள். அவ்விஷயங்களில் தங்களுக்கு விளக்கம் தருமாறு கேட்டுக் கொண்டார்கள். கிராம ஊழியர்களின் கடமைகள், அவருடைய பிழைப்பு, உடல் உழைப்பு,

நாட்குறிப்பு வைத்துக்கொள்ளுதல் முதலியவைகளைப் பற்றி இந்தக் கேள்விகள் இருந்தன.]

### பதினேரு விரதங்கள்

கிராமவாசிகளுக்குச் சேவை செய்வதுதான் கிராம ஊழியரின் கடமை. ஒரு கலங்கரை விளக்கம் போலப் பதினேரு விரதங்களையும் தன் கண் முன் கிராம ஊழியர் வைத்துக் கொண்டால், அவர் மிகச் சிறந்த முறையில் தொண்டாற்ற முடியும். விநோபா இயற்றிய நான்கு வரிப் பாடல் ஒன்றில் இந்த விரதங்களெல்லாம் அடங்கியிருக்கின்றன. இப்போது இந்தப் பாடலானது இந்தியாவில் உள்ள பெரும்பாலான ஆசிரமங்களில் உள்ள ஆசிரமவாசிகளால் ஒவ்வொரு பிரார்த்தனைக் கூட்டத்திலும் பாடப் பெற்றுவருகிறது:

அஹிம்சா ஸத்ய அஸ்தேய ப்ரம்ஹசர்ய அஸங்க்ரஹ ।
சரீரச்ரம அஸ்வாத ஸர்வத்ர பயவர்ஜன ॥
ஸர்வதர்மோ ஸமானத்வ ஸ்வதேசீ ஸபர்சபாவனு ।
ஹீ ஏகாதச ஸேவாவீ நம்ரத்வே வ்ரதநிச்சயே ॥

[அஹிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், வெளவாமை, உடல் உழைப்பு, நாவடக்கம், அஞ்சாமை, சர்வமத சமரசம், (சுதேசி அதாவது தூரத்தில் உள்ளவர்களையும் தூரத்தில் உற்பத்தியாகும் பொருள்களையும் விட் அண்டையில் உள்ளவர்கள் சேவையையும் அண்டையில் உற்பத்தியாகும் பொருள்களையும் பயன்படுத்திக் கொள்வது) தீண்டாமை ஒழிப்பு ஆகிய பதினேரு விரதங்களையும் அடக்கத்துடன் அனுஷ்டிக்க வேண்டும்.]

### இலட்சிய வழி

அவர் எவ்வாறு தன் பிழைப்புக்கு வேண்டிய ஊதியத்தைத் தேடுவது? ஒரு ஸ்தாபனத்திடமிருந்து படி பெறலாமா? அல்லது வெறும் ஊழியத்திற்காக உழைக்க வேண்டுமா? அதற்காகக் கிராமத்தை எதிர்பார்க்கலாமா? மிகச் சிறந்த இலட்சிய வழி கிராம மக்களை எதிர்பார்ப்பதுதான். அதில் வெட்கப் படத் தக்கது எதுவுமில்லை. அதற்குப் பதிலாக அது தான் தன்னடக்கம். புலன் நுகர்ச்சிக்கும் அதில் இடமில்லை. புலன் நுகர்ச்சியை அனுமதிக்கவோ ஆதரிக்கவோ கூடிய ஒரு கிராமத்தை என்னுல் எண்ணிப் பார்க்கவும் முடியவில்லை. கிராம ஊழியர் செய்ய வேண்டியதெல்லாம் முழு நேரமும் கிராமத்திற்காக உழைத்துவிட்டுத் தனக்கு வேண்டிய தான்யங்களையும் காய்கறியையும் அக்கிராமத்தில் வசூலித்துக்கொள்ள வேண்டுமென்பதே. தபால் முதலிய செலவுகளுக்குத் தேவையானுல்—இது இன்றி

யமையாதது என்று நான் கருதவில்லை—ஒரு சிறிது பணமும் வசூல் செய்யலாம். கிராமத்தினருடைய அழைப்பின் பேரில் இந்த ஊழியர் அங்கு சென்றிருந்தாரானல், கிராமம் அவரை மகிழ்ச்சியுடன் ஆதரிக்கும். ஆனல் அதே சமயம் அவருடைய கருத்துக்களைக் கிராமவாசிகள் சகிக்க முடியாவிட்டால் அந்த சந்தர்ப்பத்தில் தங்களுடைய ஆதரவை வாபஸ் பெற்றுக்கொள்வார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஏற்படக்கூடிய ஒரு நிலைமையையும் என்னல் கற்பனை செய்து பார்க்க முடிகிறது. உதாரணமாக, 1915இல் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் நான் தீண்டத்தகாதவர்களை அனுமதித்த போது, அவர்கள் இவ்வாறுதான் செய்தார்கள். இதற்கு மேல் அவர் தன்னுடைய பிழைப்புக்காக உழைக்க வேண்டும். ஒரு ஸ்தாபனத்தை எதிர்பார்த்துப் பயனில்லை.

### உடல் உழைப்பு

கிராமத்தில் உள்ள கிராம ஊழியரானவர் தன்னல் முடிந்த அளவு உடல் உழைப்புச் செய்ய வேண்டும். சோம்பேறித்தனத்தை உதறித் தள்ளுமாறு கிராமவாசிகளுக்குக் கற்பிக்க வேண்டும். அவர் எந்த வகையான உடல் உழைப்பும் செய்யலாம். ஆனல், தோட்டி வேலைக்கு முதன்மை அளிக்க வேண்டும். தோட்டி வேலையென்பது நிச்சயமாக உற்பத்தி வேலைதான். குறைந்தது அரை மணி நேரமாவது முற்றிலும் சேவைக்கும் உற்பத்திக்கும் பயன்படக்கூடிய வேலை செய்ய வேண்டும் என்று சில ஊழியர்கள் வலியுறுத்துகின்றனர். இதை நான் ஆதரிக்கிறேன். இவ்வகை ஊழியத்தில் நிச்சயமாகத் தோட்டி வேலையும் வருகிறது. இதைப் போன்றுதான் மாவு அரைப்பதும். ஏனென்றால், மீதப்படுத்தப்பட்ட பணம் சம்பாதித்த பணமேதான்.

### நாட் குறிப்பு

விழித்திருக்கும் நேரத்தில் ஒவ்வொரு நிமிஷத்தையும் உபயோகமான முறையில் ஊழியர் செலவிட வேண்டும். அந்நேரத்தில் வேலை செய்து கொண்டேயிருக்க வேண்டும். அதைத் தனது நாட்குறிப்பிலும் பதிய வேண்டும். இவைகளை எந்தவிதமான ஐயப்பாடும் இன்றி கூறுகிறேன். ஒரு உண்மையான நாட் குறிப்பு என்பது நாட் குறிப்பு எழுதியவருடைய மனதைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகும். ஆனல் தங்கள் மனதில் உள்ளவைகளை அப்படியே உண்மையாகப் பதிவு செய்து வைப்பது பலருக்குக் கஷ்டமாக இருக்கும். அவ்வாறு இருந்தால், தங்களுடைய உடல் உழைப்பைப் பற்றிய வேலைகளைப் பதிவு செய்வ

துடன் அவர்கள் நிறுத்திக் கொள்ளலாம். ஆனல் இதை ஒழுங்கான முறையில் செய்ய வேண்டும். உதாரணமாக, "சமையலறையில் வேலை செய்தேன்" என்றுமட்டும் எழுதுவது போதாது. ஒருவர் சமையலறையில் நேரத்தை வீணைக் கழித்திருக்கவும் கூடும். ஆகவே, அங்கு என்னென்ன வேலைகள் செய்தார் என்பதைத் திட்டவட்டமாகக் குறிக்க வேண்டும்.

## ஒதுக்கப்பட்ட இனத்தவர் சேவை

குஜராத்தில் உள்ள டப்ளாக்கள் என்னும் பிற்பட்ட இனத்தவருக்குச் சேவை செய்வது என்ருல் அதன் பொருள் என்ன? அவர்களுடைய உழைப்பிலும் இன்ப துன்பங்களிலும் பங்குகொள்ளத் தயாராய் இருப்பதென்பதே யாகும். அவர்களை 'அடிமையாக வைத்திருப்பவர்களுடன்' தொடர்புகொண்டு அவர்கள் (டப்ளாக்கள் விஷயத்தில்) நியாயமாகவும் அன்பாகவும் நடந்துகொள்ளுமாறு பார்த்துக்கொள்ள வேண்டும்.

## அரசியலுக்கு அப்பால்

கிராம ஊழியரானவர் அரசியலைவிட்டு ஒதுங்கிக்கொள்வார். அவர் ஒரு காங்கிரஸ் அங்கத்தினராகலாம். ஆனல் தேர்தல் பிரசாரத்தில் பங்குகொள்ளக் கூடாது. அவருக்கு என்று திட்டமிடப்பட்ட வேலை இருக்கிறது. கிராமக் கைத்தொழில் சங்கமும் நூற்போர் சங்கமும் காங்கிரசினல் அமைக்கப்பட்டவைதான். ஆயினும் அவை காங்கிரசுக்கு அப்பாலிருந்து சேவை செய்கின்றன. இதனல்தான் அவைகளும் அவைகளின் உறுப்பினர்களும் காங்கிரஸ் அரசியல் எல்லாவற்றிலுமிருந்தும் ஒதுங்கியிருக்க வேண்டுமென்பது. அதுதான் அஹிம்சா வழி.

## கிராமத்தில் குடியேறும் போது ?

கிராம கோஷ்டிச் சச்சரவுகளிலிருந்தும் அவர் ஒதுங்கியிருக்க வேண்டும். நகரில் கிடைக்கும் பல வசதிகள் இன்றியே வாழ்வதென்ற உறுதியுடன் அவர் கிராமத்துக்குச் சென்று குடியேற வேண்டும். நான் ஒரு கிராமத்தில் குடியேறுவதாய் இருந்தால், கிராமத்துக்கு நான் என்னென்ன சாமான்களை எடுத்துச் செல்லக் கூடாது - எவ்வளவுதான் இந்தப் பொருள்கள் இயல்பிலேயே தீங்கற்றவையாய் இருந்தாலும் - என்பதை நான் முடிவு செய்ய வேண்டும். அந்தப் பொருள்கள் ஒரு சாதாரண கிராமவாசியின் வாழ்க்கைக்குப் பொருந்துமா அல்லது பொருந்தாதா என்பதே பிரச்னை. கிராம ஊழியர் ஊழல்களுக்கு இடமளிக்காதவராக இருப்பார். மயக்கும் கவர்ச்சிப்பொருள்களை எதிர்ப்பதில் மலை

போல இருந்து, கிராமத்தை அவர் காப்பாற்றுவார். ஒரு விபீஷணன் எவ்வாறு இலங்கையைக் காப்பாற்றினனே அதைப் போன்று ஒரே ஒரு பரிசுத்த ஆன்மாகூட, ஒரு முழு கிராமத்தைக் காப்பாற்ற முடியும். சோதோம், கோமரா ஆகியவற்றில் ஒரே ஒரு பரிசுத்தமான ஆன்மா இருந்தவரை அவைகளை அழிக்க முடியவில்லை.[9]

II

* "கிராமவாசிகளுக்குக் கட்டுபடியாகாத பால், பழம், காய்கறிகள் போன்றவைகளை ஒரு கிராம ஊழியர் அனுபவிக்கலாமா?" என்ற கேள்விக்குப் பதில் அளித்து காந்திஜி எழுதியதாவது:—

**சற்று உயர்ந்த வாழ்க்கைத் தரம்**

கிராம ஊழியர் கிராமத்தில் இருப்பது கிராமவாசிகளுக்குச் சேவை செய்வதற்காகத்தான். இந்த வேலையைச் செய்வதற்கு வேண்டிய உடல் நலமும் சக்தியும் அவருக்கு இருக்கவேண்டும். அதற்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் மற்ற அத்தியாவசியப் பொருள்களையும் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டியது அவரது கடமையும் உரிமையுமாகும். இதற்குக் கிராம ஊழியரானவர் சற்று உயர்ந்த வாழ்க்கைத்தரத்தை ஏற்கவேண்டியது அவசியம் என்பது பெறப்படுகிறது. அதே சமயம் இந்த அவசியமான பொருள்களையெல்லாம் அளிக்கக் கிராமவாசிகள் முணுமுணுக்கமாட்டார்கள் என்பதே என் கருத்து. ஊழியரின் மனச்சாட்சிதான் இதற்கெல்லாம் அளவு கருவி. அவர் சுய கட்டுப்பாடு உடையவராக இருக்கவேண்டும். தன்னுடைய நாவின் ருசிக்காக அவர் எந்தப் பொருளையும் உண்ணக்கூடாது; ஆடம்பரப் பொருள்களை நாடிச் சொல்லக்கூடாது; விழித்திருக்கும் நேரம் முழுவதிலும் ஏதாவது சேவை செய்துகொண்டிருக்க வேண்டும். இவ்வாறு இருந்தாலும் (கைவிரல்விட்டு எண்ணக்கூடிய) ஒரு சிலர் அவருடைய வாழ்க்கை முறையை அனவசியமாகக் குறைகூறிக் கொண்டுதான் இருப்பார்கள். அப்படிப்பட்ட சூழ்நிலையிலும் நாம் தூய்மையாக வாழ்ந்து அந்தக் குற்றச் சாட்டைப் பொய்யாக்க வேண்டும். நான் கூறியுள்ள உணவுவகைகளெல்லாம், ஓரளவு முயற்சியுடன் கிராமத்தில் கிடைக்கக்கூடியனவே. பால், பொதுவாக வாங்கலாம். இலந்தைப்பழம், நாவற்பழம் போன்று எளிதாகக் கிடைக்கக்கூடிய ஏராளமான பழங்கள் இருக்கின்றன. இவைகள் எல்லாம் மிகவும் எளிதாகக் கிடைப்பதனால்தான் நாம் அவைகளைக் கொஞ்சமும் பொருட்படுத்துவதில்லை. நம்முடைய கிராமங்களில் எத்தனையோ வகையான

கீரைகள் கிடைக்கின்றன. ஆனால் நம்முடைய முழு அறியாமை அல்லது சோம்பேறித்தனத்தினால், அல்லது வெளிப் பகட்டைக் கண்டு மயங்கும் செருக்கினால், நாம் அவைகளை உபயோகிப்ப தில்லை. இதுவரை உபயோகிக்காத பல்வேறு வகையான கீரை களை நானே இப்போதுதான் உபயோகித்துக் கொண்டிருக் கிறேன். இவைகளை ஏற்கனவே உபயோகித்திருக்கலாமே என்று எனக்கு இப்போது புலப்படுகிறது. ஒரு பசுவைப் பராமரித்து வளர்ப்பதற்காகும் செலவை அந்தப் பசுவின் மூலமே ஈடுகட்டுவது சாத்தியந்தான். நான் இந்தச் சோதனையை நடத்திப் பார்த்த தில்லை; ஆனாலும் இது சாத்தியம் என்றே எண்ணுகிறேன். மேலும் கிராம ஊழியர்கள் உபயோகிக்கும் அதே உணவுப் பொருள் வகைகளைக் கிராமவாசிகளும் பெற்று உண்பதும், அதன் மூலம் அதே வாழ்க்கைத் தரத்தை அடைவதும், சாத்தியமற்றதல்ல வென்ற கருத்தும் எனக்கு உண்டு. [10]

## III

**கேள்வி :** எல்லாக் கிராமங்களிலுமே கட்சிகளும் கோஷ்டிகளும் இருக்கின்றன. நாம் ஸ்தல உதவியை நாடும்போது—நாம் விரும்புகிறோமோ இல்லையோ—ஸ்தல கட்சி அரசியலில் சிக்கி விடுகிறோம். இந்தக் கஷ்டத்திலிருந்து நாம் ஒதுங்க முடியுமா? இரண்டு கட்சிகளிலும் சிக்கிக்கொள்ளாது விலகி, வெளி ஊழி யர்களுடைய உதவியுடன் வேலை செய்யமுடியுமா? இப்படிப் பட்ட வேலை முற்றிலும் வெளி உதவியையே சார்ந்திருக் கிறது என்பதுதான் எங்களுடைய அனுபவம். இந்த வெளி உதவி வாபசானவுடன் அது சுக்குநூறாகிவிடுகிறது, ஆகவே, ஸ்தல முயற்சியைத் தூண்டவும் ஒத்துழைப்பை வளர்க்கவும் நாம் என்ன செய்யவேண்டும்?

### உள் உதவி முக்கியம்

**பதில் :** அந்தோ, நகரங்களில் உள்ளதைப் போன்றே கிராமங் களிலும் கட்சிகளும் கோஷ்டிகளும் இருக்கின்றன. கிராம நலனைப்பற்றிய அக்கறையில்லாது, கட்சியின் பலத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடனேயே கிரா மங்களில் கட்சி அரசியல் நுழையும்போது, அது கிராமவாசி களுக்கு உதவியாய் இருப்பதற்குப் பதிலாக அவர்களுடைய முன்னேற்றத்திற்குத் தடங்கலாக இருக்கிறது. விளைவு என்னவாக இருந்தாலும் நாம் முடிந்த அளவு ஸ்தல உதவியையே பயன்படுத்திக் கொள்ளவேண்டும். நமக்கு மட்டும் கட்சி அரசியல் என்னும் மாசு இல்லாவிட்டால்

தவறான பாதையில் செல்லமாட்டோம். கிராமங்கள் தான் நாட்டின் முதுகெலும்பு. இந்தக் கிராமங்களை, நகரங்களைச் சேர்ந்த ஆங்கிலம் படித்த ஆண், பெண்கள் படு பாதகமான முறையில் அலட்சியம் செய்து விட்டார்கள். இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வோமாக! நாம் அலட்சியம் செய்ததை நினைவுபடுத்திக்கொள்வதே, நமது பொறுமையைத் தூண்டி வளர்க்கும். நான் சென்ற கிராமங்களில் எல்லாம் எதிலுமே ஒரு உண்மையான ஊழியர்கூட இல்லாமல் இல்லை. நம்முடைய கிராமங்களில் உள்ள சிறப்பை ஒப்புக்கொள்ளும் அளவு நாம் பணிவுள்ளவர்களாய் இருக்கவேண்டும். அவ்வாறு இல்லாத போது தான் நாம் உண்மையான ஊழியர்களைக் கண்டுபிடிக்க முடிவதில்லை. நிச்சயமாக, நாம் ஸ்தல அரசியலிலிருந்து ஒதுங்கித்தான் இருக்க வேண்டும். எல்லாக் கட்சிகளிலிருந்தும் கட்சியைச் சேராதவர்களிடமிருந்தும் நாம் உதவியை ஏற்க வேண்டும்—இந்த உதவி உண்மையிலேயே நல்லதாக இருக்கும்போது. அப்போதுதான் கட்சி அரசியலிலிருந்து எவ்வாறு ஒதுங்கியிருப்பது என்பதைக் கற்றுக்கொண்டவர்களாவோம். கிராமவாசிகளை ஒதுக்குவது வெற்றியைக் குழிதோண்டிப் புதைத்துவிடும் என்று கருதுகிறேன். இந்தக் கஷ்டம் எனக்குத் தெரியுமாதலால் ஒரு கிராமத்துக்கு ஒரு ஊழியர் (ஊழியருக்கு, மொழி தெரியாது ஒருமொழி பெயர்ப்பாளருடைய உதவி தேவைப்படும்போது தவிர) என்ற விதியைக் கண்டிப்பாய் அனுஷ்டிக்க முயற்சி செய்திருக்கிறேன். இந்த முறை இதுவரை நமது காரியத்துக்கு உதவியிருக்கிறது என்பதை மட்டும் நான் கூறிக்கொள்ள முடியும். ஆகையால் உங்களுடைய அனுபவத்தை நான் தள்ளுபடிசெய்யவே வேண்டியிருக்கிறது. மேலும் அவசர அவசரமாக எந்த முடிவுக்கும் வரும் பழக்கம் நமக்கு ஏற்பட்டுவிட்டது என்பதையும் நான் கூறிக்கொள்கிறேன். 'வேலையானது முற்றிலும் வெளி உதவியைச் சார்ந்திருக்கிறது. இந்த வெளி உதவி வாபஸ் பெறப்பட்டவுடன் அது அப்படியே நொறுங்கிப்போய் விடுகிறது' என்ற வாக்கியத்தில் பலத்த கண்டனம் தொனிக்கிறது. இப்படிப்பட்ட பலத்த கண்டனம் எதையும் தெரிவிக்குமுன், நான் கீழ்க் கண்டவாறுகூடக் கூறுவேன். அதாவது, ஒரே கிராமத்தில் சில வருடங்கள் வாழ்ந்து ஸ்தல ஊழியர்கள் மூலமாகச் சேவை செய்ய முயன்றிருந்தாலுங்கூட, ஸ்தல ஊழியர்களாலேயோ அல்லது அவர்கள் மூலமாகவோ வேலைசெய்ய முடி

யாது என்பதற்கு அது முடிவான நிரூபணமாகாது. இதற்கு நேர்மாறானதுதான் உண்மை என்பது வெளிப்படை. கடைசி வாக்கியத்தை நான் விவரமாக ஆராய்ச்சி செய்வது அனுவசியம். பிரதான ஊழியருக்கு நான் தெள்ளத் தெளிவாகக்கூற முடியும்: "உங்களுக்கு ஏதாவது வெளி உதவி இருந்தால் அதை அகற்றிவிடுங்கள். தனியாகவும் தைரியமாகவும், புத்திசாலித்தனமாகவும்—எவ்வளவு ஸ்தல உதவிபெற முடியுமோ அவ்வளவு உதவியைப் பெற்றுக்கொண்டு—வேலை செய்யுங்கள். நீங்கள் வெற்றிபெறாவிட்டால், உங்களை நீங்கள் குறைகூறிக் கொள்ளவேண்டுமே தவிர வேறு யாரையுமோ எதையுமோ அல்ல." [11]

## பயிற்சி பெறுவோருடன் சம்பாஷணை

**கேள்வி:** கிராமவாசிகள் உங்களைப் பார்க்க வருகிறார்களா?

**பதில்:** நிச்சயம் வருகிறார்கள். ஆனால் அச்சமின்றி வருவதில்லை. ஒருவேளை சந்தேகத்துடன்கூட வருகிறார்கள். கிராமவாசிகளிடமுள்ள மற்ற குறைகளைப் போன்று இவைகளும் அவர்களுடைய குறைபாடுகள்; நாம் நீக்கவேண்டியவை.

**கேள்வி:** எப்படி?

## பொறுமையுடன் உழைக்கவேண்டும்

**பதில்:** நாம் மெதுவாக அவர்களுடைய அபிமானத்தைப் பெறவேண்டும். நாம் அவர்களை நிர்ப்பந்தத்துக்குள்ளாக்குவதற்காக அங்கு சென்றிருக்கிறோம் என்ற அச்சத்தை அவர்களிடமிருந்து அகற்றவேண்டும். அவர்களை வலுக்கட்டாயப்படுத்தும் எண்ணம் இல்லையென்பதையும் நமக்குச் சுய நலம் எதுவும் இல்லையென்பதையும் நம்முடைய செயல்களின் மூலம் அவர்களுக்கு உணர்த்த வேண்டும். இவைகளுக்கெல்லாம் பொறுமையாக வேலைசெய்ய வேண்டியது அவசியம். அவ்வளவு சீக்கிரமாக நம் நல்லெண்ணத்தை அவர்கள் மனதில் பதியுமாறு செய்துவிடமுடியாது.

**கேள்வி:** சம்பளமோ அல்லது படியோ பெறாதவர்கள்தான்—அதாவது ஏதாவதொரு சங்கத்திலிருந்தோ அல்லது கிராமத்திலிருந்தோ எதையும் பெறாதவர்கள்தான்—கிராமவாசிகள் நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக முடியும் என்று நீங்கள் எண்ணவில்லையா?

**சம்பளம் பெற்றுல் மட்டமல்ல**

**பதில்:** யார் சம்பளத்திற்காக வேலை செய்கிறார்கள் அல்லது சம்பளம் இல்லாமல் வேலை செய்கிறார்கள் என்பதுகூட அவர்களுக்குப் புரிவதில்லை. நாம் வாழும் முறை, நம்முடைய பழக்க வழக்கங்கள், பேச்சு (சமிக்ஞை உள்பட) ஆகியவைதான் அவர்கள் மனதில் பதிகின்றன. பணம் சம்பாதிக்கும் ஆசையுடன் வந்திருக்கிறோம் என்று ஒரு சிலர் நம்மைச் சந்தேகிக்கலாம். அவர்களுடைய ஐயப்பாட்டை நாம் போக்க வேண்டும் என்பதிலும் ஐயமில்லை. ஆனால் அதே சமயம், ஒரு சங்கத்திலிருந்தோ அல்லது கிராமத்திலிருந்தோ எந்தவிதமான உதவியையும் ஏற்காதவன்தான் இலட்சிய ஊழியன் என்று கருதி விடாதீர்கள். இவன் தான்தான் நேர்மையானவன் என்ற தற்பெருமைக்குப் பெரும்பாலும் பலியாகிறான். அது அவனுடைய மதிப்பைக் குறைத்து விடுகிறது.

**கேள்வி:** நீங்கள் எங்களுக்குக் கிராமக் கைத்தொழில்களைக் கற்றுக் கொடுக்கிறீர்கள். எங்களுடைய பிழைப்புக்கான ஊதியத்தைத் தேடிக்கொள்ள வேண்டும் என்பதற்காக இதைக் கற்றுக்கொடுக்கிறீர்களா? அல்லது கிராமவாசிகளுக்கு நாங்கள் இதைக் கற்றுக்கொடுக்க வேண்டும் என்பதற்காகவா? பின்னல் கூறப்பட்டது நோக்கமானால் நாங்கள் ஒரு ஆண்டில் எவ்வாறு இதில் தேர்ச்சி பெற முடியும்?

**கிராமவாசிகளுக்கு உதவும் முறையில்**

**பதில்:** உங்களுக்குச் சாதாரண கைத்தொழில்களே கற்றுக் கொடுக்கப்படுகின்றன. ஏனென்றால், சில ஆதாரமான விவரங்கள் தெரிந்தாலொழிய மக்களுக்கு நீங்கள் யோசனை கூறி உதவ முடியாது. உங்களில் நல்ல முயற்சி உள்ளவர்கள் ஒரு தொழிலைச் செய்து வாழ்க்கைக்கு வேண்டிய ஊதியத்தைத் தேடிக் கொள்ளலாம். கிராமவாசிகள் செய்யும் தொழிலில் நீங்கள் மேலும் அறிவூட்டும் விதத்திலேயே இங்கு உங்களுக்கு எதையும் கற்பிக்கிறோம். மாவு அரைக்கும் திருகைகள், உமியை நீக்கும் திருகைகள், எண்ணெய்ச் செக்குகள் ஆகியவற்றில் நாங்கள் அபிவிருத்தி செய்திருக்கிறோம். மற்றக் கருவிகளில் அபிவிருத்தி செய்வது பற்றிச் சோதனைகள் நடத்திக் கொண்டிருக்கிறோம். இந்த

முன்னேற்றங்களை யெல்லாம் கிராம மக்கள் மத்தியில் நாம் பரப்ப வேண்டும். இவைகளுக்கெல்லாம் மேலாக, செய்யும் தொழிலில் சத்தியமும் நேர்மையும் இருக்கவேண்டும் என்பதை அவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அவர்கள் பாலில் கலப்படம் செய்கிருர்கள்; எண்ணெயில் கலப்படம் செய்கிருர்கள். ஏதாவது சிறிய இலாபம் கிடைத்தால் சத்தியத்திலும் கலப்படம் செய்துவிடுவார்கள். இது அவர்களுடைய குற்றம் அல்ல. நம்முடைய குற்றம். நாம் அவர்களை இதுவரை அலட்சியம் செய்துவிட்டோம். அவர்களைச் சுரண்டினேமேயொழிய, உயர்ந்தது எதையும் அவர்களுக்கு கற்றுக்கொடுக்கவில்லை. அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதன் மூலம் அவர்களுடைய வழி துறைகளை நாம் எளிதாகத் திருத்த முடியும். நீண்ட காலமாக அவர்களை அலட்சியம் செய்ததும் தனித்து ஒதுக்கியதும், அவர்களுடைய அறிவு, ஏன், தார்மிக உணர்ச்சி கூட மழுங்குமாறு செய்துவிட்டன. அவைகளை நாம் கூர்மைப் படுத்தி அவை புத்துணர்ச்சி பெறுமாறு செய்யவேண்டும்.[12]

**உள்ளேயிருந்தே அபாயம்**

உயிருள்ள எந்த இயக்கமோ அல்லது ஸ்தாபனமோ வெளித் தாக்குதலினுல் மடிவதில்லை, உள்ளே அழுகிப்போய்த்தான் மடிகிறது. கிஞ்சிற்றும் சந்தேகத்திற்கு இடமில்லாத ஒழுக்கம், செய்யும் வேலையில் தொழில் நுணுக்கத்தை நாளுக்கு நாள் வளர்த்துக் கொண்டு ஓயாத முயற்சி செய்வது, கட்டுப்பாடாக எளிய வாழ்க்கை நடத்துவது ஆகியவை தான் அவசியமானவை. ஒழுக்கம் இல்லாத ஊழியர்கள், கிராமவாசிகளின் சாதாரண வாழ்க்கையிலிருந்து நெடுந்தூரம் விலகியிருப்பவர்கள், அவர்களுடைய ஊழியத்துக்குத் தேவையான அறிவு பெருதவர்கள் ஆகியோர் கிராமவாசிகள் மனதைக் கவர முடியாது.

**ஒழுக்கம் முக்கியம்**

இவைகளைப் பற்றி நான் எழுதிக் கொண்டிருக்கும்போதே ஒழுக்கம் இல்லாத காரணத்தாலோ அல்லது எளிய வாழ்க்கையை மேற்கொள்ளாத காரணத்தாலோ காரியத்தையும் தங்களையும் கெடுத்துக்கொண்ட ஊழியர்களுடைய உதாரணங்கள் என் ஞாபகத்துக்கு வருகின்றன. நல்ல வேளையாக, ஒழுக்கக் கேடான காரியங்கள் செய்தவர்கள் அபூர்வமே.

**நகரத்தின் தரம்**
**எட்ட முடியாதது**

ஆனல் வேலை முன்னேறுவதற்கு மிகப் பெரிய தடையாக இருந்தது, நல்ல ஊழியர்கள் கிராம வாழ்க்கைத் தரத்தில்

வாழ முடியாமல் இருந்தது தான். இப்படிப்பட்ட ஊழியர்களில் ஒவ்வொருவரும் தங்களுடைய சேவைக்காக, கிராம சேவா ஸ்தாபனங்கள் தாங்க முடியாத விலை கூறுவார்களானல், இறுதியில் இந்த ஸ்தாபனங்களையெல்லாம் மூட வேண்டியதாகத்தான் இருக்கும். ஏனென்ருல் ஒரு சில அபூர்வமான, தற்காலிக ஊழியர்களைத் தவிர மற்றவர்களெல்லாம் நகரங்களின் வீதத்திலேயே ஊதியம் கேட்கிருர்கள். இதை அவர்கள் வலியுறுத்துவதானது, நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையே உள்ள ஏற்றத்தாழ்வைச் சரிக்கட்ட முடியாது என்பதைத் தான் எடுத்துக் காட்டுகிறது. கிராம இயக்கம் என்பது கிராமவாசிகளைப் போலவே நகர மக்களையும் படிக்க வைப்பதாகும். நகரங்களிலிருந்து வரும் ஊழியர்கள் கிராம மனேபாவத்தை வளர்த்துக் கொண்டு, கிராமவாசிகளைப் போன்று வாழக் கற்றுக்கொள்ள வேண்டும். இதற்கு, கிராமவாசிகளைப் போன்று அவர்களும் பட்டினி கிடக்க வேண்டுமென்பது பொருளல்ல. ஆனல் பழைய வாழ்க்கை முறையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்படுத்த வேண்டுமென்பது மட்டும் அவசியம். கிராமங்களின் தரத்தை ஒருபுறம் உயர்த்த வேண்டியதிருக்க, நகரத்தின் தரத்தைக் கணிசமான அளவு குறைக்க வேண்டியிருக்கிறது. அதே சமயம், ஊழியரானவர் எந்தக் காரணத்தை முன்னிட்டும் தனது உடல்நலத்தைக் கெடுத்துக்கொள்ளக் கூடிய வாழ்க்கையை ஏற்குமாறு செய்யக் கூடாது.[13]

## நம்முடைய கிராமங்கள்

ஒரு கிராமத்தில் வாழ முயற்சி செய்யும் ஒரு இளைஞர், தன்னுடைய பிழைப்புக்கு வேண்டிய ஊதியத்தை அங்கேயே சம்பாதித்துக் கொள்ள விரும்புபவர், எனக்கு ஒரு பரிதாபகரமான கடிதம் எழுதியிருக்கிருர். அவருக்கு ஆங்கிலம் அதிகம் தெரியாது. ஆகையால் அவருடைய கடிதத்தை இங்குச் சுருக்கித் தருகிறேன்:

"மூன்று ஆண்டுகளுக்கு முன்பு – அதாவது எனக்கு இருபது வயதாக இருந்தபோது நான் இந்தக் கிராம வாழ்க்கைக்கு வந்தேன். அதற்கு முன்பு நான் பதினைந்து ஆண்டுகள் நகர வாழ்க்கை வாழ்ந்திருந்தேன். என்னுடைய வீட்டுச் சூழ்நிலையினல் நான் கல்லூரிப் படிப்புப் படிக்கமுடியவில்லை. கிராமப் புனருத்தாரணத்துக்காக நீங்கள் மேற்கொண்ட பணியானது, என்னைக் கிராம வாழ்க்கை வாழுமாறு தூண்டியது. எனக்குக் கொஞ்ச நிலம் இருக்கிறது. என்னுடைய கிராமத்தின் ஜனத்தொகை 2500. கிராமத்தில் நான் தொடர்பு கொண்டபின், அங்குள்ள மக்களில் முக்கால்வாசிப் பேருக்கு மேற்பட்டோரிடம் கீழ்க்கண்ட குறைகள் இருப்பதைப் பார்த்தேன்:

(1) கட்சி வேற்றுமைகளும் சண்டைகளும்.

(2) பொறாமை.

(3) எழுத்தறிவின்மை.
(4) வஞ்சகம்.
(5) ஒற்றுமையின்மை.
(6) கவனக் குறைவு.
(7) ஒழுக்கமின்மை.
(8) அர்த்தமில்லாத, பழங்காலப் பழக்கவழக்கங்களில் ஒட்டிக் கொண் டிருத்தல்.
(9) இரக்கமற்ற தன்மை.

இது ஒரு ஒதுக்குப்புறமான இடம். இந்தத் தொலைவான இடத்துக்கு எந்தப் பெரிய மனிதரும் ஒருபோதும் வந்ததில்லை. முன்னேறுவதற்குப் பெரிய மனிதர்களின் தொடர்பு அத்தியாவசியமானது. ஆகையால் இந்தக் கிராமத்தில் வாழ நான் அஞ்சுகிறேன். நான் இந்தக் கிராமத்திலிருந்து புறப்பட்டுவிடலாமா? அவ்வாறு புறப்பட வேண்டாமென்றால், நீங்கள் எனக்கு என்ன வழிகாட்டு கிறீர்கள்?''

இந்த இளைஞருடைய கடிதம் நிலைமையைச் சற்று மிகை படுத்திக் கூறுகிறது என்பதில் ஐயமில்லை. எனினும், அவருடைய கருத்தைப் பொதுவாக நாம் ஏற்றுக்கொள்ளலாம். இந்தப் பரிதாப கரமான நிலைமை இருப்பதற்கான காரணம் எளிதில் ஊகிக்கக் கூடியதே. கல்வி வசதி பெறும் வாய்ப்பு இருந்தவர்கள் கிராமங் களைப் புறக்கணித்துவிட்டார்கள். இதனால் கிராமங்கள் நீண்ட காலமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றன. படித்தவர்கள் நகர வாழ்க் கைக்குச் சென்றுவிட்டார்கள். கிராம இயக்கம் என்பது என்ன ? சேவா உணர்ச்சி உள்ளவர்களைத் தூண்டி கிராமங்களில் குடி யேற்றி அங்குள்ள மக்களுடன் சுமுகமான தொடர்பு கொள்ளு மாறு செய்தலும், அவர்கள் கிராம சேவையில் இன்பங் காணு மாறு செய்தலுமே. மேற்கண்ட கடிதத்தை எழுதியவர் கூறி யுள்ள குறைகள் கிராம வாழ்க்கையுடன் கூடப்பிறந்தவையல்ல. தொண்டு மனப்பான்மையுடன் கிராமங்களில் குடியேறியவர்கள், அங்கு தங்களை எதிர் நோக்கும் கஷ்டங்களைக் கண்டு பயந்து விடுவதில்லை. கிராமவாசிகளின் சிடுசிடுப்புக்கு ஆளாவது உள் படப் பல்வேறு கஷ்டங்களுக்குத் தாங்கள் ஆளாக வேண்டி யிருக்கும் என்பதை அவர்கள் அங்கு செல்லுமுன்பே அறிவார்கள். ஆகையால் தங்களிடமும் தங்களுடைய இலட்சியத்திலும் நம் பிக்கை உள்ளவர்கள்தான் கிராமங்களுக்குத் தொண்டு செய்ய முடியும்; அவர்களுடைய வாழ்க்கையைத் திருத்தி அமைக்க முடியும். மக்கள் மத்தியில் சத்தியமான வாழ்க்கை வாழ்ந்தால் அதுவே ஒரு முன்னுதாரணமாகும். அது அவரைச் சுற்றி உள்ள வர்கள் மத்தியில் உரிய பிரதிபலனை ஏற்படுத்தக்கூடிய முன்னுதா ரணமாக விளங்கும். ஒரு வேளை இந்த இளைஞர் தொண்டு

மனப்பான்மை இல்லாது பிழைப்புக்காக மட்டும் கிராமத்துக்குப் போயிருக்கலாம். அதுவே இந்த இளைஞரின் கஷ்டத்துக்குக் காரணமாய் இருக்கக்கூடும். பணத்தை நாடிப் போகிறவர்களுக்குக் கிராம வாழ்க்கை கவர்ச்சியாக இராது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். தொண்டு உணர்ச்சி வேண்டும். இல்லையேல், கிராம வாழ்க்கையானது அதனுடைய புதுமைபோனபின் அலுப்புத்தட்டும். கிராமத்துக்குச் சென்ற பின்பு, ஏதாவது சிறு கஷ்டம் ஏற்பட்டது என்பதற்காக, எந்த இளைஞனும் தனது முயற்சியைக் கைவிடக்கூடாது. பொறுமையுடன் முயற்சி செய்தால் நகரவாசிகளிலிருந்து கிராமவாசிகள் அவ்வளவு வேறுபட்டவர்கள் அல்லவென்பதைக் காணலாம். நம்முடைய கவனத்துக்கும் அன்புக்கும் கிராமவாசிகள் செவி சாய்ப்பதையுங் காணலாம். நாட்டில் உள்ள மிகப்பெரிய மனிதர்களைத் தொடர்புகொள்ளும் வாய்ப்பு கிராமங்களில் உள்ள ஒருவருக்குக் கிடைக்காது என்பது உண்மையே. கிராம மனப்பான்மை வளருவதற்கு ஏற்ப கிராமங்களில் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டிய அவசியத்தையும், கிராமவாசிகளுடன் நேரடித் தொடர்பு கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் தலைவர்கள் உணருவார்கள். மேலும், சைதன்யர், இராமகிருஷ்ணர், துளசிதாஸ், கபீர், நானக், டாடு, துகாராம், திருவள்ளுவர் ஆகிய மகான்களும், மற்றும் இவர்களைப் போன்ற சமத்துவமான புகழும் பக்தியும்கொண்ட எண்ணற்ற மகான்களும் இயற்றிய பெருநூல்கள்மூலம் நல்ல, பெரிய மனிதர்களின் தொடர்பு ஒருவருக்குக் கிடைக்கும். நிலையான உயர்ந்த கருத்துக்களை அறிய நமது மனதைப் பக்குவப்படுத்துவதே கடினமானது. அரசியல், சமூகம், பொருளாதாரம், விஞ்ஞானம்பற்றிய நவீன கருத்துக்களைத் தெரிந்து கொள்வதே நம்முடைய நோக்கமானல், நமது ஆவலைப்பூர்த்தி செய்யக்கூடிய புத்தகங்களை வாங்கிக் கொள்ளமுடியும் என்பது உண்மையே. ஆயினும், மத இலக்கியங்கள் கிடைப்பதைப்போன்று அவ்வளவு எளிதாக இவை கிடைப்பதில்லையென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். பொது மக்களுக்காகவென்றே மகான்கள் பேசவும் எழுதவும் செய்தார்கள். ஆனல் மக்கள் புரிந்து ஏற்றுக்கொள்ளக்கூடிய முறையில் நவீன கருத்துக்களை எழுத்து அல்லது பேச்சில் இன்னும் கொண்டு வரமுடியவில்லை. ஆகையால் மேற்கண்ட கடிதத்தை எழுதியவரைப்போன்ற இளைஞர்களுக்கு, ''மனந்தளர்ந்துவிட வேண்டாம்'' என்று அறிவுரை கூற-விரும்புகிறேன். தொடர்ந்து உங்களுடைய முயற்சிகளை மேற்கொள்ளுங்கள். நீங்கள் கிராமங்களில் இருப்பதன்மூலம், கிராமங்களை, நாம் வாழவும் அன்பு செலுத்தவும்

அதிகத் தகுதியுள்ள இடமாக்குங்கள். கிராமவாசிகள் ஏற்றுக் கொள்ளக்கூடிய முறையில் நீங்கள் தொண்டு செய்துதான் இதைச் சாதிக்க முடியும். தங்களுடைய சொந்த உழைப்பால் கிராமங் களைத் துப்புரவு செய்வதன்மூலமும், தங்களால் முடிந்த அளவு எழுத்தறிவைப் புகட்டுவதன் மூலமும் ஒவ்வொருவரும் இதைச் செய்யத் தொடங்கலாம். அவர்களுடைய வாழ்க்கையானது பரி சுத்தமானதாகவும் ஒழுங்கானதாகவும் சுறுசுறுப்பானதாகவும் இருந்தால், அக்குணங்கள் அவர்கள் சேவை செய்யும் கிராமங்களி லும் பரவும்.[14]

## கிராமங்களுக்கு யாத்திரை

கிராம சேவையைப்பற்றித் தங்கள் சுற்றுப்புறங்களில் பிர சாரம் செய்துவரும் ஊழியர்களின் ''யாத்திரை''க்கு ஸ்ரீ சீதா ராம சாஸ்திரி ஏற்பாடு செய்து வருகிறார். இந்த யாத்திரிகர்கள் ரயிலிலோ, மோட்டாரிலோ, ஏன், நாட்டுவண்டிகளில்கூடப் பிர யாணம் செய்யக்கூடாது என்றே நான் கூறுவேன். என்னுடைய ஆலோசனையை அவர்கள் ஏற்றுக்கொள்வதானல் அவர்களுடைய வேலையும் அதிகப் பலன் அளிக்கும், செலவும் கிட்டத்தட்ட ஒன்றுமே இருக்காது. இவர்கள் 2 அல்லது 3 பேருக்கு மேற் போகாமல் ஒரு கோஷ்டியாகச் சேர்ந்துகொள்ள வேண்டும். கிராம வாசிகள், இந்த கோஷ்டிகளுக்கு இருப்பிடமும் உணவும் அளிப் பார்கள் என எதிர்பார்க்கலாம். பெரிய கோஷ்டிகளைப் போன்று சிறிய கோஷ்டிகள் கிராமங்களுக்குத் தாங்கமுடியாத சுமையாக இருக்கமாட்டா.

## பணிகள்

சுகாதார சேவை, கிராம நிலவரங்களைப்பற்றிய புள்ளி விவரக் கணக்குகள் சேகரிப்பு, கிட்டத்தட்டச் செலவேயில்லாமல் கிராம வாசிகள் தங்களுடைய பொருளாதார, சுகாதார நலன்களைப் பெருக்கிக்கொள்ளுதல் ஆகியவற்றை அவர்களுக்குப் போதிக்கும் பணிகளில் இந்தக் கோஷ்டிகள் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்.[15]

## புது வழிகளா அல்லது பழையனவா ?

போதுமான அனுபவம் இல்லாமல் பழைய கருவிகளையோ, வழிகளையோ அல்லது பழைய அமைப்புக்களையோ மாற்றுவதற்கு ஊழியர்கள் முயற்சி செய்யக்கூடாது. ஏற்கனவே உள்ள அடிப் படை பாதிக்கப்படாத முறையில் மாறுதல்களைச் செய்ய எண்ணி ஞல்தான் அவை பாதுகாப்பானவையாக இருக்கும். அதுதான்

உண்மையான சிக்கனம் என்பதையும் அவர்கள் அனுபவத்தில் காண்பார்கள்.[16]

## முழு கிராம சேவை

கிராம வாழ்வின் எல்லாத் துறைகளிலும் சேவைசெய்யும் ஒரு (சமக்ர) கிராம சேவக், கிராமத்தில் உள்ள ஒவ்வொருவரையும் தெரிந்து வைத்திருக்கவேண்டும். அவர்களுக்குத் தன்னுல் இயன்ற சேவையையும் செய்துவரவேண்டும். இதனுல் ஒவ்வொன்றையும் தானே தன்னந்தனியாக இருந்து கிராம ஊழியர் செய்ய முடியும் என்பதல்ல. கிராமவாசிகள் தங்களுக்குத் தாங்களே உதவிசெய்து கொள்வதற்கான வழியை அவர் காண்பிப்பார். அவர்களுக்கு வேண்டிய பொருள்களேயும் மற்ற உதவியையும் பெற்றுக்கொடுப்பார். தனக்கு வேண்டிய உதவியாளர்களுக்குப் பயிற்சி அளிப்பார். கிராமவாசிகள் தனது ஆலோசனையை நாடி அதைப் பின்பற்றும் அளவுக்கு அவர் கிராமவாசிகளின் மனதைக் கவர்ந்திருப்பார். உதாரணமாக நான் ஒரு செக்குடன் ஒரு கிராமத்தில் குடியேறுகிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். மாதந்தோறும் 15 இலிருந்து 20 ரூபாய் சம்பாதிக்கக்கூடிய ஒரு சாதாரணச் செக்கானுக நான் இருக்கமாட்டேன். நான் ஒரு "மகாத்மா செக்கானுக" இருப்பேன். இந்த இடத்தில் மகாத்மா என்ற வார்த்தையை வேடிக்கையாகவே நான் உபயோகித்திருக்கிறேன். ஆனுல் நான் சொல்ல வந்தது என்னவென்ருல், ஒரு செக்கான் என்ற முறையில் கிராமவாசிகள் முன்மாதிரியாகப் பின்பற்றக்கூடியவனுக நான் இருப்பேன் என்பதுதான். கீதையும் குரானும் அறிந்த செக்கானுக நான் இருப்பேன். கிராமவாசிகளுடைய குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கக்கூடிய அளவு நான் படித்திருப்பேன். ஒருவேளே, நேரமில்லாததால் நான் இதைச் செய்ய முடியாது போகலாம். கிராமவாசிகள் என்னிடம் வந்து, "தயவு செய்து எங்களுடைய குழந்தைகளின் கல்விக்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கேட்பார்கள். அப்போது நான் அவர்களிடம், "நான் உங்களுக்காக ஒரு ஆசிரியரைக் கொண்டுவர முடியும். ஆனுல் அதற்காக ஆகும் செலவுகளே நீங்கள் தான் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கும்" என்று கூறுவேன். அவர்கள் முழுமனதுடன் இதைச் செய்யத் தயாராய் இருப்பார்கள். அவர்களுக்கு நான் நூல் நூற்கக் கற்றுக்கொடுப்பேன். ஒரு நெசவாளர் வேண்டுமென அவர்கள் என்னிடம் வந்து கேட்டால், எந்த நிபந்தனேப்படி ஆசிரியரைத் தேடிக் கொடுத்தேனே அதே நிபந்தனேயில் நெசவுக்காரரைத் தேடிக் கொடுப்பேன். அவர்களுடைய துணியை எவ்வாறு நெய்வதென்பதை இந்த நெசவுக்காரர் கற்றுக்கொடுப்பார். சுகா

தாரம், துப்புரவு ஆகியவைகளின் முக்கியத்துவத்தை நான் அவர்களுக்கு உணர்த்துவேன். தங்களுக்கு ஒரு தோட்டி வேண்டுமென்று என்னிடம் அவர்கள் கேட்டால், "நானே உங்களுடைய தோட்டியாக இருக்கிறேன்; இந்த வேலையை உங்கள் எல்லோருக்கும் கற்றுக்கொடுக்கிறேன்" என்று சொல்வேன். எல்லாத் துறைகளிலும் தொண்டாற்றும் சமக்ர கிராம சேவையைப்பற்றிய எனது கருத்து இதுதான்.[17]

## அத்தியாயம் 28

# அரசாங்கமும் கிராமங்களும்

## அரசாங்கம் என்ன செய்ய முடியும் ?

**கிராமத்தின் கதர் தேவைப் பூர்த்தி**

இப்போது காங்கிரஸ் அமைச்சர்களே பதவி வகிப்பதால், கதருக்கும் மற்றக் கிராமக் கைத்தொழில் களுக்கும் அவர்கள் என்ன செய்ய முடியும் என்று கேட் கப்படுவதில் நியாயம் இருக்கிறது. அதற்கெனத் தனியாக ஒரு அமைச்சர் நியமிக்கப்பட்டாலும் நியமிக்கப்படாவிட்டாலும் இந்த வேலைக்கெனத் தனி அரசாங்க இலாகா அமைக்க வேண் டியது முற்றிலும் அவசியமாகும். உணவும் உடையும் பற்ருக்குறை யாக இருக்கும் இந்தக் காலத்தில், இந்த இலாகா மிகப் பெரிய உதவியாக இருக்க முடியும். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் மூலமும் கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தின் மூலமும் நிபுணர் உதவியை அமைச்சர்கள் பெறலாம். மிகக் குறைந்த செலவில், மிகக் குறுகிய காலத்தில் இந்தியாவில் உள்ளவர்களுக்கெல்லாம் இப் போது கதர் அளிக்க முடியும். கிராமவாசிகள் தங்களுக்கு வேண் டிய கதரை உற்பத்தி செய்து கொள்ள வேண்டுமென்று ஒவ்வொரு மாகாண அரசாங்கமும் கூறிவிட வேண்டும். இவ்வாறு செய்வ தானல், ஆங்காங்கு கதர் உற்பத்தியும் விநியோகமும் தானகவே நடைபெற்றுவிடும். அதனல் நகரங்களின் உபயோகத்துக்கும் ஒரு சிறு அளவாவது உபரி கிடைக்கும். அதனல் ஆங்காங்குள்ள ஆலை களின் பாரம் ஓரளவாவது குறையும். அப்போது இந்த ஆலைகள், உலகின் மற்றப் பகுதிகளுக்குத் தேவையான துணியை உற்பத்தி செய்து கொடுக்க முடியும்.

எவ்வாறு இதைச் சாதிக்க முடியும் ?

**அரசாங்க உதவிகள்**

ஒரு குறிப்பிட்ட தேதிக்குள், தங்கள் தங்கள் கிராமத்துக்கு வேண்டிய கதரைத் தாங்களே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும் என்று கிராமவாசிகளுக்கு அரசாங்கம் அறிவித்து விட வேண்டும். அந்தத் தேதிக்குப் பின் எந்தத் துணியும் அவர்களுக்கு

அளிக்கப்பட மாட்டாது என்பதையும் அறிவித்து விடவேண்டும். அதே சமயம் அரசாங்கங்களும் கிராமங்களுக்குத் தேவையான பருத்தி விதை அல்லது பஞ்சு, உற்பத்தி செய்வதற்குத் தேவை யான கருவிகள் ஆகியவைகளைக் கொள்முதல் விலைக்கு அளித்து உதவ வேண்டும். இவைகளின் விலையை ஐந்து வருஷங்களிலோ அல்லது அதற்கு மேலான காலத்திலோ சிறுசிறு தொகைகளாகப் பல தவணைகளில் வசூல் செய்ய வேண்டும். அவசியமான இடங் களுக்குப் பயிற்சியளிப்போர்களை அனுப்பி உதவவேண்டும். ஒரு கிராமத்தில் உள்ளவர்கள் அங்கு உற்பத்தியாகும் துணியிலிருந்தே தங்களுடைய தேவையைப் பூர்த்தி செய்து கொண்டு, அதற்கு மேலும் உபரியாகக் கதர் இருந்தால் அதை வாங்கிக் கொள்வதாக அரசு உறுதிமொழி அளிக்க வேண்டும். பெருங்கஷ்டம் எதுவும் இல்லாமல் இது துணிப் பற்றுக்குறையைப் போக்கிவிடும். இதற் காக ஒவ்வொருவருக்கும் ஆகும் செலவும் மிக மிகக் குறைவானதாக இருக்கும்.

**கிராம "சர்வே"**

கிராமங்களில் சர்வே நடத்த வேண்டும். ஒவ்வொரு கிராமத் திலும், சிறு உதவியுடனே அல்லது எவ்விதமான உதவியும் இல் லாமலோ உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களின் (இவைகள் அந்த கிராமத்தின் தேவைக்கு உபயோகமாக இருந்தாலும் சரி, அல்லது வெளி விற்பனைக்குத் தேவையானவைகளாக இருந்தாலும் சரி) பட்டியலைத் தயாரிக்க வேண்டும். உதாரணமாக, செக்கு எண்ணெய், செக்குப் பிண்ணுக்கு, செக்கில் ஆட்டி விளக்கிற்கு உபயோகப்படுத்தப்படும் எண்ணெய், கைக்குத்தல் அரிசி, பனைச் சர்க்கரை, தேன், விளையாட்டுச் சாமான்கள், பாய்கள், கையால் செய்த காகிதம், கிராமத்தில் உற்பத்தியான சோப் முதலியவை களைக் கூறலாம். தற்போது கிராமங்களில் பெரும்பாலானவை ஒன்று செத்துவிட்டன அல்லது செத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் மேற்கண்டவாறு கவனம் எடுத்துக் கொண்டால், அவை உயிர் பெற்றவைகளாகும். தங்களுடைய தேவைகளில் பெரும்பாலானவை களைப் பூர்த்தி செய்வதுடன் இந்தியாவில் உள்ள பெரிய, சிறிய நகரங்களின் பெரும்பாலான தேவைகளைப் பூர்த்தி செய்யத் தங் களுக்குப் போதிய சக்தி உண்டு என்பதையும் வெளிக் காட்டுபவை யாக இருக்கும்.

**கால்நடைச் செல்வம்**

இதற்கப்பால், இந்தியாவில் உள்ள எண்ணற்ற கால்நடைச் செல்வம் இருக்கிறது. ஆனால் இவ்வ மிகக் கொடுமையான முறை

யில் அலட்சியம் செய்யப்பட்டதால் பல இன்னல்களுக்கு உள்ளாகி யிருக்கின்றன; கோசேவா சங்கம் போதுமான அளவு அனுபவம் அடையவில்லை யென்றாலும் இந்த விஷயத்தில் அது பெரும் உதவி செய்ய முடியும்.

**ஆதாரக் கல்வி**

ஆதாரக் கல்வி இல்லாததால் தற்போது கிராமவாசிகள் கல்விப் பசியால் வாடுகின்றனர். இந்தத் தேவையை இந்துஸ்தானி தாலிமி சங்கம் பூர்த்தி செய்ய முடியும்.[1]

## நான் ஒரு அமைச்சனாக இருந்தால்?

**இது கட்டாயமாகுமா?**

மேலே நான் கூறியுள்ள கருத்துக்களை நான் மாற்றிக் கொள்ளவேயில்லை. ஒரே ஒரு விஷயந்தான் தவறான கருத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அதில் கட்டாயம் இருப்பதாகச் சில நண்பர்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். அதில் உள்ள தெளிவற்ற நிலைக்காக நான் வருந்துகிறேன். மக்கள் பிரதிநிதித்துவம் படைத்த அரசாங்கங்கள், தாங்கள் விரும்பினால் என்ன செய்யலாம் என்பதைத்தான் (கேள்விக்கு மறுமொழியாக) நான் கூறியிருந்தேன். அப்படிப்பட்ட அரசாங்கங்களின் அறிக்கைகளைக் கட்டாயமாகக் கொள்ள முடியாது என்பதை நான் ஊகித்துக் கொண்டேன். இவ்வாறு நான் ஊகித்துக் கொண்டதும் ஏற்கத் தக்கதே என்று நம்புகிறேன். ஏனென்றால், உண்மையான பிரதிநிதித்துவம் உள்ள ஒரு அரசாங்கத்தின் ஒவ்வொரு செயலும், எந்த வாக்காளர்களின் பிரதிநிதியாக அரசாங்கம் வீற்றிருக்கிறதோ அந்த அரசாங்கத்தின் சம்மதத்தைப் பெற்றதாகவே ஆகும். வாக்காளர்கள் என்பது மொத்தமாக உள்ள எல்லா மக்களுந்தான்— அதாவது அவர்கள் வாக்காளர்களாகப் பதிவு செய்திருந்தாலும் பதிவு செய்யாவிட்டாலும் சரி. இந்த அடிப்படையில்தான், ஒரு குறிப்பிட்ட தேதிக்குப்பின், தாங்களே உற்பத்தி செய்த கதரைக் கிராமவாசிகள் அணிவதைச் சாத்தியமாக்குவதற்காக, அத் தேதிக்குப்பின் கிராமவாசிகளுக்கு ஆலைத் துணி அளிக்கப்படமாட்டாதென்று கிராமங்களுக்கு அரசாங்கம் அறிவிக்க வேண்டுமென்று நான் எழுதினேன்.

**கதர் சுதந்திர சின்னம்**

சுயராஜ்யத்திற்குக் கதர் ஒரு சாதனம். ஆனால், சம்பந்தப்பட்ட மக்களின் மனமுவந்த ஒத்துழைப்பு இல்லாமல் கதர் சம்பந்தமாக

நிறைவேற்றப்படும் எந்தத் திட்டமும் இதில் மண்ணை அள்ளிப் போட்டுவிடும். கடந்த ஏப்ரல் 25 ஆம் தேதியன்று நான் எழுதிய கட்டுரைக்கு என்ன பொருள் இருந்தாலும், இதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். மேற்கண்டவாறு செய்தால், கதர் என்பது மத்திய கால அஞ்ஞானத்துக்கும் அடிமைத் தனத்துக்கும் திரும்பிச் செல்வ தாகும் என்ற வசை மொழி உண்மையாகப் போய்விடும். ஆனல் நானே இதற்கு முரணான கருத்துக் கொண்டிருந்திருக்கிறேன். கட்டாயத்தின் பேரில் கதர் அணிவதானது எவ்வாறு அடிமைத் தனத்தின் சின்னமாகுமோ அதைப் போன்று அறிவு பூர்வமாகக் கதரை ஏற்று அதைத் தானே பிரதானமாகத் தனது உபயோகத் துக்காகத் தயாரிப்பது நமது சுதந்திரத்தின் சின்னமாகும். சுதந் திரம் என்பது எல்லா வகையாலும் சுயஉதவியை நம்பியிருப்பது தான். அவ்வாறு இல்லாவிட்டால் அது என்ன சுதந்திரம்? கதர் என்பது ஒரு சுதந்திர மனிதனின் உரிமையும் கடமையுமாகும் என்று நான் நம்புகிறேன். இல்லையேல், கதருடன் நான் எந்தவிதமான தொடர்பும் கொள்ளமாட்டேன்.

**விற்பனைக்கா கதர் ?**

இவ்வாறு உற்பத்தி செய்யப்படும் கதரானது ஒரு சமயம் சொந்த உபயோகத்துக்காகவும் விற்பனைக்காகவும் இருக்க முடியுமா என்று நண்பரான ஒரு விமர்சகர் கேட் கிறார். விற்பனை என்பது இரண்டாம் தரமானதாக இருந்தால், "ஆம்" என்று இதற்குப் பதில் கூறலாம்; ஆனல் விற்பனைக்காகவே உற்பத்தி அல்லது பிரதானமாக விற்பனைக்காக உற்பத்தி என்ற நிலைமை இருந்தால் "கூடாது" என்பதே பதிலாகும். கதர் விற் பனையுடன் நாம் தொடங்கியதானது, தற்கால அவசியத்தை உணர்த்துவதுடன் நம்முடைய குறுகிய இலட்சிய நோக்கையும் எடுத்துக் காண்பிக்கிறது. அனுபவம் என்பது ஒரு பெரிய ஆசான். அது நமக்குப் பல விஷயங்களைக் கற்றுக் கொடுத்திருக் கிறது. அதனுடைய பிரதான உபயோகம் இதில் முக்கியத்துவம் இல்லாததல்ல. ஆனல் எந்த வகையிலும் கடைசி முக்கியத்துவம் வாய்ந்ததுமல்ல. ஆனல் மனதைக் கவரும் இந்த ஹேஷ்யங்களில் ஈடு படுவதை நான் விட்டு விட்டு, தலைப்பில் கேட்கப்பட்ட கேள்விக்குத் திட்டவட்டமான பதில் அளிக்க ஆரம்பிக்க வேண்டும்.

**விரிவான அம்சங்கள்**

எல்லா அரசாங்க நடவடிக்கைகளுக்கும் கேந்திரமான கிராமப் புனருத்தாரண அமைச்சர் என்ற முறையில் எனது முதல் வேலை, இவ்வேலைக்குத் தகுதி வாய்ந்த நேர்மையான, லஞ்சம் வாங்காத

நிரந்தர அரசாங்க அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதாகவே இருக்கும். நான் அவர்களை அகில இந்திய நூற்போர் சங்கத்துடனும், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்துடனும் தொடர்பு கொள்ளுமாறு செய்வேன். இந்த இரண்டுமே காங்கிரஸ் நிறுவிய ஸ்தாபனங்கள்தான். கிராமக் கைத்தொழில் சங்கத்துக்கு மிக அதிகமான ஊக்கம் அளிப்பதற்கான திட்டத்தைக்கொண்டு வருவேன். நான் இந்த அதிகாரிகளுக்குச் சில நிபந்தனைகளை விதிப்பேன். கிராமவாசிகளை எந்த முறையிலும் கட்டாயப்படுத்தக்கூடாது; மற்றவர்களுக்காக அவர்கள் அடிமைபோல் உழைக்கக்கூடாது; சுயமுயற்சியை நம்பி வாழ அவர்களுக்குப் போதிக்க வேண்டும்; உணவு, உடை, மற்ற அத்தியாவசியப் பொருள்கள் ஆகியவைகளின் உற்பத்திக்குத் தங்களுடைய சொந்த உழைப்பையும் திறமையையும் நம்பி யிருக்குமாறு செய்யவேண்டும். ஆகவே இவ்வாறு இந்தத் திட்டம் விரிவானதாய் இருக்க வேண்டும். ஆகையால் என்னுடைய முதல் அதிகாரியை இந்துஸ்தானி தாலிமி சங்கத்தை (ஆதாரக் கல்விச் சங்கத்தை) பார்க்குமாறும் அது கூறுவதைக் கேட்குமாறும்தான் நான் அறிவுரை கூற விரும்புகிறேன்.

## அடிப்படை விதி

இவ்வாறு தயாரிக்கப்படும் திட்டத்தில் ஒருவிதி இருக்கிறது என்பதை நான் ஊகித்துக்கொள்ளுகிறேன். அதாவது, "ஒரு குறிப்பிட்ட தேதியிலிருந்து ஒரு ஆண்டுக்குப் பின் ஆலைத் துணி எங்களுக்குத் தேவையில்லை; எங்களுக்குப் பஞ்சு, கம்பளி, மற்றும் அத்தியாவசியமான சாதனங்கள் ஆகியவைகளைக் கொடுங்கள்; அவற்றை வெகுமதியாகக் கொடுக்கவேண்டாம். சுலபமான தவணைகளில் திருப்பிச் செலுத்துமாறு கொடுங்கள்" என்று கிராமவாசிகளே அறிவிப்பார்கள். மேலும் இந்தத் திட்டமானது எடுத்த எடுப்பிலேயே ஒரு மாகாணம் முழுவதும் அமுலுக்கு வராது. ஆரம்பத்தில் ஒரு பகுதியிலேயே அமுலுக்குவரும். மேலும் அகில இந்திய நூற்போர் சங்கமானது, இத்திட்டம் அமுலுக்குவர வழி காட்டி உதவும். இதுவும் இத்திட்டத்தில் கூறப்பட்டிருக்கும்.

## செலவு முறை

இத்திட்டம் சிறந்தது என்பதை உணர்ந்தவுடன் சட்டத் துறையைக் கலந்தாலோசித்து அதற்கு ஒரு சட்டபூர்வமான உரு அளிப்பேன். அதன்பின், இந்தத் திட்டம் எவ்வாறு தோன்றியது என்பதைப் பூரணமாக விளக்கி ஒரு அறிக்கை வெளியிடுவேன்.

கிராமவாசிகள், ஆலைச் சொந்தக்காரர்கள், மற்றவர்கள் ஆகியோர் உடன்பாட்டுடனேயே இது நடைபெறும். இந்த அறிக்கைக்கு அரசாங்க முத்திரை இருந்தாலும், அது மக்களுடைய நடவடிக்கையே என்பதை அந்த அறிக்கை தெளிவாக உணர்த்தும். வரண்ட ஏழைகளான கிராமவாசிகளின் நலனுக்காக அரசாங்கத்தின் பணம் செலவிடப்படும். சம்பந்தப்பட்ட மக்களுக்கு அது மிக அதிகமான பலன் தருமாறும் பார்த்துக் கொள்ளப்படும். ஆகையால் ஒருவகையில் இது மிகவும் இலாபகரமான முதலீடாக இருக்கும். இதில் நிபுணர்கள் தாங்களாகவே முன்வந்து உதவி அளிப்பார்கள். ஒவ்வொருவருக்கும் ஆகும் செலவு மிகமிகக் குறைந்ததாக இருக்கும். மொத்தத்தில் நாட்டிற்கான செலவையும், அதனல் மக்களுக்கு ஏற்பட்ட பலனையும் மேற்கண்ட அறிக்கை விவரமாக விளக்கும்.

### நூற்போர் சங்கப் பொறுப்பு

ஒரு கதர்த் திட்டத்தை உருவாக்கி, அதை வெற்றிகரமாக நடத்திக்கொடுக்கும் சுமையை ஏற்கும் அளவு மனத் தெளிவும் சக்தியும் அகில இந்திய நூற்போர் சங்கத்துக்கு உண்டா என்பதைத்தான் அமைச்சர் என்ற முறையில் நான் சிந்தித்துப் பார்ப்பேன். அவ்வித சக்தி அதற்கு இருந்தால் முழு நம்பிக்கையுடன் எனது திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர முற்படுவேன்.

## அத்தியாயம் 29

# இந்தியாவும் உலகமும்

### உள்நாட்டுப் பொருளாதாரம்

இந்தியா தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ளக் கூடியதாகவும், தன்னம்பிக்கை உடையதாகவும், ஆசையோ சுரண்டலோ அண்டமுடியாததாகவும் இருந்தால், எந்த வல்லரசும்—அது மேற்கு வல்லரசோ அல்லது கிழக்கு வல்லரசோ—பேராசைப்படக்கூடிய நாடாக இருக்காது. ஆயுதங்களால் ஏற்படும் பணச் சுமையை ஏற்காமலேயே பாதுகாப்பாக இருக்கும். ஆக்கிரமிப்பிலிருந்து இந்தியாவைக் காக்கக்கூடிய மிகப் பெரிய பாதுகாப்பு இந்தியாவின் உள்நாட்டுப் பொருளாதாரந்தான்.[1]

### ஒதுங்கிய சுதந்திரம் அல்ல

பூரண சுயராஜ்யம் என்று நான் சொல்லும்போது, தனித்து ஒதுங்கியுள்ள சுதந்திரத்தைக் குறிப்பிடவில்லை. ஆனால், நலம் தரும் கண்ணியமான சுதந்திரத்தைத்தான் குறிப்பிடுகிறேன். என்னுடைய தேசியம் தீவிரமானதாய் இருந்தாலும் அது வெறும் தேசியம் மட்டுமல்ல. மற்ற தேசத்திற்கோ அல்லது தனிப்பட்டவருக்கோ தீங்கு விளைவிப்பது என்னுடைய நோக்கமல்ல. சட்ட முதுமொழிகள் சட்ட பூர்வமானவை என்பதைக் காட்டிலும் அறநெறியானவை என்பதுதான் அதிக முக்கியமானது. "மற்றவர்களுடைய சொத்துக்குத் தீங்குசெய்யும் முறையில் உன்னுடைய சொத்தைப் பயன்படுத்தாதே" என்ற நிரந்தர சத்திய மொழியில் எனக்கு நம்பிக்கையுண்டு.[2]

### உலக அமைப்பு

ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்காகப் பரஸ்பரம் பாதுகாப்பு உடன்படிக்கை செய்து கொள்வதற்கும் பொருளாதார ஒத்துழைப்புக்கும், சுதந்திர ஜனநாயக இந்தியா மற்ற சுதந்திர நாடுகளுடன் மகிழ்ச்சியுடன் ஒன்று சேரும். சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு உண்மையான உலக அமைப்பை உண்டாக்குவதற்காக அது தொண்டாற்றும். இவ்வித அமைப்பில் மனித வர்க்கத்தின் முன்னேற்றத்துக்காகவும் அபிவிருத்திக்காகவும் உலகின் அறிவும் வளமும் பயன்படுத்தப்படும்.[3]

## பிறநாடுகள் செய்யக்கூடிய உதவி

மேற்கு நாடுகள் தங்களுடைய திறமையைப் பயன்படுத்த வேண்டும் என்பதுதான் இதன் பொருள். அவர்கள் வெளிநாடுகளில் தாராள மனோபாவத்துடன் தங்களுடைய திறமையைப் பயன்படுத்த விரும்பினால், அமெரிக்கா, "நல்லது, பாலங்கள் கட்டுவது எப்படி யென்பது எங்களுக்குத் தெரியும். நாங்கள் அதை இரகசியமாக வைத்துக்கொள்ளப் போவதில்லை. எப்படிப் பாலங்கள் கட்டுவதென்பதை உலகம் முழுவதற்குமே கற்றுக் கொடுக்க நாங்கள் தயார். அதே சமயம் உங்களிடமிருந்து நாங்கள் எவ்விதக் கட்டணமும் வசூல் செய்யப் போவதில்லை" என்று சொல்லும். தற்போது அமெரிக்கா, "பிறநாடுகள் ஒரு கோதுமைக் கதிர் விளைவிக்கக்கூடிய இடத்தில் எங்களால் இரண்டாயிரம் விளைவிக்கமுடியும்" என்று கூறுகிறது. அப்படியானால், அந்தக் கலையைக் கற்க விரும்பும் மற்றவர்களுக்கு அமெரிக்கா அதை இலவசமாகக் கற்றுக்கொடுக்க வேண்டும். ஆனால் அதற்குப் பதிலாக, உலகம் முழுவதற்குமே தேவையான கோதுமையை அமெரிக்காவே உற்பத்திசெய்ய முற்பட்டுவிடக்கூடாது. அவ்வாறு அமெரிக்கா விளைவிக்கக்கூடிய ஒருநாள் வருமானால், அது உலகிற்கே ஒரு துக்க நாளாகத்தான் முடியும்.[4]

[இந்தியா தங்களுக்கு என்ன உதவியளிக்கும் என்பதை அறிய ஆப்பிரிக்கர்கள் விரும்பினார்கள். "பயங்கரச் சுரண்டலுக்கு அவர்கள் ஆளாகியிருப்பதால், அவர்களை இந்தச் சுரண்டலிலிருந்து காப்பாற்றக் கூட்டுறவு தொழில்மயத் திட்டத்தை அவர்கள் எவ்வாறு நிறைவேற்றி வைக்கமுடியும்" என்பதையும் அவர்கள் அறிய விரும்பினார்கள்.]

## இராட்டையை அளிக்கும்

இந்தியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்குமிடையே தத்துவங்கள், சேவைகள் ஆகியவற்றில் பரிமாற்றம் நடைபெறும். மேற்கு நாட்டுச் சுரண்டல்காரர்களைப் போன்று மூலப் பொருள்களுக்காக, உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்வதென்பதிருக்காது. அப்போது உங்களுக்கு இந்தியா இராட்டையை அளிக்கும். நான் தென்னாப்பிரிக்காவிலிருந்த போது இதைக் கண்டுபிடித்திருந்தால், போனிக்ஸில் என்னுடைய அண்டை வீட்டுக்காரர்களாக இருந்த ஆப்பிரிக்கர்கள் மத்தியில் அதைப் புகுத்தியிருப்பேன். நீங்கள் பருத்தி சாகுபடி செய்ய முடியும். உங்களுக்கு நிறைய ஓய்வும், (உடல்) உழைப்புத் திறனும் இருக்கிறது. நாம் புனருத்தாரணம் செய்ய விரும்பும் கிராமக் கைத்தொழில்களைப் பற்றி ஆராய்ந்து, அவைகள் என்ன கற்பிக்கின்றன வென்பதைப் புரிந்து கொள்ள

வேண்டும். உங்களுடைய விமோசனத்தின் திறவு கோலே அதில் தான் இருக்கிறது.[5]

அமெரிக்காவுக்கு அளிக்கக் கூடிய செய்தி இராட்டையிடம் ஏதாயினும் உண்டா? அணுக் குண்டுக்கு மாற்று ஆயுதமாக அது பயன்பட முடியுமா?

**உலகிற்குச் செய்தி**

அமெரிக்காவுக்கு, ஏன், இந்த உலகம் முழுவதற்குமே அளிக்கக் கூடிய செய்தி இராட்டையிடம் இருப்பதாகவே நான் கருதுகிறேன்...... இந்தியாவும் உலகமும் இராட்டையின் மூலமே காப்பாற்றப்படும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்தியா இயந்திரத்தின் அடிமையானால், ஆண்டவன் உலகத்தைக் காப்பாற்றட்டும் என்றுதான் நான் கூறுவேன்.[6]

**இந்தியாவே வழிகாட்டும்**

இரத்தம் சிந்தி மரணம் விளைவிப்பதில் உலகமே அலுத்துப் போய்விட்டது என்று நான் மனப்பூர்வமாக உணருகிறேன். இதிலிருந்து தப்புவதற்கான வழியைக் கண்டுபிடிப்பதற்கு உலகம் முயன்று கொண்டிருக்கிறது. அநேகமாக, மேற்கண்ட பசியால் வாடும் உலகத்திற்கு இந்தியா என்ற இந்தப் புராதன நாடே வழி காட்டும். இப் பெருமையை அது அடையும் என்ற நம்பிக்கை எனக்குப் பெருமை தருகிறது.[7]

**கலங்கரை விளக்கம்**

இந்தியா தோல்வியடைந்தால், ஆசியாவே அழிந்து விடும். பல கலப்படமான கலாச்சாரங்களும் நாகரிகங்களும் வளரும் இடம் என்று இது வர்ணிக்கப்பட்டிருப்பது முற்றிலும் சரியே. ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் அல்லது உலகின் எந்தப் பகுதியிலும் வாழக்கூடிய சுரண்டப்பட்ட இனங்களுக்கெல்லாம் இந்தியாவே கலங்கரை விளக்கமாக நின்று நிலவட்டும்.[8]

**பிறரைச் சார்ந்த வாழ்வு**

உலகம் முழுவதிலுமிருந்து நாம் துண்டித்துக் கொண்டு வாழ விரும்பவில்லை. எல்லா நாடுகளுடனுமே நாம் சுதந்திரமான தொடர்பு கொண்டிருப்போம். ஆனால், நிர்ப்பந்தமான முறையில் தற்போது நாம் கொண்டுள்ள தொடர்புகளெல்லாம் அகல வேண்டும். நாம் பிறரால் சுரண்டப்பட விரும்பவில்லை. அதே சமயம் மற்ற எந்த நாட்டையும் சுரண்டவும் விரும்பவில்லை. இந்தத் திட்டத்தின் கீழ் எல்லாக் குழந்தைகளையுமே உற்பத்தியாளர்

களாக்கும் நாளை நாம் ஆவலுடன் எதிர்பார்க்கிறோம். தேசத்தின் தோற்றத்தையே நாம் மாற்ற விரும்புகிறோம். ஏனென்றால் இது தான் நமது சமூக வாழ்வு முழுவதிலும் ஊடுருவிக் கலக்கும். ஆனால் இதற்காக நாம் உலகத்திலிருந்தே துண்டு பட்டுப் போய்விடு கிறோம் என்பதல்ல. சில பொருள்களை உற்பத்தி செய்ய முடிய வில்லையென்பதற்காகப் பிற நாடுகளுடன் பண்டங்களைப் பரிமாற்றம் செய்து கொள்ள விரும்பும் நாடுகள் இருக்கத்தான் செய்யும். நிச்சயமாக அவை இச் சாமான்களுக்காகப் பிற நாடுகளை எதிர் பார்த்துத்தான் இருக்கும். ஆனால் இதற்காக, இந்தச் சாமான்களை அளிக்கும் நாடுகள் அவைகளைச் சுரண்டக் கூடாது.

**எப்போது தனித்து வாழமுடியும் ?**

ஆனால் பிறநாடுகளிடமிருந்து எதையுமே எதிர்பார்க்காத அளவு நீங்கள் உங்களுடைய வாழ்க்கையை எளிமையாக்கிக் கொண்டால், அவர்களிடமிருந்து நீங்கள் உங்களைத் துண்டுபடுத் திக் கொள்ள முடியும். ஆனால், நீங்கள் அமெரிக்காவுக்கும் பொறுப் புள்ளவர்களாய் இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன்.

**அமெரிக்கா நம்மைப் பின்பற்றும்**

பிறரை நாம் சுரண்டாமலும் பிறரால் நாம் சுரண்டப்படாமலும் இருக்கும் போதுதான், நாம் அமெரிக்காவுக்குப் பொறுப்புள்ளவர் களாய் இருக்க முடியும். ஏனென்றால் அப்போதுதான் அமெரிக்கா நம்மைப் பின்பற்றும். நமக்கிடையே சுதந்திரமான பரிமாற்றம் ஏற் படுவதில் எவ்விதக் கஷ்டமும் இருக்காது.[9]

**மிகவும் கடினமானது**

இந்தியாவை இலட்சிய நாடாக்குவது எவ்வளவு கஷ்டமோ அவ்வளவு. ஒரு கிராமத்தை இலட்சிய கிராமமாக்குவதும் கஷ்ட மாகும். இதை நான் அறிவேன்......ஆனால் ஒருவர் ஒரு இலட்சிய கிராமத்தை மட்டும் உருவாக்கி விட்டாரென்றால், அவர் இந்த நாடு முழுவதற்கும் மட்டுமல்லாது, உலகம் முழுவதற்குமே முன் மாதிரி யான அமைப்பை உருவாக்கியவராவார். ஒரு இலட்சியத்தை நாடிச் செல்பவர், இதைக் காட்டிலும் பெரிய ஒரு இலட்சியத்தை நாடிச் செல்ல முடியாது.[10]

**யாருடைய நலன் பிரதானம் ?**

'சுதந்திர இந்தியாவில் யாருடைய நலன் தலையானதாய் இருக்கும்? நம்முடைய அண்டை நாடு ஒன்று பற்றாக்குறையில் இருக்கும் போது, இந்தியா மட்டும், தன்னுடைய நலன்களே பிர தானமானவை யென்று கூறிக்கொண்டு, தனித்து ஒதுங்குங் கொள்கையைக் கடைப்பிடிக்குமா?'

உண்மையிலேயே உரிமை பெற்ற சுதந்திரமான இந்தியா, துயரத்தில் சிக்கும் தன்னுடைய அண்டை நாடுகளின் உதவிக்கு ஓடோடி உதவும். தன்னுடைய வகுப்புக்கு அப்பால் பிற வகுப்பிற்கும் உதவ முடியும் அளவுக்குத் தியாக உணர்வு இல்லாத மனிதன், தானும் சுயநலக்காரன் ஆவதுடன், தன்னுடைய வகுப்பையும் சுயநலம் உள்ள வகுப்பு ஆக்குகிருன். தனிப்பட்டவர் ஊர்ச் சமுதாயத்திற்காகவும், ஊர் மாவட்டத்திற்காகவும், மாவட்டம் மாநிலத்துக்காகவும், மாநிலம் தேசத்துக்காகவும், தேசம் உலகத்திற்காகவும் தியாகம் செய்ய வேண்டும் என்பதே தன்னல மறுப்பின் இயற்கையான வளர்ச்சியாகும். சமுத்திரத்திலிருந்து ஒரு துளி தண்ணீரை எடுத்துவிட்டால், அது உலர்ந்து வீணுகப் போய்விடுகிறது. ஆனல் ஒரு சமுத்திரத்தின் அங்கமாக இருக்கும்போதோ, தனது இதயத்தில் எத்தனையோ பலம் பொருந்திய கப்பல்களைத் தாங்கும் பெருமை படைத்ததாக விளங்குகிறது.[11]

### இராம ராஜ்யம் என்ன ?

இராம ராஜ்யம் என்பது இந்துக்களின் ஆட்சியாக இருக்கும் என்ற தவருன கருத்து யாருக்கும் வேண்டாம். நான் 'இராமன்' என்பது, குதா அல்லது கடவுள் என்பதற்கு மற்ருெரு பெயராகும். குதாப் ராஜ்யத்தை நான் விரும்புகிறேன். பூமியில் பரலோக சாம்ராஜ்யம் ஏற்படுவதென்பதும் இதுவும் ஒன்றே. இப்படிப்பட்ட ராஜ்யம் அமைவது, இந்திய மக்கள் எல்லோருடைய நலன்களுக்கு மட்டும் அல்லாது உலகம் முழுவதற்குமே உதவக் கூடியதாய் இருக்கும்.[12]

### உலகிற்காக இந்தியாவின் தியாகம்

உலக அபிவிருத்திக்காக இந்தியா மனமுவந்து பரிசுத்தமான தியாகம் செய்ய வேண்டும். அதற்காகவே இந்தியா பலம் பொருந்திய சுதந்திர நாடாக இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். பரிசுத்தமான ஒரு மனிதன், தனது குடும்பத்தின் நலனுக்காகத் தன்னைத் தியாகம் செய்துகொள்கிருன். குடும்பம் கிராமத்துக்காகவும், கிராமம் மாவட்டத்துக்காகவும் மாவட்டம் மாநிலத்துக்காகவும், மாநிலம் தேசத்துக்காகவும், தேசம் உலகத்துக்காகவும் தியாகம் செய்கிறது.[13]

சுயராஜ்யத்தின் மூலம் உலகம் முழுவதற்குமே நாம் தொண்டாற்ற முடியும்.[14]

**எல்லையே இல்லை**

அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்டுள்ள எல்லைகளுக்கு அப்பாலுள்ள அண்டை நாடுகளுக்கு நாம் சேவை செய்ய வேண்டும். இவ்வாறு நம்முடைய சேவையை விரிவுபடுத்திக் கொண்டு செல்வதற்கு எல்லையே கிடையாது. ஆண்டவன் ஒரு போதும் இந்த எல்லைகளை வரையறுத்ததில்லை.[15]

## அத்தியாயம் 30

# இராம ராஜ்யம்

இராம ராஜ்யம் என்பது எல்லாவற்றிலும் தன்னல மறுப்பாகும். மக்கள் தங்களுக்குத் தாங்களே விதித்துக்கொள்ளும் கட்டுப்பாடு.*

நிர்மாணத் திட்டத்தை முழுதாக நிறைவேற்றுவதானது, சுய ராஜ்யத்திற்கு மேலான ஒன்றை அளிக்கும். அதுதான் இராம ராஜ்யம், அல்லது தெய்விக ஆட்சி. இந்த இராம ராஜ்யத்தின்மீது எனக்குத் தணியா வேட்கை இருக்கிறது. என்னுடைய ஆண்டவன், மேலே சுவர்க்கத்தில் இல்லை. இந்தப் பூமியிலேயே அவரைக் கண்டாகவேண்டும். அவர் இங்கே உங்களுக்குள்ளும் எனக்குள்ளும் தான் இருக்கிறார். அவர் எங்கும் நிறைந்தவர், சர்வ சக்தி படைத்தவர். அப்பாலுள்ள உலகைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. இங்கே நம்முடைய கடமையை நாம் செய்ய முடியுமானால், மறு உலகம் தானாகவே தன்னைக் கவனித்துக்கொள்ளும். அரசியல் சுதந்திரம் உள்பட எல்லாவற்றிலும் இது உண்மை தான்.

இராணுவ மனப் பாங்கு வேறு, ஜனநாயகம் வேறு. இரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை என்று நான் கருதுகிறேன். உலகத்தின் முன்னால் தான் வீசக்கூடிய வாளின் பலத்தை ஒரு ஜனநாயகவாதி நம்பியிருக்கமாட்டான். உலகின்முன் எவ்வளவு பெரிய சக்தியை அளிக்க முடியும் என்பதையே நம்பியிருப்பான். இந்தியாவின் முயற்சியால் உலகில் சுதந்திர நாடுகளின் கூட்டமைப்பு ஒன்று ஏற்படுத்தப்பட்டால், ஆண்டவனுடைய சாம்ராஜ்யம் அதாவது இராம ராஜ்யம் இயல்பாகவே உருவாகும்.

### பூலோகத்தில் ஆண்டவன் ஆட்சி

சுதந்திரம் எவ்வாறு இருக்க வேண்டுமென்று விளக்கம் கூறுமாறு நண்பர்கள் திருப்பித்திருப்பி என்னைக் கேட்கிறார்கள்.

---

* 'யங் இந்தியா', 'ஹரிஜன்' பத்திரிகைகளில் காந்திஜி எழுதியுள்ள கட்டுரைகள், தலையங்கங்களிலிருந்தும், மற்றும் பல்வேறு இடங்களில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கங்களிலிருந்தும் இராம ராஜ்யத்தைப்பற்றிய அவரது விளக்கங்கள் தொகுக்கப்பட்டு இந்த அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

கூறியது கூறல் என்ற பிழையை நான் செய்வதாக இருந்தாலும், நான் கனவு காணும் சுதந்திரம் இராம ராஜ்யமே, அதாவது பூலோகத்தில் ஆண்டவன் ஆட்சியே என்பதைக் கூறித்தானகவேண்டும். சுவர்க்கம் எப்படியிருக்கும் என்பது எனக்குத் தெரியாது. எட்டாத தொலேவில் இருக்கும் ஒன்றை அறிந்துகொள்ள எனக்கு அக்கறை இல்லே. நிகழ்காலம் நல்லதாக இருந்தால், எதிர்காலம் முற்றிலும் அதிலிருந்து மாறுபட்டதாக இருக்க முடியாது.

திட்டவட்டமாகக் கூறுவதாய் இருந்தால் அரசியல், பொருளாதாரம், தார்மிகம் ஆகிய துறைகளில் நாம் விடுதலே பெற வேண்டும்.

அரசியல் விடுதலே என்பது, பிரிட்டிஷ் இராணுவத்தின் ஆதிக்கம் எந்த உருவில் இருந்தாலும் அதை அகற்றுவது என்பது தான்.

பொருளாதார விடுதலே என்பது பிரிட்டிஷ் முதலாளிகள், பிரிட்டிஷ் முதல் ஆகியவற்றிலிருந்து மட்டுமல்லாது அவர்களுடைய இந்திய "சகாக்களி"டமிருந்தும் விடுதலே பெறுவதாகும். இதையே வேறு சொற்களில் கூறுவதானல், மிகத் தாழ்ந்த நிலேயில் இருப்பவர்கள் கூட மிக உயர்ந்த நிலேயில் இருப்பவர்களுக்குத் தாங்கள் சமமாய் இருப்பதாக உணரவேண்டும். முதலாளிகள் தங்களுடைய மூலதனத்தையும் திறமையையும் மிகத் தாழ்ந்த நிலேயில், கடைப்பட்ட நிலேயில் இருப்பவர்களுடன் பகிர்ந்து கொள்வதன் மூலம்தான் இது சாத்தியமாகும்.

தார்மிக சுதந்திரம் என்பது ஆயுதந்தாங்கிய படைகளிலிருந்து விடுதலே பெறுவதாகும். எனது மனக்கண்ணில் தோன்றும் இராமராஜ்யத்தில் பிரிட்டிஷ் படைகளுக்குப் பதிலாக தேசியப் படைகள் இடம்பெற முடியாது. தனது தேசிய ராணுவத்தினல் நிர்வகிக்கப்படுவதானல் கூட ஒரு நாடு தார்மிக சுதந்திரம் படைத்ததாக இருக்கமுடியாது. அதில் மிகத் தாழ்ந்த நிலேயில் உள்ள ஒரு குடிமகன் தனது முழு தார்மிக உயர்வையும் எட்டிப்பிடிக்க முடியாது. *

**சதுர வடிவம்**

சுயராஜ்யத்தைப்பற்றி நான் கொண்டுள்ள கருத்தைத் தவருகப் புரிந்துகொள்ளவேண்டாம். நான் விரும்பும் சுயராஜ்யம்

* 1946 ஏப்ரல் 29 'ஹரிஜனி'ல் காந்திஜி எழுதிய தலேயங்கம்.

வேற்று நாட்டார் ஆதிக்கத்திலிருந்து முழு விடுதலை அடைவதாகும்; அது முழுப் பொருளாதார சுதந்திரம். ஆகவே ஒரு புறம் அரசியல் விடுதலையும் மற்றொரு புறம் பொருளாதார விடுதலையும் இருக்கும். இந்த இரண்டைத் தவிர மற்றும் இரு புறங்களும் இருக்கும். அந்த இரண்டில் ஒன்று தார்மிக, சமுதாய சம்பந்தப்பட்டது. அதற்கு நேர் எதிர்ப் புறத்தில் இருப்பது தர்மம், அதாவது மிக உயர்ந்த பொருளில், சமயம். இதில் இந்து மதம், இஸ்லாம், கிறிஸ்துவ மதம் முதலிய எல்லா மதங்களும் அடங்கும். ஆயினும் இது இந்த மதங்களுக்கெல்லாம் மேம்பட்டது. சத்தியம் என்னும் பெயரில் இதை நீங்கள் அடையாளங் கண்டு கொள்ளலாம். இது சந்தர்ப்பத்திற்கு உதவக்கூடிய தற்காலிக உபசாந்தியான சத்தியம் அல்ல. ஜீவனுள்ள சத்தியம்—ஒவ்வொன்றிலும் நிறைந்து நிற்பதும் எல்லா அழிவையும் மாறுதலையும் கடந்ததுமான சத்தியம். தார்மிக, சமுதாய முன்னேற்றம் என்பதை நமக்குப் பழக்கமான அஹிம்சை என்ற சொல்லின்மூலம் நாம் புரிந்துகொள்ளலாம். இந்த சுயராஜ்யம் சதுர வடிவமானது என வைத்துக்கொள்வோம். இதில் ஒரு கோணங்கூடச் சரியாக இல்லாவிட்டால், இது சதுரமாக இராது. காங்கிரசின் சொற்களில் கூறுவதானால், சத்தியமும் அஹிம்சையும் இல்லாமல் நாம் அரசியல், பொருளாதார விடுதலை பெறமுடியாது. இன்னும் திட்டமாகக் கூறுவதானால், ஆண்டவன் மீது உயிருள்ள நம்பிக்கை கொள்ளாமல் நாம் அரசியல் பொருளாதார விடுதலை பெறமுடியாது; தார்மிக சமுதாய உயர்வு அடையமுடியாது.

### இராம ராஜ்யம் மக்கள் ஆட்சியே

அரசியல் விடுதலை என்பதன்மூலம் பிரிட்டிஷ் காமன்ஸ் சபையையோ, ருசியாவில் உள்ள சோவியத் ஆட்சியையோ, இத்தாலியின் பாசிச ஆட்சியையோ, ஜெர்மனியின் நாசி ஆட்சியையோ நாம் அப்படியே 'காபி' அடிக்க வேண்டுமென்று நான் கூறவில்லை. அவர்கள் தங்களுக்கு ஏற்ற முறைகளை வகுத்துக் கொண்டிருக்கிறார்கள். நமது இயல்புக்கு ஏற்ற முறையை நாம் வகுத்துக்கொள்ளவேண்டும். அது என்ன என்பதை நான் முழுதாகக் கூறிவிட முடியாது. இதை நான் இராம ராஜ்யம், அதாவது முற்றிலும் தார்மிக அதிகாரத்தை அடிப்படையாகக் கொண்ட மக்கள் ஆட்சி என்று வர்ணித்திருக்கிறேன். நாகபுரியிலும் பம்பாயிலும் வகுக்கப்பட்ட காங்கிரஸ் விதி அமைப்புகள்—இதில் நானே முக்கிய பொறுப்பு வகித்தேன்—இத்தகைய சுயராஜ்யத்தை அடைவதற்கான ஒரு முயற்சியே.

### துணியும் உணவும்

அப்புறம் பொருளாதார விடுதலையை எடுத்துக்கொள்ளுங்கள். நவீன முறையில், அல்லது மேற்கு நாட்டு முறையில் தொழில் மய மாக்குவதால் பொருளாதார விடுதலை கிடைத்து விடாது. இந்தி யாவின் பொருளாதார விடுதலை என்பது ஆண், பெண் உள்பட்ட ஒவ்வொரு தனிப்பட்ட மனிதரும் தங்களுடைய மனப்பூர்வமான முயற்சியால் அடையும் பொருளாதார வளர்ச்சி என்றே எனக்குப் புலப்படுகிறது. இந்த முறையின் கீழ் ஆண்கள், பெண்கள் ஆகிய எல்லோருக்கும் போதுமான துணி கிடைக்கும். துணி என்ருல் இடுப்பில் கட்டிக்கொள்ளும் துண்டு மட்டுமல்ல; அவசியமான ஆடைகள் என்று கூறுகிருேமே அவைகளெல்லாம் கிடைக்கும். இந்த முறையின் கீழ், தற்போது கோடிக்கணக்கான பேருக்குக் கிடைக்காதிருக்கும் பால், வெண்ணெய் உள்படப் போதுமான உணவு கிடைக்கும்.

### சோசலிசம்

இங்குதான் இது என்னை சோசலிசத்தில் கொண்டுவந்து நிறுத்துகிறது. நம்முடைய மூதாதையர்கள் பரம்பரை பரம்பரை யாக உண்மையான சோசலிசத்தை வழங்கிச் சென்றிருக்கிருர்கள். "நிலம் எல்லாம் கோபாலனுக்குத்தான் சொந்தம். ஆகவே எங்கே வரப்புப் போட்டு எங்கே எல்லைக் கல் ஊன்றுவது? இந்த எல் லையையெல்லாம் கொண்டு வந்தவன் மனிதனே. ஆகையால் அவை களை அவனே அழிக்கவும் முடியும்" என்று கூறியவர்கள் நமது முன்னேர்கள். 'கோபால்' என்ற சொல்லுக்கு 'இடையன்' என் பது பொருள். அதற்கு ஆண்டவன் என்றும் மற்ருெரு பொருள் உண்டு. இக்கால மொழியில் கூறுவதானல் அது 'அரசாங்கம்', அதாவது 'மக்கள்' என்று பொருள்படும். இன்று நிலம் மக்களுக்குச் சொந்தமாக இல்லை என்பது மிகமிக உண்மைதான். ஆனல் குற்றம் மேற்கண்ட போதனையில் இல்லை; அதன்படி வாழாத நம்மிடம்தான் இருக்கிறது.

### இம்சையே இல்லாமல்

சோசலிசத்தை அடைய விரும்பும் ஒரு நாடு—இதில் ருசியா கூட விதிவிலக்கானதல்ல—எவ்வளவு சிறந்த முயற்சியெல்லாம் செய்யமுடியுமோ அவ்வளவு சிறந்த முயற்சியை நாமும் செய்ய முடியும். அதுவும் இம்சை இல்லாமலே செய்யமுடியும் என்பதில் எனக்கு எவ்வித ஐயமும் இல்லை. இம்சையின்மூலம் சொத்தைப் பறிமுதல் செய்வதற்குப் பதிலாகக் கையாளக்கூடிய மிகச் சிறந்த

மாற்று வழி ஒன்று இருக்கிறது. கை ராட்டையைப் பரப்புவதும் அது எவ்வெவற்றின் சின்னமாக இருக்கிறதோ அவற்றைப் பரப்புவதுமே இம்மாற்று வழி. நிலமும் மற்ற சொத்துக்கள் எல்லாமே, அவற்றிலிருந்து எவன் பாடுபடத் தயாராய் இருக்கிறானோ அவனுக்கு உடைமையாக இருக்கும். தீவினைப் பயனாக, இந்த எளிய உண்மை உழைப்பாளிகளிடமிருந்து மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது.

### ஏன் ஏழையானோம் ?

இந்தியா ஏன் இவ்வளவு வரட்சியான ஏழை நாடாகி விட்டது என்பதை ஆராய்வோம். இங்கு பஞ்சு உற்பத்தியாவதைக் கிழக்கு இந்தியக் கம்பெனி பாழ்படுத்திவிட்டது. உணவிற்கு அடுத்தாற்போன்று மனிதனுக்குள்ள பெரும் தேவை உடைதான். ஆனால் கிழக்கு இந்தியக் கம்பெனியோ தன்னால் இயன்ற மார்க்கங்களையெல்லாம் கையாண்டு, இந்தியா தனது துணித் தேவைக்கு லங்காஷயரைச் சார்ந்திருக்குமாறு செய்துவிட்டது......இவ்வாறு கோடிக்கணக்கான மக்களுக்குப் போதுமான வேலை இல்லாமல் செய்துவிட்டது. அவர்களுக்கு மாற்று வேலையும் அளிக்கவில்லை. இதனால், கையால் பஞ்சு அரைப்பது, பட்டைபோடுவது, நூற்பது, நெய்வது ஆகியவைகளெல்லாம் அழிந்து போயின. இவைகளைத் தொடர்ந்து, இந்திய கிராமங்களிலிருந்த மற்றத் தொழில்களும் அழிந்தன. இவ்வாறு தொடர்ந்து வேலையில்லாத் திண்டாட்டத்தில் உழன்றதால், மக்களுக்கு ஒரு வகையான சோம்பேறித்தனம் ஏற்பட்டுவிட்டது. இந்த நிலை மிகுந்த மனச் சோர்வு அளிப்பதாய் இருக்கிறது. இவ்வாறாக மக்கள் நாளுக்குநாள் அதிகமாக திவாலாவதற்கு வேற்றுநாட்டு ஆட்சி காரணமாய் இருந்திருக்கிறது. அதே சமயம் அதற்கு நாம்தான் அதிகப் பொறுப்பானவர்களாய் இருந்திருக்கிறோம். மத்தியதர வர்க்கத்தினர்தான், நாலு காசுக்காக, நம்பிக்கைத் துரோகம் செய்து இந்தியாவின் பொருளாதார விடுதலையைப் பணயம் வைத்துவிட்டனர். அவர்கள் மட்டும், இப்போது தங்களுடைய தவறை உணர்ந்து, இராட்டையின் செய்தியை கிராமங்களில் பரப்பி, கிராம மக்கள் தங்களுடைய சோம்பேறித்தனத்தைக் கைவிட்டு இராட்டையைச் சுழற்றுமாறு செய்தார்களானால், நாம் மக்களுடைய நிலையைப் பெருமளவு உயர்த்தி விடலாம். ஆனால் சுறுசுறுப்பான உழைப்பிற்குப் பதிலாகச் சோம்பேறித்தனமும் நம்பிக்கையின் இடத்தில் விரக்தியும் ஆட்சிக்கு வந்துவிட்டால், உண்மையிலேயே அது பயங்கரமான நிலைதான்.

## நீதியும் நியாயமும்

காங்கிரஸ் அடைய விரும்பும் சுயராஜ்யம் ஏழைகளின் சுய ராஜ்யம், அதாவது இராம ராஜ்யம். நீதிக்கும் நியாயத்திற்கும் சின்னமாக இராமன் விளங்கினன், சத்தியத்திற்கும் தர்மத்திற்கும் சின்னமாகவும் இருந்தான்....

நீதியும் நியாயமும் என்ருல் என்ன? முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையிலும் நிலச் சொந்தக்காரருக்கும் குத்தகை தாரருக்கும் இடையிலும் நீதியும் நியாயமும் வாய்ந்த உறவை நிலை நிறுத்துவதாகும். இவ்வித உறவில், நிலச்சொந்தக்காரரும் முதலாளியும், குத்தகைதாரரையும் தொழிலாளியையும் சுரண்டுவதை நிறுத்தி விடுவார்கள்; அதற்குப் பதிலாக, அவர்களுடைய நலன்களை அக்கறையுடன் பாதுகாப்பார்கள்.

## சத்தியமும் அஹிம்சையும்

நம்மிடம் அதிகாரம் வந்தவுடன், இந்த மாறுதல்களெல்லாம் தாமாகவே வந்துவிடும் என்பதல்ல. சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின்மூலம் நாம் சுயராஜ்யத்தை அடைந்தால், அவைகளின் இயற்கையான விளைவாக இந்த மாறுதல்கள் வரும் என்றுதான் கூற வருகிறேன். ஆனல் அதே சமயம், நாம் சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிக்கிருேமா என்பதுதான் கேள்வி. ஒரு தற்காலிக உபசாந்தியாகவோ அல்லது ஒரு அரசியல் கொள்கை போன்ருே சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்தால் அதன் விளைவாக இராம ராஜ்யம் ஏற்பட்டுவிடமுடியாது. சத்தியத்தையும் அஹிம்சையையும் தர்மமாகக் கடைப்பிடிக்கும்போதுதான் இராம ராஜ்யம் ஏற்படமுடியும். எப்போதாவது ஒரு மகன் தனது தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமைகளை, ஒரு கொள்கையாகக் கருதிச் செய்யமுடியுமா? கொள்கை என்பது அடிப்படையில் ஒரு தற்காலிகமான அம்சமே; சூழ்நிலைகள் மாறுவதற்கேற்ப ஒருவன் தனது கொள்கைகளை மாற்றிக்கொள்ள முடியும். தியாகம் செய்யவோ கஷ்டப்படவோ அவசியமில்லாத வரை, சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிப்பது எளிதானதுதான். ஆனல் எவனெருவன் தனது உயிரைக்கூடப் பணயம் வைத்து எல்லாவிதச் சூழ்நிலைகளிலும் அவற்றைக் கடைப்பிடிக்கிருனே அவனே அவைகளை ஒரு தர்மமாகக் கடைப்பிடிப்பவனுவான். சத்தியத்தையும் அஹிம்சையையும் ஒரு கொள்கையாக அல்லாமல் தர்மமாகக் காங்கிரஸ்காரர்கள் கடைப்பிடிக்க வேண்டிய காலம் வந்து விட்டது.

இந்து ஆண்டில் தீபாவளி ஒரு முக்கிய நாளாகும். ஒளி விளக்குகள் வைத்துத் தீபாவளி கொண்டாடப்படுகிறதே அது ஏன் என்பதை மக்கள் புரிந்துகொள்ள வேண்டும். இராமருக்கும் இராவணனுக்குமிடையே நடைபெற்ற பயங்கரப்போரில் நல்ல சக்திகளின் பிரதிநிதியாகிய இராமர், தீய சக்திகளின் பிரதிநிதியாகிய இராவணனை வெற்றிகொண்டார். இந்த வெற்றியானது இராம ராஜ்யத்தை ஏற்படுத்தியது.

இன்றோ, அந்தோ! இந்தியாவில் இராம ராஜ்யம் இல்லை. ஆகையால், அவர்கள் எவ்வாறு தீபாவளியைக் கொண்டாட முடியும்? இராமரைத் தனது உள்ளத்தில் பதிய வைத்திருப்பவன் தான் இந்த வெற்றியைக் கொண்டாடமுடியும். ஏனென்றால் மக்களுடைய உள்ளத்தில் ஒளி ஏற்றி வைக்கக்கூடியவன் ஆண்டவன் ஒருவனே. அத்தகைய ஒளிதான் உண்மையிலேயே பயனுள்ளதுமாகும். மனிதன் வைக்கும் ஒளி விளக்குகளைப் பார்க்கக் கூட்டங் கூட்டமாக மக்கள் செல்லுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு இன்று தேவையான ஒளி விளக்கெல்லாம் அவர்கள் உள்ளத்தில் ஏற்றி வைக்க வேண்டிய அன்பு என்னும் ஒளி விளக்குதான். அப்போது தான் அவர்கள் பாராட்டுதல்களைப் பெற உரிமையுள்ளவர்களாவார்கள். இன்று ஆயிரக்கணக்கான பேர் சொல்லொணாத இன்னல்களுக்குள்ளாகி யிருக்கின்றனர். இங்கு கூட்டத்தில் அமர்ந்திருப்பவர்களில் யாராவது தனது நெஞ்சில் கை வைத்து, ‘இவ்வாறு இன்னல் அடைபவர்கள் யாராயிருந்தாலும், இந்து மதத்தையோ முஸ்லிம் மதத்தையோ சீக்கிய மதத்தையோ சேர்ந்தவராய் இருந்தாலும் என்னுடைய சகோதர் அல்லது சகோதரியைப் போன்றவரே’ என்று கூறமுடியுமா? இதுதான் உரைகல். நல்ல சக்திகளுக்கும் தீய சக்திகளுக்கும் இடையே நிரந்தரமாக நடைபெறும் போராட்டமாகிற உண்மையின் பிரதிநிதிகளே இராமரும் இராவணனும். உண்மையான ஒளி உள்ளத்திலிருந்துதான் வருகிறது.

தம்மைத் தலைமை அமைச்சரென அழைப்பதைவிட நாட்டின் முதல் ஊழியன் என அழைக்கலாமென ஜவாஹர்லால்ஜி கூறியிருக்கிறார். எல்லா அதிகாரிகளுமே உண்மையில் மக்களின் சேவகர்களா? அப்படியாயின், ஆடம்பரங்களுக்கு இடமே இல்லை. எல்லோரும் மக்களையும் அவர்களுடைய தேவைகளையும் பற்றியே சிந்திப்பார்கள். அது இராம ராஜ்யமாகிவிடும், பூலோகத்தில் ஆண்டவனுடைய சாம்ராஜ்யமாகிவிடும். அது உண்மையான முழு

விடுதலையாகிவிடும். இன்றுள்ள விடுதலையின் நாற்றமோ என்னை மூச்சுத் திணறவைக்கிறது. அது பொய்யானதும் நிலையற்றது மாகும்.

**புராதன இலட்சியம்**

கேள்வி: ஒரு சோசலிசப் புரட்சி நடந்தால், பொருளாதாரப் பிரச்னை மேலே வந்து நிற்கும். ஆகையால் வகுப்புச் சச்சரவு களெல்லாம் பின்னணிக்குப் போய் விடும் என்று பெரும் பாலான சோசலிஸ்டுகள் கூறுகிறார்கள். இதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? இப்படிப்பட்ட புரட்சி நடந்தால், அது நீங்கள் இராம ராஜ்யம் என்று அழைக்கும் ஆண்டவ னுடைய சாம்ராஜ்யத்தை நிறுவ உதவுமா?

பதில்: தற்போதுள்ள இந்து-முஸ்லிம் சண்டையை, நீங்கள் கற்பனை செய்யும் அந்தப் பொருளாதாரச் சண்டையுடன் ஒப் பிட முடியாது. ஒப்பிட்டால் முன்னது சிறியதாகிவிடும். இந்து-முஸ்லிம் சச்சரவு மூள்வதானால் கூட, நமது தொல்லை களெல்லாம் முடிந்துவிடாது. தற்போது நடைபெறக்கூடியது இதுதான். நாம் அடிமையாக இருப்பதுபோய் விடுதலை வந்தவுடன், சமுதாயத்தின் பலவீனங்களெல்லாம் மேல் தளத்திற்கு வரும். ஆனால் அதைப்பற்றி அனாவசியமாகப் பரபரப்படையக் காரணம் இருப்பதாக எனக்குத் தெரிய வில்லை. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் நாம் சமநிலையுடன் நடந்து கொண்டோமானால், அப்புறம் ஒவ்வொரு சிக்கலையும் தீர்த்து வைக்க முடியும். பொருளாதாரப் பிரச்னையைப் பொறுத்தவரை அதை நாம் எப்படியும் தீர்த்து வைத்தாக வேண்டும். இன்று பெரிய பொருளாதார ஏற்றத்தாழ்வு இருக்கிறது. சோசலிசத்தின் அடிப்படையே பொருளாதார சமத்துவந்தான். தற்போது அநீதியான ஏற்றத்தாழ்வுகளெல் லாம் இருக்கின்றன. மக்களில் பெரும்பாலோருக்கு உண்ணப் போதுமான உணவு கிடைக்காமலிருக்க, ஒரு சிலர் செல்வத் தில் புரளுகிறார்கள். இத்தகைய தற்போதைய நிலையில் இராம ராஜ்யம் ஏற்படவே முடியாது. நான் தென்னாப்பிரிக் காவிலிருந்தபோதே சோசலிசக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டேன். ஒருநிலையான சீர்திருத்தத்தைச் செய்வதற்கு இம்சை ஒரு சாதனமாகாது என்று இம்சையை எதிர்க்

கிறேன். சோசலிசவாதிகளையும் மற்றவர்களையும் நான் எதிர்ப்பதற்கும் இதுவே காரணம்.

கேள்வி: ஒரு மன்னரோ, ஜமீந்தாரோ, முதலாளியோ ஏழைகளின் தர்மகர்த்தாவாக விளங்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அப்படிப்பட்ட ஒரு தர்மகர்த்தாவாவது இன்று இருக்கிறார் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? அல்லது அவர்கள் மாறிவிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா?

பதில்: நான் சொல்லும் முழுப் பொருளில் அல்லாவிட்டாலும் இத்தகைய ஒரு சிலர்—வெகு சொற்பமான பேர் - இருக்கத்தான் செய்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். அவர்கள் நிச்சயமாக அந்த (தர்மகர்த்தா ஆகும்) திசையை நோக்கிச் சென்று கொண்டுதானிருக்கிறார்கள். எனினும், தற்போதுள்ள மன்னர்களும் மற்றவர்களும் ஏழைகளின் தர்மகர்த்தாக்களாவார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா என்று கேட்கலாம். அவர்கள் தாங்களாகவே தர்மகர்த்தாக்களாகாவிட்டால், அவர்கள் இச்சீர்திருத்தத்தை ஏற்குமாறு சூழ்நிலைகள் அவர்களைக் கட்டாயப்படுத்தும். முற்றிலும் அழிந்து போகாமல் தவிர்க்க வேண்டுமானால், அவர்கள் இவ்வாறுதான் ஆக வேண்டும். பஞ்சாயத்து ராஜ்யம் அமைக்கப்பட்ட பின்னர், இம்சையால் எதைச் செய்ய முடியாதோ அதைப் பொது மக்களின் கருத்து செய்துவிடும். பொது மக்கள் தங்களுடைய பலத்தை உணராதவரைதான் ஜமீன்தார்களுக்கும் முதலாளிகளுக்கும் மன்னர்களுக்கும் தற்போதுள்ள அதிகாரங்களெல்லாம் இருந்து கொண்டிருக்கும். ஜமீன்தாரி அல்லது முதலாளித்துவம் என்ற தீமையுடன் மக்கள் ஒத்துழைக்க மறுத்துவிட்டால், அதற்கு இரையில்லாது அது மடிந்துவிடும். பஞ்சாயத்து ராஜ்யத்தில் பஞ்சாயத்திற்குத்தான் மக்கள் பணிவார்கள். பஞ்சாயத்தோ தான் இயற்றும் சட்டத்தின் மூலந்தான் செயலாற்றும்.''

## முஸ்லிம்களின் கவனத்திற்கு

நான் இராம ராஜ்யம் என்ற சொல்லைப் பயன்படுத்துவதை என்னுடைய முஸ்லிம் நண்பர்கள் தவறுதலாகப் புரிந்து கொள்ள வேண்டாம் என எச்சரிக்கிறேன். இராம ராஜ்யம் என்பதன் மூலம், இந்து ராஜ்யத்தை நான் குறிப்பிடவில்லை. இராம

ராஜ்யம் என்பதன் மூலம் தெய்வ ராஜ்யத்தை, ஆண்டவனின் ராஜ்யத்தையே நான் குறிப்பிடுகிறேன். என்னைப் பொறுத்தவரை இராமரும் இரஹீமும் இரு வேறு தனித் தனிக் கடவுள்களல்ல; ஒரே கடவுள்தான். சத்தியம், தர்மம் ஆகியவற்றின் உருவமான ஒரே கடவுள்தான் எனக்கு உண்டே தவிர வேறு கடவுள் இல்லை. நான் கற்பனை செய்யும் இராமன் இந்த உலகத்தில் வாழ்ந்தானோ இல்லையோ, இராம ராஜ்யம் என்ற இந்தப் புராதன இலட்சியம் உண்மையான ஜனநாயகத்தைக் குறிக்கோளாகக் கொண்டது தான். இதில் தாழ்ந்த குடிமகன் கூட சிக்கல் இல்லாமலும் பெரும் பணச் செலவு இல்லாமலும் விரைவில் நீதிபெற முடியும். இராம ராஜ்யத்தின் கீழ் நாய்க்கும் நீதி கிடைத்திருப்பதாகப் புலவர் வர்ணித்துள்ளார்.

## இராம ராஜ்யத்தின் சாராம்சம்

இராம ராஜ்யத்தை சமய ரீதியாக விவரிப்பதாயின், அதைக் கடவுளின் சாம்ராஜ்யம் என்று கூறலாம். அரசியல் ரீதியாக விவரிப்பதாயின், அதுதான் அப் பழுக்கற்ற, பரிபூரணமான ஜனநாயகமாகும். அத் தகைய ஜனநாயகத்தில், உடைமை, உடைமையின்மை, நிறம், இனம், மதம், ஆண், பெண் என்ற வேற்றுமை அடியோடு மறைந்துவிடும். அதில் நிலமும் அரசாங்க மும் மக்களுக்குச் சொந்தமாக இருக்கும்; உடனடியாக வும், அதிகச் செலவின்றி மலிவாகவும், குற்றம் குறையற்ற நீதி கிடைக்கும். எனவே, அந்த ஜன நாயகத்தில் அவரவர் கடவுளைத் தொழ சுதந்திரம் இருப்பதுடன், பேச்சு சுதந்திரமும் பத்திரிகை சுதந்திர மும் இருக்கும். இவையெல்லாம் இருப்பதற்கு மக்கள் தங்களுக்குத் தாங்களே விதித்துக்கொண்டுள்ள தார் மிகக் கட்டுப்பாடு என்ற சட்டத்தின் ஆதிக்கமே காரண மாக இருக்கும். அத்தகைய ஒரு நாடு சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்; சுபிட்சமான, ஆனந்தமான, சுயதேவைப் பூர்த்தியுள்ள கிராமங்களும், கிராம சமுதாயங்களும் அடங்கியதாக இருக்கவேண்டும்.

# ஆதார நூல்கள்

[இந்த நூலில் வெளியாகியுள்ள பகுதிகள் எவற்றிலிருந்து தொகுக்கப்பட்டவை என்ற விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

ஹ – ஹரிஜன். ய. இ. – யங் இந்தியா. ப – பக்கம். நடேசன் – சென்னை கம்பெனியார் வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பேச்சுக்களும் எழுத்துக்களும்' என்ற நூலின் நான்காம் பதிப்பு.]


**அத்தியாயம் 1**

1. ய. இ. 19-3-'31 ப. 38
2. ய. இ. 15-10-'31 ப. 305
3. ய. இ. 29-1-'25 ப, 40-41
4. ஹ. 2-1'37 ப. 374
5. ய. இ. 1-12-'27 ப. 402-03
6. ய. இ. 6, 8-'25 ப. 276
7. ய. இ. 26-6-'24 ப. 210
8. ய. இ. 28-7-'21 ப. 238
9. ய. இ. 1-5-'30 ப. 149
10. ய. இ. 16-4-'31 ப. 78
11. ய. இ. 23-1-'30 ப. 26
12. ய. இ. 5-3-'31 ப. 1
13. ய. இ. 5-3-'31 ப. 1
14. ய. இ. 26-3-'31 ப. 46-47
15. ய. இ. 26,3-'31 ப. 51
16. நிர்மாணத் திட்டம், 1961, ப. 7
17. ய. இ. 18-6-'31 ப. 147
18. ஹ. 2-1-'37 ப. 374
19. ஹ. 27-5-'39 ப. 143
20. ஹ. 25-3-'39 ப. 64
21. ஹ. 25-3-'39 ப. 65

**அத்தியாயம் 2**

1. மகாத்மா காந்தி – இறுதிக் கட்டம், 1956, தொகுப்பு I ப. 190-91
2. மகாத்மா காந்தி – இறுதிக் கட்டம், 1956, தொகுப்பு I ப. 539-40
3. ஹ. 18-1-'48 ப. 526

**அத்தியாயம் 3**

1. ய. இ. 12-11-'31 ப. 355
2. ய. இ. 22-10-'31 ப. 318
3. ய. இ. 7-10-'26 ப. 348
4. ய. இ. 25-7-'29 ப. 244
5. ய.இ. 7-10-'26 ப. 348
6. ய.இ. 17-3-'27 ப. 85
7. ஹ. 29-8-'36 ப. 226
8. ஹ. 1-9-'46 ப. 285
9. ய. இ. 30-4-'31 ப. 88
10. நடேசன் ப. 353-54
11. ஹ. 29-9-'40 ப. 299
12. ஹ. 28-1-'39 ப. 438
13. ஹ. 20-12-'28 ப. 422
14. ய. இ. 7-10-'26 ப. 348
15. ய. இ. 20-11-'24 ப. 386
16. ய. இ. 5-11-'25 ப. 377
17. ய. இ. 15-4-'26 ப. 142
18. ய. இ. 3-11-'21 ப. 350
19. ய. இ. 17-6-'26 ப. 218
20. ய. இ. 13-11-'24 ப. 378
21. ஹ. 27-2-'37 ப. 18
22. ஹ. 2-11-'34 ப. 301-02
23. "புது அடிவானத்தை நோக்கி", 1959 ப. 45-46

**அத்தியாயம் 4**

1. ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு, 6-12-'44
2. அமிர்தபஜார் பத்திரிக்கை, 30-6-'44
3. ஹிந்த் சுயராஜ், 1962 ப. 94
4. ஹ. 31-3-'46 ப. 63
5. ய. இ. 17-3-'27 ப. 86
6. சில பொறுக்கு மணிகள், 1949 ப. 17
7. ஹ. 23-6-'46 ப. 198
8. ஹ. 25-8-'46 ப. 282
9. ஹ. 4-4-'36 ப. 63

10. ஹ. 4-4-'36 ப. 63-64
11. நடேசன், ப. 323
12. ய. இ. 30-4-'31 ப. 94
13. ஹ. 1-3-'35 ப. 21
14. ய. இ. 11-9-'24 ப. 300
15. ஹ. 1-3-'35 ப. 21
16. ஹ. 1-3-'35 ப. 21
17. ஹ. 7-3-'36 ப. 30
18. ஹ. 11-4-'36 ப. 68
19. ஹ. 16-5'-36 ப. 112
20. ஹ. 27-2-'37 ப. 18
21. ஹ. 9-10-37 ப. 293
22. ய. இ. 9-11-'29 ப. 364

## அத்தியாயம் 5

1. ய. இ. 26-12-'29 ப. 420
2. ஹ. 29-8-'36 ப. 226
3. ஹ. 20-1-'40 ப. 413
4. " பழைய கடிதங்களின் தொகுப்பு -1958 ப. 506-7. (5-10-'45)
5. ஹ. 26-7-'42 ப. 238
6. ஹ. 9-1-'37 ப. 383
7. பழைய கடிதங்களின் தொகுப்பு -1958 ப. 506-07 (5-10'-45)

## அத்தியாயம் 6

1. ய. இ. 13-11-'24 ப. 378
2. ஹ. 18-1'42 ப. 5
3. ய. இ. 15-11'-28 ப. 381
4. ய. இ. 26-12'-24 ப. 421
5. நடேசன், ப. 350
6. நடேசன், ப. 350
7. ஹ. 23-3-'47 ப. 79
8. ய. இ. 6-10'21 ப. 314
9. ய. இ. 26-3-'31 ப. 49
10. "எரவாடா மந்திரிலிருந்து", 1957 ப. 34
11. ஹ. 29-6-'35 ப. 156
12. ய. இ. 13-10-'21 ப. 326
13. ஹ. 29-6-'35 ப. 156
14. ஹ. 23-2-'47 ப. 36
15. ய. இ. 13-10-'21 ப. 325
16. ஹ. 9-10-'37 ப. 292
17. ஹ. 15-1-'38 ப. 416
18. ய. இ. 17-3-'27 ப. 86
19. நிர்மாணத் திட்டம், 1961 ப. 18.
20. ஹ. 25-8-'40 ப. 260
21. ஹ. 30-12-39 ப. 391
22. ஹ. 4-11-'39 ப. 331
23. நடேசன் ப. 336-42
24. "எரவாடா மந்திரிலிருந்து", 1957, அத்தியாயம் XVI ப. 64-67
25. "புது அடிவானத்தை நோக்கி", 1959 ப. 8
26. ஹ 26-7-42 ப. 238
27. ஹ. 27-7-'35 ப. 188
28. ஹ. 28-7-'46 ப. 236
29. ஹ. 26-7-'42 ப. 238
30. ஹ. 9-3-'47 ப. 58-59
31. ஹ. 26-7-42 ப. 238
32. ஹ. 28-7-'46 ப. 236
33. ஹ. 26-7-'42 ப. 238
34. ஹ. 26-7-'42 ப. 238
35. "புது அடிவானத்தை நோக்கி" ப. 194
36. ஹ. 31-7-'37 ப. 197

## அத்தியாயம் 7

1. ய. இ. 11-4-'29 ப. 114-15
2. "எரவாடா மந்திரிலிருந்து", 1957, அத்தியாயம் IX ப. 35-37
3. ய. இ. 8-1-'25 ப. 15-16
4. ய. இ. 26-3-'31 ப. 49
5. ஹ. 29-6-'35 ப. 156
6. ஹ. 1-6-'35 ப. 125
7. ஹ. 29-6-'35 ப. 156
8. ய. இ. 13-8-'25 ப. 282
9. ஹ. 11-5-'35 ப. 99

## அத்தியாயம் 8

1. ய. இ. 26-11-'31 ப. 368
2. ஹ. 25-8-'40 ப. 260
3. ய. இ. 5-11-'31 ப. 384
4. ஹ, 13-7-'40 ப. 205
5. ஹ. 16-3-'47 ப. 67

### அத்தியாயம் 9

1. ஹ. 3-6-'39 ப. 145
2. "மாடர்ன் ரெவ்யூ", 1935 ப. 412
3. ஹ. 3-12-'38 ப. 358
4. ஹ. 7-1-'39 ப. 417
5. ஹ. 16-12-'39 ப. 376
6. ஹ. 22-2-'42 ப. 49

### அத்தியாயம் 10

1. நடேசன், ப. 336-44
2. "எரவாடா மந்திரிலிருந்து", 1957, அத்தியாயம் XVI, ப. 63

### அத்தியாயம் 11

1. சர்க்காவின் தத்துவம், 1951 ப. 86—88
2. ஹ. 30-11-'35 ப. 333
3. கதர்—ஏன், எப்படி?-1959 ப. 166
4. ஹ. 19-10-'47 ப. 379
5. ஹ. 5-4-'42 ப. 107
6. ஹ. 27-7-'35 ப. 188
7. ஹ. 22-8-'36 ப. 217
8. கதர்-ஏன், எப்படி?-1959 ப. 162
9. ஹ. 20-4-'35 ப. 80
10. ய. இ. 25-4-'29 ப. 135
11. ய. இ. 10-6-'26 ப. 214
12. ஹ. 6-10-'46 ப. 344

### அத்தியாயம் 12

1. ய. இ. 28-5-'31 ப. 123
2. ஹ. 18-7-'46 ப. 236
3. ஹ. 18-1-'48 ப. 517
4. ஹ. 4-1-'48 ப. 499—500

### அத்தியாயம் 13

1. ஹ. 21-12-'47 ப. 480
2. ஹ. 8-5-'37 ப. 104
3. ஹ. 5-6-37 ப. 130
4. ஹ. 5-6'-37 ப. 131
5. ஹ. 28-8-'37 ப. 225
6. ஹ. 2-10-'37 ப. 282
7. ஹ. 31-7-'37 ப. 197
8. ஹ. 11-9-'37 ப. 256
9. ஹ. 18-9-'37 ப. 261
10. ஹ. 18-9-'37 ப. 42
11. ஹ. 9-10-'37 ப. 292
12. ஹ. 9-10-'37 ப. 293
13 ஹ. 11-6-'38 ப. 143
14. ஹ. 2-11-'47 ப. 393
15. ஹ. 18-2-'39 ப. 14—15
16. "நிர்மாணத் திட்டம்", 1961 ப. 18

### அத்தியாயம் 14

1. கதர்-ஏன், எப்படி?-, 1959, ப. 162
2. கதர்-ஏன், எப்படி?-, 1959, ப. 181
3. "எரவாடா மந்திரிலிருந்து" 1957, படம் 35—37
4. ஹ. 25-8-'46 ப. 281—82
5. ஹ. 28-1-'39 ப. 439
6. ஹ. 28-1-'39 ப. 439
7. ஹ. 1-3-'35 ப. 21
8. ஹ. 16-5-'36 ப. 111
9. ஹ. 6-3-'37 ப. 29
10. ஹ. 6-3-'37 ப. 29
11. "பம்பாய் கிராணிகிள்", 28-10-'44
12. ஹ. 8-2-'48 ப. 21

### அத்தியாயம் 15

1 "பம்பாய் கிராணிகிள்", 28-10-'44
2 ஹ. 2-1-'37 ப. 375
3 ஹ. 20-5-39 ப. 133
4 ஹ. 20-4-'40 ப. 97
5 "அமிர்தபஜார் பத்திரிகை",2-8-'34
6 ,, 3-8-'34
7 ,, 2-8-'34
8 ,, 2-8-'34
9 ஹ. 5-12-'36 ப. 338
10 ய. இ. 5-12-'29 ப. 396
11 ய. இ. 28-5-'31 ப. 120
12 ஹ. 4-5-'47 ப 134
13 ஹ. 1-6-'47 ப 172
14 ஹ. 2-1-'37 ப. 375
15 ஹ. 9-3-'47 ப. 58

**அத்தியாயம் 16**

1 ஹ. 15-2-'42 ப. 39
2 ஹ. 9-3-'47 ப. 59
3 ஹ. 9-3-'47 ப. 59

**அத்தியாயம் 17**

1 ஹ. 28-12'-47 ப. 484
2 ஹ. 28-12-'47 ப. 488
3 ஹ. 1-3-'35 ப. 20
4 ஹ. 15-3-'35 ப. 36
5 ஹ. 17-8-'35 ப. 213-15
6 ஹ. 24-8'-35 ப. 218-19, 224
7 ஹ. 26-7'-42 ப. 238

**அத்தியாயம் 18**

1 ஹ. 19-10-'47 ப. 376-77
2 ஹ. 25-1-'42 ப. 12
3 ஹ. 24-2-'46 ப. 19
4 ய. இ. 2-4-'25 ப. 118 &
ஹ. 14-9-'35 ப. 244

**அத்தியாயம் 19**

1 *நிர்மாணத் திட்டம்*, 1951 ப. 11-14
2 ய. இ. 17-9-'25 ப. 321
3 ஹ. 17-11-46 ப. 404
4 ய. இ. 20-10-'21 ப. 329
5 ய. இ. 21-7-'20 ப. 4
6 ய. இ. 3-11-'21 ப. 350
7 ய. இ. 8-12-'21 ப. 405
8 ய. இ. 21-8-'24 ப. 277
9 ய. இ. 18-6-'25 ப. 211
10 ய. இ. 27-8-'25 ப. 299
11 ய. இ. 17-2-'27 ப. 52
12 ஹ. 27-4-'34 ப. 85
13 ய. இ. 27-5-'26 ப. 190
14 ய. இ. 27-5-'26 ப. 190
15 ய. இ. 30-9-'26 ப. 341
16 ஹ. 13-4-'40 ப. 85
17 ய. இ. 8-12-'21 ப. 406
18 ய. இ. 29-6-'21 ப. 206
19 ய. இ. 21-5-'25 ப. 177
20 *சர்க்கா மூலம் சுயராஜ்யம்* 1945 ப .8
21 *சர்க்கா மூலம் சுய ராஜ்யம்* 1945 ப. 5
22 *கதர்—ஏன், எப்படி ?* 1959 ப. 153-57
23 *சர்க்கா தத்துவம்* 1959 ப. 94
24 *கதர்—ஏன், எப்படி ?* 1959 ப. 149
25 *கதர்—ஏன், எப்படி ?* 1959 ப. 150
26 *கதர்—ஏன், எப்படி ?* 1959 ப. 151
27 ,, ப. 154
28 ,, ப. 181
29 ,, ப. 184
30 ,, ப. 185
31 ,, ப. 189
32 ஹ. 22-9-'46 ப. 320
33 ஹ. 22-9-46 ப. 322
34 ஹ. 22-9-46 ப. 322

**அத்தியாயம் 20**

1 *நூற்றுக்கு நூறு சுதேசி* 1958 ப. 4
2 ,, ப. 5
3 ஹ. 10-8-34 ப. 204
4 ஹ. 28-9-34 ப. 259
5 ஹ. 30-11-34 ப. 332
6 ஹ. 16-11-34 ப. 316
7 ஹ. 16-11-34 ப. 316
8 ஹ. 16-11-34 ப. 316
9 ,,
10 ,,
11 ,,
12 ஹ. 16-11-34 ப. 317
13 ஹ. 7-12-34 ப. 340
14 ஹ. 7-12-34 ப. 340-341
15 ஹ. 7-12-34 ப. 341
16 *நிர்மாணத் திட்டம்* 1961 ப. 16-17
17 ஹ. 4-1-35 ப. 372
18 *கதர்—ஏன், எப்படி ?* 1959 ப. 150
19 ,, ப. 151
20 ,, ப. 159
21 ,, ப. 162
22 ,, ப. 163
23 ,, ப. 177
24 ,, ப. 181
25 ஹ. 25-1-'35 ப. 400
26 ய. இ. 6-10-'21 ப. 138

27 ய. இ. 22-10-'25 ப. 361
28 ய. இ. 3-11-'27 ப. 367
29 ஹ. 26-10-'34 ப. 292
30 ஹ. 10-3-'46 ப 34
31 ஹ. 2-9-'39 ப. 253
32 நூற்றுக்கு நூறு சுதேசி, 1958. ப 5
33 "ஆரோக்கியத் திறவுகோல்", 1960 ப. 33-34
34 ஹ. 1-2-'35 ப. 407
35 ஹ. 7-9-'34 ப. 236-37
36 கதர்-ஏன், எப்படி?, 1959 ப. 185
37 ஹ. 14-9-'34 ப. 234
38 ஹ. 14-9-'34 ப. 241
39 கிராம உத்தியோக் பத்ரிகா, ஜுலை 1946

## அத்தியாயம் 21

1 ஹ. 3-7-'37 ப. 168
2 ஹ. 16-9-'39 ப 276
3 ஹ. 15-9-'40 ப 282

## அத்தியாயம் 22

1 ஹ. 2-11-'34 ப. 302
2 நடேசன், ப. 386
3 சர்க்கா மூலம் சுயராஜ்யம், 1945 ப. 5
4 ஹ. 2-2-'34 ப. 2, 6
5 கதர்-ஏன், எப்படி?-1959 ப. 166
6 ஹ. 7-7-'46 ப. 209
7 ஹ. 18-1-42 ப. 5
8 ஹ. 25-3-'39 ப. 65

## அத்தியாயம் 23

1 *நிர்மாணத் திட்டம்*, 1961 ப. 15
2 ஹ. 8-2-'35 ப 416

## அத்தியாயம் 24

1 *நிர்மாணத் திட்டம்*, 1961 ப. 21
2 *ஆரோக்கியத் திறவுகோல்*, 1960 ப. 3
3 *நிர்மாணத் திட்டம்*. 1961, ப. 22
4 ஹ. 7-4-'46 ப. 69
5 ஹ. 26-5'-46 ப. 153
6 ஹ. 2-6-'46 ப. 165
7 ஹ. 11-8-'46 ப. 257
8 ஹ. 11-8-,46 ப. 260
9 "ஆரோக்கியத் திறவுகோல்" 1960 ப. 57
10 ,, ப. 58-59
11 ,, ப. 59
12 ,, ப. 59-60
13 ,, ப. 60
14 ,, ப. 61
15 ,, ப. 61
16 ,, ப. 62
17 ,, ப. 63-65
18 ,, ப. 67-69
19 ,, ப. 71-72
20 ,, ப. 73-75
21 ,, ப. 75
22 ,, ப. 76
23 ,, ப. 77
24 ,, ப. 78
25 ,, ப. 79-81
26 ,, ப. 81-82
27 ,, ப. 82
28 ,, ப. 82
29 ,, ப. 83
30 ஹ. 5-4-'35 ப. 59
31 ஹ. 11-5'-35 ப. 100
32 ஹ. 9-11-'35 ப. 308

## அத்தியாயம் 25

1 " ஆரோக்கியத் திறவுகோல்" 1960 ப. 13—27

## அத்தியாயம் 26

1 ஹ. 18-6-'38 ப. 152
2 ஹ. 1-9-'40 ப. 265
3 ஹ. 5-5-'46 ப. 113

## அத்தியாயம் 27

1 ஹ. 23-5-'36 ப. 119
2 ஹ. 25-3-'39 ப. 64
3 ஹ. 15-2-'48 ப. 32
4 ஹ. 31-8-'34 ப. 227—30
5 ஹ. 9-1-'37 ப. 383

6 ஹ. 18-8'-40 ப. 252
7 ஹ. 2-11-'35 ப. 302
8 ஹ. 23-11-'35 ப. 324-25
9 ஹ. 29-2-36 ப. 18-19
10 ஹ. 24-8-'35 ப. 223
11 ஹ. 2-3-47 ப. 44
12 ஹ. 25-7-36 ப. 187
13 ஹ. 11-4-36 ப. 68
14 ஹ. 20-2-37 ப. 16
15 ஹ. 22-3-35 ப. 42
16 ஹ. 29-3-35 ப. 49
17 ஹ. 17-3-46 ப. 49

### அத்தியாயம் 28

1 ஹ. 28-4-46 ப. 104
2 ஹ. 1-9-46 ப. 288

### அத்தியாயம் 29

1 ய. இ. 2-7-31 ப. 161
2 ய. இ. 26-3-31 ப. 51
3 ஹ. 23-9-39 ப. 278
4 ஹ. 2-11-34 ப. 302
5 ஹ. 24-2-46 ப. 18
6 ஹ. 17-11-46 ப. 404
7 "சுயராஜ்யம் பெற இந்தியாவுக்குள்ள உரிமை" 1932 ப. 209
8 ஹ. 5-10-47 ப. 354
9 ஹ. 12-2-38 ப. 2
10 "புது அடிவானத்தை நோக்கி", 1959 ப. 99
11 ,, ப. 200
12 ,,
13 ய. இ. 17-9-25 ப. 321
14 ய. இ. 16-4-31 ப. 79
15 ய. இ. 31-12-31 ப. 427

# முன்னுரை

(இந்நூலின் ஆங்கில மூலத்தை வெளியிட்ட நவஜீவன் பதிப்பகத்தார் எழுதியுள்ள முன்னுரையின் விவரம் பின்வருமாறு :)

பொதுப் பிரச்னைகளை காந்திஜி அணுகும் முறையில் ஒரு சிறப்பான அம்சம் உண்டு. அதை எளிதாகக் கண்டு கொள்ளமுடியும். அவர் எந்தத் திட்டவட்டமான சித்தாந்தத்தையும் சார்ந்தவரல்ல. எந்தச் சித்தாந்தத்தையும் வைத்து அவர் முடிவுகள் செய்வதில்லை; சத்தியம், அஹிம்சை ஆகிய இரண்டு அடிப்படையான கோட்பாடுகளையும் பொது விவகாரங்களில் அனுசரிக்க வேண்டும் என்பது தான் அவருடைய குறிக்கோள். ஆகவே, இயற்கையாக ஒவ்வொரு பிரச்னையும் வரும்போது அதற்கு ஏற்றவாறு அவர் பரிகாரங் கண்டார்.

சுயராஜ்யத்தை நிலைநிறுத்தவும், மக்களுக்கு அதிகாரம் கிடைத்தவுடன் சுயராஜ்யத்திற்கு ஏற்ற நிர்வாகம் நடத்தவும் தமது முறையில் காங்கிரஸ்காரர்களுக்கு காந்திஜி பயிற்சி அளித்தார் என்று கூறுவது மிகையாகாது.

தொடக்கத்தில் 1937-இலும் முடிவாக 1947-இலும் இப் பயிற்சி கிடைத்தது.

இந்தியாவை ஆள்வோருக்கு காந்திஜி கூறிய அடிப்படையான கோட்பாடு இதுதான். அதாவது, தாங்கள் ஏழைகள் வாழும் ஒரு நாட்டை ஆளவேண்டியிருக்கிறது என்பதையும், இந்தியாவில் உள்ள ஏழை, பிற்போக்கு வகுப்பினரின் நலன்களைப் பிரதானமாகக் கொண்டுதான் நிருவாகம் நடத்த வேண்டியிருக்கிறது என்பதையும் அவர்கள் மறந்து விடக்கூடாது. இதை எவ்வாறு செய்ய முடியும் என்பதை, அவர் 1915-இல் இந்தியாவுக்குத் திரும்பி வந்ததிலிருந்தே கூறிக் கொண்டுதான் வந்தார். ஆகவே, 1937 இல் காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்றபோதும், அதற்குப் பின்னரும் அவர்கள் ஏற்றுக் கொண்ட பொறுப்பு என்னவென்பதை அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வர அவர் தவறவில்லை.

நிருவாகத்தினர், ஆட்சி நடத்துவோர் என்ற முறையில் காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் மேற்கொள்ள வேண்டிய பல்வேறு கடமைகளையும் பற்றி அவர் நிகழ்த்திய உரைகளையும் எழுதிய கட்டுரைகளையும் கொண்ட தொகுப்பே இந்நூல்.

காந்திஜி ஒருபோதும் ஆணைகள் பிறப்பித்ததில்லை. காங்கிரஸ்காரர்கள் மீது தமக்கு எந்த விதமான அதிகாரமும் இருப்பதாக அவர் நம்பியதும் இல்லை. அவர்களுடைய சிறந்த சிந்தனையை அவர் தூண்டினார். தம்முடைய வேண்டுகோள் வீணாகாது என்ற நம்பிக்கையும் அவருக்கு இருந்தது.

இந்தியாவில் ஆட்சிப் பொறுப்பை ஏற்பவர்களிடமிருந்து அவர் என்ன எதிர்பார்த்தார் என்பதை இத்தொகுப்பு கூறுகிறது. இப்போது அடிப்படைகளே கிட்டத்தட்ட மறந்து போய் விட்டன; அரசியல்வாதிகளும் பொது சேவையில் ஈடுபட்டுள்ளவர்களும் பலதரப்பட்ட நோக்கங்களுடன் செயல்படுவதாகத் தோன்றுகிறது. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் இந்த நூல் வெளிவருவது பொருத்தமாக இருக்கும்.

நாட்டு நிருவாகத்தை நடத்தும் பொறுப்பை ஏற்றுள்ளவர்களுக்கு, அவர்களுடைய கடமையையும், தேசத் தந்தை அவர்களிடமிருந்து என்ன எதிர்பார்த்தார் என்பதையும் இத் தொகுப்பு எடுத்துணர்த்தும் என நம்புகிறோம்.

*2-10-'65*

# காந்திஜி கூறும் சோதனை

நகரசபை உறுப்பினர்களுக்கு அவர்களுடைய பயணப்படிக ளும் விசேஷக் கட்டணங்களும் வேண்டும்; அமைச்சர்களுக்கு அவர் களுடைய சம்பளம் வேண்டும்; வழக்கறிஞர்களுக்கு அவர்களுடைய ஊதியம் வேண்டும்; வழக்குத் தொடர்ந்தவர்களுக்கு அவர்களுடைய வழக்கு வெற்றி பெறவேண்டும்; பெற்றோர்களுக்கோ தற்போதைய வாழ்க்கை நிலையில் அந்தஸ்து அளிக்கக்கூடிய கல்வி தங்களுடைய மக்களுக்குப் புகட்டப்பட வேண்டும்; கோடீஸ்வரர்களுக்கோ மேலும் கோடிக்கணக்கில் பணம் திரட்ட வசதிகள் வேண்டும்; மற்றவர்களுக்கும் அவரவர்களுக்குரிய மனிதத் தன்மையற்ற அமைதி வேண்டும். எல்லாம் வயிற்றைச் சுற்றி அழகாகச் சுழன்று கொண்டே வருகிறது. தலையைக் கிறுகிறுக்க வைக்கும் இந்தப் போராட்டத்திலிருந்து விலகி வரவேண்டுமென்பதில் யாரும் கவ னம் செலுத்துவதில்லை. வேகம் அதிகமாக ஆக, மகிழ்ச்சி அதிக மாகிறது. ஆனால் இது ஒரு மரண நர்த்தனம். விரைவில் மரண மடையப்போகும் ஒரு நோயாளியின் இதயம் படபடவென்று அடிக்கிறதே அந்த வேகத்தில் கிடைக்கும் மகிழ்ச்சி இது.

"யங் இந்தியா" 9—3—1922, பக்கம் 148

x x x

உங்களுக்கு ஏதாவது ஐயம் ஏற்படும்போது, அல்லது உங் களிடம் தான் என்ற அகங்காரம் அதிகமாகும்போது, கீழ்க்கண்ட சோதனையை மேற்கொள்ளுங்கள்.

நீங்கள் பார்த்தவர்களில் மிகவும் ஏழையாகவும் பலவீனனாக வும் உள்ள மனிதனின் முகத்தை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் எடுக்க உத்தேசித்துள்ள நடவடிக்கையால் அவனுக்கு ஏதாவது பயன் இருக்குமா என்று உங்களையே நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள் ; அதனால் அவன் ஏதாவது இலாபம் அடைவானா? அவனுடைய வாழ்க்கையையும் விதியையும் நடத்திச் செல்லும் பலம் மீண்டும் அவனுக்குக் கிடைக்குமா? வேறு சொற்களில் கூறப் போனால், உணவில்லாமலும் ஆன்மிக ரீதியாகவும் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுடைய சுயராஜ்யத்திற்கு அது வழிகோலுமா? அப்போதுதான் உங்களுடைய ஐயப்பாடுகளும், தான் என்ற அகங்காரமும் சூரியனைக் கண்ட பனிபோல் கரைவதை நீங்கள் காண்பீர்கள்.

மோ. க. காந்தி

# வாசகருக்கு

நான் எழுதுபவைகளை ஊன்றிப் படிப்பவருக்கும், அவைகளில் அக்கறை கொண்ட மற்றவர்களுக்கும் நான் கூறிக்கொள்ள விரும்புவதொன்று உண்டு. முன்னுக்குப் பின் முரணாக இருக்கக்கூடாதே என்று நான் கவலைப்படுவதில்லை. சத்தியத்தை நாடி நான் சென்றபோது ஏற்கனவே இருந்த பல கருத்துக்களைப் பின்னால் கைவிட்டிருக்கிறேன். புதிதாகப் பலவற்றைக் கற்றுக் கொண்டிருக்கிறேன்; நான் வயதில் கிழவனாகிவிட்டேன். என்றாலும், எனது ஆன்மிக வளர்ச்சி நின்று விட்டது என்றோ, அல்லது, என் ஊனுடல் கீழே சாய்ந்த பின்புகூட என்னுடைய வளர்ச்சி நின்று விடும் என்றோ நான் எண்ணவில்லை. என்னுடைய அக்கறையெல்லாம் ஒவ்வொரு கணமும் எனது கடவுளாகிய சத்தியத்தின் அழைப்பிற்குப் பணிய நான் தயாராய் இருக்க வேண்டுமென்பதே. ஆகையால் என்னுடைய இரண்டு கட்டுரைகளுக்குள் முரண்பாடு இருப்பதாக கண்ட பின்பும் என்னுடைய விவேகத்தில் ஒருவருக்கு நம்பிக்கை இருப்பதாயின், அவைகளில் எது என்னுடைய இரண்டாவது கட்டுரையோ அதில் உள்ள கருத்தை எடுத்துக் கொள்வதே சிறந்தது.

மோ. க. காந்தி

ஹரிஜன் 29—4—'33 பக்கம், 2

பகுதி ஒன்று

அத்தியாயம் 1

# அரசியல் சாசனம்

## சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு

முழு உரிமை : அடிமைத்தனத்திலிருந்தும் பிறரைச் சார்ந்திருப்பதிலிருந்தும் முழு விடுதலை அளிக்கக்கூடிய ஒரு அரசியலமைப்புக்காக நான் பாடுபடுவேன். அவசியமானால், பாவம் செய்யவும் இந்த அரசியலமைப்பு உரிமை அளிக்கும். 'இது எங்கள் நாடு, இதை உருவாக்குவதில் எங்களுடைய குரலுக்கு மதிப்பு உண்டு' என்று ஏழைகளுக்கும் ஏழைகளாக இருப்பவர்கள் உணரக்கூடிய இந்தியாவை, உயர்ந்த வர்க்கத்தினர் என்றோ தாழ்ந்த வர்க்கத்தினர் என்றோ யாரும் இல்லாத ஒரு இந்தியாவை, எல்லா வகுப்பினரும் முழு ஐக்கியத்துடன் வாழக்கூடிய ஒரு இந்தியாவை உருவாக்க நான் பாடுபடுவேன்.

### சுயராஜ்ய அரசாங்கத்தின் கீழ்

சுதந்திர அரசாங்கத்தில் சூதாடுதல், குடித்தல், ஒழுக்க ஈனம், வகுப்பு வேற்றுமை ஆகியவைகளுக்கு இடமில்லை. பணக்காரர்கள் தங்களுடைய பணத்தை விவேகத்துடனும் உபயோகமான முறையிலும் செலவிடுவார்கள். தங்களுடைய ஆடம்பரத்தையோ உலக இன்பங்களையோ பெருக்கிக் கொள்வதற்காகப் பணத்தைக் கொட்டி விரயமாக்க மாட்டார்கள். ஒரு சிலர் மாணிக்கக் கற்கள் பதித்த மாளிகைகளில் வாழ்ந்திருக்க, கோடிக்கணக்கான மக்கள் சூரிய வெளிச்சமே உட்புகாத பாழும் குடிசைகளில் வாழும் நிலைமை கூடாது... அஹிம்சாபூர்வமாக அமைந்த சுயராஜ்யத்தில், நியாயமான உரிமைகளில் பிறருடைய குறுக்கீடு என்பது இராது. அதற்கு மாறாக, நியாயமற்ற உரிமைகளென்பது யாருக்கும் இராது. நன்றாக அமைக்கப்பட்ட ஒரு அரசியலில் பிறர் பொருளை அபகரிப்பதற்கு இடமே இருக்கக்கூடாது; அவ்வாறு அபகரித்தவர்களின் செல்வத்தைப் பறிமுதல் செய்யப் பலாத்காரத்தைப் பிரயோகிக்க வேண்டிய அவசியமும் இருக்கக் கூடாது.

## உண்மையான ஜனநாயகத்தை உருவாக்குவதற்கான சாதனங்கள்

உண்மையான ஜனநாயகத்தை - அதாவது இம்சை இல்லாத ஜனநாயகத்தை—உருவாக்க இந்தியா முயன்றுகொண்டிருக்கிறது. இதற்கு நம்முடைய ஆயுதம் சத்தியாக்கிரகம் தான். சர்க்கா, கிராமக் கைத்தொழில்கள், கைவேலைப்பாட்டுத் தொழில்கள்மூலம் கற்பிக்கப்படும் தொடக்கக் கல்வி, தீண்டாமை ஒழிப்பு, வகுப்பு ஒற்றுமை, மதுவிலக்கு, ஆமதாபாத்தில் இருப்பதைப்போன்று அஹிம்சாபூர்வமான தொழிலாளர் அமைப்பு ஆகியவைகளின்மூலம் இந்த சத்தியாக்கிரகம் வெளிப்படுகிறது. அதாவது, மக்களுடைய முயற்சி, மக்கள் கல்வி என்பது இதன் பொருள். இந்தத் திட்டங்களையெல்லாம் நடத்த நம்மிடம் பெரிய நிறுவனங்கள் இருக்கின்றன. அவைகள் முற்றிலும் அதிகார பூர்வமற்ற நிறுவனங்கள். அவைகளின் ஒரே அதிகாரம், கடையர்களிலும் கடையராக இருப்போருக்குச் சேவை செய்வது தான்.

அத்தியாயம் 2

# பாராளுமன்ற அரசாங்க முறை

ஆடவர்களோ, பெண்களோ—உள்ளூரில் பிறந்தவர்களோ அல்லது குடியேறினவர்களோ உடல் உழைப்பின்மூலம் நாட்டின் சேவைக்கு உதவியவர்களும், தங்களுடைய பெயர்களை வாக்காளர்களாகப் பதிவு செய்யும் கஷ்டத்தை ஏற்றவர்களும் ஆன வயது வந்த மக்களில் மிகப் பெரும்பாலோருடைய வாக்குகளைப் பெற்று, மக்கள் சம்மதத்தின்மீது அமைக்கப்பட்ட இந்திய ஆட்சியையே நான் சுயராஜ்யம் என்று கூறுகிறேன்.

தற்போதைக்கு, இக்காலத்திய சொற்களில் விளக்குவதாய் இருந்தால், இந்தியாவில் பாராளுமன்ற அரசாங்க முறையே என்னுடைய சுயராஜ்யமாய் இருக்கும்.

இன்று என்னுடைய அரசியல், பொதுவாழ்வெல்லாம், இந்திய மக்களுடைய விருப்பத்தின்படியான பாராளுமன்ற சுயராஜ்யத்தை அடைவதற்காகவே அர்ப்பணிக்கப் பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

பாராளுமன்ற அரசாங்க முறை இல்லாமல், நமக்குக் கதி மோட்சமே இல்லை.

ஆகவே, நமது பாராளுமன்றம் என்ன செய்யவேண்டும்? அது அமைக்கப்பட்டபின், தவறுகள் செய்யவும் அத்தவறுகளைத் திருத்திக்கொள்ளவும் நமக்கு உரிமை ஏற்பட்டுவிடும். காமன்ஸ் சபையின் வரலாறே பல தவறுகள் இழைக்கப்பட்ட வரலாறுதான். தவறே உருவானவன்தான் மனிதன் என்று ஒரு அராபியப் பழமொழி கூறுகிறது. தவறுகள் செய்யும் சுதந்திரமும் அத்தவறுகளைத் திருத்திக்கொள்ளும் கடமையும்தான் சுயராஜ்யம் என்பதற்கு ஒரு விளக்கம். இப்படிப்பட்ட சுயராஜ்யம் பாராளுமன்றத்தில் கிடைக்கிறது. அந்தப் பாராளுமன்றம் இப்போது நமக்குத் தேவை. இதற்கு இன்று நாம் தகுதியானவர்களாகவும் இருக்கிறோம்.

பகுதி இரண்டு

# சட்ட சபைகள்

அத்தியாயம் 3

## சட்ட சபைகளுக்குச் செல்லுதல்

நான் ஒன்றை உங்களுக்குக் கூற விரும்புகிறேன். சட்ட சபை பகிஷ்காரம் என்பது சத்தியத்தையும் அஹிம்சையையும் போல ஒரு நிரந்தரமான கொள்கை அல்ல. அவைகளுக்கு நான் காட்டிய எதிர்ப்பு கணிசமாகக் குறைந்திருக்கிறது. ஆனல் அதற்காக, என்னுடைய முந்தைய நிலையிலிருந்து பின்வாங்கு கிறேன் என்பது பொருள் அல்ல. இது முற்றிலும் போராட்ட முறைபற்றிய ஒரு பிரச்னைதான். ஒரு குறிப்பிட்ட சமயத்தில் எது மிகவும் அவசியத்தேவை என்பதை மட்டுந்தான் கூற முடியும். *1920*-இல் இருந்த அளவுக்கு இன்றும் நான் ஒத்துழை யாமை இயக்கவாதியா? ஆம், இன்றும் நான் அதே ஒத் துழையாமை இயக்கவாதிதான். ஒத்துழைப்புப் பெறுவதற் காகவே நான் ஒத்துழையாமைப் போராட்டம் நடத்தினேன் என்பதை மறந்துவிடுகிறீர்கள். ஒத்துழைப்பின் மூலந்தான் நாட்டை முன்னேக்கி அழைத்துச் செல்ல முடியுமென்றல், நான் ஒத்துழைத்துத்தானகவேண்டும் என்று அப்போது கூடக் கூறி யிருக்கிறேன். இப்போது சட்ட சபைகளுக்குச் செல்லுமாறு நான் ஆலோசனை கூறுகிறேன். நம்முடைய ஒத்துழைப்பை அளிப்பதற்காக அல்ல. அவர்களுடைய ஒத்துழைப்பைக் கோரு வதற்காக.

### தேர்தலில் சத்தியம், அஹிம்சை

சட்ட சபைகளுக்காகப் போராடுவதென்பது சத்தியத் தையும் அஹிம்சையையும் பலி கொடுப்பதில்தான் முடியுமென் ருல், ஜனநாயகம் ஒரு சல்லிக்காசுக்குக் கூடப் பயன்படாது. மக்களுடைய குரல்தான் ஆண்டவனின் குரல். முப்பதுகோடி மக்களுடைய குரலின் பிரதிநிதிகளாகத்தான் நாம் சட்டசபை களில் இருக்க வேண்டியிருக்கிறது. சத்தியம், அஹிம்சை தவருது

இதைச் செய்யமுடியாதா? மக்களுடைய பிரதிநிதிகளாக இல்லாதவர்களுடைய குரலும், மக்களுடைய சேவகர்களாக இல்லாதவர்களுடைய குரலும் வெவ்வேறு விதமாக இருக்கும். ஆனல் முப்பதுகோடி மக்களின் பிரதிநிதிகள் என்று தங்களைக் கூறிக் கொள்பவர்களுடைய குரல் வெவ்வேருக இராது.

## தேர்தலும் நிர்மாண ஊழியர்களும்

நம்முடைய மக்களில் பெரும்பாலோர் வாக்களிக்கும் உரிமை பெற்றிருக்கிருர்கள். வாக்கு அளிக்கக் கூடியவர்களில் மூன்றில் ஒரு பகுதியினருக்கு வாக்குரிமை கிடைத்திருக்கிறது. காங்கிரஸ் திட்டம் முழுவதையுமே அவர்களிடம் கொண்டு செல்வதற்குத் தேர்தல்கள் நமக்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்துள்ளன. அப்படியானல், காந்திசேவா சங்க உறுப்பினர்கள் தனியாக ஒதுங்கி இருக்கலாமா? நாம் நிர்மாணத் திட்டத்தில் ஊன்றியிருக்கிறேம் என்பது உண்மையா? நம்முடைய பெயரில் அங்கு செல்பவர்கள் நிர்மாணத் திட்டத்தையும் நிறைவேற்றுமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது நம் கடமையல்லவா? நிர்மாணத் திட்டம் இல்லாமல் எந்த அரசியல் திட்டமும் நிலைத்து நிற்க முடியாது என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். அத்திட்டம் முழுவதுமே சத்தியத்தின், அஹிம்சையின் சின்னந்தான். அது எந்த வகையிலும் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது காந்தி சேவா சங்க உறுப்பினர்களின் தலையாய கடமையாகும்.

## சட்டசபை ஒரு கடமை

'சட்டசபைகள் தீயவை; ஆனல் அது தவிர்க்க முடியாத ஒரு தீங்கு; எனவே எங்கள் உறுப்பினர்கள் அங்கு செல்ல அனுமதியுங்கள்' என்று நான் கூறுவதாக எண்ணிவிடாதீர்கள். அது ஒரு கடமையாக இருக்கலாம். சட்டசபை என்பதே நாம்தான்; மக்களின் பிரதிநிதிகள் தான். நம்முடைய சத்தியத்தையும் அஹிம்சையையும் அங்கு நிறைவேற்றியாக வேண்டியிருக்கிறது. என்னுடைய சொந்தக் காரணங்களால் நான் காங்கிரசிலிருந்து விலகினேன். மேலும் காங்கிரசுக்கு அது உதவியாக இருக்கும் என்பதற்காக நான் விலகியது அதிகம். சத்தியம், அஹிம்சை ஆகியவற்றின் அடிப்படையில் 1920-ஆம் ஆண்டில் நாம் வகுத்த திட்டத்தின்படி காங்கிரஸ் நடக்கும்வரை, என்னுடைய நேரமும் சக்தியும் அதற்காக அர்ப்பணிக்கப்பட்டிருக்கும்.

'ஆனல் நாமே எதிர்த்து வந்த ஸ்தாபனங்களுக்குள் நாம் எவ்வாறு செல்லமுடியும்?' என்று கேட்கப்படுகிறது. இன்றுள்ள

சட்டசபைகள் முற்கால சட்டசபைகளிலிருந்து வேறுபட்டவை. நாம் அவைகளை அழிக்க விரும்பவில்லை. அவை எந்த முறையை அமுல் நடத்துவதற்காக அமைக்கப்பட்டனவோ அந்த முறையை அழிக்கத்தான் நாம் விரும்புகிறோம்.

நாம் சத்தியத்தையும் அஹிம்சையையும் பலியிடுவதற்காக அங்கு செல்லவில்லை. அதற்கு மாறாக, அவைகளை நிலைநிறுத்து வதற்காகவே செல்லுகிறோம். இப்போது தேர்தல்களுக்காகக் காங்கிரஸ் ஒரு சில லட்சம் ரூபாய்களைச் செலவிட வேண்டி யிருந்தது. இந்நாட்டில் நாம் எதிர்க்க முடியாத ஒரு பலமான சக்தி ஆகும்போது, ஒரு காசுகூடச் செலவழிக்க வேண்டியிருக் காது. ஆனால் உண்மை என்னவென்றால், நாம் பொதுவாக நிர்மாணத் திட்டத்தைப் பற்றிப் பேசத்தான் செய்கிறோம். என்ன சாதித்திருக்கிறோம்? கதர் விஞ்ஞான நிபுணர்கள் எத்தனை பேர் நம்மிடம் இருக்கிறார்கள்? நாம் நிர்மாணத் திட்டத்தை முழுதாக நிறைவேற்றியிருந்தால், எந்த மாநிலத்திலும் காங்கிரஸ் கட்சி தவிர வேறு கட்சியே இராது.

**யார் போக வேண்டும்?**

ஆனால் ஒன்றை நான் உங்களுக்கு எச்சரிக்கிறேன். இது வரை நான் சொல்லி வந்ததன் பொருள், நீங்கள் அனைவருமே சட்டசபைகளைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிட வேண்டும் என்பதல்ல. எல்லோரும் மட்டுமல்ல, சங்கத்தைச் சேர்ந்த எவரும் சட்டசபைக்குச் செல்ல முயற்சி செய்யக்கூடாது. நான் சொல்ல வந்ததன் பொருள் என்னவென்றால், ஒரு வாய்ப்புக் கிடைப்ப தானால், யாரும் அதிலிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சி செய்யக் கூடாது என்பதுதான். அங்கு செல்வதற்கு சட்ட ஞானம் தேவை யில்லை. அஞ்சாமையும் நிர்மாணத் திட்டத்தில் நிலையான விசு வாசமும் தான் வேண்டியதெல்லாம். நீங்கள் அங்கு சென்றால் உங்கள் தக்ளியைச் சுற்றவேண்டும் என்று நான் எதிர்பார்ப் பேன். மது விலக்கிற்காகவும் நிர்மாணத் திட்டத்திற்காகவும் சேவை செய்ய வேண்டுமென்று எதிர்பார்ப்பேன். ஆனால், அதி காரத்தை எட்டிப் பிடிப்பதற்காக எந்த முயற்சியும் செய்யக் கூடாது. நாம் செய்த காரியத்தைச் சீர்குலைப்பதாகவே அது இருக்கும். யார் செல்ல வேண்டுமென்று காந்தி சேவா சங்கம் கேட்டுக் கொள்கிறதோ அவர்கள்தான் செல்லுவார்கள். மதுக் கிடங்குகளைப்போலவே சட்டசபைகளும் நம்முடைய ஆட்சியைக் கிளறிவிடக் கூடிய இடங்கள்தான் என்பதை நான் மறுக்க வில்லை. தன்னலவாதிகளுக்கும் உத்தியோக வேட்டை ஆடு வோருக்கும் அங்கு நிறைய வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால்

எந்தக் காங்கிரஸ்காரரும், காந்தி சேவா சங்க உறுப்பினர் எவரும் இந்த இழிவான நோக்கத்துடன் அங்கு செல்ல முடியாது. திட்டத்தை நிறைவேற்றி வைக்குமாறு காங்கிரஸ் தலைவர் கட்டாயப்படுத்துவார். அதில் ஒரு சிறு சீர்கேடு ஏற்படுவதையும் அவர் அனுமதிக்கமாட்டார். இவ்விதப் பிரதிக்ஞை பூண்டவர்கள் சட்டசபை ஒரு தவிர்க்க முடியாத கேடு என்று எண்ணுமல், கடமை உணர்ச்சியுடன் அங்கு செல்லுவார்கள். நம்மால் முடிந்தால் பதினேரு சட்டசபைகளையுமே இப்படிப்பட்டவர்களைக் கொண்டு அதாவது, எஃகு போன்ற சத்தியத்துடன், சுயநலம் எதுவும் இல்லாது சேவைசெய்யும் பிரதிக்ஞையுடன் கூடியவர்களைக் கொண்டு நிரப்பவேண்டும்.

# அத்தியாயம் 4

# சட்டசபைகளும் நிர்மாணத் திட்டமும்

பாராளுமன்ற வேலைத் திட்டம் எப்போதுமே ஒருவன் தன்னையே மறந்துவிடும் அளவுக்கு உணர்ச்சியைத் தூண்டுகிறது. ஆகையால் இயற்கையாகவே ஒருவன் சத்தியத்தையும் அஹிம்சையையும் மறந்துவிடுகிறான். இதுதான் அவருடைய (அதாவது திரு கிஷோரிலாலுடைய*) ஐயப்பாடும் அச்சமும் ஆகும்...... பாராளுமன்ற வேலைத் திட்டமானது ஒருவனுடைய உணர்ச்சியைத் தூண்டக் கூடியதுதான் என்பதையும், ஒருவனைப் பெரிய ஆசைகளில் சிக்க வைக்கிறது என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இந்தக் காரணத்திற்காக நாம் அதைக் கைவிட்டு விட வேண்டுமா? நமக்கு இந்த ஆசைகள் வராமல் தவிர்க்கக் கூடாதா?......

### சங்கத்தின் உதவி யாருக்கு

நம்முடைய திட்டம் ஒன்றே ஒன்றுதான் நிர்மாணத் திட்டம். அதில்தான் சுயராஜ்யம் அடங்கியிருக்கிறது. ஆனால் சட்டசபைகளுக்குச் செல்வதன்மூலம் நாம் சத்தியத்திலோ அஹிம்சையிலோ இம்மிகூடக் குறைவதில்லை. அங்கும்கூட நிர்மாண வேலைக்கு உதவி செய்யவே நாம் விரும்புகிறோம். நான் ஒன்றை உங்களுக்குக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நாம் புத்திசாலித்தனமாகச் சக்கரத்தைச் சுழற்றியிருந்தோமானால் இதற்குள் சுயராஜ்யத்தை அடைந்திருப்போம். நாம் சட்டசபைகளுக்குச் செல்ல வேண்டிய அவசியமே நேர்ந்திராது. நாம் இதுவரை சக்கரத்தைச் சுழற்றாமல், அதை வைத்து விளையாடிக்கொண்டிருந்தோம். இப்போது நாம் அவ்வாறு சக்கரத்தைச் சுழற்ற வேண்டுமானால், மூன்று கோடி வாக்காளர் பிரதிநிதிகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும். ஆகவே நாம் எல்லோரும் சட்டசபைகளுக்குச் செல்லவேண்டும் அல்லது அங்கு போக விரும்புவோரெல்லாம் போக அனுமதிக்கவேண்டும் என்பது இதன் பொருள் அல்ல. அதாவது, சட்டசபை உறுப்பினர்களுக்கெல்லாம் நாம் சங்கத்தின் ஆதரவைக் கொடுக்கப்போவ

---

* திரு கிஷோரிலால் மஷ்ருவாலா காந்திஜியின் நெருங்கிய, பெயர் பெற்ற சீடர்களில் ஒருவராவார்.

தில்லே. நிர்மாணத் திட்டத்தை ஏற்றவர்களான இவர்கள் இல்லாமல் காங்கிரஸ் ஒரு சட்டசபை ஸ்தானத்தை இழக்க நேரிடும் என்ற நிலே இருந்தால் இப்படிப்பட்டவர்களுக்கே நாம் நமது சங்கத்தின் வாயில்களைத் திறப்போம்......முடிந்தால் சட்டசபை முழுவதிலுமே சர்க்காவில் நம்பிக்கையுள்ளவர்களைக் கொண்டு நிரப்ப வேண்டுமென்பதுதான் நமது விருப்பம்.

**அரங்கிலும் அகிம்சைக்கு இடம் உண்டு**

பாராளுமன்ற அலுவல் திட்டத்துக்கு இடம் அளிப்பதன் மூலம், அஹிம்சையில் நாம் மேலும் ஒருபடி முன்னேறுகிறோம்... சத்தியமும் அஹிம்சையும் அந்தப்புரத்தில் வைக்கவேண்டிய அரும்பொருட்கள் அல்ல. அவை சந்தைக் கடையில் எவ்வளவு பயன்படுமோ அவ்வளவு படித்தோர் கருத்தரங்கிலும் சட்டசபைகளிலும் பயன்படும். உங்களுடைய விசுவாசம் கடும் சோதனைக்கு உள்ளாகப் போகிறது. அது கடும் சோதனையாக இருக்கிறது என்பதற்காக, நீங்கள் அதிலிருந்து நழுவக்கூடாது.

நிர்மாணத் திட்டம் முழுவதுமே-கையால் நூற்பது, நெய்வது, இந்து முஸ்லிம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, மது விலக்கு ஆகியவை உட்பட—சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிக்கும் நோக்கத்தைக் கொண்டவைதான். சட்ட சபைகளுக்குச் செல்ல நமக்கு ஏதாவது அக்கறை இருக்குமானல் அதற்கு இதுவே காரணமாக இருக்க முடியும்; வேறு எதுவும் அல்ல. சத்தியமும் அஹிம்சையும் மார்க்கமும் இலட்சியமும் ஆகும். சரியான மனிதர்கள் மட்டும் கிடைப்பதானல், சத்தியம், அஹிம்சை சட்டசபைகள் ஒருவிதமாக விளங்க முடியும். சட்டசபைகள் அவ்வாறு இல்லாவிட்டால் அது நமது குற்றமே தவிர, சட்ட சபைகளின் குற்றம் அல்ல. உண்மையிலேயே நமக்கு மக்கள்மீது பிடிப்பு இருந்தால், சட்டசபைகள் அவ்வாறு இருந்துதான் தீரும்; வேறு எவ்வகையாகவும் இராது.[7]

# அத்தியாயம் 5

# சட்டசபைகளின் கவர்ச்சி

## சேவை செய்ய ஒரு வாய்ப்பு

சட்டசபைகள் அல்லது தேர்தல் மூலம் பதவிக்கு வரும் மற்ற சபைகள் ஆகியவைகளின் தேர்தலில் சில காங்கிரஸ் காரர்கள் போட்டியிட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். முற்காலத்திலெல்லாம் எனக்கு இந்தக் கருத்துக் கிடையாது. சட்டசபைப் புறக்கணிப்பு முழுதாக நிறைவேறிவிடும் என்று நான் நம்பிக்கொண்டிருந்தேன். ஆனல் அது நடைபெறவில்லை. மேலும், காலம் மாறிவிட்டது. சுதந்திரம் அருகில் வந்துவிட்டது போல் தோன்றுகிறது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் சட்டசபை களில் உள்ள ஒவ்வொரு இடத்திற்கும் காங்கிரஸ் போட்டியிட வேண்டியது அவசியம். சட்டசபை ஸ்தானம் மதிப்பு அளிப்ப தாகக் கருதப்படுகிறது. அந்த மதிப்பில் கவர்ச்சியுற்றுப் போட்டி யிடக்கூடாது. ஒரு காங்கிரஸ்காரருக்கு தொண்டாற்ற வேண்டுமென்ற விருப்பமும் தொண்டாற்றுவதற்கு அது அளிக்கும் வாய்ப்புந்தான் தூண்டுதலாக இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்திற்காகப் போட்டியிடும்போதுகூட காங்கிரஸ் அபேட்ச கரை எதிர்க்க முடியாது என்ற பெருமை காங்கிரசுக்கு இருக்க வேண்டும்; அவ்வாறு இருக்கவும் செய்கிறது. அதே சமயம், காங்கிரஸ் பாராளுமன்றக் குழுவால் அபேட்சகர்களாகத் தேர்ந் தெடுக்கப்படாதவர்கள் மனவருத்தமடையக் கூடாது. அதற்கு மாருக, அதிக உபயோகமுள்ள சேவை செய்யத் தங்களுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டிருப்பதாக அவர்கள் மகிழ்ச்சி அடைய வேண்டும். ஆனல் இதில் உள்ள வருந்தத்தக்க உண்மை என்ன வென்ருல், குழுவால் தேர்ந்தெடுக்கப்படாதவர்கள் மனவருத்தம் அடைந்துவிடுகிருர்கள் என்பதுதான்.

## தேர்தலும் பணமும்

தேர்தலில் காங்கிரஸ் பணச்செலவு செய்யவேண்டியதாக இருக்கக்கூடாது. புகழடைந்த ஒரு ஸ்தாபனத்தின் அபேட்ச கர்கள், அதன் முயற்சி எதுவும் இல்லாமலே தேர்ந்தெடுக்கப் படவேண்டும். ஏழை வாக்காளர்கள் செல்வதற்கான வாகன வசதியை அவர்கள் பக்கத்தில் வாழும் வசதி படைத்தவர்கள் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். உதாரணமாக, வாக்காளர்கள் 'அ' என்ற இடத்திலிருந்து 'ஆ' என்ற இடத்துக்குப் போக

வேண்டியிருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். ஏழை வாக்காளர்கள் மேற்கண்ட இடத்திற்குச் செலவிடவேண்டிய ரயில் கட்டணத்தை 'அ' என்ற இடத்தில் வாழும் வசதி படைத்தவர்கள் செலுத்திவிடவேண்டும். நன்ருக அமைக்கப்பட்ட, அஹிம்சையைக் கடைப்பிடிக்கும், பெயர் பெற்ற ஸ்தாபனத்தின் தனிச் சிறப்பான அம்சம் அதுவே. எதற்கெடுத்தாலும் பணத்தை எதிர்பார்க்கும் ஒரு ஸ்தாபனம் மக்களுக்குச் சேவை செய்ய முடியாது. மக்கள் மத்தியில் நடைபெறும் ஒரு போட்டியில் பணமே வெற்றி அளிக்க முடியுமென்ருல், மிகவும் தாராளமாகச் செலவிட்டுவருவதும், செலவிடக் கூடியதுமான சக்தி உள்ள பிரிட்டிஷ் அரசுதான் இந்தியாவில் மக்கள் செல்வாக்கைப் பெற்ற அமைப்பாக இருக்கும். ஆனால் உண்மை என்ன? நல்ல கொழுத்த சம்பளம் வாங்கும் அரசாங்க அதிகாரிகள் கூட, தங்கள் நெஞ்சத்தின் ஆழத்திலே பிரிட்டிஷ் அரசாங்கத்தை விரும்புவதில்லை.

### சட்ட சபையின் பயன்

சட்டசபைகள் எந்த அளவு பயன் உள்ளவை என்பதை ஆராய்வோம். சட்டசபைகள் அரசாங்கத்தைக் குறை கூறலாம். ஆனால் அது செய்யக்கூடிய மிகக் குறைந்த சேவை இதுவே. அரசாங்கத்தின் தவறுகளை அறிந்தும் அதற்கு ஏன் பலியாகிறீர்கள் என்று மக்களுக்கு எடுத்துச் சொல்லக் கூடியவர்களும், அரசாங்கத்தின் தவறுகளை எதிர்த்துப் போராட அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கக் கூடியவர்களுமே உண்மையான சேவை செய்கிருர்கள். உறுப்பினர்கள் இந்த அத்தியாவசிய சேவையைச் செய்ய முடியாது. ஏனெனில் குறைபாடுகளை அகற்றுவதற்கு தங்களை மக்கள் எதிர்பார்க்குமாறு செய்வதே அவர்கள் பணி.

### மற்ருெரு பயன்

மேலும், விரும்பத் தகாத சட்டங்கள் இயற்றப்படாமல் தடுப்பதும், பொதுமக்களுக்கு உபயோகமான சட்டங்களைக் கொண்டு வருவதும்தான் சட்டசபைகளின் மற்ருெரு பயன். இவ்வாறு செய்வதன்மூலம் நிர்மாணத் திட்டத்திற்கு முடிந்த அளவு அதிகமான உதவி அளிக்க முடியும்.

### அபேட்சகராவது கௌரவமா?

மக்களின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதற்காகவே சட்டசபைகள் இருக்கின்றனவென்று கருதப்படுகிறது. இந்தச்

சபைகளில் சொல்லாற்றலுக்கு அந்தச் சமயத்துக்குச் சிறிது உப யோகம் இருக்கலாம். முடிவாகப் பார்த்தால் அது அவசியமாக இராது. நேரடியான அனுபவ ஞானம் உள்ளவர்களும், இந்த ஒரு சிலருக்குத் தங்களுடைய ஆதரவை அளிக்கக் கூடியவர்களும் தான் தேவைப்படுவார்கள். தொண்டு செய்வதற்காகவே உள்ள ஒரு நிறுவனத்தில்—பட்டங்களையும் அதைப் போன்ற அற்பப் பொருள்களையும் பகிஷ்கரித்துவிட்ட ஒரு நிறுவனத்தில்—உள்ள வர்கள் சட்டசபைகளுக்கு அபேட்சகர்களாகத் தேர்ந்தெடுக் கப்படுவது தமக்கு அளிக்கப்படும் ஒரு கௌரவம் என்ற எண் ணம் இருக்கிறதே அது தீங்கு பயக்கக் கூடியதாகும். இப்படிப் பட்ட ஒரு உணர்ச்சி ஆழமாக வேர் விட்டால், அது காங்கிரசின் பெயரைக் கீழே கொண்டுபோய், இறுதியில் அதன் அழிவுக்கே வழிகோலிவிடும்.

காங்கிரஸ்காரர்கள் இவ்வளவு இழிவான நிலைக்குப்போய் விட்டால், இந்தியாவில் எலும்புக் கூடுகளாகக் காட்சி அளிக்கும் கோடிக்கணக்கான மக்களுக்குச் சதையும் உயிரும் அளிப்பவர்கள் யார்? இந்தியாவும் உலகமும் யாரை நம்பியிருக்கமுடியும்?

## அத்தியாயம் 6

# நிர்மாணத் திட்டம்

மூன்று கோடி கிராமவாசிகளுக்கும் அவர்களுடைய பிரதிநிதிகளுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த மூன்று கோடி கிராமவாசிகளின் மத்தியில் நிறைவேற்றிவைப்பதற்காக, *1920*-ஆம் ஆண்டில் வகுக்கப்பட்ட நிர்மாணத் திட்டத்தைச் சட்டசபை உறுப்பினர்களும், மற்ற ஊழியர்களும் பரப்பவேண்டியது அவசியம் என்பதைக் காங்கிரஸ் செயற் குழு வலியுறுத்தியிருக்கிறது. இப் பிரதிநிதிகள் விரும்பினால், அக் கிராமவாசிகளை அலட்சியம் செய்யலாம்; அல்லது அவர்களுடைய வரவு செலவுத் திட்டங்களில் ஒரு அற்ப நிவாரணமோ அல்லது கணிசமான நிவாரணமோ அளிக்கலாம். ஆனால் இதற்கு அவர்கள் நான்கு அம்ச நிர்மாணத் திட்டத்தில் ஈடுபாடு கொள்ளுமாறு செய்யவேண்டும். அவ்வாறு செய்யாமல், அவர்களிடம் தன்னம்பிக்கையையோ, கண்ணியத்தையோ, தொடர்ந்து அவர்களுடையநிலைமையை அபிவிருத்தி செய்து கொள்ளக்கூடிய சக்தியையோ வளர்க்கமுடியாது. அனைவரும் நூற்பதன்மூலம் அனைவரும் கதரை உற்பத்தி செய்து பயன்படுத்துவது, இந்து-முஸ்லிம் ஒற்றுமை-சொல்லப்போனால் வகுப்பு ஒற்றுமை, குடிக்கும் பழக்கம் உள்ளவர்கள் மத்தியில் பிரசாரம் செய்து முழு மதுவிலக்கைக் கொண்டு வருதல், இந்துக்களின் மத்தியிலே தீண்டாமையை வேருடன் களைதல் ஆகிய நான்கும்தான் இந்தத் திட்டங்கள்.

### வேறு வழி இல்லை

இந்த நான்கு திட்டங்களையும் நிறைவேற்றாமல் அஹிம்சை வழியில் சுயராஜ்யம் அடைய முடியாது என்பது *1920*, *1921* ஆம் ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான மேடைகளிலிருந்து அறிவிக்கப்பட்டிருக்கிறது. இது இப்போதும் நூற்றுக்கு நூறு உண்மையே.

வரி விதிப்புப் போன்ற அர்சாங்க ஒழுங்கு முறைகளின் கீழ் மக்களின் பொருளாதார நிலையை உணர்த்துவது ஒன்று; தாங்களே தங்கள் சொந்த முயற்சியால் தங்கள் நிலையில் முன்னேற்றங் காண்பதை மக்கள் உணருமாறு செய்வது முற்றிலும் வேறு. கையால் நூல் நூற்பதன் மூலமும், மற்ற கிராமக் கைத்தொழில்களின் மூலமும் தான் இதை அவர்கள் செய்ய முடியும்.

அதைப்போன்று, தலைவர்களுக்கிடையே உடன்படிக்கைகள் ஏற்படுவதன் மூலம்—தலைவர்கள் தாங்களாகவே முன்வந்து உடன்

படிக்கைகள் செய்வதன் மூலமோ அல்லது அரசாங்க நிர்ப்பந்தத்தின் பேரில் உடன்படிக்கைகள் செய்துகொள்வதன் மூலமோ-பல்வேறு வகுப்புகளுக்கிடையே உள்ள உறவை ஒழுங்குபடுத்துவது ஒன்று; ஒரு வகுப்பைச் சேர்ந்த மக்கள் மற்ற வகுப்பைச் சேர்ந்தவர்களின் மத அனுஷ்டானங்களையும் மற்றவைகளையும் மதித்து நடப்பது முற்றிலும் வேறு. சட்டசபை உறுப்பினர்களும் ஊழியர்களும் கிராம வாசிகள் மத்தியில் சென்று, பரஸ்பர சகிப்புத்தன்மையைக் கற்றுக் கொடுத்தாலொழிய, இதைச் சாதிக்க முடியாது.

### மதுவிலக்கில் சிக்கனம்

மதுவிலக்கைச் சட்டத்தின் மூலமும் நான் அமுல் நடத்தித்தானுகவேண்டும்—நிர்ப்பந்திப்பது ஒன்று. மனமுவந்து அதை ஏற்று நிறைவேற்றிவைப்பது வேறு. பெரும் பொருட்செலவுடன், விரிவான உளவு முறை இருந்தாலொழிய மதுவிலக்கைச் செயல்படுத்த முடியாது என்று எண்ணுவது தோல்வி மனப்பான்மையும் சுகவாசி அனுபவமுமாகும். ஊழியர்கள் கிராமங்களுக்குச் செல்ல வேண்டும். குடிப் பழக்கம் எங்கெங்கு இருக்கிறதோ அங்கெல்லாம் சென்று அதன் தீமையை எடுத்துணர்த்த வேண்டும். ஆராய்ச்சி மாணவர்கள் மதுவினல் ஏற்படக் கூடிய தீங்குகளைக் கண்டுபிடிக்க வேண்டும். மக்களுக்கு நல்ல அறிவைப் புகட்ட வேண்டும். இவ்வாறெல்லாம் செய்தால், மதுவிலக்கு சிக்கனமானதாக இருப்பதுமட்டுமல்லாமல், லாபகரமானதாகவும் இருக்கும். சிறப்பாக மாதர்களே செய்யவேண்டிய பணி இது.

### தீண்டாமை

இறுதியில் தீண்டாமையின் கேடுகளைச் சட்டத்தின் மூலம் நாம் அகற்றலாம். அவ்வாறு நாம் செய்துதான் 'ஆகவேண்டும். ஆனல் தீண்டாமை உணர்ச்சியை மக்கள் தங்கள் உள்ளங்களிலிருந்து அகற்றினலொழிய, நமக்கு உண்மையான விடுதலை கிடைக்காது; அவர்கள் ஒன்றுபட்ட மனத்துடனே அல்லது முழு ஒற்றுமையுடனே செயல்படவும் முடியாது.

### அலட்சியம் வேண்டாம்

இவ்வாருக இதுவும் மற்ற மூன்று திட்டங்களும் உண்மையான மக்கள் கல்வியாகின்றன. சரியோ, தவறோ இப்போது மூன்றுகோடி ஆண் பெண்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருப்பதால், இது தவிர்க்க முடியாத அவசியம் ஆகிவிடுகிறது. இதற்கு

எவ்வளவுதான் வேலிபோட்டு அடைப்பதாக இருந்தாலும், இந்த வாக்காளர்களின் வாக்குரிமையைப் பெற விரும்பும் காங்கிரஸ்காரர்கள் கையில்தான் மனித வர்க்கத்தைச் சேர்ந்த இந்த மூன்று கோடிப் பேருக்கும் சரியான முறையிலோ தவருன முறையிலோ கல்வி புகட்டும் பொறுப்பு இருக்கிறது. அவர்களைப் பொறுத்த மூலாதாரமான விஷயங்களில் அவர்களை முற்றிலும் அசட்டை செய்வது தவருன ஒரு முறையாகும்.

பகுதி மூன்று

# சட்டசபை உறுப்பினர்கள்

## அத்தியாயம் 7

## நகல் பிரகடனம்

ஸ்ரீ பிரிஜ்லால் நேரு கீழ்க்கண்ட நகல் பிரகடனத்தைப் பத்திரிகைகளில் வெளியிடுவதற்காக அனுப்பியுள்ளார் :

"இந்தியாவில் ராணுவத்திலும், ராணுவ சம்பந்தம் அல்லாத மற்ற எல்லா அரசாங்க அலுவல்களிலும் உள்ளவர்கள், மத்திய மாகாண, ஸ்தல ஸ்தாபன உத்தியோகங்களுக்காக மனுப்போடுபவர்கள், இந்த அரசாங்கங்களின் கீழ் ஊதியம் உள்ள மற்ற வேலைகளுக்காக மனுப்போடுவோர், அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள் உள்பட சட்டசபை உறுப்பினர்கள் ஆகிய எல்லோரும் கையெழுத்திடவேண்டிய நகல் பிரகடனமாவது :

நான் பய பக்தியுடன் கீழ்க்கண்ட உறுதிமொழிகளை எடுத்துக்கொள்கிறேன் :

1. நான் இந்திய யூனியனின் ஒரு பிரஜை. எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அதனிடம் நான் விசுவாசத்துடன் இருப்பதாகப் பிரதிக்ஞை செய்கிறேன்.

2. இந்துக்களும் முஸ்லிம்களும் இரு தனி நாடுகளைச் சேர்ந்தவர்கள் என்ற கொள்கையை நான் மறுக்கிறேன். இந்தியாவில் உள்ள மக்கள் எல்லோரும் அவர்கள் எந்த இனத்தை அல்லது மதத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், ஒரே தேசத்தின் மக்களே என்ற கருத்து உடையவன் நான்.

3. இந்தப் புராதனமான புண்ணிய பூமியில் வாழ்வோர் அனைவரும் ஒரே தேசத்தவர் என்ற கொள்கையை வலுப்படுத்துவதற்கு என்னுடைய பேச்சும் செயல்களும் உதவக்கூடியவாறு நான் நடந்து கொள்வேன்.

4. இந்த உறுதிமொழியை மீறியதாக என்மீது குற்றம் கண்டுபிடிக்கப்பட்டால், நான் அச்சமயத்தில் வகிக்கும் எந்தப் பதவியிலிருந்தும் விலக்கப்படுவதற்கு நானே பொறுப்பாளியாவேன்."

இந்த வாசகங்களில் உள்ள சொற்களை இன்னும் சிறந்த முறையில் மாற்றுவதற்கு இடமிருக்கலாம். எனினும் நிர்வாகத்தில் ஏற்படும் விரும்பத்தகாத வளர்ச்சியை நாம் தடுக்க வேண்டுமாயின், அந்த வாசகங்களின் அடிப்படையான கருத்து பாராட்டத் தக்கதும், ஏற்றுக்கொள்ளத் தக்கதுமாகும்.

# அத்தியாயம் 8

# காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள்

சட்டசபை உறுப்பினராக இருக்கும் ஒரு காங்கிரஸ்காரர்—அவர் அதில் என்ன பதவி வகிப்பதாக இருந்தாலும்—காங்கிரசின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவரே. ஆகையால் அவ்வப்போது அது பிறப்பிக்கும் ஆணைகளை அவர் நிறைவேற்றிவர வேண்டும்.

## சட்டசபையில் பொறுப்பு

எனது கருத்தின்படி, சட்டசபை உறுப்பினர்களாக இருக்கும் காங்கிரஸ்காரர்கள்—அவர்கள் வெறும் உறுப்பினர்களாக இருந்தாலும் சரி, அவைத் தலைவர்களாகவோ அல்லது அமைச்சர்களாகவோ இருந்தாலும் சரி—அவர்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும், காங்கிரஸ் விதி அமைப்பின்படி சத்தியத்தையும் அஹிம்சையையும் அவர்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்ற உண்மையைக் கவனமாக ஞாபகத்திற்கொள்ளவேண்டும். இவ்வாறாக, சட்டசபையில் ஒரு காங்கிரஸ்காரர் நூற்றுக்கு நூறு சத்தியத்துடன் தமது எதிர்க்கட்சியினரிடம் நடந்து கொள்ளும் முறையில் கண்ணியத்தையும் கடைப்பிடிக்க வேண்டும். அவர் நேர்மையற்ற அரசியலில் ஈடுபடமாட்டார்; முறைதவறி நடந்து கொள்ளமாட்டார்; தன்னுடைய எதிரியிடமிருந்து கீழ்த்தரமான அனுகூலம் எதையும் ஒருபோதும் பெறமாட்டார். சட்டசபையில் அவருடைய பதவி உயரும் அளவுக்கு இவைகளில் அவருடைய பொறுப்பும் அதிகமாய் இருக்கும். சட்டசபையில் உள்ள ஒரு உறுப்பினர் தமது தொகுதிக்கும் கட்சிக்கும் பிரதிநிதியாக இருக்கிறார் என்பது உண்மையே. ஆனால் அதே சமயம் அவர் தமது மாநிலம் முழுவதற்கும் பிரதிநிதியாகவும் இருக்கிறார். ஒரு அமைச்சர் தமது கட்சி நலனைக் காத்து வளர்ப்பார் என்பதில் ஐயமில்லை. ஆனால், மொத்தமாகப் பார்த்தால் நாட்டின் நலனைப் பலியிட்டு ஒருபோதும் தமது கட்சியின் நலனை வளர்க்கமாட்டார். சொல்லப்போனால் அவர் நாட்டின் நலனை எந்த அளவுக்கு வளர்க்கிறாரோ அந்த அளவுதான் காங்கிரசின் நலனை வளர்த்தவராவார். வெளிநாட்டு ஆட்சியாளரை எதிர்த்துப் போரிட இயலாதவர், நாட்டுக்குள்ளேயே இருக்கும் எதிரியை எதிர்த்துப் போராட எப்படி முடியும்? இதை அவர் அறிவார். யார் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், எல்லா வகுப்பினரும் ஒருங்கு சேரக்கூடிய இடம்

சட்டசபையே. ஆகவே அங்கு அவர் தம்முடைய எதிர்க்கட்சியின ரைத் தம் கருத்தில் வயப்படுத்தித்தான் அவர்களும் மறுக்கமுடி யாத அதிகாரங்களை உருவாக்கிக்கொள்ள முடியும் என எதிர் பார்க்கவேண்டும். சட்டசபையை, இந்திய அரசாங்கச் சட்டப்படி அமைந்த ஒரு சபையாக மட்டும் கருதக்கூடாது. பல்வேறு வகுப்பினர்களும் சேர்ந்ததுதான் இந்த நாடு. ஆகவே, இவ்வகுப்பு களைச் சேர்ந்த பிரதிநிதிகளுக்கு வரம்பில்லாத அதிகாரங்கள் இருந்தால், அவர்கள் எங்தெந்தப் பிரச்னைகளையெல்லாம் தீர்த்து வைப்பார்கள் என்று எதிர்பார்க்கலாமோ அப்பிரச்னைகளையெல் லாம் தீர்த்துவைக்கக்கூடிய ஒரு சாதனமாகச் சட்டசபையை எண்ணவேண்டும். அவ்வாறு சட்டசபையைக் கருதுவதாயின் வகுப்பு ஒற்றுமை உள்பட நம்முடைய மக்கட் சமுதாயத்தில் உள்ள எல்லாச் சிக்கல்களையும் தீர்த்துவைக்கமுடியும். சட்ட சபையின் அதிகார வரம்புக்கு வெளியே உள்ள பல பிரச்னைகள் நாட்டு முன்னேற்றத்துக்கு அவசியமானவையாய் இருக்கின்றன. இப்பிரச்னைகளைத் தீர்த்துவைப்பதற்குச் சட்டசபைகளைப் பயன் படுத்துவதை இந்திய அரசாங்கச் சட்டம் தடை செய்ய வில்லை.

### சபா நாயகர்

இங்கே குறிப்பிட்டுள்ள கருத்தின் அடிப்படையில் பார்க்கும் போது, அவைத் தலைவர் பதவிக்கு மிகப் பெரிய முக்கியத்துவம் ஏற்படுகிறது. இந்தியாவின் முதல் அமைச்சர் பதவியைவிட அது பெரியதாகிறது. ஏனெனில், அவர் தலைமை வகிக்கும்போது ஒரு நீதிபதியின் பொறுப்புகளையெல்லாம் நிறைவேற்றிவைக்க வேண்டியவராய் இருக்கிருர். அவர் பாரபட்சமற்ற, நியாயமான தீர்ப்புகள் அளிக்க வேண்டியிருக்கிறது. சட்டசபை உறுப்பினர் களுக்கிடையே மரியாதை உணர்வு ஏற்படுமாறு செய்து, சபை யின் கண்ணியத்தை அவர் காக்கவேண்டியதாய் இருக்கிறது. பெரும் புயலுக்கு மத்தியிலும் அவர் அமைதியாக இருக்க வேண்டும். எதிர்க்கட்சியினரைத் தம் வயப்படுத்துவதற்கு சபை யில் உள்ள வேறு எந்த உறுப்பினருக்கும் இல்லாத அளவு அவருக்கு வாய்ப்புகள் இருக்கின்றன.

### வெளியிலும் சார்பின்மை

ஒரு அவைத் தலைவர், சபையில் ஒரு சார்பற்றவராகவும், கட்சி வாக்குவாதங்களில் கலந்துகொள்ளாதவராகவும் இருந்துவிட்டு, வெளியில் அவ்வாறு இல்லாமற் போய்விடுகிருர் என்று வைத்துக்

கொள்ளுங்கள். வெளியிலும் பாரபட்சமில்லாமலும் அமைதியாகவும் நடந்து கொண்டால், அவருக்கு எவ்வளவு மதிப்பும் செல்வாக்கும் கிடைக்குமோ அந்த அளவு மதிப்பும் செல்வாக்கும் அவருக்கு அப்போது கிடைக்காது. தனது குறுகிய எல்லை வரம்புக்கு வெளியிலும், ஒரே மாதிரி ஒரு சார்பற்ற பழக்கத்தை அவைத் தலைவர் கடைப்பிடித்தாரானால், அவர் காங்கிரசின் பெருமையை உயர்த்தியவராவார். தம்முடைய பதவி அளிக்கும் ஈடு இணையற்ற வாய்ப்பை அவர் உணர்ந்தாரானால், இந்து - முஸ்லிம் சிக்கலும் மற்றும் பல பிரச்னைகளும் தீருவதற்கு அவர் வழி வகுக்க முடியும். இவ்வாறாக, ஒரு அவைத் தலைவரானவர் சபைக்கு உள்ளே மட்டுமல்லாமல் வெளியிலும் 'அவைத் தலைவராக' இருக்கவேண்டுமானால், அவர் ஒரு முதல்தரமான காங்கிரஸ்காரராக இருக்கவேண்டும் என்பது எனது கருத்து. ஒரு மனிதர் என்ற முறையிலும் அவர் மாசு மருவற்ற ஒழுக்கமுடையவராய் இருக்கவேண்டும். அவர் திறமைவாய்ந்தவராகவும், அச்சமில்லாதவராகவும், இயல்பாகவே நீதி உணர்ச்சி உள்ளவராகவும் இருக்க வேண்டும். இதற்கெல்லாம் மேலாக, எண்ணத்திலும் செயலிலும் சொல்லிலும் சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிப்பவராகவும் அவர் இருக்கவேண்டும். அப்போது அவர் விரும்பும் எந்த மேடையிலும் அவர் கலந்துகொள்ளலாம்!

அத்தியாயம் 9

# சட்டசபையின் விழிப்பு உணர்ச்சி

நடைமுறையில் பார்த்தால், பிதாபாஸ் பாபுவைக் கைது செய்ய எவ்விதக் காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை. வங்காள அரசாங்கம் மக்களுக்குப் பொறுப்பானது. அவர்கள் அறியாமல் கவர்னர் இந்த உத்தரவைப் பிறப்பித்திருக்க முடியாது.

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை அவர்கள் எதேச்சாதிகாரமான முறையில் அமுல் நடத்த முடியாது. அவர்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் பொதுமக்களிடம் காரணங் காட்டியாக வேண்டும். பொறுப்பு வாய்ந்த நிருவாக அதிகாரிகளின் நடவடிக்கைகளுக்கான காரணங்களை அவ்வப்போது சட்டசபைக்குத் தெரிவித்துவரவேண்டும். அப்போதுதான் சட்டசபை இருப்பதற்கு நியாயம் உண்டு.

அத்தியாயம் 10

# அரசியல் நிர்ணய சபை பஞ்சணை மெத்தையல்ல

வீண் பொழுதுபோக்குவதற்கோ அல்லது சுகமாக உட்கார்ந்திருப்பதற்கோ இது காலமல்ல. நாட்டிற்காக முட்கிரீடத்தைப் பண்டித ஜவாஹர்லால் நேரு அணிந்து கொள்ள வேண்டுமென்று நான் அவரிடம் சொன்னேன். அவரும் அதை ஏற்ருர். உங்களுக்கு அரசியல் நிர்ணய சபை ஒரு பஞ்சணை மெத்தையாக இருக்கப்போவதில்லை. அதற்குப் பதிலாக முட்படுக்கையாகத்தான் இருக்கப்போகிறது. நீங்கள் அந்தப் பொறுப்பிலிருந்து நழுவக் கூடாது.

### தியாகத்துக்கான பரிசு அல்ல

இதனால் எல்லோருமே அதற்குச் செல்ல ஆசைப்பட வேண்டும் என்ருகாது. தங்களுடைய சட்டப் பயிற்சியாலோ அல்லது திறமையாலோ அதற்குத் தனித் தகுதி படைத்தவர்கள் சிலர் இருப்பார்கள். அவர்கள்தான் அங்கு செல்லவேண்டும். செய்த தியாகங்களுக்கு வெகுமதியாகக் கிடைக்கும் பரிசு அல்ல அது. அவ்வாறு நினைத்து அதற்காக முயற்சி செய்ய வேண்டாம். தூக்கு மேடையில் ஏறுவதைப்போலும், அல்லது சேவையில் பலிக்களத்தில் எல்லாவற்றையும் தத்தம் செய்வது போலும் நாம் எதிர் நோக்கவேண்டிய ஒரு கடமை அது.

நீங்கள் ஏன் அரசியல் நிர்ணய சபைக்குச் செல்லவேண்டும் என்பதற்கு மற்றுமொரு காரணம் இருக்கிறது. "உத்தேசிக்கப் பட்டுள்ள அரசியல் நிர்ணய சபையை ஏற்க நீங்கள் மறுத்துவிட்டால் அல்லது அரசியல் நிர்ணய சபை உருவாகாது போய்விட்டால், தனிப்பட்ட அல்லது பொதுச் சட்ட மறுப்பை மேற்கொள்ளுமாறு நீங்கள் மக்களுக்கு யோசனை கூறுவீர்களா?" என்று நீங்கள் என்னைக் கேட்டால் 'இல்லை' என்றே நான் பதில் கூறுவேன். தன்னந்தனியாகச் செயல்படுவதில் எனக்கு நம்பிக்கையுண்டு. நான் தன்னந்தனியாகத்தான் இந்த உலகிற்கு வந்தேன். மரண தேவதையின் நிழல் உலாவும் பயங்கரமான பள்ளத்தாக்குகளில் தன்னந்தனியாக நடந்து சென்றிருக்கிறேன். காலம் வரும் போது தன்னந்தனியாகவே போகப் போகிறேன். நான் தன்னந் தனியாக இருந்தாலும், சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ள எனக்குத் திறனுண்டு என்பதை நான் அறிவேன். இவ்வாறு முன்பு, நான் செய்திருக்கிறேன். ஆனல் இக்காலம் உண்ணவிரதத்திற்கோ அல்லது சட்ட மறுப்புக்கோ உரிய காலம் அல்ல. அரசியல் நிர்ணய சபையை சத்தியாக்கிரகத்துக்கு ஒரு மாற்ருகவே நான் கருதுகிறேன். அது ஆக்க பூர்வமான சத்தியாக்கிரகமே.

பகுதி நான்கு

# சட்ட சபை உறுப்பினர்களின் ஊதியம்

## அத்தியாயம் 11.

## காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களும் ஊதியமும்

உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு சட்டசபை உறுப்பினர் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அந்தக் கடிதத்தை நான் சுருக்கித் தருகிறேன் :

உத்தரப் பிரதேசத்தில் எங்களுக்கு மாதம் ரூ. 75 கிடைக்கிறது. "காங்கிரஸ் அதிகாரத்தில் இருந்த இரண்டரை ஆண்டுகளில் சட்டசபைக் கூட்டம் சில சமயம் ஆறுநாட்களில் முடிந்துவிட்டது! மற்றும் சில சமயங்களில் சில மாதங்கள் வரை நீடித்தது. இது தவிர, பொறுக்குக் குழுக்கள், தனிக் குழுக்கள், சாதாரணக் குழுக்கள் ஆகியவற்றின் கூட்டங்களும் நடைபெற்றிருக்கின்றன. இக்குழுக்களில் சில இன்னும் பணியாற்றி வருகின்றன; எங்களுடைய நேரத்தில் பெரும் பகுதியை எடுத்துக் கொள்கின்றன. மேலும், அடுத்த சட்டசபைக் கூட்டம் எப்போது என்பதும் யாருக்கும் தெரியாது. எங்களுடைய தொகுதிகளில் சுற்றுப்பிரயாணம் செய்வதற்கு ஆண்டுதோறும் ரூ. 200 செலவாகிறது. இலட்சுமணபுரிக்கு 200 மைல் தூரத்துக்கு அப்பால் உள்ள தொகுதிகளும் இருக்கின்றன. ஒரு ஆண்டில் சராசரியாக மூன்று சுற்றுப் பயணங்கள் என்று வைத்துக்கொண்டாலுங்கூட, ஒரு உறுப்பினர் இதற்காக ஆறு வாரங்கள் செலவிட வேண்டியிருக்கிறது. இலட்சுமணபுரியில் இருக்கும்போது, ஒவ்வொரு உறுப்பினரும், அங்கு தனது தொகுதி மக்கள் வந்தால் உபசரிக்க வேண்டியிருக்கிறது. காங்கிரஸ் சட்டசபைக் கட்சிக்கும், மாகாணக் காங்கிரஸ் குழுவுக்கும் மாதந்தோறும் அவர் ரூ. 4. செலுத்த வேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் வாணிபமோ, தொழிலோ பாதிக்கப்படும் என்பது நிச்சயம். ஆகவே ஒரு உறுப்பினருக்குத் தனிப்பட்ட முறையில் வசதி இருந்தாலொழிய ஊதியம் இல்லாமல் அவர் முழு நேர வேலை செய்ய முடியாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகும். உத்தரப் பிரதேச சட்டசபை உறுப்பினர்கள் முன் இந்தப் பிரச்னை பலமுறை வந்திருக்கிறது. படியை உயர்த்தாவிட்டால், சட்டசபை உறுப்பினர்களில் ஏழைகளாக இருப்பவர்கள் அதிலிருந்து வெளியேற வேண்டியிருக்கும். அப்புறம் இத்துறையே பணக்காரர்களிடம் போய்விடும். கிடைத்த படியை சொந்தச்

செலவுக்கு வைத்துக் கொண்டனர் என்பதை அறிந்தபோது நீங்கள் மிகவும் மனவருத்தம் அடைந்தீர்கள். ஆனல் நீங்கள் வழிகாட்டவேண்டும் என்பதற்காக நான் இப்போது நாணயத்தின் மற்றொரு புறத்தை உங்களுக்குக் காண்பித்திருக்கிறேன். காங்கிரஸ் ஆணைக்கிணங்கித் தேர்தலில் போட்டியிடுவதற்காக எங்களில் பலர் கடன் வாங்கினேம் என்பதையும் இங்கு நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

## பதவி ஆசை

"நான் உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பும் இரண்டாவது விஷயம், காங்கிரசில் உள்ள லஞ்ச ஊழலாகும். மற்றும் சில காரணங்களுடன், சட்டசபை உறுப்பினர் பதவி என்ற ஒன்று ஒரு சாதாரண காங்கிரஸ் ஊழியருக்கு மிகப் பெரிய கவர்ச்சியாக இருக்கிறது. இதனல் ஏற்கனவே அப்பதவியில் உள்ள சட்டசபை உறுப்பினரை அகற்றுவதற்கும் அவர் மறைமுகமான முயற்சிகளை மேற்கொள்கிருர். எந்த உறுப்பினர்கள் தங்கள் பொறுப்பைச் சரிவரச் செய்தார்களோ அவர்களெல்லாம் மீண்டும் நியமிக்கப்படுவார்கள் என்று தெரிந்தால் நன்ருக இருக்கும். இப்படிப்பட்ட கொள்கையால் சட்டசபை வேலைக்கு நன்கு பயிற்சி பெற்ற பலர் கிடைப்பார்கள். தங்களிடமிருந்து சட்டசபைக்கு வெளியே நிர்மாண வேலை எதிர்பார்க்கப்படுகிறது என்பதையும் உறுப்பினர்கள் உணர்ந்து கொள்வார்கள்.

## மேற்கு நாட்டுப் பண்பாடு

"மிகமுக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் மத்தியில் கூட, மேற்கு நாட்டு வாழ்க்கை, சிந்தனை, பண்பாடு ஆகியவற்றில் பல்மான பற்று இருக்கிறது. எங்களுக்கு வழிகாட்டுமாறு நான் பணிவுடன் கேட்டுக்கொள்ளும் மூன்ருவது விஷயம் இதுவே. இவர்கள் கதர் உடுத்தியிருக்கிருர்களென்ருலும் இவர்களில் பலர் தங்களுடைய சொந்தப் பண்பாட்டிற்கு முற்றிலும் அந்நியர்களாகவே இருக்கின்றனர். அவர்களுக்குத் தேவையான ஒளியெல்லாம் அவர்களுக்கு மேற்கிலிருந்தே கிடைக்கிறது."

## ஊதிய உயர்வு அவசியமில்லை

உறுப்பினர்களின் ஊதியத்தைப் பொறுத்தமட்டில் இந்தக் கடிதம் எனது மனத்தை மாற்றவில்லை. நிச்சயமாக, எல்லா இடங்களிலுமே கஷ்டப்படுபவர்கள் இருக்கத்தான் செய்வார்கள். ஆனல் இவர்களை மட்டும் வைத்து விதியைப் பிறப்பித்தால் அது சரியில்லாததாகவே இருக்கும். சட்டசபைகள் காங்கிரசின் ஏகபோகமானவை அல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவைகளில் பல கட்சிகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆகவே காங்கிரசுக்கு மட்டும் எதுவும் வசதியாக இருக்கிறது என்பதை வைத்து இதைக் கவனிக்க முடியாது. ஒவ்வொரு சட்டசபை உறுப்பினருமே சட்டசபை அலுவல்களில் விசேஷ கவனம் செலுத்தி, தேச சேவையில் முழு நேரத்தையும் செலவிடுகிருர் என்று வைத்துக்கொண்டு எனக்குக் கடிதம் எழுதியவர்

பேசுகிருர். அவர் கூறுவதன்படி பார்த்தால் சட்டசபை உறுப்பினர்கள் அரசியலைத் தொழிலாகக் கொண்டவர்களாய் விடுவார்கள்; சட்டசபை அவர்களுடைய தனி உரிமைகளாகிவிடும். என்னுடைய யோசனைப்படி நடைபெறுவதாயிருந்தால், இந்த விவகாரங்களையெல்லாம் கட்சிகளே தீர்த்துவைக்கும். இந்தப் பிரச்னையில் பல கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நான் அறிவேன். இதைப்பற்றி விவரமாக, அமைதியாக விவாதிக்க வேண்டியிருக்கிறது. ஆனல் நான் எழுப்பியுள்ள கருத்து மிகவும் எளிய கருத்துத்தான். சட்டசபைகள் நடைபெருத காலத்தில் ஏன் சட்டசபை உறுப்பினர்கள் ஊதியம் பெறவேண்டும்? ஒரு புள்ளி விவரம் எடுப்பதாக இருந்தால், சட்டசபை உறுப்பினர்கள் என்ற முறையில் பலர் அவர்களுக்குக் கிடைக்கும் ஊதியத்தை விட அதிகமாக சட்டசபைகளுக்கு வருமுன் சம்பாதிக்கவேயில்லை என்பது தெரியவரும். ஒருவருடைய மார்க்கெட் "விலை"யைக் காட்டிலும் அவர் அதிகப்படியாக ஊதியம் தேடுவதற்குச் சட்டசபை ஒரு சாதனமாகிவிடக் கூடாது; அது அபாயகரமானது. ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள பொறுப்பு வாய்ந்த மனிதர்கள் கூடி ஆலோசிக்கட்டும். காங்கிரசுக்கும் அதன் பிரதிநிதிகளின் லட்சியத்திற்கும் ஏற்ற முறையில் அவர்கள் ஒரு முடிவுக்கு வரட்டும்.

### நிரந்தரப் பதவியா?

தற்போதுள்ள சட்டசபை உறுப்பினர்களை நிரந்தரமாக அப்பதவிக்கு உரியவர்களாக்க வேண்டுமென்று இக்கடிதத்தை எழுதியவர் ஒரு கோரிக்கையைக் கிளப்புகிருர். இதை என்னல் புரிந்து கொள்ள முடியவில்லை. இதில் எனக்கு அனுபவமில்லை. இது, காங்கிரஸ் செயற்குழு ஆராய்ந்து முடிவு செய்யவேண்டிய பிரச்னையாகும்.

### மேற்கு நாட்டுப் பகட்டு

மேற்கு நாட்டு வழி முறையைப் பின்பற்றுவதைப் பொறுத்தவரை, என் வாழ்க்கையே ஒரு போதனையாக இருக்கவேண்டும். அதுவே போதனையாக இல்லாவிட்டால் நான் புதிதாக,என்ன போதனையைக் கூற முடியும்? முன்பெல்லாம் கிழக்கே யிருந்து ஒளி போய்க்கொண்டிருந்தது. கிழக்கு நாட்டு அணையில் தண்ணீர் வற்றிவிட்டால், மேற்கு நாடுகளிலிருந்து அது கடன் வாங்குவது இயற்கையே. ஒளியானது—அது வெறும் பகட்டாக இராமல் ஒளியாக மட்டும் இருக்குமானல்—எப்படி வற்றமுடியும் என்பது எனக்கு வியப்பாகவே இருக்கிறது. கொடுக்கக் கொடுக்க

அது வளரும் என்பதை நான் பையனுக இருந்தபோதிருந்தே அறிந்திருக்கிறேன். எனது செயல்கள் அந்த நம்பிக்கையைத் தான், புராதன சொத்தான அந்த மூலதனத்தைத் தான் அடிப் படையாகக் கொண்டு நடைபெற்று வந்திருக்கின்றன. அது ஒரு போதும் என்னைக் கைவிட்டதில்லை. இதனுல் கிணற்றுத் தவளை யாக இருக்கவேண்டும் என்பது பொருள் அல்ல. மேற்கு நாட்டி லிருந்து கிடைக்கும் ஒளியை நான் அனுகூலமான முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம்; இதற்கு எந்தவிதமான தடையும் இல்லை. ஆனுல் மேற்கு நாட்டுப் பகட்டில் மயங்கிவிடாது நான் கவனமாக இருக்கவேண்டும் என்பதுதான் முக்கியம். வெளிப் பகட்டை உண்மையான ஒளி என நான் தவருகக் கருதிவிடக் கூடாது. உண்மையான ஒளி உயிரூட்டும்; வெளிப்பகட்டோ மரணத்தைத்தான் கொடுக்கும்.

அத்தியாயம் 12

# சட்டசபை உறுப்பினர்களின் சம்பளம்

**கேள்வி :** ஒரு சட்டசபை உறுப்பினரின் மாதச் சம்பளம் ரூ. 200. அவர் வெளி ஊரிலிருந்து வரக்கூடியவராதலால், சட்டசபை கூடும்போது நாள் தோறும் ரூ. 15 படி பெற அவருக்கு உரிமை உண்டு. இதைத் தவிர, சட்டசபைக் கூட்டத்தில் கலந்து கொள்ளும் நாளன்று அவர் வண்டிச் சத்தத்திற்காக, ரூ. 2-50 படியாகப் பெற்றுக் கொள்ளலாம். மேலும் அவர் வழக்கமாகத் தங்கியிருக்கும் ஊரிலிருந்து (சட்டசபை நடை பெறும்) நகரத்திற்கு வர முதல் வகுப்புக் கட்டணத்தில் ஒன்றரை மடங்குத் தொகையைப் பிரயாணப் படியாகப் பெற உரிமை உண்டு. ஆனால் அவர் ஒரே நாளன்று, பிரயா ணப்படியும் நாள்படியும் சேர்ந்து பெற முடியாது.

(அ) இப்படிப்பட்ட ஒருவர், ஏழைகளின் பிரதிநிதி, ஊழி யர் என்ற முறையில் சம்பளம் பெறலாமா ?

(ஆ) இந்தப் பணம் முழுவதையுமே அவர் ஸ்தல காங்கி ரஸ் குழுவுக்கோ அல்லது அவர் எந்த ஸ்தாபனத்தின் கீழ் நிர்மாணவேலை செய்து கொண்டிருக்கிறாரோ அதற்கோ அளித்துவிட்டாரென்றால் அவர் குற்றமற்றவராய்விடுவாரா?

(இ) அப்படியென்றால், நல்ல இலட்சியத்தை அடைய எத்தகைய முறைகளையும் கைக்கொள்வது நியாயம் என்றாகி விடாதா ?

2. சட்டசபை கூடும்போது அவர் நகரில் தங்க வேண்டி யிருக்கிறது. ஒரு சட்டசபை உறுப்பினர் என்ற முறையில் தமது கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றி வைக்க வேறு சில செலவுகளையும் ஏற்கவேண்டியிருக்கிறது.

(அ) இப்படிப்பட்ட சூழ்நிலையில், அவர் தம்முடைய செலவுக்கு அன்றாடப்படி பெறுவது அவருடைய இலட்சியத் திற்கு ஏற்ற செயலாகுமா ?

(ஆ) இப் படியில் ஒரு பகுதியை மட்டும் வாங்கிக் கொள் வதை அனுமதிக்க மாட்டார்களென்றால், முழுவதையும் வாங்

கிக் கொண்டு, மீதத்தை அவர் எந்த ஸ்பானத்தின் கீழ்ப் பணிபுரிகிருரோ அதற்கு அளிக்க வேண்டுமா ?

(இ) அவ்வாருயின், குடும்பச் செலவுக்கு நண்பர்களின் தயவை எதிர்பார்த்திருக்கும் ஒருவர், இத்தொகையில் மீத முள்ளதையோ அல்லது ஒரு பகுதியையோ தனது குடும்பத் திற்குச் செலவிடுவது அவருடைய லட்சியத்திற்கு உகந்த தாகுமா ?

3. (அ) அன்ருடப் படியானது, போக்கு வரத்து வண்டிச் சத்தம் உட்பட, எல்லாச் செலவுகளுக்கும் போதுமானதாய் இருக்கும்போதும் அவர் வண்டிச் சத்தப் படியை (கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக, நகருக்குள் வண்டிகளில் செல்வ தற்காக ஏற்பட்ட படியை) அவர் பெற வேண்டுமா ?

(ஆ) வழக்கமாக டிராம்களிலும் பஸ்களிலும் போகும் ஒருவர், கூட்டங்களில் கலந்து கொள்வதற்கு அதிகச் செல வாகும் வாகனங்களைப் பயன்படுத்தலாமா ?

4. இப்படிப்பட்ட ஒருவர் கொள்கைக்காக மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்கிருர் என்று வைத்துக் கொள்ளுங் கள். ஒன்றரை மடங்கு முதல் வகுப்புக் கட்டணத்திற்கும் குறைவாக அவர் பிரயாணப் படி பெறுவது அனுமதிக்கப்படுவ தில்லை என்றும் வைத்துக்கொள்ளுங்கள். அப்போது (மைல் கணக்கை அடிப்படையாக வைத்து அளிக்கப்படும்) பிரயாணப் படி விஷயத்தில் என்ன செய்ய வேண்டும் ?

பதில் : பல்வேறு சட்டசபைகளிலும் உள்ள கனவான்கள் பெறும் ஊதியமும் பயணப் படியும் அவர்கள் நாட்டிற்குச் செய்யும் சேவைக்குப் பொருந்தாதது மட்டுமின்றி மிகவும் அதிகமாக இருக்கின்றன என்பதே எனது கருத்து. ஆங்கில முறைப்படி இந்த விகிதங்கள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விகிதங்களுக்கும் நாட்டின் வருமானத்திற்கும் எவ்விதப் பொருத்தமும் இல்லை. இந்த நாடு உலகத்திலேயே ஏழை நாடு. ஆகவே இந்தக் கேள்விக்கு நான் கூற விரும்பும் பதில் ஒன்றுதான். அமைச்சர்கள், சட்டசபைகளின் சம்மதத் தைப்பெற்று, நம் தேவைக்கு ஏற்றவாறு இவ்விகிதங்களைக் குறைக்கவேண்டும். இதற்கிடையில், அவர் பெறும் தொகை யில் அவர் கட்சி என்ன நிர்ணயிக்கிறதோ அதை மட்டும் எடுத்துக் கொண்டு, மீதத்தைக் கட்சிக்கு அளித்துவிடவேண் டும். இது சாத்தியமில்லையென்ருல், தமக்கும் தம்முடைய குடும்பத்திற்கும் தேவையென்று அவருடைய மனச்சாட்சி

அனுமதிக்கும் அளவு எடுத்துக் கொண்டு, மீதத்தை ஏதாவதொரு நிர்மாண வேலை அல்லது பொது வேலைக்கு அளித்து விடவேண்டும். அனுமதிக்கப்பட்ட தொகையை வாங்கித் தாளுக வேண்டியிருக்கிறது. ஆனல் எந்த அளவு தமக்குத் தேவையோ அந்த அளவிற்கு மேல் யாரும் அதை எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற கட்டாயமில்லை. இலட்சியம் முக்கியமா, அதை அடைவதற்கான முறைகள் முக்கியமா என்ற பிரச்னை எதுவும் இங்கு எழவில்லை.

பகுதி ஐந்து

# சட்டசபை உறுப்பினர்களுக்கு எச்சரிக்கை

## அத்தியாயம் 13

## ஒரு பயங்கர நிகழ்ச்சி

எனக்கு வரும் தபாலில் அரசியல் நிர்ணயசபை உறுப்பினராக விரும்புவோருடைய கடிதங்கள் பல இருக்கின்றன. இந்தக் கடிதங்கள் நாட்டில் உள்ள பொதுவான நிலையைப் பிரதிபலிப்பதாக இருந்தால், இந்தியாவின் சுதந்திரத்தைவிடச் சொந்த செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வதிலேயே படித்தவர்கள் அதிக ஆர்வமுள்ளவர்களாய் இருக்கிறார்கள் என்ற ஐயப்பாட்டைத்தான் இவை எனக்கு ஏற்படுத்துகின்றன. தேர்தலுக்கு அபேட்சை மனுப்போடுவோருக்கும் எனக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை. ஆயினும் எனக்கே இத்தனை கடிதங்கள் வருவதானால், காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களுக்கு இன்னும் எத்தனை கடிதங்கள் வந்து கொண்டிருக்குமோ? 'இப்படிப்பட்ட தேர்தல்களில் நான் அக்கறை செலுத்துவதில்லை. இந்த மனுக்கள் ஆராயப்படும் கூட்டங்களுக்கும் நான் செல்வதில்லை. யார் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைப் பத்திரிகை வாயிலாகவே பெரும்பாலும் தெரிந்து கொள்கிறேன்' என்பதையெல்லாம் இந்தக் கடிதங்களை எழுதியவர்கள் அறிய வேண்டும். அபூர்வமான ஒரு சில சந்தர்ப்பங்களில்தான், யாரைத் தேர்ந்தெடுக்கலாம் என்பது குறித்து என்னுடைய ஆலோசனை கேட்கப்படுகிறது. இந்நிலையில் நான் குறுக்கிட்டு உதவுவேன் என்று யாரும் நம்பிக்கை கொள்ளவேண்டாம் என்று எச்சரிப்பதைவிட, இந்த மனுக்களெல்லாம் எந்த நோயின் சின்னமாக இருக்கின்றன என்பதை அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவருவதற்காகவே இந்தக் கட்டுரையை எழுதுகிறேன். இப்படிப்பட்ட தேர்தல்களில் வகுப்புவாத அடிப்படையில் சிந்திப்பது தவறு — அரசியல் நிர்ணய சபை

உறுப்பினராகத் தமக்குப் போதிய தகுதி இருப்பதாக யாரும் நினைப்பதும் தவறு. தேர்தல்மூலம் கௌரவம் வருவதாக எண்ணு வது முற்றிலும் தவறு. கடைசியாக, சட்டசபை நடைபெறும்போது ஒரு சில ரூபாய்கள் சம்பாதிப்பதற்கான பதவி இது என்று கருது வதும் தவறு. உலகெங்கிலும் உள்ள அரசியல் சட்டங்களைப் பற்றி ஓரளவாவது அறிந்தவர்கள்தான், அதற்கெல்லாம் மேலாக, இந்தியாவின் கலாச்சாரத்துக்குத் தேவையான அரசியல் சட் டத்தை அறிந்தவர்கள்தான் அரசியல் நிர்ணய சபையில் உறுப் பினர்களாக வேண்டும். சபையில் இடம்பெறுவதில்தான் உண் மையான சேவை அடங்கி இருக்கிறது என்று எண்ணுவது இழி வாகும். உண்மையான தொண்டு வெளியில்தான் இருக்கிறது. வெளியே தொண்டு செய்வதற்குள்ள வாய்ப்பு எல்லையற்றது. தற்போது அமைக்கப்படுவதுபோன்ற ஒரு சபை விடுதலைப் போராட்டத்தில் வரும் ஒரு கட்டம். எனினும் அது மிகச் சிறிய பங்கே வகிக்கிறது. அதிலும், நாம் அதை விவேகமாகவும் நல்ல முறையிலும் பயன்படுத்திக் கொண்டால்தான் பயன் உண்டு. அதில் ஒரு இடத்தைப் பெறுவதற்காகச் சண்டை நடைபெறுவ தாளுல் நிச்சயமாக அதனுல் பலன் இராது. பதவி ஆசை கொண்ட வர்கள் வேட்டையாடும் இடமாக அது ஆகிவிடும் என்ற அச் சத்தையே இந்தப் போட்டி மெய்ப்பிக்கிறது. பாராளுமன்ற நடவடிக்கையிலிருந்து இயல்பாக உருவாவதுதான் அரசியல் நிர்ணய சபை என்பதை நான் மனமார ஒப்புக்கொள்கிறேன். காலஞ்சென்ற தேசபந்து சித்தரஞ்சன் தாசும், பண்டித மோதிலால் நேருவும் மேற்கொண்ட முயற்சியானது என் கண்களைத் திறந்து, விடுதலைக்கான தேசிய நடவடிக்கையில் பாராளுமன்ற முறைத் திட் டத்திற்கு ஒரு இடம் உண்டு என்ற உண்மையை அறியுமாறு செய் தது. அதற்கு எதிராக நான் எவ்வளவோ முயற்சி செய்தேன். தூய ஒத்துழையாமைத் தத்துவத்துடன் அது நிச்சயமாகப் பொருந்தாது. ஆனுல் தூய ஒத்துழையாமை ஒருபோதும் இருந்ததில்லை. இருந் ததும் மங்கி மறைந்துவிட்டது. காங்கிரசில் எல்லோரும் அகிம்சா பூர்வமான ஒத்துழையாமையைக் கடைப்பிடித்திருந்தால் பாராளு மன்றத் திட்டம் என்ற ஒன்றே இருந்திருக்காது. அஹிம்சாபூர்வ மான ஒத்துழையாமை என்பதற்கு, நல்லனவற்றுடனெல்லாம் ஒத்துழைப்பது என்பது பொருள். ஆகையால், வெளிநாட்டு அரசுடன் அகிம்சாபூர்வமான ஒத்துழையாமை என்பதற்கு அகிம்சாபூர்வமான சுதேசி அரசாங்கம் என்பதே பொருள். இப்படிப்பட்ட முழு ஒத்துழையாமை இருந்திருந்தால், இன்று அகிம்சையை ஆதாரமாகக்கொண்ட சுயராஜ்யம் நடைபெற்றுக்

கொண்டிருக்கும். ஆனல் இது ஒருபோதும் நடைபெறவில்லே. ஆகையால் நாட்டிற்கு எது பழக்கமானதோ அதை, நாட்டை எதிலிருந்து வேறு பக்கம் திருப்பமுடியாதோ அதை எதிர்த்துப் போராட்டம் நடத்துவது வீணேயாகும். பாராளுமன்றத் திட்டத் திற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டு விட்டது. ஆகவே, இந்த முயற்சியைப் பகிஷ்கரிப்பது சரியல்ல. ஆனல் இதற்கு அரசியல் நிர்ணய சபையில் உள்ள இடங்களே நிரப்புவதற்குக் கண்ணிய மற்ற முறையில் போட்டியிட வேண்டுமென்று பொருளல்ல. நமக்குள்ள எல்லே வரம்புகளே நாம் உணர்ந்து கொள்வோமாக!

அத்தியாயம் 14

# லைபசாக்களில் சிக்கனம் வேண்டும்

**எழுதும் சாதனங்கள் :** சட்டசபைகளில் உள்ள கௌரவ உறுப்பினர்கள், தங்களுடைய சொந்த உபயோகத்துக்காகக் கூட மிகவும் விலை உயர்ந்த பளபளப்பான காகிதங்களைப் பயன் படுத்துவதை காண்கிறேன். நான் அறிந்தவரை, நண்பர் களுக்கோ, உறவினர்களுக்கோ கடிதங்கள் எழுதுவது போன்ற சொந்த காரியங்களுக்கு, அலுவலகத்தைச் சேர்ந்த சாதனங்களைப் பயன்படுத்தக் கூடாது. தங்களைத் தேர்ந்தெடுத்த மக்களுக்குக் கூடப் பொது விவகாரம் சம்பந்தப்படாதவற்றைப் பற்றி எழுதுவ தானல் இச்சாதனங்களைப் பயன்படுத்தக் கூடாது. நான் அறிந்த வரை, உலகின் எல்லாப் பகுதிகளிலுமே இவ்விதம் செய்வது ஆட்சேபிக்கப்பட்டு வருகிறது.

### அடையாளம் வேண்டும்

ஆனல் இந்த ஏழை நாட்டைப் பொறுத்தவரை என்னுடைய ஆட்சேபணை இன்னும் ஆழமானது, நான் குறிப்பிடும் எழுதும் சாதனங்கள் அளவுக்கு மீறிய விலையுள்ளவையாகும். உலகத்தி லேயே அதிகம் செலவழிக்கமுடிந்த ஒரு நாட்டைச் சேர்ந்த வர்கள் ஆங்கிலேயர்கள். நம்மிடம் அச்சத்தை ஏற்படுத்தி அதை வைத்துச் செழிப்பாக வாழ்ந்தவர்கள். அவர்கள்தான் அலுவலகங் களுக்காகவும் பங்களாக்களுக்காகவும் விலை உயர்ந்த, பெரிய கட்டிடங்களைக் கட்டினர்கள். அவைகளைப் பரிபாலனம் செய்ய வேலைக்காரர்களும், அவர்களைச் சார்ந்திருப்பவர்களுமாக ஒரு படையே அவர்களுக்குத் தேவையாக இருக்கிறது. அவர்க ளுடைய நடையுடைபாவனைகளையும் பழக்கவழக்கங்களையும் நாம் அப்படியே பின்பற்றினேமாயின், நாம் அழிவுக்குள்ளாவதன்றி இந்த நாட்டையே அழிவை நோக்கி அழைத்துச் செல்பவர்களா வோம். படையெடுத்து வெற்றிகண்டவர்கள் செய்ததால் மக்களால் சகித்துக்கொள்ளப்பட்டவற்றை நாம் செய்தால் யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். மேலும் காகிதப் பற்ருக் குறை வேறு இருக்கிறது. ஆகையால், அதிகச் செலவுள்ள இந்தப் பழக்கவழக்கங்களையெல்லாம் நாம் விட்டு விடவேண்டும் என்று கருதுகிறேன். நாகரி அல்லது உருது எழுத்துக்களில் சாதாரண

மாக விலாசங்கள் பொறிக்கப்பட்ட, கையால் செய்யப்பட்ட காகிதங்களையே நாம் உபயோகிக்க வேண்டும். ஏற்கனவே முத்திரையடிக்கப்பட்ட அலங்காரமான காகிதங்களை எளிதாக வெட்டி, வேறு சிறந்த காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொள்ளலாம். சிக்கனம் என்று கூறிக்கொண்டு அவைகளைப் பயன்படுத்தக் கூடாது. விலை உயர்ந்த பொருள்கள், வெளிநாட்டுப் பொருள்கள் தீரும் வரை, கிராமங்களில் உற்பத்தியான பொருள்கள் நிச்சயமாகக் காத்திருக்க முடியாது. பொதுமக்களுடைய ஆதரவு பெற்ற அரசாங்கங்கள் பதவிக்கு வந்ததற்கு ஒரு அடையாளம் வேண்டாமா? மக்கள் விரும்பக்கூடிய நடவடிக்கைகளை எடுப்பதும் சிக்கனமான பழக்க வழக்கங்களை மேற்கொள்வதுமே இந்த அடையாளமாக இருக்கவேண்டும்.

அத்தியாயம் 15

# எச்சரிக்கையாக இருப்போம்

## 1. ஆந்திராவிலிருந்து ஒரு கடிதம்

ஆந்திராவிலிருந்து வந்த ஒரு கடிதத்தை காந்திஜி குறிப்பிட்டு, முக்கியமான கீழ்க்கண்ட பகுதிகளையும் அதிலிருந்து கொடுத்துள்ளார் :

"ஒரு தனிப்பட்ட மனிதரின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுவதை நான் வெறுக்கிறேன். ஆனல், காங்கிரஸ் ஒரு உயர்ந்த நோக்கத்திற்காகத் தோன்றியது ; அதனுடைய சாதனைகள் அற்புதமானவை. அப்படிப்பட்ட ஒரு அமைப்பைச் சேர்ந்த தனிப்பட்ட மனிதர்களிடம் காணப்படும் ஊழல்களால் பயங்கரமான விளைவுகள் ஏற்படும். இவைகளைக் கண்டு கண்ணை மூடிக்கொள்வது கொடிய பாவமாகும். காங்கிரசில் ஏற்பட்டுள்ள இந்தச் சீர்கேட்டிற்கு, மாகாண சட்டசபைகளில் உள்ள மக்கள் பிரதிநிதிகளே பொறுப்பாளி. நாளுக்குநாள் அதிகமாகப் பரவிக் கொண்டிருக்கும் லஞ்ச ஊழலை நிறுத்துவதைப்பற்றி அவர்கள் உரக்கச் சத்தம் போடுகின்றனர். ஆனல் அவர்களே அதைக்காட்டிலும் மோசமான லஞ்ச ஊழலுக்குக் காரணமாக இருக்கின்றனர். எந்த விதமான லைசென்ஸ் வழங்குவதற்கும் அவர்கள் மக்களிடமிருந்து பணம் வாங்குகின்றனர். மிக மோசமான கள்ள மார்க்கெட் வியாபாரத்தில் ஈடுபடுகின்றனர். பொது மக்களுடைய அறியாமையை பணயமாகவைத்து பேரம் செய்கின்றனர். நீதி மன்றங்களிலும் ஊழல் பரவும்படி செய்கின்றனர். நிருவாக அலுவலரை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றுமாறு நிர்ப்பந்தப்படுத்துகின்றனர். இந்த இரு சாராரின் மத்தியிலும் அகப்பட்டு மக்கள் நசுங்குகிறார்கள். ஒரு மாகாணத்தில் எவ்வித எதிர்ப்புமின்றி, இவ்வாறு இருநூற்று ஐம்பது சட்டசபை உறுப்பினர்களைக் கட்டவிழ்த்து விடுவது மிக மோசமான "பிளேக்" நோயைவிடக் கொடுமையானது என்பது எனது கருத்து. வெள்ளையர்களின் கொள்ளையை அகற்றிவிட்டு அந்த இடத்தில் கறுப்பர்களின் கொள்ளைக்கு இடம் கொடுக்கவா இன்று நம்மிடையே இல்லாத பல புனித ஆன்மாக்கள், தங்களுடைய வாழ்க்கையில் பல இன்னல்களுக்கு ஆளாயினர்? அதற்காகவா வாழ்க்கையின் இன்பங்களைத் தியாகம் செய்தனர்? இந்தச் சேற்றிலிருந்து நாம் எப்படியாவது வெளியேறியாக வேண்டும். சட்ட சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை இவ்வளவு அதிகமாக இல்லாவிட்டால், இத் தீமைகள் இன்னும் குறைவாக இருக்கும். மொழிவாரி மாகாணப் பிரிவினைக்குப் பின் மாகாணங்களின் அளவு சிறியதாக இருக்கும். அப்போது கீழ் சபையில் 50 உறுப்பினர்களும் மேல் சபையில் 25 உறுப்பினர்களும் இருந்தால் இந்தத் தொல்லை குறையும். சட்ட சபை உறுப்பினர்கள் எவ்வளவு குறைவாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கு நல்லது என்ற இந்தக் கொள்கையை, அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள் நமது அரசியல் சட்டத்தில் ஏற்று, பேராசை பிடித்த இந்தச் சட்ட சபை உறுப்பினர்களிடமிருந்து நம்மைக் காப்பாற்றுவார்களா ? அவ்வாறு செய்தார்களானல் அதன் பலனக அளவுக்கு மீறிய அரசாங்கச் செலவிலிருந்தும் நம்மைக் காப்பாற்றியவர்களாவார்கள்.

## நாட்டின் நலனே பெரிது

இந்தக் கடிதம் சரியானதுதான் என்பதற்கு ஆந்திராவைச் சேர்ந்த ஒரு வயதான பழைய நண்பர் சான்று கூறியிருந்தார். காங்கிரஸ்காரர்களோ, சோஷலிஸ்டுகளோ அல்லது பொதுவுடைமையர்களோ யாராயிருந்தாலும் இந்தியாவின் நலனுக்காக வாழவும் உழைக்கவும் வேண்டும். அவர்கள் எல்லோருமே பதவியை நோக்கி ஓடினுல், இந்தியாவுக்கு என்ன கதி ஏற்படும்? தங்களுடைய சொந்த நலன் அல்லது நண்பர்களின் நலனைவிட நாட்டின் நலனையே அவர்கள் எண்ணவேண்டும்.

## தன்னைத்தான் தூய்மைப்படுத்திக்கொள்ள அழைப்பு

ஆந்திராவிலிருந்து வந்த இரண்டு கடிதங்களைப் பற்றி நேற்றே நான் உங்களுக்குக் கூறினேன். இவைகளில், ஒன்று வேறு யாரிடமிருந்தும் வந்ததல்ல, என்னுடைய வயதான நண்பர் பக்த கோண்டா வெங்கடப்பய்யா காருவிடமிருந்து வந்தது. அதிலிருந்து சில பகுதிகளை இங்கே தருகிறேன்:

"மிகச் சிக்கலான எத்தனையோ அரசியல், பொருளாதாரப் பிரச்னைகள் இருக்கின்றன. அவற்றைத் தவிர, மற்றொரு பெரிய பிரச்னை காங்கிரஸ் வட்டாரங்களைச் சேர்ந்தவர்களிடையே ஏற்பட்டுள்ள தார்மிக வீழ்ச்சியாகும். மற்ற மாகாணங்களைப் பற்றி நான் அதிகமாக எதுவும் சொல்ல முடியாது. ஆனுல் என்னுடைய மாகாணத்தில் நிலைமை மிகவும் வருந்தத்தக்கதாய் இருக்கிறது. அரசியல் அதிகாரத்தை ருசி பார்க்க ஆரம்பித்ததால் அவர்கள் தலையே சுழல ஆரம்பித்துவிட்டது. கீழ் சபை, மேல் சபை உறுப்பினர்களில் பலர் காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளவேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறுர்கள். தங்களுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி இவர்கள் பணம் சம்பாதிக்கிறுர்கள். மாஜிஸ்திரேட்டுகள் தலைமை தாங்கும் கிரிமினல் நீதி மன்றங்களில் நீதி வழங்குவதைத் தடை செய்துகூட இவர்கள் பணம் சம்பாதிக்க முற்படுகிறுர்கள். கீழ் சபை, மேல்சபை உறுப்பினர்கள் தங்களுடைய கட்சிக்காரர்களுக்கு ஆதரவாக அடிக்கடி குறுக்கிடுவதால், மாவட்டக் கலெக்டர்களும் மற்ற ரெவினியூ அதிகாரிகளும் தங்களுடைய கடமைகளைச் சுதந்திரமாகச் செய்ய முடிவதில்லை. ஒரு கண்டிப்பான, நாணயமான அதிகாரி தனது பதவியைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. ஏனென்ருல், அவரைப்பற்றி அமைச்சர்களுக்குத் தவருன கருத்துக்கள் தெரிவிக்கப்படுகின்றன. அமைச்சரோ கொள்கையற்ற சுயநலவாதிகளான இவர்களுடைய கூற்றுக்கு எளிதாகச் செவி சாய்க்கிருர்.

"சுயராஜ்யம் வேண்டுமென்ற ஒரே வெறிதான், ஆண்களும் பெண்களும் உங்கள் தலைமையைப் பின்பற்றுமாறு செய்தது. ஆனுல் இப்போதோ அந்த இலட்சியத்தை நாம் அடைந்துவிட்டோம். ஆகையால் அந்தப் பெரும் போராட்டத்தில் பங்குகொண்ட வீரர்களுக்கு எல்லாவிதமான தார்மிகக் கட்டுப்பாடுகளிலிருந்தும் கட்டவிழ்த்து விட்டதுபோல் ஆய்விட்டது. ஆகவே இவர்கள் இப்

போது தேசீய இயக்கத்திற்கே பரம விரோதிகளாக இருந்தவர்களுடன், தங்களுடைய சொந்த இலாபத்துக்காக காங்கிரசில் சேர முன்வருபவர்களுடன் ஒன்று சேருகின்றனர். நிலைமை நாளுக்கு நாள் சகிக்கவொண்ணுததாக இருக்கிறது. ஆகையால் காங்கிரசுக்கும் காங்கிரஸ் அரசாங்கத்திற்கும் கெட்ட பெயர் வந்துவிட்டது. மக்களிடம் உள்ள செல்வாக்கைக் காங்கிரஸ் எவ்வளவு வேகமாக இழந்துவருகிறது என்பதை அண்மையில் ஆந்திராவில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்கள் எடுத்துணர்த்திவிட்டன. குண்டூர் நகரத்தில் நகரசபைத் தேர்தல்கள் நடைபெறுவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு முடிந்துவிட்டன. அந்தச் சமயத்தில், திடீரென்று அந்தத் தேர்தல்களை நிறுத்திவைக்குமாறு சென்னை ஸ்தல ஸ்தாபன அமைச்சரிடமிருந்து ஒரு அவசர உத்தரவு வந்தது. கடந்த பத்து ஆண்டுகளுக்கும் மேலாக அங்கு அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட ஒரு சபையே பதவியில் இருந்தது என்று நினைக்கிறேன். ஒரு ஆண்டாகத்தான் அந்நகர சபையின் நிருவாகப் பொறுப்பு ஒரு கமிஷனரிடம் வந்தது. இந்நகரசபைப் பொறுப்பை ஏற்க விரைவில் உறுப்பினர்களை அரசாங்கம் நியமிக்கும் என்று இங்கு பேச்சு அடிபடுகிறது. நான் வயதானவன், முதுமையால் தளர்ச்சியடைந்துவிட்டேன். என்னுடைய ஒரு கால் முறிந்துவிட்டது. வீட்டிற்குள்ளேயே மரக்கால்களை வைத்து நடந்து கொண்டிருக்கிறேன். ஆகையால் இதில் எனக்கு மறைமுகமான சொந்த இலாபநோக்கு எதுவும் கிடையாது. தற்போது சில மாநில, மாவட்ட காங்கிரஸ் குழுக்களுக்குள்ளேயே பிளவு ஏற்பட்டு விட்டது. அவைகளைப் பற்றிக் கடும் மாறுபாடான கருத்துக்கள் எனக்கு உண்டு. அதை நான் இரகசியமாக வைத்துக்கொள்ளவில்லை.

## கிளர்ச்சி மனப்பான்மை

"காங்கிரஸ் வட்டாரங்களுக்கு உள்ளே இருக்கும் பிளவுகள், கீழ் சபை, மேல் சபை உறுப்பினர்கள் பலர் பணம் ஈட்டும் நடவடிக்கைகளில் ஈடுபடுதல், அமைச்சர்களின் பலவீனம் ஆகிய எல்லாமே மக்கள் மத்தியில் ஒரு கிளர்ச்சி மனப்பான்மையை உருவாக்கியிருக்கின்றன. 'பிரிட்டிஷ் அரசாங்கம் எவ்வளவோ தேவலையே' என்று மக்கள் பேசத் தொடங்கிவிட்டார்கள். அத்துடன் இப்போது காங்கிரசைச் சபிக்கவும் ஆரம்பித்துவிட்டார்கள்."

தன்னலத்தைத் தியாகம் செய்த இந்த இந்திய ஊழியரின் சொற்களை ஆந்திர மக்களும் மற்ற மாநில மக்களும் எண்ணிப்பார்க்கட்டும். அவர் வர்ணித்துள்ள இந்த லஞ்ச ஊழல் ஆந்திராவின் ஏகபோக உரிமையல்ல என்று அவர் கூறுவது முற்றிலும் சரி. ஆனால் ஆந்திராவைப் பற்றித்தான் அவர் நேரடியான சாட்சியம் அளிக்க முடியும். நாம் எச்சரிக்கையுடன் இருப்போமாக.

அத்தியாயம் 16

# காங்கிரசில் லஞ்ச ஊழல்

பதவி ஏற்பது இருக்கிறதே அது அதிகக் கௌரவம் பெறுவதற்கான ஒரு படி. அது கௌரவம் முழுவதையுமே இழந்துவிடுவதற்கான ஒரு படியுமாகும். பூரணமாக நாம் நமது கௌரவத்தை இழந்துவிடக்கூடாது என்ருல், அமைச்சர்களும் மற்ற சட்ட சபை உறுப்பினர்களும் தங்களுடைய சொந்த நடத்தையிலும் பொது நடத்தையிலும் எச்சரிக்கையாய் இருக்கவேண்டும். சீசரின் மனைவியைப் போன்று, எந்தக் காரியத்திலுமே அவர்கள் பிறருடைய சூழ்ச்சிக்கோ பிறருக்குச் சந்தேகம் ஏற்படவோ இடம் கொடுத்து விடக்கூடாது. தங்களுக்கோ தங்களுடைய உறவினர் அல்லது நண்பர்களுக்கோ அவர்கள் தனிப்பட்ட முறையில் இலாபம் தேடிக் கொடுக்கக்கூடாது. அவர்களுடைய உறவினர் அல்லது நண்பர்களுக்கு ஏதாவது பதவி அளிப்பதானல், வந்திருக்கக் கூடிய அபேட்சகர்களில் அவர்கள் மிகச் சிறந்தவர்களாக இருக்கவேண்டும். அரசாங்கத்தில் அவர்கள் எந்தச் சம்பளம் பெறப்போகிருர்களோ அதைக் காட்டிலும் அதிகச் சம்பளம் வெளியே போனல் அவர்களுக்கு எப்போதுமே கிடைக்கும் என்ற நிலை இருக்கவேண்டும். காங்கிரஸ் அபேட்சையைப் பெற்று சட்டசபை உறுப்பினர்களாகவும் அமைச்சர்களாகவும் ஆனவர்கள், தங்களுடைய கடமையை ஆற்றுவதில் அஞ்சாநெஞ்சம் படைத்தவர்களாக இருக்கவேண்டும். அவர்கள் தங்களுடைய சட்ட சபைப் பதவியையோ அல்லது அமைச்சர் பதவியையோ இழப்பதற்கு எப்போதும் தயாராய் இருக்கவேண்டும். காங்கிரசின் பெருமையையும் பலத்தையும் உயர்த்துவதற்கான திறன் படைத்தவர்களாய் இருக்கவேண்டும். இது இல்லையேல், சட்டசபைப் பதவிகளிலோ அமைச்சர் பதவிகளிலோ ஒரு மதிப்பும் இல்லை. காங்கிரசின் கௌரவம், பலம் ஆகிய இரண்டும் உயர்வது ஒழுக்க நெறியைக் கடைப்பிடிப்பதையே முற்றிலும் பொறுத்திருக்கிறது. தனிப்பட்ட வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் நாம் ஒழுக்க நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆகவே ஒழுக்கம் குறைந்தது என்ருல், அது காங்கிரசுக்கு ஒரு பலத்த அடியாகும். அகிம்சையை நாம் கடைப்பிடிக்கிருேம் என்பதற்கு இன்றியமையாத அடையாளம் இதுதான்!

## சட்டசபையில் கட்டுப்பாடின்மை

மத்திய மாகாண சட்டசபையில் பார்வையாளர்கள் கூட்டத்தில் ததும்பி வழியும் அளவுக்குக் கூட்டம் இருந்ததாகவும், அக்கூட்டத்தினர் ஸ்ரீ ராகவேந்திர ராவை எதிர்த்து விரும்பத் தகாத முறையில் ஆரவாரம் செய்ததாகவும் "டெய்லி பிரஸ்" செய்தி கூறுகிறது. பார்வையாளர்கள் இடத்தில் இருந்தவர்கள் ஒன்று காங்கிரஸ்காரர்களாய் இருந்திருக்க வேண்டும், அல்லது காங்கிரஸ் அனுதாபிகளாக இருந்திருக்கவேண்டும் என ஊகிக்க இடமுண்டு. நாம் விரும்பும் முறையில் முழு விடுதலை கிடைத்துவிட்ட பின்புங்கூட அரசியல் கட்சிகள் இருக்கத்தான் செய்யும் என நான் நம்புகிறேன். இந்தக் கட்சிகள் ஒன்றை ஒன்று சகித்துக் கொள்ளாவிட்டால், அல்லது, ஒன்றுக்கொன்று சாதாரணமாக காண்பித்துக் கொள்ள வேண்டிய அளவு மரியாதை கூடக் காண்பிக்காவிட்டால் நம் நிலைமை என்ன ஆவது ?

இந்தத் தேசம் முழுவதற்கும் தான்தான் பிரதிநிதி என்று காங்கிரஸ் கூறுகிறது. ஆகவே, அது தனது அரசியல் எதிரிகளிடமோ அல்லது மற்றவர்களிடமோ சகிப்புத்தன்மையில்லாமல் நடந்து கொள்ள முடியாது, தான் ஒரே அனைத்திந்திய ஸ்தாபனமாக இருப்பதானல்—நிச்சயமாக அது அப்படித்தான் இருக்கிறது. எல்லா நலன்களுக்கும் அது பிரதிநிதியாக விளங்க வேண்டும். ஸ்ரீ ராகவேந்திர ராவிற்கும் அது பிரதிநிதியாக இருக்கிறது—ஒரு காலத்தில் ஸ்ரீ ராகவேந்திர ராவ் மதிப்பிற்குரிய காங்கிரஸ் உறுப்பினராக இருந்திருக்கிருர். அவர் எந்தத் தொகுதியில் தேர்தலுக்கு நின்ருரோ அத்தொகுதியில் போடப்பட்ட வாக்குகளில் திருட்டு நடைபெற்றிருக்கலாம். அவ்வாறு திருட்டு நடைபெற்றிருந்தால் சட்டம் அதைப் பார்த்துக் கொள்ளும். ஆனல் அவர் குற்றவாளி என்று மெய்ப்பிக்கப்படும் வரை அவர் நேர்மையானவர் என்றே நாம் கொள்ளவேண்டும். அவர் குற்றவாளி என்று மெய்ப்பிக்கப்பட்டாலுங்கூட, அவருக்கு எதிராக விரும்பத்தகாத முறையில் ஆர்ப்பாட்டம் செய்வதற்கு அக்குற்றம் ஒரு காரணமாகாது.

### ஜனநாயக விரோதம்

சகிப்பின்மை, அவமரியாதை, கொடுமையாகப் பேசுதல் ஆகியவைகளெல்லாம் காங்கிரஸ் கட்டுப்பாட்டுக்கு விரோதமானவை என்பது மட்டுமல்லாது, எல்லா வகையான நல்ல சமுதாயத்திலும் விலக்கப்பட வேண்டியவையாகும். நிச்சயமாக, அவை ஜனநாயக உணர்ச்சிக்கு முரணனவை.

பகுதி ஆறு

# வாக்குகள், வாக்குரிமை, சட்டசபை

அத்தியாயம் 17

## சட்டசபை உறுப்பினர்களும் வாக்காளர்களும்

சட்டசபை உறுப்பினர்கள் எசமானர்களல்ல, அவர்களைத் தேர்ந்தெடுத்தவர்களின், அதாவது தேசத்தின் ஊழியர்களே!

ஒரு குறிப்பிட்ட அளவு ஆண்களும் பெண்களுந்தான் சட்ட சபை உறுப்பினர்கள் ஆகமுடியும்; 1500 பேர் உறுப்பினர்கள் ஆக முடியும் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்படியானல் இந்தக் கூட்டத்திலிருந்து எத்தனை பேர் சட்டசபை உறுப்பினர்களாக முடியும்? இப்போது இந்த 1500 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க $3\frac{1}{2}$ கோடிப் பேர்கள்தான் - அதற்கு மேலல்ல - வாக்களிக்க முடியும். மீதியுள்ள $31\frac{1}{2}$ கோடி மக்களின் நிலை என்ன? நம் கருத்துப்படி, சுதந்திர இந்தியாவில் அவர்கள்தான் உண்மையான எசமானர்கள். மேற்கண்ட $3\frac{1}{2}$ கோடிப்பேரும் அவர்களுடைய ஊழியர்கள். இந்த $3\frac{1}{2}$ கோடிப் பேரே மேற்கண்ட 1500 உறுப் பினர்களின் எசமானர்கள். ஆகையால் தங்கள் மீது வைக்கப்பட்ட நம்பிக்கையை இந்த உறுப்பினர்கள் காப்பாற்றவேண்டுமானல், மேற்கண்ட இரு சாராருக்கும் ஊழியம் செய்ய வேண்டியிருக்கிறது.

ஆனல், இந்த $31\frac{1}{2}$ கோடி மக்களும் தங்களுக்கே ஆற்றவேண் டிய பொறுப்பு உண்டு. தனிப்பட்ட மனிதர்கள் என்ற முறையில் அவர்கள் எந்த நாட்டின் சிறு சிறு அங்கங்களாக இருக்கிறார்களோ அந்தச் தேசத்துக்கு அவர்கள் ஆற்றவேண்டிய பங்கு உண்டு. அவர்கள் சோம்பேறிகளாக இருந்தால், சுயராஜ்யத்தைப் பற்றியோ அதை எவ்வாறு அடைவது என்பதைப்பற்றியோ அறியா தவர்களாய் இருந்தால், அவர்களே இந்த 1500 சட்டசபை உறுப்

பினர்களுக்கும் அடிமைகளாகிவிடுவார்கள். வாக்காளர்களாகிய 31½ கோடிப் பேரும் இந்த 31½ கோடி மக்களைப் போன்றவர்களே என்று வாதத்திற்காக வைத்துக் கொள்வோம். அவர்கள் சுறுசுறுப்பானவர் களாகவும் விவேகமானவர்களாகவும் இல்லாவிட்டால், அந்த 1500 சூதாட்டக்காரர்கள் கையில் அகப்பட்ட சூதாட்டக் காய்களாகவே அவர்கள் அத்தனைபேரும் இருப்பார்கள். ஆகவே அவர்கள் காங் கிரஸ்காரர்களா, அல்லாதவர்களா என்பது முக்கியமல்ல. ஒவ் வொரு மூன்று ஆண்டுகள் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு ஒரு முறை தங்களுடைய வாக்குகளைப் பதிவு செய்யும்போதுதான் வாக்காளர்கள் விழிப்படைவார்கள், அப்புறம் தூங்கப் போய்விடு வார்கள்என்ருல், அவர்களுடைய வேலைக்காரர்கள்தான் அவர்களு டைய எசமானர்களாகி விடுவார்கள்!

## அதிகாரம் யாரிடம் இருக்கிறது?

சட்ட சபைகள் மூலமாகத்தான் அதிகாரம் கிடைக்கும் என்று நீண்ட காலமாக எண்ணி எண்ணி நமக்குப் பழக்கமாகப் போய் விட்டது. இந்த நம்பிக்கை ஒரு மாபெரும் தவறு, சோம்பேறித்தனத் தாலும் மயக்கத்தாலும் ஏற்பட்டது என்று நான் கருதி வந்திருக் கிறேன். பிரிட்டனுடைய வரலாற்றை மேற்போக்காகப் படித்தது, எல்லா அதிகாரங்களுமே பாராளுமன்றங்களிலிருந்து மக்களுக்கு வருவதாக நம்மை எண்ணச் செய்திருக்கிறது. உண்மை என்ன வென்ருல், அதிகாரம் மக்களிடையே இருக்கிறது. அவர்கள் யாரைத் தங்களுடைய பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கிருர்களோ அவர்களிடம் அது தற்காலிகமாகச் செல்கிறது. மக்களைச் சாராமலும் மக்களுக்குப் புறம்பாகவும் பாராளுமன்றங்களுக்கு ஒரு அதிகாரமும் இல்லை; இருக்கவும் முடியாது. இந்தச் சாதாரண உண்மையை மக்களுக்கு உணர்த்துவதற்காகக் கடந்த இருபத்தொரு ஆண்டு களாக நான் முயன்று வந்திருக்கிறேன். அதிகாரம் முழுவதும் சட்ட மறுப்பில்தான் தேங்கியிருக்கிறது. ஒரு நாட்டு மக்கள் எல் லோரும் சட்டசபை பிறப்பித்த சட்டங்களுக்குப் பணிந்து நடக்க மறுத்து விடுகிருர்கள், அதனல் கிடைக்கக்கூடிய தண்டனையை ஏற்கத் தயாராக இருக்கிருர்கள், என்பது போன்ற ஒரு நிலை மையைக் கற்பனை செய்து பாருங்கள். சட்ட, நிருவாக இயந்திரம் முழுவதையுமே அவர்கள் நிலைகுலைய வைத்து விடுவார்கள். சிறு பான்மையினர் எவ்வளவு பலம் உள்ளவர்களாக இருந்தாலும், அவர்களை நிர்ப்பந்தப்படுத்தப் போலீசாரும் இராணுவத்தினரும் உபயோகமாய் இருப்பார்கள். ஆனல், எவ்வளவு கஷ்ட

மென்ருலும் அதை ஏற்கத் தயாராய் இருக்கும் மக்களுடைய மன உறுதியை எந்தப் போலீஸ் அல்லது இராணுவத்தின் பலாத்கார மும் பணிய வைக்க முடியாது.

மேலும், பெரும்பான்மையினர் முடிவுக்குப் பாராளுமன்ற உறுப் பினர்கள் கட்டுப்படத் தயாராக இருக்கும்போதுதான் பாராளு மன்ற நடைமுறை நல்லதாக இருக்கும். இதை வேறு வார்த்தை களில் சொல்லப்போனல், இணக்கமாகக் கூடி வாழக்கூடியவர் களிடையேதான் இது சிறந்த பலனைத் தரக்கூடியதாக இருக்கும்.

## அத்தியாயம் 18

# மாதர்களும் சட்டசபைகளும்

### 1. கஸ்தூரிபா நினைவு நிதி

உருளி காஞ்சனில் மார்ச் 28, 29, 30-ஆம் தேதிகளில் இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. இவற்றில் ஒன்று கஸ்தூரிபா நினைவு நிதிப் பிரதிநிதிகள் கூட்டம்; மற்றொன்று நிர்வாகிகள் கூட்டம். இப்படிப்பட்ட பிரதிநிதிகள் கூட்டம் நடப்பது இதுவே முதல்தடவை. இந்தப் பிரதிநிதிகள் பல ருசிகரமான கேள்விகள் கேட்டார்கள். பிரதிநிதிகள் ஏன் சட்டசபை உறுப்பினர்களாகக் கூடாது? இதற்கு வெளிப்படையான பதில் ஒன்று இருக்கிறது. இவர்கள் தங்களுடைய பணியைச் சரிவரச் செய்வதாக இருந்தால், இவர்களுக்குச் சட்டசபை வேலைகளுக்கென்று நேரம் இருக்காது. மற்றப்படி இதற்குத் திட்டவட்டமான காரணம் என்னவென்றால், சட்டசபை உறுப்பினர்களின் உதவியைக் கிராமவாசிகள் எதிர்பார்த்திருப்பதனால், அவர்களுக்கு ஒரு தவறான முன்மாதிரியைக் காண்பித்ததாகும்.

### 2. ஏன் கூடாது ?

"கஸ்தூரிபா நிதிப் பிரதிநிதிகள் சட்டசபை உறுப்பினர்களாகவும் இருந்தால், அது கிராமவாசிகளுக்கு ஒரு தவறான முன் மாதிரியை ஏற்படுத்தியதாகும். தற்போதைய சட்டசபைக்கு இந்த வாதம் பொருத்தமானதே என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் நாம் சுதந்திரமடைந்த பின்பு, நிலைமை மாறிவிடும். ஆகவே, அப்போது அவர்கள் அங்கே இருப்பது அனுகூலமாக இராதா? நாம் விரும்பும் வேலைகள் நடைபெறுவதற்குத் தற்போது சாதாரணமாக ஆண்டுக்கணக்கில் ஆகிறது. அப்போது அப்படிப்பட்ட காரியங்களை ஒரே சட்டசபைக் கூட்டத்தில் நிறைவேற்றி விடலாம் அல்லவா?"

இவ்வாறு ஒரு சகோதரி எழுதுகிறார். ஆனால் அவருடைய வாதத்தில் மூன்று குறைகள் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

முதலாவதாக, தற்போதைய சட்டசபைக்கும் எதிர்காலத்தில் சுதந்திர இந்தியாவில் இருக்கக் கூடிய சட்டசபைக்கும் இடையே நான் எந்தவிதமான வேறுபாடும் பாராட்டவில்லை. என்னுடைய வாதத்துக்கு அது அவசியமானதும் அல்ல.

இரண்டாவதாக, சட்டசபை உறுப்பினர்கள் வாக்காளர்களின் வழிகாட்டிகள் என்று எண்ணுவது ஒரு கற்பனையாகும். தங்களுக்கு வழிகாட்டிகளாக இருக்கட்டும் என்று வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதிகளைச் சட்ட சபைகளுக்கு அனுப்புவதில்லை. அதற்கு மாறாக மக்களுடைய விருப்பம் என்னவோ அதை விசுவாசமாக நிறைவேற்றி வைப்பதற்காகவே அவர்களை அங்கு அனுப்புகிறார்கள். ஆகவே, மக்கள்தான் வழிகாட்டிகளே தவிர சட்டசபை உறுப்பினர்களல்ல. சட்டசபை உறுப்பினர்கள் ஊழியம் செய்வோர்; மக்கள் தான் எசமானர்கள். இந்தக் கற்பனையான எண்ணமெல்லாம் தற்போதைய அரசாங்க முறையினால் வந்தது. இந்தக் கற்பனை மறைந்து விட்ட பின், சட்டசபைக்குள் நுழைவதற்காகத் தற்போதுள்ள விரும்பத்தகாத போட்டியும் மிகமிகக் குறைந்துவிடும். அங்கே செல்வது ஒரு சிலரின் கடமையாக இருக்கும். ஆனால் மக்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அவர்கள் அங்கு செல்வார்கள். இன்றோ அவர்கள் சுதந்திரத்திற்காகப் பாடுபடுவதற்காகவே சட்ட சபைக்குச் செல்கிறார்கள். ஆனால் இதில்கூட அவர்கள் அவ்வளவு சாதித்துவிட முடியாதென்பது இப்போது பலருக்குப் புலப்பட்டு விட்டது.

## 3. கேள்வியும் பதிலும்

**கேள்வி :** தேர்ந்தெடுக்கப்படுபவர்களைக் கொண்ட ஸ்தாபனங்களுக்கு மாதர் பிரதிநிதிகளைப் பெரும் அளவில் நிறுத்தக் காங்கிரஸ் தயங்குகிறது என்பதை நாம் காண்கிறோம். பல்வேறு ஸ்தாபனங்களுக்கும் மாதர் அதிகப்படியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பது நியாயமும் அவசியமுமாகும். இந்தப் பிரச்னைக்கு உங்கள் பரிகாரம் என்ன?

**பதில் :** இப்படிப்பட்ட விஷயங்களில் சமத்துவத்தையோ அல்லது வேறு எந்த விகிதாச்சாரத்தையோ கண்டு நான் மயங்கி விடுவதில்லை. திறமைதான் ஒரே தகுதியாக இருக்க வேண்டும். ஆனால் மாதர்களை அலட்சியம் செய்து ஒதுக்கிவிடுவது வழக்கமாய் இருந்து வந்திருக்கிறது. ஆகையால் இதற்கு நேர் எதிரிடையாக மற்ற தகுதிகள் எல்லாம் சரியாக இருக்கும் போது, ஆண்களைவிடப் பெண்களுக்கே முதன்மை அளிக்கும் பழக்கத்தைக் கொள்ளவேண்டும். இவ்வாறு முதன்மை அளிப்பதால் ஆண்கள் எல்லோரையுமே பெண்கள் அப்புறப்படுத்தி விடுவதாக இருந்தாலும் பரவாயில்லை. ஆண் அல்லது பெண் என்பதற்காக மாத்திரம் ஒரு சபையின் உறுப்பினர் பதவி கிடைக்க வேண்டுமென வலியுறுத்துவது அபாயகரமான

காரியமாகும். மாதர்கள் என்பதற்காக - ஏன், எப் பாலாராக இருந்தாலும் - விசேஷ ஆதரவு அளிக்க வேண்டும் என்று கேட்பதை வெறுக்க வேண்டும். அவர்கள் நியாயம் கேட்கவேண்டுமே தவிர, சலுகைகள் கேட்கக் கூடாது. ஆகையால், ஆண்களைப் போலவே பெண்களும் செய்யவேண்டிய சரியான பணி, ஆங் கிலத்தையோ அல்லது மேல்நாட்டுக் கல்வி முறையையோ பரப்புவதல்ல; பொதுப்படையாக எந்தக் கல்வியானது, குடி மக்கள் என்ற முறையில் தங்களைத் தகுதியுடையவர்களாக் குமோ அந்தக் கல்வியைத் தங்களுடைய மாகில மொழிகளில் பரப்புவதாகும். இந்தச் சீர்திருத்தம் மிகவும் அவசியமானது. இந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டுவருவதில் ஆண்கள்தான் முன் செல்லவேண்டும். அவ்வாறு அவர்கள் தலைமை தாங்கிச் செல்வதானது அவர்கள் எந்தவிதமான சலுகையும் காட்டுவ தாகாது. அதற்கு மாருக, மாதர்களுக்கு எப்போதோ கிடைத் திருக்க வேண்டிய நீதி கிடைக்கச் செய்வதேயாகும்.

# அத்தியாயம் 19

# வாக்குரிமை

வயது வந்தோர் வாக்குரிமையையே நான் முழுக்க முழுக்க ஆதரிக்கிறேன். வயது வந்தோர் வாக்குரிமை அவசியம் என்பதற்குப் பல காரணங்கள் உண்டு. இதில் என்னைப் பொறுத்தவரை மிகவும் தீர்மானமான காரணங்களில் ஒன்று, முஸ்லிம்கள் மட்டுமல்லாது, தீண்டத்தகாதவர்கள் என்று கூறப்படுவோர், கிறிஸ்தவர்கள், தொழிலாளர்கள், மற்றும் பல்வேறு வகைப்பட்ட வகுப்பினர்கள் ஆகிய எல்லோருடைய நியாயமான விருப்பங்களையெல்லாம் நிறைவேற்ற இது உதவுகிறது என்பதுதான். சொத்திருப்பவருக்கு வாக்குரிமை இருக்க வேண்டும்; ஆனல் ஒழுக்கம் இருந்து சொத்தோ, படிப்போ இல்லாமல் இருப்பவருக்கு வாக்குரிமை இருக்கக்கூடாது என்ற எண்ணத்தையே என்னால் சகிக்க முடியவில்லை. இரவும் பகலுமாக, நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடும் ஒரு மனிதன், ஏழையாக இருக்கிறான் என்ற குற்றத்திற்காக வாக்குரிமை பெறக்கூடாது என்பதையும் என்னால் சகிக்க முடியவில்லை.

வாக்குரிமை என்று நான் சொல்லும்போது, இருபத்தொன்று வயதிற்கு மேற்பட்ட – ஏன், பதினெட்டு வயதிற்கும் மேற்பட்ட ஆண் பெண்கள் ஆகிய எல்லோருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட வேண்டும் என்றே வலியுறுத்திக் கூறுகிறேன். என்னைப் போன்று வயதானவர்களுக்கு வாக்குரிமை கூடாதென்று நான் தடை செய்து விடுவேன். வயதானவர்கள் வாக்காளர்களாக இருந்து ஒரு பயனும் இல்லை. சாகக்கூடிய நிலைமையில் இருக்கிறார்களே அவர்களுக்கு இந்தியாவும் உலகின் பிற பகுதிகளும் உரிமையானவை அல்ல. அவர்களுக்கு உரிமையானது சாவே. வாழ்வு இளைஞர்களின் உரிமையாகும். இவ்வாறாக, எப்படிப் பதினெட்டு வயதிற்குக் கீழ்ப்பட்டவர்களுக்கு வாக்குரிமை கூடாதென்று நான் தடை செய்துவிடுவேனே அதே போன்று, ஒரு குறிப்பிட்ட வயதிற்கு, உதாரணமாக ஐம்பது வயதிற்கு மேற்பட்டவர்களுக்கும் வாக்குரிமை கூடாதென்று தடை செய்வேன்.

## வயது வந்தோர் வாக்குரிமையும் எழுத்தறிவுச் சோதனையும்

வயது வந்தோர் எல்லோருக்கும், எழுத்தறிவு உள்ளவர்கள் இல்லாதவர்கள் ஆகிய எல்லோருக்கும் சிக்கலுக்கு இடமில்லாத

வாறு வாக்குரிமை அளிக்க வேண்டும் என இதுவரை நான் உறுதியாகக் கூறிவந்திருக்கிறேன். ஆனால் காங்கிரஸ் விதி அமைப்பு செயல்படுவதைப் பார்க்கும்போது, எனது கருத்து மாறுகிறது. இரண்டு காரணங்களால், வாக்காளர்கள் எழுத்தறிவு பெற்றவர்களாய் இருக்கிருர்களா என்பதைச் சோதித்துப் பார்க்கவேண்டியது அவசியம் என்ற முடிவுக்கு இப்போது வந்திருக்கிறேன். வாக்கு என்பது ஒரு சிறப்பு உரிமையாகக் கருதப்படவேண்டும். ஆகையால், அதற்கு ஏதாவது ஒரு தகுதி நிர்ணயிக்கப்பட வேண்டும். அவ்வாறு நிர்ணயிக்கப்படக் கூடிய தகுதி, எழுத்தறிவு இருக்கிறதா என்பதைச் சோதித்துப் பார்ப்பதுதான்.

இவ்வாறு எழுத்தறிவுள்ள வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவிக்கு வரும் அமைச்சரவை, எழுத்தறிவு இல்லாததால் வாக்குரிமை பெருதவர்களைப் பற்றி உண்மையிலேயே அக்கறை உள்ளதாக இருந்தால், ஆவலுடன் விரும்பும் அந்த எழுத்தறிவு ஒரு நொடியில் கிடைத்துவிடும்.

அத்தியாயம் 20

# சட்டம் இயற்றுதல்

ஏதாவது ஒரு தீமையை எதிர்த்து ஒரு சட்டம் இயற்றப்பட்டால், மேற்கொண்டு எந்த விதமான முயற்சியும் மேற்கொள்ளப் படாமலேயே அந்தத் தீமை செத்துவிடும் என்று மக்கள் எண்ணுவதாகத் தோன்றுகிறது. எந்தக் காலத்திலும் இதைக் காட்டிலும் மோசமான முறையில் ஒருவர் தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டதில்லை. சட்டம் இயற்றுவதே அறியாமையில் ஆழ்ந்துள்ள ஒரு சிறுபான்மையினரை, அல்லது, தீய எண்ணங்கொண்ட ஒரு குறுகிய சிறுபான்மையினரை எதிர்த்துத்தான். இவ்வாறு சட்டம் இயற்றும் போதுதான் அது பலனும் அளிக்கிறது. ஆனால், விவேகமுள்ள, ஒழுங்காய் அமைந்த மக்கள் கருத்திற்கு எதிரான எந்தச் சட்டமும், அல்லது மதத்தின் பெயரால் வெறிபிடித்த சிறுபான்மையினரால் பிறப்பிக்கப்படும் எந்தச் சட்டமும் ஒருபோதும் வெற்றியடைய முடியாது.

### கட்டாயம் கூடாது

சட்டம் இயற்றுவதில் எள்ளளவும் கட்டாயமோ அல்லது அசத்தியமோ இருக்கக்கூடாது. நாம் முதன் முதலில் தவிர்க்க வேண்டியவை இவையே. உண்மையிலேயே சீர்திருத்தம் என்று சொல்லக்கூடிய எதுவும் கட்டாயத்தின் மூலம் நடைபெற்றதில்லை என்பது எனது தாழ்மையான கருத்து. ஏனென்றால் கட்டாயமானது வெளித்தோற்றத்திற்கு வெற்றி அளிப்பதுபோல் தோன்றினாலும், எந்தத் தீமையை எதிர்த்துக் கட்டாயப்படுத்துகிறோமோ அதைக் காட்டிலும் மோசமான பல தீமைகளை அது விளைவித்துவிடுகிறது.

நாம் ஒரு முறை சட்டத்தை இயற்றிவிட்டால், அதை முற்றிலும் மாற்றி அமைப்பதற்குள் பல இன்னல்களை எதிர்நோக்கி ஆக வேண்டியிருக்கிறது. மக்கள் கருத்து நல்ல முறையில் உருவாக்கப் படும் போதுதான், ஒரு நாட்டில் அமுலில் உள்ள சட்டங்களை நீக்க முடியும். எந்த அரசியல் சட்டத்தின் கீழ்ச் சட்டங்கள் அடிக்கடி திருத்தப்படுகின்றனவோ அல்லது நீக்கப்படுகின்றனவோ அது நிலையானது என்றோ அல்லது நல்ல முறையில் அமைக்கப்பட்டது என்றோ நாம் சொல்ல முடியாது.

### கடையனுக்குக் கடைத்தேற்றம்

முதலாளிகளாலும், நிலச் சொந்தக்காரர்களாலும், உயர் தர வகுப்பினர் என்று சொல்லப்படுபவர்களாலும் மக்கள் சேற்றில் அமுக்கப்பட்டுக்கிடக்கின்றனர். இதற்கும் மேல் இம் மக்களை 'விஞ்ஞான பூர்வமான' முறைகளில் பிரிட்டிஷ் ஆட்சி யாளர் நசுக்கிவிட்டனர். இவ்வாறு நசுக்கப்பட்டு, கீழே விழுந்து கிடக்கும் மக்களை உயர்த்துவதற்காக இன்னும் பல ஆண்டு களுக்கு இந்தியா சட்டங்கள் இயற்றிக் கொண்டுதானிருக்கும் என்றே எண்ணுகிறேன். சகதியில் அமிழ்ந்து கிடக்கும் இம் மக்களைக் கைதூக்கி விடுவதாக இருந்தால், இந்திய தேசிய அரசாங்கத்தின் இன்றியமையாக் கடமை தனது இல்லத்தை முதலில் ஒழுங்குபடுத்துவதாகும். தொடர்ச்சியாக இந்த மக்களுக்கு முதன்மை அளித்து வரவேண்டும். அவர்கள் எந்தச் சுமையால் நசுங்கிக் கொண்டிருக்கிருர்களோ அந்தச் சுமைகளை அப்புறப்படுத்த வேண்டும். அப்போது நிலச் சொந்தக்காரர்களும் ஜமீன்தார்களும், செல்வர்களும் தற்போது சலுகைகள் அனுபவித் துக் கொண்டிருக்கும் மற்றவர்களும் - இவர்கள் ஐரோப்பியர்களோ அல்லது இந்தியர்களோ எனக்கு அக்கறை இல்லை - தாங்கள் ஒரு சார்பாக நடத்தப்படுவதாகக் கூறினல் நான் அவர்கள் மீது இரக்கப் படுவேன். ஆனல் என்னல் முடிவதாக இருந்தாலும் நான் அவர் களுக்கு உதவமுடியாது. ஏனென்ருல், இப்பணியில் அவர்களுடைய ஒத்துழைப்பையே நான் நாடுவேன். அவர்களுடைய உதவி யின்றி, இந்த மக்களைச் சேற்றிலிருந்து தூக்கிவிட முடியாது.

ஆகையால் உள்ளவர்களுக்கும் இல்லாதவர்களுக்கும் இடையே இது ஒரு போராட்டமாக இருக்கும். இதைப் பற்றித்தான் இப் போது அஞ்சப்படுகிறது என்ருல், தேசிய அரசாங்கமே அமைய முடியாது என்று நான் அஞ்சுகிறேன். இந்த வகுப்பினர்களெல் லாம் ஒன்றுமறியாத கோடிக்கணக்கான மக்களின் தலைகளை நோக் கித் துப்பாக்கிக் குறிவைத்து 'எங்களுடைய உடைமைகளுக்கும் உரிமைகளுக்கும் நீங்கள் உறுதிமொழி அளித்தாலொழிய உங்கள் சொந்த அரசாங்கத்தை அமைக்க முடியாது' என்று கூறினல் தேசிய அரசாங்கம் எவ்வாறு அமைய முடியும்?

பகுதி ஏழு

# பதவி ஏற்பும் அமைச்சர்கள் முன் உள்ள பணியும்

அத்தியாயம் 21

## காங்கிரஸ் அமைச்சரவைகள்

பதவி ஏற்புப் பிரச்னையில் என்னுடைய கருத்தை அனுசரித்து நடப்பதென்று காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர்களும் மற்ற காங்கிரஸ்காரர்களும் முடிவு செய்திருக்கிறார்கள். ஆகையால், பதவி ஏற்பைப்பற்றி என்னுடைய கருத்து என்னவென்பதையும் காங்கிரஸ் தேர்தல் விஞ்ஞாபனத்தின் அடிப்படையில் என்ன செய்யமுடியும் என்பதையும் பொதுமக்களுக்கு விளக்கிக் கூறவேண்டியது என் கடமையாகிறது எனக் கருதுகிறேன். ''ஹரிஜன்'' சஞ்சிகையை நடத்துவதில் நானே ஒரு வரையறையை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறேன். இந்த வரையறையைத் தாண்டுவதற்கு நான் சமாதானம் கூறவேண்டிய அவசியம் இல்லை. காரணம் வெளிப்படையானது. இந்தியா விடுதலை அடைவதற்கு இந்திய அரசாங்கச் சட்டம் முற்றிலும் போதாது என்று எல்லோருமே கருதுகிறார்கள். ஆயினும், பட்டாக்கத்தியின் மூலம் ஆட்சி நடத்துவதற்குப் பதிலாக, பெரும்பான்மையினரின் சம்மதம் பெற்ற ஆட்சியைக் கொண்டுவரும் ஒரு முயற்சியாக இதைக் கருதலாம். இந்த முயற்சி எவ்வளவுதான் குறுகியதாகவும் சக்தியற்றதாகவும் இருந்தாலும் மூன்றுகோடி ஆண், பெண் வாக்காளர்களை உருவாக்குவதையும் அவர்கள் கையில் விரிவான அதிகாரங்களை வழங்குவதையும் வேறு எந்தப் பெயரிட்டு அழைக்க முடியும்? நம்மீது எது திணிக்கப்படுகிறதோ அதை நாளாவட்டத்தில் நாம் விரும்ப ஆரம்பித்துவிடுவோம்; அதாவது நாம் சுரண்டப்படுவதைக்கூட ஒரு வரப்பிரசாதம்தான் என்று இறுதியில் உண்மையிலேயே எண்ண ஆரம்பித்துவிடுவோம்—என்ற நம்பிக்கை இதற்கு அடிப்படையாக இருக்கிறது. முப்பது கோடி

வாக்காளர்களும் தங்களுக்கென ஒரு கொள்கை உடையவர் களாய் இருந்தால், (பதவி வகிப்பது உள்பட) தங்கள் கையில் அளிக்கப்பட்ட அதிகாரங்களையெல்லாம் சட்டத்தை வகுத்தவர் களின் உள் நோக்கை உடைத்தெறிவதற்காகப் பயன்படுத் தக்கூடிய திறமை உள்ளவர்களாக இருந்தால், மேற்கண்ட நம்பிக்கையை நாம் துவம்சம் செய்யமுடியும். மேலும், சட்டத்தை சட்ட பூர்வமான முறையில்-அதே சமயம் அவர்கள் எதிர்பார்க்காத முறையில் பயன்படுத்திக் கொள்வதன் மூலமும் அவர்கள் விரும்பு கிற வழியில் உபயோகிக்காமல் தவிர்ப்பதன் மூலமும் இதை எளிதாகச் செய்யமுடியும்.

### சில யோசனைகள்

இவ்வாறாக, அமைச்சரவைகள் மதுவிலக்கை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவரலாம். மதுவிலிருந்து கிடைக்கும் வரு மானத்தைக் கொண்டு கல்விக்குச் செலவிடுவதற்குப் பதிலாக, கல்வியைச் சுயதேவைப் பூர்த்தி உள்ளதாக்கி விடலாம். சிறைச் சாலைகளை, சீர்திருத்தச்சாலைகளாகவும் தொழிற் கூடங்களாகவும் ஆக்கலாம். அவை விரய நிறுவனங்களாக இல்லாமல், தண்டனை அளிக்கும் இடங்களாக இல்லாமல், சுயதேவைப் பூர்த்தி உள்ளவை யாகவும் கல்வி கற்பிக்கும் நிலையங்களாகவும் ஆகுமாறு செய்ய லாம். இர்வின்-காந்தி உடன்படிக்கையில் சாகாமல் இருப்பது உப்பைப்பற்றிய பிரிவு ஒன்றுதான். இந்த உடன்படிக்கையின்படி ஏழைக்கு உப்பு இலவசமாகக் கிடைக்கவேண்டும். ஆனால் அவ் வாறில்லை. இனி, குறைந்தது காங்கிரஸ் மாநிலங்களிலாவது அது இலவசமாகக் கிடைக்கவேண்டும். கொள்முதல் செய்யும் துணிகள் எல்லாமே கதராகவே இருக்கவேண்டும். இனி, பெரும்பாலும் நகரங்களைவிடக் கிராமங்கள்மீதும் விவசாயிகள் மீதும்தான் கவனமெல்லாம் செலுத்தப்படவேண்டும். தற்செயலாக நினைவுக்கு வந்த உதாரணங்கள் இவை. இவைகள் எல்லாம் முற்றிலும் சட்ட பூர்வமானவை. ஆயினும் இவைகளில் ஒன்றைக் கூட இன்னும் நாம் முயன்றுபார்க்கவில்லை.

### சொந்த நடத்தை

இதன்பின்னர், அமைச்சர்களின் சொந்த நடத்தையை எடுத் துக்கொள்வோம். காங்கிரஸ் அமைச்சர்கள் எவ்வாறு நடந்து கொள்வார்கள்? அவர்களுடைய தலைவர்-அதாவது காங்கிரஸ் தலைவர் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்கிறார். அவர்கள் மட்டும் முதல் வகுப்பில் பிரயாணம் செய்வார்களா? ஒரு முரட்டு கதர் வேட்டி, சட்டை, கையில்லாத அரை கோட் ஆகியவற்

றுடன் காங்கிரஸ் தலைவர் திருப்தி அடைகிறார். அமைச்சர்கள் மேற்கு நாட்டு உடையணிந்து, மேற்கு நாடுகளைப் போன்று பெரும் அளவில் செலவிடமுடியுமா? கடந்த பதினேழு ஆண்டுகளில் கடுமையான எளிய வாழ்க்கையில் கட்டுப்பாடாகப் பயிற்சி பெற்றவர்கள் காங்கிரஸ்காரர்கள். அந்த எளிமையைத் தங்கள் மாகாணங்களின் நிருவாகத்திலும் அமைச்சர்கள் புகுத்துவார்கள் என்றே நாடு எதிர்பார்க்கும். அவர்கள் அதற்காகப் பெருமைப்படுவார்களே தவிர வெட்கப்பட மாட்டார்கள். உலகிலேயே மிகவும் ஏழையான நாடு நம் நாடு. பல கோடிக்கணக்கான மக்கள் அரைப்பட்டினியாக வாழ்கிறார்கள். தங்களைத் தேர்ந்தெடுத்தவர்களுடைய நடையுடை பாவனைகளுக்கு முற்றிலும் பொருந்தாத முறையில் வாழ அமைச்சர்கள் கூசவேண்டும். ஆங்கிலேயர்கள் வெற்றிவீரர்களாக, ஆட்சியாளர்களாக வந்தவர்கள். வெற்றி கொள்ளப்பட்ட நிராதரவான மக்களுடைய நிலையைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தாமல், ஒரு வாழ்க்கைத் தரத்தை ஏற்படுத்திவிட்டார்கள். கவர்னர்களையும், பாதுகாப்பாக ஐ. சி. எஸ். உத்தியோகங்களில் இருப்பவர்களையும் அமைச்சர்கள் அப்படியே பின்பற்றுமல் இருந்தால், முன்னவர்களுடைய மனோபாவத்திற்கும் காங்கிரஸ் மனோபாவத்திற்கும் இடையிலுள்ள கடும் வேற்றுமையை எடுத்துணர்த்தியவர்களாவார்கள். ஒரு இராட்சதனுக்கும் சித்திரக்குள்ளனுக்கும் எவ்வாறு கூட்டு இருக்க முடியாதோ அதேபோன்று அவர்களுக்கும் நமக்குமிடையே உண்மையில் கூட்டு இருக்க முடியாது.

**வரலாற்று மேற்கோள்கள்**

எளிமை நமக்கு மட்டுந்தான் ஏகபோகமான சொத்து என்றோ, *1920*-இல் கால்சட்டைகளையும் நாற்காலியையும் கைவிட்டதன்மூலம் தவறு செய்துவிட்டோமென்றோ காங்கிரஸ்காரர்கள் நினைக்கக்கூடாது என்பதற்காக, அபூ பக்கர், உமர் ஆகியோரின் உதாரணங்களை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இராமனும் கிருஷ்ணனும் வரலாற்றுக்கு முந்தியவர்கள். ஆகவே அவர்களுடைய பெயர்களை நான் முன்னுதாரணங்களாகக் குறிப்பிட முடியாது. பிரதாபும் சிவாஜியும் பூரண வலிமையுடன் வாழ்ந்ததாக வரலாறு கூறுகிறது. ஆனல் அவர்கள் கைக்கு அதிகாரம் வந்தபோது அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதைக் குறித்து இரு வேறு கருத்துக்கள் இருக்கக்கூடும். ஆனல் நபிகள் நாயகம், அபூபக்கர், உமர் ஆகியவர்களைப்பற்றிக் கருத்து வேறுபாடே இல்லை. உலகத்தின் செல்வங்களெல்லாம் அவர்கள் காலடியில் கிடந்தன. அவர்களுடைய கட்டுப்பாடான வாழ்க்

கைக்கு இணையாக வரலாற்று பூர்வமான ஒரு உதாரணங் காண்பது கடினம். தொலைவான மாநிலங்களில் இருந்த தமது தளபதிகள் முரட்டுத் துணியையும் முரட்டு மாவையும் தவிர வேறு எதையும் பயன்படுத்துவதை உமர் ஏற்றுக்கொள்ளவில்லை. 1920-ஆம் ஆண்டிலிருந்து தாங்கள் கடைப்பிடித்துவரும் எளிமையையும் சிக்கனத்தையும் காங்கிரஸ் அமைச்சர்கள் காப்பாற்றவேண்டும். அவ்வாறு செய்தால் அவர்கள் ஆயிரக்கணக்கான ரூபாய்களை மீதப்படுத்தியவர்களாவார்கள், ஏழைகளுக்கு நம்பிக்கை யளித்த வர்களாவார்கள், அதிகார தோரணையையும் ஒருவேளை மாற்றி யவர்களாவார்கள். எளிமை என்றால் கருமித்தனம் அல்ல என் பதை உங்களுக்கு நான் சுட்டிக் காண்பிக்க வேண்டிய அவசிய மில்லை. எளிமையில் ஒரு தனி அழகும் கலைத்திறனும் இருக் கிறது. அதை யாரும் காணலாம். சுத்தமாகவும், கண்ணியமாகவும் தூய்மையுடனும் இருக்கப் பணம் தேவையில்லை. படாடோபமும் ஆடம்பரமும் பெரும்பாலும் பண்பற்ற நடத்தையுடன் கைகோர்த் துச் செல்லக்கூடியவையே.

மக்களுடைய விருப்பத்தை நிறைவு செய்ய இந்தச் சட்டம் கொஞ்சங்கூடப் போதாது என்பதையும் இந்தச் சட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க மக்கள் உறுதி பூண்டு விட்டனர் என் பதையும் மெய்ப்பித்துக் காண்பிப்பதற்கு இந்தப் படாடோபமற்ற பணி முன்னோடி நடவடிக்கையாக இருக்கவேண்டும்.

### மதத்திற்கு அப்பாற்பட்டவர்

இந்தியாவை இந்துவாகவும், முஸ்லிமாகவும் பிரிப்பது என்று ஆங்கிலப் பத்திரிகைகள் கங்கணங்கட்டிக் கொண்டன. காங்கிரஸ் பெரும்பான்மை பெற்ற மாநிலங்களை இந்து மாநிலங்கள் என்றும், மற்ற ஐந்து மாநிலங்களையும் முஸ்லிம் மாநிலங்கள் என்றும் அவை வர்ணித்தன. இது பட்டவர்த்தனமான பொய் என்பது அவர்கள் மனத்தை உறுத்தவில்லை. இந்த ஆறு மாநிலங்களைச் சேர்ந்த அமைச்சர்களும் தங்கள் மீது எந்தவிதமான ஐயப்பாடும் கொள்ள முடியாதபடி நடந்து கொள்வார்களென்று நான் உறுதியாக நம்பு கிறேன். இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், சீக்கியர், பார்சி என்று தாங்கள் வேறுபாடு பாராட்டுவதேயில்லை என்பதை அந்த அமைச்சர்கள் அவர்களுடைய முஸ்லிம் சகோதரர்களுக்கு எடுத் துக் காண்பிக்க வேண்டும். இது மட்டுமல்லாது, இந்துக்களிடையே கூட உயர்ந்த சாதி இந்து, தாழ்ந்த சாதி இந்து என்ற வேறுபாடு பாராட்டக்கூடாது. அவர்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் அவர்களைப் பொறுத்தவரை எல்லோருமே இந்திய மக்கள்தான்,

யாரும் உயர்ந்தவர்களோ அல்லது தாழ்ந்தவர்களோ அல்ல என்பதை மெய்ப்பிக்க வேண்டும். மழையோ, வெயிலோ, ஏழ்மையோ எல்லோருக்கும் எவ்வித வேறுபாடுமின்றிப் பொதுவானவைதான். முக்கியமான பிரச்னைகளெல்லாம் எல்லோருக்கும் ஒரே மாதிரியானவைதான். செயலிலிருந்து பார்க்கும்போது, ஆங்கில முறையின் இலட்சியம் நமது முறையின் இலட்சியத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும். ஆனால் இந்த இரண்டு இலட்சியங்களுக்கும் யார் பிரதிநிதிகளாக இருக்கிறார்களோ அந்த ஆண்களும் பெண்களும் ஒரே மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் தான். இதுவரை என்றுமே இல்லாத அளவு அவர்கள் இப்போது ஒன்றுபடுவார்கள். இச் சட்டத்தைப் பற்றி மனித அடிப்படையில் நான் புரிந்து கொண்டது சரியானால் இந்த இரண்டு கட்சிகளில் ஒவ்வொன்றும் தனது சொந்த வரலாறு, பின்னணி, இலட்சியம் ஆகியவற்றுடன் ஒன்று மற்றொன்றை மாற்றுவதற்காகச் சந்திக்கின்றன என்று கருதுகிறேன். 'கார்ப்பொரேஷன்'கள் மரத்தைப் போன்று உயிர் அற்றவை. ஆனால் அவைகளில் பணியாற்றுபவர்களுக்கு அல்லது அதைப் பயன்படுத்துபவர்களுக்கு உயிரில்லை என்று சொல்ல முடியுமா? ஆங்கிலேயரோ அல்லது ஆங்கில மயமான இந்தியரோ இந்தியருடைய கண்ணோட்டத்தை அதாவது காங்கிரஸ் கண்ணோட்டத்தைப் புரிந்து கொண்டாரானால், போரில் காங்கிரஸ் வெற்றி பெற்றுவிட்டது என்றாகிவிடும். ஒரு சொட்டு இரத்தம் சிந்தாமல் நமக்கு முழு விடுதலை கிடைத்துவிடும். இதைத் தான் அகிம்சைக் கண்ணோட்டம் என்று கூறுகிறேன். அது முட்டாள்தனமானதாக, வெறும் கற்பனையானதாக, நடைமுறையில் சாத்தியமற்றதாக இருக்கலாம். எனினும், அதைக் காங்கிரஸ்காரர்களும் மற்ற இந்தியர்களும் ஆங்கிலேயர்களும் அறிந்திருப்பது மிகச் சிறந்ததாகும். பதவி ஏற்பது எப்படியாவது சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்பதை நோக்கமாகக் கொண்டதல்ல. காங்கிரசின் குறிக்கோள் முழு விடுதலையாகும். இந்தக் குறிக்கோளை அடைவதில் ஒருபுறம் இரத்தத்தைச் சிந்தாமலிருக்கவும், மற்றொரு புறம் இதுவரை முயன்று பார்க்காத அளவு மக்கள் சட்டமறுப்பு ஏற்படாமல் தவிர்க்கவும் இது ஒரு கடும் முயற்சியாகும். ஆண்டவன் இதை ஆசீர்வதிப்பாராக!

அத்தியாயம் 22

# அடிப்படை வேறுபாடு

பழைய அமைப்பிற்கும் புதிய அமைப்பிற்கும் உள்ள வேறு பாட்டை ஒரு கணம் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம். அதை நாம் பூரணமாக உணரவேண்டுமானல், சட்டத்தின் கெடுபிடியான வரம்புகளை ஒரு கணம் மறந்துவிட வேண்டும். காங்கிரஸ் கடைசி எல்லைக்கே சென்று பதவி ஏற்று விட்டது என்பதுடன் அது ஏற்றுள்ள அதிகாரத்தையும் ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். முன்பெல்லாம் அமைச்சர்கள் கவர்னர்களுடைய கட்டுப்பாட்டின் கீழ் இருக்க இணங்கினர்கள். ஆனல் இப்போதோ அவர்கள் காங்கிரஸ் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கிருர்கள். அவர்கள் காங்கிரசுக்கே பொறுப்பானவர்கள். அவர்களுடைய அந்தஸ்துக்குக் காங்கிரசே காரணம். கவர்னர்களையும் 'சிவில் சர்விஸ்' அதிகாரிகளையும் பதவியிலிருந்து போகச் சொல்ல முடியாது என்ருலும், அவர்கள் அமைச்சர்களுக்குப் பதில் கூறியே ஆக வேண்டும். ஒரு குறிப்பிட்ட வரம்பு வரை அவர்கள் மீது அமைச்சர்களுக்கு ஆதிக்கம் உண்டு. இந்த வரம்பானது காங்கிரசை, அதாவது, மக்களை பலப்படுத்துவதற்கு உதவுகிறது. சட்டத்தின் நான்கு எல்லைகளுக்குள் அமைச்சர்கள் செயல்படும்போது - அவர்களுடைய நடவடிக்கைகள் கவர்னர்களுக்கு எவ்வளவுதான் கசப்பானதாக இருந்தாலும் - சாட்டை அவர்கள் கையிலேயே இருக்கிறது. இதை நாம் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானல், மக்கள் அகிம்சையோடு இருக்கும்வரை, தேசீய வளர்ச்சிக்கான நடவடிக்கைகளை எடுக்கக் காங்கிரஸ் அமைச்சர்களுக்குப் போதுமான சுதந்திரம் இருக்கிறது என்பது தெரிய வரும்.

இந்த அதிகாரத்தை வெற்றிகரமான முறையில் பயன்படுத்த வேண்டுமானல் காங்கிரசுக்கும் அதன் அமைச்சர்களுக்கும் மக்கள் தங்களுடைய மனப்பூர்வமான ஒத்துழைப்பை அளிக்க வேண்டும். அமைச்சர்கள் ஏதாவது தவறு செய்வதாக இருந்தால், அல்லது, அவர்கள் தங்களுடைய கடமையைப் புறக்கணிப்பதாக இருந்தால், யாரும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிச் செயலாளருக்குப் புகார்கள் செய்து நிவாரணம் பெறலாம். ஆனல் இதற்காக எவரும் தமது விருப்பப்படியெல்லாம் நடக்கக்கூடாது.

காங்கிரசைத் தட்டிக் கேட்பதற்கு அரசியல் வானில் வேறு எந்த அரசியல் கட்சியும் இல்லை என்பதையும் காங்கிரஸ்காரர்கள் உணரவேண்டும். ஏனென்றால், மற்ற கட்சிகள் ஒருபோதும் கிராமங்களுக்குள் பரவவில்லை. அந்த வேலையை ஒரே நாளில் செய்து விடவும் முடியாது. ஆகையால், நான் எண்ணிப்பார்க்க முடிந்த அளவில், அமைச்சர்கள் மட்டும் நாணயமாகவும் சுயநலமற்றும், சுறுசுறுப்பாகவும், எச்சரிக்கையுடனும், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் உண்மை நலனில் அக்கறைப்படுபவர்களாகவும் இருந்தால், காங்கிரசின் குறிக்கோளாகிய முழு விடுதலையைப் பெறுவதற்கு உதவ அவர்களுக்கு நிறைய வாய்ப்பு இருக்கிறது. சட்டப்படி, தேசீய நிர்மாணத் துறைகளில் செலவிடுவதற்கு அமைச்சர்கள் பொறுப்பில் பணம் வராது என்ற வாதத்தில் எவ்வளவோ உண்மை இருக்கிறது. ஆனால் இது பெரும்பாலும் ஒரு மாயையே. உழைப்புத்தான் உண்மையான பணம், உலோக நாணயமல்ல என்று சர் டேனியல் ஹாமில்டன் கூறுவதை நான் ஒப்புக்கொள்கிறேன். ரூபாய்க்கு உதவியாக உழைப்பு இருப்பதைவிட உழைப்பிற்கு உதவியாக ரூபாய் நோட்டுகள் இருக்கின்றபோது சிறந்த பலன்தரக் கூடியவையாய் இருக்கின்றன; இந்தியாவில் உயர்ந்த பதவி வகித்த ஒரு ஆங்கில நிதித் துறை வல்லுநர் கூறியுள்ள கருத்துக்களை இதோ பாருங்கள்: "இந்தியாவில் நாம் விட்டு வைத்துள்ள மிக மோசமான பாரம்பரியம் அங்குள்ள உயர்தர அதிகாரிகள் வர்க்கம்தான். ஏற்கனவே போட்டுவிட்ட முடிச்சை இனி அவிழ்க்க முடியாது. ஆகையால் நாம் இப்போது புதிதாக ஏதாவதொன்றைத் தனியாகத் தொடங்க வேண்டும். இன்று பண நோக்கத்துடன் எவையெல்லாம் செய்யப்படுகின்றனவோ அவையெல்லாம் இனிச் சேவை நோக்கத்துடன் செய்யப்பட வேண்டும். ஆசிரியர்களுக்கும் டாக்டர்களுக்கும் ஏன் உயர்ந்த ஊதியம் அளிக்கவேண்டும்? வேலையில் பெரும்பாலானவற்றை ஏன் கூட்டுறவு அடிப்படையில் பெறக்கூடாது? பாடுபடுவதற்கு எழுபது கோடிக் கைகள் இருக்கும்போது நீங்கள் ஏன் மூலதனத்திற்காக அலட்டிக்கொள்ள வேண்டும்? கூட்டுறவு அடிப்படையில் காரியங்களைச் செய்வதானால்—வேறு சொற்களில் கூறுவதாயின் இதுதான் ஒருவகை சோஷலிசம், திருத்தி அமைக்கப்பட்ட சோஷலிசம்-பணத்திற்கு அவசியமே இராது, குறைந்தது அதிக அளவில் தேவை இராது." சேவா கிராமம் என்னும் சிறிய ஊரில் இதைச் சோதித்துப் பார்த்து நான் உண்மை எனக் கண்டிருக்கிறேன். சேவா கிராமத்தில் உள்ள வயதுவந்த நானூறு பேர்களும் நான் சொல்கிறபடி வேலை செய்தார்களானால் ஆண்டுதோறும் பத்தாயிரம் ரூபாய்

வெகு எளிதாக அவர்கள் பையில் நிரம்பும். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்யமாட்டார்களே? அவர்களிடம் ஒத்துழைப்பு இல்லை. புத்திசாலித்தனமாக வேலை செய்வதென்பது என்ன வென்று அவர்கள் அறியமாட்டார்கள். புதிதாக எதையும் கற்றுக்கொள்ளமாட்டார்கள். தீண்டாமையும் ஒரு தடங்கலாக இருக்கிறது. யாராவது அவர்களுக்கு ஒரு இலட்சம் ரூபாய் அளித்தார்களானால், அவர்கள் அதைச் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளமாட்டார்கள். இப்படிப்பட்ட நிலைமைக்கு அவர்கள் பொறுப்பல்ல. மத்தியதர வர்க்கத்தினராகிய நாம் தான் பொறுப்பு. சேவாகிராமத்திற்கு எது உண்மையோ அதுவே மற்ற கிராமங்களுக்கும் உண்மையாகும். பொறுமையுடன் முயற்சி எடுத்துக் கொண்டால், சேவாகிராமத்தில் உள்ளவர்களைப் போன்று மெதுவாகவானாலும் அவர்கள் செவிசாய்ப்பார்கள். அதிகப்படியாக ஒரு காசு செலவிடும் அவசியமில்லாமல் இவ்வகையில் அரசாங்கம் எவ்வளவோ செய்யலாம். மக்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்காக அல்லாமல் அவர்களுக்குச் சேவை செய்வதற்காக அரசாங்க அதிகாரிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். எந்த வேலையானாலும் அதைச் செய்யுமாறு கிராமவாசிகளைக் கட்டாயப்படுத்தக் கூடாது. கிராமவாசிகளைத் தார்மிக, மனோரீதியாக, உடல், பொருளாதார ரீதியாக வளர்க்கக் கூடிய காரியங்களைச் செய்யுமாறு அவர்களுக்குக் கற்பிக்கலாம்.

அத்தியாயம் 23

# அமைச்சர் பதவிகள் பரிசுப் பொருள்கள் அல்ல

பல்வேறு மாநிலங்களிலிருந்து எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அமைச்சர் பட்டியலில் தங்களுடைய பெயர்கள் அல்லது தங்களுடைய நண்பர்களின் பெயர்கள் விட்டுப்போயிருப்பதாயும், நான் அதில் குறுக்கிட வேண்டும் என்றும் இக்கடிதங்களை எழுதியவர்கள் என்னைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட புகார்கள் வராத மாநிலமே இல்லை என்று கருதுகிறேன். இவ்வாறு விட்டுப் போனவர்களின் கோரிக்கையைக் கவனிக்காவிட்டால், வகுப்பு வாதக் கலவரங்கள் உள்படக் கடுமையான விளைவுகள் ஏற்படலாம் என்றும் ஓரிரண்டு கடிதங்களில் எச்சரிக்கப்பட்டிருக்கிறது.

முதன் முதலில் நான் ஒன்றைக் கூறிக்கொள்ள வேண்டும். அமைச்சர்கள் தேர்வில் ஒரு சந்தர்ப்பத்திலாவது நான் குறுக்கிட்டதே இல்லை. இப்படிப்பட்ட விஷயங்களில் குறுக்கிட எனக்கு விருப்பமும் இல்லை. அப்படியே விருப்பம் இருந்தாலும் உரிமை இல்லை. ஏனெனில், நான் காங்கிரசிலிருந்து முற்றிலும் வெளியேறி வந்துவிட்டேன். காங்கிரஸ் விவகாரங்களில் நான் பங்குகொள்வதெல்லாம், பதவி ஏற்பில் உள்ள பிரச்னைகள் சம்பந்தமாகவும், முழு விடுதலை பெறவேண்டும் என்ற நம்முடைய குறிக்கோளை அடைவதில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் குறித்தும் ஆலோசனை கூறுவதுடன் சரி.

ஆனால் எனக்குக் கத்தை கத்தையாக எழுதும் ஏராளமான நண்பர்கள், அமைச்சர் பதவிகள் கடந்த கால சேவைகளுக்காக அளிக்கப்படும் பரிசுப்பொருள்கள் என்றும், சில காங்கிரஸ்காரர்களுக்குத் தங்கள் பெயர்களை அமைச்சர்கள் பட்டியலில் சேர்க்குமாறு கேட்க உரிமையுண்டு என்றும் எண்ணுவதாக எனக்குத் தோன்றுகிறது. ஆனால் அமைச்சர் பதவிகள் தொண்டு செய்வதற்கான வாய்ப்புகள்தான் என்றும், அச்சேவையைச் செய்யுமாறு அழைக்கப்படுபவர்கள் அதைத் தங்கள் திறமையை எல்லாங்கொண்டு உற்சாகமாகச் செய்ய வேண்டுமென்றும் ஆலோசனை கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால் இந்தப் பதவி

களுக்காக ஒருபோதும் போட்டிச் சண்டை கூடாது. கருத்து வேறு பட்டவர்களைச் சமரசப்படுத்துவதற்காக அமைச்சர் பதவிகளை ஏற்படுத்துவதென்பது நிச்சயமாகத் தவருகும். நான் ஒரு தலைமை அமைச்சராக இருந்து, இப்படிப்பட்ட கோரிக்கைகளுடன் சிலர் என்னைத் தொல்லைப்படுத்தினல், மற்றொரு தலைமை அமைச்சரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு எனது வாக்காளர்களிடம் சொல்லி விடுவேன். இப்பதவிகளையெல்லாம் கெட்டியாகப் பிடித்துக் கொள் ளக்கூடாது. அவைகளை இலேசாகக் கருதவேண்டும். அவை முள் கிரீடங்களாகத் தோன்றவேண்டுமே தவிர கீர்த்தி மணிமுடி களாக இருக்கக்கூடாது. ''நம்முடைய இலட்சியத்தை நோக்கி இன்னும் அதி வேகமாகச் செல்வதற்குப் பதவி உதவுமா?'' என் பதைச் சோதித்துப் பார்க்கவே பதவிகளை நாம் ஏற்றேம். சுய நலவாதிகளோ அல்லது தவருன பாதையில் ஆர்வம் உள்ளவர் களோ தலைமை அமைச்சர்கள் முன் தங்களை வலுக்கட்டாய மாகத் திணித்துக்கொண்டு முன்னேற்றத்தைத் தடை செய்தார் களானல், படுபாதகமான விளைவுகளே ஏற்படும். அமைச்சர் களுக்கு முடிவாக யார் அதிகாரம் வழங்குகிறுர்களோ அவர்க ளிடமிருந்து உறுதிமொழி வாங்குவது அவசியமானல், நல்லுற வுடன் ஐயத்திற்கு இடமில்லாத விசுவாசம் காட்டி கட்டுப்பாட் டிற்கு மனமுவந்து பணிந்து நடப்பது குறித்து உறுதிமொழி பெற வேண்டியதும் இரட்டிப்பு அவசியமாகும். காங்கிரஸ் காரர்கள் தங்களுடைய நடவடிக்கைகளில் போதுமான அளவு தன்னலமின்மையையும் கட்டுப்பாட்டையும் காண்பிக்க வேண் டும். இலட்சியத்தை அடைவதற்கு காங்கிரஸ் வகுத்துள்ள வழியில் நம்பிக்கை தெரிவிக்கவேண்டும். இல்லையேல், நமது நாடு ஈடு பட்டிருக்கும் இக்கடுமையான போராட்டத்தில் அது வெற்றிபெற முடியாது.

கராச்சித் தீர்மானம் வாழ்க! அதன்படி காங்கிரஸ் ஆதர வில் அமைச்சர் பதவி ஏற்பதில் பண ஆசை எதுவும் இருக்க முடியாது. இதற்கிடையில் நான் ஒன்றைக் கூறிக்கொள்ள வேண்டும். 500 ரூபாய் என்பது அதிக அளவே தவிர, குறைந்த அளவல்ல. அவ்வாறு கருதினல் அது தவறு. 500 ரூபாய் தான் கடைசி எல்லை. இந்தியாவில் மிக உயர்ந்த சம்பள விகிதங்கள் பழக்கமாகப் போய்விட்டன. இல்லையேல் 500 ரூபாயே நமக்கு அதிகமாகப்பட்டிருக்கும். பொதுவாக, காங்கிரசின் விகிதம், குறைந் தது கடந்த பதினேழு ஆண்டுகளாக, 75 ரூபாயாக இருந்து வரு கிறது. தேசியக் கல்வி, கதர், கிராமக் கைத்தொழில்கள் என்ற அதனுடைய மூன்று பெரிய அனைத்திந்திய நிர்மாணப் பிரிவுகளில்

அங்கீகாரம் பெற்ற சம்பள விகிதம் 75 ரூபாய் தான். திறமையைப் பொறுத்தவரை நாம் குறிப்பிடும் நாளன்று அமைச்சர்களாவதற்குத் தகுதிவாய்ந்தவர்கள் இவைகளில் பணியாற்றுகிறார்கள். அவர்களில் பெயர் பெற்ற கல்வி வல்லுநர்கள் இருக்கிறார்கள்; வழக்கறிஞர்கள், இரசாயன வல்லுநர்கள், வணிகர்கள்—இவர்கள் விரும்பினால் எளிதாக மாதம் 500 ரூபாய்க்கு மேலேயே சம்பாதிக்கலாம்—இருக்கிறார்கள். ஆகவே அமைச்சராவது மட்டும் பெரிய வேறுபாட்டை ஏன் ஏற்படுத்த வேண்டும்? ஆனால் எப்படியோ காயை உருட்டியாகிவிட்டது. நான் இப்போது கூறுவதெல்லாம் என்னுடைய சொந்தக் கருத்துக்களே. தலைமை அமைச்சர்களுடைய முடிவையும் விவேகத்தையும் ஐயுற முடியாத அளவு எனக்கு அவர்கள் மீது உயர்ந்த மரியாதை இருக்கிறது. அவர்களுக்குள்ள சூழ்நிலையில் இதுவே மிகச் சிறந்தது என்று எண்ணி அவர்கள் இதைச் செய்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. எனக்குக் கடிதம் எழுதியுள்ளவர்கட்கு மறுமொழி அளிக்கக் கூடிய முறையில் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புவது இந்தப் பதவிகள் தரும் ஊதியத்துக்காக நாம் அவைகளை ஏற்கவில்லை என்பதுதான்.

ஆகவே, கட்சியில் இந்தக் கடமையை யார் சிறந்த முறையில் ஆற்றுவார்களோ, யாரால் அது முடியுமோ, அவர்களுக்குத்தான் இப்பதவிகளை அளிக்க வேண்டியிருக்கிறது.

## கட்சியின் சம்மதம்

கடைசியாக, ஒரு சிறந்த சோதனை இருக்கிறது. இவ்வாறு அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள், தலைமை அமைச்சர் நியமனத்துக்கு யார் காரணமாக இருந்தார்களோ அந்தக் கட்சி உறுப்பினர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியவர்களாக இருக்க வேண்டும். எந்தத் தலைமை அமைச்சரும் ஒரு கணம் கூடத் தான் விரும்பும் ஆண் அல்லது பெண் என்பதற்காக கட்சி முடிவிற்கு மாறாக அவர்களைத் திணிக்கமுடியாது. திறமை, மக்களை அறிதல், தலைமைக்கு வேண்டிய மற்ற குணங்கள் ஆகியவைகளில் ஒருவர் தமது கட்சியின் முழு நம்பிக்கையைப் பெற்றிருப்பதனால்தான் அவர் தலைமை அமைச்சராகியுள்ளார்.[1]

## அத்தியாயம் 24

# பதவி ஏற்ருல்?

### ஊதியம் அதிகம்

காங்கிரஸ் அமைச்சர்கள் தங்களுக்காக முடிவு செய்து கொண்டுள்ள சம்பளம், உலகத்திலேயே மிகவும் ஏழை நாடான இந்தியாவில் நாம் வாழ வேண்டிய தரத்துக்கு எவ்வளவோ உயர்ந்ததாகும். இந்தக் கருத்தைச் சொல்ல நான் தயங்கவில்லை. பேராசிரியர் கே. டி. ஷா எனக்கு அவசர அவசரமாக ஒரு குறிப்பைத் தயாரித்து அனுப்பியுள்ளார். அதை நான் கீழே அளித்திருக்கிறேன்:

### பொருளாதார ஒப்பீடுகள்

"உலகில் உள்ள முக்கியமான சில நாடுகளின் தலைமை அதிகாரிகளுக்கு அளிக்கப்படும் ஆண்டுச் சம்பளங்களையும் படிகளையும் இத்துடன் இணைத்துள்ளேன்:

| | |
|---|---|
| பிரிட்டன்: | 8000 பவுன் |
| அமெரிக்கா: | 18000 ,, |
| பிரான்ஸ்: | 28000 ,, |
| ஆஸ்திரேலியா: | 8000 ,, |
| கானடா: | 10000 ,, |
| இந்தியா: | 130000 ,, |

"இந்தப் புள்ளி விவரங்களைக் கொண்டு மட்டும் உண்மையான நிலவரத்தை உணரமுடியாது. ஏனென்ருல், நாட்டின் சராசரி செல்வத்தைக் கவனிக்கும்போது இந்தச் சம்பளம் எவ்வளவு பெரிய சுமையாக இருக்கும் என்பதை அவை மட்டும் உணர்த்த முடியாது. என்ருல் சரியான (அல்லது இன்றுள்ள) நிலவரத்தைப் பற்றிய புள்ளி விவரங்களை அளிக்க முடியாது. நான் ஞாபகத்திலிருந்து கூறுகிறேன். ஆனுல் அநேகமாக அவை சரியாக இருக்கும். கீழே குறிப்பிட்டுள்ள நாடுகளில் ஒருவரின் சராசரி வருமானம் சுமார் அவைகளுக்கு நேர் எதிரே குறிப்பிடப்பட்டுள்ள தொகை அளவே ஆகும்:

| | | | | |
|---|---|---|---|---|
| பிரிட்டன் | : | பவுன் | 50 | (ஆண்டுக்கு) |
| அமெரிக்கா | : | ,, | 100 | ,, |
| பிரான்சு | : | ,, | 40 | ,, |
| ஆஸ்திரேலியா | : | ,, | 70 | ,, |
| கானடா | : | ,, | 75 | ,, |
| இந்தியா | : | ,, | 4 | ,, |

(அநேகமாக தற்போதுள்ள விலையில்)

ஜப்பான் கூட இந்தியாவைக் காட்டிலும் எவ்வளவோ உயர்ந்த நிலையில் இருக்கிறது.'' கே. டி ஷா (அரிஜன் 21-8-'37 பக்கம் 218).

**ஊதியத்திற்குத் தக்க உழைப்பு உண்டா?**

இந்தப் புள்ளி விவரத்தின்படி பிரிட்டனின் சராசரி வருமானம் 50 பவுனுய் இருக்க, இந்தியாவின் சராசரி வருமானம் 4 பவுன் தான். நம்முடைய தீவினைப் பயனுக, இன்னும் சற்றுக் காலத்திற்கு பிரிட்டனுடைய பாரம்பரியத்தினுல் வந்த சுமையை நாம் ஏற்ருக வேண்டியிருக்கிறது. நாம் எவ்வளவு சிறந்த முயற்சியை மேற் கொண்டாலும் இலட்சியமாகக் கொண்டுள்ள தரத்தை அடைய முடியாமல் இருக்கிருேம்; சம்பளங்கள், படிகள் என்பவை கிட்டத் தட்ட முடிவானவைகளாகிவிட்டன. இப்போதுள்ள கேள்வியெல் லாம், 'அமைச்சர்கள், அவர்களுடைய செயலாளர்கள், உறுப் பினர்கள் ஆகியோர் தாங்கள் பெறும் ஊதியத்திற்குத் தகுதி யானவாறு அவ்வளவு கஷ்டப்பட்டு உழைப்பார்களா?' என்பது தான். உறுப்பினர்கள் இந்நாட்டிற்கு முழு நேர ஊழியர்கள் ஆவார்களா? அவர்கள் செய்யக்கூடிய சேவைக்கு விசுவாசமான கணக்குக் கொடுப்பார்களா? எப்படி நடைபெற வேண்டுமென்று நாம் நினைக்கிருேமோ அப்படித்தான் காரியங்கள் நடைபெறு கின்றன என்ருே அல்லது காரியங்கள் எப்படி நடைபெற வேண்டுமோ அப்படித்தான் நடைபெறுகின்றனவென்ருே கற்பனை செய்து தவறு இழைக்காதிருப்போமாக.

அமைச்சர்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்து கடுமையாக உழைப்பது மட்டும் போதாது. அவர்கள் அதிகாரத்தின் கீழ் உள்ள அரசாங்கத் துறைகளும் இவ்வாறு நடைபெறுகின்றனவா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். குறைந்த செலவிலும் விரைவாகவும் நீதி கிடைக்க வேண்டும். இன்று அது செல்வந்தர் களின் ஆடம்பரப் பொருளாகவும் வாழ்க்கையை ஒரு சூதாட்டமாக கருதுபவர்களுக்கு இன்பமளிப்பதாகவும் இருக்கிறது. போலீ சாரைக் கண்டு மக்கள் நடுங்குவதாய் இருக்கக் கூடாது; அவர்கள்

மக்களின் நண்பர்களாய் இருக்கவேண்டும். கல்வி இன்று ஏகாதிபத்தியச் சுரண்டல்காரர்களின் தேவைகளை நிறைவு செய்வதாய் இல்லாது மிகமிக ஏழையான ஒரு கிராமவாசியின் தேவைகளை நிறைவு செய்யக் கூடியவாறு புரட்சிகரமாக மாற்றி அமைக்கப்பட வேண்டும்.

### அஹிம்சையே அதிகாரம்

அமைச்சர்கள் மட்டும் விடுதலை அளிப்பதானால், அரசியல் காரணங்களுக்காக - இம்சை நடவடிக்கைகளில் ஈடுபட்டவர்கள் உள்பட - கைதானவர்கள் எல்லோரும் விரைவில் விடுதலை பெற்று விடுவார்கள். ஆனால் இதை எளிதான காரியமாகக் கருதக்கூடாது. காங்கிரசின் அஹிம்சைக் கோட்பாட்டு அடிப்படையில் பார்த்தால், நிச்சயமாக இது இம்சை நடவடிக்கைகளுக்கு அனுமதிச் சீட்டுக்கொடுத்தது ஆகாது. தனிப்பட்டவர் இம்சையைப் பொறுத்தவரை, அதைக் காங்கிரஸ் பழைய அரசாங்கத்தை விட அதிக மனப்பூர்வமாக வெறுக்கிறது. தண்டனை என்ற பெயரில் ஒரு ஸ்தாபன ரீதியான ஒரு இம்சை அமைப்பைக் கொண்டு தனிப்பட்டவர்களின் இம்சையைச் சமாளிக்க வேண்டுமென்று அது எண்ணவில்லை. தவறு செய்யும் தனிப்பட்ட மனிதர்களை நல்லுறவுடன் அணுகுவதன் மூலமும், எந்த விதமான உருவத்தில் இம்சை வந்தாலும் அதற்கு எதிராகப் பலம் வாய்ந்த மக்கள் கருத்தைத் திரட்டுவதன் மூலமும், அஹிம்சையைக் கடைப்பிடித்து, தனிப்பட்டவர் இம்சையைச் சமாளிக்க வேண்டுமென்று அது எண்ணுகிறது. அதனுடைய முறைகள் இம்சையைத் தடுக்கும் நோக்கம் உடையவை; தண்டிக்கும் நோக்கம் உடையவை அல்ல. வேறு விதமாகச் சொல்வதானால், இராணுவத்தின் பின்பலத்தைப் பெற்ற போலீசார் மூலமாகக் காங்கிரஸ் ஆட்சி நடத்தாது. மக்களின் அதிக அளவு நல்லெண்ணத்தை அடிப்படையாகக் கொண்ட தார்மிக அதிகாரத்தைக் கொண்டு அது ஆட்சி செய்யும். உயர்ந்த இராணுவ சக்தியால் கிடைக்கும் அதிகாரத்தைக் கொண்டு ஆட்சி நடத்தாது; அதற்கு மாறாக, தனது செயல்கள் ஒவ்வொன்றிலும் யாரைப் பிரதிபலிக்க விரும்புகிறதோ அந்த மக்களுக்குத் தொண்டு செய்வதால் கிடைக்கும் அதிகாரத்தைக் கொண்டே ஆட்சி நடத்தும்.

சில இலக்கியங்கள் மீதிருந்த தடைகள் எல்லாம் நீக்கப்படுகின்றன. ஆனால் இவ்வாறு தடை செய்யப்பட்டிருந்த இலக்கியங்களில் சில, இம்சையைத் தூண்டக் கூடியவையாகவும் ஆபாசத்தைப் பரப்பக் கூடியவையாகவும், பல்வேறு வகுப்பினர்

அல்லது பிரிவினரிடையே வெறுப்புணர்ச்சியைத் தூண்டக்கூடியவையாகவும் இருப்பதாகத் தெரியவருகிறது என்று வைத்துக் கொள்வோம். காங்கிரஸ் ஆட்சி என்ருல் இம்சைக்கோ ஆபாசத்துக்கோ அல்லது வெறுப்புணர்ச்சிக்கோ அனுமதி வழங்கியதாகாது. ஆகவே, மீண்டும் சொல்கிறேன். ஆட்சேபகரமான இலக்கியங்களைப் பொறுத்தவரை, அறிவு படைத்த மக்கள் கருத்து என்னும் மாசுமருவற்ற ஆதரவை வைத்துத்தான் காங்கிரஸ் எந்த நடவடிக்கையையும் எடுக்கும். தங்கள் மாகிலங்களில் இம்சை, வெறுப்புணர்ச்சி, அல்லது ஆபாசம் பரவுவதைக் காணும் அமைச்சர்கள், கிரிமினல் சட்டத்தையும் அதைச் சார்ந்த பிற நடவடிக்கைகளையும் பயன்படுத்துமுன், காங்கிரஸ் அமைப்புகளும் செயற்குழுவும் அவர்களுக்கு நேரடியான, பலனுள்ள உதவி அளிக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பார்கள். போலீசும் இராணுவமும் எந்த அளவுக்குச் செயல்படாமல் இருக்குமாறு காங்கிரஸ் செய்கிறதோ அந்த அளவு அது உண்மையான வெற்றி பெற்றதாகக் கருதப்படும். போலீசையும் இராணுவத்தையும் பயன்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்று கூறும் அளவு அதற்கு நெருக்கடிகள் வந்தால் அது முற்றிலும் தோல்வியடைந்ததுதான். “இராணுவத்தின் உதவியில்லாமல் தன்ஞல் ஆட்சி நடத்த முடியும். போலீசாரின் உதவி மிக மிகக் குறைச்சலாகப் பெற்று ஆட்சி செய்யமுடியும். (ஒரு அன்பர் தமது கடிதத்தில் கூறியுள்ள ஆலோசனையைப் போன்று, மக்களுடன் நட்புறவு ஏற்படுத்தக்கூடியவாறு போலீசாருக்கு ஒரு புதுப் பெயரே அளிக்கலாம்)” என்பதைக் காங்கிரஸ் முடிவாக மெய்ப்பித்துக் காட்டவேண்டும். தற்போதுள்ள அரசியல் சட்டத்தைச் செல்லாக் காசாக்குவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த, பலனுள்ள வழி எதுவுமே இல்லை.[1]

அத்தியாயம் 25

# பதவி ஏற்பு: அதற்கு நான் கொள்ளும் பொருள்

**சங்கரராவ் தேவ் கடிதம்**

திரு சங்கரராவ் தேவ் கீழ்க்கண்டவாறு எழுதுகிருர் :

“21-8-’37 ஆம் தேதியன்று வெளிவந்த “அரிஜன்” சஞ்சிகையில், ‘அதிகாரப் பத்திரம் அல்ல’ என்ற தலைப்பின் கீழ் தாங்கள் எழுதியுள்ள கட்டுரையின் இரண்டாம் பத்தியில், ‘காங்கிரஸ் விஞ்ஞாபனம், தீர்மானங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் பார்த்தாலுங்கூட, பதவி ஏற்பு என்பது எனக்கு ஒரு தனிப் பொருள் அளிக்கிறது. ஆகவே, அமைச்சர்கள் பொதுமக்கள் ஆகியோர் முன் பதவி ஏற்பைப் பற்றிய என்னுடைய கருத்தைத் தெரிவிக்காவிட்டால் அது தவருகும்’ என்று கூறியிருக்கிறீர்கள். நான் தங்களைப் புரிந்து கொண்ட அளவில் பொது மக்களுக்குச் சேவை செய்வதற்காகவும் நிர்மாணத் திட்டத்தின் மூலமாகக் காங்கிரசின் நிலையைப் பலப்படுத்துவதற்காகவுமே பதவி ஏற்கவேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனல் பதவி ஏற்பைப் பற்றித் தங்களுடைய கருத்தென்ன என்பதைத் தாங்கள் இன்னும் விவரமாக விளக்க வேண்டுமென்று எண்ணுகிறேன்.”

**நிர்மாணத் திட்டம்**

சரியோ தவருே, 1920 இலிருந்து, காங்கிரஸ் மனேபாவம் கொண்ட மக்களிடையே, இந்தியாவின் மீது பிரிட்டிஷ் ஆதிக்கம் இருப்பது மொத்தத்தில் ஒரு சாபக்கேடுஎன்ற உறுதியான கருத்து பதிந்துவிட்டது. பிரிட்டிஷ் ஆதிக்கம் பிரிட்டிஷ் ஆயுத பலத்தால் காப்பாற்றப்படுவதைப் போலவே, சட்டசபைகள், நீதி மன்றங்கள், கல்வி ஸ்தாபனங்கள், நிதிக் கொள்கை, பட்டங்கள் வழங்குதல் மற்றும் இது போன்றவற்ருலும் காப்பாற்றப்பட்டு வருகிறது. ‘துப்பாக்கிகளைக் கண்டு அஞ்சக்கூடாது. ஒரு அமைப்பாக நிறுவப்பட்டுள்ள இம்சைக்கு பிரிட்டிஷாரின் துப்பாக்கிகள் ஒரு அப்பட்டமான சின்னம். ஆகவே ஒழுங்குபடுத்தி அமைக்கப்பட்டுள்ள இந்த இம்சையை ஒழுங்குபடுத்தி அமைக்கப்பட்ட மக்களின் அஹிம்சை மூலம்தான் எதிர்க்க வேண்டும். சட்டசபைகளையும்

மற்றவைகளேயும் ஒத்துழையாமையின் மூலம் வெல்லவேண்டும்' என்ற முடிவுக்குக் காங்கிரஸ் வந்தது. முன்னுல் கூறப்பட்ட ஒத் துழையாமைத் திட்டத்திற்கு ஆதரவாக உள்ள ஒரு பலம் வாய்ந்த பலன் தரத்தக்க, ஆக்கமுறையிலான தரப்பு இருக்கிறது. இது தான் நிர்மாணத் திட்டம் என்று அழைக்கப்பட்டது. 1920-இல் வகுக்கப்பட்ட செயல் திட்டம் எந்த அளவுக்கு வெற்றியடை கிறதோ அந்த அளவுக்கு நாடு வெற்றியடையும்.

### மாறவில்லே

இந்தக் கொள்கை ஒருபோதும் மாறுதல் அடையவில்லே: அதன் வாசகத்தில் உள்ள சொற்களேக் கூடக் காங்கிரஸ் மாற்றி விடவில்லே. பின்னுல் காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானங் களெல்லாம், மூலத் தீர்மானத்தை அகற்றிவிடுவதாக இல்லே; அதற்கு மாருக அதை நிறைவு செய்வனவாகவே இருக்கின்றன - இவைகளுக்கு ஆதாரமாக உள்ள மனேபாவம் மட்டும் 1920-இல் இருந்ததைப் போன்றதாக இருக்கும்வரை.

திட்டமிட்ட தேசிய அஹிம்சையே 1920-இல் வகுக்கப்பட்ட கொள்கையின் அடிப்படை. பிரிட்டிஷ் முறை உயிரற்றுப் போய் விட்டது. ஏன், சாத்தானேப்போன்று ஆகிவிட்டது. ஆனுல் அம் முறைக்கு ஆதரவாக இருந்த ஆண்களும் பெண்களும் அவ்வாறு ஆக வில்லே. ஆகவே அம் முறையின் கீழ்ப் பணியாற்றும் நிருவாகிகளின் மனதை மாற்றவேண்டும் என்பதே நமது அஹிம்சையின் நோக்கம். அவர்களே அழிப்பதல்ல. இந்த மாறுதல் மனப்பூர்வமானதாக இருக்கலாம், அல்லது இல்லாமல் இருக்கலாம். அவர்களுடைய விருப்பம் வேருெரு விதமாக இருக்கலாம். ஆயினும் தங்களுடைய அதிகாரத்தைப் பலப்படுத்துவதற்காக அவர்கள் இங்கு படைத் துள்ள துப்பாக்கிகளும் மற்ற எல்லாப் பொருள்களும், நாம் அவை களேப் பயன்படுத்தாததன் காரணமாய் பயனற்றவையாகப் போய் விட்டன என்று கண்டு கொண்டால், தவிர்க்க முடியாத ஒன் றுக்கு அவர்கள் பணிந்துதானுக வேண்டும். ஆகவே ஒன்று அவர் கள் இங்கிருந்து வெளியேறிச் சென்றுவிட வேண்டும். அல்லது, நம் முடைய நிபந்தனேப்படி இங்கே தங்கியிருக்க வேண்டும். அதாவது, அவர்களுடைய கருத்தை நம்மீது திணிக்கும் ஆட்சியாளர்களாக அல்லாமல் நம்முடன் ஒத்துழைக்கும் நண்பர்களாக இங்கு அவர்கள் தங்கவேண்டும் என்ருகிறது.

### அஹிம்சையின் பொருள்

இந்த மனேபாவத்துடன் காங்கிரஸ்காரர்கள் சட்டசபைகளுக் குள் நுழைந்து பதவி ஏற்றிருந்தால், கால கெடு இன்றி காங்கிரஸ்

அமைச்சர்கள் பதவி வகிப்பதை பிரிட்டிஷ் ஆட்சியாளரும் சகித்துக் கொள்வதாக இருந்தால், இந்தச் சட்டத்தை உடைத்தெறிவதிலும் முழு விடுதலை அடைவதிலும் காங்கிரஸ் பெரும் வெற்றியடையும். ஏனெனில், நான் கூறிய நிபந்தனைகளின்படி கால கெடு இன்றி அமைச்சரவைகள் நீடிப்பதானது, பிறர் எதிர்க்க முடியாத, எல்லையில்லாத அளவுக்குக் காங்கிரசின் பலத்தை வளர்க்கும் என்பதுடன், காங்கிரஸ் சொன்னபடி நடப்பதும் சாத்தியமாகும். ஆனல் இப்படிப்பட்ட இலட்சியத்தை அடைவதற்குத் தவிர்க்க முடியாத முதல் நிபந்தனை ஒன்று உண்டு. அதுதான் மக்கள் எல்லோரும் ஒருமித்து அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதாகும். இதன் பொருளென்ன? பூரண வகுப்புவாத ஒத்துழைப்பும் நல்லுறவும், தீண்டாமை ஒழிப்பு, குடி, அபின் பழக்கம் உடையவர்கள் மனம் மாறி அவைகளை விட்டுவிடுதல், மாதர்களின் சமூக சுதந்திரம், கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான பாட்டாளி மக்களின் படிப்படியான முன்னேற்றம், இலவசக் கட்டாய ஆதாரக் கல்வி – இன்று பெயரில் உள்ளதுபோல் அல்லாமல் உண்மையில், நான் குறிப்பிட்டதுபோல் – மொத்த மொத்தமாக வயது வந்தோருக்குக் கல்வி புகட்டுவதன் மூலம் தவருது தீமை பயக்கக் கூடிய மூடப்பழக்க வழக்கங்களைப் படிப்படியாக ஒழித்துக்கட்டுதல், ஒரு சில மத்தியதர வர்க்கத்தினருடைய தேவைகளை மட்டுமல்லாமல் கோடிக்கணக்கான மக்களின் தேவைகளை நிறைவு செய்யக் கூடியவாறு உயர்தரக்கல்வி முறையை முற்றிலும் சீர்படுத்தி அமைத்தல், செலவில்லாமல் தூய்மையான நீதி கிடைக்குமாறு நீதி வழங்கும் முறையில் தீவிர மாற்றம் செய்தல், சிறைச்சாலைகளில் சிறை வைப்பதென்பது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத் தண்டனை வழங்குவதாயில்லாமல் (உண்மையில் தாற்காலிகமாகப் புத்தி கெட்டுப் போனவர்களை நாம் குற்றவாளிகள் என்று கூறுகிறோம், அது தவறு) கைதிகளுக்கு வேண்டிய கல்வி முழுவதையும் அளிக்கக் கூடியவாறு சிறைச்சாலைகளைச் சீர்திருத்தச் சாலைகளாக மாற்றியமைத்தல் என்பதுதான் இதன் பொருள்.

### முடியாத திட்டம் அல்ல

ஒரு பயங்கரமான நீண்டகாலத் திட்டமாக இதை நான் கருதவில்லை. இங்கே நான் கூறியுள்ள ஒவ்வொரு யோசனையையும், நமக்கு மட்டும் திடமான உறுதி இருக்குமானல், எந்தவிதமான தங்குதடையுமின்றி இன்றே செயலுக்குக் கொண்டு வந்து விடலாம்.

## தனிப் பாதுகாப்பு எப்போது ?

பதவி ஏற்க வேண்டுமென்று நான் ஆலோசனை கூறியபோது, நான் சட்டத்தைப் படிக்கவில்லை. அதற்குப்பின் பேராசிரியர் கே. டி. ஷா எழுதிய "மாகாண சுயாட்சி"என்ற நூலைப் படித்துப் பார்த்தேன். அரசியல் சட்ட வல்லுநர்கள் கண்ணோட்டத்தில் இச் சட்டத்தைப் பற்றிக் கூறப்பட்ட ஒரு தீவிர, ஆனால், உண்மையான குற்றச்சாட்டு ஆகும் இந்நூல். ஆனால் காங்கிரஸ் மூன்று மாதங்கள் தன்னல மறுப்புச் செய்தது சூழ்நிலையையே மாற்றிவிட்டது. நான் கூறியுள்ள திட்டத்தைக் காங்கிரஸ் அமைச்சர்கள் நிறைவேற்றுவதற்குச் சட்டத்தில் எவ்விதத் தடையும் இருப்பதாக நான் காணவில்லை. நாட்டில் இம்சை தாண்டவமாடும்போதோ, அல்லது பெரும்பான்மையினர் என்று கூறப்படுவோருக்கும் சிறுபான்மையினருக்கும் இடையே சண்டை வரும் போதோ தான்—வேறு சொற்களில் சொல்வதானால் இதுவும் இம்சையே - தனி அதிகாரங்களும் பாதுகாப்புகளும் அமுலுக்கு வருகின்றன.

இத் தேசம் தன்னை ஆண்டு கொள்வதற்கான சக்தி படைத்தது என்பதில் சட்டத்திற்கு நம்பிக்கை இல்லை. அது முழு அவநம்பிக்கை கொள்கிறது. சட்டத்தின் ஒவ்வொரு பிரிவிலும் இந்த அவநம்பிக்கை ஊடுருவி இருப்பதை நான் காண்கிறேன். பிரிட்டிஷார் ஆட்சியை நிலைநிறுத்துவதில் உள்ள தவிர்க்கொணாத ஆசையையும் சட்டத்தில் நான் காண்கிறேன். அதே சமயம், பொதுமக்களைப் பிரிட்டிஷார் பக்கம் இழுப்பதற்கான தொரு தைரியமான முயற்சியையும் காண்கிறேன்; அது பலிக்காவிட்டால் பிரிட்டிஷார் ஆட்சியை அகற்றவேண்டும் என்று மக்கள் கொண்டுள்ள உறுதிக்குப் பணிவார்களென்பதையும் காண்கிறேன். இவ்வாறு மனமாற்றம் செய்ய நினைக்கிறார்களே அவர்களுடைய மனதை மாற்றுவதற்காகத்தான் காங்கிரஸ் உள்ளே போயிருக்கிறது. அஹிம்சை, ஒத்துழையாமை, சுயதூய்மை ஆகியவற்றைக் காங்கிரஸ் உண்மையிலேயே கைக்கொள்வதாய் இருந்தால், நிச்சயமாக அது தன் பணியில் வெற்றி பெறும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.[1]

அத்தியாயம் 26

# குற்றச்சாட்டுக்குப் பதில்

காங்கிரஸ் அமைச்சரவைகளைப்பற்றி (17–7–'37-ஆம் தேதி யன்று) நான் எழுதிய கட்டுரை,* பலருடைய கவனத்தைக் கவர்ந் திருக்கிறது, குற்றச்சாட்டிற்கும் ஆளாகியிருக்கிறது. இதற்கு நான் பதில் கூறியாக வேண்டும்.

## மதுவிலக்கு

### வருமான இழப்பு

முழு மதுவிலக்கை உடனடியாகக் கொண்டுவர விரும்பினல் எவ்வாறு கொண்டுவர முடியும்? 'உடனடியாக' என்று நான் கூறு வதன் மூலம், திட்டமிட்ட உடனடியான பிரகடனம் ஒன்றைப் பிறப்பிப்பதையே குறிப்பிடுகிறேன். முதல் காங்கிரஸ் அமைச்ச ரவை பதவி ஏற்ற நாளாகிய 1937 ஜுலை 14-ஆம் தேதியிலிருந்து மூன்று ஆண்டுகள் முடிவதற்குள் மதுவிலக்கு பூரணமாக அமுலுக்கு வந்துவிடும் என்று இந்தப் பிரகடனத்தில் அறிவித்துவிட வேண்டும். இதை இரண்டு ஆண்டுகளுக்குள் அமுல் நடத்துவது முற்றிலும் சாத்தியமே என்று நான் எண்ணுகிறேன். ஆனல் இதில் உள்ள நிர்வாகக் கஷ்டங்கள் எனக்குத் தெரியமாட்டா. ஆதலால், இதை நான் மூன்று ஆண்டுகளாகக் குறிப்பிட்டுள்ளேன். இதனல் ஏற்படக் கூடிய வருமான நஷ்டத்தைக் கொஞ்சங்கூடப் பொருட் படுத்த வேண்டியதில்லை. முதல்தரமான தேசிய முக்கியத்துவம் வாய்ந்த இப்பிரச்னையில், காங்கிரஸ் செலவைக் கணக்கிடுவதாய் இருந்தால், மதுவிலக்கென்பது கானல் நீராகவே முடியும்.

### இழிவு தரும் வரி

குடியிலிருந்தும் போதைப் பொருள்களிலிருந்தும் வருமானம் பெற முயல்வதானது, மிகமிக இழிவானதொரு வரிவிதிப்பு முறை யாகும் என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்வோமாக! எந்த வரி விதிப்பும் சரியாக இருக்க வேண்டுமானல், வரி செலுத்துவோருக்கு அத்தியாவசியமான சேவைகளின் ரூபத்தில் பன்மடங்கு திரும்பி வரவேண்டும். ஆனல் கலால் வரியோ மக்கள் தங்களுடைய தார்மிகமும், மனமும், உடலும் சீர்கேடு அடைவதற்காகச் செலுத்

* 21-ஆம் அத்தியாயம்.

தும் வரியாகும். இது, அந்த வரியைத் தாங்க முடியாதவர்கள் மீது ஏற்றிவைக்கப்படும் சுமையாகவும் அமைகிறது. இந்த வருமானம் பெரும்பாலும் தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்களிடமிருந்தே பெறப்படுகிறது. தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும் வயல்களில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கும் கிட்டத்தட்ட ஒரே பிரதிநிதியாக இருப்பது காங்கிரசேயாகும்.

## உண்மையில் இழப்பு அல்ல

வருமான இழப்புப் போன்று வெளியில் தோன்றலாம். ஆனால் நாணித் தலைகுனிய வைக்கும் இந்த வரியை அகற்றுவதானது, வரி செலுத்துபவராகிய குடிகாரர் இன்னும் சிறந்த முறையில் சம்பாதிக்கவும் செலவிடவும் உதவுகிறது. ஆகையால் அதனால் அவருக்குக் கிடைக்கும் மாபெரும் அனுகூலத்துடன் நாட்டிற்கும் கணிசமான பொருளாதார இலாபம் இருக்கிறது.

## பலன் கைமேல்

நான் மதுவிலக்கை முதலில் வைப்பதற்குக் காரணம் அது உடனடியாகப் பலன்தரும் என்பதனாலேயே. காங்கிரஸ்காரர்கள், குறிப்பாக மாதர்கள், அதற்காக ரத்தம் சிந்தியிருக்கிறார்கள். வேறு எந்தத் தனிப்பட்ட செயலினாலும் இதன் அளவு தேசிய கௌரவத்தை உயர்த்த முடியாது. ஆறு மாகாணங்களும் இதை அமுலுக்குக் கொண்டுவந்துவிட்டால், மற்ற ஐந்து மாகாணங்களும் அநேகமாக அவைகளைப் பின்பற்றிவிடும். குடி போதையில் இருப்பதைவிடத் தெளிந்த சிந்தனையுடன் இந்தியா இருப்பதை காங்கிரஸ் அல்லாத முஸ்லிம் முதல் அமைச்சர்களும் காங்கிரஸ் முதல் அமைச்சர்களைப் போல் விரும்புகின்றனர்.

## அமெரிக்காவின் உதாரணம்

திருட்டுத்தனமாக மதுக் காய்ச்சுதலைத் தடுப்பதற்காகும் செலவு மிகவும் அதிகமாக இருக்குமென்ற கூக்குரல் கிளம்புகிறது. வெளிவேஷமாகவோ அல்லது சிந்தனையின்றியோ போடப்படும் கூச்சல் இது. இந்தியா அமெரிக்கா அல்ல. அமெரிக்காவின் உதாரணம் நமக்கு உதவியாக இருப்பதற்குப் பதிலாக முட்டுக்கட்டையாகவே இருக்கிறது. அமெரிக்காவில் குடிப் பழக்கம் வெட்கப்படக் கூடியதல்ல. குடிப்பதென்பது அங்கே நாகரிகம். அமெரிக்காவில் உறுதியான உள்ளங் கொண்ட சிறுபான்மையினர் தங்களுடைய தார்மிக பலத்தை மட்டுங்கொண்டு, மிகக் குறுகிய காலமாயினும் மதுவிலக்கு அமுலுக்குவரச் செய்தனர். இது அவர்களுடைய மிகப்பெரிய சிறப்பையே காண்பிக்கிறது. அந்தச் சோதனை

தோல்வியடைந்துவிட்டதாக நான் கருதவில்லை. இன்னும் அதிக ஆர்வத்துடனும் அதிக அனுபவத்துடனும் மீண்டும் அமெரிக்கா மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவரவே வராது என்ற அளவுக்கு நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. இந்தியா மதுவிலக்கை நிறைவேற்றிவைத்துவிட்டால், அமெரிக்காவில் மதுவிலக்கு வருவதும் வேகமடையும். உலகிலேயே இந்தியாவில்தான் மதுவிலக்கைக் கொண்டுவருவது மிக எளிது. ஏனென்ருல், இந்தியாவில் குடிப் பழக்கம் உள்ளவர்கள் சிறுபான்மையினரே. இங்கே குடிப்பதென் பது பொதுவாகக் கௌரவக் குறைவான பழக்கமாகவும் கருதப்படு கிறது. மது எப்படியிருக்கும் என்பதை ஒருபோதும் அறியாத கோடிக்கணக்கான பேர் இங்கு இருக்கிருர்கள்.

### தடுப்பதற்கு அதிகச் செலவா?

மற்றக் குற்றங்களைத் தடுப்பதைவிடக் கள்ளத்தனமாக மது காய்ச்சுதலைத் தடுப்பதற்கு மட்டும் ஏன் அதிகச் செலவாக வேண் டும்? திருட்டுத்தனமாக மதுக் காய்ச்சுதலுக்குக் கடும் தண்டனையை ஏற்படுத்திவிட்டு, அப்புறம் அதைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் இருந்துவிடலாம். இவைகளில் சில, திருட்டைப்போலவே ஊழிக் காலம்வரை நீடித்துக் கொண்டிருக்கலாம். திருட்டுச் சாராயம் காய்ச்சுபவர்களைத் துருவிப்பார்த்துக் கண்டுபிடிப்பதற்காக நான் ஒரு தனி அமைப்பை நிறுவமாட்டேன். ஆனல், சட்டப்படி ஒழுங் கீனமாக நடந்து கொள்ளாவிட்டாலும் தெருக்களிலோ அல்லது பொது இடங்களிலோ குடித்துவிட்டு இருப்பதாகக் காணப்படுபவர் களை நான் தண்டிப்பேன். இவர்களுக்குக் கணிசமான அபராதம் விதிப்பேன். அல்லது, இவ்வாறு தவறு செய்பவன் தனது வாழ்க் கைக்கு வேண்டிய ஊதியத்தைத் தானே சம்பாதித்துக் கொள்ளும் காலத்தில் முடிவடையக் கூடியவாறு, காலவரையின்றிச் சிறைத் தண்டனை விதிப்பேன்.

### ஆக்கபூர்வமான சேவை

எனினும் இது எதிர்மறை அம்சமே. குறிப்பாக மாதர்களைக் கொண்டு நடைபெறும் சேவா நிறுவனங்கள் தொழிலாளர் பகுதி களில் பணியாற்றுவார்கள். குடிப் பழக்கம் உள்ளவர்களைச் சந்தித்து அவர்களை அப் பழக்கத்திலிருந்து திருப்ப அவர்கள் முயலுவார்கள். தொழிலாளர்களுக்காகத் தொழிலதிபர்கள் எளிய, சுகாதாரமான சிற்றுண்டிகள் வழங்கவும் படிப்பதற்கும் கேளிக்கைகளுக்குமான இடவசதிகள் செய்யவும் சட்டங்கள் பிறப்பிக்கப்படும். இந்த இடங் களுக்குச் சென்று தொழிலாளர்கள் ஓய்வு பெறவும் அறிவு பெறவும்

சுகாதாரமான உணவும் பானங்களும் பெறவும் தீமையற்ற கேளிக்கைகளில் பங்கு பெறவும் முடியும்.

இவ்வாறு, மதுவிலக்கு என்பது சாராயக் கடைகளை அடைப்பது மட்டுமல்ல, ஒருவகை தேசிய முதியோர் கல்வியு மாகும்.

**சட்டச் சிக்கல்**

மதுவிலக்கை எவ்வாறு தொடங்குவது? புதுக்கடை எதற்கும் அனுமதி வழங்காமல் தடுத்துவிடவேண்டும். மக்களுக்குத் தொல்லை யாகிவிடும் என்ற அபாயம் உள்ள சில கடைகளை மூடிவிட வேண்டும். பெரும் நஷ்ட ஈடு எதுவும் கொடுக்காமல் பின்னது எந்த அளவு சாத்தியமாகும் என்பது எனக்குத் தெரியாது. எப்படி யிருந்தாலும், பொதுவாக, காலாவதியாகும் 'லைசன்சுகளை'ப் புதுப் பிக்கக் கூடாது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் புதுக் கடை களைத் திறக்கக் கூடாது. வருமானத்தைப் பொறுத்தவரை எந்த விதமான சிந்தனையும் இல்லாமல், சட்டத்தில் எது உடனடியாகச் சாத்தியமோ அதைச் செய்ய வேண்டும்.

**முழு மதுவிலக்கு**

ஆனால், முழு மதுவிலக்கு என்பதன் பொருள் என்ன? அல்லது அதன் வரம்புதான் என்ன? போதை அளிக்கும் பானங்களையும் பிற பொருள்களையும் விற்பனை செய்வதைத் தடை செய்யவேண்டும். அரசாங்கத்தால் இதற்கென்றே அனுமதி வழங்கப்பட வேண்டும். மருத்துவர்கள் மருத்துவ காரணங்களுக்காகக் குறிப்பிட்டால் மட் டும் இதற்காகவென்றே வைக்கப்பட்டுள்ள அரசாங்கக் கடைகளில் மது வாங்கிக் கொள்ளலாம் என்ற விதிவிலக்கை அளிக்கவேண்டும். மது இல்லாமல் வாழமாட்டார்கள், அல்லது, அவர்களால் வாழ முடியாது என்ற நிலையில் உள்ள ஐரோப்பியர்கள் பயன்படுத்துவ தற்காக மட்டும் ஒரு குறிப்பிட்ட அளவில் வெளிநாட்டு மது பானங்களை இறக்குமதி செய்யலாம். இவைகளும் சில குறிப்பிட்ட பகுதிகளில், அங்கீகாரம் பெற்ற சான்றுகளுடன் வருபவர்களுக்கு புட்டிகளில் விற்கப்பட வேண்டும். உணவு விடுதிகள் மது பானங்களை விற்பதை நிறுத்திவிடவேண்டும்.

## விவசாயிகள்

அப்புறம், விவசாயிகளுக்கு உதவி அளிப்பது பற்றிய பிரச்னை என்ன? அளவுக்கு மீறிய வரி விதிப்பு, தாங்க முடியாத குத்தகை அல்லது வாரம், சட்ட விரோதமான கொடுந்தண்டல்கள், ஒரு போதும் முழுவதும் திருப்பி அளிக்க முடியாத கடன், எழுத்

தறிவின்மை, மூடநம்பிக்கை, பெரும்பாலும் பரம ஏழைகளுக்கே வரக் கூடிய நோய் ஆகியவைகளால் இவர்கள் நசுக்கப்படுகின்றனர். எண்ணிக்கையில் எடுத்துக் கொண்டாலும் சரி, பொருளாதார அவல நிலையை எடுத்துக் கொண்டாலும் சரி, உழவர்களே முதல் கவனம் செலுத்த வேண்டியவர்களாய் இருப்பார்கள். ஆனுல் விவசாயிகள் துன்ப நிவாரணம் என்பது ஒரு பரந்த, விரிவான திட்டம். அதை ஒரே மொத்தமாகத் தீர்த்து வைத்து விட முடியாது. எங்கும் வியாபித்து நிறைந்துள்ள இப்பிரச்ஊேயைத் தீர்த்துவைக்க முன் வராத காங்கிரஸ் அமைச்சரவையும் பத்து நாட்களுக்கு மேல் நீடிக்க முடியாது. ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் இயல்பாகவே - இது பெரும்பாலும் செயலளவுக்கு வராமல் இருக்கலாம் - இப்பிரச்ஊேயில் அக்கறையுள்ளவராக இருக்கிறுர். காங்கிரஸ் தோன்றிய காலத்திலிருந்து இந்த மரபு அவருக்குப் பரம்பரைச் சொத்தாகக் கிடைத்திருக்கிறது. காங்கிரஸ் தோன்றியதற்கு முதற்காரணம் விவசாயிகளின் இன்னல்கள்தான் என்று கூறலாம். இந்தப் பிரச்ஊே அலட்சியம் செய்யப்படும் என்ற அச்சம் என்றும் இருந்ததில்ஃல; இன்றும் இல்ஃல. மதுவிலக்கைப் பற்றி இவ்வாறு கூற முடியாது என்று அஞ்சுகிறேன். மதுவிலக்கு, காங்கிரஸ் திட்டத்தில் பிரித்தெடுக்க முடியாத ஒரு அம்சமானது 1920 இல் தான். இப்போது காங்கிரஸ் பதவிக்கு வந்திருக்கிறது. நாசம் விஊேவிக்கும் இத்தீமையை ஒரேயடியாகத் தைரியமாகவும் கடுமையாகவும் நடவடிக்கை எடுத்து ஒழிக்க வேண்டும். அப்போதுதான் பதவியில் இருக்க காங்கிரசுக்கு தார்மிக உரிமை கிடைக்கும் என்பது எனது கருத்து.

## கல்வி

கல்விப் பிரச்ஊேயை எவ்வாறு தீர்த்து வைப்பது? மதுவினுல் கிடைக்கக்கூடிய வருமான இழப்புப் பிரச்ஊேயுடன் தீவிஊேப்பயனுக இப்பிரச்ஊே இஊேக்கப்படுகிறது. புதுவரிகள் விதிப்பதற்கான வழி வகைகள் இருக்கின்றன என்பதில் ஐயமில்ஃல. இந்த ஏழை நாட்டிற்கும் புது வரி அளிக்கக் கூடிய சக்தி இருக்கிறது என்பதைப் பேராசிரியர்கள் ஷாவும் கம்பட்டாவும் எடுத்துக்காட்டியிருக்கிறுர்கள். செல்வங்களுக்குப் போதுமான அளவு இன்னும் வரி விதிக்கப்படவில்ஃல. உலகத்திலுள்ள மற்ற எல்லா நாடுகஃாயும்விட இந்த நாட்டில், தனிப்பட்டவர்கள் அளவுக்கு மீறிய சொத்து வைத்திருப்பது இந்திய சமுதாயத்திற்கு இழைக்கப்பட்ட அநீதியாகக் கருதப்பட வேண்டும். ஆகையால் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் உள்ள செல்வத்திற்கு வரி விதிக்க ஒருபோதும் மேல் வரம்பு

இருக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் உள்ள வருமானத்திற்கு, இங்கிலாந்தில் 70 சதவீதம் வரை வரி விதிக்கிருர்கள் என நான் அறிகிறேன். ஆகவே இதைக் காட்டிலும் அதிகமான வரியை ஏன் இந்தியா விதிக்கக் கூடாது என்பதற்குக் காரணமே இல்லே. ஏன் இங்கு மரண வரி விதிக்கக் கூடாது? கோடீஸ்வரர்களின் புத்திரர்கள் வயதுவந்த பின்பும் தங்கள் தகப்பனர் தேடிய சொத்தைப் பெறுகின்றனர். இதனல் அவர்களுக்கு நட்டமே தவிர இலாபமில்லே. நாட்டிற்கோ இரண்டு வழிகளில் நட்டம் ஏற்படுகிறது. ஏனெனில், இந்தச் சொத்து நியாயமாக நாட்டிற்குத்தான் கிடைக்க வேண்டும். மேலும், செல்வத்தின் பாரத்தில் நசுங்கிப் போய், வாரிசுதாரர்களின் முழுத் திறமையும் வெளிப்படுவதில்லே. இதனலும் நாட்டிற்கு நட்டம் ஏற்படுகிறது. மாநில அரசாங்கங்களால் மரணவரி விதிக்க முடியாது என்பதால் எனது வாதம் சரியில்லாமற் போய் விடாது.

## கல்வியில் சுயதேவைப் பூர்த்தி

ஆனல் ஒரு தேசம் என்ற முறையில் நாம் கல்வியில் மிகவும் பின்னடைந்திருக்கிருேம். எந்தக் கல்வித் திட்டமும் பணத்தை நம்பியிருப்பதானல் இந்தச் சந்ததியில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் கல்வித் துறையில் நாம் செய்ய வேண்டிய பொறுப்புகளே நிறைவேற்றி வைக்க முடியாது. அதனல்தான், நிர்மாண வேலேத்திறனில் எனக்குள்ள புகழெல்லாம் போய்விட்டாலும் பரவாயில்லே என்று எண்ணி, தைரியமாக, கல்வி சுயதேவைப் பூர்த்தி உடையதாக இருக்க வேண்டும் என்று யோசனே கூறியிருக்கிறேன்.

## அதிகாரிகள்

...அமைச்சர்களுடைய கொள்கையை நிறைவேற்றி வைப்பதற்கு திட்டமிட்டுச் செயலாற்றுந் திறனுடன் கட்டுக்கோப்பாக அமைந்துள்ள சிவில் சர்விஸ் அதிகாரிகள் இருக்கிருர்கள். நிலேயான புத்தி இல்லாமல் மனம் போன போக்கிலெல்லாம் செயல்படும் கவர்னர்களும் வைசிராய்களும் வகுத்த கொள்கைகளேக் கூட நடைமுறையில் எவ்வாறு அமுலுக்குக் கொண்டுவருவது என்ற கலேயை அதிகாரிகள் நன்கு கற்றிருக்கிருர்கள். நன்கு சிந்தித்து ஒரு திட்டமான கொள்கையை அமைச்சர்கள் வகுப்பார்களாக. சிவில் சர்விஸ் அதிகாரிகள் அவர்கள் சார்பில் அளிக்கப்பட்ட வாக்குறுதியை நிறைவேற்றி, தாங்கள் உண்ணும் உப்பிற்குச் சரியான முறையில் நன்றிக் கடன் செலுத்துவார்களாக!

## சிறைகள்

சிறைகள் சுயதேவைப் பூர்த்தி அடையுமாறு செய்யவேண்டும்; அதற்கான முறையில் அவைகளைச் சீர்திருத்தச்சாலைகளாக்க வேண்டும் என்று நான் கூறிய யோசனையை அவ்வளவு கடுமையாக யாரும் குறைகூறவில்லை. ஒரே ஒரு கருத்து மட்டும் கூறப்பட்டிருக்கிறது. கடைகளில் விற்கக் கூடிய சாமான்களை சிறைச்சாலைகள் உற்பத்தி செய்வதானால், மார்க்கெட்டுடன் அவை நியாயமற்ற முறையில் பகிரங்கப் போட்டியிடுவதாகும் என்று கூறுகிறார்கள். இந்தக் குற்றச்சாட்டில் சாரமே இல்லை. 1922-இல் எரவாடாவில் நான் கைதியாக இருந்தபோதே இதை எதிர்பார்த்தேன். அப்போது உள்துறை அமைச்சராக இருந்தவர், சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல், நான் சிறைச்சாலையில் இருந்த காலத்தில் தொடர்ந்து பதவிக்கு வந்த இரண்டு சிறைச்சாலை சூபரின்டெண்டுகள் ஆகியோருடன் எனது திட்டத்தை விவாதித்தேன். அவர்களில் ஒருவராவது என் யோசனையைக் குறைகூறவில்லை. உள்துறை அமைச்சரோ அதில் உற்சாகமுங் காட்டினர். கவர்னரிடமிருந்து அவரால் அனுமதி பெறமுடியுமானால், அதன்பின் நான் என்னுடைய திட்டத்தை எழுத்தில் கொடுக்கவேண்டுமென்றும் விரும்பினர். ஆனால் மேன்மை தங்கிய கவர்னர், ஒரு சிறைக் கைதி சிறை நிருவாகம் சம்பந்தமாக ஆலோசனைகள் கூறுவதைக் கேட்கத் தயாராயில்லை! ஆகையால் என்னுடைய திட்டம் அரங்கிற்கு வரவில்லை. ஆனால் அத்திட்டத்தின் கர்த்தாவாகிய நானே, முதன் முதலாக அதை வகுத்தபோது அது சரியானது என்பதில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தேனே அவ்வளவு நம்பிக்கை இன்றும் வைத்திருக்கிறேன். அந்தத் திட்டம் இதுதான்: இலாபகரமாக இல்லாத தொழில்களையெல்லாம் சிறைகள் நிறுத்தி விடவேண்டும். சிறைச்சாலைகளையெல்லாம் கையால் நூற்றுக் கையால் நெய்யும் நிறுவனங்களாக மாற்றிவிட வேண்டும். (எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம்) மென்மையான துணி வகைகளை உற்பத்தி செய்வதற்கான பருத்தி வகைகளை விளைவிப்பதையும் இதில் சேர்த்துக் கொள்ளவேண்டும். இதற்கான ஒவ்வொரு வசதியும் ஏற்கெனவே சிறைச்சாலைகளில் இருக்கிறது. மனந்தான் வேண்டும். கைதிகளை ஏதோ தவறு செய்துவிட்டவர்களாகக் கருதவேண்டுமே தவிர, இழிவாக நடத்தவேண்டிய குற்றவாளிகளாகக் கருதக்கூடாது. 'வார்டர்'கள் சிறைக் கைதிகள் கண்களுக்குப் புலிகள் போன்றும் கரடிகள் போன்றும் தோன்றுவது நிற்கவேண்டும். சிறை அதிகாரிகள் அவர்களுடைய நண்பர்களாகவும் ஆசான்களாகவும் இருக்க வேண்டும். இதில் இன்றியமையாத

ஒரு நிபந்தனை என்னவென்றால், சிறைச்சாலைகளில் உற்பத்தியாகும் கதர் முழுவதையுமே அசல் விலைக்கு அரசாங்கம் வாங்கிக்கொள்ள வேண்டும். இதற்கு மேலும் உபரி இருந்தால், சிறிது அதிக விலை கொடுத்துப் பொதுமக்கள் அதை வாங்கிக் கொள்ளலாம். இதனால் கிடைக்கும் சிறிது அதிகத் தொகை, விற்பனை டிப்போவை நடத்துவதற்காகும் செலவைச் சரிக்கட்டும். என்னுடைய யோசனையை ஏற்பதாக இருந்தால், சிறைச்சாலைகள் கிராமங்களுடன் தொடர்பு கொள்ளும்; கதரின் செய்தியை அவை கிராமங்களில் பரப்பும்; விடுதலை பெற்ற கைதிகள் நாட்டின் முன்மாதிரிக் குடிமக்களாவார்கள்.

## உப்பு

உப்பு மத்திய அரசாங்க அதிகாரத்திற்கு உட்பட்டதாகையால் பாவம், மாநில அமைச்சர்கள் அதில் ஒன்றும் செய்ய முடியாது என்று என்னிடம் கூறப்பட்டது. அவர்களால் முடியாவிட்டால், நான் மன வருத்தத்துடன் வியப்புமடைவேன். மாநிலப் பகுதிகளில் தான் மத்திய அரசு ஆட்சி புரியவேண்டியிருக்கிறது. இந்திய அரசாங்கம் கூட நியாய விரோதமாகத் தமது மாநில மக்களிடம் நடந்து கொள்ளாமல் பாதுகாக்க வேண்டியது ஒவ்வொரு மாநில அரசாங்கத்தின் கடமையுமாகும். அந்தந்த மாநிலங்களில் உள்ள மக்கள் நியாய விரோதமாக நடத்தப்படுவதற்கு அமைச்சர்கள் எதிர்ப்புத் தெரிவித்தால், அதை ஆதரிக்க கவர்னர்கள் கடமைப் பட்டிருக்கிறார்கள். அமைச்சர்கள் மட்டும் எச்சரிக்கையாக இருப்பதானால், மத்திய அரசாங்கத்தின் அனாவசியமான குறுக்கீடு இல்லாமலேயே ஏழைக் கிராமவாசிகள் உப்பு எடுப்பதில் எந்த விதமான இன்னலும் இருக்க முடியாது. இப்படிப்பட்ட அனாவசியமான குறுக்கீடு எதுவும் ஏற்படும் என்ற அச்சமெதுவும் எனக்கில்லை.

### எதற்காகக் கூறுகிறேன்?

முடிவாக நான் ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். மதுவிலக்கு, கல்வி, சிறை ஆகியவைகளைப்பற்றி நான் கூறியவையெல்லாம் காங்கிரஸ் அமைச்சர்கள், இதில் அக்கறையுள்ள பொது மக்கள் ஆகியோருடைய ஆலோசனைக்காகக் கூறப்பட்டவையே. நான் நீண்ட காலம் விடாப்பிடியாகக்கொண்டிருக்கும் கருத்துகளை - அவை எவ்வளவுதான் விந்தையானவையாகவும் கற்பனையானவையாகவும் நடைமுறைச் சாத்தியமற்றவையாகவும் விமர்சகர்களுக்குத் தோன்றினாலும் - பொது மக்களிடமிருந்து மறைத்துவைக்கக் கூடாதல்லவா?

## அத்தியாயம் 27

# காங்கிரஸ் அமைச்சர்களின் நால்வகைப் பொறுப்புகள்

### நான்கு விதப் பொறுப்புக்கள்

காங்கிரஸ் அமைச்சர்களுக்கு நான்கு விதப் பொறுப்புகள் இருக்கின்றன. ஒரு தனிப்பட்ட மனிதர் என்ற முறையில், ஒரு அமைச்சர் தனது தொகுதி வாக்காளருக்கு முக்கிய பொறுப்பாவார். அவர்களுடைய நம்பிக்கையைத் தாம் பெறவில்லையென்று எப்போ தாவது அவருக்கு உறுதியாகத் தெரிந்தால், அல்லது, எந்தக் கருத் திற்காக அவரைத் தேர்ந்தெடுத்தார்களோ அந்தக் கருத்தை அவர் மாற்றிக் கொண்டால், அவர் பதவியிலிருந்து விலகிவிடுவார். கூட்டாக அமைச்சர்களெல்லாம் சட்ட சபை உறுப்பினர் களில் பெரும்பாலானவர்களுக்குப் பொறுப்பாவார்கள். இச் சட்டசபை உறுப்பினர்கள், ஒரு நம்பிக்கையில்லாத் தீர் மானத்தின் மூலமோ அல்லது அதைப் போன்ற ஒரு நட வடிக்கையாலோ எந்தச் சமயத்திலும் அவர்களைப் பதவியி லிருந்து விரட்டி விடலாம். இத்துடன் ஒரு காங்கிரஸ் அமைச்ச ரானவர் தமது பதவிக்கும் பொறுப்புக்கும், மாகாண காங்கிரஸ் குழு வுக்கும் அனைத்து இந்தியக் காங்கிரஸ் குழுவுக்கும் கூடக் கடமைப் பட்டிருக்கிறார். இந்த நான்கு அமைப்புகளும் ஒன்றுபட்டுச் செயல் படும்வரை, அமைச்சர்கள் தங்களுடைய கடமையைத் தங்கு தடை யில்லாது எளிதாக ஆற்றிவர முடியும்.

### சரியில்லாத குற்றச்சாட்டு

அண்மையில் நடைபெற்ற அனைத்து இந்தியக் காங்கிரஸ் குழுக் கூட்டத்தில், அதன் உறுப்பினர்களில் சிலர் காங்கிரஸ் அமைச்சரவைகளுடன் கருத்து ஒன்றுபடவில்லையென்பது தெரிந் தது. குறிப்பாக, சென்னை மாநிலத் தலைமை அமைச்சராகிய திரு. சி. இராஜகோபாலாச்சாரியுடன் கருத்து ஒன்றுபடவில்லை. நல்ல, விவரமான, சமநிலையான விமர்சனம், பொதுவாழ்க்கைக்கு ஒரு 'டானிக்' போன்றதாகும். பொதுமக்கள் இடைவிடாத கண் காணிப்புடன் இருந்து வந்தாலொழிய, எவ்வளவு பெரிய ஜன நாயக வாதியான அமைச்சரும் தவறு செய்து விடக்கூடும். ஆனால் காங்கிரஸ் அமைச்சரவைகளைக் கண்டித்து அகில இந்தியக் காங்கிரஸ் குழுவில் கொண்டுவரப்பட்ட தீர்மானத்தை, அதைக் காட்டிலும் அங்கு நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவுகளை, இவ்வாறு

கூறமுடியாது. குறை கூறியவர்கள் உண்மையான நிலவரம் என்ன வென்பதை ஆராய்வதில் கவனம் செலுத்தவேயில்லை. திரு. சி. இராஜகோபாலாச்சாரியாரின் மறுமொழி அவர்கள் முன் இல்லை. இங்கு வந்து, தம்மீது குறை கூறியவர்களுக்கு மறுமொழி அளிக்க அவர் மிகவும் ஆவலாயிருந்தார் என்பதை அவர்கள் அறிவார்கள், ஆனால், கடும் நோய் அவர் இங்குவர இயலாமல் தடுத்து விட்டது. தீர்மானத்தை ஆராய்வதைத் தள்ளி வைக்கவேண்டு மென்ற யோசனையை, குறை கூறியவர்களின் பிரதிநிதி ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். இது குறித்து ஜவாகர்லால் நேரு தமது விரிவான அறிக்கையில் என்ன கூறியிருக்கிறார் என்பதை அவர்கள் ஆராய்ந்து மனதிற்கொள்வார்களாக! குறை கூறியவர்கள் தங்களுடைய நடவடிக்கையின் மூலம் சத்தியம், அஹிம்சையி லிருந்து விலகிச்சென்று விட்டார்களென்று எனக்கு உறுதியாகப் புலப்படுகிறது. அவர்களுடைய தீர்மானத்தை அகில இந்தியக் காங்கிரஸ் குழு ஏற்றுக் கொண்டிருந்தால், குறைந்தது சென்னை அமைச்சரவையாவது, பெரும்பான்மையான சட்ட சபை உறுப்பி னர்களின் நம்பிக்கையை அது பெற்றிருக்கிறது என்பது வெளிப் படையாகத் தெரிந்தாலுங் கூடப் பதவியிலிருந்து விலகியிருக்கும். நிச்சயமாக, அது ஒரு விரும்பத்தக்க முடிவாகவும் இருந்திராது.

**மைசூர் தீர்மானம்**

என்னுடைய கருத்துப்படி, இதைக் காட்டிலும் விறுவிறுப் பானது மைசூர் தீர்மானமாகும். அதில் வருந்தத்தக்கது என்ன வென்றால், சத்தியத்திற்காகப் பரிந்து பேசுவதற்குக் கிட்டத்தட்ட யாரும் இல்லாமல் அத்தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது என்பதுதான். நான் மைசூருக்காக வக்காலத்து வாங்கவில்லை. மைசூர் மன்னர் சீர்திருத்தம் செய்ய வேண்டிய எத்தனையோ காரியங்கள் இருக்கின்றன. ஆனால் ஒரு எதிரிக்கும் அவருக்கு உரிய சந்தர்ப்பத்தை அளிக்க வேண்டும் என்பது காங்கிரசின் கொள்கை. என்னுடைய கருத்துப்படி மைசூர் தீர்மானமானது, சமஸ்தான விவகாரங்களில் குறுக்கிடுவதில்லை என்ற தீர்மானத் திற்கு நேர் விரோதமானதாகும். நான் அறிந்த வரை இந்தத் தீர்மா னம் மீறப்பட்டதேயில்லை. அகில இந்தியக் காங்கிரஸ் குழுத் தீர்மா னங்களின் தராதரங்களைப் பார்க்கும்போது, அது சமஸ்தானத்தைப் பற்றி மொத்தமாக எந்தத் தீர்மானத்தையும் நிறைவேற்றவில்லை. அடக்கு முறைக் கொள்கையைப்பற்றி மட்டுந்தான் அத்தீர்மானங் கூறுகிறது. அங்குள்ள நிலவரத்தை இத்தீர்மானம் சரியாக எடுத் துரைக்கவில்லை. அங்கு நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளெல் லாம் ஆத்திரத்துடன், உண்மை நிலவரங்களை மனதிற்

கொள்ளாமல் நிகழ்த்தப் பெற்றவையாகும். அகில இந்தியக் காங்கிரஸ் குழுவுக்கு மனதிருந்தால், ஒரே ஒருவரைக் கொண்ட குழுவையாவது நியமித்து, தான் தீர்ப்புக் கூறுவதற்கு முன் உண்மை நிலவரத்தை அறிந்திருக்க வேண்டும். சத்தியத்தையும் அஹிம்சையையும் அது கொஞ்சமாவது பொருட்படுத்துவதாய் இருந்தால், இவ்விவகாரங்களில் காங்கிரஸ் செயற்குழு தனது தீர்ப்பை அளிக்குமாறு செய்திருக்க வேண்டும். அப்புறம் அவசியமானல் ஒரு நியாயாதிபதியைப் போன்று இருந்து அவைகளை ஆராய வேண்டும். அது குறைந்த அளவு செய்யக் கூடியது இதுதான். இதர இரண்டு தீர்மானங் களிலுமே நான் கூறுவது சரிதான் என்பதை மெய்ப்பிக்க நுணுக்க மான விவரங்களெதையும் நான் எடுத்துக் கொள்ளவில்லை; வேண்டுமென்றேதான் இதைத் தவிர்த்திருக்கிறேன். என்னுடைய சக்தி ஒரு வரம்புக்கு உட்பட்டது. அதை நான் பாதுகாத்துக் கொள்ள விரும்புகிறேன். இவ்விஷயத்தை அகில இந்தியக் காங் கிரஸ் குழு உறுப்பினர்களின் நல்லெண்ணத்திற்கு நான் விட்டுவிடு கிறேன். 1920ஆம் ஆண்டிலிருந்து இக்குழுவுக்கு ஒரு தனி முக் கியத்துவம் இருக்கிறது. பதவி ஏற்பது என்று முடிவு செய்யப் பட்டபின்போ இந்த முக்கியத்துவம் மேலும் அதிகமாகிவிட்டது.

அத்தியாயம் 28

# மதுவிலக்கு

## 1. மதுவிலக்கும் அரசின் வருமானமும்

### தப்பிக்க முடியாது

மதுவிலக்குச் செய்ய வேண்டுமென்ற கோரிக்கை எப்போதுமே நவ நாகரிகமானதாகக் கருதப்படுகிறது. 1920 இல் அது காங்கிரசின் தலையாய நிர்மாணத் திட்டங்களில் ஒன்ருகியது. ஆகையால் இந்தியாவின் எந்தப் பகுதியில் காங்கிரஸ் பதவிக்கு வந்தாலும் அது உடனடியாக முழு மதுவிலக்கைக் கொண்டு வராமல் இருக்க முடியாது. ஆறு மாநிலங்களில் அரசுக்கு வரக் கூடிய பதிஞேறு கோடி ரூபாய் வருமானத்தை இழக்கும் தைரியமும் அமைச்சர்களுக்கு வேண்டி இருந்தது. தனது வாக்குறுதியைக் காப்பாற்றவும், மதுவிற்கும் போதைப் பொருள்களுக்கும் இலக்கானவர்களுடைய தார்மிக, லோகாயத நலனைப் பாதுகாக்கவும், காங்கிரஸ் செயற்குழு இந்த அபாயத்தைத் துணிச்சலுடன் ஏற்க வேண்டியதாயிற்று.

### பலர் ஐயப்பாடு

மதுவிலக்கு வெற்றி அடையுமா என்பதில் பலர் ஐயப்பாடு உள்ளவர்களாய் இருக்கின்றனர். இதை நான் அறிவேன். 'நிதியின் கவர்ச்சி மிகவும் பலம் வாய்ந்ததாக இருக்கும். அதை நாம் எதிர்க்க முடியாது' என்று அவர்கள் எண்ணுகிருர்கள். 'குடிகாரர்கள் எப்படியும் தங்களுக்கு வேண்டிய மதுவையும் போதைப் பொருள்களேயும் வாங்கிவிடுவார்கள். திருட்டுத்தனமாக உபயோகித்து விடுவார்கள். ஆதலால் மதுப் பழக்கம் கணிசமாகக் குறையாது. மதுவிலக்கு என்பது வெறும் வருமான நட்டமாகத்தான் முடியும். இதை அமைச்சர்கள் கண்டு பிடித்தவுடனேயே, மீண்டும் மதுவின் மூலம் வருமானம் பெறும் வழிக்குத் திரும்பி விடுவார்கள். அப்போது அரசாங்கம் தற்போதுள்ளதைக் காட்டிலும் மோசமான நிலேயை அடையும்' என்று இவர்கள் வாதிக்கிருர்கள்.

### கல்விக்குச் செலவு வேண்டாம்

சில மாநிலங்களின் வருமானத்தில் மூன்றில் ஒரு பகுதியை நாம் இழக்க வேண்டியிருக்கிறது. இந்த வருமான

இழப்பை இப்போது நாம் எவ்வாறு ஈடுகட்டுவது? கல்விக்காகும் செலவிற்காகத்தான் முக்கியமாகக் கலால் வரி பயன்படுத்தப்படுகிறது. ஆகையால், கல்விக்காகும் செலவை அகற்றிவிடலாம் என்று நான் எவ்விதத் தயக்கமும் இன்றி ஆலோசனை கூறியிருக்கிறேன். கல்வி தன்னிறைவு உள்ளதாகச் செய்ய முடியும் என்று இன்று கூட நான் கூறுகிறேன்......வருமானத்திற்கான புது வழிவகைகளை நாம் கண்டுபிடித்தாக வேண்டும். மரண வரி விதித்தல், பீடிகள் உள்படப் புகையிலைக்கு வரி விதித்தல் ஆகிய ஒரு சில யோசனைகள் கூறப்பட்டுள்ளன. இவைகளை உடனடியாக அமுல்படுத்த முடியாவிட்டால், தற்போதுள்ள பற்றுக் குறையை அகற்றுவதற்குக் குறுகிய காலக் கடன்களை எழுப்பலாம். அதுவும் தோல்வியடைந்தால், இராணுவ வரவு செலவைக் குறைத்து ஒவ்வொரு மாநிலத்திற்கும் அதற்குரிய விகிதாச்சாரத்தில் மான்யம் அளிக்குமாறு மத்திய அரசாங்கத்தை அணுகலாம். இராணுவம் தங்களுக்குத் தேவையில்லை என்றும், குறைந்த அளவு தங்களது உள்பகுதியில் அமைதியையும் ஒழுங்கையும் பாதுகாப்பதற்குத் தேவையில்லை என்றும், மாநில அரசாங்கங்கள் மெய்ப்பித்துக் காட்டமுடியுமானல், நிச்சயமாக அவைகளின் கோரிக்கையை மத்திய அரசாங்கம் நிராகரிக்க முடியாது.[1]

## 2. மதுவிலக்கும் வரவுசெலவுத் திட்டங்களும்

### பஞ்சம் வந்தால்?

சரியான வணிகர்களைப்போலவே, அமைச்சர்களும் மதுவிலக்குத் திட்டங்களைத் தயாரிப்பதை நாம் காண்கிறோம். அவர்கள் தங்களுடைய பற்றுக்குறையைப் பற்றியே எண்ணுகிருர்கள். வழக்கமாக மது அருந்துபவர்கள், அபின் சாப்பிடுபவர்கள் எல்லோரும் திடீரென்று தங்களுடைய மதுவையும் போதைப் பொருள்களையும் விட்டு விடுகிருர்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது இந்த அமைச்சர்கள் என்ன செய்வார்கள் என்பதே எனக்குத் தெரியவில்லை. எப்படியாவது அவர்கள் சமாளித்துக் கொள்வார்கள் என்று பதில் கூறலாம். அப்படியானல், இப்போதும் ஏன் அவர்கள் தாமாகவே முன்வந்து அவ்வாறு செய்யக் கூடாது? நல்ல காரியத்தைப் பிறர் கட்டாயமின்றித் தாமாகவே செய்வதில் தான் பெருமை இருக்கிறது. பீகார் பூகம்பம் அம்மாநில அரசாங்கத்தின் வருடாந்தர வருமானத்திற்கு மேல் விழுங்கி ஏப்பம் விட்டுவிட்டது. அப்போது பீகார் அரசாங்கம் நின்று போய்விடவில்லையே? பஞ்சமும் வெள்ளமும் மக்களுக்கு நாசத்தை ஏற்படுத்தி, அரசாங்க வருமானத்தைக் கணிசமாகக் குறைத்துவிடும்

போதெல்லாம் இந்தியா முழுவதிலும் உள்ள மாநில அரசாங்கங்கள் என்ன செய்கின்றன? வருமானத்திற்காக மதுவிலக்கைக் கால தாமதப் படுத்தும்போது, காங்கிரஸ் அரசாங்கங்கள் அவை அளித்த வாக்குறுதிகளை—அவைகளின் வாசகத்தை அல்லாவிட்டாலும் அதில் அடிப்படையாக அமைந்துள்ள உணர்ச்சியை—மீறுகின்றன என்றே நான் கூறுவேன்.

### தொழில் அதிபர்களுக்கு இலாபம்

புதுவரி விதிப்பின் மூலம் பணம் திரட்ட அவர்கள் மனப்பூர்வமாக முயற்சி செய்ய வேண்டும். இதைச் செய்ய முடியும், செய்யவும் வேண்டும். குடி என்னும் சாபக்கேடு நகரப் பகுதிகளில் அதிகம் தாண்டவமாடுகிறது. இந்தப் பகுதிகளில் தான் அவர்கள் புது வரி விதிப்பை அமுலுக்குக் கொண்டு வரமுடியும். தொழிலாளர்களை வைத்து வேலைவாங்குவோருக்கு மதுவிலக்கு நேரடியான உதவி அளிக்கிறது. மதுவிலக்கினால் ஏற்பட்ட வருமான இழப்பை அவர்களால் நிச்சயமாகத் தாங்க முடியும். ஆமதாபாத்தில் ஒரு சில மாதங்கள் மது விலக்கு அமுலில் இருந்தபோது, தொழிலாளர்கள், தொழில் அதிபர்கள் ஆகிய இரு சாராரின் பைக்கும் பணம் வந்திருக்கிறது. ஆகையால், இந்த விலைமதிப்பற்ற தொண்டிற்கு ஏன் தொழில் அதிபர்கள் கட்டணம் செலுத்தக் கூடாது என்பதற்குக் காரணமே இல்லை. வருமானந் தரக்கூடிய இப்படிப்பட்ட பலவழி வகைகளை எளிதாகக் கண்டுபிடிக்கலாம்.

### வட்டியில்லாக் கடன்

அதிகப்படியான வருமானம் தேடுவது நடைமுறைச் சாத்தியமற்ற காரியம் என மெய்ப்பிக்கப்படுமானால், இந்திய அரசாங்கத்திடமிருந்து மான்யமோ அல்லது குறைந்தது வட்டியில்லாக் கடனோ வாங்கலாம் என்ற யோசனையைக் கூற நான் தயங்கியதேயில்லை.[2]

## 3. மதுவிலக்கும் நிதி அமைச்சரும்

பம்பாயில் மதுவிலக்கு என்பது வருமானத்தில் பெரிய நட்டமாக முடியும். நிதி அமைச்சர் தமது வரவு செலவுத் திட்டத்தைச் சரிக்கட்ட வேண்டியிருப்பதால் அவர் எப்படியாவது பணம் கண்டாக வேண்டும். ஆகவே, அவர் புதுவரிகள் விதித்தால் அச் சுமையைத் தாங்க வேண்டியவர்கள் புகார் செய்யாதிருப்பார்களாக! வரிகளை எதிர்ப்பதென்பது—அந்த வரிகள் எவ்வளவுதான் நியாயமானவையாக இருந்தாலும்—பழங்காலத்திலிருந்தே வந்துள்ள ஒரு பழக்கம்தான். நிதி அமைச்சர் நியாயமான மறுப்புகளையெல்லாம் சமாளித்து விட்டார் என்றே நான் அறி

கிறேன். இந்தச் சுமையைத் தாங்க நேருபவர்கள், இம் மாபெரும் சோதனையை நிறை வேற்றுவதில் தங்களால் இயன்ற பங்கை அளிக்கும் வாய்ப்புக் கிடைத்ததே என்று ஏன் பெருமைப்படக் கூடாது? மக்களெல்லாம் மகிழ்ச்சியுடன் வரவேற்க, மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்தால், அது பம்பாய்க்குப் பெருமை மிக்க நாளாகவே இருக்கும். இந்த மதுவிலக்கானது மேலேயிருந்து திணிக்கப் பட்டதல்ல என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். மக்களுக்குப் பொறுப்புள்ள அரசாங்கங்களால் தான் இது கொண்டு வரப்படுகிறது. 1920 ஆம் ஆண்டிலிருந்து நமது தேசியத் திட்டத்தில் இது ஒரு அம்சமாக இருந்து வந்திருக்கிறது. இருபது ஆண்டுகளுக்கு முன் நமது தேசியப் பிரதிக்ஞையில் திட்டவட்டமாகக் குறிப்பிடப்பட்டிருந்த ஒன்றை நிறைவேற்றும் முறையில்தான் இது வருகிறது.[3]

## 4. அமைச்சர்களும் மதுவிலக்கும்

### எல்லோரும் முன்வந்து விட்டார்கள்

அமைச்சர்களின் கடமை தெளிவானது. இந்தத் திட்டத்தில் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தால், எந்த விதமான எதிர்ப்பையும் கண்டு தயங்காது நிறைவேற்றி வைக்க வேண்டும். மதுவிலக்கு என்பது காங்கிரஸ் திட்டத்திலேயே மிகப் பெரிய தார்மிகச் சீர்திருத்தமாகும். முந்தைய அரசாங்கங்கள் கூட வாயளவில் இதற்குத் தங்களுடைய சம்மதத்தைத் தெரிவித்திருக்கின்றன. ஆனல் அவை பொறுப்பற்றவையாக இருந்ததனல், இதை நிறைவேற்றி வைக்க வேண்டிய தைரியமோ மன உறுதியோ இல்லாதிருந்தன. முயற்சியில்லாமல் தாங்கள் பெறக்கூடிய வருமானத்தை அவை இழக்கத் தயாராயில்லை. இது வந்த விதம் மாசுபட்டதாக இருக்கிறதே என்பதைக் கூட அவை ஆராய்ச்சி செய்யத் தயாராயில்லை. காங்கிரஸ் அரசாங்கங்களுக்கு மக்களுடைய ஆதரவு உண்டு. நன்கு கவனமாக ஆராய்ந்த பின், மதுவிலக்கு சம்பந்தமான தனது ஆணையைக் காங்கிரஸ் செயற்குழு பிறப்பித்தது. எல்லா அமைச்சர்களுமே இதைத் தங்களால் இயன்ற அளவு நிறைவேற்ற முன்வந்து விட்டார்கள். இதை எவ்வாறு நிறைவேற்றுவதென்பது இயல்பாகவே அந்தந்த அமைச்சரவைகளின் பொறுப்புக்கு விடப்பட்டுள்ளது. பம்பாய் அமைச்சர்கள் தைரியமாக இத் திட்டத்தை நிறைவேற்றுவதில் இறங்கியிருக்கின்றனர். அவர்கள் வெற்றி பெறுவதற்கான ஒவ்வொரு வாய்ப்பும் இருக்கிறது. அவர்களுடைய நிலைமை கஷ்ட

மானதுதான். ஏதாவது ஒரு நாள் அவர்கள் பம்பாயைச் சமாளித்துத்தான் ஆக வேண்டும். மதுவிலக்குக் கொள்கையால் நேரடியாகப் பாதிக்கப்படுபவர்களிடமிருந்து, இப்போது வருவதைப் போலவே, அப்போதும் அவர்களுக்கு எதிர்ப்பு வந்து கொண்டு தானிருக்கும். எந்தக் காங்கிரஸ்காரருக்கும் அமைச்சர்களுக்குத் தொல்லை கொடுக்க உரிமையில்லை.[4]

## அத்தியாயம் 29

# கதர்

### 1. அமைச்சர்களும் கதரும்

இராட்டையை நாம் இதுவரை கேலி செய்து கொண்டிருந்த தாகவே தோன்றுகிறது. ஆகஸ்ட் 15 ஆம் தேதியன்று இராட்டையைச் சுழற்ற வேண்டுமென்று யாரும் எண்ணவில்லை. நான் சொல்வதைக் கேட்பதானல், எந்த மண்டபத்தில் அமைச்சர்கள் பதவி உறுதி மொழிப் பிரமாணம் எடுத்துக் கொள்கிறார்களோ அதே மண்டபத்தில், அந்தப் பிரமாணம் எடுத்துக் கொள்ளு முன்பு, ஒரு புனிதச் சடங்காக அவர்கள் நூற்றுப் பிரார்த்தனை செய்யவேண்டும் என்று சொல்வேன். அதன் பின்பு தான் பதவி உறுதிமொழி ஏற்பது நடைபெற வேண்டும்.[1]

**நம்பிக்கை இருந்தால்?**

ஒரு சில காங்கிரஸ்காரர்களுக்கு இந்த அளவு கதரின் மீது ஆழமான பக்தி இருக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அமைச்சர்கள் காங்கிரஸ்காரர்களே. அவர்கள் தங்களுடைய சூழ்நிலையிலிருந்தே ஊக்கமும் உற்சாகமும் பெறுகிறார்கள். அவர்களுக்குக் கதரில் அழுத்தமான நம்பிக்கை இருந்தால், அதைப் பரப்ப எவ்வளவோ செய்யலாம்.

காங்கிரஸ் அமைச்சர்கள் - சொல்லப்போனல், எல்லா அமைச்சர்களும், கதர் ஊழியர்களும் காங்கிரஸ்காரர்களும்—என்ன செய்யமுடியும், என்ன செய்ய வேண்டும் என்பதை இப்போது கூறுகிறேன்.

**தனி அரசுத் துறை**

கதர், கிராமக் கைத்தொழில்களைக் கவனித்துக் கொள்வது ஒன்றையே தம் பணியாகக் கொண்ட ஒரு அமைச்சர் இருக்கலாம். அவ்வாருயின் இதற்கென்று ஒரு தனி இலாகா இருக்க வேண்டும். மற்ற இலாகாக்கள் இதனுடன் ஒத்துழைக்கும். இவ்வாருக விவசாயத் துறையானது பஞ்சு உற்பத்தியைப் பரவல் மயமாக்குவதற்கான ஒரு திட்டத்தை வகுக்கும்; கிராம உபயோகத்துக்கான பஞ்சு உற்பத்தி செய்யத் தகுதியான நிலத்தை 'சர்வே' செய்யும்; தனது மாநிலத்திற்கு எவ்வளவு பஞ்சு தேவைப்படும் என்பதைக் கணக்

கிடும். விநியோகம் செய்வதற்காக, பொருத்தமான இடங்களில் அது பஞ்சை இருப்பு வைக்கவும் செய்யும். ஸ்டோர்ஸ் இலாகா, மாநிலத்தில் கிடைக்கக் கூடிய கதரைக் கொள்முதல் செய்யும்; தனது துணித் தேவைகள் என்னவென்று 'ஆர்டர்'கள் கொடுக்கும். தற்போதுள்ளதைக் காட்டிலும் சிறந்த இராட்டைகளையும் கையால் உற்பத்தி செய்வதற்கான மற்ற சாதனங்களையும் கண்டுபிடிப்பதில் தொழில் நுணுக்கத் துறைகள் தீவிரமாக ஈடுபடும். இந்த அரசுத் துறைகளெல்லாம் அனைத்து இந்திய நூற்போர் சங்கத்துடனும் அனைத்து இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்துடனும் இடைவிடாது தொடர்பு கொள்ளும். இந்தச் சங்கங்களைத் தங்களது நிபுணர்களாகப் பயன்படுத்திக் கொள்ளும்.

### வருவாய் அமைச்சர்

ஆலைகளிலிருந்து போட்டி ஏற்படாமல் கதரை எவ்வாறு பாதுகாப்பது என்பதற்கான வழி வகைகளை வருவாய் அமைச்சர் கண்டுபிடிப்பார்.[2]

## 2. ஒரு அமைச்சரின் கனவு

"எல்லாப் பையன்களுக்கும் பெண்களுக்கும் நூல் நூற்பையும் நெசவையும் கட்டாயப் பாடமாக்குமாறு, மாநில அரசாங்கங்களுக்கும் மக்களுக்கும் நீங்கள் ஒரு ஆணை பிறப்பிப்பதாக இருந்தால் அல்லது செய்தி விடுப்பதாக இருந்தால், ஒரு குறுகிய காலத்திற்குள் பள்ளிக் குழந்தைகள் தாங்களே உற்பத்தி செய்த துணியைப் போட்டுக் கொண்டிருப்பதைக் காணலாம் என்பதில் எனக்கு ஐயமில்லை. இது முதல் நடவடிக்கையாக இருக்கும். உங்களுடைய இலட்சியங்களில் நான் நம்பிக்கை இழந்து விடவில்லை. உங்களுடைய கிராமக் கைத்தொழில், கல்வித் திட்டத்தின் கீழ் ஒவ்வொரு வீடும் தனக்கு வேண்டிய ஆடையைத் தானே உற்பத்தி செய்து கொள்வதை, துணியில் மட்டுமல்லாமல் அத்தியாவசியமான மற்ற ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வொரு வீடும் தன்னிறைவு அடைவதைக் காணமுடியும் என நான் நம்பிக் கொண்டிருக்கிறேன். மாநில அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டமும் இந்திய அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டமும் பொதுவாகச் செயற்கையான முறையில் சரிக்கட்டப்படுகின்றன. இந்த வரவு செலவுத் திட்டங்களில் வரவும் செலவும் சரிக்கட்டி இருப்பதைப் போலவே கிராமவாசியின் வரவும் செலவும் சரிக்கட்டப்பட்டு இருக்கவேண்டும். அப்போதுதான் இந்நாட்டில் உண்மையான சுய ராஜ்யத்தை நிலை நிறுத்த முடியும் என்பதை உங்களுடன் சேர்ந்து நானும் நம்புகிறேன்."

இவ்வாறு ஒரு காங்கிரஸ் அமைச்சர் எழுதுகிறார். ஒரு எதேச்சாதிகாரியின் அதிகாரங்கள் எனக்கு இருந்தால், குறைந்தது தொடக்கப் பள்ளிகளிலாவது கையால் நூல் நூற்பதை நிச்சயமாகக் கட்டாயப் பாடமாக்குவேன். நம்பிக்கையுள்ள ஒரு அமைச்சரும் அவ்வாறுதான் செய்ய வேண்டும். எத்தனையோ பயனற்ற காரியங்கள் நம்முடைய பள்ளிகளில் கட்டாயமாக்கப்பட்டிருக்

கின்றன. மிகவும் பயனுள்ள இந்தக் கலை ஏன் கட்டாயமாக்கப் படக் கூடாது? ஆனால் ஜனநாயக முறையின் கீழ், பரவலாக மக்கள் அபிமானத்தைப் பெறாவிட்டால் எதையும் கட்டாயமாக்க முடியாது. இவ்வாறாக, ஜனநாயகத்தில் கட்டாயமென்பது பெய ரளவில்தான். அது சோம்பேறித்தனத்தை அகற்றுகிறதே தவிர, மன விருப்பத்தைக் கட்டாயப்படுத்துவதாகாது. இப்படிப்பட்ட கட்டாயம், கல்வி மூலம் படிப்படியாக வரவேண்டியது. ஆகவே இதற்கு முன்னோடியான இலகுவான வழி ஒன்றைக் கூறு கிறேன். சிறந்த முறையில் நூல் நூற்பவருக்குப் பரிசுகள் அளிக் கப்படட்டும். இந்தப் போட்டியானது. எல்லோரையும் அல்லா விட்டாலும் பெரும்பாலோரை இதில் பங்கு கொள்ளுமாறு தூண்டும். பள்ளி ஆசிரியர்களுக்கே அதில் நம்பிக்கை இல்லா விட்டால், எந்தத் திட்டமும் வெற்றி அடைய முடியாது. ஆதாரக் கல்வி மாநில அரசாங்கங்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டால், கையால் நூல் நூற்பதும் மற்றும் அதைப்போன்ற வேலைகளும் பாடத் திட்டத்தில் ஒரு அம்சமாக இருக்கும். அது மட்டுமல்லாது, கல்வி அளிக்கப்படும் சாதனங்களாகவும் இருக்கும். ஆதாரக் கல்வி வேர்விட ஆரம்பித்துவிட்டால், கதர் எல்லோருடைய மத்தியிலும் பரவிவிடும் என்பது உறுதி. வறுமையால் பீடிக்கப்பட்டுள்ள நம்மு டைய நாட்டில் அது விலை மலிவானதாகவும் இருக்கும்.[3]

## 3. அமைச்சர்களின் கடமை

'காங்கிரஸ் அமைச்சர்கள் இப்போது பதவியில் இருக்கிறார் களே, கதருக்கும் மற்றக் கிராமக் கைத்தொழில்களுக்கும் அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?' என்பது ஒரு நியாயமான கேள்வி. இந்தக் கேள்வியை நான் இன்னும் விரிவுபடுத்தி இந்தியாவிலுள்ள எல்லா மாநில அரசாங்கங்களையும் கேட்கவேண்டும். எல்லா மாநிலங்களுக்குமே வறுமை பொதுவானது தான். அது போன்றே மக்களின் துன்ப நிவாரணத்திற்கான வழி வகைகளும் எல்லா மாநிலங்களுக்கும் பொதுவானவையே. அனைத்து இந்திய நூற் போர் சங்கம், அனைத்து இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகிய இரண்டின் அனுபவமும் இதுதான். இந்தப் பணிக்கென ஒரு தனி அமைச்சர் இருக்க வேண்டுமென்று ஒரு யோசனை கூறப்பட் டிருக்கிறது. ஏனென்றால், இதைச் சரிவர ஒழுங்குபடுத்தி உரு வாக்குவதற்கு ஒரு அமைச்சரின் முழு நேரமும் தேவையாக இருக்கும். இந்த யோசனையைக் கூறவே எனக்கு அச்சமாக இருக்கிறது. ஏனெனில் ஆங்கிலேயரைப் போன்று செலவழிப்பது இன்னும் குறையவில்லை. இதற்கெனத் தனியாக ஒரு

அமைச்சர் நியமிக்கப்படுகிருரோ இல்லையோ இப்பணிக்கென ஒரு தனித் துறை நிச்சயம் அவசியமாகும். உணவு, துணிப் பற்ருக் குறை உள்ள இந்தக் காலத்தில், இத்துறை மிகப் பெரிய உதவி அளிக்க முடியும். அனைத்து இந்திய நூற்போர் சங்கம், அனைத்து இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவற்றின் மூலம் அமைச்சர்களுக்கு நிபுணர்கள் கிடைப் பார்கள். மிகச் சிறிய மூலதனத்தில், மிகமிகக் குறுகிய காலத்தில் இந்தியாவில் உள்ள மக்கள் அனைவருக்கும் தேவையான கதர்த் துணியை வழங்க இப்போது முடியும். 'ஒவ்வொரு கிராமமும் தனது உபயோகத்திற்குத் தேவையான கதரைத் தானே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும்' என்று ஒவ்வொரு மாநில அரசாங் கமும் கிராம மக்களுக்குச் சொல்லிவிட வேண்டும். தாகைவே ஆங்காங்கு உற்பத்தியும் விநியோகமும் நடைபெறும், நகரங்களின் தேவைக்குக் குறைந்தது ஒரு குறிப்பிட்ட அளவை நிறைவு செய்வதற்காகவாவது உபரி இருக்கும். இதனல் ஆங்காங்குள்ள ஆலைகளின் பாரம் குறையும். உலகின் பிற பகுதிகளிலுள்ள துணிப் பற்ருக்குறையைத் தீர்த்து வைப்பதில் ஆலைகள் பங்கு கொள்ள முடியும்.

*இதை எவ்வாறு சாதிப்பது?*

ஒரு தேதியை அரசாங்கம் குறிப்பிட்டு, அத் தேதிக்குள் "கிராமவாசிகள் தங்களுடைய கிராமங்களின் தேவைக்கான கதரை உற்பத்தி செய்து கொள்ள வேண்டுமென எதிர்பார்க்கப்படு கிருர்கள். அதன்பின், அவர்களுக்குத் துணி விநியோகிக்கப் பட மாட்டாது" என்று அறிவித்துவிட வேண்டும். அரசாங்கத்தைப் பொறுத்தவரை அது கிராமங்களுக்குப் பருத்தி விதை அல்லது பஞ்சையும் உற்பத்திக் கருவிகளையும் கொள்முதல் விலையில் வழங்க வேண்டும். இந்தப் பணத்தை இலகுவான தவணைகளாக ஐந்தாண்டுகளில் அல்லது அதற்கும் அதிகப்பட்ட காலத்தில் திருப்பிப் பெறவேண்டும். எங்கெங்கெல் லாம் அவசியமோ அங்கெல்லாம் போதனையாளர்களை அனுப்ப வேண்டும். கிராமவாசிகள் தங்களுடைய தேவைகளைச் சொந்த உற்பத்தியிலிருந்தே நிறைவு செய்து கொண்டால், உபரியாக அவர்களிடமுள்ள கதர் இருப்பை வாங்கிக் கொள்வதாகவும் உறுதி தரவேண்டும். இதன் மூலம், அரவமில்லாமலும், மிகக் குறைந்த செலவிலும் துணிப் பற்ருக்குறையை அகற்றி விடலாம்.

**கைத்தொழில் பட்டியல்**

கிராமங்களில் 'சர்வே' நடத்தப்படும். வெளி உதவியில்லாமல் ஆங்காங்கு உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களை, கிராம உபயோ

கத்திற்கோ அல்லது வெளி விற்பனைக்கோ தேவையான பொருள்களை - உதாரணமாகச் செக்கு எண்ணெய், பிண்ணாக்கு, செக்கில் ஆட்டப்பட்ட விளக்கெண்ணெய், கைக்குத்தல் அரிசி, பனை வெல்லம், தேன், விளையாட்டுச் சாமான்கள், பாய்கள், கையால் செய்யப்பட்ட காகிதம், கிராமத்தில் செய்யப்பட்ட சோப் முதலியவை - கொண்ட ஒரு பட்டியல் தயாரிக்கப்படும். கிராமங்களில் பெரும்பாலானவை செத்து விட்டன, அல்லது செத்துக் கொண்டிருக்கின்றன; மேலே சொன்னவாறு கவனம் எடுத்துக் கொண்டால், கிராமங்கள் உயிருடன் செயல்படும். தங்களுடைய தேவைகளைத் தாங்களே நிறைவு செய்து கொள்ளவும், அத்துடன் இந்தியாவிலுள்ள சிறிய, பெரிய நகரங்களின் தேவைகளையும் நிறைவு செய்யவும் தங்களுக்குள்ள அளவு கடந்த சக்திகளை அவை வெளிக்காட்டும்.

**கோ சேவா சங்கம்**

மேலும், இந்தியாவின் எல்லையற்ற கால்நடைச் செல்வம் இருக்கிறது. படுபாதகமான முறையில் அலட்சியம் செய்யப்பட்டதால் இது கஷ்டத்திற்குள்ளாகியிருக்கிறது. கோ சேவா சங்கம் இன்னும் தகுந்த அளவில் அனுபவம் அடையவில்லை. என்றாலும், அது ஒரு குறிப்பிடத் தக்க அளவு சிறந்த உதவி அளிக்க முடியும்.

**ஆதாரக் கல்வி**

ஆதாரக் கல்விப் பயிற்சி இல்லாததால், கிராம மக்களைக் கல்விப் பசி பீடித்திருக்கிறது. ஆவலாக எதிர்பார்க்கும் இப்பொருளை, 'இந்துஸ்தானி தலீமி சங்கம் வழங்க முடியும். ஏற்கனவே காங்கிரஸ் அரசாங்கங்கள் இச் சோதனையைத் தொடங்கின.' ஆனால், காங்கிரஸ் அமைச்சரவைகள் பதவியிலிருந்து விலகியதால் அது தடைப்பட்டுவிட்டது. இப்போது அந்த இடைவெளியைச் சேர்த்து இணைத்து விடலாம்.[4]

## 4. நான் அமைச்சராக இருந்தால்?

கிராமக் கைத்தொழில்கள் பற்றியும் ஆதாரக் கல்வி பற்றியும் 1946 ஜூலை 29 ஆம் தேதியிலிருந்து 31 ஆம் தேதி வரை சம்பந்தப்பட்ட அமைச்சர்களுடன் புனாவில் நடத்திய பேச்சு, ஏராளமான கடிதப் போக்குவரத்திற்கும் தனிப்பட்ட வாதத்திற்கும் இடம் அளித்திருக்கிறது. இதில் கதர் தான் இயல்பாகவே பெரும் பங்கு வகித்திருக்கிறது. ஆகையால் மாகாண அரசாங்கங்களுக்கும் சம்பந்தப்பட்ட பிறருக்கும் வழிகாட்டக்கூடிய முறையில், இப் பிரச்னை பற்றிய என் கருத்துக்களைக் கீழே தருகிறேன்:

**ஒரு தவறான கருத்து**

கடந்த ஏப்ரல் 28 ஆம் தேதியன்று "ஹரிஜன்" சஞ்சிகையில் நான் எழுதிய கட்டுரையை வாசகரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.* அப்போது நான் கொண்டிருந்த கருத்துக்கள் இன்றும் மாறவில்லை. அவைகளைப்பற்றி ஒரே ஒரு தவறான கருத்து மட்டும் ஏற்பட்டிருக்கிறது. அந்தக் கட்டுரையில் கட்டாயம் தொனிப்பதாகச் சில நண்பர்கள் கருதுகின்றனர். அந்தத் தெளிவின்மைக்காக நான் வருந்துகிறேன். மக்கள் பிரதிநிதித்துவம் பெற்ற அரசாங்கங்கள், தாங்கள் விரும்பினால் என்ன செய்ய முடியும் என்ற கேள்விக்கு அக் கட்டுரையில் நான் மறுமொழி அளித்திருந்தேன். இப்படிப்பட்ட அரசாங்கங்களின் அறிவிப்புக் களை ஒரு கட்டாயமாக வியாக்கியானம் செய்துவிட முடியாது என்பதையும் அந்தக் கட்டுரையின் அடிப்படையாகக் கொண்டிருந் தேன். இது ஏற்கக் கூடியதே என்றும் நம்புகிறேன். ஏனென்றால் நம்பிக்கை வாய்ந்த பிரதிநிதித்துவ அரசாங்கம் செய்யும் ஒவ்வொரு காரியமும் அது எந்த வாக்காளர்களின் பிரதி நிதியாக இருக்கிறதோ அந்த வாக்காளர்களின் முழுச் சம்மதத் தையும் பெற்றதாகிவிடும். வாக்காளர்கள் என்றால் மக்கள் அனை வரையுமே குறிக்கும். அவர்கள் வாக்காளர்களாகப் பதிவு செய்து கொண்டிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. அந்தப் பின்னணி யுடன்தான், 'ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பின்னால் ஆலைகளில் உற் பத்தி செய்யப்பட்ட துணி வழங்கப்பட மாட்டாது என்பதைக் கிராமவாசிகளுக்கு அரசாங்கம் அறிவிக்க வேண்டும்; அதன் மூலம் கிராமவாசிகள் தாங்களே உற்பத்தி செய்த கதரை அணிவதைச் சாத்தியமாக்க வேண்டும்' என்று எழுதியிருந்தேன்.

**சுதந்திரத்தின் சின்னம்**

கடந்த ஏப்ரல் 28 ஆம் தேதியன்று நான் எழுதிய கட்டுரை யின் பொருள் என்னவாக இருந்தாலும் சரி, சம்பந்தப்பட்டவர்கள் எல்லோருடைய மனமொத்த ஒத்துழைப்பும் இல்லாமல் கதர் குறித்து நிறைவேற்றப்படும் எந்தத் திட்டமும், சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு ஒரு சாதனமாய் இல்லாமல் அடித்த சாவு மணியேயாகும். கதர் என்பது மத்திய கால அறியாமைக்கும் அடிமைத்தனத்துக்கும் திரும்பி வருவதாகும் என்று இடித்துக் கூறப்படுவது அப்போது உண்மையாகிவிடும். ஆனால் நான் இதற்கு முரணான கருத்தைக் கொண்டிருக்கிறேன். கட்டாயத்தின் பேரில் கதர் அணிவது அடிமைத்தனத்தின் சின்னமாக இருக்க, ஒருவர் தாமாக முன் வந்து, முக்கியமாகத் தனது சொந்த உபயோகத்துக்

* இந்நூலில் "அமைச்சர்கள் கடமை" என்ற தலைப்புடன் உள்ள கட்டுரை.

காக, விவேகமான முறையில் கதர் உற்பத்தி செய்துகொள்வது நம்முடைய சுதந்திரத்தின் சின்னமாக இருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லே. எல்லாத் துறைகளிலுமே நாம் சுயஉதவி செய்துகொள்பவர்களாக வேண்டும் என்பதுதான் சுதந்திரத்தின் பொருள். இதைத் தவிரச் சுதந்திரம் என்பதன் பொருள்தான் வேறு என்ன ? கதர் என்பது ஒரு சுதந்திர மனிதனின் உரிமையும் கடமையும் ஆகும் என்றில்லா விட்டால், எனக்கும் கதருக்கும் எந்த விதமான சம்பந்தமும் இருக்காது.

### விற்பனேப் பொருளா ?

இவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட கதர், விற்பனேக்காகவும் இருக்கமுடியுமா என்று நட்பு முறையில் ஒரு விமர்சகர் கேட்கிருர். இக் கேள்விக்குப் பதில்: விற்பனே இரண்டாந்தர உபயோகமாக இருக்கும்போது, "ஆம்". விற்பனேக்காக உற்பத்தி செய்வதென்பது அதன் ஒரே பயனுக இருக்கும்போது—அல்லது பிரதான பயனுக இருக்கும்போதுகூட—"இல்லே". கதர் விற்பனேயுடன் நாம் தொடங்கினேம் என்பது தற்காலிகமாக இருந்த அவசியத்தையும் அதேசமயம் நமது குறுகிய நோக்கையுமே காண்பித்தது. அனுபவம் என்பது ஒரு பெரிய ஆசான். அது நமக்குப் பலவற்றைக் கற்றுக் கொடுக்கிறது. கதருடைய முக்கிய பலன் என்னவென்பது இதில் குறைந்த முக்கியத்துவம் உள்ளதல்ல. அதே சமயம் எந்த வகையிலும் அதுவே முடிவானதும் ஆகாது. ஆயினும், நான் இந்தக் கவர்ச்சியான ஊகங்களே யெல்லாம் விட்டு விட்டு, தலேப்பில் கேட்கப்பட்ட கேள்விக்கு நேரடியாகப் பதிலளிக்க வேண்டும்.

### விரிவான திட்டம்

எல்லா அரசாங்க நடவடிக்கைகளுக்கும் மத்தியமான, கிராமங்களேப் புனருத்தாரணம் செய்யும் பொறுப்பில் உள்ள அமைச்சர் என்ற முறையில் எனக்கு முதற்கடமை ஒன்று உண்டு. நிரந்தர அரசாங்க அலுவலர்களிலிருந்து இந்த வேலேக்குத் தகுதியும் நேர்மையும் படைத்தவர்களே, லஞ்சத்திற்கு இடங்கொடாதவர்களே, தேர்ந்தெடுப்பதுதான் இந்த முதற்கடமை. அவர்களில் மிகச் சிறந்தவர்களே, காங்கிரஸ் அமைத்த நிறுவனங்களான அனேத்து இந்திய நூற்போர் சங்கம், அனேத்து இந்தியக் கிராமக்கைத் தொழில் சங்கம் ஆகியவற்றுடன் தொடர்பு கொள்ளுமாறு செய்வேன். கிராமக் கைத்தொழில்களுக்கு மிகச் சிறந்த ஊக்கம் அளிக்கக் கூடிய ஒரு திட்டத்தைக் கொண்டு வருவேன். 'கிராமவாசிகள் மீது கட்டாயம் எதுவும் கூடாது, அவர்கள் மற்றவர்களுக்கு அடிமைகளாகக் கூடாது, அவர்கள்

தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்ளவும், உணவு, துணி, மற்ற அத்தியாவசியப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்திக்குத் தங்களுடைய சொந்த உழைப்பையும் திறமையையும் நம்பியிருக்கவும் பயிற்சி அளிக்க வேண்டும்' என்றெல்லாம் நான் நிபந்தனைகள் போடுவேன். இவ்வாறாக இந்தத் திட்டம் மிகவும் விரிவானதாய் இருக்கும். ஆகையால் என்னுடைய முதல் அதிகாரியை, ஹிந்துஸ்தானி தலீமி சங்கத்திற்குச் சென்று அவர்கள் இதையொட்டி என்ன சொல்கிறார்கள் என்பதைக் கேட்டு வருமாறு பணிப்பேன்.

### திட்டத்தின் பிரிவுகள்

இவ்வாறு தயாரிக்கப்படும் திட்டத்தில் கீழ்க்கண்ட ஒரு பிரிவு இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். 'ஒரு குறிப்பிட்ட தேதியிலிருந்து ஓராண்டுக்குப் பின், கிராமவாசிகளே தங்களுக்கு ஆலைத்துணி வேண்டாம் என்று அறிவிப்பார்கள். தங்களுக்கு—இலவசமாக அல்ல, எளிதான தவணைகளில் திருப்பிச் செலுத்தக் கூடிய முறையில்—பஞ்சும், கம்பளியும், மற்ற அத்தியாவசியச் சாதனங்களும் போதனையாளர்களும் தேவையென்றும் தெரிவிப்பார்கள்' என்று ஒரு பிரிவு இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். உடனடியாக இந்தத் திட்டம் மாகாணம் முழுவதும் அமுலுக்கு வராது; தொடக்கத்தில் ஒரு பகுதியிலேயே அமுலுக்கு வரும் என்பது அந்தத் திட்டத்திலேயே இருக்கும். மேலும், இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதில் அனைத்து இந்திய நூற்போர் சங்கம் வழிகாட்டி உதவும் என்றும் இத்திட்டம் கூறும்.

### குறைந்த செலவில் அதிக வருமானம்

இத்திட்டம் சரியானதுதான் என்பது மெய்ப்பிக்கப்பட்டவுடன், சட்டத் துறையைக் கலந்தாலோசித்து அதற்குச் சட்டபூர்வமான உருவம் அளிப்பேன். இத்திட்டம் தோன்றிய வரலாறு முழுதையும் விவரித்து ஒரு அறிக்கை வெளியிடுவேன். கிராமவாசிகளும் ஆலைச் சொந்தக்காரர்களும் மற்றவர்களும் சேர்ந்து இத் திட்டத்தை நிறைவேற்றுவார்கள். இந்தத் திட்டத்திற்கு அரசாங்க முத்திரை இருந்தாலும், இது மக்களுடைய நடவடிக்கையே என்பதை இந்த அறிக்கை தெளிவுபடுத்தும். பரம ஏழைகளான கிராமவாசிகளின் அனுகூலத்திற்காக அரசாங்கத்தின் பணம் பயன்படுத்தப்படும்; சம்பந்தப்பட்ட மக்களுக்குக் கூடியவரை அதிக வருமானம் அளிக்கும். ஆகவே அநேகமாக இது மிகவும் இலாபகரமான முதலீடாக இருக்கும். ஏனெனில் நிபுணர்கள் உதவி வலிய வந்து கிடைக்கிறது. சம்பளம் முதலிய செலவுகளோ

மிகமிகச் சொற்பம். நாட்டிற்கு இதனுல் மொத்தத்தில் என்ன செல வாகிறது, மக்களுக்கு என்ன பலன் கிடைக்கிறது என்றெல்லாம் இந்த அறிக்கை விவரமாக எடுத்துரைக்கும்.

**ஒரே பிரச்னே**

ஒரு கதர்த் திட்டத்தை உருவாக்கி அதை வெற்றியாக்கும் சுமையைத் தாங்கும் அளவுக்கு அனைத்து இந்திய நூற்போர் சங்கத் திற்கு நம்பிக்கையும் திறமையும் இருக்கிறதா? அமைச்சர் என்ற முறையில் என் முன்னுள்ள ஒரே பிரச்னே இதுவாகவே இருக்கும். அதற்கு இந்த இரண்டும் இருந்தால், முழு நம்பிக்கையுடன் எனது கப்பலைக் கடலில் விடுவேன்.[5]

## 5. அரசாங்க உடைமையா? கட்டுப்பாடா?

**புது ஆலைகள் கூடா**

*1946* அக்டோபர் *8, 9, 10* ஆம் தேதிகளில் நடைபெற்ற அனைத்து இந்திய நூற்போர் சங்க ஆண்டுக் கூட்டமானது ஒரு உண்மையை வெளிப்படுத்தியிருக்கிறது. அதாவது, தேசிய அரசாங்கம் பதவிக்கு வந்தபின், இதுவரை ஏட்டளவில் இருந்த பல காரியங்கள் நடைமுறைச் சாத்தியமாகி யிருக்கின்றன. சுமார் *80* உறுப்பினர்கள் இந்த ஆலோசனைகளில் பங்கு கொண்டார்கள். ஆலைத்துணி கதருடன் போட்டியிட்டுக் கதரைக் கொன்று விடக் கூடாது என்பதற்காக, புதுப் பஞ்சாலைகள் தோற்றுவிப்பதற்குத் தடைவிதிப்பதும், சில குறிப்பிட்ட பகுதிகளில் ஆலைத் துணிகள் நுழையாமல் தடுப்பதும், இங்கு விவாதிக்கப்பட்ட யோசனை களில் ஒன்ருகும். எங்கெங்கு ஆடையில் சுயதேவைப் பூர்த்தி என்னும் சோதனையைச் செய்து பார்க்க மக்கள் தயாராய் இருக் கிருர்களோ, அங்கெல்லாம் ஆலைத்துணி நுழைவதை அரசாங்கம் தடைசெய்யவேண்டும் என்று காந்திஜி யோசனை கூறினர். அவர் மேலும் சொன்னர்: "கதரை எல்லோருங் கட்டவேண்டு மென்பதில் மாகாண அரசாங்கங்களுக்கு அக்கறை இருக்க வேண்டுமானல், அவை புது ஆலைகளைத் தொடங்கக் கூடாது. தனிப்பட்டவர்களும் தொடங்க அனுமதிக்கக் கூடாது. புது ஆலை களுக்காக அரசாங்கம் கோடிக் கணக்கில் செலவு செய்து கொண் டிருக்கும் போது கிராமவாசிகள் கதர்த் திட்டத்தை அலட்சியப் படுத்தாமல் இருக்கவேண்டு மென்ருல் அது முடியாத காரியம். கிராமவாசிகள் கூர்மதி உடையவர்கள். துணியில் சுயதேவை யைப் பற்றிப் பேசிக்கொண்டு புதுத்துணி ஆலைகளையும் தங்கள் மாநிலத்தில் அரசாங்கம் அனுமதிப்பதானல், அரசாங்கத் தின் நன்னேக்கத்தின் மீதே அவர்கள் ஐயப்படத் தொடங்கி விடுவார்கள்."

**தேசிய மயமாக்கலாமா ?**

'புதுப் பஞ்சாலைகளை யெல்லாம் தேசிய மயமாக்க வேண்டும். முடிந்த அளவில் ஏற்கெனவே உள்ள பஞ்சாலைகளையும் தேசிய மயமாக்க வேண்டும்' என்று அனைத்து இந்திய நூற்போர் சங்கம் ஒரு தீர்மானம் நிறைவேற்ற வெண்டுமென ஒரு உறுப்பினர் யோசனை கூறினர். காந்திஜி இந்த யோசனையை ஏற்கவில்லை. "புது ஆலைகளை நிருமாணிப்பதும் கதர் வேலையும் ஒரே சமயத்தில் நடைபெற முடியாது என்று நாம் கூறிக்கொண் டிருக்கிறோம். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் புது ஆலைகளைத் தேசிய மயமாக்கும்படி நாம் எவ்வாறு அரசாங்கத்தைக் கேட்க முடியும்?'' என்று காந்திஜி விளக்கினர். சென்னை மாநிலத்தில் புதிதாக எந்தப் பஞ்சாலையும் நிறுவக்கூடாது என்று ஏற்கனவே சென்னை முதலமைச்சரான திரு டி. பிரகாசம் அறிவித்திருக்கிறார். ஏற்கனவே உள்ள ஆலைகளைத் தேசிய மயமாக்க வேண்டுமென்று நாம் கேட்டுக்கொள்ளலாம். ஆனல் அவரே, அவைகளை அரசாங்கம் ஏற்று நடத்துவதைக் காட்டிலும் கடுமையான அரசாங்கக் கட்டுப் பாட்டின் கீழ் வைத்திருப்பது நலமென்று கருதி அவ்வாறு வைத் துள்ளார். அஹிம்சையில் நம்பிக்கை உள்ளவர் என்ற முறையில், தர்மகர்த்தா முறையிலும் அவருக்கு நம்பிக்கை உண்டு. ஆலை அதிபர்களை அமைதியான முறையில் மனமாற்றம் செய்ய வேண்டும், அப்போதுதான் ஆலை அதிபர்களும் அவர் களுடைய ஊழியர்களும் தாமாகவே சமூகக் கட்டுப்பாட்டின் கீழ் வருவார்கள் என்று அவர் விரும்புகிறார். இதன் பொருள் கீழ்க் கண்டவாருகும்: உதாரணமாக "அ'' என்ற ஒரு ஆலை அதிபர் இருக்கிறார் என வைத்துக் கொள்வோம். அவரே தொடர்ந்து சட்டப்படி ஆலையின் சொந்தக்காரராக இருக்க லாம். ஆனல் இலாபத்தில் தனது சேவைக்கு எது தகுமோ, மக்கள் எதை அனுமதிக்கிறார்களோ அந்தக் கமிஷனைத் தான் அவர் எடுத்துக் கொள்ள முடியும். ஆலையில் வேலை செய்யும் தொழி லாளர்களே உண்மையான சொந்தக்காரர்களாக இருப்பார்கள். டாடா ஸ்தாபனங்கள் ஒன்றில், தொழிலாளர்கள் இலாபத்தில் பங்குபெறுகிறார்கள் என்று கூறப்படுகிறது. இது சம்பந்தமாக திரு ஜே. ஆர். டி. டாட்டா நிகழ்த்தியுள்ள சொற்பொழிவு நாம் விரும்பிப் படிக்கத் தக்கதாகும். இப்படிப்பட்ட தீர்வு தான் மிகச் சிறந்தது என்று நான் கருதுகிறேன். இப்படிப்பட்ட திட்டம் எதற்கும் தங்களுடைய ஒத்துழைப்புத் தேவையானல் அந்த ஒத்துழைப்பை அளிக்கத் தயாராய் இருப்பதாக, அநேக ஆலை அதிபர்கள் என்னிடம் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். தங்களுடைய பஞ்சாலைகளை மேலும் விரிவு படுத்தாமல் நிறுத்தி

விடுவதாகவும் கூறியிருக்கின்றனர். ஆலைத் தொழிலை, அரசாங்கமும் அனைத்து இந்திய நூற்போர் சங்கமும் ஆலை அதிபர்களும் சேர்ந்து கூட்டாக நடத்தும் யோசனையை நான் எதிர்க்கிறேன். நம்முடைய வேலை, ஆலைகளை ஓட்டுவதல்ல, அந்தச் சிறிய இராட்டையைக் கையால் சுழற்றுவதே யாகும். நம்முடைய செயல் வரம்புக்கு அப்பாலுள்ள ஒன்றின்மீது நாம் ஏன் காலத்தைச் செலவிடவேண்டும்? எல்லா ஆலைகளையுமே மூட நேர்ந்தாலும் நான் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வடிக்கமாட்டேன். ஆலைகள் செழிப்புடன் இருக்க வேண்டுமாயின், கதர் சாக வேண்டும். அப்போதுங் கூட, ஏழைகளுக்கு உதவி அளிப்பதற்குரிய ஒரு உப தொழிலாக அது இருக்கலாம். ஆனால் அதற்கு, சர்க்கா சங்கத்தைப் போன்ற ஒரு பெரிய ஸ்தாபனம் தேவையாக இராது. நம்முடன் கலந்தாலோசித்தும் கூடியவரை நமது ஆலோசனைப்படி நடந்தும் பஞ்சாலைகள்மீது அரசாங்கம் தனது கட்டுப்பாட்டைச் செலுத்தினால் நான் முழு மகிழ்ச்சியடைவேன்.[6]

## 6. கதரா? ஆலைத் துணியா?

### சென்னை முதலமைச்சர் போராட்டம்

சென்னை மாநில முதலமைச்சர், வணிகர் கழகம் போன்ற பெரிய முதலாளித்துவ நிறுவனங்களுடன், ஏன் சில காங்கிரஸ் காரர்களுடன் கூடப் போராடிக் கொண்டிருக்கிறார். சென்னைப் பத்திரிக்கைகளில் வெளிவந்த சில செய்திகளை வெட்டி எடுத்து எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். குறைகூறியவர்கள், அர்த்தமில்லாமல் ஒரு சார்பாக அவ்வாறு செய்திருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த வாக்கு வாதத்தில் என்னுடைய பெயரையும் இழுத்திருக்கிறார்கள். முதலமைச்சரின் திட்டத்தை நான் ஆதரிக்கிறேன் என்பது, இந்த மிக எளிய பிரச்னையை ஒரு சார்பில்லாமல் விவாதிப்பதற்குக் குந்தகமாக இருக்கக் கூடாது.

### விளைவு என்ன?

அந்த எளிய பிரச்னை இதுதான். 'புது ஆலைகளை நிர்மாணிக்கச் சென்னை அரசாங்கம் ஊக்கமளிக்கிறது அல்லது உற்பத்தியை இரண்டு மடங்காக்கும் அளவுக்குப் பழைய ஆலைகள் விரிவு படுத்தப்படுகின்றன' என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது சென்னை மாநிலத்தில் கதர் எல்லோரும் கட்டக்கூடிய துணியாகுமா? அரசாங்கம் நன்கு உதவிஅளித்து, ஆலைத் துணியைக் கிராமவாசிகள் மத்தியில் திணிப்பதானால்-சில சமயம், ஒரு குறிப்பிட்ட அளவு காலிகோ துணியை நெசவு செய்வதற்காகும் பஞ்சைக்

காட்டிலும் கூட அது மலிவாயிருக்கிறது-அது கதருடன் விளையாடு வதேயாகும். இதைக் கூடப் புரிந்து கொள்ள முடியாத அளவு கிராமவாசிகள் பாமரர்களாய் இருக்கிறார்களா? ஜப்பான் இந்தியாவுக்குத் தனது காலிகோ துணியை அனுப்பிய போது இவ்வாறு தான் நிகழ்ந்தது.

### திட்டத்தின் நோக்கம்

கிராமவாசிகள் தாங்கள் வேலையற்றிருக்கும் நேரத்தின் ஒரு பகுதியில் தங்களுக்கு வேண்டிய துணிக்கான நூலை நூற்க வேண்டும். சென்னையின் திட்டம் இதையே நோக்கமாகக் கொண்டதென்பதில் எவ்விதமான ஐயத்திற்கும் இடமில்லை. சோம்பேறித்தனமாக மக்கள் கழிக்கும் நேரத்தைப் பயனுள்ள தேசிய உழைப்பில், நாணயமான உழைப்பில், பயன் படுத்துமாறு மக்களைத் தூண்டுவதோ அவர்களிடமிருந்து அதை எதிர்பார்ப் பதோ, அசம்பாவிதமான காரியமாகுமா?

வேலை தேவையாயுள்ள எல்லோரும் அதிக வருவாய் தரக் கூடிய பயனுள்ள வேலை பெறுவதற்குக் காரிய சாத்தியமான வேறொரு திட்டம் இருந்தால், சென்னை அரசாங்கத்தின் மீது வசை மாரி பொழியலாம். தேசத்தின் உண்மையான சேவகர்களுக்கு, கற்பனைவாதிகள் என்றும், கனவு காண்பவர்கள் என்றும், வெறி பிடித்தவர்கள், மூடப்பித்துக்கொண்டவர்கள் என்றும் பட்டங் கட்டிவிட்டு, அவர்கள் கூறுவதை ஆராய்ந்து கவனிக்காமல் இருப் பது கண்ணியமற்ற வீண் பொழுது போக்கேயாகும்.

### கிராமவாசிகளுக்கு எதிர் அணியா?

முதலாளிகளும், நான்கு புறங்களிலும் அரண்களால் பாதுகாக் கப் பெற்றுள்ளவர்களும் ஏழைக் கிராமவாசிகளுக்கு எதிராக அணி வகுக்காமல் இருப்பார்களாக! கௌரவமான உழைப்பால் தங் களுடைய கடினமான வாழ்க்கை நிலையைச் சீர்திருத்திக் கொள்ள அவர்கள் செய்யும் முயற்சிக்குத் தடையாக இல்லாமல் இருப்பார் களாக!

### பெரிய தவறு

சென்னையின் திட்டத்தில் புது ஆலைகளைப்பற்றி இருந்த ஒரு பெரிய தவறு என்னால் கண்டு பிடிக்கப்பட்டது. மேலே கூறிய இரண்டும் ஒரே சமயத்தில் நடைபெற முடியாது என்பதையும், அனைத்து இந்திய நூற்போர் சங்கம் வகுத்த திட்டம் காரிய சாத்தியமானது என்பதையும் துணிக் கமிஷனர் ஆராய்ந்து உணர்ந்தபோது தான் அதை அவர் சென்னை அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்தார். அது நடை முறைச் சாத்தியமற்றதாக இருந்

தால் அல்லது செயல்படுத்த முடியாததாக இருந்தால், அவருடைய பெயரைத் தான் அது பாதிக்கும், குறை கூறுபவர்களை அல்ல.

**சில நிபந்தனைகள்**

ஜனநாயக அரசாங்கத்திஞல் ஜனநாயகத்திற்காகச் செய்யப் படும் பணி இது.

ஆகையால் எங்கே இத்திட்டம் முயற்சி செய்து பார்க்கப் படுகிறதோ அங்காவது இது மக்கள் மத்தியில் பரவவேண்டும்.

இது ஒரு மனிதரின் திட்டமாக இராமல் முழு அரசாங்கத்தின் திட்டமாக இருக்கவேண்டும்.

இதற்குச் சட்டசபையின் ஆதரவு வேண்டும்.

எந்த வகையிலும் இதில் கட்டாயத்தின் வாடை கூட வீசக் கூடாது.

இது இயல்பாகவே நடைமுறைச் சாத்தியமானதாகவும், பொதுமக்களுக்கு நன்மை அளிப்பதாகவும் இருக்கவேண்டும்.

வெற்றிக்கான இந்த நிபந்தனைகள் எல்லாம் எழுத்திலேயே வந்து விட்டன. இவைகளை அரசாங்கமும் அப்படியே ஏற்றுக் கொண்டது. வல்லுநர்களுடனும் தங்களுக்கிடையேயும் முழுதும் விவாதித்து ஆராய்ந்த பின்னரே இந்த நிபந்தனைகளை அரசாங்கம் ஏற்றது என்றும் நான் அறிகிறேன்.

**ஞாபகம் இருக்கட்டும்**

சென்னை மாநிலத்தில் ஏற்கனவே உள்ள ஆலைகளின் கிட்டக் கூடப் போகமாட்டார்கள் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்வோமாக! இந்தத் திட்டம் காட்டுத் தீ போன்று பரவுவதாக இருந்தால்,-ஏதாவது ஒரு நாளில் இப்படிப் பரவித்தான் ஆக வேண்டும்-ஆலைத் தொழில் முழுவதுமே பாதிக்கப்படும் என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை. அவ்வாறு ஏற்படுவதாஞல் இந்தியா விலுள்ள மிகப்பெரிய முதலாளிகூட அந்நாளுக்காக வருந்தாது இருப்பாராக!

**ஆராய வேண்டிய பிரச்னை**

ஆகவே இப்போது நாம் ஆராய வேண்டிய ஒரே பிரச்னை, 'சென்னை அரசாங்கம் மனப்பூர்வமாக இதைச் செய்கிறதா? அவர் களுக்கு இதைச் செய்யச் சக்தி உண்டா?' என்பதுதான். அவ்வாறு சக்தி இல்லாவிட்டால், எல்லாம் தவருகவே போய்விடும். அவ்வாறு இருந்தாலோ, இத் திட்டத்தை எல்லோரும் ஆசீர்வதிக்க வேண்டும். இத் திட்டம் வெற்றிபெற்றுத்தாஞகும்.[7]

அத்தியாயம் 30

# காங்கிரஸ் அமைச்சரவைகளும் கிராம வளர்ச்சியும்

### நோக்கம் என்ன?

மாநிலங்களில் காங்கிரஸ் அமைச்சர்கள் மீண்டும் பதவி ஏற்ப தானது, அரசியல் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு அரசாங்கம் அமைப்பது எப்படி என்ற சோதனையை நடத்துவதாகாது. சுதந்திர நாட்டில் பொதுமக்களுக்கு என்னென்ன காரியம் செய்யவேண்டும் என்று காங்கிரஸ் தன் மனதில் ஒரு இலட்சியம் வைத்திருக்கிறது. இந்தக் காரியங்களை நடைமுறையில் செய்து காண்பிப்பதே அமைச்சர்கள் முன்னுள்ள கடமை. பல்வேறு மாநிலங்களையும் சேர்ந்த தொழில் அமைச்சர்கள் மாநாடு 1936 ஜுலை 31ஆம் தேதியன்று புனாவில் கவுன்சில் மண்டபத்தில் நடைபெற்றது. நமது பொருளாதாரக் கொள்கையின் இலட்சியம் என்னவாக இருக்கவேண்டும்? நாம் நிர்மாணிக்க விரும்பும் சமூக அமைப்பின் இயல்புகள் என்ன? கிராமவளம் என்னும் இலட்சியத்தை அடைவதில் தற்போதுள்ள பொருளாதார, நிர்வாக அமைப்பில் என்னென்ன தடைகள் இருக்கின்றன என்ற பிரச்னைகளை அப்போது அவர்கள் ஆராய்ந்தார்கள்.

### மனிதனுக்கு மதிப்பு

இந்த மாநாட்டில் முப்பது நிமிடங்கள் காந்திஜி உரையாற்றினார். அப்போது, கிராமத் தொழில்களைக் குறித்துத் தமது கண்ணோட்டம் என்னவென்பதை விளக்கினார். "ஆதாரக் கல்விக்கும், கதர் உள்படக் கிராமக் கைத்தொழில் திட்டத்திற்கும் அடிப்படையாக உள்ள கருத்து ஒன்றுதான். அதாவது, பெரிய நகரங்களுக்குப் பதிலாகக் கிராம 'யூனிட்'டுக்கு மரியாதையும் மதிப்பும் கொடுப்பதிலும், அதேபோன்று இயந்திரத்திற்கு எதிராகத் தனி மனிதனுக்கு மதிப்பும் மரியாதையும் கொடுப்பதிலும் அக்கறை காட்டவேண்டும் என்பதாகும். இந்தியாவானது, கைவிரல்களை விட்டு எண்ணக்கூடியவாறுள்ள சில பெரிய நகரங்களில் இல்லை, அதனுடைய ஏழு இலட்சம் கிராமங்களில் தான் இருக்கிறது என்ற உண்மையை எண்ணிப் பார்க்கும்போது இந்த அக்கறை இன்னும் அதிகமாகும். நகரத்திற்கும் கிராமத்திற்கு மிடையே மீண்டும் நீதி நிலவுமாறு செய்யவேண்டும் என்பதுதான் பிரச்னை. தற்போதுள்ள நிலையிலோ இந்தத் தராசில் நகரங்

களின் தட்டுக் கீழேயும், கிராமங்களின் தட்டு மேலேயும் போகிறது'' என்று அவர் சொன்னுர்.

**இயந்திர சகாப்தம்**

காந்திஜி தொடர்ந்து கூறினுர். ''நம்முடைய சகாப்தத்தை இயந்திர சகாப்தம் என்று அழைக்கிருர்கள். ஏனென்ருல், இயந்திரம் நம்முடைய பொருளாதாரத்தில் ஆதிக்கம் செலுத்து கிறது. 'நல்லது, இயந்திரம் என்ருல் என்ன?' என்று ஒருவர் கேட்கலாம். ஒருவகையில் பார்த்தால், படைப்பிலேயே மிகவும் அற்புதமான இயந்திரம் மனிதனுவான். அந்த இயந்திரத்தைப் போல் மற்ெருரு இயந்திரம் செய்ய முடியாது. ஆனுல் நான் இங்கு இயந்திரத்தை அதன் பரந்த பொருளில் கூறவில்லே. ஆனுல், மனித, மிருக உடல் உழைப்பிற்கு உதவியாக இருப்பதற்குப் பதி லாக, அதன் திறமை வளர்ச்சியடைவதற்கு உதவியாய் இருப்ப பதற்குப் பதிலாக, அந்த உழைப்பை அகற்றுவதற்காகப் பயன் படும் ஒரு சாதனம் என்ற பொருளிலேயே நான் இதைப் பயன் படுத்தி யிருக்கிறேன். இது தான் இயந்திரத்தின் முதல் தனி அம்சமாகும். இரண்டாவது அம்சமோ, அதன் வளர்ச்சிக்கோ பெருக்கத்திற்கோ எந்தவிமான எல்லேயும் இல்லே என்பதாகும். மனித உழைப்பைப் பொறுத்தவரை இவ்வாறு சொல்ல முடியாது. ஒரு எல்லேக்குமேல் அதற்குச் சக்தியோ இயந்திரத் திறனே இருக்கமுடியாது. இந்தவிதமான சூழ்நிலேயில் தான் இயந் திரத்தின் மூன்ருவது அம்சம் வருகிறது. இயந்திரத்திற்கென்றே உரிய ஒரு தனி நோக்கும் சக்தியும் அதனிடம் இருப்பதாகத் தோன்றுகிறது. அது மனித உழைப்பிற்கு எதிரானதாகும். இவ் வாருக அது படிப்படியாக மனிதனுடைய இடத்தை ஆக்கிரமிக் கிறது. ஒரு இயந்திரமானது நூறு பேர், ஆயிரம் பேர் வேலே யைச் செய்கிறது. இவ்வாறு அகற்றப்படுபவர்கள் வேலேயில்லா தார், போதுமான அளவு வேலேயில்லாதார் கணக்கில் சேர்ந்து பெருந்தொகையாகக் குவிகின்றனர். இது விரும்பத்தக்கது என் பதற்காக இயந்திரம் அவ்வாறு செய்யவில்லே. இதுதான் அதன் சட்டம். அமெரிக்காவில், ஓரளவு அது கடைசி எல்லேயையே அடைந்துவிட்டது. இன்று மட்டும் நான் அதை எதிர்க்கவில்லே. *1908* இல் தென்னுப்பிரிக்காவில் இயந்திரங்கள் சூழ நான் இருந்த காலத்திலிருந்தே அதை எதிர்க்கிறேன். அவைகளுடைய முன் னேற்றம் என் மனதில் நல்ல எண்ணத்தை ஏற்படுத்தவில்லே என்பது மட்டுமல்ல, எனக்கு வெறுப்பையும் அளித்தது. கோடிக் கணக்கான மக்களே நசுக்கிச் சுரண்ட வேண்டுமானுல், இயந்திரத் தைப் போன்ற சாதனம் எதுவும் இல்லே. சமூகத்தின் அங்கத்

தினர் என்ற முறையில் எல்லா மனிதர்களும் சமத்துவமாக இருப்ப தானுல் மனிதப் பொருளாதாரத்தில் அதற்கு இடமேயில்லை யென்று அப்போது எனக்குத் தோன்றியது. இயந்திரம் மனிதனின் நிலையை உயர்த்தி விடவில்லை, அதைச் சரியான இடத்தில் வைக்கா விட்டால் அது மனிதனுக்கு நன்மை செய்யாது தொல்லைதான் கொடுக்கும் என்பது எனது நம்பிக்கை. இதற்கு அப்புறம் நான், ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' என்ற நூலை டர்பனுக்கு இரயிலில் சென்றபோது படித்தேன். அது என் மனதைக் கவர்ந்தது. மனித வர்க்கம் முன்னேற வேண்டுமானுல், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் இலட்சியத்தை அடைய வேண்டுமானுல், **கடையனுக்கும் கடைத்தேற்றம்** என்ற கோட்பாட்டை அது ஏற்றுச் செயல்படுத்தவேண்டும் என்பதைத் தெளிவாகக் கண்டேன். அது தன்னுடன் ஊமையர், நொண்டி, முடவர் ஆகியோரையும் அரவணைத்துச் செல்லவேண்டும். தர்ம ராஜனுன யுதிஷ்டிரர், தமக்கு விசுவாசமா யிருந்த நாயை விட்டு விட்டு சுவர்க்கத்திற்குச் செல்ல மறுத்துவிடவில்லையா?''

**அமைச்சரவைகளும்**
**அ. இ. கிராமக் கைத்தொழில் சங்கமும்**

இயந்திர சகாப்தத்தில் இவைகளுக்கெல்லாம் இடமில்லை. பலவீனமானவர்கள் பலியாகி ஒழிந்துவிட, மிகமிகத் தகுதியுள்ளவர்கள்தான் நிலைக்கிருர்கள். சுதந்திர இலட்சியத்தைப் பற்றி நான் கொண்டுள்ள கற்பனை இதுவல்ல. மிகமிக பலவீனமானவர்களுக்குக் கூட அதில் இடம் உண்டு. அதில் இயந்திர சக்தியைப் பயன்படுத்தும் எண்ணம் வருமுன், இருக்கும் மனித சக்தியையெல்லாம் பயன்படுத்திவிட வேண்டும்.

**நம்பிக்கை இருப்பதால்தான்**

இந்தப் பின்னணியில்தான், தலீமி சங்கம், அனைத்து இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவைகளைத் தோற்றுவிப்பதற்கு நான் காரணமாக இருந்தேன். அதனுடைய நோக்கம் காங்கிரசைப் பலப்படுத்த வேண்டுமென்பது தான். காங்கிரஸ் முக்கியமாகப் பொதுமக்களின் அமைப்பு என்று உரிமை பாராட்டுகிறது. சொந்த அதிகாரம் படைத்த இந்த நிறுவனங்களைக் காங்கிரஸ் தோற்றுவித்துளது. மனவுறுத்தல் எதுவும் இல்லாது, எப்போதுமே இந்த நிறுவனங்களின் சேவையைக் காங்கிரஸ் அமைச்சரவைகள் பெறலாம். காங்கிரசின் முதுகெலும்பான கிராமவாசிகளுக்காகவே, அவர்களுக்காகப் பாடுபடுவதற்காகவே அவை இருக்கின்றன. ஆனுல் அமைச்சரவைகளுக்கு அந்தவிதமான கடமை எதுவும் இல்லை. இந்த அமைப்புகளின் நோக்கங்களில்

அவைகளுக்கு நம்பிக்கை யிராவிட்டால் காங்கிரஸ் செயற்குழு மூலமாக அவர்கள் அதைத் தெளிவாகச் சொல்லிவிடவேண்டும். மனமில்லாதபோது விளையாட்டுக்காக ஒரு காரியத்தில் ஈடுபடுவது மோசமான செயலாகும். இந்தியாவின் பொருளாதார, அரசியல் விமோசனத்துக்கு அதில் (கிராமக் கைத்தொழில் சங்கத்தில்) தான் திறவுகோல் இருக்கிறது என்று நான் நம்புகிறேன். என்னுடன் சேர்ந்து அமைச்சரவைகளும் நம்புவதாய் இருந்தால் அவை அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். அமைச்சரவைகள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்ளக் கூடாது; பிறரையும் ஏமாற்றக்கூடாது.

## பொன் விளையும் பூமி

### அடிப்படை விவசாயமே

கிராமக் கைத்தொழில்களின் அடித்தளமும், அடிப்படையும் விவசாயமாகும். பல ஆண்டுகளுக்கு முன் நான் ஒரு கவிதை படித்தேன். அதில், உழவன்தான் உலகத்தின் தந்தை என வர்ணிக்கப்பெற்றிருந்தது. கடவுள்தான் எல்லாவற்றையும் நமக்கு வழங்கும் தயாபரர் என்ருல், விவசாயி தான் அவருடைய கை. நாம் அவனிடம் பட்டுள்ள கடனைத் திருப்பிச் செலுத்த என்ன செய்யப்போகிரேம்? அவன் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டதை வைத்துத் தான் இதுவரை நாம் வாழ்ந்து வந்திருக்கிரேம். நிலத்திலிருந்து நாம் தொடங்கியிருக்க வேண்டும். ஆனல் நம்மால் அவ்வாறு செய்யமுடியவில்லை. குற்றம் ஓரளவு என்னுடையது தான்.

### நெற்றி வியர்வை நிலத்தில் விழவேண்டும்

அரசியல் அதிகாரம் மட்டும் இல்லாவிட்டால் விவசாயத்தில் அடிப்படையான சீர்திருத்தம் செய்யமுடியாது என்று கூறக் கூடிய ஒரு சிலர் இருக்கிருர்கள். பெருமளவில் நீராவியையும் மின்சாரத்தையும் பயன்படுத்தி விவசாயத்தை இயந்திர மயமாக்க வேண்டுமென்று அவர்கள் கனவு கண்டு கொண்டிருக்கின்றனர். விரைவாகப் பலன் தரவேண்டுமென்பதற்காக பூமியின் சத்தைப் பணயம் வைப்பதானது விபரீதமான குறுகிய நோக்குடைய கொள்கையாக முடியும் என எச்சரிக்கிறேன். இதன் முடிவாக, நிலத்தில் சத்தே இல்லாமற் போய்விடும். பொன் விளையும் பூமியானது, வாழ்க்கைக்கு வேண்டிய உணவை அளிப்பதற்கு, ஒருவன் நெற்றி வியர்வையை நிலத்தில் சிந்த வேண்டும் என்றே கேட்கிறது.

இந்தக் கண்ணேட்டமானது மெதுவாகப் பலன் தரக்கூடியது, முற்போக்கற்றது என்று மக்கள் குறைகூறலாம். திடீரென்று உடனடியாகப் பலன் தரக்கூடிய வாய்ப்பு இதில் இல்லை. எனினும்,

நிலத்தின் செழிப்பு, அதில் வாழும் மக்களின் செழிப்பு ஆகிய இரண்டுக்குமே இதில்தான் திறவுகோல் இருக்கிறது. கிராமப் பொருளாதாரத்துக்கு ஆரம்பமும் இறுதியும் ஆக இருப்பது சுகாதாரமுள்ள, சத்துள்ள உணவே. ''ஒரு விவசாயியின் வரவு செலவில் பெரும் பகுதி அவனும் அவனுடைய குடும்பமும் சாப்பிடுவதற்குத் தான் சரியாக இருக்கிறது. மற்றப் பொருள்களெல்லாம் இதற்குப் பின்தான் வருகின்றன. நிலத்தில் பாடுபடும் உழவன் நல்ல உணவு உண்ணட்டும். போதுமான அளவு சுத்தமான, பால், நெய், எண்ணெய் ஆகியவைகளை அவன் உணவில் உட்கொள்ளட்டும். அவன் அசைவனாக இருந்தால் போதுமான அளவு மீன், முட்டை, மாமிசம் ஆகியவைகளையும் உட்கொள்ளட்டும். அவன் நல்ல தேவையான உணவு உண்ணாமலிருந்து நேர்த்தியான ஆடைகளை மட்டும் போட்டால் என்ன பயன்? குடிதண்ணீர்ப் பிரச்னை, மற்ற விஷயங்களெல்லாம் இதற்குப் பின்னால்தான் வரும். இவைகளையெல்லாம் கவனிக்கும்போது மேலும் பல பிரச்னைகள் இயல்பாகவே எழும். இயந்திரக் கலப்பைக்கும் மின்சார நீர்ப்பாசனத்துக்கும் பதிலாக, விவசாயப் பொருளாதாரத்தில் உழவு மாடுகளுக்கு உரிய இடம் அளிக்க வேண்டும். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாகக் கிராமப் பொருளாதாரத்தைப் பற்றிய முழுச் சித்திரமே நம் முன் வரும். இந்தச் சித்திரத்தில் நகரங்களுக்கு இயற்கையாக இருக்கவேண்டிய இடம் கிடைக்கும். அவை தற்போது உள்ளதைப் போல, இயற்கைக்கு விரோதமான, மக்கள் நெருக்கடி அதிகமாக உள்ள இடங்களாகவோ அல்லது மக்கள் சமுதாயத்தில் உள்ள கொப்புளங்கள் போன்றோ தோன்ற மாட்டா. நமது கைகளின் உபயோகத்தையே மறந்து விடக்கூடிய அபாயத்தில் இன்று நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மண்ணை உழுது பதப்படுத்துவதை மறந்து விடுவதானது நம்மையே மறந்துவிடுவதாகும். நீங்கள் நகரங்களுக்கு மட்டும் சேவை செய்து விட்டால் அமைச்சர் பதவியில் இருப்பதற்கு நியாயமான உரிமை கிடைத்துவிடும் என்று நினைப்பது, இந்தியா தன்னுடைய 7 இலட்சம் கிராமங்களில் தான் உண்மையிலேயே வாழ்கிறது என்பதை மறந்து விடுவதாகும். ஒரு மனிதனுக்கு ஒரு வியாபாரத்தில் உலகமெல்லாங் கிடைத்து, அவன் அதில் தன்னுடைய ஆன்மாவை இழந்து விட்டானென்றால், அதனால் அவனுக்கு என்ன இலாபம்?''

இவ்வாறு காந்திஜி பேசி முடித்த பின் அவரிடம் கேள்விகள் கேட்கப்பட்டன.

## பரிகாரங்கள்

### இயற்கை வைத்தியம்

கேள்வி: நகரங்கள் மக்கள் சமுதாயத்தில் உள்ள கொப்புளங்கள் என்று நீங்கள் கூறினீர்கள். இந்தக் கொப்புளங்கள் குறித்து நாம் என்ன செய்ய வேண்டும்?

பதில்: நீங்கள் ஒரு டாக்டரைக் கேட்டீர்களானால், ஒரு கொப்புளத்தை என்ன செய்வதென்று கூறுவார். அதைச் சீவித் தள்ள வேண்டும். அல்லது, மருந்துத் துணியோ மாவோ வைத்துக் கட்டிக் குணப்படுத்த வேண்டும். நாகரிகம் என்பது குணப்படுத்த வேண்டிய ஒரு நோய் என எட்வர்டு கார்ப்பெண்டர் கூறினார். பெரிய நகரங்களின் வளர்ச்சியானது அந்த நோயின் ஒரு சின்னந்தான். நான் இயற்கை வைத்தியத்தில் நம்பிக்கை உள்ளவன். ஆகையால் உடற்பகுதிகளைப் பொதுவாகச் சுத்தம் செய்து இயற்கையான வழியில் அதைக் குணப்படுத்த வேண்டும் என்பதை நான் ஆதரிப்பது இயல்பே. நகரங்களில் வாழ்பவர்களின் உள்ளத்தில் கிராமங்கள் இடம் பெற்றால், உண்மையிலேயே அவர்கள் கிராம மனோபாவம் படைத்தவர்களாக இருந்தால், மற்றவையெல்லாம் தாமாகவே நடைபெறும்; கட்டியும் விரைவில் குணமடைந்துவிடும்.

### நடைமுறைச் சாத்தியமானவை

கேள்வி: தற்போதுள்ள சூழ்நிலைகளில், உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் இயந்திரத்தினால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் போட்டியிலிருந்து நமது கிராமக் கைத் தொழில்களைக் காப்பாற்ற நாம் நடைமுறைச் சாத்தியமாக என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க முடியும்?

பதில்: பரந்த அடிப்படையில் தான் நான் இதைக் கூற முடியும். பொது மக்களுடைய நலன்களைக் காப்பாற்றும் பிரதிநிதிகளாகவோ காவலாளர்களாகவோ தான் பதவி ஏற்றிருப்பதாக நீங்கள் இதயபூர்வமாக உணருவதாக இருந்தால், நீங்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் - உங்கள் சட்டம், உங்கள் நிர்வாக உத்தரவுகள், நீங்கள் பிறப்பிக்கும் ஆணைகள் ஆகியவையெல்லாம்—கிராம மக்களின் நலனை மூச்சாகக் கொண்டிருக்கும். கிராமவாசியின் நலனைப் பாதுகாப்பதற்கு, நீங்கள் வைசிராயின் அனுமதியை எதிர்பார்க்க வேண்டியதில்லை. ஆலைகளின் போட்டியிலிருந்து கையால் நூற்பவரையும் நெசவு நெய்பவரையும் பாதுகாக்கவும் பொதுமக்களுடைய துணிப்

பற்ருக்குறையைத் தீர்க்கவும் நீங்கள் விரும்புகிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் சிவப்பு நாடா முறையைக் கையாள மாட்டீர்கள். ஆலே அதிபர்களை அழைப்பீர்கள். நீங்கள் பதவியிலிருந்து போக வேண்டுமென அவர்கள் விரும்பாவிட்டால், அவர்களுடைய உற்பத்திக் கொள்கையை மக்களின் தேவையை அனுசரித்ததாக மாற்றிக் கொள்ள வேண்டுமென்றும், மக்களின் காவலராகவும் பிரதிநிதியாகவும் தான் நீங்கள் பதவியில் இருப்பதாகவும், அவர்களிடம் கூறுவீர்கள். கதர் உற்பத்திக்கென ஒதுக்கப்பட்டுள்ள சில பகுதிகளுக்கு, அல்லது, கைத்தறி நெசவாளர்களுக்குப் பயனுள்ள சில வகை நூல் அல்லது கைத்தறித் துணி உற்பத்தியாகும் பகுதிகளுக்கு, ஆலேத் துணிகளை அனுப்ப வேண்டாமென்று கூறுவீர்கள். நீங்கள் மட்டும் உண்மையான அக்கறையுடன் கூறுவதானல், உங்களுடைய சொல் ஈடேறும். இந்தியப் பஞ்ச நிவாரணத்துக்காக இந்தோனேசியாவின் உபரி அரிசியைப் பெற்று, அதற்கு மாருக, இங்கிருந்து இந்தோனேசியாவுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டியிருந்த துணிகளை அவர்கள் அண்மையில் அளித்தார்களல்லவா? இதைப் போன்றே மனமுவந்து தங்களுடைய ஒத்துழைப்பை அளிப்பார்கள். ஆனல் முதலில் அந்த மன உணர்வு இருக்க வேண்டும். மற்றவைகளெல்லாம் தாமாகவே பின்னல் சரியாகிவிடும்.[1]

அத்தியாயம் 31

# காங்கிரஸ் அமைச்சரவைகளும் ஆதாரக் கல்வியும்

### அமைச்சரவைகளின் முதல் வேலை

ஏழு மாநிலங்களில் பதவி வகித்த காங்கிரஸ் அமைச்சரவைகள் 1940 ஆம் ஆண்டு பதவியிலிருந்து விலகின. இதன் பின்னர் 93-ஆவது பிரிவின் கீழ் ஆட்சி நடைபெற்றது. அந்த ஆட்சி நடைபெற்ற போது, காங்கிரஸ் அமைச்சரவைகளால் தொடங்கி வைக்கப்பட்ட ஆதாரக் கல்வித் திட்டங்கள், மது விலக்கு, கிராமப் புனருத்தாரணம், ஆதாரமான கிராமக் கைவேலைப்பாட்டுத் தொழில்களின் மறுமலர்ச்சித் திட்டம் ஆகியவைகளில் மிகக் கடுமையான நாச வேலைகள் நடைபெற்றன. இயற்கையாகவே, காங்கிரஸ் அமைச்சரவைகள் மீண்டும் பதவி ஏற்றவுடன், தங்களுடைய சோதனைகளில் எவை எவை எஞ்சி இருக்கின்றனவோ அவைகள் அழிந்து போகாமல் காப்பாற்றுவதே அவைகளின் முதல் கவனமாக இருக்கும். அவர்கள் விட்டு வைத்த நூலை மீண்டும் முடிச்சுப் போட்டுச் சேர்க்க வேண்டும்.

### அளவுக்கு மீறிய திட்டம்

காங்கிரஸ் பதவி வகிக்கும் மாநிலங்களைச் சேர்ந்த கல்வி அமைச்சர்கள், 1946 ஜூலை 29, 30 ஆம் தேதிகளில் புனாவில் உள்ள கல்வி மண்டபத்தில் கூடினர். ஸ்ரீ பாலா சாகிப் கெர் வேண்டுகோளின் பேரில், அவருடைய தலைமையில், கல்வி சம்பந்தமாக ஆலோசிப்பதற்காக இந்த மாநாடு கூடியது. எல்லா மாநிலங்களைச் சேர்ந்த கல்வி அமைச்சர்களும் இதற்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். இரண்டு மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் மட்டும் இதில் கலந்துகொள்ள முடியவில்லை. 29 ஆம் தேதி பிற்பகலில் சுமார் ஒரு மணி நேரத்திற்குமேல் இந்த மாநாட்டில் காந்திஜி கலந்துகொண்டார். அரசாங்க நிறுவனங்களையும், அதைச் சார்ந்த நிறுவனங்களையும் பொறுத்தவரை ஆதாரக் கல்விச் சோதனையானது பின்னடைந்திருந்தது என்றாலும் தலீமி சங்கத்தின் ஆதரவில் இது தொடர்ந்து நடைபெற்றது. காந்திஜியின் முன்னோக்கால், எந்த அவசரகால நெருக்கடிக்கும் சங்கம் தயாராக இருந்தது. முதல் ஏழு ஆண்டுகள் முடிவடைந்து விட்டதால், ஆதாரக் கல்விக்கு வயது வந்துவிட்டது. காந்திஜி காவலி

லிருந்து விடுதலையான பின்னர், 1944 இல், தலீமி சங்க உறுப்பினர்கள் கூட்டத்தில் முதன் முதலாகக் கலந்துகொண்டார். ஆதாரக் கல்வியின் வரம்பை விரிவுபடுத்த வேண்டிய கட்டத்தை அடைந்துவிட்டோம் என்பதை காந்திஜி அவர்களுக்கு விளக்கினார். "நம்முடைய எல்லைக்குள் உயர் ஆதாரக் கல்வியையும் பூர்வாங்க ஆதாரக் கல்வியையும் எடுத்துக் கொள்ளவேண்டும். ஆதாரக் கல்வி யென்பது எழுத்துக்கெழுத்து வாழ்க்கைக்கான கல்வியாகவேண்டும்" என்று அவர் கூறினார். இதிலிருந்து காந்திஜி தம்முடைய வாதங்களைத் தொடர்ந்து பின்னிக் கொண்டே போனார். எந்தெந்த அம்சங்களில் ஆதாரக் கல்வியை விரிவுபடுத்துவது, இதில் தம் கருத்துப்படி அமைச்சர்களின் கடமை என்ன என்பதையெல்லாம் அவர் தமது சொற்பொழிவில் விளக்கினார். அளவுக்குமீறிய ஆர்வத்தில், தங்களால் விழுங்க முடியாததைக் காட்டிலும் பெரிய கவளத்தை அவர்கள் வாயில் போட்டுக்கொள்ளக் கூடாதே என்று டாக்டர் ஜாகிர் ஹுசேன் கேட்டார். இந்தக் கேள்விக்கு மறுமொழி அளிக்கும் முறையில் காந்திஜி விளக்கிக்கொண்டிருந்தார். நம்மால் அமுல் நடத்துவதற்கு மார்க்கம் இல்லாத அளவுக்குமீறிய திட்டமானது நம்மைச் சிக்கவைக்கும் ஒரு அபாயகரமான பொறியாக ஆய்விடும் என்று அவர் கூறினார்.

### "நான் ஒரு அமைச்சரானால்?"

காந்திஜி தொடர்ந்து கூறினார்: "என்ன செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் அதை எவ்வாறு செய்யவேண்டும் என்பதுதான் எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. இதுவரை நமது பாதை நமக்கு வரையறுக்கப்பட்டிருந்தது. ஆனால் இப்போது நாம் திசை காட்டப்படாத கடலில் செல்லவேண்டியிருக்கிறது. உங்களுடைய துயர் எனக்குத் தெரியும். பழைய பரம்பரையில் வளர்க்கப்பட்டவர்களுக்கு ஒரே நொடியில் அதிலிருந்து விலகிவந்து விடுவதென்பது எளிதல்ல. நான் அமைச்சராக இருந்தால், கல்வி சம்பந்தமான அரசாங்க நடவடிக்கைகளெல்லாம் இனிமேல் ஆதாரக் கல்வி அடிப்படையில் இருக்கும் என்று விரிவான உத்தரவுகள் பிறப்பிப்பேன். அநேக மாநிலங்களில் ஆதாரக் கல்வி முயற்சிகள் தொடங்கப்பட்டிருக்கின்றன. என்னுடைய வழியை ஏற்பதானால், ஒரு ஆதாரக் கைவேலைப்பாட்டுத் தொழிலின்மூலம் இவைகளை நடத்துவேன். என்னுடைய கருத்துப்படி நூல் நூற்பதும் அதை யொட்டிய வேலைகளும் இதற்கு மிகமிகப் பொருத்தமான தொழில்களாகும். ஆனால் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சம்பந்தப்பட்ட மக்களே

தாங்கள் விரும்பிய தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலா மென்று விட்டுவிடுவேன். இறுதியில், எந்தத் தொழிலுக்கு உண்மையான தகுதி இருக்கிறதோ அந்தத் தொழில்தான் தப்பிப் பிழைக்கும் என்ற உறுதியான நம்பிக்கையின்பேரில் நான் அவ்வாறு செய்வேன். மக்கள் மத்தியிலும் ஆசிரியர்கள் மத்தி யிலும் சென்று விவரங்களை எடுத்துக்கூறி, விவாதித்து அரசாங் கத்தின் புதுக் கல்விக் கொள்கையின் சிறப்பையும் பயனையும் கற்பிக்க வேண்டியது கல்வித் துறையைச் சேர்ந்த இன்ஸ்பெக் டர்கள், மற்ற அதிகாரிகள் ஆகியோரின் பணியாக இருக்க வேண்டும். இதுதான் அவர்களுடைய பிரதான கடமை. அதி காரம் செலுத்தி மக்கள்மீது திணிப்பதல்ல. அதில் அவர்களுக்கே நம்பிக்கை இல்லாவிட்டால், அல்லது புதுக் கொள்கையை நிறைவேற்றி வைப்பதற்கு விசுவாசமாக உழைக்க அவர்கள் தயங்கினால், அவர்கள் தங்களுடைய பதவியிலிருந்து விலகிக் கொள்வதற்கு நான் வாய்ப்பு அளிப்பேன். அமைச்சர்கள் தங்கள் பணியை அறிந்து தோள் கொடுப்பதானால், இதற்கு அவசியம் ஏற்படும் என்று நான் கருதவில்லை. உத்தரவுகளைப் பிறப்பிப்பதுமட்டும் எந்தக் காரியத்தையும் சாதித்துவிடாது.

### பல்கலைக் கழகக் கல்வியை மாற்றி அமைத்தல்

முதியோர் கல்வியைப்பற்றி நான் சொன்னதெல்லாம், அதே அளவு பல்கலைக் கழகக் கல்விக்கும் பொருந்தும். இந்திய நிலவரத் துக்கு இக்கல்வி முற்றிலும் இயல்போடு இணைந்ததாக இருக்க வேண்டும். ஆகையால் அது ஆதாரக் கல்விப் படிப்பின் ஒரு தொடர்ச்சியாக, மேல் படிப்பாக இருக்கவேண்டும். இதுதான் மத்தியமான அம்சம். இதில் நீங்கள் என்னுடைய கருத்தை அப் படியே ஏற்கவேண்டும். இல்லையேல் என் ஆலோசனையால் உங்க ளுக்கு ஒரு பயனும் இருக்காது. அதற்குமாறாக, தற்போதைய பல்கலைக் கழகக் கல்வியானது நம்மை விடுதலைக்குத் தகுதியான வர்களாக்கவில்லை, நம்மை அடிமைப்படுத்தத்தான் செய்கிறது என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டீர்களானால், அந்த முறையை அடிப்படையிலேயே சீர்படுத்தவும், ஒழித்துக்கட்டவும், தேசத்தின் தேவைக்கு ஏற்ற முறையில் புது அடிப்படையில் திருத்தியமைக்க வும் என்னைப்போன்றே அவசரப்படுவீர்கள்.

### இன்றைய பட்டதாரிகள் நிலை

இன்று நம்முடைய பல்கலைக் கழகங்களில் கற்ற வாலிபர்கள் ஒன்று, அரசாங்கப் பதவிகளை நாடி ஓடுகிறார்கள் அல்லது தவறான பாதைகளில் நழுவி விழுந்து குழப்பத்தைத் தூண்டி தங்களுடைய

விரக்தியை வெளிப்படுத்துவதற்கான வழியை ஏற்படுத்திக்கொள் கிறார்கள். பிச்சை யெடுப்பதற்கோ அல்லது பிறரை அண்டி வாழ் வதற்கோ அவர்கள் வெட்கப்படுவதில்லை. அவர்களுடைய வருந்தத் தக்க நிலை அவ்வாறு இருக்கிறது. பல்கலைக் கழகக் கல்வியின் குறிக்கோள், நாட்டின் விடுதலைக்காக வாழ்ந்து சாகக்கூடிய உண்மையான மக்கள் தொண்டர்களை உருவாக்குவதேயாகும். ஆகையால் தலீமி சங்கத்திலிருந்து ஆசிரியர்களைப் பெற்று, ஆதா ரக் கல்வியுடன் ஒட்டிய கல்வியாகப் பல்கலைக் கழகக் கல்வியை ஒருங்கிணைக்க வேண்டும் என்பது எனது கருத்து.

### மக்கள் ஆதரவு முக்கியம்

மக்களின் பிரதிநிதிகள் என்ற முறையில் அமைச்சர்கள் பதவி ஏற்றிருக்கிறார்கள். மக்களைத் தங்களுடன் அரவணைத்துச் சென்றா லொழிய, கவுன்சில் மண்டபத்தின் நான்கு சுவர்களுக்கு அப்பால் அவர்களுடைய உத்தரவு செல்லாது. பம்பாயிலும் ஆமதாபாத்தி லும் இன்று நடப்பது, மக்கள்மீதுள்ள செல்வாக்கைக் காங்கிரஸ் இழந்துவிட்டது என்பதை முன்னறிவிப்பதாக இருந்தால் அது ஒரு கெட்ட சகுனமாகும். ஆதாரக் கல்வியானது இன்றுகூட ஒரு மென்மையான சிறு செடியாகவே இருக்கிறது; ஆனாலும் அதற்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. மக்களுடைய ஆதரவு மட்டும் இல்லாவிட்டால், அமைச்சர்களுடைய உத்தரவினால் மட்டும் கட்டாயப்படுத்தி அதன் வளர்ச்சியைக் கண்டுவிட முடியாது. ஆகவே நீங்கள் மக்களின் ஆதரவைப் பெற முடியவில்லை யென் றால், பதவியிலிருந்து விலகிவிடலாம் என்றே யோசனை கூறு வேன். அராஜகத்தைக் கண்டு நீங்கள் அஞ்சக்கூடாது. உங்க ளுடைய மனச்சாட்சிப்படி எது உங்கள் கடமை என்று தோன்று கிறதோ அதைத்தான் செய்யவேண்டும். மற்றவைகளையெல்லாம் ஆண்டவனிடம் விட்டுவிட வேண்டும். இந்த அனுபவத்திலிருந்தும் உண்மையான சுதந்திரம் என்றால் என்ன என்ற பாடத்தை மக்கள் கற்றுக்கொள்வார்கள்.''

### முதற் கேள்வி

இதன் பின்னர், 'கேள்வி கேட்க விரும்புவோர் கேட்கலாம்' என காந்திஜி அழைத்தார். ''தன்னிறைவு என்ற அடிப்படை இல் லாது, ஆதாரக் கல்வியைக் கற்பிக்க முடியுமா?'' என்பது முதற் கேள்வி.

''நீங்கள் நிச்சயமாக முயற்சி செய்து பார்க்கலாம்'' என்று காந்திஜி பதில் அளித்து மேலும் சொன்னார்: ''ஆனால் நீங்கள் என்னுடைய யோசனையைக் கேட்பதாக இருந்தால், இப்படிப்

பட்ட நிலையில் ஆதாரக் கல்வியையே முற்றிலும் மறந்துவிடுங்கள் என்றுதான் கூறுவேன். தன்னிறைவு என்பது காரிய-காரண வாத அடிப்படையில் எழுந்த ஒரு நிபந்தனையல்ல. ஆனால் என்னைப் பொறுத்தவரை அதுதான் ஒரே முடிவான சோதனை. தொடக்கக் கட்டத்திலிருந்தே ஆதாரக் கல்வி தன்னிறைவு உள்ளதாக இருக்கும் என்பது இதற்குப் பொருள் அல்ல. ஆனால் ஆதாரக் கல்வித் திட்டத்தில் மொத்தமாக உள்ள ஏழு ஆண்டுகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டால், வரவும் செலவும் ஒன்றுக்கொன்று சரிக்கட்டவேண்டும். இல்லையேல், அவர்களுடைய பயிற்சி முடிவடைந்த பின்னருங்கூட, ஆதாரக் கல்வி மாணவர்கள் வாழ்க்கைக்குத் தகுதியானவர்களாகவில்லை என்றாகிவிடும். இது ஆதாரக் கல்விக்கே நேர் விரோதமானதாகும். ஆகவே சுய தேவைப் பூர்த்தி என்ற அடிப்படை இல்லாத ஆதாரக் கல்வி, உயிரில்லாத உடலைப்போன்றது.''

இதன் பின்னர் மற்றக் கேள்விகளும் பதில்களும் பின் தொடர்ந்தன.

**கேள்வி :** ஒரு ஆதாரக் கைத்தொழில் மூலம் கல்வி புகட்டும் கொள்கையை நாம் ஏற்றுக் கொண்டோம். ஆனால் எப்படியோ முஸ்லிம்கள் இராட்டையை எதிர்க்கிறார்கள். பருத்தி விளையும் பகுதிகளைப் பொறுத்த வரையில் நூல் நூற்பதை நீங்கள் வலியுறுத்துவது ஒரு வேளை சரியாக இருக்கலாம். ஆனால் பருத்தி விளைச்சல் இல்லாத பகுதிகளில் அது பொருந்தாது என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ள மாட்டீர்களா? இப்படிப்பட்ட இடங்களில் வேறு ஏதாவது ஒரு தொழில் - உதாரணமாக, விவசாயம் - அதன் இடத்தைப் பெற முடியாதா?

**பிற இடங்களிலிருந்து கொண்டு வந்தால்?**

**பதில்:** இது மிக மிகப் பழைய கேள்வி. கல்வி புகட்டுவதற்குச் சாதனமாக இருக்கும் எந்த ஆதாரக் கைத்தொழிலையும் அது எல்லோராலும் கைக்கொள்ளக் கூடியதா என்று சோதித்துப் பார்க்க வேண்டும். இந்தியா விடுதலையடைந்து, அது தன் பலத்தில் நிற்க வேண்டுமானால், இராட்டையின் இசை ஒவ்வொரு இல்லத்திலும் கேட்கவேண்டும் என்ற முடிவுக்கு 1908 இலேயே நான் வந்துவிட்டேன். ஒரு சுளைப் பருத்தியைக் கூட இங்கிலாந்து விளைவிப்பதில்லை. ஆனாலும், இந்தியாவுக்கு, ஏன் இந்த உலகம் முழுவதற்குமே அது துணிகளை ஏற்றுமதி

செய்து கொண்டிருக்கிறது. இங்கிலாந்து இவ்வாறு ஆக முடியுமானல், பக்கத்து மாநிலத்தில் அல்லது மாவட்டத்தில் பஞ்சை நாம் வாங்க வேண்டியிருக்கிறது என்பதற்காக, ஏன் நமது இல்லங்களில் இராட்டையைச் சுழற்ற முடியாது? உண்மை என்னவெனில், இந்தியாவில் ஒரு காலத்தில் பஞ்சு விளைவிக்கப்படாத பகுதியே இருந்ததில்லை. சில குறிப்பிட்ட பகுதிகளில் தான் பருத்தி விளைவிப்பதென்பது, அண்மைக் காலத்தில் ஏற்பட்ட ஒரு அசாதாரண மாறுதலாகும். இந்தியாவில், வரி செலுத்தும் ஏழைக்கும் நூல் நூற்பவருக்கும் எதிராக, பருத்தி விளைவிக்கும் அதிபர்கள் இந்தியாமீது கட்டாயமாகச் சுமத்திய ஒரு சூழ்நிலை இது. இன்று கூடப் பருத்தி விளையும் மரங்கள் இந்தியாவில் எங்கும் வளர்கின்றன. நீங்கள் கூறும் வாதமானது, தூண்டுகோலிடுவதற்கு நமக்குள்ள சக்தியையும், நம்முடைய துணிச்சலையும், சிக்கல்களைச் சமாளிக்கும் அறிவுத் திறனையும் குறைத்து மதிப்பிடுவதாகும். மற்றொரு இடத்திலிருந்து மூலப் பொருள்கள் வருவது சமாளிக்க முடியாத ஒரு பெருந் தடங்கல் என்று கருதப்பட்டால், எந்த உற்பத்தியிலுமே நாம் ஈடுபட முடியாது.

**சர்க்கா செய்துள்ள நன்மை**

மேலும், நிர்வாணமாகி விடும் நிலையிலுள்ள ஒருவனைத் தன் சொந்த முயற்சியால் ஆடை உடுக்கச் செய்ய உதவுவதே ஒரு கல்வி தான். பருத்தியிலிருந்து நூல் நூற்பது சம்பந்தமான பல்வேறு பணிகளையும் புத்திசாலித்தனமாகச் செய்வதில் நிறையக் கல்வி இருக்கிறது. உண்மையில், வேறு எந்தத் தொழிலிலுமே இல்லாத அளவிற்கு அதில் மனிதனின் முழுக் கல்வி அடங்கிக்கிடக்கிறது. முஸ்லிம்கள் இன்று ஒரு மாயையில் ஆழ்ந்து கிடப்பதால், அவர்களுடைய ஐயப்பாட்டை நம்மால் அகற்ற முடியவில்லை. மாயையால் ஒருவன் கட்டுப்பட்டிருக்கும் போது அது அவனுக்கு மிகமிக உண்மையாகத் தோன்றுகிறது. ஆனல் நம்பிக்கை தெளிவானதாகவும் உறுதியானதாகவும் இருந்தால், நம்முடைய முறை வெற்றி பெறும் என்பதை நாம் மெய்ப்பிக்கவும் முடியுமென்றால், முஸ்லிம்களே நம்மிடம் வந்து, நம்முடைய வெற்றியின் இரகசியத்தைக் கற்றுக் கொடுக்குமாறு கேட்பார்கள். முஸ்லிம் லீகைவிட, ஏன், மற்ற எந்த முஸ்லிம் அமைப்பையும் விட, சர்க்கா ஏழை முஸ்லிம்களுக்கு அதிக நன்மை செய்திருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. வங்கத்திலுள்ள ஏழைகளில் பெரும்பான்மையோர்

முஸ்லிம்கள். மேலும், உலகம் முழுவதும் பெயர் பெற்ற மெல்லிய சல்லாத் துணிகளுக்கும், முஸ்லிம் பெண் நூற்பாளர்கள், முஸ்லிம் நெசவாளர்கள் ஆகியோருடைய திறமைக்கும் லாகவத்திற்கும் உலகம் முழுவதிலும் டாக்கா பெயர் பெற்றிருந்தது என்பதை மறந்து விடக் கூடாது.

**சத்தியத்தின் குரலாக இருந்தால்?**

இதுவே மகாராஷ்டிரத்திற்கும் பொருந்தும். இந்த மாயையை அகற்றுவதற்குச் சிறந்த மருந்து ஒருவன் தன்னுடைய கடமையிலேயே முழுக் கவனமும் செலுத்துவதாகும். சத்தியம் தான் நிலைத்து நிற்கும். மற்றவைகளெல்லாம் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும். ஆகையால் எல்லோருமே என்னைப் புறக்கணிப்பதாக இருந்தாலும், நான் சத்தியத்திற்கு ஒரு சான்றாக இருக்க வேண்டும். இன்று என் குரல் தன்னந் தனிக் குரலாக இருக்கலாம். ஆனால் அது மட்டும் சத்தியத்தின் குரலாக இருந்தால், மற்றக் குரல்களெல்லாம் அடங்கிப் போனாலும் அது மட்டும் அடங்காமல் ஒலித்துக் கொண்டே இருக்கும்.

## நச்சுச் சுழல்

"ஆதாரக் கல்விக்குத் திறமை வாய்ந்த ஆசிரியர்கள் கிடைக்குமாறு செய்வதற்குக் காலமாகும். இதற்கிடையில் பள்ளிகளில் கல்வி வளர்ச்சிக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று ஆங்கிலத்தில் திரு அவினாசிலிங்கம் செட்டியார் கேட்டார். ஆங்கிலத்தில் கேட்டதற்காக காந்திஜி அவரைக் கேலி செய்தார். எல்லோருடைய சிரிப்பொலிக்குமிடையே அவர் சொன்னார் : "உங்களால் இந்துஸ்தானியில் பேச முடியவில்லை யென்றால், நீங்கள் கூற விரும்புவதை உங்கள் பக்கத்தில் உள்ளவரின் காதுகளில் குசுகுசுவென்று சொல்லலாம். அதை அவர் உங்களுக்காக இந்துஸ்தானியில் மொழிபெயர்த்துக் கூறுவார்."

காந்திஜி தொடர்ந்து கூறினார் : தற்போதுள்ள கல்வி முறை இந்தியாவுக்கு விடுதலை பெற்றுத் தராது. அதற்குப் பதிலாக அதனுடைய அடிமைத்தனத்தைத் தான் மேலும் மேலும் வலுப்படுத்தும். இதை நீங்கள் உணர்ந்தீர்களானால், வேறொரு கல்வித் திட்டம் அந்த இடத்தை அலங்கரித்தாலும் சரி, அலங்கரிக்கா விட்டாலும் சரி, இந்தக் கல்வி முறையை ஊக்குவிக்க மாட்டீர்கள். ஆதாரக் கல்விக் கொள்கைகளின் வரம்பை மீறாமல் உங்களால் எதைச் செய்ய முடியுமோ அதைச் செய்துவிட்டு மன நிறைவு அடைந்து விடுவீர்கள்.

இந்தக் காரியங்களைச் செய்யும் அமைச்சர்களை மக்கள் விரும்பவில்லையானல், அவர்கள் பதவியிலிருந்து விலகி விடுவதே நல்லது. ஊட்டமுள்ள உணவைத் தங்களாலும் அளிக்க முடியவில்லை, மக்களும் அதை விரும்பமாட்டார்கள் என்பதற்காக, அவர்கள் நஞ்சை உணவாகக் கொடுக்க உடன்பட முடியாதல்லவா?

கேள்வி: ஆதாரக் கல்விக்குப் பணம் தேவையல்ல, ஆள்தான் தேவை என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனல் மக்களுக்குப் பயிற்சி அளிக்க நிறுவனங்கள் தேவையாக இருக்கின்றன. ஆகவே பணம் தேவைப்படுகிறது. இந்த நச்சுச் சுழலிலிருந்து நாம் எவ்வாறு விடுபடுவது?

விடா முயற்சி

பதில்: மருந்து உங்கள் கையிலேயே இருக்கிறது. நீங்களே, உங்களிடமிருந்தே முதலில் தொடங்குங்கள். பிறருக்கு உபதேசம் செய்வதற்கு முன் நீங்கள் செய்ய வேண்டும் என்று ஒரு ஆங்கிலப் பழமொழி கூறுகிறது. நீங்கள் ஒரு சேட்டைப் போன்று சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, வேலையை உங்களைக் காட்டிலும் "கீழானவர்கள்" செய்ய வேண்டுமென எதிர்பார்த்தால், எதையும் சாதிக்க முடியாது. அது என்னுடைய வழியல்ல. மிகமிகச் சிறிய அளவிலாயினும் என்னையும் எனது அண்டையில் உள்ள சுற்றுப்புறத்தையும் வைத்துக் கொண்டு தொடங்குவது தான் எனது காரிய சாத்தியமான வழி. பிரிட்டிஷாருடைய வரலாற்றில் உள்ள ஒரு பாடத்தை இங்கு கவனிப்போம். கை விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய ஒரு சிலர் இந்தியாவுக்கு வந்து இங்கு முதலில் குடியேறினர்கள். பின்னர் அவர்கள் இங்கு ஒரு பேரரசையே அமைத்து விட்டார்கள். இந்தப் பேரரசானது அரசியல் அம்சத்தைக் காட்டிலும் பண்பாட்டுத் துறையில் அதிகப் பலம் வாய்ந்ததாக இருக்கிறது. அதனல்தான் இன்று நாம் ஒரு அடிமை தன்னுடைய விலங்குகளை அரவணைத்துக் கொள்வது போல - தாய்மொழியையும் புறக்கணித்து விட்டு - ஆங்கிலத்தின் மீது மோகங் கொள்கிறோம். இதை ஏற்படுத்தியவர்களுக்கு எந்த அளவு விசுவாசம், ஒரு மனதான பக்தி, தியாகம், விடாமுயற்சி இருந்திருக்க வேண்டும் என்பதை யோசித்துப் பாருங்கள். மனமுண்டானல் மார்க்கமுண்டு என்பதைத்தான் இது எடுத்துக் காண்பிக்கிறது. ஆகவே நாம்

விழித்தெழுந்து செயல்படுவோம். என்ன இடையூறுகள் வந்தாலும், முயற்சியைக் கைவிடுவதில்லை என்ற உறுதியுடன் செயல்படுவோம். உங்களுடைய துன்பங்களெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்துவிடும்.

## ஆங்கிலத்தின் இடம்

**கேள்வி:** இந்தக் கல்வித்திட்டத்தால் ஆங்கிலத்திற்கு உரிய இடம் என்ன? அதைக் கட்டாய பாடமாக்க வேண்டுமா? அல்லது, விருப்பப் பாடமாக, இரண்டாவது மொழியாக மட்டும் கற்றுக் கொடுக்க வேண்டுமா?

**பதில்:** தாயைப் போன்றே என்னுடைய தாய்மொழியும் எனக்கு முக்கியம் — அதில் என்னதான் குறைபாடுகள் இருந்தாலும் சரி, அதுமட்டுந்தான் எனக்கு உயிரூட்டமான அமிர்தப் பாலைத் தர முடியும். ஆங்கில மொழியை அதற்கு உரிய அளவில் நான் நேசிக்கத்தான் செய்கிறேன். ஆனால் அதற்கு உரிமை இல்லாத ஒரு இடத்தை அது ஆக்கிரமிக்க முயன்றால் நான் அதனுடைய கடும் விரோதியாகி விடுவேன். ஆங்கிலம் இன்று உலக மொழி என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். நான் அதற்கு இரண்டாவது மொழி, விருப்பப் பாடமொழி என்ற இடத்தை அளிப்பேன், அதுவும் பள்ளிக் கட்டத்தில் அல்ல, கல்லூரிக் கட்டத்தில். பொறுக்கி யெடுத்த ஒரு சிலருக்குத்தான் இது தேவை, கோடிக்கணக்கான மக்களுக்கு அல்ல. இன்றே ஆரம்பக் கல்வியைக்கூடக் கட்டாயக் கல்வியாகப் புகுத்த நமக்கு வசதி இல்லை. அப்படியிருக்கும் போது, ஆங்கிலத்தைக் கற்றுக் கொடுக்க நாம் எவ்வாறு ஏற்பாடு செய்ய முடியும்? ஆங்கிலம் இல்லாமலேயே தனது விஞ்ஞான முன்னேற்றத்தை யெல்லாம் ருசியா அடைந்திருக்கிறது. ஆங்கிலம் இல்லாமல் நம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்ற உணர்வு ஏற்பட்டிருக்கிறதே அதற்கு நம்முடைய மனோ நிலையில் ஊறிப்போயுள்ள அடிமைத்தனமே காரணம். இந்தத் தோல்வி மனப்பான்மைக்கு நான் ஒருபோதும் உடந்தையாக இருக்கமுடியாது.[1]

அத்தியாயம் 32

# வெளிநாட்டு மொழியில் போதனை

வெளிநாட்டு மொழியின் மூலம், கல்வி கற்பிப்பதானது மூளை அயர்வை ஏற்படுத்தியிருக்கிறது. நம்முடைய குழந்தைகளின் மூளை நரம்புகளுக்கு அது அளவுக்கு மீறிய வேலை கொடுக்கிறது; அவர்களை உருப்போடுபவர்களாகவும் போலிகளாகவும் ஆக்கியிருக்கிறது; சொந்தமாகச் சிந்தித்துப் பணிபுரிவதற்குத் தகுதியற்றவர்களாக்கியிருக்கிறது; அவர்கள் தங்களுடைய படிப்பை தங்களுடைய குடும்பத்தினருக்கோ அல்லது பொதுமக்களுக்கோ வழங்க முடியாமல் செய்துவிட்டது. வெளிநாட்டு மொழி மூலம் கல்வி கற்பிப்பதானது, நம்முடைய குழந்தைகளை அவர்களுடைய தாய் நாட்டிலேயே கிட்டத்தட்ட அந்நியர்களாக்கி விட்டது. இன்றைய கல்வி முறையில் உள்ள மிகப் பெரிய சோக அம்சம் இதுவே. வெளிநாட்டு மொழி மூலம் கல்வி போதிப்பதானது, நமது தாய் மொழிகளின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தி விட்டது. ஒரு எதேச்சாதிகாரியின் அதிகாரங்கள் எல்லாம் எனக்கு இருந்தால், நம்முடைய பையன்களுக்கும் பெண்களுக்கும் வெளிநாட்டுமொழி மூலம் கல்வி போதிக்கப்படுவதை இன்றே நிறுத்திவிடுவேன். எல்லா ஆசிரியர்களும் பேராசிரியர்களும் இந்த மாற்றத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்றும் இல்லையேல் அவர்கள் பதவியிலிருந்து நீக்கப்படுவார்களென்றும் ஆணையிடுவேன். பாட நூல்கள் தயாரிப்பதற்காகக் காத்திருக்க மாட்டேன். அவர்கள் இந்த மாறுதலை நிறைவேற்றத்தான் செய்வார்கள். மொத்தமாக அறவே அகற்ற வேண்டிய தீமை இது.[2]

**கணக்கிலாத் தீமை**

இந்தியாவில் உயர்நிலைக் கல்வி, ஒரு வெளிநாட்டு மொழி மூலமாகக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இதனால் நாட்டின் அறிவிற்கும் தார்மிகத்திற்கும் அளவில்லாத தீங்கு ஏற்பட்டிருக்கிறது. எவ்வளவு பெரிய தீங்கு நேர்ந்திருக்கிறது என்பதைத் தீர்மானிக்க முடியாத அளவிற்கு நாம் இக் காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அதிலும், இப்படிப்பட்ட கல்வியைப் பெற்ற நாமே ஒரே சமயத்தில் பலியானவர்களாகவும் நீதிபதிகளாகவும் இருக்கவேண்டியிருக்கிறது—இது கிட்டத்தட்ட முடியாத வித்தை

**ஆங்கிலத்தில் சிந்தனை, பேச்சு**

இந்தியர்களாக இருப்பதிலிருந்து நம்மைப் படிப்படியாக மாற்றி வேறு நாட்டவராக்கும் இந்தப் போலிக் கல்வியால், கோடிக்கணக்கான மக்களுக்கு நாளுக்கு நாள் அதிகமாகத் தொடர்ந்து தீங்கு விளைவிக்கப் படுகின்றது. இதற்கான சான்றை நான் நாள்தோறும் காண்கிறேன். என்னுடைய நெருங்கிய சகாக்களாக இருக்கும் பட்டதாரிகள்கூட, தங்களுடைய மனத்தின் ஆழத்தில் உள்ள சிந்தனைகளை வெளிப்படுத்துவதற்குத் திக்கு முக்காடுகிறார்கள். அவர்கள் தங்கள் இல்லங்களிலேயே அந்நியர்களாக இருக்கின்றனர். அவர்களுடைய தாய்மொழியில் அவர்களுக்குத் தெரிந்த சொற்கள் சொற்பம். இதனால் ஆங்கிலச் சொற்களையோ அல்லது வாக்கியங்களையோ பயன்படுத்தாமல் அவர்களால் தங்களுடைய பேச்சை முடிக்க முடிவதில்லை. ஆங்கில நூல்கள் இல்லாமல் அவர்களால் உயிருடன் இருக்கவே முடியாது. அவர்கள் ஒருவருக் கொருவர் ஆங்கிலத்திலேயே எழுதுகின்றனர். இந்தத் தீமை எந்த அளவுக்கு வேரூன்றியிருக்கிறது என்பதை எடுத்துக் காண்பிப்பதற்காகவே, என்னுடைய சகாக்களின் உதாரணத்தை நான் கூறுகிறேன். ஏனென்றால், நாங்கள் அறிந்தே எங்களைத் திருத்திக் கொள்ள முயன்று வருகிறோம்.

தைரியமாக மேற்கொள்ளப்படும் ஒரு நடவடிக்கையைத் தவிர வேறு எதுவும், புரையோடிப் போயுள்ள இந்தத் தீமையை அகற்ற முடியாது. காங்கிரஸ் அமைச்சர்கள் மனமார விரும்பினால் இதை முழுதாக அகற்ற முடியாவிட்டாலும், குறைக்க முடியும்.

**பல்கலைக் கழகக் கல்வி**

பல்கலைக் கழகங்களைத் தன்னிறைவு உள்ளவைகளாக்க வேண்டும். அரசாங்கத்திற்கு யாருடைய சேவை தேவையோ அவர்களுக்கு மட்டும் அது கல்வி கற்பித்தால் போதுமானது. மற்ற வகையான கல்விக்கெல்லாம் அது தனியார் முயற்சியையே ஊக்குவிக்க வேண்டும். பாடமொழியை எந்தவகையிலும் உடனடியாக மாற்றியாக வேண்டும். மாநில மொழிகளுக்கு உரிய இடத்தை அளிக்கவேண்டும். உயர்நிலைக் கல்வியில் நாள்தோறும் பயங்கர முறையில் வீண் செலவு அதிகமாகிக் கொண்டு வருகிறது; அதற்குப் பதிலாகத் தற்காலிகமான ஒரு குழப்பம் மூள்வதைக் கூட நான் விரும்புவேன்.

மாநில மொழிகளின் நிலையையும் வருவாய் அடிப்படையில் அதன் மதிப்பையும் உயர்த்த வேண்டும். இதற்கு நீதி மன்றங்களின்

மொழியானது அந்தந்த மாநில மொழியாக இருக்கவேண்டுமென்றே நான் விரும்புவேன். மாநில சட்டசபையின் நடவடிக்கைகளும் அந்தந்த மாநில மொழியிலேயே நடைபெற வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட மொழி இருப்பதானுல், அம் மொழிகளில் நடைபெற வேண்டும். போதுமான முயற்சி மட்டும் எடுத்துக் கொண்டால் ஒரு மாதத்திற்குள்ளேயே தங்கள் மாநிலத்தில் உள்ள மொழிகளைச் சட்டசபை உறுப்பினர்கள் புரிந்து கொள்ள முடியும். ஒரு தமிழன், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளின் எளிய இலக்கணத்தையும் அவைகளிலுள்ள சில நூறு சொற்களையும்—இம்மொழிகளெல்லாம் தமிழைச் சார்ந்தவைதான்—எளிதாகக் கற்றுக் கொள்வதற்கு என்ன தடை இருக்கமுடியும்? மத்திய அரசாங்கத்தில் இந்துஸ்தான் ஆதிக்கம் செலுத்த வேண்டும்.

சீர்திருத்தம் செய்வதற்கு வாய்ப்பு கிடைத்துவிட்டதால், காங்கிரஸ்காரர்கள் அவசரப்பட வேண்டும். படிப்படியாக அல்லாமல் உடனடியாக, மிகமிகக் குறுகிய காலத்தில் பாட மொழி மாற்றப்பட்டால், தேவையை நிறைவு செய்வதற்குப் பாட நூல்களும் ஆசிரியர்களும் வந்து கொண்டிருப்பதைக் காணலாம். நாம் காரிய நோக்குடன் மட்டும் செயல்பட்டால், 'பண்பாட்டின் முக்கிய அம்சங்களை ஒரு வெளிநாட்டு மொழி மூலம் கற்றுக் கொள்வதற்கான முயற்சியில் இந் நாட்டின் நேரமும் சக்தியும் இவ்வளவு பயங்கரமான முறையில் வீணுக்கப்பட்டிருக்க வேண்டியதில்லையே' என்பதை ஓராண்டுக் காலத்தில் கண்டுகொள்ளலாம். இந்த வெற்றிக்கு எந்த விதமான ஐயப்பாடுமில்லாமல் ஒரு நிபந்தனை என்னவென்ருல், மாநில மொழிகள் உடனடியாக அரசாங்க அலுவலகங்களிலும் நீதிமன்றங்களிலும்—நீதிமன்றங்கள் அரசாங்கத்தின் அதிகாரத்திற்கோ செல்வாக்கிற்கோ உட்பட்டவையாக இருந்தால்—உடனடியாகப் புகுத்தப்படவேண்டும். இந்தச் சீர்திருத்தத்தின் அவசியத்தில் நமக்கு நம்பிக்கை இருந்தால், இதை வெகு விரைவில் நாம் சாதித்து விடமுடியும்.[3]

அத்தியாயம் 33

# பள்ளிகளில் இசை

கந்தர்வ மகா வித்யாலயத்தைச் சேர்ந்த பண்டித கரே, பையன்கள், பெண்கள் மத்தியில் நல்ல இசை பரவ வேண்டும் என்பதற்காகத் தமது வாழ்க்கையை அர்ப்பணித்தவர். குறிப்பாக ஆமதாபாத்திலும் பொதுவாக குசராத்திலும் மாபெரும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதாக அவர் தெரிவிக்கிறுர். பாடத் திட்டத்தில் இசையைப் புகுத்துவதைக் கல்வி அதிகாரிகள் ஒப்புக் கொள்வதில்லை என்ற உண்மையைக் கண்டு அவர் வருந்துகிறுர். இசையானது ஆரம்பக் கல்வித் திட்டத்தின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும் என்பது பண்டிதரின் கருத்து. அவருடைய கருத்து, விரிவான அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. இந்த யோசனையை நான் மனப்பூர்வமாக ஏற்கிறேன். கைவேலைப் பயிற்சி எவ்வளவு அவசியமோ அவ்வளவு குரலின் பயிற்சியும் அவசியமாகும். பையன்கள், பெண்கள் ஆகியோருடைய சிறந்த திறமைகளை வெளிக்கொணர, உடல் பயிற்சியும், கைத்தொழில் பயிற்சியும், படம் வரைதலும், இசையும் ஒன்றுக இணைந்து செல்ல வேண்டும். அவைகளின் பயிற்சியில் உண்மையான அக்கறை ஏற்படுத்தவும் இது அவசியம்.

கல்விப் பயிற்சியில் இது ஒரு புரட்சி என்பதை ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். இந்நாட்டின் எதிர்காலக் குடிமக்கள், வாழ்க்கைப் பணிக்கு ஒரு நிலையான அடிப்படையிட வேண்டுமாயின், இந்த நான்குமே அவசியமாகும். ஒருவன் ஒரு தொடக்கப் பள்ளிக்குச் சென்று பார்த்தால்போதும், ஒழுங்கில்லாமை, கவனமின்மை, சம்பந்தமில்லாத பேச்சு ஆகியவைகளுக்கு அது ஒரு நிதரிசனமான சான்றுக இருப்பதைக் காணலாம். ஆகவே, பல்வேறு மாநிலங்களிலும் உள்ள கல்வி அமைச்சர்கள் கல்வி முறையை மாற்றி அமைத்து, இந்தியாவின் தேவைகளை அது நிறைவு செய்யுமாறு ஆக்கும்போது, நான் இப்போது கவனத்திற்குக் கொண்டுவந்துள்ள அத்தியாவசியமான அம்சங்களைப் புறக்கணிக்க மாட்டார்களென்பதில் எனக்கு ஐயமில்லை. தொடக்கக் கல்வி பற்றிய என் திட்டத்தில் இந்த அம்சங்களெல்லாம் உறுதியாக இருக்கின்றன. ஒரு கடினமான வெளிநாட்டு மொழியில் தேர்ச்சிபெற வேண்டுமென்ற பெருஞ்சுமையைக் குழந்தையின் தலையிலிருந்து இறக்கிவிடுங்கள். இவைகளெல்லாம் உடனடியாகவும் மிக எளிதாகவும் சாத்தியமாகிவிடும்.[1]

அத்தியாயம் 34

# இலக்கியத்தில் குப்பை

லாகூர் இளைஞர் நல சங்கத்தின் கௌரவச் செயலாளர் பல்கலைக் கழகங்கள் நிர்ணயித்துள்ள பாடநூல்களில் உள்ள ஆபாசமான, காதல் வாசகங்களுக்கு உதாரணமாக நிறையப் பகுதிகளைப் பொறுக்கியெடுத்து தம் கடிதத்துடன் அவற்றை எனக்கு அனுப்பியுள்ளார். இவைகளெல்லாம் பல்கலைக் கழகங்களால் நிர்ணயிக்கப்பட்ட பாட நூல்களில் உள்ளவைதான் என்றாலும், அப்பகுதிகளைத் திருப்பி இங்கே வெளியிட்டு இப்பத்திகளை ஆபாசப்படுத்த நான் விரும்பவில்லை. நான் படித்த எந்த இலக்கியத்திலும் இவ்வளவு ஆபாசத்தை நான் ஒரு போதும் பார்த்ததில்லை. இந்தப் பகுதிகள் பாரபட்சமெதுவும் பாராட்டாமல் சமஸ்கிருதம், பாரசீகம், இந்தி ஆகிய பல்வேறு மொழிப் புலவர்கள் அனைவர் இயற்றியவைகளிலிருந்தும் எடுக்கப்பட்டுள்ளன..... இந்தக் காரணத்தை வைத்து மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்யலாம். அது மட்டுமல்ல, இப்படிப்பட்ட இலக்கியத்தைத் தங்கள்மீது திணிப்பதை எதிர்த்துப் புரட்சிசெய்ய வேண்டியதும் அவர்கள் கடமை.

ஒருவன் தான் விரும்பியதைப் படிப்பதற்குச் சுதந்திரம் வேண்டும் என வாதாடுவது ஒன்று. ஆனால், மிருக உணர்ச்சியை நிச்சயமாக எழுப்பக்கூடிய ஒரு இலக்கியத்தை—நாளாவட்டதில் பிற்காலத்தில் தங்களுக்குத் தேவையான அளவு நிச்சயமாக அறிந்து கொள்ளப் போகும் விஷயங்களைப்பற்றி இப்போதே அவர்கட்கு விரும்பத் தகாத ஆர்வத்தை ஏற்படுத்தக் கூடிய இலக்கியத்தை—இளம் மூளைகளில் திணிப்பதென்பது வேறு. பெரிய பல்கலைக் கழகங்களின் முத்திரையைப் பெற்று, தீமையே இல்லா இலக்கியங்களைப் போல் வரும்போது தான் அதன் கேடு அதிகமாகிறது.

**அமைச்சர்களுக்கு வேண்டுகோள்**

மறுப்புக்குரிய பாட நூல்களையோ அல்லது பகுதிகளையோ அகற்றுவதற்குச் சாத்தியமான நடவடிக்கைகளை எடுக்குமாறு காங்கிரஸ் அமைச்சர்களுக்கு வேண்டுகோள் விடும்படி என்னை இந்தச் சங்கம் கேட்டுக்கொள்கிறது. நான் மிக மகிழ்ச்சியோடு இந்த வேண்டுகோளை விடுக்கிறேன்—காங்கிரஸ் அமைச்சர்களுக்கு மட்டுமல்லாது எல்லா மாநிலங்களிலுமுள்ள அமைச்சர்களுக்குமே சேர்ந்து விடுக்கிறேன். மாணவர்கள் மனது நல்லமுறையில் வளர்ச்சியடைய வேண்டுமென்பதில் நிச்சயமாக எல்லோருமே சமத்துவமான அக்கறை உடையவர்களாய் இருக்கிறோம். [1]

## அத்தியாயம் 35

# சூதாட்டம், விபசார விடுதி, குதிரைப்பந்தயம்

காங்கிரசிற்குப் பெரும்பான்மை கிடைத்துள்ள மாநிலங்களில், எல்லாவிதமான நம்பிக்கைகளும் கிளப்பப்பட்டுள்ளன. இவை களில் சில நியாயமானவை. நிச்சயமாக அவை நிறைவேற்றி வைக்கவும்படும். மற்றும் சில நிறைவேற்றி வைக்கப்பட முடியாதவை. இவ்வாறாக, சூதாட்டத்தில் ஈடுபடும் மக்கள்—தீவினைப் பயனாக, பம்பாய் மாநிலத்தில் சூதாட்டம் பெருகிக்கொண்டே போகிறது—சூதாட்டம் சட்டபூர்வமாக்கப்படுமென்றும், பம்பாயில் உள்ள இரகசியக் கிடங்குகள் இனித் தேவைப்பட மாட்டா என்றும் நினைக்கிறார்கள். ஒரு வரையறைக்குள் ஏற்கெனவே சூதாட்டம் சட்டபூர்வமாக்கப்பட்டிருக்கிறது. ஆனால். எல்லா இடங்களிலுமே சூதாட்டம் சட்ட பூர்வமாக்கப்பட்டிருந்தாலுங்கூட, சட்ட விரோதமான கிடங்குகள் இருக்கமாட்டா என்று நான் நிச்சயமாகக் கூறிவிட முடியாது. இந்தப் போக்கில் தான் பந்தய மைதானத்தில் சூதாட்டத்திற்கு ஏகபோக உரிமை படைத்த "டர்ப் கிளப்" ஏழை மக்களும் சூதாடுவதற்கு வசதியாக இருக்கக் கூடிய ஒரு பிரிவைத் தொடங்குவதற்கு அனுமதிக்க வேண்டுமென்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. இதனால் அதிகப்படியான வருமானம் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் என்றும் ஆசை காட்டப்பட்டிருக்கிறது.

### வலையில் விழவேண்டாம்

இதேபோன்று விபசார விடுதிகளை ஒழுங்குபடுத்த வேண்டுமென்றும், அவைகளுக்கு 'லைசென்சு'கள் வழங்க வேண்டுமென்றும் ஒரு யோசனை கூறப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலெல்லாம் வழக்கமாகக் கூறப்படும் வாதமே இதற்கும் கூறப்பட்டிருக்கிறது. 'இது சட்டபூர்வமாக்கப்பட்டாலும் ஆக்கப்படாவிட்டாலும் இந்தத் தீமை நடைபெறத்தான் போகிறது. ஆகையால் அதைச் சட்டபூர்வமாக்கி, விபசார விடுதிகளுக்குச் செல்பவர்களுக்குப் பாதுகாப்புத் தருவதே சிறந்தது' என்பதுதான் இந்த வாதம். இந்த வலையில் அமைச்சர்கள் சிக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். இரண்டு பிரசாரங்களை ஒரே சமயத்தில் மாதர்கள்

செய்யவேண்டும். அதுதான் விபசார விடுதிகளைச் சமாளிப்பதற்குச் சரியான வழி. இவைகளில் ஒன்று வயிற்றுப் பிழைப்பிற்காகத் தங்கள் மானத்தை விற்கும் மாதர்கள் மத்தியில், இரண்டு அறியாமையின் காரணமாகவோ அல்லது அகந்தையின் காரணமாகவோ மாதர்களைப் பலவீனமானவர்கள் என்று கூறும் ஆண்கள் மத்தியில். தங்களுடைய சகோதரிகள் மத்தியில் இவர்கள் இன்னும் சிறந்த முறையில் நடந்துகொள்ளுமாறு இவர்களை வெட்கத்திற்குள்ளாக்க வேண்டும். பல ஆண்டுகளுக்கு முன்பு, *1890*க்கும் *95*க்கும் இடைப்பட்ட காலத்தில் அஞ்சா நெஞ்சம் படைத்த மீட்புப்படையினர். தங்களுடைய சொந்த உயிர்களையும் பொருட்படுத்தாமல், பம்பாயில் விபசார விடுதிகள் நிறைந்து கெட்ட பெயர்பெற்ற தெருக்களின் மூலைமுடுக்குகளிலெல்லாம் மறியல் நடத்தியது எனக்கு ஞாபகமிருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு மறியலுக்குப் பெரிய அளவில் நாம் ஏன் ஏற்பாடு செய்யக்கூடாது என்பதற்குக் காரணமேயில்லை.

### குதிரைப் பந்தயம்

குதிரைப் பந்தய மைதானத்தில் நடைபெறும் சூதாட்டத்தை நான் அறிந்த அளவில், மேற்கு நாடுகளிலிருந்து நாம் எத்தனையோ பொருள்களை இறக்குமதி செய்ததைப்போல, இதையும் இறக்குமதி செய்திருக்கிறோம் என்றே கருதுகிறேன். என்னுடைய கருத்து ஏற்றுக்கொள்ளப்படுவதாயின், தற்போதுள்ள அளவுக்குக் கூடப் பந்தைய மைதானத்தில் நடைபெறும் சூதாட்டத்திற்கு, சட்டத்தின் மூலம் அளிக்கும் பாதுகாப்பை வாபஸ் பெற்றுவிடுவேன். காங்கிரஸ் திட்டம் என்பது தன்னைத்தானே பரிசுத்தப்படுத்திக்கொள்ளும் திட்டம். *1920* ஆம் ஆண்டுத் தீர்மானத்தில் இது விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது. தீய காரியங்களிலிருந்து வரும் எந்த வருமானத்தையும் காங்கிரஸ் பெறக்கூடாது. ஆகையால், அமைச்சர்கள் தங்களிடம் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தை, மக்களுடைய கருத்தைச் சரியான வழியில் உருவாக்கவும் உயர் வட்டாரங்களிலுள்ள சூதாட்டத்தை நிறுத்தவும் பயன்படுத்தவேண்டும். உயர்நிலை மக்கள் என்று கூறப்படுவோரின் கெட்ட பழக்க வழக்கங்களை முன்னெச்சரிக்கை இல்லாத பொதுமக்கள், அப்படியே பின்பற்ற மாட்டார்கள் என எவ்வாறு நம்பமுடியும்? நல்ல குதிரைகள் வளர்ப்பிற்குக் குதிரைப் பந்தயம் அவசியமாகுமென வாதாடப்படுகிறது. இதில் உண்மை இருக்கலாம். சூதாட்டம் இல்லாமல் குதிரைப்பந்தயம் நடத்துவது சாத்தியமில்லையா? அல்லது, நல்ல குதிரைகள் வளர்ப்பிற்குச் சூதாட்டமும் ஒரு உதவியா?

## தனி ரெயில்களில் காங்கிரஸ்காரர்

குதிரைப் பந்தயத்தின் மூலம் மக்கள் எவ்வாறு சீர்கெட்டு அழிகிறார்கள், பணம் எவ்வாறு விரயமாகிறது என்பனவற்றைக் குறித்து முன்னரே நான் எழுதியிருக்கிறேன். ஆனால் ஒரு நண்பர் மிகவும் வலியுறுத்தி எழுதியுள்ள கடிதமானது, இதைப் பற்றி மேலும் எழுதுமாறு என்னைத் தூண்டுகிறது. பந்தய மைதானத்தில் சூதாடுவதானது, குடிப் பழக்கத்தை விடக் குறைந்த தீமையல்ல என்று இவர் கூறுகிறார். இந்தக் கடிதத்தில் இவர் மேலும் கூறியிருப்பதாவது :—

"குதிரைப் பந்தயங்களுக்காகத் தனி ரெயில்கள் விடப்படுகின்றன. இவைகளில் கதர்க் குல்லாய்கள் அணிந்தவர்கள், தங்களைக் காங்கிரஸ்காரர்கள் என்று கூறிக்கொள்பவர்கள், தங்களுடைய பணத்தை வீண் விரயமாக்குவதற்கே அங்கு செல்பவர்கள் நிறைய இருக்கிறார்கள். இந்தப் பணம் எங்கிருந்து வருகிறது? மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற அமைச்சரவைகள் இப்போது பதவி வகிக்கின்றன. ஆனால் அவைகளும் இத்தீமையை அனுமதித்துக் கொண்டு பேசாமல் இருக்கின்றன."

## நிறுத்திவிட வேண்டும்

என்னுடைய கருத்தின்படி, பந்தய மைதானங்களில் சூதாடுவதானது, மது அருந்துவதைப் போன்ற அதே அளவு கொடிய பழக்கமல்ல. எனினும், இவைகளிலெல்லாம் ஒன்றுடன் ஒன்றை ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. சூதாடுவது குறைந்த தீய பழக்கமாக இருக்கிறது என்பதற்காக அது நல்ல காரியமாகிவிடாது. குதிரைப் பந்தயத்தைப் பற்றிய நுணுக்கங்களெல்லாம் எனக்குத் தெரியாது. இந்தத் தீமைக்கு முற்றுப் புள்ளி வைப்பது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தின் அதிகார வரம்புக்குள் வருவதானால், நிச்சயமாக அதைச் செய்துதான் தீரவேண்டும் என்றுதான் நான் சொல்லமுடியும். [2]

## அத்தியாயம் 36

# சட்டபூர்வமான விபசாரம்

காங்கிரஸ் அமைச்சரவைகளிடமிருந்து நாம் எதிர்பார்க் கக்கூடிய மிக உன்னதமான காரியங்களுக்கு டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி மேலும் ஒரு சான்று தருகிறார். இவ்வாறு எதிர்பார்க்க மக்களுக்கு உரிமை உண்டு. இந்த அமைச்சரவைகள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள சோதனைகளை வெற்றிகரமாகச் சமாளிக் கின்றன என்பதைக் காங்கிரசின் எதிரிகள் கூட ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். தங்களுடைய நிர்வாகம் உண்மையான இந்தியச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு அமைவதற்கான சீர்திருத்த நட வடிக்கைகளை எடுப்பதில் காங்கிரஸ் அமைச்சரவைகள் ஒன்றுடன் ஒன்று போட்டியிட்டுக் கொண்டிருக்கின்றன. தேவ தாசிகள் வெட்கக் கேடான வாழ்க்கைக்குத் தங்களை அர்ப்ப ணிக்க வேண்டுமென்ற ஒழுங்கற்ற பழக்க வழக்கத்திற்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டுமென்று டாக்டர் முத்துலட்சுமி ஒரு மசோதா கொண்டுவந்திருக்கிறார். இந்த மசோதாவைச் சென்னை அமைச்சரவை நிறைவேற்ற வேண்டுமென்று அவர் ஒரு பகிரங்க வேண்டுகோளும் விடுத்திருக்கிறார். இம் மசோதாவை நான் ஆராய்ந்து பார்க்கவில்லை. ஆனால், இதற்கு அடிப்படையான கருத்து மிகவும் சிறந்தது. இவ்வளவு நல்ல கருத்துள்ள ஒரு மசோதா இன்னும் இந்தத் தென் மாநிலத்தின் சட்டப் புத்தகத் தில் இடம் பெறவில்லையே என்பதுதான் என் வியப்பு. இந்தச் சீர்திருத்தமானது மதுவிலக்கைப் போன்றே அவசரமானது என்று டாக்டர் முத்துலட்சுமி கூறும் கருத்தை நான் அப்படியே ஏற்கிறேன். தற்போதுள்ள சென்னைத் தலைமை அமைச்சர் பல ஆண்டுகளுக்கு முன்பே இத் தீய பழக்கத்தை வன்மையாகக் கண் டித்துப் பேசியிருக்கிறார் என்ற உண்மையையும் டாக்டர் முத்து லட்சுமி ரெட்டி நினைவிற்குக் கொண்டுவருகிறார். சட்டபூர்வமாக இதைத் தடுக்க அவருக்கு ஓரளவு அதிகாரம் கிடைத்திருக்கும் இந்தச் சமயத்தில், அவருடைய ஆர்வம் குறைந்துவிடவில்லை என் பதை நான் கூறுவேன். இன்னும் சில மாதங்களுக்குள்ளேயே தேவ தாசி முறைக்குச் சட்டபூர்வமான அனுமதி இல்லாமற் போய் விடும் என்று அந்த அம்மையாருடன் சேர்ந்து நானும் நம்புகிறேன்.[1]

அத்தியாயம் 37

# அமைச்சரவைகளும் அரிசனப் பிரச்னைகளும்

## 1. பூசாவால் தாலுகாவில் அரிஜனப் பணி

ஸ்ரீ தக்கர் பாபா கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார் :

பூசாவால் தாலுகாவில் நல்ல, விரிவான அரிஜனப் பணி செய்வதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதற்காக, மே 14–ஆம் தேதியன்று இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. ஸ்ரீ வைகுந்தபாய் மேத்தா, ஸ்ரீ கணபத்ராவ் தபசே, ஸ்ரீ பார்வே, ஸ்ரீ தாஸ்தானே ஆகியோரும் நானும் அக்கூட்டத்தில் பங்கு கொண்டோம். பொதுக் கிணறுகளெல்லாம் அரிஜனங்களுக்குத் திறந்துவிடப் படவேண்டும் என்பதே எனது இலட்சியம். கிராமவாசிகள் அதிக ஆர்வங் காட்டினார்கள் ; வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக் கிறது. சூழ்நிலைகள் சாதகமாக இருக்கின்றன.

பாபா சொல்வது உண்மையே. காங்கிரஸ் அமைச்சரவை பதவி ஏற்பதையே ஒருவேளை சாதகமான சூழ்நிலைகள் என்று ஸ்ரீ தக்கர் பாபா கூறுகிறார் என எண்ணுகிறேன். இதனால் இனிமேல் மக்கள்மீது சீர்திருத்தங்கள் திணிக்கப்படும் என்று பொருளாகாது. இப்படிப்பட்ட காரியங்களில் இம்சைக்குக் கிட்டத்தட்ட இடமே இல்லை. தீண்டாமையானது மக்களின் இரத்தத்தில் ஊறிப்போ யிருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு தீமையை—அதுவும் மதத்தின் பெய ரால் உள்ள தீமையை—கட்டாயமாக அகற்றிவிட முடியாது. ஆனால் ஒரு அந்நிய அரசாங்கமானது, ஏற்கனவே நசுக்கி வைக்கப்பட் டுள்ளவர்களை மேலும் நசுக்குவதற்குத் தனது செல்வாக்கைப் பயன் படுத்தும். அது ஏதாவது ஒரு மறைமுகமான நோக்கத்தை வைத்துக்கொண்டு—இந்த நோக்கம் பரிசுத்தமானதாக இருக்க லாம் அல்லது சுயநலமானதாக இருக்கலாம்—அவர்களுக்கு உதவி செய்ய முயலும்போது கூட, இம்சையைப் பயன் படுத்தித்தான் செய்கிறது. ஆனால் காங்கிரசானது இம்சையின்மூலம் தனது பதவியை நிலைநிறுத்தவில்லை; அது நூற்றுக்கு நூறு ஜன நாயக அமைப்பு. ஆகையால் காங்கிரஸ் அமைச்சரவைகள், தங்க ளது முன்னேற்றகரமான திட்டங்கள் எல்லாவற்றிற்கும் சாதகமாக மக்கள் கருத்தை உருவாக்கி, மக்களுடைய ஆதரவைப் பெறும் என நம்புகிறோம். இதனால் அந்தந்த மாநிலங்களில் அரிஜனப் பணி

போன்ற சீர்திருத்தங்களுக்கு ஊக்கமும் வேகமும் ஏற்படும். இப்படிப்பட்ட சீர்திருத்தங்களுக்குத் தடையாக நிற்கும் சக்திகள் தானகவே மறைந்துவிடும். மேலும், பூசாவால் தாலுகா போன்ற ஒரு குறுகிய எல்லைக்குட்பட்ட பகுதியில் தீவிரமாகப் பணியாற்றுவது அதிகப் பலன் தரும். ஒரே சமயத்தில் நாம் இந்தியா முழுவதையும் எட்டிவிடமுடியாது. எங்கெங்கு ஊழியர்களுக்குத் தேவையான அளவு திறமையும் செல்வாக்கும் இருக்கிறதோ, அங்கெல்லாம் வேகமாக வேலை நடைபெறும். ஆகையால் ஒரு சிறு பகுதியில் நல்ல பணி நடைபெறுவதை மற்றவர்களும் பின்பற்ற இடமுண்டு. இது விரைவான வெற்றிக்கும் வழிகோலும். பூசாவாலில் தொடங்கப்பட்டுள்ள பணிக்கு இப்படிப்பட்ட பலன் கிடைக்கும் என்று நம்புவோமாக.[1]

## 2. அரிஜனங்களும் கிணறுகளும்

ஸ்ரீ ஹர்தேவ் சஹாய் எழுதுவதாவது :—

"நேற்று (அதாவது 4-9-'46) மாலை உங்களுடைய பிரார்த்தனைக் கூட்டச் சொற்பொழிவில், பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுப்பதில் அரிஜனங்களுக்குள்ள தடையை மக்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தீர்கள். அரிஜனங்கள் சார்பாக 25 ஆண்டுகள் ஓயாத முயற்சிசெய்தும், இந்தக் குறையைப் போக்குவதில் நாம் வெற்றியடையவில்லை. உங்களைக் காட்டிலும் அவர்களுடைய கஷ்டங்களை அதிகம் உணர்ந்தவர்கள் வேறு யாரும் இல்லை.

"இப்போது காங்கிரஸ் அரசாங்கங்கள் பதவியில் இருக்கின்றன. ஆகையால் அவை அரிஜனங்கள் விஷயத்தில் தங்களுடைய கொள்கை என்னவென்பதை உடனடியாக அறிவித்துவிடவேண்டும். அரிஜனங்களுக்குள்ள குறைகளையெல்லாம் சட்டத்தின் மூலம் தங்களால் முடிந்த அளவு அகற்றிவிட வேண்டும் இதன் தொடர்பாக, பஞ்சாபிலுள்ள நிலவரங்களை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுப்பது ஒருபுறம் இருக்கட்டும்; அரிஜனங்கள் தங்களுக்கென்று ஒரு கிணறு தோண்டிக்கொள்வதற்கான நிலத்தைப் பெறுவதற்குக் கூட அனுமதிக்கப்படுவதில்லை. தண்ணீர் எடுப்பதற்கான வசதி இல்லாத இடங்களிலெல்லாம், அரசாங்கச் செலவில் கிணறுகள் தோண்டிக் கொடுக்குமாறு நீங்கள் பஞ்சாப் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டும். அல்லது, அரிஜனங்கள் தங்களுக்கு வேண்டிய கிணற்றைத் தாங்களே தோண்டிக்கொள்வதற்கான நிலத்தையாவது கொடுக்கும்படி கேட்குமாறு தங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். பஞ்சாபிலுள்ள எத்தனையோ கிராமங்களில், அரிஜனங்கள் தங்களுடைய சொந்தப் பணத்தைச் செலவழிக்க முன் வந்தாலுங்கூட, அவர்களுக்குத் தேவையான நிலம் கிடைப்பதில்லை.

"சில இடங்களில் அரிஜனங்களுக்குக் கிணறுகள் தோண்டிக் கொடுக்கும் பணியை அரசாங்கம் தொடங்கியிருக்கிறது. ஆனல் அவை கொஞ்சமும் போதாதவை. தன்னுடைய குடிமக்களுக்கெல்லாம் நல்லமுறையில் குடிதண்ணீர் விநி

யோகமாகுமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது நிச்சயமாக அரசாங்கத்தின் கடமையாகும்."

இந்தக் கடிதத்தை எழுதியவர் கூறுவது முற்றிலும் சரியே. அரிஜனங்களுக்குக் கிணறுகள் தோண்டிக்கொடுப்பது அரசாங்கத்தின் கடமையே. நிலத்தைமட்டும் கொடுப்பது போதாது; கிணறுகளைத் தோண்டிக் கொடுப்பதும் அரசாங்கத்தின் பொறுப்பேயாகும்.

## 3. விவேகமான ஒரு நடவடிக்கை

பம்பாய் பிற்போக்கு வகுப்பினர் அமைச்சராகிய திரு. ஜி. டி. தபசே, பம்பாய் அரிஜன் (சமூகக் குறைபாடுகள் நீக்கச்) சட்டத்தின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பியிருக்கிறார். இந்தச் சட்டம் இப்போதுதான் பம்பாய் சட்ட சபையில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. மிக முக்கியமான பிரிவுகளை நான் கீழே அளிக்கிறேன் :

"3. எந்த அதிகாரச் சான்று அல்லது சட்டத்தில் வேறு எந்த விதமாகக் குறிப்பிடப் பட்டிருந்தாலும், அல்லது பழக்க வழக்கத்தில் வேறுவிதமாக இருந்தாலும், எந்த அரிசனும், அவர் ஒரு அரிசனாக இருக்கிறார் என்பதற்காக—

(அ) சட்டத்தின்படி நிறுவப்படும் எந்த அமைப்பிலும் பதவி வகிக்கத் தகுதியுள்ளவர் ஆவார்.

(ஆ) (I) மற்ற ஜாதி வகுப்பு இந்துக்கள் செல்லக்கூடிய, அல்லது பயன்படுத்தக்கூடிய உரிமையுள்ள ஆறு, ஓடை, ஊற்று, கிணறு, குளம், தண்ணீர்த் தொட்டி, தண்ணீர்க்குழாய், குளிக்கும் இடம், இடுகாடு, சுகாதார வசதி, சாலை, பாதைகளுக்கு அரிஜனங்கள் செல்லவோ அவைகளைப் பயன்படுத்தவோ எவ்விதத் தடையும் இல்லை.

(II) வாடகைக்கானது என்று மாநில அரசாங்கத்தினாலோ அல்லது ஸ்தல ஸ்தாபனத்தினாலோ அனுமதி அளிக்கப்பட்டுள்ள பொது வாகனம் எதையும் அணுகவும் பயன்படுத்தவும் தடையில்லை.

(III) மாகாண அரசாங்கத்தின் வருமானத்திலிருந்தோ அல்லது ஸ்தல ஸ்தாபன நிதியிலிருந்தோ முழுதுமோ அல்லது ஓரளவோ பணம் அளிக்கப்பட்டு, தர்ம காரியங்களுக்காக அல்லது பொதுக் காரியங்களுக்காக நடத்தப்படும் கட்டிடம், கிணறு, தண்ணீர்த் தொட்டி அல்லது இடத்தை அணுகவோ பயன்படுத்தவோ தடையில்லை.

(IV) மக்களின் உல்லாசத்துக்காகவோ, கேளிக்கைக்காகவோ ஏற்பட்ட இடத்தை அணுகவோ பயன்படுத்தவோ தடையில்லை.

(V) மற்ற சாதி அல்லது வகுப்பு இந்துக்களெல்லாம் செல்லக்கூடிய கடைக்குச் செல்லத் தடையில்லை.

(VI) பொதுவாக இந்துக்களுக்கென்று — இன்ன பிரிவு அல்லது வகுப்பிற்காக என்று குறிப்பிடப்படாமல் — ஒதுக்கப்பட்டுள்ள அல்லது பராமரிக்கப்பட்டுள்ள இடத்தை அணுகவோ பயன்படுத்தவோ தடையில்லை.

(VII) பொதுவாக இந்துக்களின் நலனுக்கென்று—இன்ன பிரிவு அல்லது வகுப்பு என்று குறிப்பிடாமல்—அமைக்கப்பட்ட அறநிலையத்தினல் கிடைக்கும் நன்மைகளை அனுபவிக்கத் தடையில்லை.

"3. ஏ. 3 ஆவது ஷரத்து (பி) பிரிவில் (I) (III) (IV) (V) (VI) ஆகிய உப பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ள இடங்களின் பொறுப்பில் உள்ள எவரும், அல்லது (II) ஆவது உப பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள வாகனத்தின் பொறுப்பில் உள்ள எவரும் ஒரு அரிஜன் மீது எந்தவிதமான தடையும் விதிக்கக்கூடாது, அல்லது, அவரைத் தனியாக விலக்கி வைப்பதில் முடியக் கூடிய விதத்தில் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கக்கூடாது.

"4. ஏதாவது ஒரு வழக்கில் சமரசம் செய்துவைக்கும் எந்த நீதி மன்றமும், அல்லது ஏதாவதொரு உத்தரவைப் பிறப்பிக்கும் நீதிமன்றமும், ஒருவர் அரிஜன் என்பதற்காக மட்டும் பழக்க வழக்கத்தில் அவருக்குச் சட்ட பூர்வமான தடங்கல் எதுவும் இருந்தால், அந்தத் தடங்கல் உள்ள பழக்கவழக்கங்களை அங்கீகரிக்கக் கூடாது.

"5. மேலே 4 ஆவது பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்ற பழக்க வழக்கங்களை, எந்த ஸ்தல ஸ்தாபனமும் தனக்கு அளிக்கப்பட்டுள்ள பொறுப்புக்களையும் கடமைகளையும் நிறைவேற்றும்போது அங்கீகரிக்கக் கூடாது.

"6. (அ) 3ஆவது ஷரத்து (பி) பிரிவில் உள்ள (I), (III), (IV), (V), (VI) ஆகிய உப பிரிவுகளில் குறிப்பிடப்பட்ட இடங்களையோ அல்லது (II) ஆவது உப பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள வாகனத்தையோ ஒருவர், அரிஜன் என்பதற்காக அணுகுவதையோ அல்லது பயன்படுத்துவதையோ, (VII) ஆவது உப பிரிவில் குறிப்பிடப்பட்ட அறநிலையத்தினல் வரும் அனுகூலத்தைப் பயன்படுத்துவதையோ யார் தடை செய்தாலும், அல்லது தடை செய்வதற்கு உடந்தையாக இருந்தாலும்,

அல்லது,

(ஆ) ஒரு அரிஜன் மீது யாராவது ஏதாவது தடை விதித்தாலும், அல்லது அவரைத் தனியாக விலக்கி வைப்பதில் முடியக் கூடியவாறு செயல்பட்டாலும் அல்லது இப்படிப்பட்ட தடைவிதிப்பதற்கோ, விலக்கி வைப்பதில் முடியக் கூடிய காரியத்திற்கோ உடந்தையாக இருந்தாலும்,

அப்படிப்பட்டவர் மீது குற்றம் மெய்ப்பிக்கப்பட்டால், அவருக்கு 3 மாதங்களுக்கு மேற்படாமல் சிறைத் தண்டனையோ அல்லது 200 ரூபாய்க்கு மேற்படாமல் அபராதமோ அல்லது இரண்டுமோ விதிக்கலாம்.

7. ஏற்கனவே இந்தச் சட்டத்தின்படி தண்டனை விதிக்கப்பட்ட ஒருவருக்கு, அதே குற்றம் செய்ததாக மற்றுமொரு முறை மெய்ப்பிக்கப்பட்டால், அவருக்கு இரண்டாவது முறை ஆறுமாதங்கள் வரை சிறைவாசமோ அல்லது 500 ரூபாய்க்கு மேற்படாத அபராதமோ அல்லது இரண்டுமோ விதிக்கப்படும். இவர் மீண்டும் இதே குற்றம் செய்தால், மூன்ருவது முறையோ அல்லது அதற்கு அடுத்த முறைகளிலோ ஓராண்டுவரை சிறைவாசமும் 1000 ரூபாய் வரை அபராதமும் விதிக்கப்படும்.

இந்த மசோதாவைக் கொண்டு வந்தபோது, தாம் நிகழ்த்திய சொற்பொழிவையும் இம்மசோதாவின் கர்த்தா அன்போடு

எனக்கு அனுப்பி வைத்திருக்கிறுர். அதிலுள்ள கூரிய வாதங்களை மட்டும் கீழே தருகிறேன் :

"இந்தத் தீண்டாமையானது பகுத்தறிவிற்கு ஏற்காதது. ஒரு அரிஜன் பிறந்தவுடனேயே தீண்டப்படாதவனுகிறுன்... ஒரு அரிஜனுக அவன் பிறக்கிறுன், வாழ்க்கை முழுதும் அரிஜனுக வாழ்கிறுன், அரிஜனுக இறக்கிறுன்... அவன் எவ்வளவு தான் சுத்தமானவனுக இருந்தாலும், எவ்வளவு அறிவாளியாக இருந்தாலும், எவ்வளவு உயர்ந்தவனுக இருந்தாலும், வைதிக இந்துக்களுக்கு அவன் உயர்ந்தவனல்ல. இதிலுள்ள மிக மோசமான அம்சம் என்னவென்ருல், அவனுடைய மரணத்திற்குப் பின்னுல் கூட அவனுடைய அஸ்தி, மற்றவர்களுடைய அஸ்தியுடன் கலக்க அனுமதிக்கப்படுவதில்லை...இந்தத் தீண்டத்தகாதவனை, சாதி இந்துக்கள் மட்டுமல்லாது, கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் ஆகியோரும் மற்றவர்களும் தீண்டத் தகாதவனுகவே நடத்துகின்றனர் என்ற உண்மையால் அவனுடைய துயரங்கள் இன்னும் அதிகமாகின்றன... சில சமூக, அரசாங்க அடிப்படை உரிமைகளைப் பெறுவதற்கு இந்த மசோதா ஒரு சாசனமாக, பட்டயமாக விளங்குகின்றது என்பது எனது கருத்தாகும்."

## விழிப்பு வேண்டும்

இந்துக்களுடைய தரப்பிலிருந்து குறிப்பிடத்தக்க எந்த எதிர்ப்பும் இல்லாமல் இந்த மசோதா நிறைவேற்றப்பட்டது என்பது இங்கு கவனத்திற்குரியதாகும். இந்தச் சட்டம் வெற்றிகரமாகச் செயல்படுவதற்கு இது ஒரு நல்ல சகுனம். ஆனுல் அதற்காக, இதன் மீது அளவுக்கு மீறி நம்பிக்கை வைப்பதும் நல்லதல்ல. நம்முடைய தீவினைப் பயனுக, எல்லோருடைய ஆரவாரமான சம்மதத்தையும் பெற்று நாம் தீர்மானங்களை நிறைவேற்றிவிடுகிருேம்; ஆனுல், பின்னர் அவைகள் காலாவதியாக விட்டுவிடுகிருேம். இந்தச் சட்டம் கண்டிப்பாக அமுல் நடத்தப்படுவதில் அரசாங்கமும் சீர்திருத்தவாதிகளும் அதிக விழிப்போடு இருக்க வேண்டும்.

இந்த மசோதாவைக் கொண்டுவந்தவர் குறிப்பிட்டவாறு பகுத்தறிவின்மை இன்னும் இந்தியாவில் தலைநிமிர்ந்து ஆட்சி புரிகிறது என்பது உண்மையே. இதை மறைப்பதில் பயனில்லை. தீண்டாமையில் மட்டும் அல்ல, மற்றும் பல காரியங்களிலும் இப் பகுத்தறிவின்மை இருக்கத்தான் செய்கிறது. ஆகையால் சீர்திருத்தவாதிகள் இப் பிசாசைக் கவனித்துப் பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். பிசாசு பிடித்தவர்களைக் குணப்படுத்துவதில் தங்களுடைய கவனம், வினயம், திறமை ஆகியவைகளைப் பயன்படுத்த வேண்டும்.[2]

# அத்தியாயம் 38

# உடல் நல விதிகள்

"நம்முடைய உடல்நலமின்மையில் பெரும் பகுதி நமது தவறின லேயே ஏற்படுகிறது," என்று சுகாதார அமைச்சர் விடுத்துள்ள அறிக்கையைப் பாராட்டி, பத்திரிகைகளுக்கு திரு. பிரிஜ்லால் நேரு எழுதியிருக்கிருர். இத் தவற்றை அகற்றுவதற்குப் பொறுப் பான அரசாங்க ஸ்தாபனம் எதுவும் தாம் அறிந்தவரை இல்லை என் றும் இவர் கூறியுள்ளார். திரு. பிரிஜ்லால் நேரு, என்னைப் போன்று, இயற்கை வைத்தியத்தில் பித்துக்கொண்டவராவார். அவர் மேலுங் கூறுகிருர்: "இதுவரை நம்முடைய சுகாதார அமைச்சர்களின் கவன மெல்லாம் சிறிய, பெரிய மருத்துவசாலைகள், உடல் நல நிலை யங்கள் ஆகியவற்றை—அதாவது நோயைக் குணப்படுத்துவதற் கான நிலையங்களை—நிறுவுவதிலேயே இருந்திருக்கிறது. சரியான முறையில் வாழவேண்டிய அவசியத்தையும் அதற்கான முறை களையும் மக்களுக்கு எடுத்துணர்த்தி நோய்களைத் தடுப்பதற்காக எந்த நிறுவனமும் தோற்றுவிக்கப்படவில்லை."

## இதுதானே தலையாய வேலை

இதற்கு மேல் அவர் தமது யோசனைகளைக் கூறுகிருர்: "உடல் நோயைக் குணப்படுத்துவதிலிருந்து வேறுபட்டதான சுகா தார வளர்ச்சியில் கவனம் செலுத்தி ஒரு தனிக் கிளை நிறுவ வேண் டும். இப்பகுதிக்கு ஒரு ஆலோசனைக் குழுவை அமைத்து உதவ வேண்டும். இந்த ஆலோசனைக் குழுவில் ஒருங்கே வல்லுநர்களும் வல்லுநர் அல்லாதவர்களும் இருக்க வேண்டும். அப்போதுதான், மக்களுடைய தேவைகள் என்னவென்பதையும், எந்த வரம்புக்குள் தாங்கள் வாழ்ந்து பணியாற்ற வேண்டியிருக்கிறது என்பதையும் முழுதாக அறிந்து, வல்லுநர்கள் தங்களுடைய திட்டங்களை வகுக்க முடியும்." இந்த அத்தியாவசியமான காரியத்துக்கு, இந்தப் பித்தில் எனது சகாவாக இருப்பவர், ஏன் தனிப்பிரிவு வேண்டுமென்று விரும்புகிருர்? பழைய கால அரசாட்சியில் இவ்வாறு செய்வது தான் ஒரு நாகரிகமாக இருந்தது. அந்த ஆட்சியானது செலவுக்கு மேல் செலவை ஏற்படுத்திக் கொண்டுபோய், எவ்வளவு அதிக மாகச் செலவழித்ததோ அந்த அளவு பயன் இருப்பதாகத் தன்னை ஏமாற்றிக் கொண்டது. அத்துடன் ஏமாளிகளான பொதுமக்களை யும் ஏமாற்றியது. பொதுமக்கள் உடல் நலம் பெறுமாறு செய்வதும்

அவர்களுடைய உடல் நலத்தைப் பாதுகாப்பதும் தான், தங்களுடைய முதல் கவனத்திற்குரியது என்பதை சுகாதார அமைச்சரின் கீழ்ப் பணியாற்றும் டாக்டர்களும் பிறரும் உணருமாறு அந்த அமைச்சர் செய்ய வேண்டும் என நான் விரும்புகிறேன். மக்களுக்குச் சேவை செய்வதற்காகத் தான் அவர்களுக்கு ஊதியம் அளிக்கப்படுகிறது.

**உடல் நல நூல்**

“பூர்வாங்க நடவடிக்கையாக, இந்தியாவின் தற்போதைய சூழ்நிலைகளில் நல்ல முறையில் வாழ்வது எவ்வாறு என்பதையும் உடல் நலவிதிகள் என்ன வென்பதையும் பற்றிய புத்தகம் ஒன்றைத் தயாரிக்க வேண்டும். மக்கள் இதை அங்கீகரித்து ஏற்க வேண்டுமானால் இந்திய அரசாங்க சுகாதார அமைச்சரவையின் ஆதரவில் இந்தப் புத்தகத்தைத் தயாரிக்க வேண்டும்......தயாரிக்கும் பொறுப்பை இந்திய வைத்திய சங்கத்திடம் விடவேண்டும். ஒரு காலத்திற்குள் இந் நூலைத் தயாரிக்குமாறு அவர்களுக்கு ஆணையிட வேண்டும். நம்முடைய மருத்துவக் கல்லூரிகளில் நடக்கும் பாட போதனைகளில், நோய்க்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவத்தை உடல் நல வளர்ச்சிக்கு அளிப்பதே மிகவும் விரும்பத்தக்கதாக இருக்கும்” என்று இந்தக் கடிதத்தை எழுதியவர் கூறுகிறார்.

**ஊசிகள் மோகம்**

உடல்நல விதிகளைக் கற்றுக் கொடுப்பதென்பது பள்ளிகள், கல்லூரிகளின் எல்லாவற்றின்பொறுப்பாகவும் இருக்க வேண்டும். திரு. பிரிஜ்லால் நேரு கூறுவது போன்ற ஒரு நூலை வெளியிடுவதானால், உடல் நலத்தைப் பாதுகாப்பது என்ற பெயரில் புது நோய்களைப் புகுத்துவதை, உதாரணமாக தடுப்பு ஊசிகள் போடும் மோகத்தைக் கூறலாம்—தவிர்க்குமாறு, அந்நூலின் ஆசிரியர்களுக்கு எடுத்துணர்த்தப்படும் என நம்புகிறேன்.[1]

## அத்தியாயம் 39

# சிவப்பு நாடா

### அமைச்சர்களும் சிவப்பு நாடாவும்

சிவப்பு நாடாவில் அமைச்சர்கள் மிகவும் அழுந்திக் கிடப்ப தால், சிந்திக்கவே அவர்களுக்கு நேரமிருப்பதில்லை. என்னைப் பார்க் கவோ அல்லது என்னுடன் விவாதிக்கவோ அவர்களுக்கு நேர மில்லை. இதைக் காட்டிலும் மோசமானது என்னவென்றால், அவர் களுடைய நிலையை அறிந்தும் அவர்களுக்குக் கடிதங்கள் எழுதித் தொல்லைப்படுத்தவும் நான் விரும்பவில்லை. "அரிஜன்" பத்திகளின் மூலமாகவும் நான் அவர்களுக்கு எடுத்துரைக்கக் கூடாது...

### காங்கிரசின் புரட்சி

அமைச்சர்கள் தங்களுடைய புதுப் பொறுப்பிற்கு ஏற்றவாறு நடக்க வேண்டுமாயின், சிவப்பு நாடாவை எரித்துச் சாம்பலாக்கும் கலையை அவர்கள் கண்டுபிடித்தாக வேண்டும். பழைய அமைப்பு முறையானது, சிவப்பு நாடாவின் மூலமும் அதன் பலத்திலும் தான் வாழமுடியும். அது புது அமைப்பைக் கழுத்தைப் பிடித்து நசுக்கிவிடும். மக்களை அமைச்சர்கள் சந்தித்துப் பேசவேண்டும். மக்களுடைய நல்லெண்ணத்தின் மூலந்தான் அவர்கள் அமைச்சர் களாக இருக்க முடியும். பெரிய, சிறிய புகார்களை யெல்லாம் அவர்கள் கவனிக்க வேண்டும். ஆனால், இவைகள் எல்லாவற்றை யுமோ அல்லது தங்களுக்கு வந்த கடிதங்கள் மீது தாங்கள் எடுக்கும் முடிவு எல்லாவற்றையுமோ அவர்கள் பதிவு செய்து வைக்க வேண் டியதில்லை. அவர்களுக்கு நினைவூட்டவும், நடைமுறை தொடர்ச்சி யாக இருக்கவும் போதுமான அளவு பதிவுச் சான்றுகள் வைக்க வேண்டும். அரசாங்கத் துறை நடத்தும் கடிதப் போக்குவரத் தில் பெரும்பாலானவை நிறுத்தப்படவேண்டும்...... கோடிக் கணக்கான எசமானர்களுக்கு அவர்கள் பொறுப்பான வர்கள். இந்த எசமானர்களுக்கோ சிவப்பு நாடாவே என்ன வென்று தெரியாது, அவர்கள் அதைப்பற்றி அக்கறைப்படுவது மில்லை. அவர்களில் பெரும்பாலோருக்கு எழுதப் படிக்கவே தெரி யாது. ஆனல் அவர்களுக்கு நிறைவு செய்ய வேண்டிய அடிப்படை யான தேவைகள் இருக்கின்றன. 'இந்தியாவில் காங்கிரஸ் பத விக்கு வந்ததோ இல்லையோ, அனைத்து இந்தியாவிலுமே ஒருவர் கூடப் பட்டினி கிடக்கமாட்டார்கள்; உடம்பை மூடி மறைக்க ஆடையில்லாதவர்கள் ஒருவரும் இருக்க மாட்டார்கள்' என்று

எண்ணும் அளவுக்குக் காங்கிரஸ்காரர்கள் அவர்கள் மனதில் பதிய வைத்துவிட்டார்கள். அமைச்சர்கள் மீது வைத்துள்ள நம் பிக்கைக்கு அவர்கள் பாத்திரர்களாவதானால், இப்படிப்பட்ட பிரச்னைகளில் நேரத்தையும் கவனத்தையும் செலவிடவேண்டும். காந்தியவாதிகள் என்று சொல்லப்படுபவர்களாக அவர்கள் இருந் தால், அது என்னவென்பதை அவர்கள் என்னைக் கேட்டுத் தெரிந்துகொள்ளக் கூடாது. தங்களுடைய மனதைச் சோதித்துப் பார்த்தே தெரிந்துகொள்ள வேண்டும். அது என்னவென்பது எனக்கு எல்லாச் சமயங்களிலும் தெரியாது. ஆனால் அதைச் சரியாக ஆராய்ந்து பின்பற்றுவதானால், இந்தியாவின் உண்மை யான தேவைகளையெல்லாம் நிறைவு செய்யக்கூடிய அளவு அது தீவிரமானதாகவும் புரட்சிகரமானதாகவும் இருக்கும். காங்கிரஸ் ஒரு புரட்சிகரமான அமைப்பு. ஆனால் ஒன்று. அதனுடைய புரட்சி இதுவரை வரலாற்றில் நடைபெற்றுள்ள புரட்சிகளிலிருந்து வேறு பட்டது. இதற்குமுன் நடைபெற்ற புரட்சிகளெல்லாம் இம்சையை அடிப்படையாகக் கொண்டவையாய் இருக்க, இந்தப் புரட்சி அறிவுபூர்வமாக அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டது. இது இம்சையை அடிப்படையாகக் கொண்டதாய் இருந்திருந் தால், ஒருவேளை பழைய அமைப்பும் நடைமுறையும் பெரும்பா லான அளவு இதில் இருந்திருக்கும். ஆனால் காங்கிரசுக்கோ பழைய அமைப்புகளும் நடைமுறைகளும் கூடா. இவைகளில் மிகவும் சக்தி வாய்ந்தவை போலீசும் இராணுவமும் ஆகும். காங் கிரஸ்காரர்கள் பதவியில் இருக்கும்போது, ஒழுங்கைப் பாதுகாப் பதற்கு அமைதியான வழிவகைகளை அவர்களால் கண்டுபிடிக்க இயலாதவரை, அவர்கள் இரண்டையும் பயன்படுத்தவே கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். ஆனால் எப்போதும் அமைச்சர்கள் முன்னிருக்க வேண்டிய கேள்வி, 'இவ்வாறு பயன்படுத்துவது தவிர்க்க முடியாததா? அப்படி யானால் ஏன் அவ்வாறு தவிர்க்க முடியாததாக இருக்கிறது?' என்பதாகும். அவர்களுடைய ஆராய்ச்சியின் பயனாக—இந்த ஆராய்ச்சியானது பழைய முறையைப் போன்று அதிகச் செல வுள்ளதாகவும் பெரும்பாலும் பயனற்றதாகவும் இருக்கக் கூடாது; செலவில்லாததாகவும் எல்லா அம்சங்களையும் உள் ளடக்கியதாகவும் பயனுள்ளதாகவும் இருக்கவேண்டும்—இராணு வமும் போலீசும் இல்லாமல் அரசாங்கத்தை நடத்த முடியாது என்று அவர்கள் கண்டுகொள்கிறார்கள் என்று வைத்துக்கொள் ளுங்கள். காங்கிரஸ் பதவியை விட்டுவிட்டு மறுபடியும் காட்டில் அட்சய பாத்திரத்தைத் தேடி அலைய வேண்டும் என்பதற்கு மிக மிகத் தெளிவாகத் தெரியும் அஹிம்சைச் சின்னம் அதுவேயாக இருக்கும்'.

பகுதி எட்டு

# அமைச்சர்களின் ஊதியங்கள்

அத்தியாயம் 40

## சொந்த இலாபத்தை எதிர்பார்க்க வேண்டாம்

### பணத்தை விரும்பாதவர்கள்

காங்கிரஸ் அரசாங்கத்தில் எந்தப் பதவி வகிப்பதாலும் எள்ளளவும் சொந்த இலாபத்தை எதிர்பாராது, தொண்டுணர்ச்சியுடன் வகிப்பதாக இருக்கவேண்டும். ‘அ’ என்பவருக்குச் சாதாரண வாழ்க்கையில் மாதம் 25 ரூபாய் போதுமென்றால், அவர் ஒரு அமைச்சரானதற்காகவோ அல்லது அரசாங்கத்தின் கீழ் வேறு பதவி பெற்றதற்காகவோ 250 ரூபாய் எதிர்பார்க்க எவ்வித உரிமையும் இல்லை. ஆம், பொதுச் சேவை செய்யும் அமைப்புகளில் மாதந்தோறும் 25 ரூபாய் மட்டும் பெறும் காங்கிரஸ்காரர்கள் பலர் இருக்கிறார்கள். இவர்கள் அமைச்சர் பொறுப்பைத் திறமையுடன் ஏற்க வல்லவர்கள். ஒரு சொற்பத் தொகையை ஊதியமாகப் பெற்றுப் பொதுச் சேவைக்குத் தங்களை அர்ப்பணம் செய்திருப்பதுடன், என்ன சேவையில் நியமித்தாலும் பாராட்டத் தக்க முறையில் அதைச் செய்யக்கூடிய திறமைசாலிகளுக்கு வங்கத்திலும் மகாராஷ்டிரத்திலும் குறைச்சல் இல்லை. ஆனால், அவர்கள் தங்களுக்கென்று தேர்ந்தெடுத்துள்ள துறைகளை விட்டு வெளியேறி வருமாறு அவர்களுக்கு ஆசை காண்பிக்கக்கூடாது. இருக்குமிடந் தெரியாமல் இருந்து சேவை செய்வதை அவர்களே விரும்பி ஏற்றிருப்பது மதிப்பிடற்கரிய பெருமை படைத்ததாகும். அதிலிருந்து அவர்களை வெளியே இழுப்பது தவறு. மக்களில் மிகச் சிறந்தவர்களும் சரி அல்லது மிகப் பெரிய அறிவாளிகளும் சரி அமைச்சர்களாக மாட்டார்கள்; அரசாங்கப் பதவிகளையும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இது ஒரு பொதுவான விதி. இந்த விதியானது உலகமெங்கிலும் உண்மையே; ஓரளவு இந்த நாட்டில் அதிக உண்மை என்று கூறலாம்.

**பதவிக்கு வேட்டையாடிஞல்?**

காங்கிரஸ் அரசாங்கங்களில் பதவி ஏற்க, ஆண் அல்லது பெண்களில் மிகச் சிறந்தவர்களும் மிகப் பெரிய அறிவாளிகளும் எப்போதும் நமக்குக் கிடைத்துக்கொண்டிருக்க மாட்டார்கள். ஆனல் அமைச்சர்களாக இருப்பவர்களும் மற்றப் பதவிகளை வகிக்கும் காங்கிரஸ்காரர்களும் சுயநலமற்றவர்களாக, திறமையுள்ளவர்களாக, இலஞ்சத்திற்கு இலக்காகாதவர்களாக இராவிட்டால், சுயராஜ்யம் என்பது வெறுங் கனவாகவே முடியும். காங்கிரஸ் குழுக்கள் பதவிக்கு வேட்டையாடும் களங்களாகி, யார் அதிகப் பலாத்கார வாதியோ அவர்தான் அங்கு வெற்றியடைவார் என்ருகிவிட்டால், மேற்கண்ட குணங்கள் உள்ள நல்ல மனிதர்கள் நமக்குக் கிடைக்க மாட்டார்கள்.

## அத்தியாயம் 41

# சம்பள விகிதம்

எவ்வகையில் பார்த்தாலும் அமைச்சர்களும் மாநில சட்ட சபை உறுப்பினர்களும் அவரவர் பதவிகளில் மக்களின் சேவகர் களே. பிரிட்டிஷாரின் ஊதிய வீதத்தை இவர்கள் அப்படியே ஏற்கத் தொடங்கினல், அது இவர்களுக்குத் தான் கேடாக முடி யும். மேலும், ஒரு பதவிக்கு ஒரு குறிப்பிட்ட வீத ஊதியம் அனுமதிக்கப்படுகிறது என்பதற்காக, அப்பதவியில் உள்ள எல் லோருமே அந்த வீதத்தில் ஊதியம் வாங்க வேண்டுமென்பதில்லை. எவ்வளவு (சம்பளம்) வாங்கலாம் என்பதையே சம்பள வீதம் குறிப்பிடுகிறது. பணக்காரர் ஒருவர் அந்த முழுச் சம்பளமோ அல்லது எந்தச் சம்பளத்தையுமோ வாங்குவது கேலிக் கூத்தாகும். ஊதியமின்றி எளிதாகச் சேவை செய்ய முடியாத வர்களுக் கென்று தான் சம்பளம் ஏற்பட்டது. அமைச்சர்களும் சட்டசபை உறுப்பினர்களும் உலகில் உள்ள மிகமிக ஏழை மக் களின் பிரதிநிதிகள். அவர்களுடைய சம்பளத்தை ஏழை மக்களே கொடுக்கிறுர்கள். இந்தப் பேருண்மையை அவர்கள் நினைவில் வைத்துக்கொண்டு, அதன்படி நடக்கவும், வாழவும் செய்வார் களாக![1]

## அத்தியாயம் 42

# அமைச்சர்களின் ஊதியங்கள்-1

### எல்லா ஊதியமும் உயருமா ?

**கேள்வி :** காங்கிரஸ் பெரும்பான்மையாக வந்துள்ள மாநிலங்களில் இத்தடவை எந்தக் கொள்கையின் அடிப்படையில் ஊதியங்களை நிர்ணயிக்கப் போகிறீர்கள்? கராச்சித் தீர்மானம் இன்னும் செயலில் இருக்கிறதா? தற்போதுள்ள உயர்ந்த விலைகளின் அடிப்படையில் இப்பிரச்னை தீர்க்கப் பட வேண்டுமானல், மாநில வரவு செலவுத் திட்டங்களின் வருமான வரம்புக்குள் எல்லா ஊழியர்களின் ஊதியங்களையும் மூன்று மடங்காக உயர்த்த முடியுமா? ஒரு சேவகரோ அல்லது ஆசிரியரோ மாதம் 15 ரூபாயிலும் 12 ரூபாயிலும் தங்களுடைய வரவு செலவைச் சரிக்கட்ட வேண்டுமென்று கூறும்போது, ஒரு அமைச்சர் மட்டும் 1500 ரூபாய் ஊதியம் பெறுவது சரியாகுமா? காங்கிரஸ் நிருவாகத்தை நடத்து கிறது என்பதற்காக, இவ்வாறு செய்துகொண்ட பின்னும் சேவகரோ அல்லது ஆசிரியரோ தங்கள் சம்பளத்தைப் பற்றி முணுமுணுக்கக் கூடாது என்று சொல்லமுடியுமா?

### தேவைகள் வேறுபடுகின்றன

**பதில் :** *இது சரியான கேள்வி. ஏன் ஒரு அமைச்சர் 1500 ரூபாயும் ஒரு சேவகர் அல்லது ஆசிரியர் 15 ரூபாயும் வாங்க வேண்டும்? ஆனல், இந்தப் பிரச்னையை எழுப்புவதனல் மட்டும் அதைத் தீர்த்துவிட முடியாது. பல சகாப்தங்களாக இவ்வித வேறுபாடுகள் இருந்துதான் வந்திருக்கின்றன. ஒரு எறும்புக்கு ஒரு தான்யம் போதுமென்றிருக்கும்போது ஒரு யானைக்கு ஏன் நிறையத் தீனி தேவையாக இருக்கிறது? இந்தக் கேள்வியிலேயே மறுமொழியும் இருக்கிறது. ஆண்டவன் ஒவ்வொருவருக்கும் அவரவர் தேவைக்கு ஏற்றதைக் கொடுக்கிருர். ஒரு யானைக்கும் எறும்புக்கும் உள்ள தேவைகளின் ஏற்றத்தாழ்வை எவ்வளவு திட்டவட்டமாக உணருகிருேமோ அதே போன்று மனிதர்களின் தேவைகளுக்கிடையே உள்ள வேறுபாடுகளை நாம் சரியாக மட்டும் அறியமுடியுமானல், எந்த விதமான ஐயப்பாடுகளும் எழமாட்டா. சமுதாயத்தில் ஒருவர் தேவைக்கும் மற்ருெருவர் தேவைக்கும் வேறுபாடுகள் இருக்கின்றன என்பதை அனுபவம் நமக்குக் கற்பிக்கிறது.*

ஆனால் இது எந்த நியதியை அடிப்படையாகக் கொண்டது என்பதை நாம் அறியோம். ஆகையால் இன்று நாம் செய்யக் கூடியதெல்லாம், கூடியவரை வேறுபாடுகளைக் குறைக்க வேண்டுமென்பதுதான். அமைதியான முறையில் ஆர்ப்பாட் டம் செய்வதன் மூலமும், மக்கள் கருத்தை உருவாக்குவதன் மூலமும் இந்த வேறுபாடுகளைக் கூடிய அளவு குறைக்க முயல லாம். இதைப் பலாத்காரத்தின் மூலம் செய்ய முடியாது, அல் லது சத்தியாக்கிரகம் என்ற பெயரில் துராக்கிரகம் செய்தும் சாதிக்கமுடியாது. அமைச்சர்கள் மக்களின் பிரதிநிதிகள். அவர்கள் பதவி ஏற்கும் முன்பு கூட அவர்களுடைய தேவைகள் சேவகர்களின் தேவைகளுக்குச் சமமாக இருந்ததில்லை. ஒரு சேவகர் அமைச்சர் பதவியை ஏற்கத் தகுதியானவராகி, அப் போதுங்கூடத் தன்னுடைய தேவைகளை உயர்த்திக்கொள் ளாமல் இருப்பதைக் காண நான் மிகவும் விரும்புகிறேன். ஆனால் அதே சமயம், மேல் வரம்பாக நிர்ணயிக்கப்பட்டுள்ள சம்பளத்தை எந்த அமைச்சரும் வாங்குவது அவசியமில்லை யென்பதையும் நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

**சேவகர் ஊதியம் போதுமா ?**

இந்தக் கேள்விகளிலிருந்து எழும்பும் ஒரு பிரச்னையை நாம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பது பயனளிக்கும். ஒரு சேவகர் இலஞ்சம் வாங்காமல் தன்னையும் தன்னுடைய குடும் பத்தையும் மாதம் 15 ரூபாயில் காப்பாற்றிக்கொள்ள முடியுமா? இலஞ்சம் வாங்கும் ஆசையில்லாத நிலையில் அவரை வைத் திருப்பதற்கு, அவருக்குப் போதிய ஊதியம் அளிக்க வேண்டு மல்லவா ? கூடியவரை நமக்கு நாமே சேவகர்களாக இருந்து கொள்வதுதான் இதற்கு நிவாரணம். அதே சமயம் அவரு டைய சேவை நமக்குத் தேவைப்பட்டால், அவருடைய தேவைகளுக்குப் போதுமான அளவில் நாம் ஊதியம் கொடுக்கவேண்டும். இவ்வாருக, அமைச்சர்களுக்கும் சேவகர் களுக்குமிடையே உள்ள பெரிய ஏற்றத்தாழ்வு அகன்று விடும்.

**முக்கியப் பிரச்னை**

அமைச்சர்களின் ஊதியம் மாதம் 500 ரூபாயிலிருந்து 1500 ரூபாயாக ஏன் உயர்த்தப்பட்டிருக்கிறது என்பது வேறு கேள்வி. ஆனால் முக்கியப் பிரச்னையுடன் ஒப்பிட்டால், இது ஒன்றுமில்லை. முக்கியப் பிரச்னையை இது தீர்க்கவும் இல்லை. முக்கியப் பிரச்னை தீர்ந்தவுடன், இதுவும் தானகவே தீர்ந்துவிடும். [1]

## அத்தியாயம் 43

# அமைச்சர்களின் ஊதியங்கள்-2

### கடிதக் கணைகள்

அன்று "ஹரிஜன்" இதழில் ஒரு பத்தியில் நான் அமைச்சர்களின் ஊதிய உயர்வைப்பற்றி எவ்வளவு எச்சரிக்கையுடன் எழுதினேனே அவ்வளவிற்குக் கடுமையான "தண்டனைக்கு" உள்ளாக வேண்டியிருந்தது. என் எச்சரிக்கையைக் கண்டு வருந்தியும், என்னுடைய கருத்தை நான் மாற்றிக்கொள்ள வேண்டுமென்று வாதித்தும் வந்துள்ள நீண்ட கடிதங்களைப் படிக்க வேண்டியதாய் விட்டது. ஏழை சேவகர்களும் குமாஸ்தாக்களும் காலத்திற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாத சம்பள உயர்வைப் பெறும்போது, ஏற்கனவே கொழுத்த சம்பளம் வாங்கும் அமைச்சர்கள் தங்கள் சம்பளங்களை மட்டும் எப்படி உயர்த்திக்கொள்ள முடியும்? நான் எழுதிய குறிப்பை மீண்டும் படித்துப் பார்த்தேன். இக்கடிதங்களை எழுதிய அத்தனைபேர்களும் விரும்பிய விவரங்களெல்லாம் அந்தச் சிறு குறிப்பில் இருக்கின்றன என்பதை உரிமையோடு கூறிக் கொள்கிறேன். ஆனல் இதில் தவருன கருத்து எதுவும் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக, நான் கூற வந்த பொருள் என்ன வென்பதை மேலும் விவரமாக விளக்கி விடுகிறேன்.

### இன்றும் கட்டுப்படுத்தும்

கராச்சித் தீர்மானத்தைக் குறிப்பிடாததற்காக என்மீது கோபப்பட்டிருக்கிருர்கள். அமைச்சர்களின் ஊதியம் குறைச்சலாக இருக்கவேண்டும் என்பதற்கு, ஒரு தீர்மானம் வழங்கும் அதிகாரத்தைக் காட்டிலும் உயர்ந்த காரணங்கள் இருக்கின்றன. நான் அறிந்தவரை, எந்த வகையிலும் காங்கிரஸ் ஒருபோதும் அந்தத் தீர்மானத்தை மாற்றியதில்லை. அது நிறைவேற்றப்பட்ட போது இருந்தது போலவே இன்றும் அது கட்டுப்படுத்தும்.

### அமைச்சர்கள் தரப்பு

ஊதிய உயர்வுக்கு நியாயம் உண்டா என்பது எனக்குத் தெரியாது. அமைச்சர்களின் தரப்பு என்னவென்பதை அறியாமல் எடுத்த எடுப்பில் சம்பள உயர்வை நான் கண்டித்துவிடக் கூடாது. அமைச்சர்கள் மீதோ அல்லது சொல்லப்போனல் என்னைத் தவிர வேறு யார்மீதோ எனக்கு அதிகாரம் இல்லை என்

பதை விமர்சகர்கள் அறியவேண்டும். மேலும், காங்கிரஸ் செயற் குழுக் கூட்டங்களிலெல்லாம் நான் பங்குகொள்வதுமில்லை. தலைவர் எப்போது என்னை அழைக்கிறாரோ அப்போதுதான் செல்கிறேன். முடிவு என்னவாக இருந்தாலும் சரி, நான் என்னுடைய கருத் தைத்தான் கூறமுடியும். இந்தக் கருத்திற்கு ஏதாவது முக்கி யத்துவம் இருக்க வேண்டுமென்றால், அது நன்றாக ஆழ்ந்து சிந் திக்கப்பட்டதாகவும், ஏற்கனவே உண்மை என ஒப்புக்கொள்ளப் பட்ட நிலவரங்களை அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

## இரு வேறு பிரச்னைகள்

பணக்காரர் ஏழைகளுக்கிடையேயும், உயர்ந்த ஊதியம் பெறுபவர்களுக்கும் குறைந்த ஊதியம் பெறுபவர்களுக்கும் இடை யேயும் உள்ள ஏற்றத்தாழ்வு பற்றிய பிரச்னை ஒரு தனிப் பிரச்னை. அதைத் தீர்ப்பதற்கு, நன்கு ஆழ்ந்து சிந்திக்கப்பட்ட, கண்டிப் பான வழி முறைகள் தேவை. ஒரு சில அமைச்சர்கள், அவர் களின் செயலாளர்கள் ஆகியோரின் ஊதியத்தைக் குறைப்பதுடன் இப்பிரச்னை முடிந்துவிடவில்லை. இந்த இரண்டு பிரச்னைகளி லுமே அதனதன் தராதரத்தை வைத்து நடவடிக்கை எடுக்க வேண்டும். ஊதியம் பற்றிய பிரச்னையை அமைச்சர்கள் எளி தாகத் தீர்த்துவைக்க முடியும்; தீர்த்துவைக்கவும் வேண்டும். மற்றொன்றோ மிகமிக விசாலமான பிரச்னை; அதில் தலையி லிருந்து கால்வரை பழுது பார்த்தாக வேண்டும். 'அமைச் சர்கள் தங்கள் தங்கள் மாநிலங்களில் காலதாமதமின்றி இப்பிரச்னையைத் தீர்த்து வைக்கவேண்டும்; வேறு எதற்கும் காத்திராமல், கீழே உள்ளவர்களின் ஊதியத்தைப் பற்றி முழு தாக மறு ஆலோசனை செய்து அவசியமான சந்தர்ப்பங்களி லெல்லாம் உயர்ந்த ஊதியம் கொடுத்தாகவேண்டும்' என்பதை இன்று மட்டுமல்ல என்றுமே நான் ஒப்புக்கொள்வேன்.[1]

அத்தியாயம் 44

# பிரிட்டிஷாரை அப்படியே பின்பற்றுவதா?

**நம்பிக்கை ஒளி**

ஆகஸ்ட் 15 வந்து போய்விட்டது. இந்தியா வெங்கும் உள்ள மக்கள் இந்த மீட்பு நாளை அளவு கடந்த மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் கொண்டாடினர். ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ்த் தாங்கள் அனுபவிக்க நேர்ந்த துயர்களும் சோதனைகளும் பழங் கனவாகிவிடும் என்று அவர்கள் எண்ணியது சரியே. கிராமத்தில் மிக மிகத் தாழ்ந்த நிலையில் உள்ள உழவனுடைய கண்கள் முதன் முதலாக ஒளிவிட்டுப் பிரகாசித்தன. நகரத்தில், சுருங்கிப்போயிருந்த தொழிலாளியின் உள்ளம் இந்தச் சந்தர்ப்பத்தின் போது உவகையால் விம்மியது. ஒருவாறாக இந்தியாவில் உள்ள கடையனுக்கு, நம்பிக்கை ஒளி - சுமை குறைந்து எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்பதற்கான ஒரு மங்கலான அறிகுறி-தென்பட்டது. ஆகையால் இந்த உப கண்டத்தில் நசுக்கப்பட்டுக் கிடந்த ஒவ்வொரு ஆணும் பெண்ணும் திடீரென எழுந்த உத்வேகத்துடன் இந்த நாளைக் கொண்டாடினர்.

**கவர்னர் சம்பளம்**

ஆனல் இந்த நாளின் மகிழ்ச்சி தணிந்ததோ இல்லையோ, மாநில அரசுத் தலைவர்களின் சம்பளத்தையும், பிற ஊதியங்களையும் அறிவித்துப் புது டில்லியிலிருந்து ஒரு அறிக்கை வெளிவந்தது. ஒரு அடிமை நாட்டின் மீது ஏகாதிபத்திய ஆட்சிப் பிடியை நிலைநிறுத்துவதற்காக உருவாக்கப்பட்ட, அளவுக்கு மீறிய நிருவாகச் செலவு, அந்த ஏகாதிபத்தியத்துடன் போய்விடும் என்று மக்கள் ஆவலுடன் நம்பிக் கொண்டிருந்தனர். கடந்த காலத்தில் அவ்வப்போது ஒவ்வொரு அரசியல் தலைவரும், ஒவ்வொரு பெயர்பெற்ற பொருளாதார வல்லுநரும் நிருவாகத் தலைவர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த கொழுத்த சம்பளத்தையும் பிற ஊதியங்களையும் ஐயத்திற் கிடமின்றிக் கண்டித்திருக்கின்றனர். இப்பிரச்னை குறித்து இந்திய தேசியக் காங்கிரசும் பல தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது. பெயர் பெற்ற கராச்சி காங்கிரஸ் தீர்மானத்தில், அரசாங்கத்தில் மிக உயர்ந்த பதவி வகிப்பவருக்கு மாதம்

5500 ரூபாய் ஊதியமாக நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் ஒரு வேளை அவைகளெல்லாம் இப்போது மறந்து போயிருக்கலாம். கவர்னர் களின் சம்பளம் மிக உயர்ந்த தொகையாக, மாதம் 5500 ரூபாயாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

### உலகிலேயே அதிகம்

இப்படிப்பட்ட உயர்ந்த பதவிகளுக்கு வேறு நாடுகளில் என்ன ஊதியம் அளிக்கப்படுகிறது என்பதை முதலில் பார்ப் போம். உலகிலேயே மிகவும் பணக்கார நாட்டிலுள்ள பணக்கார மாநிலமான நியூயார்க், அதனுடைய கவர்னருக்கு ஆண்டுதோறும் 10,000 டாலர் கொடுக்கிறது. இது மாதத்திற்கு 3000 ரூபாய்க்கும் குறைவாகவே வருகிறது. அமெரிக்காவில் உள்ள மற்றொரு மாநில மான இடாஹோவின் கவர்னருடைய சம்பளம் மாதம் 1500 ரூபாய்க்கும் குறைவே. அமெரிக்காவில் உள்ள மற்றொரு மாநில மான மேரிலேண்ட் கவர்னரின் சம்பளம் மாதத்திற்கு 1000 ரூபாய்க்கும் சற்றுத்தான் அதிகம். இல்லினாய்ஸ் என்ற மாநிலத்தின் மக்கள் தொகை ஒரிசா அல்லது அசாமிலுள்ள மக்கள் தொகைக் குச் சமமாக இருக்கும். இந்த மாநிலத்தின் கவர்னர் மாதம் 3000 ரூபாய்க்கும் சற்று அதிகமாகத் தான் பெறுகிறார். தென்னாப்பிரிக்கா விலுள்ள மாநில அரசாங்கத் தலைவர்கள்-இவர்கள் தான் இந்தியா வில் உள்ள கவர்னர்களுடைய நிலையில் இருப்பவர்கள்-சம்பளம் மாதம் 2200 ரூபாயிலிருந்து 2700 ரூபாய் வரை இருக்கிறது. ஆஸ்திரேலியாவில் குவீன்ஸ்லாந்து கவர்னரின் சம்பளம் மாதம் 3000 ரூபாய்க்குச் சற்று அதிகமாகும். ஸ்டாலினுடைய மாதச் சம்பளம் 350 ரூபாய் தான் என்பது பலர் அறிந்ததே. பிரிட்டிஷ் (அமைச்சரவை அந்தஸ்துள்ள) அமைச்சர்களின் ஊதியத்தை கவர் னர்களின் சம்பளத்துடன் ஒப்பிட முடியாது; ஏனென்றால் அவர்கள் தங்கள் நாடு முழுவதன் மீதும் ஆட்சி நடத்துபவர்கள். அப்படியிருந் தும் ஒரு (பிரிட்டிஷ் அமைச்சரவை) அமைச்சரின் ஊதியம் ஒரு இந் திய கவர்னரின் சம்பளத்திற்கும் மேற்போகாது. இந்தச் சம்பளங் களில் எதுவுமே அவரவர்கள் நாட்டில் உள்ள வருமான வரியி லிருந்தும் பிற வரிகளிலிருந்தும் விலக்கானவையல்ல என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஆகையால் ஒரு இந்திய கவர் னரின் சம்பளந்தான் உலகிலேயே மிக உயர்ந்ததாகும் என்று மறுப்பிற்கு இடமின்றிக் கூறிவிடலாம்.

### 4000 மடங்கு!

இந்த உண்மைகளை மற்றொரு கோணத்திலிருந்து பார்ப் போம். ஒரு கவர்னர் தனது மாநிலத்தின் முதல் சேவகராவார்.

ஆகையால் இந்தச் சேவகரின் ஊதியத்தை அவருடைய எசமானர்களின் ஊதியத்துடன் ஒப்பிடுவோம். ஒரு இந்தியனின் சராசரி வருமானம் ஆண்டுக்கு 65 ரூபாய் என்று இந்தப் போருக்கு முன் கணக்கிடப்பட்டது. ஒரு சாதாரண விவசாயி அல்லது தொழிலாளியின் சராசரி வருமானத்தை எடுத்துக்கொண்டால், அது இதைக் காட்டிலும் மிகக் குறைச்சலாக இருக்கும். இத்தொகை மிகவும் வருந்த வேண்டியதாக, ஆண்டுக்கு 12 ரூபாயாக இருக்குமெனப் பேராசிரியர் குமரப்பா மதிப்பிடுகிறர். முதல்வர் அகர்வால் 18 ரூபாயென மதிப்பிடுகிறர். இந்தச் சராசரிகளை வைத்துக் கணக்கிடும்போது, ஒரு இந்திய கவர்னரின் வருமானமானது அவருடைய எசமானருடைய வருமானத்தைவிட ஆயிரம் மடங்குக்கும் மேலாகும் என்பதைக் காண்கிறோம். இந்திய மக்கள் தொகையில் மிகவும் அதிகமானவர்களாய், கீழ் நிலையில் இருக்கும் வகுப்பினரின் சராசரி ஆண்டு ஊதியத்தை எடுத்துக் கொண்டாலோ, சேவகருக்கும் எசமானர்களுக்கும் இடையே உள்ள ஊதிய ஏற்றத்தாழ்வு 4000 மடங்காக உயர்கிறது . உலகத்திலேயே மிகப் பெரிய பணக்கார நாடு என்று அழைக்கப்படுவதும், மிகப் பெரிய பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலவுவதுமான அமெரிக்காவில்கூட, கவர்னரின் ஊதியம் அமெரிக்கக் குடிமக்களின் சராசரி வருமானத்திற்கு 20 மடங்குக்கு மேல் போகவில்லை!

### ஈடில்லை, இணையில்லை

மற்றொரு விதமாக ஒப்பிடுவது இப்பிரச்னைக்கு மேலும் விளக்கம் தரும். மாநில நிருவாக அமைப்பில் எல்லோருக்கும் கீழே இருப்பவர், அரசாங்க அலுவலகங்களில் உள்ள சேவகர் தான். இவருக்கு மத்தியப் பிரதேசத்தில் மாதச் சம்பளம் 11 ரூபாய். மற்ற மாநிலங்களில் இது சற்று அதிகமாகவோ குறைச்சலாகவோ இருக்கலாம். சேவகரின் சம்பளத்திற்கும் கவர்னரின் சம்பளத்திற்குமிடையே இவ்வளவு பெரிய பிரம்மாண்டமான வேறுபாடு இருக்கும்போது, சமூக வளர்ச்சிக்கான சட்டங்கள் மூலம் பொதுமக்கள் நலம் பெறுவதற்கு, நிருவாக இயந்திரம் முழுவதும் ஒரே மனிதர் போன்று எவ்வாறு பணியாற்ற முடியும்? சுருக்கமாகச் சொல்லப் போனல், ஒருவர் நம்முடைய குறைந்த தேசிய வருமானத்தை எடுத்துக்கொண்டாலும் சரி, அடித்தளத்தில் ஒரு சேவகருக்கு அளிக்கப்படும் சம்பளத்தை எடுத்துக்கொண்டாலும் சரி, அல்லது மேல் தளத்தில் ஒரு கவர்னருக்கு அளிக்கப்படும் ஊதியத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, இந்தியாவுக்கு இணை உலகிலேயே கிடையாது!

மாநில அரசாங்கத் தலைவர்களுக்கு இவ்வளவு பெருந் தொகைகள் சம்பளமாக அளிக்கப்படும்போது, உயர்ந்த சம்பளம் வாங்கும் மற்ற அரசாங்க ஊழியர்களின் சம்பளத்தைக் குறைக்க வேண்டுமென்று நாம் எப்படிக் கூற முடியும்? உயர்ந்த சம்பளங் களைக் குறைத்து, குறைந்த சம்பளங்களை உயர்த்தாவிட்டால் எல் லோருக்கும் கல்வியும் வைத்திய வசதிகளும் அளிப்பது போன்ற பெரிய திட்டங்களை நிறைவேற்றுவதற்கு மாநில நிதி அமைச்சர் எங்கிருந்து நிதி காண்பார்? நேற்றுவரை வறுத்தெடுக்கும் வறுமையில் இருந்த ஒரு நாடு வெகு விரைவில் செல்வ வளம் பொருந்திய நாடாகிவிடும், அரசாங்கப் பதவிகளுக்கு இப்படிப் பட்ட உயர்ந்த சம்பளங்களையெல்லாம் அளிக்க முடிந்துவிடும் என்று மனக்கோட்டை கட்டாதிருப்போமாக! தனது தேசிய வரு மானத்தை உயர்த்துவதற்கு சோவியத் யூனியன் மூன்று ஐந்தாண் டுத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியிருந்தது. நம்பிக்கை உணர்ச்சியுடன் பம்பாய்த் திட்டத்தை வகுத்தவர்கள் கூட, 1000 கோடி ரூபாய் மூலதனச் செலவில் பதினைந்து ஆண்டுகளின் முடிவில் தான் இந்தியருக்கு ஆண்டுதோறும் சொற்ப வருவாயாகிய ரூ 130 கிடைக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். ஆகையால் அடுத்த நாளே இந்தியா பணக்கார நாடாகிவிடும் என்ற இனிய கனவு எவ்வளவு விரைவில் நீங்குகிறதோ அவ்வளவு நம் எல்லோ ருக்கும் நல்லதாகும். உண்மை கசப்பானது. அதை நாம் அப்படியே ஏற்றுச் சமாளிக்கத்தான் வேண்டும். இந்தப் பெருந் தொகைகளை அளிக்க நமக்குக் கட்டாது.

டி. கே. பங்

[பேராசிரியர் பங் அளித்துள்ள புள்ளி விவரங்கள் சரியா தவறா என்பதற்கு நான் சான்று கூற முடியாது, ஆயினும், (அவர் குறிப்பிட்டுள்ள) உயர்ந்த சம்பளங்களைப் பற்றியும் நம்முடைய அரசாங்கங்கள் அவர்களுடைய ஊழியர்களுக்கு அளிக்கும் உயர்ந்த, தாழ்ந்த சம்பளங்களுக்கிடையே உள்ள பெரிய ஏற்றத் தாழ்வுகளைப் பற்றியும் அவர் கூறியுள்ள கருத்துக்களை எவ்விதத் தயக்கமுமின்றி நான் ஏற்கிறேன். —மோ. க. காந்தி]

பகுதி ஒன்பது

# அமைச்சர்கள் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள்

## அத்தியாயம் 45

## சுதந்திர இந்தியாவின் அமைச்சர்களுக்கு

[15-8-47 ஆம் தேதியன்று, தங்களுடைய வணக்கத்தைத் தெரிவித்துச் செல்வதற்காக, வங்க அமைச்சர்கள் காந்திஜியிடம் வந்தார்கள். அப்போது அவர்களிடம் அவர் கீழ்க்கண்டவாறு கூறினர்.]

**முள் கிரீடம்**

இன்று உங்களுடைய தலையில் ஒரு முள் கிரீடத்தைச் சூட்டிக் கொள்கிறீர்கள். அதிகாரத்தில் அமருவதென்பது கடினமான காரியம். அல்லும் பகலும் அனவரதமும் நீங்கள் அந்த ஆசனத்தில் விழிப்போடு அமர்ந்திருக்க வேண்டும். நீங்கள் அதிக அஹிம்சையோடும் அடக்கத்தோடும் சகிப்புத் தன்மையோடும் நடந்து கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் நீங்கள் இவ்விதச் சோதனைக்குள்ளாகி இருந்தீர்கள். ஆனால் ஒரு வகையில் அது சோதனையே இல்லை. இப்போதோ உங்களுக்கு எல்லையில்லாத சோதனைகள் ஏற்படும். சொத்தாசையில் பலியாகி விடாதீர்கள். ஆண்டவன் உங்களுக்கு உதவுவாராக! கிராமங்களுக்கும் ஏழைகளுக்கும் சேவை செய்வதற்காகவே நீங்கள் பதவியில் இருக்கிறீர்கள்.[1]

அத்தியாயம் 46

# அமைச்சர்களும் கவர்னர்களும் செய்ய வேண்டியவை, கூடாதவை

**பயன்படுத்தும் பொருள்கள்**

*1.* ஒரு இந்திய அமைச்சரோ அல்லது கவர்னரோ கூடியவரை இந்தியாவில் செய்த பொருள்களையே பயன்படுத்த வேண்டும். இந்தியாவில் உள்ள ஏழை மக்கள் வாழ்வதற்கான வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காக, அவரும் அவரது குடும்பத்தினரும் கதர் தவிர வேறு துணியை அணியக் கூடாது. அஹிம்சையின் சின்னமான இராட்டையைச் சுழற்ற வேண்டும்.

**மொழி**

*2.* இந்தி, உருது ஆகிய இரண்டு லிபிகளையும் அவர் கற்றுக் கொள்ள வேண்டும். தம்முடைய சகாக்களுடன் ஆங்கிலத்தில் பேசுவதைத் தவிர்க்க வேண்டும். அதற்குப் பதிலாகத் தமது வட்டார மொழியில் சரளமாகப் பேசவேண்டும். முடிந்தால், அரசாங்கத்தின் அறிவிப்புகள், ஆணைகள், சுற்றறிக்கைகள் ஆகியவைகளை இந்துஸ்தானியில் மட்டும் வெளியிட வேண்டும். இதனால், அதைக் கற்க வேண்டுமென்ற பரவலான உற்சாகம் மக்களுக்கு ஏற்படும். இப்படிப்பட்ட இயற்கையான மார்க்கத்தின் மூலம் படிப்படியாக அது தேசிய மொழியாகும்.

**சலுகை**

*3.* எந்தச் சாதி அல்லது மதத்தின் மீதும் எள்ளளவிலும் எந்தவிதமான வெறுப்புணர்ச்சியும் இல்லாதவராக அவர் இருக்க வேண்டும். தம்முடைய சொந்த உறவினர்கள், நண்பர்கள் ஆகியோருக்கு எந்தவிதமான பாரபட்சமும் சலுகையும் காண்பிக்கக் கூடாது. அமைச்சர், தம்முடைய சொந்த மகனையோ அல்லது சகோதரரையோ, ஏழைக் கருமான் அல்லது தொழிலாளி உள்பட எந்த சாதாரணக்.குடிமகனுக்கும் உயர்ந்தவனாகக் கருதக் கூடாது.

### எளிமை

4. பிறரிடம் மரியாதை மட்டுமல்ல, பயபக்தியையும் ஏற்படுத்தும் அளவுக்கு அவருடைய தனிப்பட்ட வாழ்க்கை எளிமையானதாக இருக்க வேண்டும். மக்களுக்கு ஒரு தூண்டுகோலாக இருக்க வேண்டுமென்பதற்காக, அவர் நாள்தோறும் ஒரு மணி நேரத்தை உற்பத்தி அளிக்கக் கூடிய உடல் உழைப்பிற்குச் செலவிட வேண்டும். அவர் ஒன்று ஒருமணி நேரம் நூற்கலாம். அல்லது, அவருடைய வீட்டுச் சுற்றுச் சுவருக்குள் தான்யங்கள், பழங்கள் அல்லது காய் கறிகளை விளைவித்து விவசாய உற்பத்தியைப் பெருக்கலாம்.

### பங்களா, கார்

5. பங்களாக்களும் மோட்டார் கார்களும் விலக்கப்பட வேண்டும் என்பதில் ஐயமே இல்லை. அவர் நீண்ட தூரம் செல்ல வேண்டுமானல், அல்லது அவசர வேலையாகச் செல்லவேண்டுமானல், நிச்சயமாகக் காரைப் பயன்படுத்தலாம். ஆனல் அதனுடைய உபயோகம் மிக மிகக் குறுகிய திட்டவட்டமான வரம்புக்குள்ளேயே இருக்க வேண்டும். ஒரு வேளை கார் மிகவும் அவசியமாக இருக்கலாம் என்பதையும் என்னல் ஊகிக்க முடிகிறது.

### ‘காலனி’ வாழ்க்கை

6. அவரும் அவருடைய சகாக்களும் ஒரு ‘காலனி’யாகச் சேர்ந்து வாழ்வதை நான் விரும்புகிறேன். அப்போது ஒரு கூட்டுணர்ச்சி எளிதாக ஏற்படும். அவருடைய குடும்பத்தினர் கூட மற்ற அமைச்சர்கள் குடும்பத்தினருடன் தனிப்பட்ட முறையில் நெருங்கிய உறவு கொள்ள முடியும்.

### வீட்டு வேலை

7. அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்கள், குழந்தைகள் உள்பட, தங்களுடைய வீட்டுவேலை அனைத்தையும் தாங்களே செய்ய வேண்டும். வேலையாட்களை மிகமிகக் குறைந்த அளவில் பயன்படுத்த வேண்டும்.

### மேசை, நாற்காலிகள்

8. அவருடைய அறைகளில் சோபாக்கள், அலமாரிகள், நாற்காலிகள் போன்று வெளிநாட்டில் செய்யப்பட்ட விலை உயர்ந்த பொருள்களை வைத்து அழகுபடுத்தக் கூடாது. அதுவும் இப்

போது, தம்முடைய நாட்டு மக்களில் கோடிக்கணக்கானவர் களுக்கு உட்கார ஒரு பாய்கூட இல்லாதபோது, கட்டிக்கொள்ள ஒரு வேட்டி இல்லாத போது, அவர்கள் இவ்வாறு செய்யவே கூடாது.

**குடி, புகை**

9. கடைசியாக, அவர் குடிக்கவோ புகை பிடிக்கவோ கூடாது.

அத்தியாயம் 47

# அமைச்சர்களுக்கு ஒரு வார்த்தை

[ "ஒரிசாவில் பெருநாசம்" என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில் அமைச்சர்களுக்கு ஒரு சில அறிவுரைகளையும் காந்திஜி கூறியிருந்தார். அவைகளைக் கீழே தருகிறோம்:]

## உழைப்பின் கௌரவம்

அமைச்சர்களுக்கு ஒரு வார்த்தை. அவர்கள் என்ன நன்கொடைகளைப் பெற்றாலும் அவை ஓரளவுதான் துன்ப நிவாரணம் தரும். ஆகையால் அவர்கள் இரண்டு காரியங்களைச் செய்ய வேண்டும்; முதலாவதாக, பாதிக்கப்பட்ட மக்கள் ஏதாவது உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டுத் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்ளும் கலையைக் கற்றுக்கொள்வதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். பீகாரில் நூல் நூற்பது போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டன. மக்கள் இராட்டையை ஏற்கமாட்டார்களென்றால், மற்ற பணிகளை ஒரிசா மேற்கொள்ளலாம். மிக முக்கியமான ஒன்று என்னவென்றால், உழைப்பின் கௌரவத்தை உணர வேண்டுமென்பதுதான். அமைச்சர்கள் தங்களுடைய சட்டையைக் கழற்றிவிட்டு, நாள்தோறும் ஒரு சிறிது நேரம் சாதாரணத் தொழிலாளர்களைப் போன்று உழைக்கவேண்டும். அப்போதுதான் உழைப்பும் உழைப்பினால் உயரும் பயனும் தேவைப்படும் பிறருக்கு ஊக்கம் அளித்ததாகும். இரண்டாவதாக, என்ஜினியரிங் திறனை ஒருங்கு சேர்க்கத் தகுந்த முயற்சியை அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் பருவ காலங்களில் வெள்ளமாகத் திரண்டு ஓடிவரும் நீரைக் கால்வாய்களில் சரியான முறையில் விட்டுப் பயன்படுத்திக்கொள்ள முடியும்.[1]

## அத்தியாயம் 48

# அமைச்சர்களுக்கு வரவேற்புரைகளும் மரியாதைகளும்

### அமைச்சர்கள் நிலை

என்னை வந்து சந்தித்த ஒருவர் என்னுடன் நடத்திய உரையாடலின்போது கூறியதன் சாரம் இது :

" அமைச்சர்கள் இப்போது எப்படிப்பட்ட நிலைக்கு உள்ளாக வேண்டியிருக்கிறதென்பது ஒருவேளை உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். பதினேழு ஆண்டுகளாகக் காங்கிரஸ்காரர்கள் பதவியைத் துறந்திருந்தார்கள். அவர்கள் முன்பு எந்த அதிகாரங்களைத் துறந்திருந்தார்களோ அந்த அதிகாரங்கள் இப்போது தாங்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளிடம் இருப்பதைப் பார்க்கிறார்கள். இந்தப் பிரதிநிதிகள் விஷயத்தில் என்னசெய்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்களுக்கு விருந்துகள் அளித்தும் வரவேற்புரைகள் வாசித்துக்கொடுத்தும் மூச்சுத் திணறச் செய்கிறார்கள். அவர்களிடம் அடிக்கடி உரிமையாகப் பேட்டிகள் கேட்கிறார்கள். இந்தப் பேட்டிகளின் போது எத்தனையோ விதமான யோசனைகளைக் கூறத் தொடங்கி விடுகிறார்கள். சில சமயம் அற்பச் சலுகைகளும் கேட்கிறார்கள்."

### கடும் வேலை

அமைச்சர்கள் நாட்டிற்கு உண்மையான தொண்டு செய்யாமல் தடுப்பதற்கு இதுவே மிகச் சிறந்த வழி. அவர்கள், இவ்வேலைக்குப் புதியவர்கள். மனச்சாட்சிப்படி நடக்கும் ஓர் அமைச்சருக்கு வரவேற்பிதழ்களும் மரியாதைகளும் பெற நேரம் இருக்காது. அளவோடு, அல்லது அளவுக்கு மீறிப் புகழ்பாடியதற்குப் பதில் அளித்துச் சொற்பொழிவுகள் ஆற்றிக்கொண்டிருக்கவும் நேரம் இருக்காது. தாங்கள் அழைக்காதவர்களுக்குப் பேட்டி அளிக்கவோ, அல்லது தங்கள் பணியில் உதவமாட்டார்கள் என்று கருதுபவர்களுக்குப் பேட்டி அளிக்கவோ நேரம் இருக்காது. கொள்கையளவில் பார்த்தால், மக்களாட்சியில் உள்ள ஒரு தலைவர் மக்கள் கூப்பிடும் தருணத்தில் அவர்கள் முன்னால் நிற்க வேண்டும். அவ்வாறு அவர் செய்ய வேண்டுமென்பதும் சரியே. ஆனால், மக்கள் தமக்கிட்டுள்ள கடமையைப் பலியிட்டுவிட்டு, இதையெல்லாம் அவர் செய்துகொண்டிருக்கக் கூடாது. அமைச்சர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள வேலையில் அவர்கள்

தேர்ச்சி பெருவிட்டால், அல்லது அவர்கள் தேர்ச்சி பெற மக்கள் அனுமதியாவிட்டால், அமைச்சர்களின் நிலை பரிதாபத்திற்கு உரிய தாகிவிடும். நாட்டினுடைய தேவைகளுக்கேற்ற ஒரு கொள்கை யைக் கல்வி அமைச்சர் வகுக்க வேண்டுமாயின், அவருடைய திற மையை எல்லாம் அதில் பயன்படுத்தியாக வேண்டும். மதுவிலக் கின் ஆக்கபூர்வமான அம்சத்தில் ஒரு கலால் துறை அமைச்சர் கவனம் செலுத்தாவிட்டால், அவர் பயங்கரமான தோல்வியை அடைவார். இந்தியா சட்டப்படி முட்டுக்கட்டை இருந்தும், கலால் வருமானத்தை தாமாகவே கைவிட்டிருந்தும், தனது வரவு செலவுத் திட்டத்தைச் சரிக்கட்டாத நிதி அமைச்சரும் அதைப் போன்றவரே. கணக்குகளில் செப்பிடுவித்தை செய்யக்கூடிய திறமை படைத்தவர்தான் இவ்வாறு சரிக்கட்டமுடியும். உதாரணத் திற்காகவே இவைகளைக் கூறுகிறேன். நான் ஏற்கனவே குறிப் பிட்டுள்ளவரைப் போன்றே ஒவ்வொரு அமைச்சர் பதவியிலும் இதே விழிப்புணர்ச்சியும் கவனமும் ஆராய்ச்சியும் தேவைப்படும்.

### மக்கள் கட்டுப்பாடு

நிலையான அரசாங்க அலுவலர்கள் தங்கள் முன் வைக்கும் காகிதங்களைப் படித்துப் பார்த்து, அவைகளில் கையெழுத்துப் போடுவதுடன் வேலை முடிந்து விட்டால் அவர்கள் வேலை எளி தாக இருக்கும். ஆனால் ஒவ்வொரு சான்றையும் ஆராய்வதும் புதுக் கொள்கைகளைச் சிந்தித்து உருவாக்குவதும் எளிதல்ல. அவர்கள் எளிமையை ஏற்க முன் வந்தது, ஒரு பூர்வாங்க நட வடிக்கை என்ற முறையில் அவசியமே. ஆனால் அவர்கள் போது மான அளவு உழைப்பு, திறமை, நாணயம், ஒரு சார்பின்மை, நுணுக்கமான விவரங்களில் எல்லையற்ற தேர்ச்சி ஆகியவைகளை வெளிப்படுத்தாவிட்டால் இந்த எளிமை பயன் அளிக்காது. ஆகையால், அமைச்சர்களுக்கு வரவேற்புரைகள் வாசித்துக் கொடுப்பதிலும், அவர்களிடம் பேட்டிகள் கேட்பதிலும், அவர் களுக்கு நீண்ட கடிதங்கள் எழுதுவதிலும் பொதுமக்கள் தாங்க ளாகவே கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்வது நல்லதாகும்.[1]

அத்தியாயம் 49

# வரவேற்புரைகளும் மாலையிட்டுப் பாராட்டுதலும்

**வீண் விரயம்**

**கேள்வி :** ஓர் அன்பர் கீழ்க்கண்டவாறு புகார் செய்கிறார் :- "பெரும்பாலான மாநிலங்களில் காங்கிரஸ் அமைச்சரவைகள் இருக்கின்றன. மக்களும் அதற்காகப் பெருமைப்படுகிறார்கள். ஆகையால் யாராவது ஒரு அமைச்சர் எங்காவது சென்றால் அங்குள்ள ஸ்தல ஸ்தாபனங்களோ அல்லது வேறு நிறுவனங்களோ அவருக்கு விலை உயர்ந்த பேழைகளில் வரவேற்புரைகள் வாசித்தளிக்கிறார்கள். அநேகமாக எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே இவை அமைச்சரின் சொந்தச் சொத்தாகிவிடுகின்றன. இந்தப் பழக்கம் தவறானது என்று நான் கருதுகிறேன். ஒன்று, இவ்வாறு வரவேற்புரைகள் வாங்கும் முறையை நிறுத்திவிட வேண்டும் அல்லது இந்தப் பொருள்களெல்லாம் ஆங்காங்குள்ள காங்கிரஸ் குழு போன்றவைகளுக்கு உரிமையாக வேண்டும். அமைச்சர்கள் அல்லது காங்கிரஸ் தலைவர்களுக்கு மாலை சூட்டுவதுபற்றி ஒரு திட்டவட்டமான கொள்கை இருக்கவேண்டும். 300 இலிருந்து 400 ரூபாய்களுக்குக் குறையாத விலையுள்ள பூமாலையிட்டு இந்த அமைச்சர்கள் மரியாதை செய்யப்பட்ட பல நிகழ்ச்சிகளை நான் பார்த்திருக்கிறேன். இது வெறும் வீண் விரயமே."

**சொந்தப் பொருள் அல்ல**

**பதில் :** இந்தப் புகார் நியாயமானதே. விலை உயர்ந்த வரவேற்புப் பேழைகளையோ அல்லது மாலைகளையோ மக்களுக்குத் தொண்டு செய்யும் யாரும் சொந்த உபயோகத்திற்காகப் பெறக்கூடாது. இப் பொருள்களெல்லாம் ஒரு தொல்லையாகி விட்டன; அதற்கும் மோசமானவையுமாகி விட்டன. விலை உயர்ந்த பேழைகளையும் மாலைகளையும் வாங்குவதால், கைவேலைப்பாட்டுத் தொழிலாளர்களின் கைக்குப் பணம் போகிறது என்று வாதிக்கிறார்கள். அமைச்சர்கள் அல்லது அவர்களைப் போன்றவர்களின் உதவி

யில்லாமலே, இத்தொழிலாளர்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளும் சக்தி உள்ளவர்கள்தான். இந்தக் கனவான்கள் உல்லாசப் பயணம் வரவில்லை. மக்கள் என்ன கூற விரும்புகிருர்கள் என்பதைக் கவனித்துக் கேட்கும் அலுவலுடன் பெரும்பாலும் இவர்கள் சுற்றுப் பயணம் செய்கிருர்கள். அவர்களுக்கு அளிக்கப்படும் வரவேற்புரைகள் அவர்களுடைய குணச் சிறப்புகளைப் புகழ்பாட வேண்டிய தில்லை. இந்தக் குணச் சிறப்புகள் இருப்பதே ஒரு சிறப்புத் தான். அந்தந்தப் பகுதிக்கு என்ன தேவை யென்பதையும், குறைகள் இருந்தால் அவைகள் என்ன வென்பதையும் திட்ட வட்டமாக இந்த வரவேற்புரையில் கூறவேண்டும். இந்தக் காலத்தில் அமைச்சர்களுக்கும் அவர்களுடைய செயலாளர் களுக்கும் கடுமையான வேலை இருக்கிறது. மக்கள் ஆரா தனை செய்வது அவர்களுக்கு உதவியாக இராது, முட்டுக் கட்டையாகவே இருக்கும்.[1]

அத்தியாயம் 50

# அமைச்சர்களுக்கு எச்சரிக்கை

## நீதியும் நிருவாகமும்

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களும் தங்களுக்கு முன்பிருந்த பிரிட்டிஷாரைப் போலவே எதேச்சாதிகார முறையில் நடந்து கொண்டிருப்பதாக, அநேகர் காந்திஜியிடம் வந்து கூறினர் கள்; இதற்கான சான்றுகளையும் அளித்துச் சென்றனர்கள். இது சம் பந்தமாக அவர் அமைச்சர்களுடன் பேசவில்லை. ஆனால் என் னென்ன குறைகளுக்காக பிரிட்டிஷ் அரசை நாம் கண்டித்து வந் தோமோ, அவை பொறுப்பு வாய்ந்த அமைச்சர்களின் காலத்தில் நிகழக் கூடாது என்பதில் தெளிவான கருத்துக் கொண்டிருந்தார். அவர் கூறியதாவது:

பிரிட்டிஷ் ஆட்சியில் சட்டங்களை இயற்றி அமுல் நடத்துவதற் குப் பதிலாக, வைசிராய் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். நீதி, நிருவாகத் துறை அலுவல்கள் ஒன்றாக இணைந்திருந்ததை எதிர்த்து அப்போது பெரிய கூக்குரல் இருந்தது. இக் கருத்தை மாற்றிக் கொள்வதற்கு இதுவரை எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. அவசரச் சட்ட ஆட்சி கூடாது. சட்டசபைகள் தான் சட்டம் இயற்ற வேண்டும். விரும்பியபோது அமைச்சர்கள் மாறக் கூடிய வர்கள். அவர்களுடைய செயல்கள் நீதிமன்றங்களின் பரிசீலனைக்கு உட்பட்டதாய் இருக்கவேண்டும். குறைந்த செலவிலும் விரைவாக வும் இலஞ்சத்திற்கு இடமில்லாத முறையிலும் நீதி கிடைப்பதற்கு அவர்கள் தங்களால் இயன்றதையெல்லாம் செய்ய வேண்டும். இதற்காகத் தான் பஞ்சாயத்து ராஜ்யம் வேண்டுமென்று கூறப் படுகிறது. உயர்நீதிமன்றங்கள் இலட்சக்கணக்கான மக்களை எட்ட முடியாது. அசாதாரணமான சூழ்நிலைகளில் தான் அவசரச் சட்டங் கள் தேவைப்படுகின்றன. சட்டசபைகளின் இடத்தை நிருவாகம் ஆக்கிரமிக்கக் கூடாது. இந்த நடைமுறையினால் சிறிது காலதாமத மானாலும் பரவாயில்லை. திட்டவட்டமான உதாரணம் எதுவும் என் மனதில் இல்லை. பல்வேறு மாநிலங்களிலிருந்தும் எனக்கு வந் துள்ள கடிதங்களை அடிப்படையாக வைத்தே நான் இக் கருத்துக்

களைக் கூறுகிறேன். ஆகையால், சட்டத்தைக் காற்றில் பறக்க விட்டுவிட வேண்டாமென்று ஒருபுறம் நான் மக்களை வேண்டிக் கொள்ளும்போது, தாங்கள் கண்டித்த பழைய வழிகளிலேயே செல்லும் தவறைச் செய்யாது எச்சரிக்கையாய் இருக்குமாறு அமைச்சர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.[1]

## அத்தியாயம் 51

# வறுமை இழிவல்ல

### வரவுக்கு ஏற்ற செலவு

ஒரு சங்கடமான நிலைமை காந்திஜியின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. காங்கிரஸ் பதவி ஏற்பதற்கு முன், தொண்டு செய்யும் இலட்சியம், தன்னல மறுப்பு, எளிமை ஆகியவைகளை மக்கள் முன் வைத்தது. அந்தக் காலத்தில் ஓர் இலட்சம் ரூபாய் வசூல் செய்வதென்பது கூடக் கடினமானது. இன்றோ கோடிக்கணக்கான ரூபாய்கள் காங்கிரஸ் அரசாங்கத்தின் பொறுப்பில் இருக்கின்றன. அது விரும்பிய அளவு தொகையை அதனால் எழுப்ப முடியும். வெளிநாட்டினரிடமிருந்து இந்தியர் கைக்கு ஆட்சி வந்ததில் எந்த விதமான மாறுதலும் இல்லாதது போன்று, அவர்கள் பணத்தைச் செலவிடலாமா? இந்தியத் தலைவர்களும் தூதுவர்களும் தங்களுடைய சுதந்திர நிலைக்குத் தகுந்த முறையில் வாழவும், பணத்தைச் செலவிடவும் வேண்டுமென்றும், நாகரிகப் பகட்டில் அமெரிக்காவுடனும் இங்கிலாந்துடனும் நாம் போட்டியிட வேண்டுமென்றும் சிலர் எண்ணுகிறார்கள். வெளிநாடுகளில் இந்தியாவின் பெருமையைக் காப்பாற்ற இப்படிப்பட்ட செலவுகள் அவசியம் என்றும் அவர்கள் எண்ணுகிறார்கள். ஆனால் காந்தஜி அவ்வாறு கருதவில்லை. சுதந்திரத்திற்கும் நாகரிகப் பகட்டு அல்லது ஆடம்பரத்திற்கும் சம்பந்தமில்லை. நம்முடைய வரவுக்கு ஏற்ற முறையில் செலவை இன்னும் நாம் அமைத்துக்கொள்ளவில்லை. நம்முடைய ஏழ்மையை மறைத்து வைப்பதில் பெருமை எதுவும் இல்லை. சத்தியாக்கிரகத்தினால் இந்தியாவிற்கு உலகில் ஒரு தார்மிக உயர்வு கிடைத்திருக்கிறது. உலகில் இந்தியாவின் மதிப்பு இதைப் பொறுத்ததே. இத்துறையில் அதற்கு யாரும் போட்டியாக வரவில்லை. ஏனெனில் மற்ற நாடுகளெல்லாம்-அவை பெரியவையோ சிறியவையோ-தங்களுடைய போர்க் கருவிகளையும் இராணுவ வீரதீரத்தையும் பெருமையாக எண்ணிக் கொண்டிருக்கின்றன. அதுதான் அவர்களுடைய மூலதனம். இந்தியாவிடம் உள்ளது அதனுடைய தார்மிக மூலதனந்தான். இந்த மூலதனமோ செலவிடச் செலவிடப் பெருகிக் கொண்டேபோகும். பதவிக்கு வந்தால் சில கோட்பாடுகளைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதாக காங்கிரஸ் உரிமையுடன் கூறிவந்திருக்கிறது. வேறு எந்தச் சூழ்நிலையிலுமே இந்த உரிமையை அது

இழக்க நேரும். உயர்ந்த சம்பளங்களை ஏற்றதற்காகவும், செயற்கை யான பிரிட்டிஷ் தரத்தை இயற்கையான இந்திய நிலைக்குக் கீழே இறக்கிக் கொண்டுவராததற்காகவும் மக்கள் அமைச்சர்களைக் குறை கூறினார்கள். இவ்வாறு குறை கூறியவர்களுக்குத் தங்களுடைய அமைச்சர்களின் சொந்த வாழ்க்கையைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனால் காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும், தாங்கள் பதவியில் இல்லாத போது பெற்றதற்குக் கொஞ்சமும் சம்பந்தமில்லாத முறையில், மிக உயர்ந்த ஊதியத்தை எதிர்பார்ப்பதே நாகரிகமாகி விட்டது. மாதந்தோறும் 150 ரூபாயில் வாழ முடிந்தவர், 500 ரூபாய் வேண்டுமென்று கேட்கவோ எதிர்பார்க்கவோ தயங்கு வதில்லை. உயர்ந்த ஊதியம் பெற்றாலொழிய, பழைய ஐ. சி. எஸ். அதிகாரிகள் பாணியில் வாழ்ந்தாலொழிய, அவர்களைப் போன்று உடையுடுத்தினாலொழிய, தங்களை யாரும் பாராட்டமாட்டார்க ளென்று அவர்கள் எண்ணுகிறார்கள். இந்தியாவிற்குச் சேவை செய்ய இது வழியல்ல. ஒரு மனிதனுடைய மதிப்பானது அவன் ஈட்டும் பொருளைப் பொறுத்ததல்ல என்பதை அவர்கள் மறந்து விடக் கூடாது. தன்னைத் தானே பரிசுத்தமாக்கிக் கொள்ளும் முயற்சியில் எல்லோரும் பங்குகொள்ள வேண்டும். இதற்குச் சரி யான சிந்தனையும் செயலும் அவசியம்.[1]

## அத்தியாயம் 52

# நிருவாக விரயமும் அளவுக்கு மீறிய செலவும்

### காந்திஜி கவலை

கோடிக்கணக்கான மக்கள் சொல்லொணுத் துயரங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், ஒருவிதக் கட்டுப்பாடும் இல்லாது நிருவாகத்தில் வீண் விரயமும் அளவுக்கு மீறிய செலவும் இருந்து வருவதைக்காணக் காண காந்திஜியின் மனக்கவலை அதிகமாயிற்று. அவருடைய உன்னிப்பான பார்வையிலிருந்து எதுவும் தப்பவில்லை-வெளிநாடுகளில் நமது தூதுவராலயங்கள் செய்து வரும் செலவு, அமைச்சர்கள் இல்லங்களில் போடப்பட்டிருக்கும் அலமாரி, மேசை முதலியவை, வெளிநாட்டுத் தலைநகர்களில் நம் நாட்டுப் பிரதிநிதிகள் நடந்து கொள்ளும் முறை முதலிய எதுவும் தப்பவில்லை. அவ்வப்போது அவர் எச்சரிக்கையும் செய்துவந்தார். வெளிநாடுகளில் இருந்த தூதுவர்களில் ஒருவருக்கு அவர் எழுதினுர்: "உங்களைப் பற்றி எனக்குக் கிடைக்கும் தகவல்கள், நீங்கள் எவ்வாறு வாழவேண்டும் என்று இந்தியா எதிர்பார்க்கிறதோ அவ்வாறு வாழவில்லை என்பதையே எடுத்துக் காண்பிக்கிறது. இது உண்மையா?"

### அமைச்சர்களின் முன்னுதாரணம்

*1947* கோடையில் டில்லியில் ஒரு நண்பரிடம் அவர் சொன்னுர்: "எல்லா அமைச்சர்களும் தாங்களாகவே மனமார எளிமை என்னும் குறிக்கோளைக் கடைப்பிடித்தார்களானுல், அவர்கள் உலகின் கவனத்தைக் கவருவார்கள். மக்களுடைய நம்பிக்கையை அவர்கள் பெறுவார்கள். இதை எந்த மனிதரும் எந்த சக்தியும் அழிக்கவோ அசைக்கவோ முடியாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆனுல் இதற்குப் பதிலாக நம்முடைய கவர்னர்களுக்கும் அமைச்சர்களுக்கும் அரண்மனைகள் போல வீடுகள் வேண்டும்; அணி அணியாக மிடுக்கான மெய்க்காவலர்களும் அரசாங்கச் சின்னங்கள் அணிந்த பணியாட்களும் நிற்கவேண்டும். மாகாண ஆட்சியாளர்களின் விழாக்களில் விருந்துகள் ஒரு அத்தியாவசியமான அங்கமாய்க் கருதப்படுகிறது. இவைகளை யெல்லாம் என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. நாட்டின் பெருமைக்கு எது அதிக

அபாயகரமானது - இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்கு உணவும் உடையும் இருப்பிடமும் இல்லாதிருப்பதா? நம்முடைய அமைச்சர்களும், கவர்னர்களும் தங்களுடைய சூழ்நிலைகளுக்குக் கொஞ்சமும் பொருந்தாத, விலை உயர்ந்த, கண்கவர் மாளிகைகளில் வாழ்வதற்குப் பதிலாக ஆடம்பரமில்லாத சிறிய வீடுகளில் எளிய முறையில் வாழ்வதா?"

### மெய்காப்பாளர் கூடாது

"எனக்கு அதிகாரம் இருக்குமானால், மக்கள் கடுமையான உணவுப் பற்றாக் குறையால் வாடிக் கொண்டிருக்கும்போது, அரசாங்க மாளிகையில் விருந்துகள் நடத்தும் பழக்கத்திற்கு உடனடியாக முற்றுப் புள்ளி வைப்பேன். அமைச்சர்களுக்கு அடக்கமான, சிறிய, ஆடம்பரம் இல்லாத வீடுகளை அளிப்பேன். ஆனால் அதே சமயம் அமைச்சர்களுக்கோ அல்லது காங்கிரஸ் கவர்னர்களுக்கோ ஆயுதந் தாங்கிய மெய்காப்பாளர்களை நியமிக்கமாட்டேன். ஏனென்றால் இவர்கள் அஹிம்சையைக் கொள்கையாகக் கொண்டவர்கள். இதன் காரணமாக இவர்களில் சிலர் கொல்லப்பட்டாலும் அதற்காக நான் கவலைப்பட மாட்டேன்".[1]

## அத்தியாயம் 53

# அமைச்சர்களின் உணவும் பங்கீட்டுக் கடைகளும்

### எதிர்த்துப் போராட வழி

கேள்வி: உணவுக் கொள்கையானது மாநில கவர்னர்களின் ஆலோசகர்கள் பொறுப்பில் இருந்தபோது, அதைச் சரி யான முறையில் தணிக்கை செய்ய வழி இல்லை. ஆனால் பொறுப்பு வாய்ந்த அரசாங்கங்கள் இருக்கும்போது நிலைமை வேறு. சாதாரண உணவுப் பங்கீட்டுக் கடைகளிலிருந்து தங்களுடைய உணவுப் பங்கீட்டை அமைச்சர்கள் பெற வேண்டும். மற்ற எந்த வழியிலிருந்தும் ஒரு தான்யம் கூடப் பெறக் கூடாது. காங்கிரஸ் அமைச்சர்கள் மனச்சாட்சிப்படி செய்ய வேண்டிய காரியம் இதுவே அல்லவா? இது உட னடியாகப் பெரும் பலன் அளிக்கும். உணவுப் பொருள் களையும் துணியையும் கட்டுப்படுத்தும் நிலையங்களெல்லாம் இன்று பகிரங்கமாகத் திருட்டுக்கும் இலஞ்சத்திற்கும் பெயர் பெற்ற கிடங்குகள் ஆகிவிட்டன. ஏற்கனவே கூறியுள்ள வாறு தார்மிக சக்தி பெற்றுவிட்டால் அமைச்சர்கள் இத் தீமையை வெற்றிகரமாக எதிர்த்துப் போராட முடியும்.

### இங்கிலாந்தின் உதாரணம்

பதில்: இந்தக் கேள்வி, பல புகார்க் கடிதங்களைத் தொகுத்த தாகும். இந்த ஆலோசனையை நான் முற்றிலும் ஏற்கிறேன். இந்த ஆலோசனையில் கூறிய முறையை அமைச்சர்களும் மற்ற எல்லா அரசாங்க ஊழியர்களும் ஏற்கனவே கடைப்பிடிப்ப தாகவே நான் கற்பனை செய்து கொள்கிறேன். உணவுப் பொருள்களைத் தருவிப்பதற்குக் கள்ளச் சந்தையைத் தவிர வேறு வழி இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. பதவியில் இருப்பவர்கள் முன்னுதாரணமாக நடந்துகொள்வதைப் போன்று மக்களுடைய நல்லறிவைத் தூண்டக் கூடியது எது வும் இல்லை. பொது மக்களுக்கு எங்கிருந்து உணவுப் பொருள் கள் வழங்கப்படுகின்றனவோ அங்கிருந்தே அமைச்சர்கள் தங்களுடைய உணவுப் பங்கீட்டைப் பெற்றால், மக்களுக்கு உளுத்துப்போனவற்றை அளித்து ஏமாற்றிப் பணம் பறிக்க

முடியாது என்பதைக் கடைக்காரர்கள் விரைவில் தெரிந்து கொள்வார்கள். இங்கிலாந்தில் அமைச்சர்களும் மற்ற உயர் நிலையில் உள்ளவர்களும் பொது மக்கள் வாங்கும் இடங்களி லேயே தங்களுக்குத் தேவையானவற்றை வாங்குவது வழக் கம் என்று எனக்குத் தெரிவிக்கப்படுகிறது. இப்படித்தான் இருக்க வேண்டும்.[1]

## அத்தியாயம் 54

# எல்லோர் கண்களும் அமைச்சர்கள் மீதுதான்

### துப்புரவு முக்கியம்

புது அமைச்சர்கள் பதவி ஏற்றவுடன், காந்திஜிக்குச் சில ஆங்கிலேய நண்பர்கள் ஒரு கடிதம் எழுதியிருந்தனர். அந்தக் கடிதத்தில், முன்னர் வைசிராய் நிருவாகக் கவுன்சில் உறுப்பினர்களாய் இருந்தவர்கள் வாழ்ந்த இல்லங்களிலுள்ள தோட்டங்கள் இனி அலட்சியம் செய்யப்பட்டு அழிந்துவிடும் என்று அச்சந் தெரிவித்திருந்தனர். ‘மலர்கள் இருக்கமாட்டா, வெல்வெட்டுப் போன்ற புல்வெளிகள் இருந்த இடங்களில் இனிப் புல் முளைக்க விட மாட்டார்கள். சுற்றுச்சுவர் அழுக்கேறிப் போய்விடும். எண்ணெய், அல்லது கிரீஸ் கறை பட்டுக் கம்பளங்களும் நாற்காலிகளும் மற்ற மேசை அலமாரிகளும் நாசமாகிவிடும். கக்கூஸ்களும் ஆபாசமாகிவிடும்’ என்றும் இன்னும் இது போன்று மற்றும் பலவும் எழுதியிருந்தனர். காந்திஜி கூறினர்: “இங்கிலாந்திலும் தென்னப்பிரிக்காவிலும் வாழ்ந்த ஆங்கிலேயர்களுடன் நன்கு பழகியிருக்கிறேன். ஆகவே, பண்பாடுள்ள ஆங்கிலேய மக்கள் துப்புரவு விதிகளையும் சுகாதார விதிகளையும் புரிந்து அனுசரிக்கிருர்கள் என்ற உண்மைக்கு நான் சான்று பகர முடியும். ஆங்கில அதிகாரிகள் பெரிய மாளிகைகளில் மன்னர்களைப் போன்று வாழ்ந்து கொண்டிருக்கிருர்கள். தங்களுடைய வீடுகளையும் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்திருக்க அவர்களுக்கு வேலையாட்களின் பெரும்படை இருக்கிறது. ஆனல் மக்களின் தலைவர்கள் மக்களுடைய ஊழியர்களாக இப்போது இடைக்கால அரசாங்கத்திற்குச் சென்றிருக்கிருர்கள். அவர்கள் வேறு, மக்கள் வேறு அல்ல. அவர்கள் மக்களோடு மக்கள்தான். ஆகையால், ஏராளமான வேலையாட்களை அவர்கள் சார்ந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் அவ்வாறு சார்ந்திருந்தாலோ தங்கள் பணிக்கே விசுவாசமற்றவர்களாகிவிடுவார்கள். ஆனல் அதே சமயம் அவர்கள் தங்களுடைய சுயமுயற்சியின் மூலம், தங்களுடைய வீடுகளையும் சுற்றுப்புறங்களையும் மாசு மருவின்றிச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும், அவ்வாறு வைத்திருக்

கவும் முடியும். அவர்களுடன் சேர்ந்து அவர்களுடைய வீட்டுப் பெண்களும் அவைகளைக் கவனித்துக் கொள்வார்கள். இந்தத் தலைவர்களில் ஒருவர்கூடத் தனது கக்கூசைச் சுத்தம் செய்யத் தயங்கமாட்டார் என்பதை நான் அறிவேன். 'வைசிராயின் இல்லம் ஒரு மாளிகைதான். அது நூற்றுக்கு நூறு சுத்தமாக இருக்கிறது. ஆனால் அதே சமயம் அவருடைய பணியாட்களான அரிஜனங்கள் முதலியவர்களின் இல்லங்கள் இதற்கு மிகவும் மாறுபட்ட காட்சியை அளிக்கின்றன' என்று ஒரு பெண் டாக்டர் பல ஆண்டுகளுக்கு முன்பு என்னிடம் கூறியிருக்கிறார். மக்களுடைய தலைவர்கள் இப்படிப்பட்ட வேறுபாடு எதுவும் காட்டக்கூடாது. ஜவாஹர்லால்ஜியின் சொந்த அலுவலர்களில் ஒருவர்—ஒரு அரிஜன்—முன்பு சட்டசபை உறுப்பினராக இருந்தவர். அவர்கள் தங்களுடைய பணியாட்களைத் தங்களுடைய குடும்பத்தினர் போலவே நடத்துகிறார்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் இந்நாட்டு அமைச்சர்கள் உயர்ந்த தரத்தை நிலைநிறுத்தவேண்டும். இல்லையேல் நான் மகிழ்ச்சி அடைய மாட்டேன். இந்நாட்டுக்கு அவர்கள் ஏமாற்றமளிக்க மாட்டார்களென்று நான் உறுதியாக நம்புகிறேன்."[1]

அத்தியாயம் 55

# காங்கிரஸ் அமைச்சர்கள், ஆங்கில மன்னர்கள் அல்ல !

### ஆடம்பரம் வேண்டுமா ?

ஒரு காங்கிரஸ் ஊழியர் கீழ்க்கண்டவாறு கேட்கிருர் :

"காங்கிரஸ் அமைச்சர்களும் தங்களுக்கு முன்பிருந்த ஆங்கிலேயர்களைப் போன்று பெரிய ஆடம்பரத்துடன் வாழவேண்டுமா? சொந்த வேலைகளுக்கு அவர்கள் அரசாங்க மோட்டார்களைப் பயன்படுத்துவது சரியாகுமா?"

### இரண்டுக்கும் ஒரே பதில்

என்னுடைய கருத்துப்படி இந்த இரண்டு கேள்விகளுக்குமே ஒரே பதில்தான் இருக்கமுடியும். காங்கிரஸ் தொடர்ந்து மக்கள் அமைப்பாக இருக்க வேண்டுமானல், அமைச்சர்கள் பிரிட்டிஷ் சக்கரவர்த்திகளைப்போல வாழமுடியாது. உத்தியோக அலுவல் களுக்காக அரசாங்கம் அளித்துள்ள வசதிகளைச் சொந்த வேலை களுக்காகப் பயன்படுத்தக் கூடாது.

அத்தியாயம் 56

# தேசிய சேவையும் அமைச்சர் பதவியும்

## இன்று சேவையின் பொருள்

சேவை என்பதன் பொருளே, ஒருவன் தனது நாட்டிற்கு நன்மை செய்வது என்பதுதான். ஆனல் இக்காலத்தில் பலருடைய கருத்துப்படி தேசிய சேவை என்பதற்குப் புகழ்பெற முயற்சி செய்தல் என்பது பொருளாகிவிட்டது. தேசிய சேவையின்மூலம் ஒருவர் பத்திரிகைகளில் விளம்பரம் பெறுகிறர் அல்லது அவரைப் படம் பிடித்து வெளியிடுகிறர்கள்—இது இன்னுங் கொஞ்சம் சிறந்தது—அல்லது சிறைக்குச் சென்றதற்கு வெகுமதியாக அமைச்சர் பதவி அடைகிறர். ஆகவே இறுதியில் அமைச்சர் பதவிக்கு உயருவதற்காக அதிகாரத்தைப் பிடிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறர்கள். ஆனல், மக்களுடைய ஆதரவின்றி நல்ல அமைச்சர்கள் கூட எவ்வாறு நல்ல சேவை செய்ய முடியும்? மற்றவர்களுடன் அமைச்சர்களும் இந்த நாட்டிற்குத் தேவைதான். ஆனல் ஒரு அமைச்சர் அதற்குத் தகுதியுள்ளவராக இருந்தால்தான் அப்பதவியை அலங்கரிக்க முடியும். அவர் தம் பதவியில் பிரகாசிப்பதற்கு வேண்டிய உதவியைச் செய்வது நமது கடமையாகும். நாம் இதைப் புரிந்துகொள்ள முடியுமானல், நாட்டு நலனைமட்டும் தனது மனதிற்கொண்ட எழுத்தறிவில்லாத ஒரு பெண்கூட நமது நாட்டிற்குச் சேவை செய்ய முடியும் என்ற உண்மையை ஒப்புக்கொள்வோம்.[1]

## அத்தியாயம் 57

# சட்டத்தில் குறுக்கீடு இல்லை

### எப்போது மன்னிப்பு அளிப்பது?

இதன் பின்னர் காந்திஜி மற்ருெரு பிரச்னையைக் குறிப்பிட்டார். சில இடங்களில், கலவரங்களில் பங்கு கொண்ட பலரை அதிகாரிகள் கைது செய்திருக்கிருர்கள். பழைய ஆட்சியின் கீழ், வைசிராயிடம் இரக்கங்காட்டுமாறு மக்கள் விண்ணப்பிப்பார்கள். அவரும் சில குறிப்பிட்ட விதிகளை—அவை எவ்வளவுதான் தவருனவையாக இருந்தாலும்—பின்பற்ற வேண்டி யிருக்கும். இப்போது அவர்கள் தங்களுடைய அமைச்சர்களுக்கு விண்ணப்பிக்கிருர்கள். அமைச்சர்கள் தங்களுடைய சொந்த இனிய விருப்பப்படி நடப்பதா? அவ்வாறு நான் எண்ணவில்லை. அவர்கள் தங்களுடைய மனம்போன போக்கில் நடந்துகொள்ள முடியாது. சட்டம் தனது இயல்பான நியதிப்படி நடப்பதை அவர்கள் அனுமதித்துத்தானுக வேண்டும். அரசாங்கம் இரக்கங்காட்டுவதென்பதற்கு ஒரு திட்டவட்டமான வரையறை உண்டு. உரிய பாதுகாப்புடன்தான் அதை அமுல் நடத்தவேண்டும். சம்பந்தப்பட்ட கைதிகளை விடுதலைசெய்யுமாறு சம்பந்தப்பட்ட நீதிமன்றங்களுக்கு புகார்தாரர்களே விண்ணப்பித்துக் கொள்வதுதான் இப்படிப்பட்ட வழக்குகளை வாபஸ் பெறுவதற்கு ஒரேவழி. கொடிய குற்றங்கள் செய்தவர்களை எளிதாக விட்டுவிடுவதை அனுமதிக்க முடியாது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், குற்றம் சாட்டப் பெற்றவர்களுக்கு எதிராக சாட்சியம் அளிக்காமல் இருந்துவிடுவது மட்டும் போதாது. குற்றம் சாட்டப்பெற்றவர்கள், தங்களுடைய குற்றங்களை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்கவேண்டும். புகார்தாரர்களிடமிருந்து மனப்பூர்வமான ஒத்துழைப்புக் கிடைப்பதாக இருந்தால், மன்னிப்புக்கிடைப்பது சாத்தியமே. எந்த அமைச்சருக்கும், தம்முடைய அபிமானம் மிக்கவர்களுக்காகக்கூட நீதியில் குறுக்கிட உரிமை கிடையாது என்பதையே நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். நீதி எளிதாகவும் விரைவாகவும் கிடைக்குமாறு செய்வதும், சாத்தியமான அளவு நிர்வாகத் தூய்மைக்கு உறுதி அளிப்பதும்தான் ஜனநாயகத்தின் கடமை. ஆனல், நீதி மன்றங்களின் இடத்தில் அமைச்சர்கள் செயல்படுவதோ அல்லது அவைகளின் முடிவுகளை மாற்ற முன்வருவதோ ஜனநாயகத்திற்கும் சட்டத்திற்கும் நேர் விரோதமானதாகும்.[1]

அத்தியாயம் 58

# அனுபவம் உள்ளவர்கள் ஆலோசனை

நமது அமைச்சர்கள் மக்களிலிருந்து வந்தவர்கள்; மக்களைச் சேர்ந்தவர்கள். அனுபவம் மிக்க பலர் அமைச்சர் பதவி வகிக்காதவர் இருப்பார்கள். அவர்களைக் காட்டிலும் தங்களுக்குத்தான் அதிகம் தெரியும் என்று மமதை கொள்ளாமல் அமைச்சர்கள் இருப்பார்களாக! இவ்வாறு அனுபவம் மிக்கவர்கள், எவ்வளவு விரைவில் உணவுக் கட்டுப்பாடு நீங்குகிறதோ அவ்வளவுக்கு நல்லது என்ற கருத்தைப் பலமாகக் கொண்டிருக்கிறார்கள். பங்கீட்டு உணவை நம்பியிருப்பவர்கள், "உணவுக் கட்டுப்பாட்டின் காரணமாக உணவுக்கான நல்ல தான்யங்களையும் பருப்புவகைகளையும் வாங்க முடியாமல் போய்விடுகிறது. கெட்டுப்போன உணவுத் தான்யங்களை உண்ணுவதால் ஏற்படக்கூடிய நோய்களுக்கு எவ்விதக் காரணமுமின்றி மக்கள் இலக்காகின்றனர்", என்று ஒரு டாக்டர் எழுதுகிறார்.[1]

பகுதி பத்து

# அமைச்சர்களைப் பற்றிய குற்றச்சாட்டு

## அத்தியாயம் 59

## ஒரு குற்றச்சாட்டு

மத்திய மாநில அமைச்சரவையைக் கடுமையாகக் கண்டித்து, அம்மாநிலத்தைச் சேர்ந்த ஒருவர் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதில் உள்ள மிகக் கசப்பான பகுதியின் சுருக்கத்தை-அதில் உள்ள கசப்பைக் குறைத்துக் கீழே தருகிறேன் :

### நான்கு முக்கிய நோக்கங்கள்

"சில காலமாகவே உங்களுக்கு எழுத வேண்டுமென எனக்கு ஆசை. ஆனால் வேண்டுமென்றே நான் அவ்வாறு செய்யவில்லை. எனினும் என்னுடைய மாநிலத்தில் நல்ல அரசாங்கம் அமைய வேண்டுமென்பதில் எனக்கு அக்கறை இருக்கவேண்டு மல்லவா? அந்த முறையில் இப்போது நான் எழுதுகிறேன். உங்களுடைய வாழ்க்கையின் எஞ்சிய பகுதியில் நீங்கள் புகுந்த தாயகமாகவும் இந்த மாநிலம் இருக்கிறது என்று கருதுகிறேன். காங்கிரசின் பிரதிநிதிகளால் அமைக்கப்படும் அரசாங்கம் அவதூறுக்கு இடமேயில்லாத அளவு நல்லதாக இருக்கும்; பகுத்தறிவையும் தார்மிக சக்தியையும் கொண்டு எல்லாக் காலத்திலும் அது ஆட்சி நடத்த முடியும் என்ற நம்பிக்கையெல்லாம் எங்களுக்கு ஏற்படுத்தப்பட்டிருந்தது. ஆனால் காங்கிரஸ் அமைச்சரவையின் முக்கிய நோக்கம் இப்போது கீழ்க் கண்டவாறு தான் இருக்கும் என்று எங்களுக்குத் தோன்றுகிறது:

(அ) பொது இடங்களில் உங்களுடைய சிலையை வைத்து வணங்குவது, இரகசியமாக அதை உடைப்பது.

(ஆ) ஏகாதிபத்தியத்தின் சின்னங்களை ரகசியமாக ஆராதனை செய்வது. ஆனால் பகிரங்கமாகக் கண்டிப்பது.

(இ) சாத்தியமான, சட்டபூர்வமான முறைகளில் தங்களுடைய எதிரிகளை வெல்ல முடியாதபோது, அவர்களிடம் படுபாதகமாக நடந்துகொள்வது.

(ஈ) சட்டம் இயற்றுவதிலும், அரசாங்கப் பதவிகளை அளிப்பதிலும் சுறுசுறுப்பாக வாணிகம் நடத்துவது.

## உங்கள் ஆன்மா துடிக்கவில்லையா?

"சில வரப்பிரசாதங்களை அளிப்பதாக வாக்குறுதி அளித்தும், வாக்காளர்களுக்கு நம்பிக்கை என்னும் இலஞ்சத்தை ஊட்டியும் மக்களுடைய அரசாங்கத்தை நடத்திவிடலாம் என்று மத்தியப் பிரதேசத்தில் உள்ள காங்கிரஸ் அமைச்சர்கள் கற்பனை செய்வதாகத் தோன்றுகிறது. ஆனால் இது நடக்காது. கடந்த பத்து மாதங்களாக இந்த மாநிலத்தில் உள்ள நல்ல அரசாங்கத்திற்கான தார்மிக அடிப்படையைத் தகர்க்க உங்களுடைய அமைச்சர்கள் செய்யாத காரியம் இல்லை. அமைச்சரவையிலும் அதனுடைய அங்கங்களிலும் சண்டைகளும் இலஞ்சமும் தேன்கூடு போல் கட்டியிருக்கின்றன. இவைகளையெல்லாம் மொத்தமாகப் பார்த்து நான் உங்களிடம் தெரிவிக்க விரும்பும் முடிவு என்னவென்றால், காங்கிரஸ் கட்சி அதிகாரத்தையும் பொறுப்பையும் ஏற்றிருக்காவிட்டால், அது ஆளத் தகுந்தது என்று கருதப்பட்டிருக்கும். பதவி ஏற்பதற்கு அடுத்தபடியாக அதைத் துறக்கும் பொறுப்பு இருக்கிறது. இந்த அமைச்சரவை அமைவதற்கான தார்மிகப் பொறுப்பு முற்றிலும் உங்களுடையதே. ஆகையால், பிறரைக் கொள்ளையடித்து வாழும் இப்படிப்பட்ட அமைச்சரவையை எதிர்த்து உங்களுடைய ஆன்மா கிளர்ந்தெழவில்லையென்றால் அது விந்தைதான்."

## பாராளுமன்றக் குழு விசாரணை

இந்த அமைச்சரவையை எதிர்த்து வந்த புகார்களெல்லாவற்றையும் காங்கிரஸ் செயற் குழு பாராளுமன்றக் குழுவிற்கு அனுப்பி வைத்தது. பாராளுமன்றக் குழு சம்பந்தப்பட்ட இடத்திற்குச் சென்று விசாரணை நடத்தியது. காங்கிரஸ் முற்றிலும் ஜனநாயக அமைப்பு; அதில் பரந்த வாக்குரிமை இருக்கிறது. செயற் குழுதான் அதன் வாய். காங்கிரஸ் அமைப்பு வரையறுக்கும் எல்லைக்குள் அது பணியாற்ற வேண்டியிருக்கிறது. அமைச்சர்கள் பதவியிலிருந்து விலகவேண்டுமென மத்திய மாநில காங்கிரஸ் பிரதிநிதிகள் கோரியிருக்கலாம். அவர்களுக்கு அந்த உரிமையிருந்தது. ஆனால் அவர்கள் அவ்வாறு செய்யவில்லை. அதற்கு மாறாக, தற்போதுள்ள அமைச்சர்கள் தங்களுடைய கருத்து வேறுபாடுகளை அகற்றி ஒற்றுமைப்பட்டு, அரசாங்கத்தை நடத்த வேண்டுமென்றுதான் விரும்பினார்கள். இந்தப் பிரதிநிதிகளுடைய கருத்தைப் பாராளுமன்றக் குழு அலட்சியம் செய்ய முடியாது. அதற்கு அந்த அதிகாரமும் இல்லை. ஆனால் அமைச்சரவையில் தாங்கள் கண்ட குறைபாடுகளையெல்லாம் அகற்றத் தன்னால் முடிந்ததையெல்லாம் அக்குழு செய்ய விரும்பியதற்கு, அமைச்சர்களும் எந்த விதமான எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். புது ஏற்பாடு எவ்வாறு செயல்படுகிறது என்பதை இனிமேல் தான் நாம் பார்க்க வேண்டியிருக்கிறது.

### ஒளித்து மறைப்பதில்லை

நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புவது காங்கிரஸ் அமைப்பில் காணப்படும் எந்தக் குறைபாட்டையும் ஒளித்து மறைக்கச் செயற் குழு விரும்பவில்லை என்பதுதான். கட்டுப்பாட்டைப் பிறப்பிக்கவும் அது அஞ்சுவதில்லை. பெரும்பாலான சந்தர்ப்பங்களில் அதன் கட்டுப்பாட்டுக்கு அமைச்சர்கள் அப்படியே பணிந்தும் விடுகிறார்கள்.

### இயல்பாகவே செத்துவிடும்

பகுத்தறிவையும் தார்மிக செல்வாக்கையும் கொண்டுதான் காங்கிரஸ் ஆள முடியும் என்று இக்கடிதத்தை எழுதியவர் கூறியுள்ள கருத்தை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். பகுத்தறிவிற்கும் தார்மிக செல்வாக்கிற்கும் பதிலாக, கண்ணியமற்ற ஆட்சி முறையை மேற்கொள்ளும்போது காங்கிரஸ் இயற்கையாகவே நியாயமாகவே-செத்துவிடும். இதை அவரும் அவரைப் போன்று குறை கூறுபவர்களும் உறுதியாக நம்பலாம்.[1]

# அத்தியாயம் 60

# ஓர் அமைச்சரின் துயரம்

## அறிக்கை விட வேண்டுகோள்

டாக்டர் கட்ஜு கீழ்க்கண்ட கடிதத்தை எழுதியுள்ளார்:

இந்தியாவின் பல பகுதிகளில் மழைகாலப் பயிர்கள் பெருமளவு வீணாகிவிட்டன. ஆகையால் நாட்டில் கடுமையான உணவுப் பற்ருக்குறை ஏற்படும் என்ற அச்சம் பரவலாய் இருக்கிறது. உணவு விநியோகத்தில் ஏழையும் செல்வந்தரும் சமமாகக் கவனிக்கப்பட வேண்டும். இதற்காக, ஐக்கிய மாநிலத்தில்* பல நகர்ப் புறப் பகுதிகளில் உணவுப் பங்கீட்டு முறை அமுல் நடத்தப்படுகிறது. இந்த உணவுப் பங்கீட்டால் இப்படிப்பட்ட பகுதிகளில் உள்ள மக்களுக்கு உணவு அளிக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகிறது. உத்தேச உணவுப் பற்ருக்குறையானது மிகவும் கடுமையாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுவதால், உத்தரப் பிரதேசத்தில் அளிக்கப்படும் உணவுப் பங்கீட்டின் அளவு மிகக் குறைச்சலாக, அதாவது ஆறு †'சடாக்'குகள் தான்யங்களாகக் குறைக்கப்பட்டுள்ளன. இதில் 2 'சடாக்கு'கள் கலப்பு ஆட்டா. கலப்பு ஆட்டா பொதுவாக மக்களால் விரும்பப்படுவதில்லை. இதற்கு மேலும் உணவுப் பங்கீட்டைக் குறைப்பது கிட்டத்தட்ட முடியாததாகும். நகர்ப் புறங்களில் உள்ளவர்களுக்கு உணவு அளிக்க, கிராமப் புறங்களிலிருந்து உணவு பெறுவது அவசியம் என்பது தெளிவு. இவ்வாறு தொடர்ந்து கிராமங்களிலிருந்து உணவுப் பொருள்கள் கிடைக்கவேண்டுமென்பதற்காக, உபரி மாவட்டங்களில்-அதாவது, எந்த மாவட்டங்களில் கிராமப்புற மக்களின் தேவையைக் காட்டிலும் அதிகமாக விளைகிறதோ அங்கு-விவசாய உற்பத்திப் பொருள்கள் மீது கட்டாய லெவி விதிப்பது விரும்பத்தக்கதாய் இருக்குமென்று, மாநில அரசாங்கங்களுக்கு இந்திய அரசாங்கம் ஆலோசனை கூறியிருக்கிறது. கட்டாய லெவிப் பிரச்னை பொது மக்கள் மனதை இப்போது மிகவும் கலக்கிக் கொண்டிருக்கிறது. அரசாங்கம் நிர்ணயித்துள்ள கட்டுப்பாட்டு விலை மிகவும் குறைவென்றும் அதை உயர்த்த வேண்டுமென்றும் கூறப்படுகிறது. இதற்கு நாம் கூறக்கூடிய பதில் இதுதான்: விலையை நிர்ணயிப்பதென்பது ஒரு அனைத்து இந்திய விவகாரம்; முழு இந்தியாவையும் பாதிக்காமல் ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் மட்டும் விலையை உயர்த்துவது சாத்தியமில்லை. மேலும், ஐக்கிய மாநிலத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ள கட்டுப்பாட்டு விலை 40 சேர் கொண்ட மணங்கிற்கு ரூ 10-25 ஆகும். இது உண்மையில் குறைந்த விலை அல்ல. போதுமான அளவு இலாபகரமானதுதான். பயிரிடுவதற்காகும் செலவு, வாழ்க்கைச் செலவு ஆகியவைகளில் ஏற்பட்டுள்ள உயர்வுகளைக் கணக்கிட்டே இவ்விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளது. போருக்கு முந்திய காலத்தில், ரூபாய்க்கு 13 சேராகக் கோதுமை விற்கப்பட்டு வந்தது; கட்டுப்பாட்டு விலை 4 சேர்களாகும். உணவு வரத்து,

---

* இது இப்போது உத்தரப் பிரதேசம் என வழங்கப்படுகிறது.

† ஒரு சடாக் = $\frac{1}{16}$ சேர் அல்லது இரண்டு அவுன்ஸ்களாகும்.

தேவையைக் காட்டிலும் மிக மிகக் குறைச்சலாக இருக்கும் என்று அஞ்சப்படுகிறது. ஆகையால், சுயநலமிகள் தங்களுடைய தனிப்பட்ட தேவைகளை நிறைவு செய்துகொள்ள, உயர்ந்த விலைகளில் உணவு வாங்கிக்கொள்ள வசதியாக உள்ள கள்ள மார்க்கெட்டுகள் இருந்துதான் தீரும். நகரப் புறங்களில் உள்ள தங்களுடைய சகோதர சகோதரிகளுக்கும், கிராமப்புறங்களில் வாழும் நிலமில்லாத மக்களுக்கும் உணவு அளிக்க வேண்டியது சமுதாய ரீதியாகவும் தேசிய ரீதியாகவும் தாங்கள் செய்ய வேண்டிய கடமை என்பதை விவசாயிகள் உணர வேண்டும். அவ்வாறு உணர்ந்தார்களானால், எந்தவிதமான கட்டுப்பாடும் அவசியமாக இருக்காது. எல்லா வகைகளிலுமே விவசாயி ஒரு அன்னதாதா ஆவார். இந்த நெருக்கடியான சமயத்தில், விவசாயி பதுக்கி வைக்கக்கூடாது என்றும், கள்ளமார்க்கெட்டில் விற்கக் கூடாது என்றும், முடிந்த அளவு அதிகமாக அரசாங்கக் கடைகளுக்கே விற்க வேண்டுமென்றும், அப்போது தான் ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடின்றி எல்லா மக்களுக்கும் ஒரே விகிதத்தில் உணவு அளித்துப் பட்டினியையும் ஆதரவற்ற நிலையையும் தவிர்க்க முடியுமென்றும் நீங்கள் ஒரு வேண்டுகோள் விடுக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன். உங்களுடைய குரல் திக்கெட்டும் பரவும். ஆகையால் இந்தப் பணியை ஏற்குமாறு நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். நமது நகரப் பகுதிகளில் நிச்சயமான முறையில் போதுமான அளவு உணவு விநியோகம் செய்வதற்காக அநேக திட்டங்கள் ஆலோசனைக்கு வந்தன. ஆனால் அந்தத் திட்டங்கள் என்னவாக இருந்தாலும், முடிவான பலன், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலுமே விவசாயி தன்னுடைய தான்யத்தை அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள வேண்டுமென்பதில் முடிவதாய் இருந்தது. கிராமப் புறங்களிலும் நகரப் பகுதிகளிலும் உள்ள மக்களுக்கு நாம் உணவு அளித்தாலொழிய, எல்லா வகையான தொல்லைகளும் ஏற்பட்டுத்தான் தீரும். ஐக்கிய மாநிலத்தில் உணவு உற்பத்திப் பெருக்கம், காய்கறி உற்பத்திப் பெருக்கம் ஆகிய இயக்கங்களை ஊக்குவிக்க எங்களால் இயன்றதையெல்லாம் செய்துகொண்டுதான் இருக்கிறோம். நீங்கள் கூறிய ஒவ்வொரு யோசனையும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றது. அரசாங்கக் கட்டிடங்கள் முதலியவைகளில் உள்ள அரசாங்க நிலங்களையெல்லாம் உழுவதற்கு ஆணைகள் பிறப்பித்துள்ளோம். தனிப்பட்ட நிலச் சொந்தக்காரர்களுக்கும் இது சம்பந்தமாக வல்லுநர்களின் ஆலோசனை அளிக்கப்படுகிறது. இலவசமாக நீர்ப்பாசனக் கால்வாய்கள் வெட்டுவது, இலவசமாக விதைகள் அளிப்பது, நீர்ப்பாசனம் அளிப்பது ஆகிய வசதிகளெல்லாம் செய்துகொடுக்கப்படுகின்றன. கிணறு தோண்டுவதற்கும் உதவி அளிக்கப்படுகிறது. இவ்வளவெல்லாம் செய்தாலும் பொதுமக்களுடைய ஒத்துழைப்பு இல்லாமல் முன்னேற்றமே ஏற்பட முடியாது. அன்னதாதாவின் ஒத்துழைப்பு, அவர் தமது உணவுப் பொருள்களை இயன்ற அளவு தானமாக வழங்கும் உருவத்தில் தான் இருக்க வேண்டும்.''

## கவனிக்க வேண்டியது

டாக்டர் கட்ஜுவிடமிருந்து வந்துள்ள இந்தக் கடிதம், விவசாயிகளும் அவர்களுடைய வழிகாட்டிகளும் மட்டுமல்லாது நகர மக்களும் உன்னிப்பாகக் கவனிக்கத்தக்கதாகும். வரக்கூடிய பெரிய அபாயத்தை நல்ல பயனளிக்குமாறு மாற்றிவிடலாம். அப்போது, அது நமக்கு மறைமுகமாக வந்த வரப்பிரசாதமாகவே இருக்கும்.

இல்லையேல், இது ஒரு சாபக்கேடுதான். சாபக்கேடாகவே அது தொடர்ந்து நீடிக்கும்.

### உத்தரவுகளை நிறைவேற்ற வேண்டும்

டாக்டர் கட்ஜு ஒரு பொறுப்பு வாய்ந்த அமைச்சர் என்ற முறையில் இந்தக் கடிதத்தை எழுதியுள்ளார். மக்கள் அவரை ஆக்கவும் அழிக்கவும் முடியும். அவரை மக்கள் அகற்றி, அவரைக் காட்டிலும் சிறந்த ஒருவரை அவர் இடத்தில் நியமிக்கலாம். ஆனல் மக்கள் விரும்பும் அமைச்சர்கள், அவர்களுடைய சேவகர்களாகப் பதவியில் இருக்கும்போது, அந்த அமைச்சர்களின் உத்தரவுகளை மக்கள் நிறைவேற்றித்தானுக வேண்டும். சட்டத்தையோ உத்தரவு களையோ மீறும் ஒவ்வொரு செயலும் சத்தியாக்கிரகமாகாது, சத்தியாக்கிரகத்தைக் காட்டிலும் துராக்கிரகமாய் அது இருப்பது மிக மிக எளிது.

அத்தியாயம் 61

# அமைச்சர்கள் மீது குற்றச்சாட்டுகள்

**காங்கிரஸ்காரர் அவசரம்**

காங்கிரஸ் அமைச்சர்களெல்லாம், இயல்பாகவே காங்கிரஸ் அரசியலை விரும்பாதோரின் காரசாரமான கண்டனத்திற்கு உள்ளாகிறுர்கள். நியாயமான குற்றச்சாட்டுகளை நன்றியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் கட்சி நோக்கத்துடன் வரும் விமர்சனமும் இருக்கிறது. அவைகளையும் தாங்கிக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் காங்கிரஸ்காரர்களே இந்தக் குற்றச் சாட்டுகளைக் கிளப்பும்போதுதான் தர்ம சங்கடமாக இருக்கிறது. இதற்கான நிவாரணம் அவர்கள் கையிலேயே இருக்கிறது. அவர்கள் தங்களுடைய மாகாண காங்கிரஸ் குழுக்களுக்குப் புகார் செய்யலாம். தங்களுடைய குறையை அது நீக்கவில்லை யென்றால், செயற் குழுவுக்கோ அல்லது இறுதியாக அனைத்து இந்தியக் காங்கிரஸ் குழுவுக்கோ செல்லலாம். இந்த மார்க்கங்க ளெல்லாம் தோல்வியடைந்து விட்டால், குறை கூறுவதற்கு வாய்ப்பே இல்லை என்பது உண்மையே. ஆனால் இந்த விமர்ச கர்கள்மீது நான் கூற வரும் பெரிய புகார் என்னவென்றால், இவர்கள் உண்மையான நிலவரங்களைக்கூடத் தெரிந்துகொள் ளாமல் அவசரப்படுகிறார்கள், அல்லது சோம்பேறித் தனமாக இருக்கிறார்கள் என்பதுதான். அறியாமையைவிடப் பெரிய பாவம் இல்லை. இந்த உயர்ந்த வாசகம் நாள்தோறும் உண்மையாவதை நான் காண்கிறேன்.

அத்தியாயம் 62

# அரசாங்கத்தின் மீது குற்றச்சாட்டு

## வரிசெலுத்த மனமில்லை

மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அமைச்சரவை சட்டசபைகளுக்குப் பொறுப்பானது; அவர்களுடைய சம்மதம் இல்லாமல் அது எதுவும் செய்யமுடியாது. சட்டசபையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவி வகிக்கும் ஒவ்வொருவரும் தங்களுடைய வாக்காளர்களுக்குப் பொறுப்பானவராவார். ஆகவே, பொதுமக்களின் பிரதிநிதியாக இருக்கும் வாக்காளர், தான் அமைத்த அரசாங்கத்தின்மீது எந்த விதமான குற்றச்சாட்டையுங் கூறுவதற்குமுன், நன்கு சிந்தித்துப் பார்க்கவேண்டும். இதுதவிர, பொது மக்களின் ஒரு கெட்ட பழக்கத்தையும் இங்கே கவனத்திற்கொள்ள வேண்டும். எந்த விதமான வரியையும் அவர்கள் விரும்புவதில்லை. எங்கே நல்ல அரசாங்கம் இருக்கிறதோ அங்கு வரி செலுத்துபவர் தன்னுடைய பணத்திற்கு முழுப் பலனையும் பெறுகிறார். உதாரணமாக, நகரங்களில் உள்ள தண்ணீர் வரியை எடுத்துக்கொள்ளலாம். எந்த வரி செலுத்துபவரும், தான் வரியாகச் செலுத்தும் பணத்தை மட்டும் கொண்டு தானாக இந்த வசதியைத் தேடிக்கொள்ளமுடியாது. இப்படியிருந்தும், மக்களுடைய விருப்பத்தின் படியே இந்த வரி விதிக்கப்படுகிறது என்பது உண்மையாக இருந்தும், இப்படிப்பட்ட வரிகளைச் செலுத்துவதற்குக்கூட வரி செலுத்துவோர் எப்போதும் வருத்தப்படுகிறார்கள். நான் இப்போது உதாரணமாகக் காட்டியிருப்பதைப் போன்று எல்லா வரிகளுமே அனுகூலமானவையென மெய்ப்பிக்க முடியாதென்பது உண்மைதான். ஆனால் சமூகம் வளர வளர, அதன் சிக்கல்கள் அதிகமாக ஆக, அதில் தொண்டு செய்வதற்கான வாய்ப்புகள் பெருகப் பெருக, ஒரு தனிப்பட்ட வரிசெலுத்துவோர் எந்தக் குறிப்பிட்ட வரிக்காக என்ன பலன் பெறுகிறார் என்பதை விளக்கிச்சொல்ல முடியாது. ஆனால் ஒன்றுமட்டும் தெளிவு. மொத்தத்தில் வரிகளெல்லாம் சமுதாயத்தின் பொது நலனுக்கானதாய் இருக்கவேண்டும். அவ்வாறு இல்லையேல், மக்கள் விருப்பப்படிதான் வரிகள் விதிக்கப்படுகின்றன என்ற வாதம் நிலைக்காது.

## அத்தியாயம் 63

# அமைச்சர்கள் உணர்ச்சி வசப்படக் கூடாது

### அதிகம் எதிர்பார்க்கின்றனர்

அமைச்சர்களின் டாம்பீகமான வாழ்க்கை என்று தாங்கள் கருதுவனவற்றைக் கடுமையாகக் கண்டித்துப் பலர் எழுதியுள்ள கடிதங்கள் என்னிடம் இருக்கின்றன. அமைச்சர்கள் தங்களுக்கு வேண்டியவர்களுக்குச் சலுகை காட்டுவதாகவும், ஏன், உறவினர் களுக்குப் பதவிகள் வழங்குவதாகவும் இக்கடிதங்களை எழுதிய வர்கள் குற்றஞ்சாட்டியுள்ளனர். பெரும்பாலான குற்றச்சாட்டுகள் அறியாமையினல் வருபவைதான் என்பதை நான் அறிவேன். அமைச்சர்கள் உணர்ச்சி வசப்பட்டுவிடக்கூடாது. குற்றங்கண்டு பிடிப்பதையே நோக்கமாகக் கொண்ட விமர்சனத்தைக் கண்டு கூட அவர்கள் வருந்தக்கூடாது. எனக்குக் கிடைத்துள்ள கடி தங்களை அவர்களுக்கு அனுப்பினல் அவர்கள் வியப்படைவார்கள். ஒரு வேளை இதைக் காட்டிலும் மோசமான கடிதங்கள் அவர் களுக்கு வரலாம். அது எப்படி இருந்தாலும், இந்தக் கடிதங்களி லிருந்து ஒரு தார்மிக உண்மையை நான் ஊகிக்கிறேன். எளிமை, தைரியம், நேர்மை, உழைப்பு ஆகியவற்றை, மக்களால் தேர்ந் தெடுக்கப்படும் இந்தச் சேவகர்களிடமிருந்து மற்றவர்களைக் காட்டிலும் இவ்வாறு குற்றஞ்சாட்டுவோர் அதிகம் எதிர்பார்க் கின்றனர். இதில்—ஒருவேளை உழைப்பு, கட்டுப்பாடு என்ற இரண்டைத் தவிர—கடந்தகால ஆங்கில ஆட்சியாளர்களை நாம் அப்படியே பின்பற்ற முடியாது. சரியான விமர்சனத்தால் அமைச் சர்கள் பலன் அடையவேண்டும். விமர்சகர்களும் தாங்கள் அளிக் கும் விவரங்களை அளிப்பதில் திட்டவட்டமாகவும் நிதானமாகவும் இருக்கவேண்டும். அவ்வாருனல், இந்தக் கட்டுரையை நான் எழுதியதன் நோக்கம் முழுவதுமே நிறைவேறிவிடும். ஆதார மின்றிக் கூறுவதோ அல்லது மிகைபடுத்துவதோ நாம் கூறவந்த நல்ல பொருளையும் பாழ்படுத்துகிறது. [1]

அத்தியாயம் 64

# மிரட்டல்கள்–அமைச்சர்களின் கதி

## கடமை தவறவேண்டாம்

மிரட்டல்கள் ஒருபுறம் இருந்துங்கூட, எல்லாவகையான அநீதிகளையும் அகற்ற அமைச்சர்கள் தங்களால் இயன்றவைகளை யெல்லாம் செய்து வருகின்றனர் என்பதை நான் மக்களுக்கு எடுத்துக் கூறத்தான் வேண்டும். மனதில் பலாத்காரம் வளர்ந்து வரும் இக்காலத்தில் மிரட்டல்களே, விரிவான ஜனநாயக வாக்குரிமையின் கீழ் தேர்ந்தெடுக்கப்படும் அமைச்சர்களுக்குச் சாதாரணமாக நேரும் கதி என்று கருதவேண்டும். தங்களுடைய பதவியோ உயிரோ போவதாக இருந்தாலும், கடமை என்று கருதுவனவற்றைச் செய்வதற்கு அவர்கள் தயங்கக்கூடாது, அதே சமயம் அவர்கள் கோபப்பட்டு, நீதி வழங்க மறுப்பதும் நல்லதல்ல. ஏனெனில், தற்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டுள்ள இந்த உதாரணத்தில் உள்ளதைப் போன்று, நீதி வழங்க வேண்டுமென்ற விண்ணப்பம் ஒரு ஆபாசமான மிரட்டலுடன் முடிகிறது.[1]

# அரசாங்கம் வலு இழக்குமாறு செய்யாதீர்

### மக்கள் போகக்கூடிய எல்லே

அரசாங்கம் சிலரைக் கைது செய்ததை எதிர்த்து ஆர்ப் பாட்டம் நடைபெற்றிருக்கிறது. அரசாங்கத்திற்கு இவ்வாறு கைது செய்ய உரிமை உண்டு. நம்முடைய அரசாங்கம் வேண்டு மென்றே ஒன்றுமறியா மக்களை ஒருபோதும் கைது செய்யமுடி யாது. அதே சமயம், மனிதர்கள் தவறு செய்யக் கூடியவர்களே. ஆகவே ஏதாவது தவறினல் ஒன்றுமறியா மக்கள் சிலர் இன்ன லுக்கு உள்ளாகி யிருக்கக்கூடும். இப்படிப்பட்ட தவறைத் திருத்துவது அரசாங்கத்தின் பொறுப்புத்தான். அரசாங்கம் ஏதா வது தவறு செய்திருந்தால் அதை அரசாங்கத்தின் கவனத்திற் குக்கொண்டு வருவதுடன் மக்கள் மன நிறைவு அடைந்துவிட வேண்டும். அவர்கள் விரும்பினல் அரசாங்கத்தையே அகற்றி விடலாம்; ஆனல் அவர்களுக்கு எதிராக ஆர்ப்பாட்டம் நடத்தி அவர்களுக்குத் தடங்கல்களை ஏற்படுத்தக்கூடாது. தங்களுக்கு ஆதரவாக பலம் பொருந்திய இராணுவமும் கடற்படையும் உள்ள வெளிநாட்டு அரசாங்கமல்ல நம்முடைய அரசாங்கம். அவர்கள் தங்களுடைய பலத்தை மக்களிடமிருந்தே பெற வேண்டும்.

## உங்களுடைய தவறுகளையே எண்ணிப் பாருங்கள்

### அச்சத்தை அகற்றுக

உண்மையான அமைதியை எவ்வாறு நிலைநிறுத்த முடியும்? டில்லியில் அமைதி ஏற்பட்டு விட்டதைப்போல் தோன்றியதைக் கண்டு அவர்கள் மகிழ்ச்சி அடைந்திருக்கலாம். ஆனல், இந்த மன நிறைவில் நான் பங்குகொள்ள முடியாது. இந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிக்கப்பட்டிருக்கிறர்கள். கடந்த காலத்திலும் அவர்கள் ஒருவருடன் ஒருவர் சண்டை யிட்டுக் கொண்டதுண்டு. ஆனல் அப்போதெல்லாம் அது ஒன் றிரண்டு நாட்கள் நடைபெறும், பிறகு அதை எல்லோரும் முற்றி லும் மறந்துவிடுவார்கள். ஆனல் இப்போது அவர்கள் ஒருவரை யொருவர் பழைய விரோதிகள் என்று கருதக்கூடிய அளவுக்கு அவர்களிடம் கசப்பு உணர்ச்சி வளர்ந்திருக்கிறது. இதை பல

வீன உணர்ச்சி என்று நான் கூறுகிறேன். இந்த பலவீன உணர்ச்சியை அவர்கள் விட்டுவிடவேண்டும். அப்போதுதான் அவர்கள் ஒரு வல்லரசாக விளங்கமுடியும். அவர்களுக்கு இரண்டு மாற்று வழிகள் இருக்கின்றன. ஒன்று அவர்கள் ஒரு பெரிய ராணுவ வல்லரசாகலாம். அல்லது, என்னுடைய வழியைப் பின் பற்றினால் வெல்லவே முடியாத ஒரு பெரிய அஹிம்சா சக்தியாக விளங்கலாம். இந்த இரண்டு மாற்றுவழிகளிலுமே ஒரு முதல் நிபந்தனை உண்டு. அச்சத்தை அகற்றிவிட வேண்டுமென்பது தான் அது.

## ஒரே வழி

ஒவ்வொரு தரப்பினரும் மற்ற தரப்பினரின் தவறுகளை மறந்துவிடவேண்டும். தம் தவறுகளை மிகைபடுத்திப் பார்க்க வேண்டும். இரு தரப்புகளுமே ஒன்றை ஒன்று நெருங்கிவர இது தான் ஒரே வழி. என்னுடைய செல்வாக்கை யெல்லாம் பயன் படுத்தி இவ்வழியை இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் சிபார்சு செய்தேன். அதே போன்று, முஸ்லிம்களுக்கும் சிபார்சு செய் கிறேன். நேற்று விரோதிகளாக இருந்தவர்கள்கூடத் தங்களு டைய குற்றத்தை ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொள்வார்களானால், இன்று நண்பர்களாகி விடலாம். பழிக்குப் பழி வாங்குவது என்ற தத்துவம் நல்லுறவுக்கு ஏற்றதாகாது. என்னுடைய அறிவுரையை நீங்கள் முழுமனதாகப் பின்பற்றினால், நான் டில்லியைவிட்டுப் புறப்பட்டுப் பாகிஸ்தானில் என்னுடைய யாத்திரையை மேற் கொள்ள முடியும். [1]

## அத்தியாயம் 66

# அமைச்சர்களும் மக்களும்

### விலைக் கட்டுப்பாடு கூடாது

புது டில்லியில் உள்ள ஹார்டிஞ்ச் நூல் நிலையத்தில் வணிகர்கள் கூட்டம் ஒன்றில் 28-12-'47 ஆம் தேதியன்று காந்திஜி பேசினார். அப்போது அவர் கூறியதாவது: "வேறு எந்த நாட்டில் எப்படியிருந்தாலும் சரி, இந்தியாவில் விலைவாசிகளை நிர்ணயிப்பது பொருத்தமானதல்ல. இதை நான் ஒப்புக்கொள்கிறேன். அதிலும் உணவு, துணி ஆகிய இரண்டிலும் விலைவாசிகளை நிர்ணயிப்பது கொஞ்சமும் பொருத்தமானதல்ல. அமைச்சர்கள் உங்களுடைய சேவகர்கள்தான். மக்கள் கருத்துக்களுக்கு எதிராக அவர்கள் எதுவும் செய்யமுடியாது, மக்கள் விரும்புவதற்கு ஒருநாள் அதிகமாகக்கூட அவர்கள் பதவியில் நீடிக்கமுடியாது."[1]

### சிலர் போக்கு

"அரசாங்கத்தை நாசகரமான முறையில் மக்கள் தாக்குவதையும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நாட்டிற்கு வந்துள்ள அதிகாரத்தை இவர்களும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; ஏற்க முடிந்தவர்களையும் பதவியில் அனுமதிக்க மாட்டார்கள். அதற்கு மாறாக, அமைச்சர்கள் மக்களின் உண்மையான சேவகர்களாக இருக்கவேண்டும். ஏனெனில் அவர்களிடமிருந்துதான் இவர்களுக்கு அதிகாரம் கிடைக்கிறது. அமைச்சர்களிடம் வேண்டியவர்கள் - வேண்டாதவர்கள் என்ற சலுகையோ இலஞ்ச ஊழலோ இருக்கக்கூடாது; எல்லோருக்கும் அவர்கள் நீதி வழங்கவேண்டும்."

### சிறந்த முன்னுதாரணம்

"பீகாரில் உள்ள மூன்று சார்பினரும்—ஜமீன்தார்களும் விவசாயிகளும் அரசாங்கமும்—தங்களுடைய கடமையைச் செய்வதானால், அது இந்தியா முழுவதற்குமே ஒரு குறிப்பிடத்தக்க முன்னுதாரணமாக விளங்கும்", என்று காந்திஜி கூறி முடித்தார்.[2]

பகுதி பதினொன்று

# அமைச்சர்களும் அஹிம்சையும்

அத்தியாயம் 67

## நம்முடைய தோல்வி

### ஆளத் தகுதி வரவில்லை

காங்கிரசின் தலைநகராகிய அலகாபாத்தில் நடைபெற்ற வகுப்புக் கலவரங்களும், அதையொட்டி போலீசையும், ஏன், ராணுவத்தையும் கூட உதவிக்கு அழைக்க நேர்ந்ததும், பிரிட்டிஷ் ஆட்சியின் இடத்தில் அமர, நிருவாகத்தை ஏற்க இன்னும் காங்கிரஸ் தகுதி பெறவில்லை என்பதையே எடுத்துக் காட்டுகின்றன. இந்த அப்பட்டமான உண்மை, எவ்வளவுதான் மனதிற்குக் கசப்பாக இருந்தாலும் இதை நேரடியாகச் சமாளிப்பதே சிறந்ததாகும்.......

### சிந்திக்க வைக்கின்றன

கலவரங்களும் நான் குறிப்பிடக்கூடிய மற்றும் சில காரியங்களும் ஒரு கணம் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன. காங்கிரஸ் உண்மையிலேயே மேலும் மேலும் பலமடைகிறதா என்று நம்மை நாமே கேட்டுக்கொள்ளுமாறு செய்கின்றன.......

### தோல்வியை ஒப்புக்கொள்ளுங்கள்

நமக்குச் சுதந்திரம் வந்துவிட்டால், கலவரங்களும் அவைகளைப் போன்றவைகளும் நடைபெறமாட்டா என்று கூறப்படுகிறது. சுதந்திரப் போராட்ட காலத்தில் அஹிம்சாபூர்வமான நடவடிக்கையின் தத்துவத்தைப் புரிந்து, முடிந்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அதைப் பயன்படுத்தவேண்டும். அவ்வாறு செய்யாமல் இருந்தோமானால், இது வீண் நம்பிக்கையாகவே எனக்குத் தோன்றுகிறது.

எந்த அளவுக்குக் காங்கிரஸ் அமைச்சர்கள் போலீசையும் ராணுவத்தையும் பயன்படுத்துகிருர்களோ அந்த அளவுக்கு, நம்முடைய தோல்வியை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியது தான் என்பது எனது கருத்து.

அமைச்சர்கள் வேறுவிதமாகச் செயல்பட்டிருக்க முடியாது என்பது தீவினைப் பயனுக முற்றிலும் உண்மைதான். என்னைப் போன்றே ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் காங்கிரஸ் செயற்குழுவும் நாம் தோல்வியடைந்து விட்டோம் என்று எண்ணினுல், "நாம் ஏன் தோற்று விட்டோம்?" என்று தங்களுக்குத் தாங்களே கேட்டுக் கொள்ளவேண்டும்.

அத்தியாயம் 68

# வெட்கப்பட வேண்டிய செயல்

**முதலில் இருந்த நம்பிக்கை**

உத்தரப் பிரதேசத்தில் நடைபெற்ற கலவரங்கள் என் மனதிற்கு மிகுந்த வருத்தம் அளித்தன. அஹிம்சையின் அடிப்படையில், அவைகளைப்பற்றி மௌலானு ஆசாதுடனும் போஸ் சகோதரர்களுடனும் நான் விவாதித்தேன். நாம் நமது இலட்சியத்தை நோக்கிச் செல்லவில்லை; அதற்குப் பதிலாக, அதிலிருந்து விலகிவந்து கொண்டிருக்கிறோம் என்று நான் உணர்ந்தேன். நாம் மேலும் மேலும் பலமடைந்து கொண்டிருக்கிறோம் என்றும், நமக்கு எவ்வளவுதான் குறைபாடுகள் இருந்தாலும் என் வாழ்நாளிலேயே சுயராஜ்யத்தைக் காணமுடியும் என்றும் நம்பிக்கை ஏற்பட ஹரிபுராவில்* இடம் இருந்தது. இந்த ஆண்டிற்குள் அந்த பலத்தை அடைந்துவிடுவோம் என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் அலகாபாத்திலும் வேறு சில இடங்களிலும் நடைபெற்ற கலவரங்கள் எனக்குக் கடும் அதிர்ச்சியை அளித்தன. நாம் நாணுமாறு, போலீசையும் ராணுவத்தையும் உதவிக்கு அழைக்க வேண்டிய கட்டாயமான சூழ்நிலை நமக்கு ஏற்பட்டது......[1]

**சிலர் கண்டனம்**

அண்மையில் உத்தரப் பிரதேசத்தில் நடைபெற்ற கலவரங்களையொட்டி, நான் வெளியிட்ட கருத்துக்கள் அதிகக் கவனத்தைத் தூண்டியிருக்கின்றன. பத்திரிகைகளில் வெளிவந்தவைகளை வெட்டியெடுத்து நண்பர்கள் எனக்கு அனுப்பியிருந்தார்கள். இவ்வாறு பத்திரிகைகளில் வெளிவந்த அல்லது பேச்சுவாக்கில் கூறப்பட்ட குற்றச்சாட்டுகளில் ஒன்று, நான் போதுமான ஆதாரங்கள் இல்லாமல் எழுதினேன் என்பதாகும்......

**ஆதாரங்கள் உண்டு**

நமக்கு வேண்டிய ஆதாரங்களெல்லாம், பெரிய அளவிலோ சிறிய அளவிலோ கலவரங்கள் நடைபெற்றன என்பதும், காங்

---

*1938-ல் ஹரிபுராவில் நடைபெற்ற இந்திய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தையே இங்கு காந்திஜி குறிப்பிடுகிறார்.

கிரஸ்காரர்களால் அவைகளை அஹிம்சா பூர்வமான முறையில் சமாளிக்க முடியவில்லை என்பதும், போலீஸ் உதவியையும் ராணுவத்தின் உதவியையும் அழைக்க நேர்ந்தது என்பதும்தான். இந்த மூன்று பரந்த உண்மைகளைப் பற்றியும் மறுப்பு எதுவும் இல்லை. நான் வந்த முடிவுகளுக்கு, இதைத் தவிர வேறு காரணங்கள் தேவையில்லை. இதில் அமைச்சர்களின் நடவடிக்கைகளைப்பற்றிய குற்றச்சாட்டு எதுவுங் கிடையாது. அவர்கள் வேறு விதமாகச் செயல்பட்டிருக்க முடியாது என்பதை நான் ஒப்புக்கொண்டுள்ளேன். ஆனால் நெருக்கடியான நிலையைச் சமாளிக்கும் அளவுக்குக் காங்கிரசின் அஹிம்சை வலுப்பெறவில்லை என்பதென்னவோ உண்மைதான்.[2]

## அஹிம்சையின் தோல்வி ஏன் ?

நம்முடைய அமைச்சர்கள் போலீசையும் ராணுவத்தையும் தங்களுடைய உதவிக்கு அழைக்க வேண்டியிருந்ததைக் கண்டு நான் வெட்கப்படுகிறேன். எதிர்க்கட்சிக்காரர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளுக்குப் பதிலளித்தபோது, அவர்கள் பயன்படுத்திய சொற்களுக்காக நான் நாணுகிறேன்......இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் ஏன் நமது அஹிம்சை தோல்வியடைந்து விடுகிறது? அது பலவீனமானவர்களின் அஹிம்சையா ? குண்டர்கள் கூட நம்முடைய நம்பிக்கையிலிருந்து நம்மை வழுவச் செய்து, "அவசியமானல் நாங்கள் அவர்களைத் தூக்குமேடைக்கு அனுப்புவோம் அல்லது சுட்டுத்தள்ளுவோம்" என்று நாம் கூறுமாறு செய்திருக்கக்கூடாது. அவர்களும் நம்முடைய நாட்டு மக்களே. அவர்கள் நம்மைக் கொல்வதானல், அவ்வாறு செய்ய நாம் அனுமதிக்கவேண்டும். திட்டமிட்ட இம்சையை எதிர்த்துப் பலவீனமானவர்களின் அஹிம்சை போராட முடியாது; மிகச் சிறந்த தைரியசாலிகளின் அஹிம்சை மட்டுந்தான் போராடமுடியும்.[3]

## ஆயிரம் பேர் தடுத்தால் ?

காங்கிரஸ் பதிவுப் புத்தகத்தில் ஆயிரக்கணக்கான உறுப்பினர்களின் பெயர்கள் இருக்கின்றன... அவர்கள் காங்கிரஸ் உறுப்பினர்களாகும்போது கையெழுத்திடுகிருர்களே அந்த அச்சடித்த தாளில் கூறப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை அவர்கள் அறிவார்களா ?... எங்கெல்லாம் இந்த உறுப்பினர்கள் உண்மையானவர்களாய் இருக்கிருர்களோ அங்கு கலவரங்களை அடக்குவதற்கு அவர்களுடைய பங்கை ஆற்றுமாறு மாகாண காங்கிரஸ் குழு கேட்டதா? நாம் ஏன் அவர்களை அழைக்கக் கூடாது? அவ்வாறு நாம் அழைக்கும்போது, ஒரு பத்தாயிரம்

பேரில் எத்தனை ஆயிரம்பேர் அந்த அழைப்பிற்குச் செவிமடுப்பார்கள்? அவர்களில் ஒரு ஐந்தாயிரம் பேர்—ஏன், ஒரு ஆயிரம் பேர் கூட—அந்த வேண்டுகோளை ஏற்றுச் சண்டையிடும் இரு பிரிவினருக்கிடையே நின்ருல், அவர்களில் சிலருடைய தலைகள் உடையத்தான் செய்யும் என்ருலும் அந்தத் தலைகள் தான் கடைசியாக இருக்கும். அதற்குமேல் புதிதாக எந்தத் தலைகளும் உடையமாட்டா. ஆகவே இந்தக் கோட்பாட்டினுல் ஏற்படும் பலன்களை நாம் உணரவேண்டும்.

### உண்மையான காங்கிரஸ்காரர்

ஒரு உண்மையான காங்கிரஸ்காரர் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் போலீஸ் உதவியையும் இராணுவத்தின் உதவியையும் தேட விரும்பாதவராக இருக்கவேண்டும். ஆனல் நாம் அவ்வாறு தேடித்தானுகவேண்டும் என்ருல், நம்முடைய அஹிம்சை பலவீனமானவர்களின் அஹிம்சை என்ருல், நாம் சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் அஹிம்சா பூர்வமானவர்கள் என்று உலகம் நம்புமாறு செய்வதைக் காட்டிலும் நம்முடைய கோட்பாட்டையே மாற்றிக் கொள்வது எவ்வளவோ நல்லது.'

## அத்தியாயம் 69

# சட்டபூர்வமான உரிமை

### சட்டபூர்வமான உரிமை என்ன?

சட்டப்படியான உரிமை என்பது குற்றங்கள் புரிவதற்கான உரிமையல்ல. சட்டமும் ஒழுங்கும் மக்களுடைய கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும்போது, அத்துறையை நிருவகிக்கும் அமைச்சர்கள் மக்களுடைய விருப்பத்திற்கு முரணுக நடந்தால் ஒரு நிமிடங்கூட நீடிக்கமுடியாது. போதுமான அளவு, மக்கள் எல்லோருடைய பிரதிநிதித்துவத்தையும் சட்டசபைகள் பெறவில்லை என்பது உண்மையே. எனினும் சட்டம், ஒழுங்கு ஆகிய இரண்டிலுமே அவை நாட்டின் பிரதிநிதிகளாக இருக்கும் அளவுக்கு வாக்குரிமை விரிவானதாகவே இருக்கிறது. ஏழு மாநிலங்களில் காங்கிரஸ் ஆட்சி நடத்துகிறது. குறைந்தது இந்த மாநிலங்களிலாவது தனிப்பட்ட மனிதர்கள் தாங்கள் விரும்புவதைச் சொல்லலாம், செய்யலாம் என்று சிலர் ஊகித்துக் கொள்வதாகத் தோன்றுகிறது. ஆனால் காங்கிரசின் மனதை நான் அறிந்துள்ள வரை, இப்படிப்பட்ட அனுமதி எதையும் அது அளிக்காது. சட்டபூர்வமான உரிமை என்றால் என்ன? நாட்டின் சாதாரணச் சட்ட வரம்புக்குள் ஒருவன் தான் விரும்பியதைச் செய்யவும் சொல்லவும் முழு உரிமை இருக்கவேண்டும் என்பதுதான். 'சாதாரண' என்ற சொல்லை வேண்டுமென்றே இங்கு நான் பயன்படுத்தியிருக்கிறேன். பீனல் கோடிலும், கிரிமினல் புரசீஜர் கோடிலும்—விசேட அதிகாரச் சட்டத்தைப்பற்றி நான் குறிப்பிடவே வேண்டியதில்லை—சில பிரிவுகள் இருக்கின்றன. வெளிநாட்டு ஆட்சியாளர்கள் தங்களுடைய பாதுகாப்பிற்காக இப்பிரிவுகளை வைத்தனர். இந்தப் பிரிவுகளை எளிதாக அடையாளங் கண்டுவிடலாம்; இவைகளை அமுலில் இல்லாமல் ஒதுக்கிவிடவேண்டும். உண்மையான சோதனை, சட்டம், ஒழுங்கு, அமைச்சர்களின் அதிகாரத்தைப்பற்றிக் காங்கிரஸ் செயற்குழு அளிக்கும் வியாக்கியானத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது. சிவில் உரிமை என்ற பெயரில், சாதாரணமாக சட்ட விரோதமானது என்று கருதப்படும் குழப்பத்தைச் சிலர் தூண்டுகிறார்கள். நான் ஏற்கனவே குறிப்பிட்டது போன்று ஒரு வரம்புக்கு உட்பட்ட

சட்டபூர்வமான அதிகாரங்களை அவர்கள்மீது அமைச்சர்கள் பயன் படுத்த வேண்டும். ஆனால், காங்கிரஸ் அமைச்சர்களுக்கு வழி காட்டுவதற்காகக் காங்கிரஸ் செயற் குழு வகுக்கும் பொது விதி களுக்கு உட்பட்டதாக இது இருக்கவேண்டும்.

### பார்த்துக்கொண்டு இருப்பதா ?

அஹிம்சையைக் கடைப்பிடிப்பதென்று உறுதி பூண்டுள்ள காங்கிரஸ் அமைச்சர்கள், தண்டனையில் முடியக்கூடிய சட்ட பூர்வ நடவடிக்கைகளை எடுக்க முடியாதே என்று கூறப்படுகிறது. காங்கிரஸ் ஏற்றுக்கொண்டுள்ள அஹிம்சையைப்பற்றி எனது கருத்து இதுவல்ல. எண்ணிப்பார்க்க முடிந்த எல்லாச் சந்தர்ப் பங்களிலுமே முற்றிலும் தண்டனைகளோ கட்டுப்பாடுகளோ இல் லாமல் தவிர்க்க, தனிப்பட்டமுறையில் நான் இன்னும் ஒரு வழி யைக் கண்டுபிடிக்கவில்லை. இந்தத் தண்டனைகள் அஹிம்சா பூர்வமானவையாக - இப்படிப்பட்ட ஒரு சொல் இச்சந்தர்ப்பத் திற்கு அனுமதிக்கப்படுவதானால் - இருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. இம்சைக்கென்று அதனுடைய சொந்த முறை இருக் கிறது. அது ராணுவ விஞ்ஞானம் என்று அழைக்கப்படுகிறது. இது இதுவரை கேள்விப்படாத அளவில் அழிவுக் கருவிகளைக் கண்டுபிடித்திருக்கிறது. அதே போன்று அஹிம்சைக்கும் அதனு டைய சொந்த முறையும் விஞ்ஞானமும் இருக்கின்றன. அரசியலில் அஹிம்சை என்பது ஒரு புது ஆயுதம்; அது வளருங் கட்டத்தில் இருக்கிறது. அதனுடைய பரந்த சாத்தியக்கூறுகளை இன்னும் நாம் துருவி ஆராய்ந்து கண்டுபிடிக்கவில்லை. இதை விரிந்த அள வில் பல்வேறு துறைகளில் நிறைவேற்றிப்பார்த்தால்தான் இதன் பலன்களை நாம் கண்டுபிடிக்க முடியும். காங்கிரஸ் அமைச்சர் களுக்கு அஹிம்சையில் நம்பிக்கையிருந்தால், இச்சோதனைகளை மேற்கொள்வார்கள். ஆனால் அவர்கள் இதைச் செய்யும்போது, அல்லது அவர்கள் இதைச் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி, இம்சையைத் தூண்டுவதையோ அல்லது பட்டவர்த்தனமாக இம்சையைத் தூண்டும் பேச்சையோ அவர்கள் அலட்சியம் செய்ய முடியாதென்பதில் ஐயமில்லை. அவர்களே இம்சையைக் கடைப் பிடிப்பதாகப் புகார் ஏற்படும் அபாயமிருந்தாலுங்கூட அவர்கள் இவ்வாறு செய்யமுடியாது. அவர்களை விரும்பாதபோது, பொது மக்கள் தங்களுடைய சம்மதமின்மையைக் குறிப்பாகத் தெரிவிக்க வேண்டியதுதான். காங்கிரசிடமிருந்து திட்டவட்டமான ஆணைகள் இல்லாதபோது, பொதுமக்களில் யாராவது ஒருவர் பலாத்கார மாக நடப்பதாக அமைச்சர்கள் கருதினால், அதை அவர்களுடைய

மாநில காங்கிரஸ் குழுவுக்கோ அல்லது செயற் குழுவுக்கோ தெரிவித்து அவர்களுடைய கட்டளைகளைப் பெறவேண்டும். அவர்களுடைய சிபார்சுகளை மேலிடம் ஏற்க மறுத்துவிட்டால், அவர்கள் பதவியிலிருந்து விலக முன்வரலாம். இராணுவத்தின் உதவியை அழைக்கும் அளவிற்கு காரியங்கள் முற்றிப்போக அவர்கள் அனுமதிக்க வேண்டியதில்லை. இராணுவமானது மக்களைச் சார்ந்ததல்ல. எந்த அஹிம்சைத் திட்டத்திலும் உள்நாட்டு அமைதியைப் பாதுகாக்கும் பொறுப்பு இராணுவத்தினுடையதல்ல. ஆகையால், என்னுடைய கருத்தின்படி யாராவது ஒரு அமைச்சர் இராணுவத்தின் பலத்தை நம்பியிருந்தால் அவ்வாறு அவர் நம்பியிருப்பது அரசியல் ஞான சூன்யமேயாகும்.

இந்தியா சட்டத்திற்கு நான் ஒரு வியாக்கியானம் அளிப்பேன். அஹிம்சையின் சிறப்பையும், அதைக் காங்கிரஸ்காரர்கள் எவ்வாறு மனப்பூர்வமாக உணர்ந்திருக்கிறார்கள் என்பதையும் மெய்ப்பிப்பதற்கு, அறியாமல் விடுக்கப்பட்ட ஒரு அறைகூவலாகும் இது. இதைக் காங்கிரஸ் மெய்ப்பிக்க முடியுமானால், பெரும்பாலான பாதுகாப்புகள் எல்லாம் நடைமுறையில் இல்லாமற்போய் விடும். இம்சைப் போராட்டம் எதுவும் இல்லாமல், ஏன், சட்ட மறுப்பு இல்லாமலுங்கூடக் காங்கிரஸ் தனது குறிக்கோளை அடையமுடியும். மக்களுக்குக் காங்கிரஸ் அஹிம்சை உணர்ச்சியை ஊட்டியிருக்காவிட்டால், அது தன்னுடைய கோட்பாட்டை மாற்றிக்கொண்டாலொழிய, சிறுபான்மைக் கட்சியாய், எதிர்க்கட்சியாய்த்தான் இருக்கவேண்டியிருக்கும்.[1]

## அத்தியாயம் 70

# புயலின் அறிகுறிகள்

### குற்ற பரம்பரையினர்

குழப்ப சக்திகளைக் காங்கிரஸ் கட்டுப்படுத்துவ தென்பது எவ்வளவு உறுதியற்றதாய் இருக்கிறது என்பதை ஷோலாப்பூர் விவகாரமும், கான்பூரிலும் ஆமதாபாத்திலும் ஏற்பட்ட தொழிலாளர் குழப்பமும் எடுத்துக் காண்பிக்கின்றன. குற்ற பரம்பரையினர் என்று கூறப்படும் இனத்தினர் எவ்வாறு இனி நடந்து கொள்வார்கள் என்பது நிச்சயமாகத் தெரிந்தாலொழிய, கடந்த கால நடைமுறையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு முறையில் அவர்களை நடத்தமுடியாது. ஒரே ஒரு மாறுபாடு மட்டும் நிச்சயமாக உடனடியாகச் செய்ய முடியும். பயந்து ஒதுக்கத்தக்க குற்றவாளிகளாக அவர்களை நடத்த வேண்டியதில்லை. அவர்களை நம் சகோதரர்களாக்க, அவர்களைத் தேசிய செல்வாக்கின் கீழ்க் கொண்டுவர முயற்சிகள் செய்யப்படவேண்டும். ஷோலாப்பூர் குடியேற்றப் பகுதியில் உள்ளவர்கள் மத்தியில் சிவப்புக் கொடிக்காரர்கள் (பொதுவுடைமையர்கள்) வேலைசெய்து வந்ததாகக் கூறப்படுகிறது. அவர்கள் காங்கிரஸ்காரர்களா? அப்படியானால், காங்கிரஸ் விரும்பும்போது, காங்கிரஸ்காரர்களான அமைச்சர்களுக்கு ஆதரவாக அவர்கள் இருப்பதாய்க் காணப்படவில்லையே, அது ஏன்? அவர்கள் காங்கிரஸ்காரர்களல்லாவிட்டால், காங்கிரசின் செல்வாக்கையும் பெருமையையும் தகர்க்க அவர்கள் விரும்புகிறார்களா? அவர்கள் காங்கிரஸ்காரர்களல்ல, காங்கிரசின் பெருமையைத் தகர்க்கவே விரும்புகிறார்கள் என்றால், இந்தக் குற்றபரம்பரை இனத்தை அணுகக் காங்கிரஸ்காரர்களால் ஏன் இயலவில்லை? அவர்களுடைய பரம்பரை பலாத்கார இயல்புகளை—இவை உண்மையோ பொய்யோ—தவறுதலாகப் பயன்படுத்துவோர் செய்யும் மிரட்டல்கள் அவர்களிடம் பலிக்காதபடி செய்யக் காங்கிரஸ்காரர்களால் ஏன் முடியவில்லை?

### முழு ஆதரவு அவசியம்

ஆமதாபாத்திலும் கான்பூரிலும் நிரந்தரமான மின்னல் வேலை நிறுத்தங்கள், அங்கீகாரம் பெறாத வேலைநிறுத்தங்கள் ஆகியவை

களின் பயத்தில் நாம் ஏன் வாழவேண்டியிருக்கிறது? ஒரு அமைப்பாக இயங்கும் தொழிலாளர்களைச் சரியான வழியில் திருப்பக் காங்கிரசினால் இயலவில்லையா? காங்கிரஸ் அமைச்சர்கள் பதவி வகிக்கும் மாநிலங்களில் அரசாங்கம் விடுக்கும் அறிக்கைகளை நாம் நம்பாமலிருக்க வேண்டியதில்லை. பொறுப்பற்று முன்பு பதவி வகித்த அரசாங்கங்களின் அறிக்கைகளை நாம் முன்பு குறைத்து மதிப்பிட்டோம். அதைப் போன்று இவர்களுடைய அறிக்கைகளைக் குறைத்து மதிப்பிடவேண்டியதில்லை. காங்கிரஸ் அமைச்சர்கள்மீது நமக்கு அவநம்பிக்கை இருந்தால், அல்லது அவர்கள்மீது மனக்குறை இருந்தால், அவர்களை அப்படியே தள்ளிவிடலாம். ஆனால் அவர்கள் பதவியிலிருக்க அனுமதிக்கப்படும்போது, அவர்களுடைய அறிக்கைகளுக்கும், வேண்டுகோள்களுக்கும் எல்லாக் காங்கிரஸ்காரர்களும் முழுமனதான ஆதரவு அளிக்க வேண்டும்.

### வெளியேறுவது நல்லது

வேறு எந்தவிதமான சூழ்நிலையிலும் காங்கிரஸ்காரர்கள் பதவி வகிப்பது நியாயமாகாது. காங்கிரஸ்காரர்கள் மனப்பூர்வமான முயற்சிகளை மேற்கொண்டும்கூட, போலீஸ் உதவியில்லாமலும் இராணுவத்தின் உதவியில்லாமலும் குழப்ப சக்திகளைக் கட்டுப்படுத்த முடியாவிட்டால், காங்கிரஸ்காரர்கள் பதவிச் சுமையை ஏற்பதில் ஒருவித முக்கியத்துவமும் பொருளும் இல்லாமற் போய்விடுகிறது. எவ்வளவு சீக்கிரம் அமைச்சர்கள் பதவியிலிருந்து வெளியேறுகிறார்களோ அவ்வளவு காங்கிரசுக்கு நல்லது; முழுச் சுதந்திரத்தை அடைவதற்காக அது நடத்தும் போராட்டத்திற்கும் நல்லது என்பது எனது கருத்து.

### அளவுக்கு மீறி எதிர்பார்த்த தவறு

தொழிலாளர்கள், குற்ற பரம்பரையினர் என்று கூறப்படுபவர்கள் ஆகியோர் நிலைமை புரட்சிகரமாக வளர்ச்சி அடையும் என்று அளவுக்கு மீறி எதிர்பார்த்திருந்திருக்கின்றனர். இதன் அறிகுறிகள்தான் ஷோலாப்பூர் குடியிருப்பில் ஏற்பட்ட கிளர்ச்சியும், ஆமதாபாத், கான்பூரில் ஏற்பட்ட தொழிலாளர் குழப்பங்களும் என்பது எனது நம்பிக்கை. அப்போது காங்கிரசுக்குக் குழப்பங்களைக் கட்டுப்படுத்துவதில் எந்தவிதமான இன்னலும் இருக்காது. அதற்கு மாறாக, காங்கிரஸ் கட்டுப்பாட்டில் பலவீனத்திற்கான அறிகுறிகள் தென்பட்டால், காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்றதால் எழுந்துள்ள முழு நிலைமையையும் மீண்டும் ஆராய வேண்டியிருக்கும்.

## தூய்மைப்படுத்துவது அவசியம்

ஒன்று நிச்சயம். காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் பலப்படுத்தவும் தூய்மைப்படுத்தவும் வேண்டியிருக்கிறது. காங்கிரஸ் பதிவேட்டில் ஒரு சில இலட்சக்கணக்கான ஆண், பெண்களுடைய பெயர்கள் இருப்பது மட்டும் போதாது. எந்தக் கோட்பாட்டைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, *18* வயதிற்கு மேற்பட்ட ஒவ்வொரு வயது வந்த ஆண், பெண்ணுடைய பெயரும் இருக்கவேண்டும். தேசியப் போராட்டத்திற்குச் சத்தியத்தையும் அஹிம்சையையும் பயன்படுத்துவது எப்படி என்பதுபற்றிய சரியான பயிற்சியையும் அறிவையும் பெறுவதற்காகவே இவர்கள் பெயர் இப் பட்டியலில் இடம்பெற வேண்டும். இந்நாடு முழுவதற்குமே அரசியல் கல்விக்கு மிகப் பெரிய பள்ளி காங்கிரஸ் தான் என்று எப்போதுமே நான் கருதிவந்திருக்கிறேன். ஆனால் காங்கிரஸ் இந்த இலட்சியத்திலிருந்து வெகு தூரத்தில் இருக்கிறது. காங்கிரஸ் பதிவேடுகள் பொய்யாக மாற்றி எழுதப்படுவதாகவும், எண்ணிக்கையை அதிகமாகக் காண்பிப்பதற்காகப் பெயர்களெல்லாம் சேர்க்கப்படுவதாகவும் நாம் கேள்விப்படுகிறோம். அவ்வாறு பொய்யின்றி உண்மையாகப் பதிவேடுகள் தயாரிக்கப்பட்டிருந்தபோதும், வாக்காளர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள எவ்வித முயற்சியும் செய்யப்படவில்லை.

## கொள்கை உறுதி

ஒரு கேள்வி இயற்கையாக எழுகிறது: சத்தியத்திலும் அஹிம்சையிலும், இடைவிடாத வேலையிலும், கட்டுப்பாட்டிலும், நான்கு அம்ச நிர்மாணத் திட்டத்தின் பலனிலும் நமக்கு உண்மையிலேயே நம்பிக்கை இருக்கிறதா? அவ்வாறு இருந்தால், கடந்த சில மாதங்களாகக் காங்கிரஸ் அமைச்சரவை பணியாற்றியதில், பதவி ஏற்றபோது இருந்ததைவிட இப்போது வெகு அருகே சுதந்திரம் வந்துவிட்டது என்பதை எடுத்துக் காட்டப் போதுமான அளவு நாம் சாதித்திருக்கிறோம். அதற்குப் பதிலாக, நாம் தேர்ந்தெடுத்துக்கொண்ட குறிக்கோள்கள் என்னவென்பதைப்பற்றி நமக்கே நிச்சயம் இல்லாவிட்டால், பதவி ஏற்றதன் மூலம் நாம் ஒரு பெரிய தவறுசெய்து விட்டோமென்பதை என்றாவது ஒரு நாள் திடீரென்று நாம் கண்டுபிடித்து விட்டோமென்றால், அதில் வியப்படைவதற்கு எதுவுமில்லை. பதவி ஏற்கவேண்டுமென்று கூறிய முக்கியமானவர்களில் நான் ஒருவனாக இருந்தேன், அல்லது அவ்வாறு கூறிய முக்கியமானவன் நான்

ஒருவனே. இவ்வாறு கூறியதில், எனது மனச்சாட்சி என்ன வென்பது தெளிவு. மொத்தத்தில் காங்கிரஸ்காரர்கள் எல்லோரும் தங்களுடைய குறிக்கோளில் மட்டுமல்லாது, சத்தியம், அஹிம்சை ஆகிய மார்க்கங்களிலும் தவறுதவர்கள் என்ற நம்பிக்கையிலேயே பதவி ஏற்கலாம் என்ற ஆலோசனையைக் கூறினேன். மார்க்கத்தில் இருக்கவேண்டிய அரசியல் நம்பிக்கை நமக்கு இல்லையேல், பதவி ஏற்பு என்பது நாம் சிக்கிக்கொண்ட ஒரு வலையாக முடியும். [1]

அத்தியாயம் 71

# மாணவர்களும் வேலை நிறுத்தங்களும்

### வேலை நிறுத்தத்தில் பங்கு பெறலாமா?

பெங்களூரைச் சேர்ந்த ஒரு கல்லூரி மாணவர் கீழ்க்கண்ட வாறு எழுதுகிறார்:

"நான் ஹரிஜன் இதழில் உங்களுடைய கட்டுரையைப் படித்திருக்கிறேன். அந்தமான் தினம், அபெட்டாயர் தினம் போன்ற வேலை நிறுத்தங்களில் மாணவர்கள் பங்கு கொள்ளலாமா என்பது குறித்துத் தங்களுடைய கருத்தைத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்."

### வேலை நிறுத்தம் கூடாது

மாணவர்களின் பேச்சு, நடவடிக்கைகள் ஆகியவைமீதுள்ள கட்டுப்பாடுகளை அகற்ற வேண்டுமென்று நான் கூறி வந்துள்ளேன். ஆனாலும் அரசியல் வேலை நிறுத்தங்களையோ, ஆரவாரங்களையோ என்னால் ஆதரிக்க முடியவில்லை. மாணவர்களுக்கு நிறைய பேச்சு, கருத்து சுதந்திரம் இருக்கவேண்டும். அவர்கள் தங்களுக்கு விருப்பமுள்ள எந்த அரசியல் கட்சிக்கும் பகிரங்க அனுதாபிகளாக இருக்கலாம். ஆனால் அவர்கள் படித்துக்கொண்டிருக்கும்போது, நடவடிக்கையில் இறங்கும் சுதந்திரம் இருக்கக் கூடாது என்பது எனது கருத்து. ஒரு மாணவன் தீவிர அரசியல் வாதியாக இருக்கவும், அதே சமயம் படிப்பை மேற்கொள்ளவும் முடியாது. பெரிய தேசிய எழுச்சிகள் ஏற்படும்போது திட்டவட்டமான வரையறைகள் செய்யமுடியாது. அப்போது அவர்கள் செய்வது வேலைநிறுத்தம் அல்ல; அல்லது, அப்படிப் பட்ட சந்தர்ப்பங்களிலும் வேலை நிறுத்தம் என்ற சொல்லைப் பயன் படுத்தலாமென்றால், அது மொத்தமான வேலைநிறுத்தமாக இருக்கும். அது படிப்பு நிறுத்தமாக இருக்கும். ஆகவே எது வெளிக்கு ஒரு விதிவிலக்காகத் தெரிகிறதோ அது உண்மையில் அவ் வாறில்லை.

### காங்கிரஸ் ஆட்சியில் ஏற்படாது

உண்மையில், இந்தக் கடிதத்தை எழுதியவர் கிளப்பியுள்ள பிரச்னை காங்கிரஸ் பதவி வகிக்கும் மாநிலங்களில் எழக்கூடாது.

ஆனால், மாணவர்களின் சிறந்த உள்ளம் மனமார ஏற்றுக்கொள்ளாத கட்டுப்பாடு இருக்கமுடியாது. அவர்களில் பெரும்பாலானவர்கள் காங்கிரஸ் மனோபாவம் பொருந்தியவர்களாக இருக்கிறார்கள்; அவ்வாறுதான் இருக்கவும் வேண்டும். அமைச்சரவைகளுக்குத் தலைவலி ஏற்படுத்தக்கூடிய எதையும் அவர்கள் செய்ய மாட்டார்கள். அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டுமென்று அமைச்சர்கள் விரும்புவதாய் இருந்தால்தான், அவர்கள் வேலை நிறுத்தம் செய்வார்கள். ஆனால், காங்கிரஸ் பதவியில் இல்லாத ஒருகாலத்தைத் தவிர, அரசாங்கத்தை எதிர்த்து நேரடி அஹிம்சைப் போரைத் தொடங்கும் காலத்தைத் தவிர, மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமென்று காங்கிரஸ் அமைச்சர்கள் விரும்பக்கூடிய ஒரு சந்தர்ப்பத்தை என்னால் கற்பனை செய்து பார்க்கவும் முடியவில்லை. அப்போதுகூட, முதல் நடவடிக்கையிலேயே மாணவர்கள் படிப்பை நிறுத்த வேண்டுமென்று அழைப்பது தாங்கள் திவாலானவர்கள் என்பதைக் காங்கிரஸ் அமைச்சர்கள் அறிவிப்பதற்குச் சமமாகவே இருக்கும் என்று நான் எண்ணுகிறேன். வேலை நிறுத்தம் போன்ற ஆர்ப்பாட்டங்களைச் செய்வதில், பொதுவாக மக்கள் காங்கிரசை ஆதரிப்பதாக இருந்தால், கடைசிக் கட்ட நடவடிக்கை எதற்கும் பயன்படுத்திக் கொள்வதற்காகத் தவிர மாணவர்களைத் தனியாக விட்டுவிடலாம். எனக்கு ஞாபகம் உள்ளவரை, கடந்த யுத்தத்தின்போது மாணவர்களை முதலில் அழைக்கவில்லை; அவர்களைக் கடைசியாகத்தான் அழைத்தார்கள். அதிலும் கல்லூரி மாணவர்களையே அழைத்தார்கள்.

**பழைய கட்டுரை**

இந்தக் கடிதத்தை எழுதியவர், செப்டம்பர் 18 ஆம் தேதி வெளியான **ஹரிஜன்** இதழில் ஒரு பள்ளி ஆசிரியர் கடிதத்தின் மீது நான் எழுதியுள்ள குறிப்பை திருப்பித் திருப்பிப் படிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். மாணவர்கள், பள்ளி ஆசிரியர்கள் ஆகியோரின் அரசியல் சுதந்திரம் சம்பந்தமாக என்னுடைய கொள்கை என்னவென்பதை அங்கு காணலாம்.

**அதிகாரிகளும் அரசியலும்**

ஆனால் அது சம்பந்தமாக மற்றொருவர் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:

“ஊதியம் பெறும் அரசாங்க அதிகாரிகளையும் ஆசிரியர்களையும் மற்றவர்களையும் அரசியலில் பங்குகொள்ள அனுமதித்தோமானால், அரசியலே ஒரு நரகமாகிவிடும். அரசாங்கத்தின் கொள்கைகளை நிறைவேற்றி வைக்கவேண்

டியவர்கள் அரசாங்க ஊழியர்களும் அதிகாரிகளும்தான். அரசாங்கக் கொள்கைகளைப்பற்றியே அவர்கள் வாக்குவாதம் செய்வதாக ஆய்விட்டால் எந்த அரசாங்கத்தையும் நடத்தமுடியாது. நாட்டுப் பற்றை யொட்டிய நமது தேசிய நம்பிக்கைகளும் விருப்பங்களும் கருத்துக்களும் சுதந்திரமாகச் செயல்பட வேண்டுமென்று நீங்கள் விரும்புவது சரிதான் என்பதில் ஐயமே இல்லை. ஆனால் உங்களுடைய நிலையை நன்கு தெளிவுபடுத்தாவிட்டால் உங்களுடைய கட்டுரை தவருன கருத்துக்கு இடமளிக்கலாம் என்று நான் அஞ்சுகிறேன்."

## மோதல் இராது

என்னுடைய நிலை தெளிவானதென்றே நான் எண்ணியிருந்தேன். எங்கே தேசிய அரசாங்கம் இருக்கிறதோ அங்கே அதற்கும், அதனுடைய அதிகாரிகள் அல்லது மாணவர்களுக்கும் எந்த மோதலும் இருப்பது அபூர்வம். ஆனால் கட்டுப்பாட்டுக்கு விரோதமான எல்லாச் செயல்கள் குறித்தும் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்று என்னுடைய குறிப்பு கூறுகிறது. உளவு வேலை குறித்தும் சுதந்திரமான சிந்தனையை அடக்கிவைப்பது குறித்தும்—இதுவரை இதுவே பழக்கமாக இருந்து வந்திருக்கிறது—அப்பள்ளி ஆசிரியர் வருந்துகிறூர். இது சரியுங்கூட. காங்கிரஸ் அமைச்சர்களும் மக்களிலிருந்து வந்தவர்களே, மக்களைச்சார்ந்தவர்களே. அவர்களிடம் இரகசியம் எதுவுமில்லை. மாணவர் மனது உள்பட ஒவ்வொரு பொது நடவடிக்கையிலும் அவர்கள் நேரடித் தொடர்பு வைத்திருக்க வேண்டுமென எதிர்பார்க்கப் படுகிறூர்கள். அவர்கள் உதவிக்குக் காங்கிரஸ் இயந்திரம் முழுவதுமே இருக்கிறது. மக்களுடைய விருப்பத்தைக் காட்டும் கருவி அதுதான். அந்த முறையில் சட்டத்தையும் போலீசையும் இராணுவத்தையும் விட அதுவே பெரியது. இந்த இயந்திரம் யாருக்கு ஆதரவாக இல்லையோ அவர்கள் மருந்தில்லாத துப்பாக்கிகளாவர். ஆனால் காங்கிரசின் ஆதரவைப்பெற்ற அமைச்சர்களுக்கு சட்டமும் போலீசும் இராணுவமும் ஒரு பயனற்ற சேர்க்கை தான். காங்கிரசோ கட்டுப்பாட்டின் சின்னமாக இராவிட்டால், ஒன்றுமே இல்லை. ஆகையால், காங்கிரஸ் பதவியில் இருக்கும் போது, எல்லா இடங்களிலுமே கட்டாயப்படுத்தப்படாது மக்கள் தாமாகவே கட்டுப்பாடாக நடந்துகொள்ள வேண்டும்.[1]

## அத்தியாயம் 72

# அது மறியலா ?

'அமைதியான மறியல் என்ற பெயரில், இம்சையில் போய் முடியக்கூடிய முறைகளை மறியல் செய்பவர்கள் கடைப்பிடிக்கிறார்கள். உதாரணமாக, அவர்கள் ஒரு தடுப்புச் சுவர்போல் சேர்ந்து நின்று கொள்கிறார்கள். அப்போது, அவர்களைக் காயப் படுத்தாமலோ அல்லது தாங்கள் காயப்படாமலோ யாரும் உள்ளே செல்ல முடியாது' என்று ஒரு புகார் கூறப்படுகிறது. அமைதியான மறியலின் கர்த்தா என்ற முறையில், இப்படிப்பட்ட மறியலை நான் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் ஊக்குவித்ததாக எனக்கு ஞாபகமே இல்லை. தரசனா நிகழ்ச்சியை ஒரு நண்பர் எனக்கு எதிராக உதாரணங்காட்டியுள்ளார். உப்பளங்களை ஆக்கிரமிக்குமாறு நான் யோசனை கூறியிருந்தேன். ஆனால் இது தற்போது நமது பரிசீலனையில் உள்ள நிகழ்ச்சிக்கு முற்றிலும் பொருந்தாது. தரசனாவில் நம்முடைய இலட்சியமே உப்பளந் தான்; அரசாங்கத்திற்கு எதிராக அதை ஆக்கிரமித்து, அதை நாம் நிருவகிக்க வேண்டுமென்பது. அதை மறியல் என்றே சொல்லமுடியாது. ஆனால் தொழிலாளர்கள் முன்னால் நின்று கொண்டு அவர்கள் தங்கள் வேலைகளுக்குச் செல்லாது தடுப்பது நூற்றுக்கு நூறு இம்சையே. அதை விட்டுவிட வேண்டும். ஆலைகள் அல்லது மற்றத் தொழிற்சாலைகளின் சொந்தக்காரர்கள் போலீசாரின் உதவியை நாட முற்றிலும் நியாயம் உண்டு. சம்பந் தப்பட்ட காங்கிரஸ்காரர்கள் மட்டும் எதிர்க்காமல் இருப்பார்களானால், ஒரு காங்கிரஸ் அரசாங்கம் இந்த உதவியை அளித்துத் தான் ஆகவேண்டும்.[1]

**முரணான யோசனை ?**

பலாத்கார மறியல் என்று நான் விவரித்துள்ளவற்றை எதிர்த்துப் போலீசாரின் உதவியைத் தொழிற்சாலைகளின் சொந் தக்காரர்கள் நாடலாம் என்று நான் கூறியிருந்தேன். இந்த அறிவுரை 'என்னுடைய முன்னுக்குப் பின் முரணுக்கு மற்றொரு உதாரணம்' என்று கூறப்படுகிறது. "கலவரங்களை அடக்குவதற்குப் போலீசாரின் உதவியை, ஏன், இராணுவத்தின் உதவியைக்கூட அழைப்பதற்காக நீங்கள் அமைச்சர்களைக் கண்டித்திருக்கிறீர்கள்;

அப்படியிருக்கப் போலீசாரின் உதவியைக் கேட்குமாறு தொழிற்சாலை அதிபர்களுக்கும், அதை அளிக்குமாறு அமைச்சர்களுக்கும் நீங்கள் எவ்வாறு அறிவுரை கூறமுடியும்?" என்று என்னைக் குறை கூறுபவர்கள் கேட்கிறார்கள்.

**நான் எழுதியதென்ன ?**

உத்தரப் பிரதேசத்தில் அமைச்சர்கள் நடவடிக்கை குறித்து 'ஹரிஜன்' இதழில் நான் எழுதியது இதுதான்:

நமக்குச் சுதந்திரம் கிடைக்கும்போது, கலவரங்களும் மற்றும் அதைப் போன்றவைகளும் நிகழமாட்டா என்று கூறப்படுகிறது. விடுதலைப் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் காலத்தில், முடிந்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அஹிம்சை நடவடிக்கை முறையைப் புரிந்து நாம் பயன்படுத்த வேண்டும். இல்லையேல் இது வீண் நம்பிக்கையாகிவிடும் என்றே எனக்குத் தோன்றுகிறது. காங்கிரஸ் அமைச்சர்கள் எந்த அளவுக்குப் போலீசையும் இராணுவத்தையும் பயன்படுத்துகிறார்களோ அந்த அளவுக்கு நாம் நமது தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான் என்று நான் கருதுகிறேன். அமைச்சர்கள் வேறு எதுவும் செய்திருக்க முடியாது என்பது தீவினைப் பயனாக மிகவும் உண்மையே. ஆகவே ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், காங்கிரஸ் செயற் குழுவும், நான் எண்ணுவது போன்றே நாம் தோல்வியடைந்து விட்டோம் என்று எண்ணுவதாக இருந்தால், "நாம் ஏன் தோல்வியடைந்துவிட்டோம்?" என்ற கேள்வியைத் தங்களுக்குத் தாங்களே கேட்டுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

**இன்றைய நிலையில் அவசியமே**

நிச்சயமாக, அமைச்சர்களின் நடவடிக்கைக்கு இங்கு கண்டனம் எதுவும் தெரிவிக்கப்படவில்லை. போலீசையும் இராணுவத்தையும் பயன்படுத்துவதற்கான அவசியம் நேர்ந்திருக்கிறதே என்றுதான் நான் வருந்தியிருக்கிறேன். மறியலுக்கு அவசியம் நேர்ந்திருக்கிறதே என்று எவ்வாறு நான் வருந்துவேனோ அவ்வாறு வருந்தியிருக்கிறேன். ஆனால், பலாத்கார நிகழ்ச்சிகளைச் சமாளிக்க அமைதி முறை ஒன்றைக் காங்கிரஸ் உருவாக்கும்வரை, அமைச்சர்களுடைய தற்போதையப் பதவிக் கட்டத்தில் நாட்டு நிருவாகத்தை நடத்துவதாக இருந்தால்—அவர்கள் போலீசையும், ஏன், இராணுவத்தைக்கூடப் பயன் படுத்தித்தானாக வேண்டும். ஆனால், போலீசும் இராணுவமும் இல்லாது செயல்படக்கூடிய வகைகளை அவர்கள் கண்டுபிடிக்காவிட்டால், அல்லது குறைந்தது

யாரும் மேல்வாரியாகப் பார்த்தாலும் கண்டுபிடிக்கக் கூடியவாறு கணிசமாக அவைகளின் அளவைக் குறைப்பதற்கான மார்க்கங்களைக் கண்டுபிடிக்காவிட்டால், அவர்களுக்கும் நாட்டிற்கும் அது கெட்டகாலந்தான்.[2]

## அமைச்சர்களை அனுமதியுங்கள்

இப்போது மறியலுக்கு வருவோம். இளைஞர்கள், ஏன், வயதானவர்கள்கூட, வீடுகளையும் அலுவலகங்களையும் தாக்குவதும் மிகுந்த கஷ்டத்திற்கு மத்தியில் தங்களுடைய பொறுப்பைச் சுமந்துகொண்டிருப்பவர்களுக்கு எதிராகப் பழிச்சொல் கூறுவதும் பொறுக்க முடியாததாகும். சத்தியாக்கிரகத்தின் அடிப்படையில் அதற்குச் சரியான மார்க்கத்தை நாம் கண்டுபிடித்தாலொழிய, தங்களுக்கு எது சிறந்தது என்று தெரிகிறதோ அந்த வழியில் இப்படிப்பட்ட செயல்களை அமைச்சர்கள் சமாளிக்க நாம் அனுமதித்துவிட வேண்டும். அவ்வாறு அவர்களை அனுமதியாவிட்டால், காங்கிரஸ் ஆட்சியின்கீழ்ச் சாத்தியமான சுதந்திரம் படிப்படியாக இழிந்து, நூற்றுக்கு நூறு சுத்தமான 'குண்டாயிச' மாகிவிடும். அது மேம்பாட்டிற்கு வழியல்ல; அழிவுக்குத்தான் சுலபமான வழி. அமைச்சர் என்ற பதவிக்குத் தகுந்தவர், நாட்டின் அழிவுக்குத் தாம் காரணமாக இருக்க உறுதியாக மறுத்துவிடுவார்.[3]

அத்தியாயம் 73

# அமைச்சரவையும் இராணுவமும்

## கிடைத்த வழியே பாதுகாப்பு வழி

தற்போதுள்ள மாகாண சுயாட்சியை சட்ட மறுப்பின் மூலந் தான் நாம் பெற்றிருக்கிறோம்—அந்தச் சட்டமறுப்பு எவ்வளவு தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்ததாக இருந்தாலும் சரி. ஆனால் போலீஸ், இராணுவம் ஆகியவற்றின் உதவி இல்லாமல் காங்கிரஸ் அமைச்சர்கள் ஆட்சி நடத்த முடியவில்லையென்றால் அது தகர்ந்து போய்விடலாம் என்பது உணரப்படவில்லையா? அஹிம்சா மார்க்கத்தின்மூலம் அரைகுறையான சுயாட்சி கிடைத்தது என்றால், அதே மார்க்கத்தின் மூலந்தான் அதை நிலைநிறுத்தவும் வேண்டும். வேறு வழியே இல்லை. அண்மைக்கால அனுபவங்களிலிருந்து, அஹிம்சா மார்க்கத்தின் மூலமாக அதிகாரத்தை வைத்திருக்க நாடு தயாராய் இல்லை என்பது தெளிவாகத் தோன்றுகிறது. கடந்த இருபது ஆண்டுகள் மாபெரும் மக்கள் எழுச்சி ஏற்பட்ட காலமாகும். இந்தக் காலத்தின்போது, கல், தடி உள்பட மக்கள் எந்த ஆயுதத்தையும் நாடக்கூடாது என்றும் சுத்தமான அஹிம்சையையே நம்பியிருக்க வேண்டுமென்றும் மக்களுக்குக் கற்பிக்கப்பட்டு வந்திருக்கிறது. அப்படியிருந்தும் மக்களுடைய பலாத்காரத்தை—அது உண்மையாக இருந்தாலும் சரி, கற்பனையாக இருந்தாலும் சரி—அடக்குவதற்காக காங்கிரஸ் அமைச்சரவைகள் இம்சையைக் கடைப்பிடிக்க நேர்ந்தது என்பதை நாம் அறிவோம்...... நம்முடைய அஹிம்சை வலுவற்றவர்களுடைய அஹிம்சையா? [1]

## அத்தியாயம் 74

# காங்கிரஸ் அமைச்சர்களும் அஹிம்சையும்

### முன்னுக்குப் பின் முரண்

திரு சங்கராவ் தேவ் எழுதுகிறர் :

"சத்தியாக்கிரகிகள் என்று தங்களைக் கூறிக்கொள்பவர்கள், தாங்கள் அரசாங்கத்தில் அமைச்சர்களானவுடனேயே இராணுவம், போலீஸ் ஆகியவற்றின் உதவியை ஏன் நாடுகின்றனர் என்பதைப் பலரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அஹிம்சைக் கொள்கை, கோட்பாடு ஆகிய இரண்டிற்குமே இது விரோதமானது என்று மக்கள் கருதுகின்றனர். இவ்வாறு மக்கள் நம்புவது பகுத்தறிவுக்கு ஏற்றதாகவும் இருக்கிறது. காங்கிரஸ் அமைச்சர்களின் நம்பிக்கைக்கும் நடவடிக்கைக்கும் இடையே உள்ள முரண்பாடு, அதை அவர்களுடைய எதிரிகள்—காங்கிரஸ்காரர்கள், காங்கிரஸ்காரர்கள் அல்லாதார் ஆகிய இரு சார்பினருமே—தவறான முறையில் பயன்படுத்திக்கொள்வது ஆகியவற்றால் நம் ஊழியர்கள் இந்தக் குற்றச்சாட்டை எதிர்த்து நிற்பது கடினமாக இருக்கிறது.

### முயன்றாலும் முடியாது

"பொதுவாகக் கூறப்போனால், காங்கிரஸ் அஹிம்சை பலவீனமானவர்களின் அஹிம்சையே. நாட்டின் தற்போதைய வளர்ச்சியில் அது அவ்வாறு தான் இருக்க முடியும். இந்த உண்மையை நீங்கள் நன்கு அறிவீர்கள். பலவான்களின் அஹிம்சையில் ஒரு தனிச் சக்தி இருப்பதாக நீங்கள் உரிமை கொண்டாடுகிறீர்கள். அதே சமயம் நீங்கள் பலவீனர்களின் தலைமையை ஏற்றுக்கொண்டீர்கள். அஹிம்சையைப் பயன்படுத்தி அவர்கள் பலவான்களாக ஆகுமாறுசெய்ய நீங்கள் இவ்வாறு ஏற்றுக்கொண்டீர்கள். அவர்களிடம் பலவீனம் இருந்துங்கூட, அரசாங்க அதிகாரம் அவர்கள் கைக்கு வந்துவிட்டது. இன்று போலீஸ், இராணுவம் ஆகியவற்றின் உதவியில்லாமல் கலவரங்களை அடக்க அவர்களால் முடிவதில்லை. அவ்வாறு செய்ய அவர்கள் முயன்றாலோ, அவர்கள் வெற்றிபெற மாட்டார்கள் என்பது மட்டுமல்லாது, மக்களுடைய ஒத்துழைப்பும் கிடைக்காது.

### அஹிம்சாவாதி பதவி ஏற்க முடியாது

"ஒரு சத்தியாக்கிரகிக்குத் தற்செயலாக உயர்ந்த பதவி கிடைத்தால் அதை அவர் வகிக்கலாமா? அவ்வாறு அவர் பதவி வகித்தால், எவ்வாறு அஹிம்சையை வளர்ப்பது? என்று ஒருசமயம் நான் உங்களைக் கேட்டேன். அஹிம்சையைத் தம்முடைய கோட்பாடாகக் கொண்டவர் பதவி ஏற்கக் கூடாது. அவர் அங்கு ஒருபோதும் மகிழ்ச்சியுடன் இருக்கமுடியாது என்பது

எனது கருத்து. ஆனால் அஹிம்சையை ஒரு கொள்கையாக மட்டும் ஏற்றுக் கொண்டவர்களுக்கு அப்படிப்பட்ட இன்னல் எதுவும் இருக்கமுடியாது. அநேக காங்கிரஸ்காரர்கள் பதவியை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். நீங் களும் அதற்கு அனுமதி அளித்திருக்கிறீர்கள். அஹிம்சையில் நம்பிக்கையுள்ள வர்கள் தனிப்பட்ட முறையிலாவது கலவரங்களின்போது அதன்படி செயல் பட வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்க முடியுமா என்ற கேள்வி எழு கிறது. மேலும் அஹிம்சையால் பலத்தை அடைந்த பின்பு, மிகக் குறைந்த அளவு அதிகாரம் மட்டும் தேவையாக இருக்கும் ஒரு அரசை அமைப்ப தற்கு, அந்த அஹிம்சையை எவ்வாறு பயன்படுத்துவது? நாம் விரும்பும் இலட்சியத்தை அடைவதற்கான பாதையை நீங்கள் காண்பிக்காவிட்டால், சத்தியாக்கிரகம் எல்லாச் சக்திகளும் பொருந்திய ஓர் ஆயுதம் என்று கருதப் படமாட்டாது.''

## மக்கள் விரும்பும் வரை

என்னுடைய கண்ணோட்டத்தில் இதற்குப் பதில் கூறுவது எளிது. காங்கிரஸ் விதி அமைப்பிலிருந்து சத்தியம், அஹிம்சை ஆகிய இரண்டு சொற்களையும் எடுத்துவிட வேண்டுமென்று சிறிது காலமாகவே நான் கூறி வருகிறேன். அவை உண்மையில் அகற்றப்பட்டு விட்டனவோ, இல்லையோ, அவை அகற்றப்பட்டு விட்டதாகவே நாம் கொள்வோம். அப்போது ஒரு நடவடிக்கை சரியா, தவறா என்ற தீர்ப்புக்குச் சுதந்திரமாக நாம் வரமுடியும். உள்நாட்டு அமைதியைப் பாதுகாப்பதற்கு இராணுவத்தை—ஏன், போலீசைக்கூட—நாம் நாடும் வரை, நாம் பிரிட்டனுடைய அடிமைகளாகவோ அல்லது வேறு ஏதாவது ஒரு நாட்டின் அடிமை களாகவோதான் இருக்க நேரும் என்று எனக்கு உறுதியாகத் தோன்றுகிறது. அப்போது அரசாங்கம் காங்கிரசின் கையில் இருக்கிறதா அல்லது காங்கிரஸ் அல்லாதார் கையில் இருக் கிறதா என்பது முக்கியமல்ல. காங்கிரஸ் அமைச்சர்கள் அஹிம் சையில் உறுதிபூண்டவர்களாய் இல்லை என்று வைத்துக்கொள் வோம். இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் மற்றவர்களுக்கும் இராணுவ, போலீஸ் பாதுகாப்புத் தேவை என்றும் வைத்துக் கொள்வோம். அவர்கள் அதைத் தொடர்ந்து பெறுவார்கள். அஹிம்சையில் உறுதியாகவுள்ள அமைச்சர்கள் பதவியிலிருந்து விலகவேண்டும். ஏனெனில், இராணுவத்தையும் போலீசையும் பயன்படுத்துவதை அவர்கள் எதிர்ப்பார்கள். இவைகளெல்லா வற்றிலும் உள்ள முக்கியமான சாரம் என்னவென்றால், பரஸ்பர நல்லுறவு கொள்வதற்கான விவேகம் நம்முடைய மக்களுக்கு வராதவரை, 'குண்டாயிசம்' தொடர்ந்து இருக்கத்தான் செய்யும். நமக்குள் உண்மையான அஹிம்சையின் பலத்தை உருவாக்க முடியாது.

## அஹிம்சையின் பலம்

இந்த அஹிம்சையின் பலத்தை எவ்வாறு உருவாக்க முடியும் என்பதை இப்போது பார்ப்போம். ஆமதாபாத்திலிருந்து வந்த ஒரு கடிதத்திற்குப் பதில் அளிக்கும் முறையில், ஆகஸ்ட் 4 ஆம் தேதி **ஹரிஜன்** இதழில் இக்கேள்விக்கு நான் பதில் அளித்திருந்தேன். உள்ளத்தில் அன்புடனும் தைரியத்துடனும் சாகும் பலத்தை நாம் வளர்த்துக்கொள்ளாத வரை, பலவான்களின் அஹிம்சையை நாம் வளர்ப்பதுபற்றி எண்ணவே முடியாது.

## இலட்சிய சமுதாயம்

ஒரு இலட்சிய சமுதாயத்தில் ஏதாவது அரசாங்கம் இருக்க வேண்டுமா, கூடாதா என்ற கேள்வி இருக்கவே இருக்கிறது. தற்போதைக்கு இக்கேள்வியைப் போட்டு நாம் அலட்டிக் கொள்ள வேண்டியதில்லையென்று நான் எண்ணுகிறேன். இப்படிப்பட்ட சமுதாயத்திற்காக நாம் தொடர்ந்து பணியாற்றினல், மக்கள் அதனல் அனுகூலம் பெறக்கூடிய அளவுக்கு அது படிப் படியாக உருவாகும். யூக்லிட் சித்தாந்தப்படி ஒரு கோட்டிற்கு அகலமே இல்லை. ஆனல் இவ்வாறு அகலம் இல்லாத கோட்டை இதுவரை யாரும் வரைய முடிந்ததில்லை; இனிமேல் ஒருபோதும் வரையப்போவதும் இல்லை. அப்படியிருந்தும் இந்த இலட்சியக் கோட்டை மனதிற்கொண்டுதான், நாம் பூகோளத்தில் முன்னேறியிருக்கிறோம். இதில் எது உண்மையோ அதுதான் ஒவ்வொரு இலட்சியத்திலும் உண்மையாகும்.

## இந்தியாவில்தான் முடியும்

உலகில் எங்குமே அரசாங்கம் இல்லாத நாடு இல்லை என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். அப்படி ஏதாவது ஒரு சமுதாயம் அமையவேண்டுமென்றால், அது இந்தியாவில்தான் இருக்கும். ஏனென்றால், நம்முடைய நாடு ஒன்றில்தான் இப்படிப் பட்ட ஒரு முயற்சியாவது செய்யப்பட்டிருக்கிறது. இதற்குத் தேவையான அளவு தைரியத்தைக் காண்பிக்க நம்மால் முடியவில்லை. இதை அடைவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. இதில் நம்பிக்கை உள்ளவர்கள், அதைச் செயலில் மெய்ப்பித்துக் காண்பிக்கவேண்டும். இதைச் செய்வதற்கு, நாம் சிறைச்சாலைகளைப் பற்றிய அச்சத்தை முன்பு எவ்வாறு கைவிட்டோமோ அதே போன்று மரண பயத்தையும் பூரணமாக விட்டுவிடவேண்டும்.[1]

## அத்தியாயம் 75

# மேலேயிருந்து வீழ்ச்சி

### கொல்லாமல் சாகும் கலை

சர்தார் வல்லபாய் பட்டேலை அளித்த பெருமை படைத்த ஆமதாபாத்—இந்நகர சபைக்கு அவர் சிறந்த சேவை செய்திருக்கிறார்—உயர்ந்த நிலையிலிருந்து கீழே விழுந்துவிட்டது. எப்போதுமே அங்கு இந்துக்களும் முஸ்லிம்களும் அமைதியாகச் சேர்ந்து வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் அண்மைக் காலத்தில் அந்நகர மக்களைப் பைத்தியம் பிடித்து ஆட்டுவதுபோல் தோன்றுகிறது. அது காந்திஜியின் மனதைப் பெரும் வேதனைக்குள்ளாக்கியிருக்கிறது. "ஆமதாபாத்தைச் சேர்ந்த இந்துக்களும் முஸ்லிம்களும் மனிதத் தன்மையையே இழந்துவிட்டனர்போல் தோன்றுகிறது" என்று தமது பிரார்த்தனைச் சொற்பொழிவு ஒன்றில் அவர் கூறினார். அவர் மேலுங் கூறினார்: "ஆமதாபாத்தில் ஏற்பட்ட சாவுகளெல்லாம் கத்திக்குத்து போன்றவைகளால் ஏற்பட்டவை அல்ல. ஒருவர் கழுத்தில் மற்றொருவர் குத்தாமல் தடுப்பதற்காக, போலீசாரின் உதவியை அவர்கள் நாடவேண்டி யிருந்தது வெட்கக் கேடானதாகும். ஒரு தரப்பினர் திருப்பித்தாக்காமலிருந்தால், கலவரங்கள் நடைபெற்றிருக்கமாட்டா. இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கான மக்களில் ஒரு சில இலட்சம்பேர் கூடச் சரியான காரணத்திற்காகக் கொல்லப்பட்டால் அதனால் என்ன நட்டம்? திருப்பிக் கொல்லாமல் சாகும் கலையை மட்டும் நாம் கற்றுக்கொண்டால். இந்தியா—வரலாற்றிலும் புராணங்களிலும் கர்மபூமி என்று புகழப்படும் இந்தியா—ஒரு உண்மையான ஈடனாகைு—பூலோகத்தில் உள்ள சொர்க்கமாக ஆய்விடும்.

### மொரார்ஜிக்கு யோசனை

"ஆமதாபாத்திற்கு திரு மொரார்ஜி தேசாய் புறப்படுமுன் என்னைப் பார்த்தார். 'போலீஸ் அல்லது இராணுவத்தின் பாதுகாப்பு இல்லாமல், கடவுளின் ஒரே பாதுகாப்புடன் இத்தீயை அணைப்பதற்கு நீங்கள் செல்லவேண்டும்' என்று நான் அவரிடம் கூறினேன். அவசியமானால், காலஞ்சென்ற கணேஷ் சங்கர் வித்தியார்த்தியைப் போன்று, இத்தீயை அணைக்கும் முயற்சியில் நீங்கள் அழியவும் தயாரா யிருக்கவேண்டும் என்றேன். ஆமதா

பாத்தில் நடைபெற்ற ஒரு கூட்டு மாநாட்டில் வந்து கலந்து கொள்ளுமாறு இந்துக்கள், முஸ்லிம்கள், மற்றவர்கள் ஆகியோரின் பிரதிநிதிகளைத் திரு மொரார்ஜி அழைத்திருந்தார். அவர்கள் விரும்புவதானால் போலீசையும் இராணுவத்தையும் வாபஸ் பெறத் தாம் தயாராய் இருப்பதாக அவர் அறிவித்தார். ஆனால் அவர்கள் எல்லோரும் ஒருமனதாக, இதனால் வரக்கூடிய அபாயத்தை ஏற் கத் தாங்கள் தயாராய் இல்லை என்று கூறிவிட்டனர். இதனு டைய முடிவு என்னவென்றால், போலீசும் இராணுவமும் அங்கேயே இருந்தது.''

''கலவரங்கள் நடைபெறாது தவிர்க்கப்பட்டன. ஆனால் இன்று ஆமதாபாத்தில் காணப்படும் அமைதி சுடுகாட்டு அமைதிதான்,'' என்று காந்திஜி வருத்தத்தோடு கூறினார். அவர் மேலும் சொன்னார் :

**போலீஸ் உதவியை நாடும்வரை**

''யாரும் பெருமைப்படத்தக்க அமைதி அங்கு இல்லை. இந் துக்களும் முஸ்லிம்களும் ஒன்றாக இணைந்து, அவர்கள் ஒருவரை யொருவர் சண்டையிடாமல் தடுப்பதற்குப் போலீஸ், இராணுவ உதவியை நாடாமல் இருப்பதை நான் எவ்வளவோ ஆவலுடன் விரும்புகிறேன். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டப் போலீஸ், இராணுவ உதவியை நீங்கள் சார்ந்திருக்கும்வரை உண்மையான சுதந்திரம் என்பது வெறுங் கனவாகத்தான் இருக்க முடியும் என எச்சரிக்கிறேன்.''

பகுதி பன்னிரண்டு

# கவர்னர்கள், அமைச்சர்கள் பொறுப்பு

## அத்தியாயம் 76

## யார் மாநில கவர்னர்களாக இருக்க வேண்டும்?

### கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டவர்

முதல்வர் ஸ்ரீமன் நாராயண் அகர்வால் வார்தாவிலிருந்து இந்துஸ்தானியில் எழுதியுள்ள கடிதத்தின் கருத்து மொழிபெயர்த்துக் கீழேதரப் படுகிறது :

"தற்போது அரசியல் நிர்ணய சபை வகுத்துக்கொண்டிருக்கும் அரசியல் சட்டத்தில், வயது வந்தோர்க்கு வாக்குரிமை அளிப்பது என்ற முறையின் கீழ் பெரும்பாலான வாக்காளர்கள் மாநில கவர்னர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான பிரிவு இருக்கப் போகிறது. இதிலிருந்து பொதுவாக நாம் ஊகிக்க இடமுள்ளது என்னவென்ருல், காங்கிரஸ் பாராளுமன்றக் குழு யாரை பிரேரேபிக்கிறதோ அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மாநில முதலமைச்சரும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவராக இருப்பார். ஆகவே, மாகாண கவர்னரானவர், அம் மாகாணக் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டவராய் இருக்க வேண்டும் ; முதலமைச்சரின் செல்வாக்கிற்கு அனுவசியமாக உட்படாதவராக அல்லது முதலமைச்சருடன் எவ்வித மோதலுக்கும் அப்பாற்பட்டவராக இருக்கவேண்டும். இதுதான் பகுத்தறிவு.

### ரூ. 5500 மீதம்

"கவர்னருக்கே அவசியமில்லையென்பது எனது கருத்து. அவருடைய இடத்தை முதலமைச்சர் ஏற்கவேண்டும். கவர்னரின் பணி மிக்க ஊதியம் உள்ளது. இதனுல், அதற்கு மாதந்தோறும் அளிக்கப்படும் மக்களின் பணமாகிய ரூ. 5500 மீதமாகும். எப்படியும், எந்த மாநில கவர்னரும் தமது சொந்த மாகாணத்தைச் சேர்ந்தவராக இருக்கக்கூடாது.

### குடியரசுத் தலைவர் நியமனம்

"இதன்மூலம் வயது வந்தோர் அடிப்படையில் பெரும்பாலோர் தீர்ப்பளிக்கும் தேர்தலில் உள்ள செலவும் தொல்லையும் மீதமாகும். நான் மேலே கூறியுள்ள நியாயமான சோதனைகளையெல்லாம் நிறைவு செய்யக்கூடியவாறு இந்தியக் குடியரசுத் தலைவரே கவர்னர்களைத் தேர்ந்தெடுப்பது சரியான

நாகவும் சிறந்ததாகவும் இருக்காதா? இப்படிப்பட்ட கவர்னர்கள் நிச்சய மாக, அவர்கள் நிருவாகத்தில் உள்ள மாநிலங்களில் உள்ள பொது வாழ் வின் தரத்தை உயர்த்துவார்கள். தற்போதுள்ள கவர்னர்களும் மேலே கண்ட அடிப்படையில்தான் மத்திய அமைச்சரவையால் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆகையால் அவர்கள் செல்வாக்கு மாநிலங் களில் நல்ல பயன் தருவதாய் இருக்கிறது. உத்தேச அரசியல் சட்டத்தைப் பற்றி நாம் அஞ்சுகிறவாறு கவர்னர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால், அவர்க ளுடைய செல்வாக்கு விரும்பத்தக்கதாய் இல்லாமற் போகலாம்.

## பஞ்சாயத்துகள்

"மேலும், குவியல் மயமாக்க வேண்டுமென்ற பழைய தாகத்தைவிட் டுப் படிப்படியாகப் பரவல் மயமாக்க வேண்டும். இதற்கு அடிப்படையானவை கிராமப் பஞ்சாயத்துகள். இப்போது உத்தேசத்தில் உள்ள அரசியல் சட் டத்தில் இந்தக் கிராமப் பஞ்சாயத்துகளைப்பற்றிய குறிப்பே இல்லை. இவைபோன்ற நல்லமுறையில் நாம் குறிப்பிடக்கூடிய அரசியல் சட்டத்தில் குறைபாடுகள் இருக்கின்றன. ஆனால் நமது தலைவர்கள் நல்ல அனுபவம் பெற்றவர்கள். அவர்களைப்பற்றி விரிவான விமர்சனத்தில் இறங்க நான் விரும்பவில்லை; எனக்கு அந்த உரிமையும் கிடையாது. ஆனால் என் மனதி லும் பட்டு உங்களுடைய வழிகாட்டுதலும் தேவைப்படும் குறைபாடுகளை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர முன் வந்துள்ளேன்."

## கவர்னர் பதவி அவசியம்

மாகாண கவர்னர்கள் நியமனம் குறித்து மேலே முதல்வர் கூறியுள்ள வாதத்திற்கு ஆதரவாக எவ்வளவோ கூறலாம். அர சியல் நிர்ணயசபையின் நடவடிக்கைகளை நான் தொடர்ந்து படித்துவரவில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இப்போது விவாதத்திலிருந்து வரும் யோசனை எந்தச் சூழ்நிலையில் கொண்டுவரப்பட்டது என்பது எனக்குத் தெரியாது. ஆனால் தனியாக எடுத்து ஆராய்ந்தால், இந்த விமர்சனம் தவிர்க்க முடி யாதது. ஆனால் இதற்கு ஒரே ஒரு விதிவிலக்கு உண்டு. அர சாங்கக் கருவூலத்தில் உள்ள ஒவ்வொரு தம்பிடியும் செலவா காமல் இருக்க எவ்வளவோ நான் விரும்புவேன் என்றாலும், மாநில கவர்னர்கள் பதவியையே எடுத்துவிட்டு முதலமைச்சர் களை அதற்கு முற்றிலும் சமமாகக் கருதுவது சரியான சிக்கனம் ஆகாது. கவர்னர்கள் குறுக்கிடுவதற்கு அதிக அதிகாரம் வழங்கு வது எனக்கு வருத்தமளிக்கும். ஆனால் அதேசமயம், பெயருக்கு மட்டும் அவர்கள் அரசாங்கத் தலைவர்களாக இருக்கவேண்டும் என்றும் நான் கருதவில்லை. அமைச்சரவையின் கொள்கை அதி கச் சிறப்பாக அமையுமாறு தங்களுடைய செல்வாக்கை அவர்கள் பயன்படுத்த வேண்டும். அவ்வாறு பயன்படுத்துவதற்குப் போது மான அளவு அதிகாரம் அவர்களுக்கு இருக்கவேண்டும். அவர்கள்

எந்தச் சார்பும் இல்லாது பதவியில் இருப்பதால், ஒவ்வொரு சிக்கலையும் சரியான கண்ணோட்டத்தில் பார்க்க முடியும். அதன் மூலம், அமைச்சரவைகள் தவறு செய்வதைத் தடுக்கவும் இயலும். அவர்கள் பதவி வகிக்கும் மாநிலங்களில் எல்லா அம்சங்களிலும் அவர்களுடைய தார்மிகச் செல்வாக்கு வியாபிக்கக்கூடியவாறு அவர்களுடைய பதவி இருக்கவேண்டும்.

## பஞ்சாயத்தும் ஆதாரக் கல்வியும்

உத்தேச அரசியல் சட்டத்தில் கிராமப் பஞ்சாயத்துகளையும் பரவல் முறை ஆட்சியையும்பற்றி எந்தவிதமான குறிப்போ, ஆணையோ இல்லை என்று முதல்வர் அகர்வால் கூறுகிறார். நம்முடைய சுதந்திரம் மக்களுடைய கருத்தைப் பிரதிபலிப்பதாக இருந்தால், விட்டுப்போன இந்த அம்சத்தை உடனடியாகக் கவனிக்க வேண்டியது அவசியமே. பஞ்சாயத்துகளின் அதிகாரம் எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவு மக்களுக்கு நல்லதாகும். மேலும், பஞ்சாயத்துகள் பலனுள்ள முறையில், திறமையாகச் செயலாற்ற வேண்டுமானால், மக்களின் கல்வித் தரத்தைக் கணிசமாக உயர்த்தவேண்டும். மக்களுடைய அதிகாரம் இராணுவ பலத்தில் அல்லாது தார்மிகத்திலேயே உயர வேண்டுமென்று நான் கற்பனை செய்கிறேன். ஆகவே இதற்கு ஆதாரக் கல்வி அவசியமென நான் வலியுறுத்துவது இயல்பே.

# அத்தியாயம் 77

# ஒரு இந்திய கவர்னர்

### மதுவிலக்கு

*1.* ஒரு இந்திய கவர்னர் தனிப்பட்ட முறையிலும் அவரைச் சுற்றியுள்ளவர்களும் மதுவைத் தொடாதவர்களாக இருக்க வேண்டும். இல்லையேல் இந்த வெறியூட்டும் திரவத்தைத் தடை செய்வதென்பது முடியாத காரியமாகிவிடும்.

### நூல் நூற்பு

*2.* இந்தியாவில் உள்ள எழுத்தறிவில்லாத கோடிக்கணக்கான பாமர மக்களுடன் தங்களை ஐக்கியப்படுத்திக் கொள்வதற்கு ஒரு சின்னமாக, கவர்னரும் அவரது சுற்றுப்புறங்களும் கையால் நூல் நூற்பதை ஏற்கவேண்டும். உணவுக்காக உடல் உழைப்புச் செய்ய வேண்டும் என்ற தத்துவத்தின் சின்னம் இது. இன்றைய சமுதாயம் இம்சையை ஒரு அமைப்பாகப் பயன்படுத்துவதை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அதற்குப் பதிலாகத் திட்டமிட்ட அமைப்பாக உள்ள அஹிம்சையின் சின்னம் இது.

### மாளிகை கூடாது

*3.* எல்லோரும் அணுகக்கூடியவாறு ஒரு குடிசையில் அவர் வாழவேண்டும். ஆனால் அவர் திறமையோடு பணியாற்ற மக்கள் பார்வையிலிருந்து எளிதான மறைவு செய்யப்பட்டிருக்கவேண்டும். பிரிட்டிஷ் கவர்னரானவர் பிரிட்டனுடைய பலத்தின் பிரதிநிதியாக இருந்தார். அது இயல்பே. அவருக்காகவும் அவரைச் சார்ந்தவர்களுக்காகவும் ஒரு கோட்டையே, அவரும் அவருடைய பேரரசைத் தாங்கிக்கொண்டிருந்த அவருடைய எண்ணற்ற பணியாட்களும் வாழ்வதற்கான ஒரு மாளிகையே நிர்மாணிக்கப்பட்டது. உலகின் பிற பகுதிகளிலிருந்து வரும் மன்னர்களையும் தூதுவர்களையும் வரவேற்பதற்காக, இந்திய கவர்னரும் ஓரளவு ஆடம்பரமான மாளிகைகளை வைத்திருக்கலாம். ஆனால் இவ்வாறு கவர்னர்களின் விருந்தினர்களாக வருவோருக்கு, கடையனுக்கும் கடைத்தேற்றம் என்றால் அது நடைமுறையில் என்ன வென்பதை நாம் தெளிவாக விளக்கவேண்டும். உள்நாட்டிலோ, வெளிநாட்டிலோ செய்யப்பட்ட விலை உயர்ந்த மேசை, நாற்காலி முதலியவை

அவருக்குக் கூடா. எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும் அவருடைய வாழ்க்கை இலட்சியமாக இருக்கவேண்டும். தமது மாளிகை வாசலை அலங்காரப்படுத்துவதல்லாது, அன்ருட வாழ்க்கையில் பிறருக்கு முன்னுதாரணமாகச் செயல்படுவதே அவரது நோக்கமாய் இருக்கவேண்டும்.

### எளிய வாழ்க்கை

4. அவர் தீண்டாமையை எந்த உருவத்திலும் அனுசரிக்கக் கூடாது. அவருக்கு சாதி, மத, நிறவேறுபாடு கூடாது. கிழக்கு அல்லது மேற்கு நாடுகளில் உள்ள எல்லா மதங்களிலும், மற்ற எல்லாவற்றிலும் உள்ள சிறந்த அம்சங்களுக்கெல்லாம் அவர் பிரதிநிதியாக இருக்கவேண்டும்; இந்தியாவின் குடிமகனுக இருப்ப தன்மூலம் உலகின் குடிமகனுகவேண்டும். தனது காலடியில் கோடிக்கணக்கில் சொத்து இருந்தும் இப்படித்தான் கலீப் ஓமர் வாழ்ந்தார் என்று நாம் படிக்கிருேம். இவ்வாறுதான் புராதன கால ஜனகர் வாழ்ந்தார். நான் பார்த்த அளவில், இவ்வாறு தான் தனது இல்லத்தில் ஈடன் கல்லூரி முதல்வர் பிரிட்டிஷ் தீவுகளைச் சேர்ந்த பிரபுக்கள், நவாபுகள் சூழ வாழ்ந்தார். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் கவர்னர்கள் இதைக் காட்டிலும் குறைந்த எளிமையில் வாழ்வார்களா?

### மொழி

5. எந்த மாநிலத்தில் கவர்னராக இருக்கிருரோ அந்த மாநில மொழியிலும், நாகரி, உருது லிபிகளில் எழுதப்படும் இந்திய தேசிய மொழியான இந்துஸ்தானியிலும் அவர் பேசுவார். இது சமஸ்கிருத மயமான இந்தியோ அல்லது பாரசிக மயமான உருதுவோ அல்ல. இந்துஸ்தானிதான் நிச்சயமாக விந்திய மலைக்கு வடக்கே உள்ள கோடிக்கணக்கான மக்கள் பேசும் மொழியாகும்.

இந்திய கவர்னர்களிடம் இருக்கவேண்டிய குணச் சிறப்புகளையெல்லாம் பட்டியல் போட்டுத் தந்துவிட்டதாக இங்கு நான் பாசாங்கு செய்யவில்லை. ஒரு சில உதாரணங்களை மட்டுந்தான் எடுத்துக் கூறியிருக்கிறேன்'

## அத்தியாயம் 78

# கவர்னர்களும் அமைச்சர்களும்

### கவர்னர் கடமை எதுவரை ?

பரந்த கொள்கை சம்பந்தமான பிரச்னையில் தங்களுடைய அமைச்சர்களுக்கு அறிவுரை கூறுவது, சில அதிகாரங்களைப் பயன் படுத்துவதில் உள்ள அபாயங்களை எச்சரிப்பது, ஆனால் அவ் வாறு எச்சரிக்கை செய்த பின்போ அமைச்சர்கள் எந்தவிதமான கட்டுப்பாடுமின்றித் தங்களுடைய சுதந்திரமான முடிவின்படி நடக்க அனுமதித்து விடுவது ஆகியவைதான் கவர்னர்களின் கட மையும் உரிமையும் ஆகும். இப்படியில்லாவிட்டால், பொறுப்பு என்பது முற்றிலும் பொருளற்ற ஒரு சொல்லாகிவிடும். அன்ருட நிருவாகப் பொறுப்பு சட்டப்படி அமைச்சர்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. அவர்கள் தங்களுடைய பொறுப்பை கவர்னர் களுடன் பங்கிட்டுக்கொள்வதானல், வாக்காளர்களுக்குப் பொறுப் பான அமைச்சர்களுக்குப் பழியும் அவமானமும்தான் மிச்சமாகக் கிடைக்கும். [1]

அத்தியாயம் 79

# விவசாயி தலைமை அமைச்சர்

### உண்மை எசமானர்கள்

காந்திஜி விவசாயிகளைப்பற்றிப் பேசியதாவது :

"எனக்கு மட்டும் அதிகாரம் இருக்குமானால் விவசாயிகளிலிருந்தே நம் கவர்னர்—ஜெனரலையும் தலைமை அமைச்சரையும் தேர்ந்தெடுப்பேன். விவசாயிகள்தான் பூலோக சாம்ராஜ்யத்தின் வாரிசுதாரர்கள் என்று பள்ளிப் புத்தகங்களில் நான் படித்திருக்கிறேன். நிலத்தில் பாடுபட்டு, தாங்கள் உற்பத்தி செய்ததையே உண்கிறார்களே, அந்த விவசாயிகளுக்குத்தான் இது பொருந்தும். இப்படிப்பட்ட உயர்ந்த பதவிகளுக்கு விவசாயிகள் தகுதியானவர்களாய் இருக்க வேண்டுமானால், முதிர்ந்த உலக அறிவும், தனிப்பட்ட முறையில் அஞ்சா நெஞ்சமும், மாசு மருவற்ற நேர்மையும், ஐயத்திற்கு இடமில்லாத நாட்டுப்பற்றும் உடையவர்களாய் அவர்கள் இருக்கவேண்டும். அவர்கள் எழுத்தறிவற்றவர்களாய் இருந்தாலும் பரவாயில்லை. உண்மையாகவே சொத்தை உற்பத்தி செய்பவர்கள் அவர்கள்தான் என்ற முறையில் நமது எசமானர்கள் அவர்களே. ஆனால் நாம் அவர்களை அடிமைகளாக்கி விட்டோம்."

### அரசு அலுவலகப் பதவிகள்

அரசாங்க அலுவலகங்களில் உள்ள உயர்ந்த பதவிகளையும் விவசாயிகள்தான் அலங்கரிக்கவேண்டும் என்று காந்திஜியிடம் ஆலோசனை கூறப்பட்டது. அதுகுறித்து அவர் கூறியதாவது : "விவசாயிகள் அப்பதவிகளுக்குத் தகுதியானவர்களாய் இருந்தால், இந்த யோசனையை நான் ஏற்பேன். எந்த வேலைக்கு அவர்களை நியமிப்பதென்று எதிர்பார்க்கப்படுகிறதோ அந்த வேலை அவர்களுக்குத் தெரிந்திருக்கவேண்டும். இப்படிப்பட்ட விவசாயிகள் கிடைக்கும்போது, அவர்களுக்கு வழி விடுமாறு அமைச்சர்களையும் மற்றவர்களையும் நான் பகிரங்கமாகவே கேட்டுக்கொள்வேன்."[1]

அத்தியாயம் 80

# தலைமை அமைச்சரின் பெருந்தன்மை

**உண்மையில் ஜவாகர்தான்!**

இந்து, சீக்கிய அகதிகள் படும் இன்னல்களைக் குறித்து காந்திஜி கூறியதாவது: ''அவர்களுக்கு விரைவாக உதவி கிடைக்க என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளையெல்லாம் பண்டித ஜவாகர்லால் நேரு செய்து கொண்டிருக்கிறார். அவர்களுக்காக அவர் ரத்தக் கண்ணீர் வடிக்கிறார். துயரத்தில் இருக்கும் ஒருவருக்குத் தமது படுக்கையை அளித்துவிட்டு, இரவு முழுதும் தூங்காமல் இருப்பதற்காக, அங்கும் இங்கும் நடந்துகொண்டிருக்கக் கூடிய மனிதர் அவர். அவருடைய வீட்டில் நிறையப் பேர் இருக்கிறார்கள். இந்தியாவின் தலைமை அமைச்சர் என்ற முறையில் உள்நாட்டையும் வெளிநாடுகளையும் சேர்ந்த விருந்தினர்களுக்கு இடவசதி செய்து கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படியிருந்தும் அகதிகள் தங்குவதற்காகத் தமது இல்லத்தில் ஒன்று அல்லது இரண்டு அறைகளை அளிக்க முன்வருவதாக அவர் விருப்பந் தெரிவித்துள்ளார். இதுபோன்று மற்ற அமைச்சர்களும், அதிகாரிகளும், வசதிபடைத்தவர்களும் செய்ய வேண்டுமென அவர் எதிர்பார்க்கிறார். இந்தியாவின் தலைசிறந்த தலைவரான அவர் இவ்வாறு தன்னலத் தியாகம் செய்வதை உலகெங்கிலும் உள்ளவர்கள் பாராட்டுவார்கள்; வீடில்லாத அகதிகளின் இன்னல்களுக்கு இது விரைவில் முற்றுப்புள்ளி வைக்கும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். அதிசயப்படக் கூடியவாறு இவ்வளவு பெரிய சேவையும் தியாக உணர்வும் கொண்ட பெரிய மனிதர்களைத் தங்களுடைய அருமைத் திருநாடு படைத்திருக்கிறதே என்பதைக் காண இவர்கள் உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கவேண்டும். ஜவாகர் ஒரு உண்மையான ஜவாகர் (நவரத்தினம்) தான். இத்தகைய பிறரும் இருப்பார்கள், ஆனால் அவர்கள் இவ்வளவு பெயர் பெற்றவர்களாய் இருக்கமாட்டார்கள். தலைவர்கள் தங்களுடைய மக்களுக்காக இவ்வளவெல்லாம் செய்கிறார்களென்றால், இதற்குத் தகுதியானவர்களாய் மக்களும் இருக்கவேண்டும். தங்களுடைய முஸ்லிம் சகோதரர்களை அவர்கள் புண்படுத்தக்கூடாது. அவர்களைப் புண்படுத்துவது, தங்களுடைய தலைவர்களையே புண்படுத்துவதாகும்.''[1]

## பண்டித நேருவின் முன்னுதாரணம்

### அகதிகளுக்கு டில்லியின் கவர்ச்சி

காந்திஜி தொடர்ந்து பேசியதாவது: “பண்டித ஜவாகர் லால் நேருவும் மற்ற அமைச்சர்களும் அதிகாரிகளும் தங்கள் இல் லங்களில் சில அகதிகளுக்கு இடமளித்தாலும் அகதிகள் பிரச்னை யின் விளிம்பைக்கூட இது தொடாது என்று ஒரு நண்பர் எனக்கு எழுதியிருக்கிறுர். அமைச்சர்களும் அதிகாரிகளும் சேர்ந்தாலும் ஒரு சில ஆயிரக்கணக்கானவர்களுக்குத்தான் வீட்டு வசதி அளிக்க முடியும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனுல், இவ் வாறு அமைச்சர்களும் அதிகாரிகளும் உதவ முன்வருவதன் சிறப்பு, அவர்கள் எத்தனை பேருக்கு இடவசதி செய்துகொடுக்க முடியும் என்பதில் இல்லை. தலைவர்களின் செயல் மற்றவர்கள் மத்தியிலும் பரவும் என்பதில்தான் இருக்கிறது. மக்களின் நல னுக்காக மன்னர் மிகச் சிறிய தியாகம் செய்தாலும் அதை பிரிட் டிஷ் மக்கள் பாராட்டுகிறுர்கள். நாகரிகம் அடைந்த மக்கள் எல் லோருமே தலைவர்களின் இப்படிப்பட்ட செயல்களைப் பாராட்டி மதிக்கிறுர்கள். இந்நாடு முழுவதற்குமே பண்டித ஜவாகர்லால் நேரு ஒரு முன்னுதாரணத்தை ஏற்படுத்தியுள்ளார். மேலும் மேலும் அதிகமான அகதிகளை டில்லி கவர்கிறது என்ற உண் மையே இதை மெய்ப்பிக்கிறது. டில்லியில் தங்களைச் சிறந்த முறையில் நடத்துவார்கள் என்று அவர்கள் உணருகிறுர்கள் என்பது தெளிவு. பண்டிட்ஜியின் முன்னுதாரணம் மக்களின் நன் மதிப்பை எந்த அளவு பெற்றிருக்கிறது என்பதற்கு இது ஒரு சான்ருகும். அதே சமயம் நாம் தன்னடக்கம் என்னும் கலையைக் கற்றுக் கொள்ளவில்லை என்பதற்கும் இதுவே சான்று.

அத்தியாயம் 81

# அவைத் தலைவர்

## சட்டத்தின் பொருள்

ஒரு வாசகத்தின் நேரடியான பொருளுக்கு முரணாக, வேண்டுமென்றே வியாக்கியானம் அளிக்கும் ஒரு அவைத் தலைவர், அந்த உயர்ந்த பதவிக்குத் தம்மைத் தகுதியற்றவராக்கிக் கொள்கிறார்; காங்கிரசின் குறிக்கோளுக்கு மதிப்பில்லாமல் செய்கிறார். சத்தியத்திற்கும் நாணயத்திற்கும் காங்கிரசுக்குள்ள மதிப்பை எவ்வளவு தியாகம் செய்தாவது பாதுகாக்க வேண்டும். ஆயினும் இதன்மூலம் நான் கூற வந்தது என்னவென்றால், ஒரு பிரிவுக்கு வெளிப்படையாக இரண்டு அல்லது அதற்கு அதிகமான பொருள்கள் கொள்ளமுடிந்தால், அவைகளில் நாட்டு நலனுக்கு உகந்த பொருளையே அவர் அளிக்கவேண்டும் என்பதுதான். ஆனால் ஒரு பிரிவுக்கு ஒரே ஒரு பொருள் இருந்து அது வெளிப்படையாக மக்களின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதாய் இருந்தால், அவர் எந்தவிதமான தயக்கமுமின்றி அந்தப் பொருளையே அளிக்க வேண்டும். அவைத் தலைவரின் இப்படிப்பட்ட ஒரு சார்பின்மையானது, அவருடைய நன்மதிப்பை உயர்த்தும்; அந்த அளவுக்குக் காங்கிரசின் தார்மிக நிலையையும் வளர்க்கும் என்பதில் எனக்கு எந்தவிதமான ஐயமும் இல்லை. காங்கிரஸ்காரர்கள் இம்சையை வெறுத்து ஒதுக்கிவிட்டதால், காங்கிரசின் பலமே தனிப்பட்ட காங்கிரஸ்காரர்களின் தார்மிக சக்தியையும் அச்சமின்மையையும் பொறுத்ததாகத்தான் இருக்கிறது.[1]

அத்தியாயம் 82

# அரசாங்க அதிகாரிகள்

## அந்தந்த மாநிலத்தவர்

எல்லாத் துறைகளிலுமே எல்லா மாநிலங்களும் சம அளவு முன்னேற்றம் அடைய வேண்டுமானல், அரசாங்கத் துறைகளில் பணியாற்றுபவர்கள் பெரும்பாலும் அந்தந்த மாநிலத்தைச் சேர்ந்த வர்களாக இருக்கவேண்டும்; இந்தியாவின் நலனுக்கு இதுவே நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. உலகின் முன்னல் இந்தியா தலைநிமிர்ந்து நிற்க வேண்டுமானல், எந்த மாநிலத் தையும் இனத்தையும் வகுப்பையும் பிற்போக்கான நிலையில் வைத்திருக்க முடியாது. உலகம் வெறுப்புக்கொள்ளும் தம் கரங் களின்மூலம் இந்தியா செயல்படமுடியாது. ஒவ்வொரு குடிமகனின் வாழ்க்கையிலும், நான் அண்மையில் விவரித்த சோஷலிசத்திலும் இயல்பாய் அமைந்து வெளிப்படும் பண்பாட்டிலும் அது ஒளிவிட வேண்டும்...... ஒருவருடைய தத்துவங்கள் அல்லது திட்டங்களைப் பரப்புவதற்காக, எல்லா வன்முறைகளையும் ஒழித்துக் கட்டிவிட வேண்டுமென்பது அதன் பொருள். உண்மையிலேயே மக்களால் விரும்பப்படுகிற அல்லது மக்கள் மத்தியில் பிரபலமான ஒரு பொருளை எல்லோரும் ஏற்றுக்கொள்ளுமாறு செய்வதற்கு மக்கள் கருத்தை உருவாக்க வேண்டுமே தவிர, கட்டாயம் எதுவும் தேவை யில்லை. மிகமிக அபூர்வமாகவே எப்போதாவது கட்டாயம் தேவைப் படுகிறது. ஆகையால் பீகாரிலும் ஒரிசாவிலும் அசாமிலும் நிகழ்ந் தது போன்று தனிப்பட்டவர்கள் இம்சையில் ஈடுபடும் ஆபாசக் காட்சிகள் ஒருபோதும் நடைபெற்றிருக்க வேண்டியதில்லை. பிற மாநிலங்களிலிருந்து வருபவர்கள் ஒழுங்கீனமாக நடந்துகொண் டாலோ, வரம்பு கடந்து நடந்துகொண்டாலோ, அதிலிருந்து பாது காப்பு அளிக்க மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கங்கள் இருக்கின்றன. மாநிலங்களுக்கு வெளியிலிருந்து வருபவர்கள் எல் லோருக்கும் முழுப் பாதுகாப்பு அளிக்கவும் அந்தந்த மாநில அர சாங்கங்கள் கட்டுப்பட்டிருக்கின்றன. "உன்னுடைய பொருள் என்று எதைக் கருதுகிருயோ, அதைப் பிறருக்குத் தீங்கு விளை விக்காத முறையில் உபயோகி" என்பது சமத்துவத்தைப்பற்றிய ஒரு புகழ்பெற்ற அறிவுரை. அது ஒரு பெரிய தார்மிக நன்

ணடத்தை விதியுமாகும். இப்போது அது எவ்வளவு பொருத்த மாக இருக்கிறது?

**தீயதை மறுக்க வேண்டும்**

"ரோமாபுரிக்குச் சென்ருல், ரோமர்கள்போல் வாழவேண் டும்" என்பது நல்ல நடைமுறை அறிவைக் கூறும் ஒரு பழ மொழியே—அது ரோமானியர்களின் குறைகளைப் பொறுத்ததாக இல்லாதவரை. படிப்படியாக ஒத்துவாழ்தலென்பது, தீயதை மறுத்து நல்லதை ஏற்பதாக இருக்கவேண்டும்.[1]

**வகுப்பு அடிப்படை கூடாது**

அரசாங்கத் துறைகளில் வேலை அளிப்பதில் நாம் வகுப்புவாத உணர்ச்சியைப் புகுத்தினுல் அது நல்ல அரசாங்கத்தை அமைப்ப தற்கே அபாயமாக முடிந்துவிடும் என்று எண்ணுகிறேன். நிர் வாகம் திறமையாக நடைபெற வேண்டுமானுல், மிகவும் தகுதியான வர்கள் கையில் அது எப்போதும் இருக்கவேண்டும். தனிச் சலுகை எதற்கும் அதில் இடமே இருக்கக்கூடாது. நமக்கு ஐந்து பொறி இயல் வல்லுநர்கள் தேவையாக இருந்தால், ஐந்து வெவ்வேறு வகுப்புகளிலிருந்து அவர்களை நியமிக்கக்கூடாது. ஆனுல் மிகத் தகுதியானவர்களாகிய ஐந்து பேர்களையே—அவர்கள் எல்லோ ருமே முஸ்லிம்களாக இருந்தாலும் சரி, பார்சிகளாக இருந்தா லும் சரி—நாம் தேர்ந்தெடுக்கவேண்டும். அவசியமானுல் மிகத் தாழ்ந்த பதவிகளுக்கு, பல்வேறு வகுப்புகளையும் சேர்ந்தவர்களைக் கொண்ட ஒரு பாரபட்சமற்ற கழகம் தேர்வு நடத்தி ஆட்களை நியமிக்கலாம். ஆனுல் இப்பதவிகளின் பங்கீடானது வகுப்பு அடிப்படையில் ஒருபோதும் இருக்கக்கூடாது. கல்வியில் பின் தங்கியுள்ள வகுப்பினர், தேசிய அரசாங்கத்திடம் சலுகைபெற உரிமை உண்டு. பலனுள்ள முறையிலும் இதைப் பெறமுடியும். ஆனுல் அரசாங்கத்தில் பொறுப்பு வாய்ந்த பதவிகளைப்பெற விரும்புபவர்கள், அதற்கான தேர்வில் வெற்றிபெற்ருல்தான் அவைகளை அடையமுடியும்.[2]

## சம்பளமும் அரசாங்கப் பதவிகளும்

**ஊதியம் அதிகம்**

இராணுவம் அல்லாத அரசாங்க ஊழியர்களின் சம்பளங்கள் அதிகம் என்று காந்திஜிக்குப் புகார்கள் வந்திருக்கின்றன. 'சிவில் சர்விஸை'த் திடீரென்று ஒழித்துக்கட்டிவிட முடியாது. ஏற்கனவே அவர்களுடைய எண்ணிக்கை குறைக்கப்பட்டிருக்கிறது. மீதமுள்ள

வர்கள் அதிகக் கடினமாக உழைக்க வேண்டியிருக்கிறது. ஆகை யால் அவர்களுடைய வேலைக்காக சர்தார் அவர்களைப் பாராட்டி னார். யார் பாராட்டிற்கு உரியவர்களோ அவர்களுக்குப் பாராட்டுத் தெரிவிப்பதை காந்திஜி வெறுக்கமாட்டார். ஆனால் சுதந்திரத் துக்கு முன்பு, காங்கிரஸ் எந்தச் சம்பளத்தை அதிகமாகக் கரு திற்றோ அந்தச் சம்பளத்தை அவர்கள் பெற்று வருவதை அவரால் குறிப்பிடாதிருக்க முடியவில்லை. உண்மையான 'சிவில் சர்வீஸ்' என்பது மக்கள்தான். சொல்லப்போனால், முற்காலத்திலெல்லாம் காங்கிரஸ்காரர்கள் எந்தவிதமான சம்பளமும் இல்லாமல் வேலை செய்துகொண்டு வந்தார்கள். இன்று ஒரு காங்கிரஸ்காரர் ஒரு பாராளுமன்றச் செயலாளராகிவிட்டால், அவருக்கு ஏன் அதிகச் சம்பளம் தரவேண்டும்? பாராளுமன்றச் செயலாளர்கள் அவசியமா என்பதும் எனக்குத் தெரியாது. ஊதியம் பெறும் செயலாளர்கள் சிலரை மேலும் அரசாங்கத்தில் சேர்ப்பதற்குக் காங்கிரஸ் கட்சி தயங்கவேண்டும். நாட்டின்முன் காங்கிரஸ் வைத்துள்ள உயர்ந்த தரத்தைத் தாழ்த்துவது தவறாகும். இப்போது கோடிக்கணக் கான ரூபாய் அவர்களுடைய பொறுப்பில் வந்திருப்பதால், அதிகக் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகிறது. வருமானம் அதிகமாகாமல் ஒரே நிலையில் இருக்கும்போது, செலவு அதிக மாக அனுமதிப்பது விவேகமற்ற செயலாகும். செலவைக் காட்டி லும் வரவு அதிகமாகுமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது ஒவ் வொரு வியாபார ஸ்தாபனத்தின் பொறுப்புமாகும். இந்த அடிப் படையான அம்சத்தை அலட்சியம் செய்துவிட்டு, சுதந்திர இந்தி யாவின் வாணிகத்தை அவர்கள் நடத்தமுடியுமா? இப்போது அவர்களிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது. அதை எந்த வகையி லானாலும் தாங்கள் விரும்பியபடி விரயம் செய்துவிடலாம். ஆனால் அவர்கள் அறிவுள்ள வணிகர்கள் போன்று நடந்துகொள்ளா விட்டால், அது நீண்டகாலத்திற்கு வராது.[3]

## அரசாங்க ஊழியரின் கடமைகள்

### மோட்டார் வேண்டாம்

ஒரு ஜனநாயகத்திற்கோ அல்லது ஜனநாயக அரசாங்கத் திற்கோ, தெருவில் போகும் மனிதன் என்ன சொல்கிறான் என் பதை அறிவது முக்கியமாகும். வைசிராயின் மாளிகையிலிருந்தோ அல்லது வேறு ஏதாவதொரு பகட்டான கட்டிடத்திலிருந்தோ அதை நடத்தமுடியாது. நாம் ஏழைகள். நடந்துசென்று செய்யக் கூடிய வேலைக்கு மோட்டார்களைப் பயன்படுத்தக்கூடாது. இந்த வேலைக்கு யாராவது மோட்டார் அளிக்க முன்வந்தால், அவருக்கும்

அவரது காருக்கும் நன்றி தெரிவித்துவிட்டு நடந்தே நமது அலுவலகத்திற்குச் செல்வோம். மாளிகையில் வாழும் ஒருவன், அல்லது காரிலேயே போய்க்கொண்டிருக்கும் ஒரு மனிதன் அரசாங்கத்தை நடத்தமுடியாது. ஏனெனில், அப்படிப்பட்ட மனிதன், மக்கள் தொகுதியின் மனோ உணர்ச்சிகளை அறிந்து கொள்வது கடினம். அவன் நடந்துசென்றால்தான், மக்கள் மத்தியில் வாழ்ந்தால்தான் உண்மையான நிலவரங்களை அறியமுடியும்.

## இலஞ்சம், ஊழல்

இப்போது அடுத்த அம்சத்திற்குச் செல்வோம். அரசாங்கம் இப்போது வணிகத்திலும் தொழிலிலும் குறுக்கிடுகிறது என்று எனக்குப் புகார்கள் கிடைத்திருக்கின்றன. உதாரணமாக, இராஜேந்திரபாபு உணவு விநியோகப் பொறுப்பிலும் ராஜாஜி துணித் தொழில் பொறுப்பிலும் இருக்கிறார்கள். வாழ்க்கைக்கு அத்தியாவசியமான இந்த இரண்டு பொருள்களின் வாணிகத்தையும் நம்மவர்களில் மிகச் சிறந்தவர்களே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும் மக்களுக்குத் தேவையான துணியோ உணவோ கிடைக்கவில்லை. இதற்கு, அரசாங்க அதிகாரிகள் மத்தியில் நிறைந்த அளவில் உள்ள இலஞ்சமும் ஊழலும்தான் காரணம் என்று கூறப்படுகிறது. இது எந்த அளவுக்கு உண்மை என்று சொல்லும் நிலையில் நான் இல்லை. ஆனால், இவ்வாறு அரசாங்க அலுவலர்கள் இருப்பார்களானால், சம்பந்தப்பட்ட துறைகளின் அமைச்சர்கள் சரியான முறையில் விசாரணை நடத்தவேண்டும். "அரசாங்கத்தில் உள்ளவர்களின் நல்லெண்ணத்தைப் பெற்றவர்கள் அல்லது அவர்களிடம் செல்வாக்குள்ளவர்கள் அல்லது அவர்களுக்குச் சொந்தக்காரர்களாய் இருப்பவர்கள் உடனடியாக வேலை வாங்கி விடுகிறார்கள். தங்களுக்குப் பங்கீடாகக் கிடைக்க வேண்டியதைப்போல இரண்டு அல்லது மூன்று பங்கு பெறுகிறார்கள்" என்ற குற்றச்சாட்டுகள் கூறப்படுகின்றன. இந்தக் குற்றச்சாட்டுகள் உண்மையானால் நாம் வெட்கப்பட வேண்டும். இப்போது எந்த வெளிநாட்டு அரசாங்கமும் நம்மை ஆளவில்லை. அரசாங்கத்தில் உள்ள சிறு அலுவலர்களுக்கு, பிரிட்டிஷார் காலத்தில் வழக்கமாகப் பிறப்பிக்கப்பட்டு வந்ததைப்போன்ற உத்தரவுகளைப் பிறப்பிப்பவரும் இப்போது இல்லை. ஆகையால் பெரியவர்கள், சின்னவர்கள் ஆகிய எல்லோருமே, நாட்டிற்கு நேர்மையாகவும் விசுவாசமாகவும் சேவை செய்ய வேண்டியதே பொருத்தமானது. முன்பு இருந்த கருத்துப்படி, அரசாங்கத்தில் பதவி வகிப்பதன் முதல் நோக்கமும் கடைசி நோக்கமும் பணம் சம்பா

திப்பதும் உண்டு கொழுப்பதுமாகும். மக்கள் அரசாங்கம் இன்றிருந்து தொடங்குகிறது. ஆகையால் அரசாங்க அலுவலர்களுடைய கடமை இப்போது பத்து மடங்காகி யிருக்கிறது என்று நான் பணிவோடு கூறிக்கொள்ளலாமா? நீங்கள் எவ்வளவு விசுவாசமாகச் சேவை செய்கிறீர்களோ அவ்வளவு விரைவாக அமைதி, மகிழ்ச்சி, செழிப்பு ஆகியவை சுயாட்சியின் கீழ்க் கிடைக்கும். '

## இனங்களும் அரசாங்கப் பதவிகளும்

### பந்தய மைதானத்துக்குக் கூட்டம்

" ஹரிஜன பந்து " என்ற இதழில் வெளிவந்த குஜராத்திக் கடிதத்தின் சாரம் கீழே தரப்படுகிறது :

"மழை காலத்தில் புனுவில் பந்தயங்கள் நடைபெறுகின்றன. மூன்று தனி ரயில்கள் புனுவிற்குப்போய், வந்துகொண்டிருக்கின்றன. இடங்கிடைக்காதபோது, வணிகர்கள் கூட்டமாகக் கார்களில் செல்கின்றனர். பிரயாணிகள் மிதி பலகைகளில் தொங்கிக்கொண்டிருப்பதை அடிக்கடி காணலாம். சில சமயம் இவ்வாறு செல்வது உயிருக்கு ஆபத்தான விபத்துக்களில் முடிகிறது. இந்த விபத்துக்கள் தவிர்க்கக்கூடியனவே. இத்துடன் மற்ருெரு உண்மையையும் கவனிக்கவேண்டும். நாட்டிலே போதுமான அளவு பெட்ரோல் இல்லே. அப்படிப்பட்ட நிலேயில் தனிக் கார்களும் புனுவுக்குச் செல்கின்றன. இந்தப் பிரயாணிகள் வழக்கமாகத் தங்களுடைய பங்கீடுகளே வாங்குவதில்லேயா? தாங்கள் செல்லும் தனி ரயில்களிலும் பந்தய மைதானத்திலும் இவர்கள் சிற்றுண்டிகள் வாங்குவதில்லேயா ?

### பழைய அதிகாரிகள் தானே ?

"இந்தச் சிந்தனேயானது சிவில் சர்விஸ் அதிகாரிகளின் செயலேப்பற்றிச் சிந்திக்குமாறு என்னேத் தூண்டுகிறது. யார் தவறுதலான முறையில் ஆட்சி நடத்துகிருர்கள் என்று நாம் முன்பு கண்டிப்பது வழக்கமோ அவர்கள் தானே இன்று அரசாங்கத்தை நடத்துகிருர்கள்? நாம் காணும் பலன் என்ன? நமக்குப் போதுமான உணவில்லே; உடையும் இல்லாதபோது ஆடம்பரமான உல்லாசங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேம்."

### இப்போது வேண்டாம்

குதிரைப் பந்தயத்தின் தீமைகளேப்பற்றி நான் அடிக்கடி எழுதி வந்திருக்கிறேன். ஆனல் என்னுடைய குரல் தன்னந் தனிக் குரலாகவே இருந்திருக்கிறது. வேற்றுநாட்டு ஆட்சியாளர்கள் இந்தப் பாவத்தை விரும்பினர்கள்; அது ஏதோ புண்ணியச் செயல்போன்று அதற்கு வெளிவேடம் புனேந்துவிட்டார்கள். இந்த நேர்மைக் கேட்டைத் தொடர்ந்து இனிமேலும் நீடித்துக்கொண்டுபோக நிச்சயமாக ஒரு காரணமும் இல்லே.

அல்லது, பழைய ஆட்சியின் குணக் கேடுகளை வைத்துக்கொண்டு குணச் சிறப்புகளை அந்த ஆட்சியுடன் கப்பலேற்றி விடுவோமா ?

**பழைய தூய்மை அவசியம்**

அரசாங்க அலுவலர்களைப்பற்றி இக்கடிதத்தை எழுதியவர் கூறியதில் நிறைய உண்மை இருக்கிறது. அது ஆன்மா இல்லாத உயிரற்ற ஒரு கூட்டவை. அது தனது எசமானரை அனுசரித்துச் செயல்படுகிறது. ஆகையால், நம்முடைய பிரதிநிதிகள் எச்சரிக்கையாக இருந்தார்களானால், இப்பிரதிநிதிகள் தங்களுடைய கடமையைச் செய்ய வேண்டுமென்று நாம் வலியுறுத்துவதானால், அரசாங்க அதிகாரிகள் மூலமே நாம் நிறையக் காரியங்களைச் சாதிக்க முடியும். எந்த ஜனநாயக நாட்டிற்கும் நல்லதையும் கெட்டதையும் ஆராய்ந்து பாராட்டுவதும் கண்டிப்பதும் உண வருந்துவது போன்றதாகும். ஆனால் இது ஆக்கரீதியானதாகவும் நல்லறிவின்பாற் பட்டதாகவும் இருக்கவேண்டும். மக்கள் இயக்கம் தொடங்கிய காலத்தில் முதன் முதலாக காங்கிரஸ்காரர்களிடையே காணப்பட்ட தூய்மை இருக்கிறதே அதுதான் பொது மக்களுக்கு ஒரு ஊன்றுகோலாகும். நாம் வாழ வேண்டுமானால் மீண்டும் அத்தூய்மை வந்தாக வேண்டும். [5]

## சண்டை போட நேரம் இராது

**புதிய, மாறிய நிலைமை**

அரசாங்க அதிகாரிகளுக்கு, தங்கள் அலுவலகங்கள் இட்ட வேலையைச் செய்து பழக்கம். சிவப்பு நாடாவும், எழுத்துச் சான்றுகளும்தான் அவர்களுடைய நடவடிக்கைகளை வழி நடத்துகின்றன. அவர்கள் ஒருபோதும் விவசாயிகளுடன் நேரடித் தொடர்பு கொண்டதில்லை. விவசாயிகளை அவர்கள் அறியமாட்டார்கள். மக்கள் மத்தியில் வந்துள்ள மாறுதலை அங்கீகரிக்கும் அளவுக்கு அவர்கள் பணிவாக நடக்க வேண்டுமென்பதே என் விருப்பம். கட்டுப்பாடுகளின் காரணமாக அவர்களுடைய முயற்சி மடித்துப் போய்விடக்கூடாது. அவர்கள் தங்களையே சார்ந்திருக்குமாறு விடவேண்டும். ஜனநாயகமானது அவர்களை ஆதரவற்றவர்களாக்கி விடக்கூடாது. நம்முடைய மிகப் பெரிய அச்சங்களெல்லாம் உண்மையாகிவிடுகின்றன என்று வைத்துக்கொள்ளுங்கள். கட்டுப்பாடுகளை நீக்குவதனால் நிலைமை மேலும் மோசமாகிவிடுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது, மீண்டும் கட்டுப்பாடுகளைக் கொண்டுவர அவர்களுக்கு எந்தவிதத் தடையும் இல்லை. ஆனால் கட்டுப்பாடுகளை நீக்குவது, நிலைமையை மிகவும் சீர்படுத்தும்

என்று தனிப்பட்ட முறையில் நான் நம்புகிறேன். பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்வதற்கு மக்கள் முயற்சி எடுத்துக் கொள்ளத் தொடங்குவார்கள். அவர்களுக்குள் சண்டைபோட அவர்களுக்கு நேரம் இருக்காது. [6]

## அதிகாரிகளிடமிருந்து நாம் எதிர்பார்ப்பவை

### கடமையிலிருந்து தவறினல்?

சிவில் அதிகாரிகள், போலீசார், இராணுவத்தினர் ஆகிய எல்லோருமே (பிரிட்டிஷார் உள்பட) இப்போது மக்களின் சேவ கர்களாகவே இந்தியாவில் இருக்கின்றனர். வெளிநாட்டு ஆட்சி யாளர்களிடம் சம்பளம் பெற்று, அவர்கள் எசமானர்களாக இருந்த காலம் மலையேறிவிட்டது. அவர்கள் பஞ்சாயத்து ராஜ்யத் தின் விசுவாசமான சேவகர்களாக இருக்கவும், அமைச்சர்களிட மிருந்து உத்தரவுகளைப் பெறவும் வேண்டியிருக்கிறது. அவர்கள் இலஞ்சத்திற்கோ ஒரு சார்பிற்கோ அப்பாற்பட்டவர்களாய் இருக்கவேண்டும். மற்ருெருபுறம், மக்கள் நிருவாகத்திற்கு முழு ஒத்துழைப்பு அளிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அரசாங்க அதிகாரிகள் தங்களுடைய கடமையிலிருந்து தவறினர் களானல், அவர்கள் நம்பிக்கைத் துரோகம் செய்த குற்றத்திற்கு உள்ளாவார்கள். அப்போது நிலைமையைச் சீர்படுத்துவதற்கு ஏற்ற நடவடிக்கைகளை எடுக்க வேண்டியிருக்கும்; தூய்மையற்ற அரசாங்க அலுவலர்களுக்கு எதிராகத் தங்களுடைய குறைகளை வெளியிட மக்களுக்கு ஒவ்வொரு உரிமையும் உண்டு. [7]

### மனேபாவத்தில் மாற்றம்

புது ஆட்சிக்கு ஏற்றவாறு அதை அனுசரித்து நடந்து கொள்ள வேண்டு மென்பதை அரசாங்க அலுவலர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அப்போது, அவர்கள் ஒரு தரப்பைச் சார்ந்து ஒரு சார்பினராக இருக்கமாட்டார்கள். அவர்களிடம் லேசாக வகுப்பு வாத உணர்ச்சி இருப்பதாகக் காணப்பட்டாலும் அது குறித்துக் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும். அதிகார வர்க்கத்தில் உள்ள ஆங்கிலேயர், பழைய ஆட்சிக்குப் பதிலாக புது ஆட்சிக்கும், அதன் மூலம் பிரிட்டனுக்கும் விசுவாசமாக இருக்கக் கடமைப் பட்டிருக்கிறர்கள் என்பதை அறிய வேண்டும். தாங்கள் தான் ஆட்சியாளர்கள், ஆகவே உயர்ந்தவர்கள் என்று கருதும் பழக்கம் போய், தாங்கள் மக்களின் உண்மையான சேவகர்கள் என்ற உணர்ச்சி வரவேண்டும். [8]

## அத்தியாயம் 83

# அரசாங்க ஊழியர்களை மீண்டும் நியமித்தல்

### ஒத்துழையாமையில் பதவி இழந்தோர்

ஒத்துழையாமைக் காலத்தின் போது அப்போராட்டத்தில் ஈடுபட்ட காங்கிரஸ்காரர்களிடமிருந்து வந்த பல கடிதங்கள் எனது ஃபைலில் இருக்கின்றன. இவர்களில், அரசாங்கப் பதவிகளிலிருந்து விலகி வந்தவர்களும் இருக்கிறார்கள். அவர்களில் சிலர், தங்களை மீண்டும் வேலையில் சேர்க்க வேண்டுமென்று போராடிக் கொண்டிருக்கிறார்கள். ஒத்துழையாமையில் பங்கு கொள்ளுமாறு அரசாங்க அதிகாரிகள் உள்படப் பொதுமக்கள் எல்லோருக்கும் நான் விடுத்த வேண்டுகோளை அவர்கள் தங்களுக்கு ஆதரவாகக் காண்பிக்கிறார்கள். ஆனால் அதே சமயம், இவ்வாறு துயரடைந்தவர்களில் பழைய பதவி வேண்டுமென்று போராடாதவர் நான் அறிந்தவரை பலர் இருக்கிறார்கள். இவர்களில், அபராதம் விதிக்கப்பட்ட சட்ட மறுப்பாளர்கள், குடும்ப போஷகர்களை இழந்த உறவினர்கள், தொழிலை இழந்து வறுமை அடைந்த வழக்கறிஞர்கள், தங்களுடைய படிப்பை விட்டு வெளியேறி வந்ததனால் அதற்குரிய வாய்ப்புக்களை இழந்த மாணவர்கள் ஆகியோர் இருக்கிறார்கள். மனமார முன் வந்து ஏற்ற இன்னல்களே, அதற்கு ஒரு வெகுமதியாகும். ஆகவே அதற்கு மேலும் ஒரு நட்ட ஈடு கேட்பதா என்று அவர்கள் எண்ணுகிறார்கள்.

### வேறு வேலை செய்ய முடியாது

இவர்கள் எல்லோரும் மீண்டும் தங்களுக்குப் பதவி அளிக்க வேண்டுமென்று காங்கிரஸ் அமைச்சர்களிடம் கோருவதாய் இருந்தால், இந்த அமைச்சர்களின் கதி உண்மையிலேயே வருந்தத்தக்கதாய்விடும். இவர்களுடைய கோரிக்கைகள் மீது முடிவு கூறுவதைத் தவிர அவர்களால் வேறு வேலை செய்யமுடியாது. இவர்கள் கோரியவைகளை அளிப்பதானால் கோடிக் கணக்கில் ரூபாய்களும் தேவையாக இருக்கும். பதவியிலிருந்து தாமாகவோ அல்லது கட்டாயமாகவோ விலகிய அரசாங்க ஊழியர்கள், மற்றவர்கள் பட்ட இன்னல்களைக் காட்டிலும் தங்களுடைய இன்னல்கள் கடுமையானவை என்று மெய்ப்பிக்கவும் முடியாது.

இந்த முன்னுள் அரசாங்க ஊழியர்கள் தான் மிகவும் குறைந்த இன்னல் அடைந்தவர்கள் என்பது என் கருத்து. மேலும், இத்தனை ஆண்டுகளாக அவர்கள் வேலை இல்லாது இருந்திருந் தார்களானுல், இனி அவர்கள் திறமையான அரசாங்க ஊழியர் களாகவும் முடியாது. காங்கிரஸ்காரர்களுக்கு அரசாங்கப் பதவி என்பது லோகாயத முன்னேற்றத்திற்கான ஒரு ஏணி அல்ல; அது சேவைக்கான ஒரு இராச பாட்டை. ஆகையால் வெளி மார்க் கெட்டில் அரசாங்கத்தில் கிடைக்கும் சம்பளத்தைவிட யார் அதிகம் பெறமுடியுமோ அந்தக் காங்கிரஸ்காரர்கள் மட்டுந்தான் அரசாங்கப் பதவிகளுக்குச் செல்லலாம். அவர்களையும் தேவைப் படும் போது தான் நியமிக்க முடியும். காங்கிரஸ் ரட்சிப்பு என்ற ஒன்று இல்லை.

## அத்தியாயம் 84

# இராணுவத்தினர்

### அதிகாரிகள் முக்கியம்

ஒரு இராணுவ அதிகாரி ஒரு நண்பருக்குக் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார் :

"...ஜனநாயக நாடுகளிலெல்லாம் அரசியல் வாதிகள் இராணுவத்தைப் பற்றி இவ்வளவு அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறார்களே, இவ்வளவு அக்கறையில்லாமல் இருக்கிறார்களே, எவ்வளவு பரிதாபம்! இராணுவம் அவர்களுக்கு எவ்வளவோ பாடங் கற்பிக்கமுடியும். வேறு எந்த அரசாங்கத் துறையிலும் இல்லாத அளவுக்கு, தன்னுடைய சேவையில் உள்ள மனிதனின் விசுவாசத்தையும் அபிமானத்தையும் பெரிதாக இராணுவம் நிலைநாட்டியிருக்கிறது. எப்படி இது ஏற்பட்டது என்பதைக் குறைந்த அளவில் சிந்தித்தாவது பார்க்க வேண்டாமா? அதிலும் அபாயமும் அதிருப்தியும் சோதனையும் நிறைந்த காலங்களில், மற்ற அரசாங்கத் துறைகளைக் காட்டிலும் மிக மிக அதிகமாக நிலைநாட்டியிருக்கிறது. உங்களிடம் இருக்கும் இராணுவம் ஒரு நல்ல இராணுவம். சிறந்த மனிதர்கள் அதில் அதிகாரிகளாகப் பணியாற்ற ஏராளமாக முன் வரும்போது அந்த இராணுவம் இன்னும் சிறந்ததாக இருக்கும். சரியான அதிகாரிகளை மட்டும் தேர்ந்தெடுத்து விடுங்கள்; அப்புறம் நீங்கள் அதைப்பற்றி அச்சப்படவேண்டியதில்லை. அது முதல் தரமானதாக இருக்கும். ஆனால் சரியில்லாத அதிகாரிகளை நியமியுங்கள், அல்லது, அதில் அரசியலைப் புகுத்துங்கள். அப்புறம் நீங்கள் அதிக நஷ்டம் அடைவீர்கள். இந்தியாவுக்கு இன்னும் பல ஆண்டுகள் சோதனைக் காலமாக இருக்கும். ஆனால் அந்தச் சோதனைக் காலத்திலிருந்து அதிக இரத்தம் சிந்தாமலும் விரைவாகவும் உங்களை மீட்கக் கூடியது, உங்களுடைய தற்போதைய இராணுவந்தான். ஆனால் ஒன்று; நீங்கள் அதற்கு வேண்டிய அதிகாரிகளைக் கண்டுபிடிக்க வேண்டும்; அரசியலையும் மத வேறுபாடுகளையும் அதில் நுழைக்கக் கூடாது."

### படையை நம்பி இருக்கக்கூடாது

ஜனநாயக நாடுகளிலெல்லாம் அரசியல்வாதிகள் இராணுவத்தில் அக்கறையில்லாது இருக்கிறார்களென்பது உண்மையானால், அதில் பரிதாபப்படத்தக்கது எதுவும் இல்லை. பரிதாபப்படத்தக்கது என்னவென்றால் அவர்கள் இராணுவத்தில் தவறான முறையில் அக்கறை செலுத்துகிறார்கள் என்பதுதான். ஜனநாயக நாடுகள் தங்களுடைய இராணுவத்தினரை மீட்பாளர்களாகக் கருதுகின்றன. இராணுவங்கள் செல்வத்தைக் கொண்டு வருகின்றன, சட்டமறுப்புக் காலத்தின்போது அரசாங்கம் கவிழாமல் பாதுகாக்கின்றன. ஆகவே நாம் விரும்ப வேண்டியதெல்லாம், ஜனநாயகம்

உண்மையான ஜனநாயகமாக இருக்க வேண்டுமானல், எதற்காகவும் இராணுவத்தை நம்பியிருக்கக் கூடாது என்பதுதான்.

## இதுவரை என்ன செய்தது ?

இந்தியாவுக்கு இராணுவம் என்ன செய்திருக்கிறது? அந்த இராணுவத்திற்காகத்தான் இந்தக் கடிதத்தை எழுதியவர் வாதாடுகிருர். எந்த வகையில் பார்த்தாலும் அது இந்தியாவின் நலனுக்குத் தொண்டாற்றவில்லையென்றே நான் கருதுகிறேன். பிறரைத் தாக்க வேண்டுமென்ற எண்ணமேயில்லாத, ஆயுதந் தாங்காத கோடிக்கணக்கான மக்களை அது அடிமையாக வைத்திருக்கிறது; அவர்களை ஏழைகளாக்கிவிட்டது. இந்த இராணுவத்தில் உள்ள பிரிட்டிஷ் பிரிவுகளை எவ்வளவு விரைவாக வெளியே அனுப்பி இன்னும் நல்ல முறையில் பயன்படுத்துகிறோமோ அந்த அளவு இந்தியா, இங்கிலாந்து ஆகிய இரண்டு நாடுகளுக்குமே, ஏன், உலகத்திற்கே நல்லது. எவ்வளவு விரைவாக இதில் உள்ள இந்தியப் பிரிவுகளை அழிவு வேலைகளிலிருந்து திருப்பி அவர்களுடைய திறமைகளையெல்லாம் ஆக்க வேலைகளில் பயன்படுத்துகிறோமோ அந்த அளவு இந்தியாவின் ஜனநாயகத்திற்கு நல்லதாகும். தான் வாழ்வதற்கு இராணுவ உதவியை எதிர்பார்த்திருக்கும் ஜனநாயகம் பரிதாபகரமான ஜனநாயகந்தான். இராணுவ பலமானது மனதின் சுதந்திரமான வளர்ச்சியைப் பாதிக்கிறது; அது மனிதனின் ஆன்மாவை அணைக்கிறது. இந்தத் "திறமை வாய்ந்த" இராணுவத்தால் பல ஆண்டுகள் இந்தியா வெளிநாட்டுக்கு அடிமைப்பட்டிருந்தது. இவ்வாறு அடிமைப்பட்டிருந்த காரணமாக, * தூதுக் குழுவின் முயற்சிகள் ஒருபுறம் இருந்தாலும், இந்தியா ஒரு நீண்டகால, அல்லது குறுகிய உள்நாட்டுப் போருக்குள்ளாகலாம். இந்த உள்நாட்டுப்போர், படைகளின்மீது மக்களுக்குள்ள மோகத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும். எந்த சமுதாய அமைப்பிற்கும் கட்டுப்பாடு பொதுவான அம்சம். இந்தக் கட்டுப்பாட்டை மட்டும் அகற்றிவிட்டால், இராணுவம் என்பது காட்டுமிராண்டிகளின் செயலையே செய்கிறது. தற்போதுள்ள இராணுவச் செலவைச் சுதந்திர இந்தியா தாங்க வேண்டுமாயின், பசி, பட்டினியில் வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு அது எந்தவிதமான நிவாரணமும் அளிக்கமுடியாது. [1]

---

* பிரிட்டனிலிருந்து அப்போது இந்தியாவிற்குப் பேச்சு நடத்த வந்திருந்த அமைச்சரவை தூதுக் குழுவையே காந்திஜி குறிப்பிடுகிருர்.

**இனிச் செய்யவேண்டியது என்ன ?**

சுயராஜ்யம் வீட்டுவாசலுக்கு வந்துவிட்டது என்ருல், இராணுவத்தை நம்முடைய இராணுவமாகக் கருதலாம்; எவ்விதத் தயக்கமுமில்லாமல், அவர்களிடமிருந்து பெறமுடிந்த ஆக்கவேலைகளையெல்லாம் பெறலாம். இதுவரை, கண்மூடித்தனமாக நம்மைச் சுடுவதற்குத்தான் அவர்கள் பயன்படுத்தப்பட்டிருக்கிருர்கள். இன்ரே அவர்கள் நிலத்தை உழவேண்டும், கிணறு தோண்டவேண்டும், கக்கூஸ்களைக் கழுவவேண்டும்; மற்றும் தங்களால் இயன்ற ஒவ்வொரு ஆக்கவேலையையும் செய்யவேண்டும்; இவ்வாறு, மக்களிடமுள்ள வெறுப்பு உணர்ச்சியை அன்பாக மாற்றவேண்டும். [2]

அத்தியாயம் 85

# ஒழுக்கத்தின் தரம்

## கட்டுப்பாடு முக்கியம்

சுதந்திரமான மக்களின் ஒழுக்கம் எப்படிப்பட்ட தரம் உடையதாக இருக்க வேண்டுமென்பதற்கு, ஆங்கில மக்களின் உதாரணத்தை காந்திஜி கூறினர். இதுகுறித்து விக்டோரியா பேரரசியின் புகழ்பெற்ற உதாரணத்தை அவர் குறிப்பிட்டார். அவருடைய பதினேழாவது வயதில் ஓர் இரவு அவரைப் படுக்கையிலிருந்து எழுப்பி, அவர்தான் இங்கிலாந்தின் ராணி என்று கூறினர்கள் என்று சொன்னர். ஆண்டவன் தம்மீது சுமத்தியிருக்கும் பயங்கரமான பொறுப்பைக் கண்டு அந்த இளம் பெண் இயல்பாகவே மன வேதனையும் அளவுக்குமீறிய அச்சமும் அடைந்தார். வயது முதிர்ந்த அந்நாட்டுத் தலைமை அமைச்சர் அந்த ராணியின் முன் மண்டியிட்டு, அவருக்கு ஆறுதல் கூறினர். "நான் நல்லவளாக நடந்து கொள்வேன்" என்று மட்டும் அந்தப் பெண் கூறினர். இங்கிலாந்தின் கட்டுப்பாடான மககள்தான் அவர் ஆட்சி நடைபெறுவதற்கு உதவினர்கள். இன்றே, சுதந்திரம் நமது வாசலுக்கு வந்துவிட்டது என்பதை மக்கள் உணரவேண்டும். வைசிராயானவர் பெயரளவிற்குத்தான் அமைச்சரவையின் தலைவர். அரசாங்க நிருவாகத்தில் அவருடைய உதவியை நாடாமல் இருந்து அவருக்கு நாம் உதவுவோம். மக்களுடைய முடிசூடா மன்னர் பண்டித ஜவாகர்லால் நேருதான். அவர் இந்தியாவின் மன்னரைப்போன்றல்லாது, அவர்களுடைய முதல் ஊழியராகப் பாடுபடுகிருர், அடிமையாக உழைக்கிருர். இந்தியாவின் மூலமாக உலகிற்குத் தொண்டாற்ற வேண்டுமென்பது அவர் விருப்பம். ஜவாகர்லால் ஒரு உலகப் புகழ்பெற்ற தலைவர். இப்போது இந்தியாவில் உள்ள வெளிநாட்டுத் தூதுவர்களுடனெல்லாம் அவருக்கு நட்புறவு உண்டு. ஆனல் மக்கள் தங்களுடைய கட்டுப்பாடின்மையின்மூலம் அவர் செய்யும் வேலையைப் பாழ்படுத்தினல், ஜவாகர்லால் மட்டும் நாட்டை ஆண்டுவிட முடியாது; அவருக்கு முன்பிருந்த எதேச்சாதிகாரிகளைப்போல, பட்டாக் கத்தியைக் கொண்டு ஆளமுடியாது. அது பஞ்சாயத்து ராஜ்யமாகவும் இருக்காது; ஜவாகர் ராஜ்யமாகவும் இருக்காது. (இந்த இடத்தில் ஜவாகர் என்ற சொல்லை அவருடைய பெயராகவும் அதே சமயம்

ரத்தினம் என்ற பொருளிலும் காந்திஜி பயன்படுத்தியிருக்கிறார்). அமைச்சர்களுடைய பணியை எளிதாக்கவேண்டியது ஒவ்வொருவருடைய கடமையுமாகும். எந்த வகையிலும் வலுக்கட்டாயமாகக் குறுக்கிடக் கூடாது.

**ஒரு முக்கிய நிகழ்ச்சி**

இதன் பின்னர் நேரு சம்பந்தமான ஒரு நிகழ்ச்சியை காந்திஜி நினைவு படுத்தினர். ஓராண்டிற்கு முன் அவர் டில்லியில் இருப்பது மிகவும் தேவைப்பட்ட ஒரு சமயத்தில் அவர் (நேரு) காஷ்மீருக்குச் சென்றிருந்தார். பின்னர், அப்போது காங்கிரஸ் தலைவராக இருந்த மௌலானா சாகிப் உத்தரவிட்டதன் பேரில் டில்லிக்குத் திரும்பி வந்தார். இன்று மீண்டும் காஷ்மீருக்குச் செல்ல பண்டிட்ஜி விரும்புகிறார். காஷ்மீரிகளின் தலைவரான ஷேக் அப்துல்லா இன்னும் சிறையில் இருப்பதால் அவருடைய இதயம் புண்பட்டிருக்கிறது. ஆனல் இங்கு பண்டிட்ஜி இருக்க வேண்டியது அதிக அவசியமாய் இருக்கிறது. அவருக்குப் பதிலாக நான் காஷ்மீருக்குப்போக முன் வருகிறேன். ஆயினும் அங்கு போக என்னை அனுமதிக்கு முன் ஜவாகர்லால்ஜி கவனிக்கவேண்டிய பல காரியங்கள் இருக்கின்றன. நான் போனேனானல், அங்கிருந்துகொண்டே பீகாருக்கும் வங்காளத்திற்கும்—நான் அந்த மாநிலங்களில் நேரில் இருப்பது போன்றே—சேவைசெய்ய முடியும்.[1]

அத்தியாயம் 86

# அமைச்சர்களும் ஆரவாரங்களும்

## அரசியல் கல்வி

இப்போது நாட்டை வேறொரு திசையில் திருப்பிவிட வேண்டியிருக்கிறது. இதற்கென்று சிறப்பாக ஒரு நல்ல ஊழியர் குழுவை அமைக்கவேண்டும். இந்த ஊழியர்களின் கடமை மக்களிடையே இரண்டறக் கலந்து பழகுதலும், அவர்களுடைய உண்மையான இன்னல்களை அறிந்து கொள்ளுதலுமாகும். மேலும் அவர்கள் மக்கள் மத்தியில், "இப்போது இந்நாடு நமக்குச் சொந்தமானது. தேர்தல்களின் மூலம் நாம் விரும்பும் அமைச்சர்களே இருக்கிறார்கள். ஆகையால் அமைச்சர்களை எதிர்த்து ஆரவாரங்கள் செய்வது அமைச்சர்களைவிட மக்களையே அவதூறு செய்வதாகும்" என்ற பாடத்தைப் போதிக்கவேண்டும். ஆம், நிச்சயமாக, மக்களுக்கு அமைச்சர்கள் அநீதி செய்தால் அவர்களுடைய காதைப் பிடித்துப் பதவியிலிருந்து இறக்கிவிட்டு வேறொருவரை அமர்த்தலாம். இதை ஊழியர்கள் மக்களுக்கு விளக்கிச் சொல்லலாம். அந்த அதிகாரத்தை வளர்த்துக்கொள்ள வேண்டிய காலம் இதுதான். அமைச்சர் பதவி வகிப்பவர்கள், மக்களின் ஊழியர்களாக அப்பதவிகளை வகிக்கிறார்களே தவிர, எசமானர்களாக வகிக்கவில்லை. இதையே சோஷலிஸ்டுகளுக்கும் நான் கூறிக்கொண்டு வருகிறேன். ஆனால்...... அவர்களைப் போன்றவர்கள் இன்னும் மனமாற்றம் அடையவில்லை. எனினும், இம் மனமாற்றத்தை என்னால் ஏற்படுத்திவிட முடியுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து எவ்வாறு காங்கிரஸ் போரிட்டது என்பதை இப்போது மறந்துவிட்டு, இப்போது இந்த அரசியல் கல்வியைப் பரப்பும் இயக்கத்தைத் தொடங்கவேண்டும்.[1]

## அத்தியாயம் 87
# உப்பு வரி

**உப்பிலும் இலாபமா ?**

இன்று நான் வேறொரு பொருளைப்பற்றிக் கூறப் போகிறேன். உப்பு வரியை நீக்குவதற்காக நாங்கள் தண்டி யாத்திரையை நடத்தினோம். அந்த வரி நீக்கப்பட்டது என்பது உண்மைதான். ஆனால் இப்போது உப்பு கிடைப்பது அருமையாக இருக்கிறது. இது உண்மையானால், நமது வணிகர்கள் வெட்கப்படவேண்டும். எந்த உப்பைக்கொண்டு ஏழைகள் உயிர் வாழ்கிறார்களோ அந்த உப்பிலிருந்து இலாபம் தேட வணிகர்கள் எண்ணுவது வருந்தத் தக்கது. ஒருவர் சர்க்கரையில்லாமல் வாழமுடியும். ஆனால், உப்பு இல்லாமல் ஏழைகள் கஞ்சி குடிக்க முடியாது. இதில் எச்சரிக்கையாக இருக்குமாறு அரசாங்கத்தை வேண்டுகிறேன். ஏழைகள் இதை உற்பத்தி விலையில் வாங்குவதற்கு உதவும் முறையில், அரசாங்கமே உப்பு உற்பத்தியை ஏற்கவேண்டும். உப்பு வரியை அகற்றியதால் கிடைக்கும் அனுகூலத்தை மக்கள் அனுபவிக்க முடியவேண்டும். மக்கள் விரும்பினால், நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள தங்கள் வீடுகளிலேயே உப்பு உற்பத்தி செய்யலாம். இது மிகவும் இலகுவான வேலை. அதை யாரும் தடுக்கமுடியாது. சோம்பேறித்தனத்தை மட்டும் நாம் உதறித்தள்ளிவிட்டால், இப்படிப்பட்ட வீட்டுத் தொழில்கள் வளர்ச்சியடையும்; நம்முடைய பொருளாதார, தார்மிக நிலையும் உயரும். எந்தவிதமான இலாபமும் பெறும் எண்ணமில்லாமல் மக்களே உப்பை உற்பத்திசெய்யவும் விநியோகிக்கவும் ஏற்பாடு செய்ய முடியுமானால், மிகமிகக் குறைந்த விலைக்கு அது கிடைக்கும். ஆனால், சுயநலமும் ஊழலும் நாட்டில் வெறிபிடித்து ஆடுகின்றன. இப்படிப்பட்ட சூழ் நிலைகளில் இராம ராஜ்யத்தை எவ்வாறு அடையமுடியும்? பாகிஸ்தானிலோ, இந்தியாவிலோ மகத்தான அதிகார சக்தியுடன் பதவி பீடத்தில் உள்ள அரசாங்கங்கள் உப்புமீது வரி விதித்தால், அது ஒரு வெட்ககரமான, மக்களை வருத்தும் நடவடிக்கையேயாகும். அவ்வாறு நடைபெறும் என்று நான் நம்பவில்லை. இன்றோ நாம் உப்பிட்டவரை உள்ளளவும் நினையாதவர்களாய் இருக்கிறோம்—யாருடைய உழைப்பு நமக்கு ஆதாரமாய் இருக்கிறதோ அந்த ஏழை மனிதனிடம் விசுவாச மற்றவர்களாய் இருக்கிறோம்.[1]

அத்தியாயம் 88

# குற்றங்களும் சிறைகளும்

### குற்றம் ஒரு நோய்

அஹிம்சை முறையில் அமைந்த சுதந்திர இந்தியாவிலும் குற்றங்கள் இருக்கத்தான் செய்யும், ஆனால் குற்றவாளிகள் இருக்க மாட்டார்கள். இந்தக் குற்றவாளிகள் தண்டிக்கப்படமாட்டார்கள். மற்ற எல்லா நோய்களையும் போலவே குற்றஞ்செய்வதும் ஒரு நோயேயாகும் ; தற்போதைய சமூக அமைப்பின் விளைவாக வந்த நோய். ஆகவே, படுகொலை உள்பட எல்லாக் குற்றங்களுக்குமே நோயைப் போன்று அவைகளைக் கருதிச் 'சிகிச்சை' அளிக்கப் படும். இப்படிப்பட்ட இந்தியா என்றாவது ஒருநாள் உருவாகுமா என்பது மற்றொரு கேள்வி.[1]

### சுதந்திர இந்தியாவின் சிறைகள்

சுதந்திர இந்தியாவில் சிறைகள் எவ்வாறு இருக்கவேண்டும்? எல்லாக் குற்றவாளிகளுமே நோயாளிகள் போன்று நடத்தப்பட வேண்டும். இப்படிப்பட்ட நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்துக் குணப்படுத்தும் மருத்துவசாலைகளாகவே, சிறைச்சாலைகள் இருக்கவேண்டும். யாரும் வேடிக்கைக்காகக் குற்றங்கள் செய்வதில்லை. குற்றம் செய்வதென்பது மனம் நோயுற்றுவிட்டதன் அறிகுறி. குறிப்பிட்ட நோயின் காரணங்களை ஆராய்ந்து அகற்ற வேண்டும். அவர்களுடைய சிறைகள் மருத்துவசாலைகளாகும் போது, அவர்களுக்கு மாடமாளிகைகள் தேவையில்லை. எந்த நாட்டிற்கும் அது கட்டுபடியாகாது; அதிலும் இந்தியாவைப் போன்ற ஒரு ஏழை நாட்டிற்கு இது கொஞ்சமும் கட்டுபடியாகாது. ஆனால் சிறைச்சாலைகளில் உள்ளவர்களின் கண்ணோட்டம், ஒரு மருத்துவ சாலையில் உள்ள டாக்டர்கள், தாதியர்கள் ஆகியோரின் கண்ணோட்டத்தைப் போன்று இருக்கவேண்டும். கைதிகள் அதிகாரிகளைத் தங்களுடைய நண்பர்களாக உணரவேண்டும். இக்கைதிகளின் மனம் சீர்திருந்துவதற்கு உதவ அவர்கள் இருக்கிறார்களே தவிர, எந்த வகையிலும் அவர்களுக்குத் தொல்லை கொடுப்பதற்காக அல்ல. மக்கள் அரசாங்கங்கள் இதற்கு அவசியமான ஆணைகளைப் பிறப்பிக்கவேண்டும். அதற்கிடையில் நிருவாகம் மனிதத் தன்மையுடன் நடந்துகொள்வதற்குச் சிறைச்சாலை அலுவலர்கள் எவ்வளவோ செய்யலாமே?[2]

# ஆதார நூல்கள்

[குறிப்பு: பீ. ப. டி. என்பது பீகார் பச்சி டில்லி (குஜராத்தி–மனு பென் காந்தி இயற்றியது) யையும், டி. ட. என்பது டில்லி டயரியையும் (1948), ஹ. என்பது ஹரிஜன் இதழையும், ய. இ. என்பது யங் இந்தியா இதழையும், நடேசன் என்பது மகாத்மா காந்தி பேச்சும், எழுத்தும் (சென்னை நடேசன் வெளியிட்டது, 4–ஆம் பதிப்பு) என்ற நூலையும் குறிக்கும்.]

### பகுதி 1

**அத்தியாயம் 1**

1 ய. இ. 10–9–'31 ப. 255
2 ஹ. 25–3–'39 ப. 65
3 ஹ. 18–5–'40 ப. 129

**அத்தியாயம் 2**

1 ய. இ. 29–1–'25 ப. 40
2 ய. இ. 29–12–'20 ப. 6
3 ஹிந்த் ஸ்வராஜ், (1961) ப. 17
4 நடேசன், ப. 406–08

### பகுதி 2

**அத்தியாயம் 3**

1 ஹ. 1–5–'37 ப. 89–90

**அத்தியாயம் 4**

1 ஹ. 8–5–'37 ப. 97–98

**அத்தியாயம் 5**

1 ஹ. 17–12–'46 ப. 13

**அத்தியாயம் 6**

1 ஹ. 15–5–'37 ப. 108

### பகுதி 3

**அத்தியாயம் 7**

1 ஹ. 17–8–'47 ப. 284

**அத்தியாயம் 8**

1 ஹ. 16–7–'38 ப. 164

**அத்தியாயம் 9**

1 ஹ. 1–3–'42 ப. 61

**அத்தியாயம் 10**

1 ஹ. 21–7–'46 ப. 227

### பகுதி 4

**அத்தியாயம் 11**

1 ஹ. 13–1–'40 ப. 414

**அத்தியாயம் 12**

1 ஹ. 2–6–'46 ப. 157

### பகுதி 5

**அத்தியாயம் 13**

1 ஹ. 28–7–'46 ப. 237-38

**அத்தியாயம் 14**

1 ஹ. 16–6–'46 ப. 180

**அத்தியாயம் 15**

1 டி. ட. 11–1–'48 ப. 324–25
2 டி. ட. 12–1–'48 ப. 329–31

**அத்தியாயம் 16**

1 ஹ. 23–4'38 ப. 88
2 ஹ. 14–8–'37 ப. 209

### பகுதி 6

**அத்தியாயம் 17**

1 ஹ. 25–1–'42 ப 10
2 ஹ. 2–1–'37 ப. 375
3 நிர்மாணத் திட்டம், (1961) ப. 9–10

**அத்தியாயம் 18**

1 ஹ. 7–4–'46 ப. 76
2 ஹ. 28–4–46 ப. 112
3 ஹ. 7–4–'46 ப. 67

அத்தியாயம் 19
1 ய. இ. 8-10-'31 ப. 297
2 ஹ. 2-3-'47 ப. 45
3 ஹ. 14-1-'39 ப. 421

அத்தியாயம் 20
1 ய. இ. 7-7-'27 ப. 219
2 ய. இ. 8-12-'27 ப. 415
3 தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம் (ஆங்கிலம்) (1961) ப. 88
4 நாட்டின் குரல் (ஆங்கிலம்) (1958) ப. 51-52

பகுதி 7

அத்தியாயம் 21
1 ஹ. 17-7-'37 ப 180-81

அத்தியாயம் 22
1 ஹ. 24-7-'37 ப. 188

அத்தியாயம் 23
1 ஹ. 7-8-'37 ப. 204

அத்தியாயம் 24
1 ஹ. 21-8-'37 ப. 220

அத்தியாயம் 25
1 ஹ. 4-9-'37 ப. 236

அத்தியாயம் 26
1 ஹ. 31-7-'37 ப. 196-98

அத்தியாயம் 27
1 ஹ. 13-11-'37 ப. 332

அத்தியாயம் 28
1 ஹ. 28-8-'37 ப. 228.
2 ஹ. 24-12-'38 ப. 396
3 ஹ. 1-4-'39 ப. 69
4 ஹ. 22-7-'39 ப. 207

அத்தியாயம் 29
1 பி. ப. டி., ப. 440
2 ஹ. 10-12-'38 ப. 368-369
3 ஹ. 14-10-'39 ப 308
4 ஹ. 28-4-'46 ப 104
5 ஹ. 1-9-'46 ப. 288
6 ஹ. 20-10-'46 ப. 365
7 ஹ. 27-10-'46 ப. 372

அத்தியாயம் 30
1 ஹ. 25-8-'46 ப. 281-82

அத்தியாயம் 31
1 ஹ. 25-8-'46 ப. 282-84

அத்தியாயம் 32
1 ய. இ. 1-9-'21 ப. 277
2 ஹ. 9-7-'38 ப. 176-77
3 ஹ. 30-7-'38 ப. 200-01

அத்தியாயம் 33
1 ஹ. 11-9-'37 ப. 250

அத்தியாயம் 34
1 ஹ. 15-10-'38 ப. 287-88

அத்தியாயம் 35
1 ஹ. 4-9-'37 ப. 233-34
2 ஹ. 18-8-'46 ப. 275

அத்தியாயம் 36
1 ஹ. 25-9-'37 ப. 273

அத்தியாயம் 37
1 ஹ. 9-6-'46 ப. 175
2 ஹ. 15-9-'46 ப. 311
3 ஹ. 3-11-'46 ப. 384

அத்தியாயம் 38
1 ஹ. 28-12-'47 ப. 484

அத்தியாயம் 39
1 ஹ. 17-12-'38 ப. 385

பகுதி 8

அத்தியாயம் 40
1 ஹ. 3-9-'38 ப. 242

அத்தியாயம் 41
1 ஹ. 14-4-'46 ப. 92

அத்தியாயம் 42
1 ஹ. 21-4-'46 ப. 93-94

அத்தியாயம் 43
1 ஹ. 9-6-'46 ப. 176

அத்தியாயம் 44
1 ஹ. 9-11-'47 ப. 397-398

### பகுதி 9

**அத்தியாயம் 45**
1 கல்கத்தாவின் அதிசயம் (ஆங்கிலம்-1959) ப. 32-33

**அத்தியாயம் 46**
1 பீகார்னி கோமி அக்மன் (குஜராத்தி) ப. 227-28

**அத்தியாயம் 47**
1 ஹ. 25-9-'37 ப. 269

**அத்தியாயம் 48**
1 ஹ. 9-10-'37 ப. 290

**அத்தியாயம் 49**
1 ஹ. 9-6-46 ப. 171

**அத்தியாயம் 50**
1 ஹ. 19-10-'47 ப. 377-78

**அத்தியாயம் 51**
1 ஹ. 1-2-'48 ப. 12

**அத்தியாயம் 52**
1 "புது அடிவானத்தை நோக்கி" (ஆங்கிலம்-1959) ப. 101-02

**அத்தியாயம் 53**
1 ஹ. 4-8-'46 ப. 250

**அத்தியாயம் 54**
1 ஹ. 15-9-'46 ப. 314-15

**அத்தியாயம் 55**
1 ஹ. 29-9-'46 ப. 333

**அத்தியாயம் 56**
1 "தன்னந்தனி யாத்திரிகன்" (ஆங்கிலம்-1964) ப. 92-93

**அத்தியாயம் 57**
1 ஹ. 2-11-'47 ப. 390-91

**அத்தியாயம் 58**
1 ஹ 16-11-47 ப. 409

### பகுதி 10

**அத்தியாயம் 59**
1 ஹ. 18-9-'38 ப. 149

**அத்தியாயம் 60**
1 ஹ. 21-4-46 ப. 97

**அத்தியாயம் 61**
1 ஹ. 10-9-'38 ப. 250

**அத்தியாயம் 62**
1 ஹ. 8-9-'46 ப. 293

**அத்தியாயம் 63**
1 ஹ. 21-9-47 ப. 325

**அத்தியாயம் 64**
1 ஹ. 15-7-'39 ப. 198

**அத்தியாயம் 65**
1 ஹ. 26-10'-46 ப. 382

**அத்தியாயம் 66**
1 ஹ. 4-1-'48 ப. 495
2 ஹ. 1-6-'47 ப. 176

### பகுதி 11

**அத்தியாயம் 67**
1 ஹ. 26-3-'38 ப. 54

**அத்தியாயம் 68**
1 ஹ. 2-4-'38 ப. 65
2 ஹ. 9-4-'38 ப. 72
3 ஹ. 2-4-'38 ப. 64
4 ஹ. 16-4-'38 ப. 81

**அத்தியாயம் 69**
1 ஹ. 23-10-37, ப. 308

**அத்தியாயம் 70**
1 ஹ. 20-11-'37 ப. 340

**அத்தியாயம் 71**
1 ஹ. 2-10-'37 ப. 280

**அத்தியாயம் 72**
1 ஹ. 13-8-'38 ப 216
2 ஹ. 27-8-'38 ப. 234
3 ஹ. 10-9-'38 ப. 251

**அத்தியாயம் 73**
1 ஹ. 1-4-'39 ப. 72

**அத்தியாயம் 74**
1 ஹ. 15-9-'46 ப. 309

**அத்தியாயம் 75**
1 ஹ. 14-7-'46 ப. 219

## பகுதி 12

### அத்தியாயம் 76
1 ஹ. 21-12-'47 ப. 473

### அத்தியாயம் 77
1 ஹ. 24-8-'47 ப. 289

### அத்தியாயம் 78
1 ஹ. 26-2-'38 ப. 21

### அத்தியாயம் 79
1 ஹ. 8-2-'48 ப. 21

### அத்தியாயம் 80
1 ஹ. 1-2-'48 ப. 10
2 ஹ. 1-2-'48 ப. 12

### அத்தியாயம் 81
1 ஹ. 13-8-'38 ப. 216

### அத்தியாயம் 82
1 ஹ. 21-9-'47 ப. 332-33
2 ய. இ. 29-5-'24 ப. 182
3 ஹ. 28-12-47 ப. 486
4 பீ. ப. டி. ப. 64-65
5 ஹ. 17-8-'47 ப. 284
6 ஹ. 26-10-'47 ப. 386
7 ஹ. 26-10-'47 ப. 383
8 பீ. ப. டி. ப. 394-95

### அத்தியாயம் 83
1 ஹ. 3-12-'38 ப. 364

### அத்தியாயம் 84
1 ஹ. 9-6-'46 ப. 169
2 ஹ. 21-4-'46 ப. 93

### அத்தியாயம் 85
1 ஹ. 8-6-'47 ப. 183

### அத்தியாயம் 86
1 பீ. ப. டி., ப. 428

### அத்தியாயம் 87
3 பீ. ப டி., ப. 397

### அத்தியாயம் 88
1 ஹ. 5-5-'46 ப. 124
2 ஹ. 2-9-'47 ப. 395-96

# லண்டனில் காந்திஜி

## மூன்றும் பாகம்

தமிழாக்கம் :

ஜெயமணி சுப்பிரமணியம்

கி. சு.—38

# லண்டனில் காந்திஜி

## 1

## இந்தியாவின் கோரிக்கை

[லண்டன் வட்ட மேஜை மகாநாட்டிற்கு, காங்கிரஸ் மகாசபையின் பிரதிநிதியாக காந்திஜி செல்லவேண்டும் என்று 1931ல், கராச்சி காங்கிரசில் ஒரு தீர்மானம் நிறைவேறியது. எனினும் காந்திஜி லண்டன் செல்லுவதற்கு எத்தனையோ முட்டுக் கட்டைகள் ஏற்பட்டன. ஹிந்து-முஸ்லிம் பிரச்னை தீராமல் தாம் லண்டனுக்குச் செல்லுவதால் யாதொரு பயனும் ஏற்படாதென்று காந்திஜி கருதினர். தேசபக்தர்களான இளைஞர்கள் அரசியல் கொலைகளில் ஈடுபட்டதால், காந்திஜியின் மனவேதனை அதிகமாயிற்று. அரசாங்கத்தின் போக்கும் காந்திஜிக்குத் திருப்தி அளிக்கவில்லை. கடைசியாக வைஸ்ராய் லார்டு வில்லிங்டனுக்கும் காந்திஜிக்கும் நடந்த சமரசப் பேச்சுகளின் பயனாக ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. "கடவுள் ஒருவரையே வழிகாட்டியாகக்கொண்டு நான் லண்டனுக்குச் செல்லவேண்டும்" என்று காந்திஜி கூறி 'ராஜபுதானா' கப்பலில் 1931 ஆகஸ்டு 29ம் தேதி லண்டனுக்குப் புறப்பட்டார். அவருடன் பண்டித மாளவியா, ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, பிரபாசங்கர் பட்டாணி, மகாதேவ தேசாய், பியாரிலால், தேவதாஸ் காந்தி, மீராபென், ஜி. டி. பிர்லா ஆகியோரும் புறப்பட்டார்கள்.

லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கங்களே இந்தப் பகுதியில் வெளியிடப்பட்டுள்ளன.]

இந்தியா கோருவது என்ன என்பதுபற்றி காந்திஜி வட்டமேஜை மகாநாட்டில் முதன் முதலாக நிகழ்த்திய பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

துவக்கத்திலேயே நான் ஒரு விஷயத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். இந்திய தேசீய காங்கிரசின் நிலையைப்பற்றி உங்கள் முன்னிலையில் எடுத்துக் கூறுவது எனக்கு மிகவும் தர்ம சங்கட மாகியிருக்கிறது. முற்றிலும் ஒத்துழைக்க வேண்டும் என்ற நோக் கத்துடனும், உடன்பாடு ஏற்படுவதற்கு என்னல் இயன்ற வரை யில் பெருமுயற்சி செய்யவேண்டும் என்றுமே நான் லண்டனுக்கு வந்திருக்கிறேன். அதிகாரிகளைச் சங்கடத்திற்கு உள்ளாக்க வேண்டும் என்ற ஆர்வம் எந்தக் கட்டத்திலும் எனக்கு இருந்த தில்லை, இனியும் இராது என்று பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு நான் உறுதிகூற விரும்புகிறேன். எங்களிடையே எவ்வளவு கருத்து வேற்றுமை இருந்தாலும், நான் எனது சகாக்களுக்கு எந்தவிதத்திலும் தடையாக இருக்க மாட்டேன் என்று அவர் களுக்கும் (சகாக்களுக்கு) உறுதிகூறுகிறேன். எனவே இங்கு எனது நிலைமை, உங்களுடைய நல்லெண்ணத்தையும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நல்லெண்ணத்தையுமே பொறுத்திருக்கிறது. மகாநாட்டிற்கு பலன்தரத்தக்க விதத்தில் யாதொரு தொண்டும் புரிய என்னல் இயலாது என்பதை எச்சமயத்தில் நான் உணர்ந் தாலும், மகாநாட்டிலிருந்து விலகிக்கொள்ள நான் தயங்க மாட்டேன்.

இவ்வாறு நான் கூறும்படி நேர்ந்ததற்குக் காரணம் என்ன வெனில், காங்கிரசுக்கும் அரசாங்கத்துக்கும் இடையே மூலாதார மான வேற்றுமைகள் உள்ளன என்பதேயாகும். என்னுடைய சகாக்களுக்கும் எனக்கும் இடையேயும் அத்தகைய வேற்றுமைகள் இருக்கலாம். நான் ஓர் எல்லைக்கு உட்பட்டே வேலைசெய்ய வேண்டியவனுக இருக்கிறேன். நான் இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் சார்பில் செயல்படும் பணிவுள்ள ஓர் ஏழைப் பிரதிநிதியே. காங்கிரஸ் என்றல் என்ன என்பதையும், அதன் கொள்கைகள் எவை என்பதையும் குறித்து நமக்கு நாமே நினைவுபடுத்திக் கொள்வது நலமாகும். அப்போதுதான் நீங்கள் என்மீது அனுதாபம் காட்டுவீர்கள். ஏனெனில் என்மீதுள்ள

பொறுப்பு உண்மையில் மகத்தானது என்பதை நான் அறிவேன்.

## காங்கிரசின் வரலாறு

இந்தியாவில் காங்கிரஸ்தான் மிக மிகப் பழமையான அரசியல் ஸ்தாபனமாகும். அது சற்றேறக்குறைய ஐம்பது ஆண்டுகளாக செயல்பட்டு வருகிறது. இந்த ஐம்பது ஆண்டுகளில் அதன் வருடாந்தரக் கூட்டம், ஒரு வருடம்கூடத் தடை எதுவும் ஏற்படாமல் நடைபெற்று வந்திருக்கிறது. அதன் பெயருக்கேற்ப அது தேசீய ஸ்தாபனமாகவே இருந்து வருகிறது. குறிப்பிட்ட எந்த வகுப்பிற்கும், குறிப்பிட்ட எந்தப் பிரிவுக்கும் அது பிரதிநிதி ஸ்தாபனம் அல்ல; அது இந்தியாவில் உள்ள எல்லாச் சமூகங்களுக்கும், எல்லாப் பிரிவுகளுக்கும், எல்லோருடைய நலன்களுக்கும் பிரதிநிதி ஸ்தாபனம் என்று கூறிக்கொள்கிறது. அந்த ஸ்தாபனம் முதன் முதலாக ஓர் ஆங்கிலேயரின் மூளையிலேயே உருவாயிற்று என்பதைக் கூற எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆலன் ஆக்டேவியஸ் ஹியூம்தான் காங்கிரசின் தந்தை என்பதை நாங்கள் அறிவோம். இரண்டு அரும் பெரும் பார்ஸிகளான சர் பிரோஸிஷா மேத்தாவும், தாதாபாய் நௌரோஜியும் அதைப் பேணி வளர்த்தார்கள். தாதாபாய் நௌரோஜியை முது பெரும் கிழவர் என்று இந்திய மக்கள் யாவரும் பெருமகிழ்ச்சியுடன் அழைக்கின்றனர். தொடக்கத்திலிருந்தே முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் முதலிய மற்றும் எல்லோருக்கும் காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்து வருகிறது. அநேகமாக எல்லா மதங்களையும், எல்லாப் பிரிவுகளையும், எல்லாச் சமூகங்களையும் சேர்ந்தவர்களுக்கும் அது பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது. காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த இந்திய கிறிஸ்தவரான டபிள்யூ. ஸி. பானர்ஜி ஒருவரையாவது நினைவுபடுத்திக் கொள்ளமுடியும். காளி சரண் பானர்ஜியைக் காட்டிலும் தூய்மையான ஓர் இந்தியரை அறியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததில்லை. அவர் காங்கிரசுடன் இரண்டறக் கலந்திருந்தார். ஸ்ரீ கே. டி. பால் இப்போது நம்மிடையே இராததைக் குறித்து என்னைப்போல் நீங்களும் வருந்துவீர்கள் என்பதில் ஐயமில்லை. அவருக்கு காங்கிரசுடன் உத்தியோக தோரணையில் ஒருபோதும் தொடர்பு இருந்ததில்லை என்றாலும், அவர் முற்றிலும் தேசீயவாதியாகவும், காங்கிரசிடம் அனுதாபம் உள்ளவராகவுமே இருந்தார்.

காலஞ்சென்ற மௌலானா முகமது அலியும் காங்கிரசின் அக்கிராசனராக இருந்தார் என்பதை நீங்கள் அறிவீர்கள். பதினைந்து உறுப்பினர்கள் அடங்கிய காரியக் கமிட்டியில் தற்போது நான்கு முஸ்லிம்கள் இருக்கின்றனர். பெண்களும் காங்கிரஸ் அக்கிராசனர்களாக இருந்திருக்கிறார்கள். காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த முதல் பெண்மணி டாக்டர் அன்னி பெசண்ட் ஆவார். அதன் பின் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு அக்கிராசனராக இருந்தார். இப்போது காங்கிரஸ் கமிட்டியிலும் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு அங்கத்தினராக இருக்கிறார். இவ்விதமாக யாதொரு வேற்றுமையுமின்றி எல்லோரும் காங்கிரஸ் நடவடிக்கைகளில் பங்கு எடுத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள்.

ஆரம்பத்திலிருந்தே காங்கிரஸ் 'தீண்டாதார்' விஷயத்திலும் அக்கறை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறது. ஒவ்வொரு தடவையும் அதன் வருடாந்தரக் கூட்டத்தில் சமூக சீர்திருத்த மகாநாடும் நடப்பது வழக்கம். சமூக சீர்திருத்தங்களுக்காகவே ரானடே தமது சக்தியையெல்லாம் அர்ப்பணம் செய்துவந்தார். இந்தத் துறையில் காங்கிரஸ் வெகுதூரம் முன்சென்று, தீண்டாமை ஒழிப்புப் பிரச்னையை தனது அரசியல் கொள்கைகளில் ஒன்றாக மேற்கொண்டது; தனது அரசியல் திட்டத்தில் அதை ஒரு முக்கிய விஷயமாக எடுத்துகொண்டது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அதாவது எல்லா மதங்களையும் சேர்ந்த மக்களிடையே ஒற்றுமை நிலவ வேண்டியது, சுயராஜ்யம் பெறுவதற்கு இன்றியமையாதது என்று காங்கிரஸ் கருதியது போலவே, பூரண விடுதலை பெறுவதற்குத் தீண்டாமை ஒழிய வேண்டியதும் இன்றியமையாதது என்று காங்கிரஸ் கருதியது.

1920-ல் காங்கிரஸ் மேற்கொண்ட அந்த நிலை இன்று வரையில் யாதொரு குந்தகமுமின்றி அப்படியே இருந்து வருகிறது. காங்கிரஸ் அதன் பெயருக்கு உகந்தாற்போல முற்றிலும் தேசீய ஸ்தாபனமாகவே விளங்க முயற்சித்து வந்திருக்கிறது.

ஆரம்ப கட்டத்தில் காங்கிரஸ் சுதேச மன்னர்கள் விஷயத்திலும் அக்கறை எடுத்துக்கொண்டது. தாதாபாய் நௌரோஜியும் காங்கிரசும் எடுத்துக்கொண்ட முயற்சிகளுக்காக காஷ்மீர் மன்னரும் மைசூர் மன்னரும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். இப்போதுகூட இந்திய மன்னர்களின் சமஸ்தான விஷயங்களில் காங்கிரஸ் தலையிடாததன்மூலம் இந்திய மன்னர்களுக்கு அது உதவி புரிந்து வருகிறது.

சுருக்கமான இந்த முன்னுரை இச்சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமான தென்றே நான் நம்புகிறேன். இதிலிருந்து காங்கிரஸ், தான் கூறுவதை நடைமுறையில் செய்து வருகிறது என்பதை அறிந்துகொள்ளலாம். காங்கிரசின் வரலாற்றை நீங்கள் பரிசீலனை செய்தால், காங்கிரஸ் அடைந்துள்ள தோல்விகளைக் காட்டிலும் வெற்றிகளே அதிகம் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். எல்லாவற்றிற்கும் மேலாக, இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களிலும் பரவி வசிக்கும், அரைப்பட்டினி கிடக்கும் வாயில்லாத மக்களுக்கும் காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது. வாயில்லாத இந்த கோடிக்கணக்கான மக்களின் நலன்களுக்காக காங்கிரஸ் வேறு யாருடைய நலன்களையும் தியாகம் செய்யும் என்பதைக் கூற நான் தயங்கவில்லை. எனவே அது முக்கியமாக விவசாயிகளுக்கான ஒரு ஸ்தாபனமே; அல்லது நாளுக்கு நாள் அத்தகைய ஒரு ஸ்தாபனமாக உருவாகி வருகிறது எனலாம். காங்கிரசைச் சேர்ந்த அகில இந்திய நூற்போர் சங்கத்தின்மூலம் சுமார் 2000 கிராமங்களிலுள்ள 50,000 பெண்களுக்கு வேலை செய்ய வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அவர்களில் பாதிபேர் முஸ்லிம் பெண்மணிகள் ஆவர். மீதியுள்ளவர்களில் ஆயிரக் கணக்கானவர்கள் தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆவர். இவ்விதமான ஆக்கப் பணியில் நாங்கள் அந்தக் கிராமங்களை ஊடுருவிச் சென்றிருக்கிறோம். அவ்விதம் இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களையும் ஊடுருவிச் செல்ல நாங்கள் எவ்விதத்திலும் முயற்சித்து வருகிறோம். எல்லாக் கிராமங்களிலும் காங்கிரஸ் ராட்டினத்தின் தத்துவத்தைப் பரப்பிவருவதை நீங்கள் காணலாம்.

### காங்கிரஸ் பிரகடனம்

காங்கிரசின் பிரதிநிதித்துவ நிலை இதுதான். எனவே காங்கிரசின் பிரகடனத்தை நான் வாசிக்கும்போது நீங்கள் ஆச்சரியமடைய மாட்டீர்கள் என்றும், அது உங்கள் மனத்திற்குப் பிடிக்காததாக இராது என்றும் நம்புகிறேன். காங்கிரசின் கோரிக்கையை நம்பிக்கையுடனும், உறுதியுடனும் வற்புறுத்தவே நான் இங்கு வந்திருக்கிறேன். அந்தக் கோரிக்கை, கோடிக்கணக்கான வாயில்லா மக்களின் நலன்களுக்கு அபாயத்தை விளைவிக்கக் கூடியது என்று எனக்குத் திருப்தி ஏற்படும்படி நீங்கள் செய்வீர்களாயின், அந்த அபிப்பிராயத்தை நான் மாற்றிக்கொண்டு விடுகிறேன். இந்தக் கட்டத்தில் நான் காங்கிரசின் பிரகடனத்தை உங்களுக்கு வாசித்துக் காட்ட விரும்புகிறேன். அதிலிருந்து

எனக்கு வகுக்கப்பட்டுள்ள எல்லைகளை நீங்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

கராச்சியில் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானம் இதுதான் :

"காரியக் கமிட்டிக்கும் இந்திய அரசாங்கத்துக்கும் இடையே ஏற்பட்ட தற்காலிகமான ஒப்பந்தத்தை இந்த காங்கிரஸ் பரிசீலனை செய்தது. அந்த ஒப்பந்தத்தை இது அங்கீகரிப்பதுடன், காங்கிரசின் லட்சியம் பூரண சுயராஜ்யம், அதாவது கலப்பற்ற சுயாட்சி தான் என்பதைத் தெளிவாகக் கூற விரும்புகிறது. காங்கிரஸ் ஒப்புக்கொள்ளக் கூடிய வேறு வழி ஏதாவது இருக்குமாயின், பிரிட்டிஷ் பிரதிநிதிகளுடன் நடைபெறும் மகாநாட்டில் காங்கிரஸ் பிரதிநிதிகள் அடங்கிய கோஷ்டியினர் அந்த லட்சியத்திற்காக உழைப்பார்கள். குறிப்பாக ராணுவம், வெளிநாட்டு விவகாரங்கள், நிதி, வரி, பொருளாதாரக் கொள்கை ஆகியவை இந்தியாவின் நிர்வாகத்தில் இருக்கவேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிதி வரவு செலவுகளைப் பாரபட்சமற்ற ஒரு நீதிச்சபையின் பரிசிலனைக்கு விடவேண்டும். இந்தியா அல்லது இங்கிலாந்து ஏற்றுக்கொள்ள வேண்டிய பொறுப்புகளையும், இரு சாராரில் யார் விரும்பினாலும் பங்காளிகளாக இருப்பதை ரத்து செய்யும் உரிமையையும் அச்சபை நிர்ணயிக்க வேண்டும்."

வட்டமேஜை மகாநாட்டினால் நியமிக்கப்பட்ட பல்வேறு துணைக் கமிட்டிகளும் செய்துள்ள முடிவுகளை மேற்கண்ட பிரகடனத்தை அடிப்படையாகக் கொண்டே சிரத்தையுடன் பரிசீலனை செய்வதற்கு நான் முயற்சித்திருக்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தீர்க்காலோசனையுடன் கூடிய கொள்கையை விவரித்து பிரதம மந்திரி விடுத்த அறிக்கையையும் நான் அக்கறையுடன் பரிசிலனை செய்தேன். அது, காங்கிரசின் லட்சியத்திற்கு மிக மிகக் குறைவாகவே இருக்கின்றது. நிச்சயமாக இந்தியாவின் நலன்களுக்கு உகந்ததான ஏற்பாடுகளை மாத்திரமே ஒப்புக்கொள்ள எனக்குச் சுதந்திரம் உண்டு என்பது உண்மையே. இருந்தாலும் அவைகளெல்லாம், காங்கிரசின் மேற்கண்ட பிரகடனத்தின் முக்கிய அம்சங்களுக்கு முரணின்றி இருக்கவேண்டும்.

### சமமான அந்தஸ்து

நேற்றைய கூட்டத்தில் ஓர் அடைமொழி உபயோகிக்கப்பட்டது. அதை எந்தப் பிரதிநிதி உபயோகித்தார் என்பது எனக்கு நினைவில்லை. ஆனால் அது ஆணித்தரமானதாக எனக்குத் தோன்

பம்பாய் துறைமுகத்தில் காந்திஜி, அன்னை கஸ்தூரிபாய், பண்டித மாளவியா, ஸ்ரீமதி சரோஜினி தேவி ஆகியோர்.

லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்குப் புறப்பட்டபோது, ராஜபுதானு கப்பலிலிருந்து காந்திஜி, மாளவியாஜி, ஸ்ரீமதி சரோஜினி ஆகியோர், துறைமுகத்திற்கு வந்திருந்த மக்களிடம் விடைபெற்றுக் கொள்கின்றனர்.



கான் சகோதரர்களுடன் (அப்துல் கபார்கானும், டாக்டர் கான் சாகிபும்) காந்திஜி (1938)

அறிந்துகொள்ள முடியும். நான் லண்டனுக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்தபோது கூட, பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு நாங்கள் ஒரு சுமையாகவும், குறுக்கிடுபவர்களாவும் இருப்போம் என்று எனக்குத் தோன்றியது. இருந்தாலும், நாங்கள் அவ்விதம் அவர்களுடைய பிரச்னைகளில் குறுக்கிடுபவர்களாக இருப்பதற்கில்லை என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன்; வட்டமேஜை மகாநாட்டு நடவடிக்கைகளை அவர்கள் மிகவும் முக்கியமானவையாகக் கருதலாம் என்றும் நான் எனக்குள் சொல்லிக்கொண்டேன். ஆம், இந்தியாவைக் கத்தியினால் அடக்கி வைக்கமுடியும். எனினும், பிரிட்டனின் சுபிட்சத்திற்கும், பொருளாதார சுதந்திரத்திற்கும் எது உதவியாக இருக்கும்? அடிமைத்தனத்தில் ஆழ்த்தி வைக்கப்பட்டு, கலகங்களில் ஈடுபடும் இந்தியாவா? அல்லது பிரிட்டனுக்கு ஏற்படும் துக்கங்களிலும், துரதிர்ஷ்டத்திலும் பங்கு கொள்ளும் மதிப்பிற்குரிய இந்தியாவா?

**என் கனவு**

அவசியமாயின் இந்தியா தன் சொந்த விருப்பத்தின்மீது பிரிட்டனுடன் தோளோடு தோள் நின்று போரிடும். இந்த பூமியிலுள்ள ஓர் இனத்தையோ அல்லது ஒரு தனி நபரையோகூடச் சுரண்டுவதற்காக இந்தியா பிரிட்டனுக்குப் பக்க பலமாக இராது. ஆனால் உலகம் முழுவதற்கும் நலன் அளிக்கும் விஷயத்தை யொட்டியே இந்தியா பிரிட்டனுக்குப் பக்க பலமாக இருக்கும். எனது நாடு விடுதலை பெறவேண்டும் என்று நான் விரும்புகிறேன் எனில், மனித வர்க்கத்திலேயே ஐந்தில் ஒரு மடங்கு மக்கள் அடங்கிய எனது நாடு உலகிலுள்ள வேறு எந்த இனத்தினரையோ, எந்த தனி நபரையோ சுரண்டவேண்டும் என்பதற்காக அல்ல. எனது நாட்டிற்கு அத்தகைய சுதந்திரத்தை நான் விரும்புவேனாயின், சுதந்திரம்பெற நான் தகுதியுள்ளவனாக இருக்கமாட்டேன். பலவீனர்களாயினும் அல்லது பலம் வாய்ந்தவர்களாயினும் மற்றெந்த இனத்தினருக்கும் அதே சுதந்திரம் பெறுவதற்குச் சமமான உரிமை இருக்கவேண்டும் என்ற கொள்கையை அரும் பொக்கிஷம்போல் கருதாவிடில், நான் அத்தகைய சுதந்திரத்தைப் பெறத் தகுதியற்றவனாவேன். எனவே அழகான உங்களுடைய தீவிற்கு அருகில் நான் கப்பலில் வந்துகொண்டிருந்தபோது எனக்கு நானே இவ்விதம் சொல்லிக்கொண்டேன். பலாத்காரத்தினால் அடக்கிவைக்கப்படாத, அன்பாகிற பட்டுக் கயிற்றினால் பிணைக்கப்பட்ட இந்தியா, பிரிட்டனுக்கு மதிப்பு வாய்ந்த பங்காளியாக இருக்கும் என்பதில் பிரிட்டிஷ் மந்திரிகளுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்வது என்னால் சாத்தியமாக இருக்கலாம். ஒரு வருடத்திற்கு

மாத்திரமல்ல, பல வருடங்களுக்கு உங்களுடைய வரவு செலவைச் சரிக்கட்ட அத்தகைய இந்தியா உங்களுக்கு உண்மையாகவே உதவியாக இருக்கலாம். பிரிட்டிஷ் மக்களின் தொகை குறைவே என்றாலும், அவர்கள் தைரியசாலிகள்; அவர்கள் ஈடு இணையற்ற தைரியசாலிகள் என்பது வரலாற்றில் இடம் பெற்ற உண்மையாகும். பலவீனர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதே தங்கள் கடமை என்று அவர்கள் எண்ணிக்கையற்ற தடவைகளில் கூறியிருக்கிறார்கள். இந்தியாவோவெனில், கோடிக்கணக்கான மக்கள் அடங்கிய புராதனமான ஒரு நாடாகும். அது பண்டைய பெருமையும், புகழும் வாய்ந்தது. தற்போது அது (இந்தியா), இஸ்லாம், ஹிந்து என்ற இரு மகத்தான கலாச்சாரங்களுக்கும் பிரதிநிதித்துவ நாடாக விளங்கி வருகிறது. அங்கே பெரும் தொகையினரான கிறிஸ்தவர்களும் இருந்து வருகிறார்கள். சிறந்த ஸொரோஸ்டர்கள் அடங்கிய ஓர் இனமும் அங்கே இருக்கிறது. அவர்களின் தொகை மிகமிகக் குறைவே என்றாலும், தரும கைங்கரியங்களிலும். தொழில் துறை முயற்சியிலும் அவர்கள் ஈடு இணையற்றவர்களாகத் திகழ்கிறார்கள். இவ்வாறாக இந்தியாவில் பல்வேறு கலாச்சாரங்களையும் சேர்ந்தவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். இங்கே பிரதிநிதிகளாக வந்துள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்களுடைய வேற்றுமைகளை மறந்து கௌரவமான ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளும் விவேகத்தைக் கடவுள் அருள்வாராயின், அதன் பலனாக பிரிட்டனும் இந்தியாவும் ஐக்கிய உறவு கொள்ளுமாயின், பிரிட்டனைப் போல் முற்றிலும் சுதந்திரமுள்ள இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் கௌரவமான ஒரு சமரசம் ஏற்படுவது இரு நாடுகளுக்கும் பரஸ்பரம் பலன் தரத்தக்கதாக இராதா என்று மீண்டும் என்னை நானே கேட்டுக்கொள்கிறேன். அத்தகைய கனவுடனும் நம்பிக்கையுடனுமேயே நான் பிரிட்டிஷ் தீவுக்கு வந்தேன். இன்னும் நான் அவ்விதமே கனவு கண்டு வருகிறேன்.

நான் இவ்விதம் கூறியது, நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிட்டதேயாகும். எனவே ராணுவம், வெளிநாட்டுப் பிரச்னைகள், நிதி, வரி விதிப்பு, பொருளாதாரக் கொள்கை ஆகியவை இந்தியாவின் நிர்வாகத்தில் இருக்கவேண்டும் என்பதற்கு என்ன பொருள் என்பதை நான் விவரமாகக் கூறாமலேயே நீங்கள் அறிந்துகொள்ள முடியும். பழைய பங்காளி வெளியேறி புதிய பங்காளி வரும்போது, கணக்கு வழக்குகளையும், கையிருப்புகளையும் பரிசோதனை செய்வது இயல்பேயாகும். எனவே எந்தெந்தப் பொறுப்புகளை இந்தியா ஏற்றுக்கொள்ள வேண்டும், எந்தெந்தப் பொறுப்புகளை இந்தியா ஏற்றுக்கொள்ளக் கூடாது

என்பதை இந்தியா அறிந்துகொள்ளவேண்டும் என்று காங்கிரஸ் கேட்பது கௌரவக் குறைவான காரியம் அல்ல. அவ்விதம் பரி சோதனை செய்யவேண்டும் என்று கோருவது, இந்தியாவின் நலன்களுக்கு மாத்திரம் அல்ல, இரு நாடுகளின் நலன்களுக்கும் உகந்ததாகும். நியாயமாக இந்தியா ஏற்கவேண்டியிராத எந்தச் சுமையையும் இந்தியாமீது திணிக்க பிரிட்டிஷ் மக்கள் விரும்ப மாட்டார்கள் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். எனினும் தான் நியாயமாக ஏற்கவேண்டிய எந்தப் பொறுப் பையும் வகிக்க இந்தியா ஒரு காலத்திலும் மறுக்காது என்பதை காங்கிரசின் சார்பில் இங்கே நான் பிரகடனம் செய்கிறேன். உலகத்தின் முன்னிலையில் இந்தியா நாணயமும் மதிப்பும் வாய்ந்த ஒரு நாடாக வாழ வேண்டுமாயின், நியாயமான கடன்களையெல் லாம் நாங்கள் ரத்தத்தைக் கொடுத்தாவது ஒரு பைசாகூட பாக்கி யின்றிக் கொடுத்து விடுவோம்.

காங்கிரஸ் பிரகடனத்தில் உள்ள பிரிவுகளைப்பற்றியோ, அப்பிரிவுகளுக்கு காங்கிரஸ் வாதிகள் கொடுக்கும் அர்த்தத்தைப் பற்றியோ உங்களுக்கு விளக்கிக்கூற வேண்டியது அவசியமென நான் நினைக்கவில்லை. இங்கு நடைபெறும் ஆலோசனைகளில் நான் தொடர்ந்து கலந்துகொள்ள வேண்டும் என்பது இறைவ னின் சித்தமாயின், அந்தப் பிரிவுகளின் கருத்துகளை நான் பின் னர் விளக்கிக் கூறுகிறேன். பாதுகாப்புகளைப்பற்றியும் நான் எனது அபிப்பிராயங்களைக் கூற வேண்டி யிருக்கும்.

இப்போது நாங்கள் பிரிட்டனின் விருந்தாளிகளாக வந்திருக் கிறோம். எனவே என் உள்ளத்தில் உள்ள விருப்பம் என்ன என் பதை ஒளிவு மறைவின்றி நான் உங்களுக்கு எடுத்துக்கூறாவிடில், நான் கொண்டுள்ள லட்சியத்திற்கு நீதி செய்வதாகாது. உங்கள் முன்னிலையில் அந்த லட்சியத்தை விளக்கிக்கூறவே நான் இங்கு வந்திருக்கிறேன். பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கு மிடையே சமத்துவ அந்தஸ்தை அடிப்படையாகக் கொண்ட கௌரவமான ஒப்பந்தம் ஏற்படப்போகிறது என்ற உறுதியுடன் இந்த நாட்டி லிருந்து புறப்பட்டுச் செல்லவே நான் பெரிதும் விரும்புகிறேன். இந்த விருப்பம் நிறைவேறவேண்டும் என்று, உங்கள் மத்தியில் நான் இருக்கும் வரையில் மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய்வ தைக் காட்டிலும் அதிகமாக நான் எதுவும் செய்யமுடியாது. நான் சற்றேறக்குறைய 45 நிமிடங்கள் வரையில் பேசியிருக் கிறேன். இவ்வளவு நேரம் பேச எனக்கு உரிமையில்லை. எனக்கு மரியாதை காட்டி இவ்வளவு நேரம் பேச அனுமதித்ததற்காகத் தலைவருக்கு நன்றி செலுத்துகிறேன்.

## 2

# சட்ட சபைகள்

தலைவர் அவர்களே,* மிக மிகத் தயக்கத்துடனேயே இந்த விவாதத்தில் நான் பங்கு எடுத்துக்கொள்கிறேன். விவாதத்திற்கு வரவிருக்கும் பல்வேறு விஷயங்களையும் பற்றி நான் பேசு முன், என் மனத்தில் ஏற்பட்டுள்ள ஓர் வேதனை உணர்ச்சியை உங்களிடம் கூற விரும்புகிறேன். சென்ற திங்கட்கிழமையிலிருந்து அந்த உணர்ச்சி அதிகமாகி வருகிறது. இங்கே நடைபெற்று வரும் விவாதங்களை நான் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறேன். நாங்கள் தேச மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அல்ல, அரசாங்கத்தினுல் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே என்ற உணர்ச்சியையே நான் மேலே குறிப்பிட்டுள்ளேன். இந்தியாவிலுள்ள பல்வேறு கட்சிகளையும், பிரிவுகளையும் நான் அனுபவத்தின்மீது நன்கு அறிவேன். இங்கு வந்துள்ள இந்தியப் பிரதிநிதிகளின் ஜாபிதாவை நான் பரிசீலனை செய்யும்போது, மிகவும் முக்கியமான சிலர் அதில் இடம்பெறவில்லை என்பதைக் காண்கிறேன். எனவே பிரதிநிதிகளின் நியமன சம்பந்தமான உண்மையற்ற ஒரு நிலை எனக்கு வேதனையைக் கொடுக்கின்றது.

இது உண்மையற்றது என்று நான் கருதுவதற்கு இரண்டாவது காரணம் என்னவெனில், இம் மகாநாட்டின் நடவடிக்கைகள் முடிவேயில்லாமல் போய்க்கொண்டிருப்பதுபோல் தோன்றுகின்றன. இப்படியே நாம் சென்றுகொண்டிருந்தால், இங்கே எழுப்பப்பட்டுள்ள பல்வேறு விஷயங்களையும் நாம் அலசி அலசி விவாதிப்பதற்குமேல் உருவாக எதுவும் செய்யமுடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. எல்லை கடந்த பொறுமையுடன் இருப்பதற்காகவும், எங்களை எப்போதும் மிகுந்த மரியாதையுடன் நடத்தி வருவதற்காகவும் தலைவருக்கு முதன் முதலாக எனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மகாநாட்

---

* லண்டன் வட்டமேஜை மகாநாட்டிற்குத் தலைமை வகித்த லார்டு சாங்கி (1866-1948) பல ஆண்டுகள் வரையில் லண்டனில் பிரபல நீதிபதியாக இருந்தார். 1929-லிருந்து 1935 வரையில் பிரிட்டிஷ் மந்திரி சபையில் லார்டு சான்ஸலராக இருந்தார். அப்போதுதான் அவர் வட்டமேஜை மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

டின் நடவடிக்கைகளை யொட்டி நீங்கள் எடுத்துக்கொண்டுவரும் மகத்தான சிரமத்திற்காக உண்மையில் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். இங்கே உங்களுடைய கடமைகளும் எங்களுடைய கடமைகளும் முடிவுறும்போது, ஏதாவது உருவான பலனை நீங்கள் காட்டுவதன்மூலம் உங்களுக்கு மேலும் எனது வாழ்த்துக் களைக் கூறுவது சாத்தியமாக இருக்கும் என்றே நம்புகிறேன்.

## ஒரு புகார்

இச்சந்தர்ப்பத்தில் நான், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆலோ சகர்களுக்கு எதிராக அமைதியாகவும், பணிவுடனும் ஒரு புகார் கூற முற்படலாமா? அவர்கள், கடல் கடந்து வாழ்ந்துவரும் எங்கள் எல்லோரையும் ஒன்று சேர்த்து இங்கே அழைத்து வந் திருக்கிறார்கள். அவர்களைப்போல் நாங்கள் யாவரும், ஏராள மான அலுவல்களைக் கவனிக்க வேண்டியவர்களாக இருக் கிறோம் என்பதை அவர்கள் அறிவார்கள் என்றே நினைக்கிறேன். நாங்கள் ஒவ்வொருவரும் அவரவருடைய கடமைகளைச் செய்ய வேண்டிய இடங்களை விட்டுவிட்டு இங்கே வந்திருக்கிறோம். இந்த நிலையில் எங்களுக்கு வழிகாட்டி, எங்களை நடத்திச்செல்ல வேண்டியது அவர்களுக்கு (பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆலோச கர்களுக்கு) சாத்தியமாக இராதா? அவர்களுடைய மனத்தில் உள்ளதை பகிரங்கமாகக் கூறுமாறு உங்கள்மூலம் அவர்களுக்கு நான் வேண்டுகோள் விடுக்கமுடியாதா? எங்களுடைய அபிப் பிராயங்களைத் தெரிந்துகொள்வதற்கான உருவான திட்டங்களை அவர்கள் கொண்டுவருவார்களாயின், நான் பெருமகிழ்ச்சியடை வேன். அவர்கள் அவ்வாறு செய்வதுதான் நியாயமான முறையும் ஆகும். அவ்விதம் ஏதாவது செய்தால்தான், நாம் ஏதாவது சில முடிவுகள் செய்வது சாத்தியமாகும். அந்த முடிவுகள் நல்லவை யாகவோ அல்லது தீயனவாகவோ, திருப்தி அளிக்கக்கூடியவை யாகவோ அல்லது திருப்தி அளிக்கக் கூடாதவையாகவோ இருக்கலாம். அவ்விதம் செய்யாமல், ஒவ்வொருவரும் பல்வேறு விஷயங்களை யொட்டியும் தங்கள் தங்களுடைய நாவன்மையைக் காட்டும் விவாத சபையாக இதை நாம் மாற்றிவிட்டால், நாம் இங்கு வந்து ஒன்று சேர்ந்துள்ள குறிக்கோள் நிறைவேறுவதற்கு இடமில்லை.

சில முடிவுகளுக்கு வருவதற்குற்ற யோசனைகளைக் கூறுவ தற்காக ஓர் உப கமிட்டியை நியமிப்பது பலன்தரத்தக்கதாக இருக்கலாமென எனக்குத் தோன்றுகிறது. அப்படியானால்தான் நமது நடவடிக்கைகள் நியாயமான ஒரு கால அளவிற்குள்

முடிவுறும். உங்களுடைய ஆலோசனைக்காகவும், மற்ற அங்கத்தினர்களுடைய ஆலோசனைக்காகவுமே இந்த யோசனைகளை நான் கூறுகிறேன். இவற்றை அன்பு கூர்ந்து பிரிட்டிஷ் அரசாங்க ஆலோசகர்களின் கவனத்திற்கும் கொண்டு வருவீர்களென நினைக்கிறேன்!

அவர்கள் எங்களுக்கு வழிகாட்டிச் செல்ல வேண்டுமென நான் விரும்புகிறேன். அவர்கள் தங்கள் மனத்தில் உள்ள திட்டத்தையும் வெளியிட வேண்டும். எங்களுடைய விதியை நிர்ணயிக்கும் மத்தியஸ்தர்களாக அவர்களை நாங்கள் நியமித்தால் அவர்கள் என்ன செய்வார்கள் என்பதை அவர்கள் கூறவேண்டும் என்பதே என் விருப்பமாகும். எங்களுடைய ஆலோசனையையும், அபிப்பிராயத்தையும் நாடும் நல்ல தன்மை அவர்களுக்கு இருக்குமாயின், நாங்கள் அவ்விதமே அவற்றை எடுத்துக்கூற வேண்டும். நம்பிக்கைக்கு இடமில்லாத தற்போதைய நிச்சயமற்ற நிலைமையையும், முடிவற்ற தாமதத்தையும் காட்டிலும் அதுதான் மேலானது என்பது என்னுடைய அபிப்பிராயமாகும்.

'இனம் 2' என்ற தலைப்பையொட்டி இப்போது நான் சில விஷயங்கள் கூறத் துணிகிறேன். இதன் சம்பந்தமாக சர் தேஜ் பகதூருக்கு ஏற்பட்ட சங்கடமே எனக்கும் ஏற்படுகிறது. உண்மையில் வாக்குரிமை எப்படி இருக்கும் என்பது தெரியாத நிலையில், பல்வேறு விஷயங்களையும் பற்றிப் பேசுவது சங்கடமாக இருக்கிறது என்று அவர் கூறினர். எனக்கும் அப்படித்தான் இருக்கிறது. இதைத் தவிர மற்றொரு விதத்திலும் எனது நிலை சங்கடமானதாக இருக்கிறது. அதாவது காங்கிரசின் பிரகடனத்தை நான் இம் மகாநாட்டின் முன்னிலையில் வைத்திருக்கிறேன். அந்தப் பிரகடனத்தை முக்கியமாகக் கொண்டே நான் பல்வேறு இனங்களையும்பற்றி விவாதிக்க வேண்டியவனாக இருக்கிறேன். எனவே அந்தப் பிரகடனத்தை அடிப்படையாகக் கொண்டு சில இனங்களை யொட்டி எனது யோசனைகளையும் அபிப்பிராயங்களையும் நான் கூறவேண்டியிருக்கும். அந்த இனங்களை நான் பரிசீலனை செய்ய முற்படும்போது, நான் கூறுவதன் பொருள் தெளிவாக உங்களுக்கு விளங்கும்.

**சமஸ்தானங்கள்**

இனம் (1) சம்பந்தப்பட்டவரையில், எனது அனுதாபங்கள் டாக்டர் அம்பேத்காரின் சார்பில் இருக்கின்றன. ஆனல் எனது பகுத்தறிவு, ஸ்ரீ கேவின் ஜோன்ஸையும், சர் சுல்தான் அகமதையும்

ஆதரிக்கின்றது. நாங்கள் ஐக்கியத் தன்மையுள்ள ஒரே குழுவாக இருந்து, வாக்கு எடுத்து முடிவு செய்ய எங்களுக்கு உரிமையும் இருக்குமாயின், நான் டாக்டர் அம்பேத்காரை ஆதரித்து வெகு தூரம் செல்லத் தயாராக இருப்பேன். ஆனால் எங்கள் நிலைமை அவ்விதம் இல்லை. நாங்கள் பல்வேறு கருத்துகளும் கொள்கைகளும் உள்ள ஒரு கதம்பக் குழுவைச் சேர்ந்தவர் களாக இருக்கிறோம். இங்குள்ள ஒவ்வொருவருக்கும் தம் தம் விருப்பப்படி அபிப்பிராயங்களைக்கூற முற்றிலும் சுதந்திரமும் உரிமையும் உண்டு. எனவே இந்த நிலையில், சமஸ்தானங்கள் என்ன செய்யவேண்டும், என்ன செய்யக்கூடாது என்பதுபற்றிக் கூற எங்களுக்கு உரிமை இல்லை என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். அந்தச் சமஸ்தானங்கள் மிகவும் பெருந்தன் மையுடன் எங்களுக்கு உதவியாக இருக்க முன்வந்திருக்கின்றன; எங்களுடன் 'பெடரல்' ஆட்சி முறையில் கலந்து கொள்வதாகக் கூறியிருக்கின்றன; அவற்றின் உரிமைகள் சிலவற்றை விட்டுக் கொடுக்கவும் தயாராக இருக்கின்றன.

எனவே மாபெரும் மன்னர்களுக்கு நான் ஒன்றிரண்டு யோசனைகள் கூறத் துணிகிறேன். நான் பாமர மக்களிடமிருந்து வந்தவன், பாமர மக்களைச் சேர்ந்தவன். சமூகத்தில் மிக மிகத் தாழ்ந்த பிரிவினர்களின் பிரதிநிதியாக இருக்கவே நான் முயற் சித்து வருகிறேன். இங்கு உருவாகும் எந்த அரசியல் திட்டத் திலும் மன்னர்களுக்கும் இடம் இருப்பதே விரும்பத்தக்கது என்று நான் அவர்களுக்கு வற்புறுத்திக்கூற விரும்புகிறேன். அவர்கள் தங்களுடைய பிரஜைகளின் நலன்களில் அக்கறையுடையவர்கள் என்பதை நான் நன்கு அறிவேன். பிரஜைகளுடைய நலன்களைத் தாங்கள் மிகுந்த அக்கறையுடன் பாதுகாத்து வருவதாகவும் மன்னர்கள் கூறிக்கொள்கின்றனர் என்பதையும் நான் அறிவேன். எல்லாம் சரியாக நடைபெறுமாயின், மன்னர்கள் மேன்மேலும் அதிகமாக பிரிட்டிஷ் இந்தியாவுடன் தொடர்பு வைத்துக்கொள் வார்கள்; பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மக்கள் உள்பட எல்லோ ருடைய் நலன்களையும் பொதுவாகக் கருதுவார்கள்; பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மக்களும், மன்னர்களின் இந்தியாவிலுள்ள மக்க ளுடைய நலன்கள் உள்பட எல்லோருடைய நலன்களையும் பொது வாகக் கருதுவார்கள். இந்த இரு இந்தியாக்களிடையே மூலா தாரமான, உண்மையான வேற்றுமை எதுவும் இல்லை. உயிருள்ள உடலை இரண்டு பாகங்களாகப் பிரிக்க முடியுமாயின், நீங்கள் இந்தியாவையும் இரு இந்தியாக்களாகப் பிரிக்கலாம். பல்லாண்டு பல்லாண்டுகளாக இந்தியா ஒரு நாடாகவே இருந்து வந்திருக்

கிறது. எனவே செயற்கையான ஓர் எல்லையை வகுத்து அதைப் பிரித்துவிட முடியாது. பெடரல் ஆட்சி முறையை ஆதரிப்பதாக அவர்கள் மனம் விட்டும் தைரியத்துடனும் பிரகடனம் செய்ததும், இந்திய மக்கள் யாவரும் ஒரே ரத்தம் ஓடும் உற்ருர் உறவினர்கள் என்று அவர்கள் கூறியதும், அவர்களுக்குப் பெருமையே யாகும். அவர்கள் வேறுவிதமாக எவ்வாறு கூற முடியும்? நாங்கள் சாதாரண மக்கள், அவர்கள் பிரபுக்கள், மன்னர்கள் என்பதைத் தவிர எங்களுக்குள் வேற்றுமை எதுவும் இல்லை. அவர்களைப் பிரபுக்களாகவும், மன்னர்களாகவும் கடவுள் படைத்துள்ளார். அவர்கள் நலமாகவும் சுபிட்சமாகவும் இருக்கட்டும். அவர்களுடைய நலனும், அவர்களுடைய சுபிட்சமும் அவர்களுடைய அன்பார்ந்த மக்களின், அவர்களுடைய சொந்தப் பிரஜைகளின் முன்னேற்றத்திற்காகப் பயன்படவேண்டும் என்பதும் எனது பிரார்த்தனையாகும்.

இதற்குமேல் நான் எதுவும் கூற மாட்டேன், கூறவும் இயலாது. நான் அவர்களுக்கு வேண்டுகோள்தான் விடுக்க முடியும். பெடரல் ஆட்சி முறையில் கலந்து கொள்வதோ, அல்லது கலந்து கொள்ளாமல் இருப்பதோ அவர்களுடைய விருப்பத்தைப் பொறுத்ததாகும். அவர்கள் பெடரேஷனில் கலந்துகொள்வது எளிதாக இருக்கும்படி செய்வது எங்களுடைய கடமையாகும். அவர்களை மனப்பூர்வமாக நாங்கள் வரவேற்பது எளிதாக இருக்குமாறு செய்யவேண்டியது அவர்களுடைய கடமையாகும்.

அவ்விதம் பரஸ்பரம் விட்டுக்கொடுக்கும் தன்மை இல்லாவிடில், உறுதியான பெடரல் திட்டம் எதையும் நம்மால் உருவாக்க இயலாது என்பதை நான் அறிவேன். அப்படியே நாம் அதை உருவாக்கினுலும், இறுதியில் நாம் சச்சரவிட்டுக்கொண்டு பிரிந்துவிடுவோம். நாம் மனப்பூர்வமாக அவ்விதம் செய்ய முற்படாவிடில், பெடரல் திட்டம் எதிலும் நாம் ஈடுபடாமல் இருந்துவிடுவதே சிறந்ததாகும்.

**வாக்காளர்களின் தகுதி**

நான் கலப்பற்ற ஜனநாயகவாதியாயினும், வாக்காளர்களுக்கும், அபேட்சகர்களுக்கும் சில தகுதிகள் இருக்கவேண்டும் என்பதைப்போல் சில தகுதியின்மைகள் இருக்கக்கூடாது என்பதையும் ஆதரிக்கிறேன். தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் கூடச் சில தகுதியின்மைகள் காரணமாக அங்கத்தினர் பதவியிலிருந்து விலகிவிட வேண்டியது அவசியமாகும். அந்தத் தகுதியின்மைகள் எவை என்பது பற்றி இப்போது நான் பரிசீலனை

செய்ய விரும்பவில்லை. எனினும் தகுதியின்மைகள் இருக்க வேண்டும் என்ற கொள்கையை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன்.

'ஒழுக்கக் கேடு' என்ற சொற்களைக் கண்டு நான் மிரண்டு விடவில்லை. அதற்கு மாருக, அவை நல்ல சொற்கள் என்றே நான் நினைக்கிறேன். எவ்வளவு தீர்க்காலோசனையுடன் நாம் சொற்களைத் தேர்ந்தெடுத்தாலும், அவற்ருல் சில கஷ்டங்கள் ஏற்பட்டே தீரும். எனினும் நீதிபதிகள் எதற்காக இருக்கிருர்கள்? அத்தகைய கஷ்டங்களைச் சமாளிப்பதற்காகத்தானே இருக்கிருர்கள்? அவ்விஷயமாக ஏதாவது சங்கடங்கள் ஏற்பட்டால், அவற்றைத் தீர்க்க நீதிபதிகள் நமக்கு உதவியாக இருப்பார்கள். எது ஒழுக்கக் கேடு எது ஒழுக்கக்கேடு அல்ல என்பதை அவர்கள் எடுத்துக் கூறுவார்கள், என்னைப்போல் சட்ட மறுப்பில் ஈடுபடும் ஒரு நபர் 'ஒழுக்கக் கேடு' என்ற ஷரத்தின்கீழ் வருவாராயின், அதற்கு உட்பட நான் தயாராக இருக்கிறேன். அந்நிலையில், வாக்காளராக இருக்கத் தகுதியற்றவன் என்பதை நான் பொருட்படுத்தவில்லை. மற்றும் சிலரும் அத்தகைய குற்றத்திற்கு ஆளாக வேண்டியிருக்கலாம். அதற்காக, தகுதியின்மைகளே இருக்கக் கூடாது என்றே, அவ்விதம் இருப்பது வாக்காளரின் உரிமையில் தலையிடுவதாகும் என்றே கூற நான் தயாராக இல்லை. வாக்காளருக்கு ஏதாவதொரு சோதனை அல்லது ஏதாவது வயது வரம்பு இருக்கவேண்டியது அவசியமெனில், அவருக்கு ஒழுக்க வரம்பும் இருக்க வேண்டியது அவசியமென நான் நினைக்கிறேன்.

### மறைமுகமான தேர்தல்கள்

மூன்ருவது விஷயம், நேரடியான தேர்தலையும் மறைமுகமான தேர்தலையும் பற்றியதாகும். மறைமுகமான தேர்தல் கொள்கையைப் பொறுத்தமட்டில், லார்டு பீலின் கருத்தை நான் பெரிதும் ஒப்புக்கொள்கிறேன். 'மறைமுகமான தேர்தல்' என்ற சொற்களைக் குறித்தும் நான் பயப்படவில்லை. அந்தத் தேர்தல் முறையை ஏராளமான பொதுமக்கள் ஆதரிக்கும்படி செய்ய நான் முயற்சிப்பேன். வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை இருக்க வேண்டும் என்ற கொள்கையில் எனக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. காரணம் எதுவாயினும், காங்கிரஸ்வாதிகளும் அதை முழு மனத்துடன் ஆதரித்து வருகிருர்கள். பல காரணங்களை யொட்டி வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை இருக்க வேண்டியது அவசியமாகும். முக்கியமான காரணங்களில் ஒன்று, அது முஸ்லிம்கள், 'தீண்டாதார்', கிறிஸ்தவர்கள், தொழிலாளர்கள் முதலிய மற்றும்

எல்லாப் பிரிவினர்களுடைய நியாயமான கோரிக்கைகளையும் திருப்தி செய்வதாக இருக்கிறது.

பணம் உள்ளவர்களுக்கு வாக்குரிமை இருக்கவேண்டும், பணம் இல்லாத அல்லது எழுதப் படிக்கத் தெரியாத, ஆனால் ஒழுக்கமுடையவர்களுக்கு வாக்குரிமை இல்லை என்பதை என்னால் சகிக்கமுடியாது. நாள் முழுவதும் உடலுழைப்பில் ஈடுபட்டு நெற்றி வியர்வை நிலத்தில் விழ யோக்கியப் பொறுப்புடன் உழைப்பவர்களுக்கு, அவர்கள் ஏழைகள் என்ற குற்றத்திற்காக வாக்குரிமை இல்லை என்பதையும் சகிக்கமுடியாது. மிக மிக ஏழை மக்களான கிராமவாசிகளுடன் கலந்து நான் வாழ்ந்திருக்கிறேன். நான் ஒரு தீண்டாதவன் என்று கருதப்படுவதைக் குறித்துப் பெருமை யடைகிறேன். மானிட வர்க்கத்திற்கே மிகச் சிறந்த உதாரணமாகத் திகழ்பவர்களில் சிலர் அத்தகைய ஏழைகளிடையே, தீண்டத் தகாதவர்களிடையே இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். தீண்டத்தகாதவரான சகோதரருக்கு வாக்குரிமை இல்லை என்பதை விட, என்னுடைய வாக்குரிமையை இழந்துவிடவே நான் தயாராக இருக்கிறேன்.

### வாக்காளருக்கு எழுத்தறிவு

வாக்காளர்களுக்கு எழுதவும் படிக்கவும் தெரியவேண்டும் என்ற கொள்கையைக் குறித்து நான் பரவசம் அடையவில்லை. எனது நாட்டு மக்களுக்கு கல்வி அறிவு இருக்கவேண்டும் என்பதே என் விருப்பமாகும். எனினும் அவர்கள் வாக்குரிமை பெறுவதற்குமுன் எழுதவும் படிக்கவும் தெரிந்துகொள்ள வேண்டுமாயின் அதாவது கல்வியறிவு பெறவேண்டும் எனில், யுகம் முடியும் வரையில் நான் காத்திருக்க வேண்டியதுதான். அவ்வளவுகாலம் வரையில் காத்திருக்க நான் தயாராக இல்லை. கோடிக்கணக்கான அந்த மக்களுக்கு வாக்களிக்கும் ஆற்றல் உண்டு என்பதை நான் அறிவேன். அவர்களுக்கு நாம் வாக்குரிமை அளித்தால், அவர்கள் யாவரையும் வாக்காளர் ஜாபிதாவில் கொண்டு வருவதும், பெரும் தொகுதிகளை நிர்வகிப்பதும் மிகவும் கடினமாக இருக்கும் என்பது உண்மையே. எனினும் அது முற்றிலும் அசாத்தியமானதல்ல. மிகப் பெரிய தொகுதிகளாக இருந்தால், ஏராளமான மக்களுடன் நேரடியான தொடர்பு வைத்துக்கொள்வதோ, அப்போதைக்கப்போது அவர்களுடைய அபிப்பிராயங்களை அறிந்து கொள்வதோ சாத்தியமல்ல என்று லார்டு பீல் அஞ்சுகிறார். அவ்விதமேதான் நானும் நினைக்கிறேன். சட்டசபைக் கௌரவங்களை நான் ஒருபோதும் நாடியதில்லை என்றாலும், வாக்

காளர் தொகுதிகளில் எனக்கு அனுபவம் உண்டு. அவ்விஷயமாக சட்டசபை அங்கத்தினர்களின் அனுபவங்களையும் நான் அறிவேன்.

எனவே காங்கிரசில் நாங்கள் ஒரு திட்டத்தை உருவாக்கியிருக்கிறோம். ஆனால் நாங்கள் இறுமாப்புடன் ஒரு போட்டி சர்க்காரை அமைத்திருப்பதாக இந்திய அரசாங்கம் எங்கள்மீது குற்றம் சாட்டுகிறது. அந்தக் குற்றச்சாட்டு ஒரு விதத்தில் சரி என்பதே என் அபிப்பிராயமாகும். நாங்கள் எத்தகைய போட்டி சர்க்காரையும் அமைக்கவில்லை என்றாலும், இப்போதுள்ள அரசாங்கத்தை என்றாவது ஒரு நாள் அகற்றிவிட்டு, அதன் நிர்வாகத்தை நாங்கள் நிச்சயமாக மேற்கொள்ள முற்படுவோம்.

நான் சென்ற பதினன்கு ஆண்டுகளாக இந்திய தேசீய காங்கிரசின் திட்டங்கள், தீர்மானங்கள் முதலியவற்றைத் தயாரிப்பவனாக இருந்து வருகிறேன். தென்னாப்பிரிக்காவிலும் இது போன்ற ஒரு ஸ்தாபனத்தின் நகல்களை சற்றேறக்குறைய இருபது ஆண்டுகள் வரையில் நான் தயாரித்து வந்தேன். எனவே அவ்விஷயமாக எனது அனுபவத்தை உங்களுடன் பகிர்ந்துகொள்ள நீங்கள் என்னை அனுமதிப்பீர்கள். காங்கிரஸ் அமைப்புத் திட்டத்தில் வயது வந்தவர்கள் சகலருக்கும் வாக்குரிமை அளித்திருக்கிறோம். ஒவ்வொருவரும் காங்கிரசுக்கு வருடத்திற்கு நான்கு அணா விகிதம் கட்டணம் செலுத்தவேண்டும். இங்கேயும் அதே கட்டணம் விதித்தால், அதை நான் ஆட்சேபிக்க மாட்டேன். ஏழ்மையான எங்கள் நாட்டில் தேர்தல்களுக்காக ஏராளமான தொகை செலவு செய்யவேண்டிய அபாயம் இருக்கிறது என்பது லார்டு பீலின் அச்சமாகும். அதை நானும் ஒப்புக்கொள்கிறேன். எனவே அதைத் தவிர்ப்பதற்காக நான்கு அணா கட்டணம் வசூலிப்பதை நான் ஆதரிக்கிறேன். நான்கு அணா கூட மக்களுக்குத் தாங்க முடியாத சுமையாகும் என்று கருதப்படுமாயின், அதையும் விட்டுவிடவே நான் விரும்புவேன். அது எப்படியாயினும், காங்கிரசில் அந்தக் கட்டணம் வசூலிக்கப்பட்டு வருகிறது.

நம்மிடையே மற்றொரு விசேஷ அம்சமும் இருக்கிறது. வாக்களிக்கும் முறைகளை நான் அறிந்த வரையில், வாக்குரிமை பெறத் தகுதியுள்ளவர்கள் எல்லோரும் — அவர்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் — பதிவு அதிகாரி தயாரிக்கும் வாக்காளர் ஜாபிதாவில் இடம் பெறுகிறார்கள். ஒரு சமயம் டர்பனிலுள்ள (நேட்டால்) வாக்காளர் ஜாபிதாவில் என்னுடைய பெயர் இருந்தது. அந்த ஜாபிதாவில் என் பெயர் இருக்கவேண்டும் என்பதில் நான் அக்கறை எடுத்துக்கொள்ளவே இல்லை. என்னுடைய

வோட்டை விரும்பிய ஓர் அபேட்சகர், வாக்காளர் ஜாபிதாவில் என்னுடைய பெயர் இருப்பதாகக் கூறியபோதுதான் எனக்கு அது தெரிந்தது. அதிலிருந்துதான், வாக்காளர் ஜாபிதா எவ்வாறு தயாரிக்கப்படுகிறது என்பதை நான் அறிந்துகொண்டேன்.

இப்போது விருப்பமுள்ளவர்கள் வாக்கு அளிக்கலாம் என்றாலும்கூட, வயது முதலிய நிபந்தனைகளுக்கு உட்பட்டு, 'ஆண், பெண் என்ற வேற்றுமையின்றி கோடிக்கணக்கானவர்களுக்கு வாக்காளர் ஜாபிதாவில் இடம்பெற உரிமை உண்டு.

**தேர்தல் முறைகள்**

மத்திய சட்ட சபையுடன் கிராமத்தை இணைக்க ஏதாவது செய்ய வேண்டியது அவசியம். இந்திய காங்கிரஸ் கமிட்டி, மத்திய சட்ட சபையைப் போன்ற ஓர் அமைப்பேயாகும். காங்கிரசைச் சேர்ந்த மாகாண ஸ்தாபனங்களும் இருக்கின்றன. அவை மாகாண சட்ட சபைகளைப் போன்றவையே. எங்களிடையேயும் சட்டம், நிர்வாகம் என்றெல்லாம் இருக்கின்றன. காங்கிரசில் நிர்வாக சபையும் இருக்கிறது. அந்த நிர்வாக சபைக்குப் பக்க பலமாக ராணுவமும் துப்பாக்கிகளும் இல்லை என்பது முற்றிலும் உண்மையே. எனினும் எங்களுடைய தீர்மானங்களுக்குப் பக்க பலமாக இருக்கவும், மக்கள் அத்தீர்மானங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படி செய்யவும் துப்பாக்கிகளைக் காட்டிலும் மிக மிகச் சிறந்த சாதனம் எங்களிடம் இருக்கிறது. எச்சந்தர்ப்பத்திலும் மக்கள் அத்தீர்மானங்களுக்குக் கட்டுப்பட்டு வந்திருக்கிறார்கள் என்று நான் கூறவில்லை. எனினும் சென்ற 47 ஆண்டுகளாக காங்கிரஸ் வருடத்திற்கு வருடம் அதிகமாக வளர்ந்து வந்திருக்கிறது.

எங்களுடைய மாகாண சபைகளுக்கு, அவைகளுக்கான தேர்தல்களை நடத்துவதற்குரிய உப விதிகளைத் தயாரித்துக்கொள்ள முழு அதிகாரம் உண்டு.

உதாரணமாக ஒரே ஒரு மாகாணத்தை எடுத்துக்கொள்கிறேன். கிராமங்கள் தங்களுக்குத் தேவையான சிறிய கமிட்டிகளைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்கின்றன. அந்தக் கமிட்டிகளே தாலூகாக் கமிட்டிகளையும், தாலூகாக் கமிட்டிகள் ஜில்லாக் கமிட்டிகளையும், ஜில்லாக் கமிட்டிகள் மாகாணக் கமிட்டிகளையும் தேர்ந்தெடுக்கின்றன. மாகாணக் கமிட்டிகள், மத்திய சட்ட சபையை அதாவது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியைத் தேர்ந்தெடுக்கின்றன. இந்தத் திட்டத்தின்கீழ் நாங்கள் இதைச்

செய்யலாம் அல்லது அதைச் செய்யலாம் என்பது ஒரு பெரிய விஷயம் அல்ல. ஆனால் ஏழு லட்சம் கிராமங்களையும் மனத்தில் வைத்துக்கொண்டு நான் இதைக் கூறுகிறேன் என்பதே முக்கிய மாகும். மன்னர்களின் இந்தியாவிலுள்ள கிராமங்களையும் சேர்த்தே இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. மக்கள் இந்தியாவிலுள்ள கிராமங்களின் தொகை ஐந்து லட்சம் அல்லது அதற்குச் சற்று அதிகமாக இருக்கலாம். அந்தக் கிராமம் ஒவ்வொன் றும் ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கலாம். அந்தப் பிரதி நிதிகள், மத்திய சட்ட சபை அல்லது பெடரல் சட்ட சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பார்கள். மேலெழுந்தவாரியான ஒரு திட்டத்தையே நான் குறிப்பிட்டிருக்கிறேன். நீங்கள் இதை ஆதரிப்பதாயின் அதன் சம்பந்தமான மற்ற விவரங்களை நீங்கள் பூர்த்திசெய்து கொள்ளலாம். நம்மிடையே வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை இருக்க வேண்டுமாயின், நான் கூறியது போன்ற ஒரு திட்டத்தைத்தான் நாம் மேற்கொள்ள வேண்டியிருக்கும்.

அத்திட்டம் எங்கேயெல்லாம் செயல்பட்டு வருகிறதோ அங்கேயெல்லாம் மிகச் சிறந்த பலன்கள் கிடைத்திருக்கின்றன என்று நான் சாட்சியம் கூற முடியும். அந்தப் பிரதிநிதிகளின் மூலம் பரம ஏழையான கிராமவாசியுடன் கூடத் தொடர்பு வைத்துக்கொள்வது சாத்தியமாகி யிருக்கிறது. இந்த யந்திரம் யாதொரு தங்கு தடையுமின்றி வேலைசெய்து வந்திருக்கிறது. அதன்கீழ் மக்கள் யோக்கியப் பொறுப்புடன் செயல்பட்டு வந்த இடங்களிலெல்லாம் அது துரிதமாகவும், யாதொரு செலவுமின்றி யும் இயங்கி வந்திருக்கிறது. இந்தத் திட்டத்தின்கீழ் ஓர் அபேட்சகர் தேர்தலுக்காக ரூபாய் அறுபதினாயிரமோ அல்லது ஒரு லட்சமோ செலவு செய்யும்படி நேரவே நேராது. சில இடங்களில் தேர்தலுக்காக ஒரு லட்சம் ரூபாய் செலவு செய்யப் பட்டிருப்பதை நான் அறிவேன். உலகத்திலேயே மிகவும் ஏழ்மை நிலையிலுள்ள நம் நாட்டில் அவ்வளவு தொகை செலவு செய்வது மிகவும் அக்கிரமமாகும்.

### இரண்டு சபைகள் தேவையில்லை

மேல் சபை, கீழ் சபை என்ற இரு சட்ட சபைகள் அமைக்கப் படவேண்டும் என்பதுபற்றி என் கருத்தைக் கூற விரும்பு கிறேன். அம்முறையைக் கண்டு நான் பரவசமடையவில்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அடங்கிய சட்ட சபை அவ சரம் அவசரமாகச் சில சட்டங்களை நிறைவேற்றிவிட்டுப் பிறகு அவற்றைக்குறித்து வருந்தலாம் என்று நான் அஞ்சவில்லை. அது

தன் விஷயத்தில் தானே போதிய அக்கறை எடுத்துக்கொள்ளு மென எண்ணுகிறேன். நாம் இப்போது உலகிலேயே மிகவும் ஏழ்மை நிலையிலுள்ள ஒரு நாட்டைப்பற்றி விவாதித்து வரு கிறோம். எனவே நமக்குச் செலவுகள் எவ்வளவுக்குக் குறை கின்றனவோ அவ்வளவுக்கு நன்மையேயாகும். சட்ட சபையின் போக்கைக் கட்டுப்படுத்த ஒரு மேல் சபை இருந்தாலொழிய, சட்ட சபை நாட்டைப் பாழாக்கிவிடும் என்ற கருத்தை நான் எள்ளளவும் ஒப்புக்கொள்ளவில்லை. எனக்கு அத்தகைய பயம் எதுவும் இல்லை. இருந்தாலும் சட்ட சபைக்கும் மேல் சபைக்கும் இடையே போராட்டம் ஏற்படும்படியான நிலைமையை நான் கற்பனை செய்துகொள்ள முடியும். அவ்விஷயமாக திட்ட வட்ட மான ஒரு நிலையை நான் மேற்கொள்ள மாட்டேன் என்றாலும், ஒரே சட்ட சபையுடன் மிகவும் பலன் தரத்தக்க விதத்தில் நாம் நிர்வாகம் செய்ய முடியும் என்பதே எனது உறுதியான அபிப் பிராயமாகும். ஒரே சட்ட சபை இருப்பதால் நமக்கு செலவு கணிசமாகக் குறையும்.

முன்னுதாரணங்களைக் கண்டு நாம் நம்மை அலட்டிக்கொள்ள வேண்டாம் என்று லார்டு பீல் கூறியதை நான் முழு மனத்துடன் ஆதரிக்கிறேன். நாமே ஒரு புதிய முன்னுதாரணத்தைக் காட்ட லாம். நாம் ஒரு பெரிய கண்டத்தைச் சேர்ந்தவர்கள். மானிட ரால் உருவாக்கப்பட்ட எந்த இரண்டு ஸ்தாபனங்களும் யாதொரு வேற்றுமையுமின்றி ஒரே விதமாக இருக்கமுடியாது. நமக்கென சில விசேஷமான சூழ் நிலைகளும், விசித்திரமான வழிகளும் உள்ளன. எனவே முன்னுதாரணங்கள் எப்படி இருப்பினும் பல துறைகளிலும் நமக்கென நாம் ஒரு புதிய பாதையை அமைத்துக் கொள்ளவேண்டும். எனவே ஒரே ஒரு சட்ட சபை இருப்பதன் விளைவாக நாம் தவறான வழியில் சென்றுவிட மாட் டோம் என்றே கருதுகிறேன். மனிதனின் யுக்திக்கு எட்டிய வரையில் அதை எவ்வளவுதூரம் குறையற்றதாக அமைக்க முடி யுமோ அவ்வளவுக்குக் குறையற்றதாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள் ; ஆனால் ஒரே ஒரு சட்ட சபையுடன் திருப்தி அடையுங்கள். இவ்விஷயமாக இதைக் காட்டிலும் அதிகமாக நான் எதுவும் சொல்ல வேண்டிய தேவை இல்லை.

### விசேஷத் தொகுதிகள்

இப்போது நான், விசேஷத் தொகுதிகளுக்கு பிரதிநிதித் துவம் அளிக்கப்பட வேண்டிய விஷயத்துக்கு வருகிறேன். ஹிந்து—முஸ்லிம்—சீக்கியர் சிக்கலை, சில விசேஷ முறைகளைக்

கைக்கொண்டு தீர்க்கவேண்டும் என்பதை காங்கிரஸ் ஒப்புக் கொண்டிருக்கிறது. அவ்விதம் செய்வதற்குச் சரித்திர சம்பந்த மான சிறந்த காரணங்களும் உண்டு. ஆனல் அந்தக் கொள்கையை மற்றவர்கள் விஷயத்திலும் அமுலுக்குக் கொண்டுவர காங்கிரஸ் விரும்பவில்லே. விசேஷப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண் டியவர்களின் ஜாபிதாவை நான் செவி கொடுத்துக் கேட்டேன். தீண்டாதார் சம்பந்தப்பட்ட வரையில், டாக்டர் அம்பேத்கார் என்ன கூறுகிருர் என்பதை நான் புரிந்து கொள்ளவில்லே. தீண்டாதாரின் நலன்களேப் பாதுகாக்க பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்பதை யொட்டி டாக்டர் அம்பேத்காருக்கு உள்ள பொறுப்பில் காங்கிரசுக்கும் பங்கு உண்டு. இந்தியா முழுவது முள்ள எந்தத் தனி நபர்களின் அல்லது ஸ்தாபனங்களின் நலன் களிலும் காங்கிரஸ் மிகுந்த அக்கறை கொண்டிருப்பதுபோல், தீண் டாதார் நலன்களிலும் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறது. எனவே வேறு எந்தப் பிரிவினருக்கும் விசேஷப் பிரதிநிதித் துவம் அளிப்பதை நான் பலமாக எதிர்ப்பேன். வயது வந்தவர் களுக்கு வாக்குரிமை என்ற முறையின் கீழ் தொழிலாளர்களுக்கு விசேஷப் பிரதிநிதித்துவம் தேவையில்லே. நிலச்சுவான்தார் களுக்கும் நிச்சயமாக விசேஷப் பிரதிநிதித்துவம் தேவையில்லே. அதற்கு நான் கூறும் காரணம் இதுதான்: நிலச்சுவான்தார் களின் உடைமைகளேயெல்லாம் பறித்துக்கொள்ள வேண்டுமென காங்கிரஸ் விரும்பவில்லே; வாயில்லாத ஏழை மக்களும் அதை விரும்பவில்லே. நிலச்சுவான்தார்கள் தங்களுடைய குடிமக்களின் தர்மகர்த்தாக்களாக இருக்கவேண்டும் என்பதே அவர்களுடைய விருப்பமாகும். கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான தங்க ளுடைய குடியானவர்கள் அவர்களுடைய அபேட்சகர்களாகவும், பிரதிநிதிகளாகவும் தங்களேயே விரும்புவார்கள் என்றும், வேறு யாரையும், குடியானவர்களுக்குள்ளேயே ஒருவரையும்கூட விரும்ப மாட்டார்கள் என்றும் நிலச்சுவான்தார்கள் பெருமையடைய வேண்டும்.

அப்போது நிலச்சுவான்தார்கள் தங்களுடைய நலன்களும் குடியானவர்களுடைய நலன்களும் ஒரேவிதமானவை என்று கருதுவார்கள். அதைக் காட்டிலும் உயர்ந்த, சிறந்த நிலே வேறு என்ன இருக்கமுடியும்? ஆனல் நிலச்சுவான்தார்கள் தங்களுக்கு விசேஷ சலுகைகள் காட்டவேண்டும், விசேஷப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும் என்றும் வற்புறுத்துவார்களாயின், அதன் விளேவாக நம்மிடையே ஒற்றுமைக்குக் குந்தகம் ஏற்படும். நிலச் சுவான்தார்களின் சார்பிலோ அல்லது வேறு எந்தப் பிரிவி



லார்டு வேவலின் திட்டத்தைப்பற்றி காந்திஜி, பம்பாயில் ராஜாஜியுடனும் அபுல் கலாம் ஆசாதுடனும் விவாதிக்கிறார். (1945)

னரின் சார்பிலோ அத்தகைய கோரிக்கை வற்புறுத்தப்பட மாட்டாதென நம்புகிறேன்.

பிறகு எனது நண்பர்களான ஐரோப்பியர்களைப்பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். அவர்களுக்கும் தாம் பிரதிநிதி என்று ஸ்ரீ கேவின் ஜோன்ஸ் கூறிக்கொள்வது இயல்பேயாகும். அவருக்கு நான் பணிவுடன் ஒரு யோசனை கூற விரும்புகிறேன். இதுவரையில் அவர்கள் விசேஷ சலுகைகள் காட்டப்படும் ஒரு பிரிவினராக இருந்து வந்திருக்கிறார்கள். அந்நிய அரசாங்கம் அவர்களுக்கு மிகவும் தாராளமாகப் பாதுகாப்பு அளித்து வந்திருக்கிறது. அவர்கள் இப்போது இந்திய மக்களின் நலனே தங்களுடைய நலன் என்று கருதுவார்களாயின், ஸ்ரீ கேவின் ஜோன்ஸ் தாங்கள் அஞ்சுவதாகக் கூறியதுபோல் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. 'தாங்கள் இந்தியர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென ஐரோப்பியர்களும் ஆங்கிலேயர்களும் விரும்பினாலும், நாங்கள் அவர்களைத் தேர்ந்தெடுக்கப்போவதில்லை' என்று சில இந்தியர்கள் கூறலாம். ஆனால் இந்தியர்களுடைய நலனே தங்களுடைய நலன் என்று அவர் கருதுவாராயின், இந்திய மக்கள் ஓர் இந்தியரை விட்டுவிட்டு அவரையே விரும்புவார்கள் என்பதை, நான் இந்தியா முழுவதும் அவரை அழைத்துச் சென்று காட்டுகிறேன்.

சார்லி ஆண்ட்ரூஸை எடுத்துக்கொள்ளுங்கள். இந்தியாவிலுள்ள எந்தத் தொகுதியில் அவர் நின்றாலும் யாதொரு சங்கடமுமின்றி அவர் தேர்ந்தெடுக்கப்படுவாரென நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். இந்தியா முழுதும் மக்கள் அவரை மனப்பூர்வமாக வரவேற்பார்களா, அல்லவா என்பதை அவரையே கேளுங்கள். இதுபோல் நான் பல உதாரணங்கள் கூறமுடியும். எனவே ஒரு தடவையாவது மக்களின் நல்லெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ முயற்சிக்கும்படியும், தங்களுடைய நலன்களுக்கு விசேஷப் பாதுகாப்புகளை நாடவேண்டாம் என்றும் ஐரோப்பியர்களை நான் வேண்டிக்கொள்கிறேன். பாதுகாப்புகளை நாடுவது தவறான வழியாகும். அவர்கள் இந்தியாவில் வாழ விரும்பினால், எங்களில் ஒருவராக அவர்கள் வாழ்வதையே நான் விரும்புகிறேன்; அவ்விதம் வாழும்படியே அவர்களை நான் வேண்டிக்கொள்கிறேன். காங்கிரஸ் அங்கீகரிக்கும் எந்தத் திட்டத்திலும், விசேஷ நலன்களுக்குப் பாதுகாப்பு அளித்தல் என்பதற்கே இடமில்லை. வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை கிடைக்கும்போது, விசேஷ நலன்களுக்குத் தானாகவே பாதுகாப்பு ஏற்பட்டு விடுகிறது.

கிறிஸ்தவர்களைப் பொறுத்தமட்டில், ஒரு கிறிஸ்தவர் கூறியதை இங்கே குறிப்பிடுகிறேன். அவர் இப்போது நம்மிடையே இல்லை. "எங்களுக்கு விசேஷப் பாதுகாப்பு எதையும் நாங்கள் விரும்பவில்லை" என்று அவர் கூறினர். தாங்கள் விசேஷப் பாதுகாப்பு எதையும் விரும்பவில்லை என்றும், தாங்கள் பணிவுடன் தொண்டு செய்வதன்மூலம் கிடைக்கும் விசேஷப் பாதுகாப்பே தங்களுக்குப் போதுமானது என்றும் கூறி கிறிஸ்தவர் ஸ்தாபனங்களிலிருந்து எனக்குக் கடிதங்கள் கிடைத்திருக்கின்றன.

### விசுவாசப் பிரமாணம்

விசுவாசப் பிரமாணம் எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி நான் எவ்வித அபிப்பிராயமும் கூறுவதற்கில்லை. இந்தியா பூரண சுதந்திரம் பெறுவதாயின், விசுவாசப் பிரமாணம் இயல்பாகவே அதற்குத் தகுந்தாற்போல் இருக்கும். இந்தியா அடிமை இந்தியாவாகவே இருப்பதாயின், அப்போது அப்பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு இடமில்லை. எனவே இன்று அதையொட்டி நான் எத்தகைய அபிப்பிராயமும் கூறுவது சாத்தியமல்ல.

### நியமனங்கள்

கடைசியாக, ஒவ்வொரு சட்டசபையிலும் நியமன அங்கத்தினர்களுக்கு விதி வகுக்க வேண்டுமா என்பதாகும். காங்கிரஸ் வகுத்துள்ள திட்டத்தில் நியமன அங்கத்தினர்களுக்கு இடமில்லை. சட்ட சபைக்கு நிபுணர்களோ அல்லது யாருடைய யோசனைகளை நாடுகிறோமோ அவர்களோ வருவதை நான் அறிந்து கொள்ளமுடியும். அவர்கள் தங்களுடைய யோசனைகளைக் கூறிய பின் சபையை விட்டுச் சென்றுவிட வேண்டும். அவர்களுக்கு வாக்குரிமை அளிப்பது எள்ளளவும் நியாயமல்ல. கலப்பற்ற ஒரு ஜனநாயக ஸ்தாபனத்தை நாம் விரும்புவதாயின், பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கே வாக்குரிமை இருக்க வேண்டும். எனவே நியமன அங்கத்தினர்களுக்கு இடம் அளிக்கும் ஒரு திட்டத்தை நான் ஆதரிக்க முடியாது.

பெண்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென் நாங்கள் விரும்புகிறோம்; ஐரோப்பியர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம்; தீண்டாதார் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென நாங்கள் நிச்சயமாக விரும்புகிறோம்; கிறிஸ்தவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம். மேற்கண்டவர்கள் மிகப் பெரிய சிறுபான்மை சமூகங்களைச் சேர்ந்

தவர்களாவர். அதிகத் தொகையினராயினும் அவர்கள் சிறுபான்மையோரே யாவர். பல்வேறு தொகுதிகளும் நியாயமான காரணமின்றி பெண்களையோ, ஐரோப்பியர்களையோ, தீண்டாதாரையோ அல்லது கிச்சுவான்தார்களையோ தேர்ந்தெடுக்க மறுக்குமாயின், தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் அடங்கிய சட்ட சபை சிறுபான்மையோரான அவர்களைத் தேர்ந்தெடுக்கவோ அல்லது நியமிக்கவோ அதிகாரம் அளித்து நாம் அரசியல் திட்டத்தில் ஒரு ஷரத்தைச் சேர்க்க வேண்டும். ஒரு வேளை நான் கூறுவதன் அர்த்தம் தெளிவாக இல்லாமலிருக்கலாம். எனவே அதன் சம்பந்தமாக ஓர் உதாரணம் கூறுகிறேன்.

ஒரு மாகாண காங்கிரஸ் கமிட்டியில் அவ்விதம் ஒரு விதியும் அமுலில் இருந்து வருகிறது. அக்கமிட்டியில் குறிப்பிட்ட தொகையினரான பெண்களையும், முஸ்லிம்களையும் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று தொகுதிகளைக் கேட்டுக்கொண்டிருக்கிறோம். அவைகள் அவ்விதம் தேர்ந்தெடுக்கத் தவறுமாயின், தேர்ந்தெடுக்கப்பட்ட கமிட்டியே பல்வேறு தொகுதிகளிலிருந்தும் குறிப்பிட்ட தொகையினரான பெண்களையும், முஸ்லிம்களையும் தேர்ந்தெடுக்க வேண்டும். தொகுதிகள் தவறான பாதையில் செல்லாமல் தடுக்க அத்தகைய ஷரத்து இருப்பதை நான் வரவேற்கிறேன். தொகுதிகள் இன வெறிக்கும் சாதி வெறிக்கும் இலக்காகாமல் எல்லா வகுப்பினரையும் தேர்ந்தெடுக்கும் என்ற நம்பிக்கையின் மீதே முதலில் நாம் தொடங்க வேண்டும். சாதி, உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்ற கொள்கை ஆகியவற்றை காங்கிரஸ் எதிர்க்கின்றது. எல்லோரும் முற்றிலும் சமத்துவமானவர்கள் என்ற உணர்ச்சியையே காங்கிரஸ் வளர்த்து வருகிறது.

இவ்வளவு அதிகமாக உங்கள் நேரத்தை எடுத்துக் கொண்டதற்காக நான் வருந்துகிறேன். எனினும் எனக்கு இந்தச் சலுகை காட்டியதற்காக நான் தலைவருக்கு நன்றி உள்ளவனாக இருக்கிறேன்.

# 3
# இரண்டு சோதனைகள்

லண்டனிலுள்ள காந்தி சங்கமும், இந்திய காங்கிரஸ் லீகும் அளித்த விருந்தொன்றில் காந்திஜி பேசியதாவது :

நான் லண்டனுக்கு வந்ததிலிருந்து, என்னிடம் காட்டப்படும் நட்புறவும், உண்மையான அன்புமே எனது அனுபவமாக இருந்து வருகிறது. கஷ்ட காலத்தில் நீங்கள் நண்பர்களாக இருந்து வந்திருப்பதை எனக்கு நினைவூட்டினீர்கள்.* கஷ்ட காலத்தில் நண்பர்களாக இருப்பவர்களே உண்மையான நண்பர்களாவர். இந்தியா, சரியாகச் சொல்லுவதாயின் காங்கிரஸ் வாதிகள், சற்றேறக்குறைய உலகிலுள்ள எல்லோராலும் கைவிடப்பட்டபோது நீங்கள் காங்கிரசுக்குப் பக்கபலமாக உறுதியுடன் நின்றீர்கள்; காங்கிரசின் நிலையை உங்களுடைய சொந்த நிலையாகக் கருதினீர்கள். காங்கிரஸ் திட்டத்திலுள்ள நம்பிக்கையை இன்று நீங்கள் மீண்டும் உறுதிப்படுத்தி யிருக்கின்றீர்கள். அதன் பலனாக நீங்கள் அலுவல்களின் பளுவைக் குறைத்திருக்கிறீர்கள்.

காங்கிரஸ் பிரதிநிதி என்ற முறையில் இங்கே நான் காங்கிரசின் செய்தியை அறிவிக்க முற்படுவது கொல்லர் தெருவில் ஊசி விற்பதற்கு ஒப்பாகும். காங்கிரஸ் கோரிக்கையின் தகுதிகளைப்பற்றி நீங்கள் எல்லோரும் நன்கு அறிவீர்கள். காங்கிரசின் கோரிக்கையை நீங்கள் முற்றிலும் ஆதரித்து வருவீர்கள் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

இன்று உங்களுடைய நடவடிக்கையின் மூலம், இந்தியக் கிராமங்களில் அரைப் பட்டினி கிடக்கும், வாயில்லாத கோடிக் கணக்கான மக்களிடம் உங்களுக்குள்ள நட்புறவுக்கு முத்திரை வைத்திருக்கிறீர்கள். நீங்கள் இந்தியாவுக்காகச் சிறிதளவு தியாகம் செய்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். உங்களில் சிலர் இந்தியாவின் சுதந்திர லட்சியத்தை ஆதரிப்பதன் மூலம் மிகவும் அதிகமாகத் தியாகம் செய்திருக்கிறீர்கள். ஆங்கில மொழியில் ‘சுதந்திரம்’ என்ற சொல்லின் முழு அர்த்தத்தையும் உணர்ந்தே

---

* அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்த ஸ்ரீ ஏ. பென்னர் பிராக்வேயை ‘நீங்கள்’ என்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்

நீங்கள் அவ்விதம் செய்திருக்கிறீர்கள். இந்தியாவின் லட்சியத்தை நீங்கள் தொடர்ந்து ஆதரித்து வருவீர்களாயின், நீங்கள் இன்னும் அதிகமான தியாகங்கள் செய்யவேண்டி யிருக்கும். இங்கே வரும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டபோது, என் மனத்தில் மயக்கம் எதுவுமில்லை. கௌரவம் வாய்ந்த ஓர் ஆங்கிலேயருக்கு நான் அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டுமென்பதே நான் லண்டனுக்கு வந்ததன் முக்கிய காரணங்களில் ஒன்று என நான் லண்டனில் பிரவேசித்த முதல் நாளன்றே கூறியதை நீங்கள் கேட்டீர்கள். இந்த உறுதி மொழிக்கு இணங்க, பலன் ஏற்படுமா என்பதுபற்றிச் சிந்திக்காமலேயே, எந்த லட்சியத்தை அடைய இந்தியா முற்றிலும் தகுதி வாய்ந்ததோ அந்த லட்சியத்திற்காகவே காங்கிரஸ் பாடுபட்டு வருகிறது என்பதை ஒவ்வொரு ஆங்கிலேய ஆடவருக்கும், பெண்மணிக்கும் எடுத்துக் காட்ட என்னால் இயன்ற வரையில் முயற்சித்து வருகிறேன்; மேலும், அவ்விஷயத்தில் காங்கிரஸ் மனப்பூர்வமாக அக்கறை கொண்டிருக்கிறது என்பதையும் எடுத்துக்காட்ட முயற்சித்து வருகிறேன். காங்கிரசின் கௌரவத்தைப் பாதுகாக்கவே நான் இங்கு வந்திருக்கிறேன்; காங்கிரசின் கட்டளையில் உள்ள கோரிக்கைகள் எல்லாவற்றையும் நிறைவேற்ற வேண்டும் என்று கூறுவதன் மூலம் இந்தியாவின் கௌரவத்தைப் பாதுகாக்கவே நான் இங்கு வந்திருக்கிறேன். காங்கிரசின் கோரிக்கையைத் தளர்த்த எனக்குச் சுதந்திரமில்லை. இந்தக் கடமை கடினமானது, மனிதனுடைய சக்தியை மீறியது என்பதை நான் உணருகிறேன். இந்தியாவில் உள்ள நிலைமையைப் பற்றிய அறியாமை இங்குள்ள மக்களிடையே மிகவும் அதிகமாக இருந்து வருகிறது; உண்மையான வரலாற்றைப்பற்றிய அறியாமையும் அதிகமாக இருந்து வருகிறது.

நான் இங்கிலாந்துக்குப் புறப்படும் தறுவாயில் என்னுடைய நண்பர் ஒருவர் எனக்கு ஒரு விஷயத்தை நினைவூட்டினர். அதாவது நீங்கள் குழந்தைப் பருவத்திலிருந்து உண்மையான சரித்திரத்தையல்ல, போலி சரித்திரத்தையே வாசித்து வளர்ந்து வந்திருக்கின்றீர்கள் என்றும், எனவே நான் இங்கு வருவதால் யாதொரு பலனும் ஏற்படாது என்றும் அவர் என்னிடம் கூறினர். இங்குள்ள ஆங்கிலேயர்களுடன் எனக்கு ஏற்பட்டுள்ள தொடர்பு, அந்த நண்பர் கூறியது முற்றிலும் உண்மை என்பதை நிரூபித்திருக்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியானது, இந்தியாவுக்கு மொத்தத்தில் நன்மையைக் காட்டிலும் அதிக பாதகத்தையே விளைவித்திருக்கிறது. ஆங்கிலேயர்களுக்கு இதை.

உணர்ந்து கொள்வது மிகக் கடினமாகவும் அசாத்தியமாகவும் இருக்கிறது. பிரிட்டிஷ் தொடர்பு காரணமாக இந்தியாவுக்குப் பல நன்மைகள் ஏற்பட்டிருக்கலாம். எனினும் நன்மைகளையும் தீமைகளையும் மொத்தத்தில் கணக்கிட்டு இந்தியாவின் இன்றைய நிலை என்ன என்பதைப் பரிசீலனை செய்வதே மிக மிக முக்கியமாகும்.

இதை முடிவு செய்ய, தவறாத இரண்டு சோதனைகள் இருக்கின்றன.

1. இன்று உலகிலேயே இந்தியா மிக மிக ஏழை நாடாக இருப்பதும், இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் வருடத்தில் ஆறு மாதங்கள் வரையில் யாதொரு வேலையுமின்றி சோம்பேறிகளாக இருக்கும்படி நேருவதும் உண்மையா, அல்லவா?

2. பிரிட்டிஷார், இந்தியர்களைக் கட்டாயப்படுத்தி நிராயுதபாணிகளாகச் செய்ததும், ஒரு சுதந்திர நாட்டு மக்களுக்கு அளிக்கப்படவேண்டிய பல சந்தர்ப்பங்களையும் அவர்களுக்கு அளிக்காமல் மறுத்ததும், அவர்களைக் கசக்கிப் பிழிந்து பலவீனர்களாகச் செய்ததும் உண்மையா, அல்லவா?

இந்த இரண்டு விஷயங்களிலும் இங்கிலாந்து தன் கடமையைச் செய்யப் பெரிதும் தவறிவிட்டது என்பதை, பரிசீலனை செய்ததன் பலனாக நீங்கள் அறிந்து கொள்வீர்களாயின், பின்னர் இங்கிலாந்து தன் கொள்கையை மாற்றிக்கொள்ள வேண்டிய காலம் வந்திருக்கிறது என்பது உண்மை அல்லவா?

ஆயிரக்கணக்கான மேடைகளிலிருந்து காலஞ்சென்ற லோகமான்ய திலகர் கூறியதுபோல், "விடுதலையும் சுதந்திரமும் இந்தியாவின் பிறப்புரிமையாகும்." இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி இறுதியில் பிரிட்டிஷ் அலங்கோல ஆட்சியாக முடிந்திருக்கிறது என்பதை நான் நிரூபிக்க வேண்டிய அவசியம் இல்லை. பிரிட்டிஷாரின் ஆட்சி நல்லதாயினும், தீயதாயினும், வாயில்லாத கோடிக்கணக்கான மக்களின் சார்பில் சுதந்திரம் வேண்டும் என்று கோரிய அந்த விநாடியிலேயே இந்தியாவுக்குச் சுதந்திரம் பெற உரிமை உண்டு என்று நான் சொல்லுவதே போதுமானது.

"விடுதலை", "சுதந்திரம்" என்ற சொற்களைக் கண்டு பயப்படும் சிலர் இந்தியாவில் இருக்கிறார்கள் என்று கூறுவது, அதற்கு விடையாகாது. இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் 'பாதுகாப்பு' வாபசாகி விடுமாயின் என்ன ஆகுமோ என்பதற்காக, இந்தியாவின்

விடுதலையைப்பற்றிப் பேச எங்களில் சிலர் பயப்படுகிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். எனினும் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களும், அரசியல் உணர்வு பெற்றுள்ளவர்களும் அவ்விதம் பயப்படவில்லை என்று நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். விடுதலைக்கான விலையைக் கொடுக்க அவர்கள் தயாராக இருக்கிறார்கள். எனினும் காங்கிரசில் தற்போதுள்ள ஊழியர்கள் இருந்துவரும் வரையில், தற்போதைய கொள்கையில் காங்கிரசுக்கு நம்பிக்கை இருந்துவரும் வரையில் நாங்கள் குறிப்பிட்ட எல்லைகளுக்கு உட்பட்டே செயல்பட வேண்டி யிருக்கும். அதாவது மற்றவர்களுடைய உயிர்களைப் பலிகொடுத்து இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற நாங்கள் விரும்பவில்லை; ஆட்சியாளர்களின் ரத்தத்தைச் சிந்தி இந்தியாவின் சுதந்திரத்தைப் பெறவும் நாங்கள் விரும்பவில்லை. ஆனால், அந்தச் சுதந்திரத்தைப் பெற தேசமும் நாங்களும் ஏதாவது தியாகம் செய்ய வேண்டி யிருக்குமாயின், அதைப் பெறுவதற்காக கங்கையின் பிரவாகத்தைப்போல் ரத்தம் சிந்த நாங்கள் தயங்கமாட்டோம் என்பதை நீங்கள் காண்பீர்கள். நீங்கள் கூறியதுபோல் உங்களிடையே நான் ஓர் அந்நியன் அல்ல, ஒரு தோழனே. உங்களைப் பொறுத்த மட்டில், நீங்கள் யாருடைய பிரதிநிதிகளாக இருக்கிறீர்களோ அவர்களைப் பொறுத்த மட்டில், நீங்கள் எப்போதும் எங்களுக்குப் பக்க பலமாக நிற்பீர்கள் என்ற உறுதி எனக்கு உண்டு; நீங்கள் ஆபத்தில் உதவும் நண்பர்களாதலின் நீங்கள்தான் உண்மையான நண்பர்கள் என்பதை மீண்டும் இந்தியாவுக்கு நிரூபித்துக் காட்டுவீர்கள் என்ற உறுதியும் எனக்கு உண்டு.

எனக்கு மகத்தான வரவேற்பு அளித்ததற்காக உங்களுக்கு மீண்டும் நான் நன்றி கூறுகிறேன். இந்த வரவேற்பு எனக்கு அளித்த கௌரவம் அல்ல என்பதை நான் அறிவேன். நான் மேற்கொண்டுள்ள கொள்கைகளில் என்னைப்போல் உங்களுக்கும், —என்னைக் காட்டிலும் கூட உங்களுக்கு—அதிக ஆர்வமும் பற்றுதலும் உண்டு என்பதை நான் அறிவேன். இன்று நான் பிரகடனம் செய்யும் கொள்கைகளை ஒரு காலத்திலும் நான் கைவிடாமல் இருக்க உங்களுடைய பிரார்த்தனைகளும் உதவியும் துணையாக இருக்குமென நம்புகிறேன்.

# 4

# காங்கிரசும் சிறுபான்மையோரும்

வட்டமேஜை சிறுபான்மையோர் கமிட்டியில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரம் வருமாறு:

பிரதம மந்திரி அவர்களே, நண்பர்களே,

வகுப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக, பல்வேறு பிரிவுகளையும் சேர்ந்த பிரதிநிதிகளுடன் நாங்கள் தனித்த முறையில் கலந்து பேசினோம். அவ்விதம் பேசியதன் பலனாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு திட்டத்தைத் தயாரிப்பதில் நான் முற்றிலும் தோல்வியடைந்துள்ளேன் என்பதை, நான் ஆழ்ந்த வருத்தத்துடனும் வெட்கத்துடனும் தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன். அம்முயற்சியில் அருமையான ஒருவார காலம் வீணாகி விட்டதைக் குறித்து, பிரதம மந்திரியான உங்களிடமும், மற்ற சகாக்களிடமும் நான் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்தப் பேச்சு வார்த்தைகளை நடத்தும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டபோது, அவை வெற்றிபெறும் என்ற நம்பிக்கைக்கு இடம் இல்லை என்பதை நான் அறிவேன். எனினும் அவ்விஷயமாக ஒரு சமரசம் ஏற்பட என்னால் இயன்றவரையில் பெருமுயற்சி செய்தேன் என்ற உண்மைதான் எனக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது.

இருந்தாலும், நாங்கள் முற்றிலும் வெட்கப்படும் விதத்தில் பேச்சு வார்த்தைகள் தோல்வியடைந்தன என்று கூறுவது முழு உண்மையல்ல. தோல்விக்குக் காரணங்கள் இந்தியப் பிரதிநிதிகள் கோஷ்டி அமைப்பில் அடங்கியிருக்கின்றன. எங்களில் பெரும்பாலோரும் கட்சிகளால் அல்லது பிரிவுகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அல்ல; அரசாங்கத்தினால் நியமனம் செய்யப்பட்டே நாங்கள் இங்கே வந்திருக்கிறோம். ஒரு சமரச உடன்பாட்டிற்கு அத்தகைய பிரதிநிதிகள் இங்கே இருக்க வேண்டியது முற்றிலும் அவசியமும் இல்லை. மேலும் சிறுபான்மையோர் கமிட்டியைக் கூட்ட இது காலமல்ல. எங்களுக்குக் கிடைக்கப்போவது என்ன என்பதை நாங்கள் அறியாத நிலையில் இதைக் கூட்டுவது, உண்மையான நடைமுறைக்கு ஒவ்வாததாக

இருக்கிறது. நாங்கள் விரும்புவது கிடைக்கப்போகிறது என்று எங்களுக்குத் திட்டவட்டமாகத் தெரியுமாயின், பாவமான போராட்டத்தில் ஈடுபட்டு அந்தச் சந்தர்ப்பத்தை இழப்பதற்கு முன் பல தடவை யோசித்துப் பார்ப்போம். அதைப் பெறுவது, இந்தியப் பிரதிநிதி கோஷ்டியினர் வகுப்புப் பிரச்னையைத் தீர்த்து சமரசமான ஒரு முடிவுக்கு வருவதையே பொறுத்திருக் கிறது என்றிருக்குமாயின், நாங்கள் சச்சரவில் ஈடுபடத் தயங்கு வோம். வகுப்புப் பிரச்னை தீருவது சுயாட்சி அரசியலின் சிகர மாக இருக்க வேண்டுமேயன்றி, அதன் அஸ்திவாரமாக இருக்கக் கூடாது. அந்நியர் ஆதிக்கம் காரணமாக நமது வேற்றுமைகள் பலப்படுத்தப்பட்டிருக்கின்றன. சுதந்திர சூரியன் உதயமாகும் போது அதன் உஷ்ணத்தினல் சமூக வேற்றுமைகளாகிற பனி மலை உருகி மறைந்துவிடும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந் தேகம் இல்லை.

எனவே, காலவரையறையின்றி சிறுபான்மையோர் கமிட் டியை ஒத்தி வைக்க வேண்டும் என்றும், எவ்வளவு சாத்தி யமோ அவ்வளவு விரைவில் அரசியலின் மூலாதாரமான அம்சங் களை உருவாக்க வேண்டும் என்றும் நான் யோசனை கூறத் துணி கிறேன். வகுப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான உண்மையான வழியைக் கண்டுபிடிக்கும் வேலையும் தொடர்ந்து நடைபெற வேண்டும். ஆனல் அந்த வேலை அரசியலை உருவாக்கும் வேலை களுக்கு முட்டுக் கட்டையாக இருக்கக்கூடாது. கவனம் முழு வதும், முக்கியமான அரசியல் திட்டத்தை உருவாக்குவதில் செலுத்தப்படவேண்டும்.

இந்த முயற்சியில் நான் தோல்வியடைந்ததற்கு, அவ்விஷய மாக இனி நம்பிக்கைக்கே இடமில்லை என்று அர்த்தமல்ல என் பதை நான் கூற வேண்டிய அவசியமில்லை. எனது தோல்வி இறுதியான தோல்வியல்ல. எனது அகராதியில் இறுதியான தோல்வி என்ற வார்த்தையே இல்லை. விசேஷ முயற்சி எடுத் துக்கொண்டு அப்பிரச்னையைத் தீர்ப்பதற்காக நான் ஒரு வாரம் அவகாசம் கேட்டேன். நீங்கள் பெருந்தன்மையுடன் அந்த அவ காசம் கொடுத்தீர்கள். அந்த முயற்சியில் தோல்வியடைந்த தையே நான் 'தோல்வி' என்று ஒப்புக்கொண்டுள்ளேன்.

இந்தத் தோல்வியை, வெற்றிக்கு ஒரு வழியாக உபயோ கிக்க நான் உத்தேசித்திருக்கிறேன். அவ்விதமே செய்ய உங்கள் எல்லோரையுமே நான் அழைக்கின்றேன். வட்ட மேஜை மகா நாட்டின் நடவடிக்கைகள் முடிவுறும்போதுகூட, வகுப்புப் பிரச்

னையைத் தீர்ப்பதற்கான எல்லா முயற்சிகளும் தோல்வியடையு மாயின், எதிர்பார்க்கப்படும் அரசியலில் ஒரு பிரிவைச் சேர்க்கும் படி நான் யோசனை கூறுகிறேன். அந்தப் பிரிவுக்கு இணங்க ஒரு நீதிச் சபையை நியமிக்கலாம். அந்த நீதிச் சபை எல்லோ ருடைய கோரிக்கைகளையும் பரிசீலனை செய்து, தீர்க்கப்படாமல் விடப்பட்டுள்ள எல்லா விஷயங்களையொட்டியும் இறுதியான முடிவுகளைச் செய்யும்.

வகுப்புப் பிரச்னையை யொட்டிப் பேச்சுவார்த்தைகள் நடத் துவதற்காகக் கொடுக்கப்பட்ட ஒருவார காலம் வீணாகிவிட்டதாக இந்தக் கமிட்டி நினைக்கவேண்டிய அவசியம் இல்லை. இந்தப் பிரதிநிதி கோஷ்டியில் சேராத பல நண்பர்கள், இவ்விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுள் சர் ஜாப்ரே கார்பெட்டை நான் குறிப்பிடலாம். அவர் பஞ்சாப் புன ரமைப்புத் திட்டம் ஒன்றை உருவாக்கியிருக்கிறார். அது அங்கீகரிக் கப்படவில்லை என்றாலும், அது பரிசீலனைக்கு உரியது என்பதே என் அபிப்பிராயமாகும். அன்பு கூர்ந்து அத்திட்டத்தை மேலும் விளக்கி, அங்கத்தினர்களுக்கு வழங்கவேண்டும் என்று நான் சர் ஜாப்ரேயைக் கேட்டுக்கொண்டு வருகிறேன். எங்களுடைய சீக்கிய சகாக்களும் ஒரு திட்டத்தைத் தயாரித்திருக்கிறார்கள். அதுவும் பரிசீலனைக்கு உரியதே. பஞ்சாபில் இரண்டு சட்ட சபைகளை அமைக்க வேண்டுமென்ற யுக்தியான, புதுமை யான ஒரு திட்டத்தை நேற்றிரவு சர் ஹியூபர்ட் கார் கொண்டு வந்தார். அவற்றில் கீழ்ச் சபை முஸ்லிம்களையும், மேல் சபை சீக்கி யர்களையும் திருப்தி செய்வதாக இருக்கவேண்டும் என்பதே அவரது கருத்தாகும். இரு சட்ட சபைகளை அமைப்பதில் நான் நம்பிக்கையில்லாதவன் என்றாலும், சர் ஹியூபர்ட்டின் யோசனை என்னை மிகவும் கவர்ந்திருக்கிறது. உத்தியோகப்பற்றற்ற முறை யில் ஆலோசனைகள் நடந்தபோது அவர் காட்டிய உற்சாகத்திற் காக நான் நன்றி செலுத்துகிறேன். அதே உற்சாகத்துடன், அவரது யோசனையை மேற்கொண்டு தொடர்ந்து பரிசீலனை செய்யும்படியும் அவரை நான் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, நான் இந்த ஆலோசனைகளில் கலந்துகொள் வதற்கு ஒரே காரணம், நான் இந்திய தேசீய காங்கிரஸ் மகா சபையின் பிரதிநிதி என்பதுதான். காங்கிரசின் நிலைமையை நான் தெளிவாகக் குறிப்பிடவேண்டும். இந்தியா முழுவதற்குமே தான் பிரதிநிதி ஸ்தாபனம் என்று காங்கிரஸ் கூறிக்கொள் கிறது. காங்கிரஸ், வாயில்லாத கோடிக்கணக்கான மக்களின் பிரதிநிதி ஸ்தாபனம் என்பது நிச்சயமே. ஆனால் நிலைமை, அதி

லும் குறிப்பாக வட்ட மேஜை மகாநாட்டிலுள்ள நிலைமை அதற்கு நேர்மாருகவே தோன்றுகிறது. தீண்டாதாரையும், மிக்க துரதிர்ஷ்டசாலிகளும், கேட்பாரற்று இருப்பவர்களுமான பின் தங்கிய வகுப்பினரையும் சேர்த்தே கோடிக்கணக்கான மக்கள் என்று நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

**காங்கிரசின் சமரசத் திட்டம்**

காங்கிரசின் சுருக்கமான நிலை இதுதான். காங்கிரசும், காங்கிரஸ் காரியக் கமிட்டியும் நிறைவேற்றிய தீர்மானத்தையே இப்போது நான் வாசிக்கிறேன்.

"காங்கிரஸ் ஆரம்பமானதிலிருந்து தூய்மையான தேசீயத்தையே அது தன் கொள்கையாகக் கொண்டிருக்கிறது. வகுப்புத் தடைகளை உடைத்தெறிய அது முயற்சிசெய்து வந்திருக்கிறது. தேசீயப் பாதையில் அதனுடைய முன்னேற்றத்தின் உச்ச நிலையையே கீழ்க்கண்ட லாகூர் தீர்மானம் காட்டுகிறது.

" 'நேரு அறிக்கையின் காலகெடு முடிந்துவிட்டதால், சமூகப் பிரச்னைகளை யொட்டி காங்கிரசின் கொள்கையைப் பிரகடனம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் சுதந்திர இந்தியாவில், கண்டிப்பான தேசீய முறைகளை அடிப்படையாகக் கொண்டே வகுப்புப் பிரச்னைகள் தீர்க்கப்படவேண்டும் என்பது காங்கிரசின் நம்பிக்கையாகும். பொதுவாக முஸ்லிம்களுக்கும், மற்ற சிறு பான்மை வகுப்பினருக்கும், குறிப்பாக சீக்கியர்களுக்கும், வகுப்புப் பிரச்னைகளைத் தீர்க்க நேரு அறிக்கையில் குறிப்பிட்டிருந்த யோசனைகள் திருப்தியளிக்கவில்லை. எனவே சம்பந்தப்பட்ட பிரிவினருக்குத் திருப்தியளிக்காத, வகுப்புப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான எந்த முறைகளையும் எதிர்கால அரசியலில் சேர்ப்பதை காங்கிரஸ் ஒப்புக்கொள்ளாது என்று சீக்கியர்களுக்கும், முஸ்லிம்களுக்கும், மற்ற சிறுபான்மையினருக்கும் காங்கிரஸ் உறுதி கூறுகிறது.'

"எனினும் நாட்டின் நெருக்கடியான இந்தக் கட்டத்தில் வகுப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான ஒரு திட்டத்தை வகுக்க காரியக்கமிட்டி யோசனை கூறவேண்டும் என்று கருதப்படுகிறது. எனவே காரியக்கமிட்டி கூறும் யோசனை வகுப்புவாதத் தொடர்பு உடையதாகத் தோன்றினலும், அது பெரிதும் சாத்தியமான வரையில் தேசீயத்தை அடிப்படையாகக் கொண்டதேயாகும்; பொதுவாக அது, சம்பந்தப்பட்ட சமூகங்கள் ஒப்புக்கொள்ளக் கூடியதாகவே இருக்கும். எனவே பூரணமாகவும், தங்குதடை

யின்றி மனம்விட்டும் விவாதித்த பின் காரியக் கமிட்டி பின்வரும் திட்டத்தை நிறைவேற்றி யிருக்கிறது :

" 1. (அ) சம்பந்தப்பட்ட சிறுபான்மை சமூகங்களின் கலாச்சாரங்கள், மொழிகள், லிபிகள், கல்வி, தொழில், மத அனுஷ்டானம், மத சம்பந்தமான மான்யங்கள் ஆகியவை பாதுகாக்கப்படும் என்று உத்தரவாதம் அளித்து, அரசியல் திட்டத்திலுள்ள மூலாதார உரிமைகளுடன் ஒரு ஷரத்து சேர்க்கப்பட வேண்டும்.

" (ஆ) தனி நபர் சம்பந்தமான சட்டங்கள் திட்டவட்டமாகக் குறிப்பிட்ட ஷரத்துகளின்மூலம் பாதுகாக்கப்பட வேண்டும்.

" (இ) பல்வேறு மாகாணங்களையும் சேர்ந்த சிறுபான்மை சமூகங்களின் அரசியல் உரிமைகளையும், மற்ற உரிமைகளையும் பாதுகாத்தல், பெடரல் அரசாங்கத்தின் அதிகாரத்திலும் பொறுப்பிலும் இருக்கவேண்டும்.

" 2. வயது வந்த ஆடவர்கள், பெண்கள் எல்லோருக்கும் வாக்குரிமை அளிக்கவேண்டும்.

(குறிப்பு: வயது வந்த சகலருக்கும் வாக்குரிமை அளிப்பதாக கராச்சி காங்கிரசில் நிறைவேறிய தீர்மானத்தின் மூலம் காரியக் கமிட்டி உறுதிமொழி கொடுத்திருக்கிறது. எனவே வேறு எவ்வித வாக்குரிமை முறையையும் காங்கிரஸ் ஒப்புக்கொள்ள முடியாது. எனினும் காங்கிரசின் இந்த நிலை சிற்சில வட்டாரங்களில் தப்பெண்ணங்களை உண்டாக்கியிருப்பதால், வாக்குரிமை முறை இந்தியா முழுவதும் ஒரே விதமாக இருக்க வேண்டும் என்றும், ஒவ்வொரு சமூகத்தின் ஜனத்தொகை விகிதாசாரப்படி வாக்குரிமை அளிக்க வேண்டும் என்றும் காரியக் கமிட்டி விரும்புகிறது.)

"3. இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்தில், கூட்டுத் தொகுதிகளை அடிப்படையாகக் கொண்டே பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

"(அ) சிந்துவிலுள்ள ஹிந்துக்கள், அஸ்ஸாமிலுள்ள முஸ்லிம்கள், வடமேற்கு எல்லை மாகாணத்திலும், பஞ்சாபிலும் உள்ள சீக்கியர்கள், வேறு எந்த மாகாணத்திலும், ஜனத்தொகையில் 25 சத விகிதத்திற்கும் குறைவாக உள்ள ஹிந்துக்கள், முஸ்லிம்கள் ஆகியோருக்கு ஜனத்தொகையை அடிப்படையாகக் கொண்டு பெடரல் சட்டசபையிலும், மாகாண சட்டசபையிலும் ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட வேண்டும்; மேற்கொண்டும்

ஸ்தானங்களுக்குப் போட்டியிட அவர்களுக்கு உரிமை இருக்க வேண்டும்.

"4. கட்சிச் சார்பற்ற தேர்வுக் குழுக்களின் மூலமே அரசாங்க அலுவலகங்களுக்குச் சிப்பந்திகள் நியமிக்கப்பட வேண்டும். சிப்பந்திகளின் குறைந்த பட்சத் தகுதிகளை அந்தக் குழுதான் நிர்ணயிக்க வேண்டும். நாட்டின் அரசாங்க உத்தியோகங்களில் எல்லாச் சமூகங்களுக்கும் சமமான சந்தர்ப்பங்கள் அளிக்க வேண்டும் என்ற கொள்கையையும், திறமை முக்கியமானது என்பதையும் மனத்திற் கொண்டே சிப்பந்திகள் நியமிக்கப்பட வேண்டும்.

"5. பெடரல் மந்திரி சபையையும் மாகாண மந்திரி சபைகளையும் அமைக்கும் போது சிறுபான்மை சமூகங்களின் நலன்களை உணர்ந்து நடந்து கொள்ளவேண்டும்.

"6. மற்ற மாகாணங்களில் இருப்பது போலவே வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் பலூசிஸ்தானத்திலும், அரசாங்க முறையும் நிர்வாகமும் இருக்க வேண்டும்.

"7. சிந்து பிரதேசம் ஒரு தனி மாகாணமாக அமைக்கப்பட வேண்டும். எனினும், தனியாகப் பிரிக்கப்படும் அந்த மாகாணத்தின் நிதி சம்பந்தமான பளுவை சிந்து மக்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தால் மாத்திரமே அது தனி மாகாணமாக அமைக்கப்பட வேண்டும்.

"8. நாட்டின் எதிர்கால அரசியல் அமைப்பு பெடரல் அரசாங்க முறையாகவே இருக்க வேண்டும். பெடரல் அரசாங்கத்தின் நிர்வாகத்திலுள்ள இலாகாக்களைத் தவிர மற்ற இலாகாக்களின் நிர்வாகம், இந்தியாவின் நலன்களுக்குப் பாதகமேற்படாத விதத்தில் மாகாண அரசாங்கங்களிடம் இருக்கவேண்டும்.

"கலப்பற்ற வகுப்பு வாதத்திற்கும் கலப்பற்ற தேசீயத்திற்கும் இடையே ஒரு சமரசமான திட்டம் என்ற முறையிலேயே காரியக் கமிட்டி மேற்கண்ட திட்டத்தை நிறைவேற்றியது. ஒரு புறம், இத் திட்டத்தை நாடு முழுவதும் அங்கீகரிக்குமென காரியக் கமிட்டி நம்புகிறது; மற்றொரு புறம், அதை அங்கீகரிக்க முடியாத தீவிர அபிப்பிராயம் உள்ளவர்கள், சம்பந்தப்பட்ட எல்லாக் கட்சிகளும் அங்கீகரிக்கக் கூடிய ஒரு திட்டத்தைக் கொண்டு வருவார்களாயின், காரியக் கமிட்டி அதை மகிழ்ச்சியுடன் ஏற்கக் கடமைப்பட்டிருக்கிறது."

இதுதான் காங்கிரசின் தீர்மானமாகும்.

வகுப்புப் பிரச்னையை தேசீய அடிப்படையில் தீர்ப்பது சாத்தியமில்லாவிட்டாலும், காங்கிரசின் திட்டம் அங்கீகரிக்கத்தக்கதாக இராமற் போனாலும், சம்பந்தப்பட்ட எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொள்ளக்கூடிய வேறு நியாயமான எந்தத் திட்டத்தையும் நான் ஏற்றுக் கொள்வதற்கு யாதொரு தடையும் இல்லை. இப் பிரச்னை சம்பந்தமாக, பெரும்பாலோருக்கும் சாத்தியமான அளவுக்கு இணக்கமாக இருக்கக்கூடிய ஒரு திட்டம் ஏற்பட வேண்டும் என்பதே காங்கிரசின் நிலையாகும். ஒரு நியாயமான திட்டம் உருவாவதற்கு காங்கிரஸ் தடையாக இராது. தனித்த முறையில் சமரசமான ஒரு திட்டம் ஏற்படுவதை காங்கிரஸ் மனப்பூர்வமாக ஆதரிக்கும்.

சட்ட சபைகளில் தீண்டாதாருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதை நான் எதிர்ப்பதாகச் சிலர் கூறியிருப்பதாகத் தோன்றுகிறது. இது உண்மைக்கு முற்றிலும் மாறாகும். தீண்டாதாருக்கு விசேஷப் பிரதிநிதித்துவம் அளிப்பதையே நான் எதிாப்பதாகக் கூறியுள்ளேன். இப்போது மீண்டும் அதையே திருப்பிக் கூறுகிறேன். விசேஷப் பிரதிநிதித்துவம் அளிப்பதால் அவர்களுக்கு நன்மை எதுவும் ஏற்படாது; மிகுந்த பாதகமும் ஏற்படலாம். வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை அளிக்கவேண்டும் என்பதே காங்கிரசின் உறுதியான கொள்கையாகும். எனவே அதன்படி வாக்காளர் ஜாபிதாவில் கோடிக்கணக்கானவர்கள் இடம் பெறுவார்கள்.

தீண்டாமை துரிதமாக மறைந்து வருகிறது. எனவே, தீண்டாத வாக்காளர்களின் அபேட்சகர்கள் பகிஷ்காரம் செய்யப்படுவார்கள் என்று எண்ணுவதற்கு இடமேயில்லை. தீண்டாதாருக்கு, தேர்தலைக் காட்டிலும் அவசியமான தேவை என்னவெனில், சமுதாய, மத சம்பந்தமான கொடுமைகளிலிருந்து பாதுகாப்பேயாகும். சட்டத்தைக் காட்டிலும் பழக்க வழக்கம் அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. பழக்க வழக்கங்கள் தான் தீண்டாதாரை மிகவும் இழிவான நிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றன. சிந்திக்கும் ஒவ்வொரு ஹிந்துவும் அதைக் குறித்து வெட்கமடைந்து தவம் செய்ய வேண்டியது அவசியமாகும். மேல் வகுப்பினர் என்று சொல்லப்படுவோர் தீண்டாதாருக்கு இழைக்கும் கொடுமைகள் கிரிமினல் குற்றங்களாகும் என்று மிகக் கடுமையான சட்டங்கள் இயற்றவும் நான் விரும்புகிறேன். ஆனால் இறைவன் அருளால் தீண்டாதார் விஷயமாக ஹிந்துக்களின் மனச்சாட்சி தூண்டப்பட்டு, அவர்கள் (ஹிந்துக்கள்) தங்கள் தவறை உணர்ந்து வருகிறார்கள். கூடிய விரைவில் தீண்டாமை பாவச் செயலின் பண்டைய கால சின்னமாகிவிடும்.

# 5

# சுப்ரீம் கோர்ட்

சுப்ரீம் கோர்ட் அமைக்கும் விஷயமாக, லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் காந்திஜி கூறியதாவது :

இவ்விஷயமாகப் பேசுவதற்கு நான் மிகவும் தயங்குகிறேன். இதைப் பற்றிய விவாதம் மிகவும் நுணுக்கமான போக்கில் நடைபெற்றிருப்பதே அதற்குக் காரணமாகும். எனினும் இதன் சம்பந்தமாக எனது கருத்தைத் தெரிவிக்க வேண்டியது, உங்களுக்கும் காங்கிரசுக்கும் நான் செய்ய வேண்டிய கடமையாகும். பெடரல் கோர்ட் பிரச்னை பற்றி காங்கிரசுக்குத் திட்டவட்டமான சில கருத்துகள் உண்டு. அந்தக் கருத்துகள் இங்குள்ள பெரும் பாலான பிரதிநிதிகளுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். எனினும் அவை பொறுப்பு வாய்ந்த ஒரு ஸ்தாபனத்தின் கருத்துகளாதலின், அவற்றை உங்களுக்கு எடுத்துக் கூற வேண்டியது அவசியமென நான் எண்ணுகிறேன். எங்கள் மீது மிகுந்த அவநம்பிக்கையுடனேயே இங்கு விவாதங்கள் நடைபெறுகின்றன என்பதை நான் காண்கிறேன். தேசீய அரசாங்கம் பாரபட்சமற்ற முறையில் தனது நிர்வாகத்தை நடத்த இயலாது என்று கருதப்படுகிறது. இங்கு நடைபெறும் விவாதத்தின் போக்கிற்கு வகுப்புவாதச் சிக்கலும் துணை புரிவதாக இருக்கிறது. அதற்கு மாறாக, காங்கிரசின் கொள்கையோவெனில் முற்றிலும் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. நிர்வாக அதிகாரம் எங்கள் கைக்கு வரும்போது, நாங்கள் எங்களுடைய பொறுப்பையும் பூரணமாக உணர்ந்து கொள்வோம். அப்போது எல்லாவிதமான வகுப்பு வேற்றுமைகளும் மறைந்துவிடும். எனினும் அவ்விதம் நடைபெறவில்லையாயின், காங்கிரஸ் கடுமையான அபாயங்களைச் சமாளிக்கும்படி நேரும். இருந்தாலும், அபாயங்களைக் கண்டு அஞ்சினால் நாம் உண்மையான பொறுப்பை ஏற்றுக் கொள்வது இயலாத காரியம். நமக்கு வழிகாட்டவும், ஒரு நெருக்கடியான சமயத்தில் நமது விவகாரங்களை நிர்வாகம் செய்யவும் நாம் ஏதாவதொரு அந்நிய வல்லரசை நம்பியே தீரவேண்டும் என்ற எண்ணம் நமக்கு இருந்து வரும் வரையில், நாம் பொறுப்பை ஏற்க முடியாது என்பதே எனது அபிப்பிராயமாகும்.

எங்களுடைய எதிர்காலம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே இவ்விஷயமாக விவாதிக்க முயற்சிப்பது தர்ம சங்கடமானதாக இருக்கிறது. ராணுவம் பொறுப்புள்ள அர சாங்கத்தின் நிர்வாகத்தில் இராவிடில், என் அபிப்பிராயம் ஒரு விதமாக இருக்கும். ராணுவ நிர்வாகம் பொறுப்புள்ள அரசாங் கத்தின் நிர்வாகத்தில் இருக்குமாயின், என்னுடைய அபிப்பிராயம் வேறு விதமாக இருக்கும். உண்மையான பொறுப்பாட்சி ஏற்படு மாயின், ராணுவம் முற்றிலும் தேசீய அரசாங்கத்தின் நிர்வாகத் தில் தான் இருக்கும்.

மகோன்னதமான நீதிச் சபையின் தீர்ப்புக்கு, அச் சபை யின் கட்டிடத்திற்கு வெளியே மதிப்பு இல்லையாயின் அது தேசத் தின் ஏளனத்திற்கும், அகில உலகத்தின் ஏளனத்திற்கும் ஆளாக நேரும். அச் சபையின் தீர்ப்பை நிறைவேற்றுவதும், நிறைவேற்ரு மல் இருப்பதும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அதிகாரத்தில் இருக் கக் கூடாது. நாம் பொறுப்பாட்சி பெறுவோமாயின், சுப்ரீம் கோர்ட் பொறுப்பாட்சி அரசாங்கத்தின் கீழ்த்தான் இருக்க வேண்டும். சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பு அமுலுக்கு வருமாறு பொறுப்பாட்சி அரசாங்கம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

டாக்டர் அம்பேத்கார் எவ்விஷயமாக தமது அச்சத்தைத் தெரிவித்தாரோ அதைக் குறித்து எனக்கு அச்சம் எதுவும் இல்லை. எனினும் அவரது ஆட்சேபணை மிகவும் நியாயமானதென்றே கருதுகிறேன். தீர்ப்புகள் கூறும் கோர்ட்டாருக்கு, தங்களுடைய தீர்ப்புகளுக்கு மதிப்பு அளிக்கப்படும் என்ற பூரண நம்பிக்கை இருக்க வேண்டும். எனவே தீர்ப்புகளை யொட்டி விதிகளை வகுக்க நீதிபதிகளுக்கு அதிகாரம் இருக்க வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். தீர்ப்புகளை அமுலுக்குக் கொண்டு வரும் அதிகாரம் கோர்ட்டாரிடம் இருக்க வேண்டாம்; அந்த அதிகாரம் நிர்வாக அதிகாரிகளிடமே இருக்க வேண்டும். எனினும் கோர்ட்டார் விதி களுக்கு உட்பட்டு நிர்வாக அதிகாரிகள் நடந்து கொள்ள வேண்டும்.

சுப்ரீம் கோர்ட் நிறுவுவதன் சம்பந்தமான எல்லா விவரங்களும் இந்த அரசியலில் அடங்கியிருக்குமென நாம் எண்ணுகிறோம். ஆனால் எனது கருத்து அதற்கு முற்றிலும் மாருனது. பெடரல் கோர்ட் அமைப்பதையொட்டிய மேலெழுந்த வாரியான விதிகள் தான் அரசியல் திட்டத்தில் அடங்கியிருக்கும்; அந்தக் கோர்ட்டின் அதிகார எல்லையும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கும்; ஆனல் அதன்

சம்பந்தமான மற்ற விவரங்களையெல்லாம் பெடரல் அரசாங்கமே தயாரிக்கும். நீதிபதிகள் எத்தனை ஆண்டுகள் பணி புரிவர், அவர்கள் பதவியிலிருந்து 70-வது வயதில் விலகுவதா, 95 அல்லது 90 அல்லது 65-வது வயதில் விலகுவதா என்பவை யெல்லாம் அரசியல் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. இவ்விவரங்களெல்லாம் பெடரல் அரசாங்கத்தினால் முடிவு செய்யப்பட வேண்டியவை என்று நான் கருதுகிறேன். நாம் ஒவ்வொரு வாக்கியத்தின் இறுதியிலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கொண்டு வருகிறோம். காங்கிரசைப் பொறுத்தமட்டில், இந்தத் திட்டத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பெயர் வரவேண்டிய அவசியமே இல்லை என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இந்தியாவுக்கு பூரண சுதந்திரம் கிடைக்க வேண்டும். அவ்விதம் பூரண சுதந்திரம் கிடைப்பதாயின், அப்போது இந்தியாவில் மகோன்னதமான அதிகாரம் யாரிடத்தில் இருக்கிறதோ அவர்களிடம்தான் நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரமும், இப்போது பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் உள்ள மற்ற விஷயங்களை யொட்டிய அதிகாரமும் இருக்கும்.

அரசியல் திட்டத்தின் போக்கு எப்படியிருந்தாலும், இந்தியாவில் நமக்குச் சொந்தமான பிரிவீ கவுன்சில் இருக்க வேண்டும் என்பதே காங்கிரசின் மூலாதாரமான நம்பிக்கையாகும். மிக மிக முக்கியமான வழக்குகளை யொட்டி இந்தியாவிலுள்ள ஏழை மக்களுக்குப் பரிகாரம் கிடைக்க வேண்டுமாயின், மிக மிக ஏழைகளும் பிரிவீ கவுன்சிலுக்குச் செல்ல வசதி இருக்க வேண்டும். பிரிவீ கவுன்சில் இங்கிலாந்தில் இருந்தால், ஏழைகள் அங்கு செல்ல முடியாது. முக்கியமான விஷயங்களையொட்டி நமது விதியை இங்கிலாந்திலுள்ள பிரிவீ கவுன்சில் நிர்ணயிக்கும்படியான நிலை இருக்கக் கூடாது. நம்முடைய நீதிபதிகள் விவேகத்துடனும், எள்ளளவும் பாரபட்சமின்றியும் தீர்ப்பு அளிப்பார்கள் என்ற முழு நம்பிக்கை நமக்கு இருக்க வேண்டும்.

இங்குள்ள பிரிவீ கவுன்சில் மிகப் புராதனமான ஒரு ஸ்தாபனமாகும். அந்த ஸ்தாபனத்திடம் எனக்கு விசேஷமான மதிப்பு உண்டு. எனக்கு அதனிடம் எவ்வளவு மதிப்பு இருப்பினும், உலக மதிப்பிற்குரிய ஒரு பிரிவீ கவுன்சிலை நாம் அமைக்க முடியாது என்பதை என்னால் நம்ப முடியவில்லை. இங்கிலாந்தில் அருமையான நிறுவனங்கள் இருக்கின்றன என்பதற்காக, அவைகளுடன் நாம் கட்டுண்டு கிடக்க வேண்டும் என்பதில்லை. இங்கிலாந்திடமிருந்து நாம் ஏதாவது கற்றுக் கொள்ள வேண்டுமெனில், அத்தகைய நிறு

வனங்களை அமைக்க இந்தியாவின் பிரதிநிதிகள் என்று கூறிக் கொள்ளும் நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அவ்விதம் கற்றுக் கொள்ளாவிடில், நாம் உய்வதற்கு வழியில்லை. எனவே தற்போது நமக்கு நம்மிடத்தில் போதிய நம்பிக்கை இருக்கவேண்டும் என்று நம் எல்லோரையும் கேட்டுக்கொள்கிறேன். நமது ஆரம்பம் அற்ப மானதாக இருக்கலாம். எனினும் தீர்ப்புகள் அளிக்கும் விஷய மாக நமது உள்ளங்கள் உறுதியுடனும், உண்மையுடனும், யோக் கியப் பொறுப்புடனும் இருக்குமாயின், இங்கிலாந்திலுள்ள நீதி பதிகள் பெருமையுடன் கூறிக்கொள்ளும் சட்ட சம்பந்தமான சம்பிரதாயங்கள் நம்மிடையே சிறிதும் இல்லாவிட்டாலும்கூடப் பாதகமில்லை. பெடரல் கோர்ட்டைப் பொறுத்தமட்டில் இதுதான் என்னுடைய அபிப்பிராயமாகும்.

### எல்லா வழக்குகளையும் விசாரிக்க அதிகாரம்

எனவே பெடரல் கோர்ட்டுக்குப் பரந்த அதிகாரம் இருக்க வேண்டும். பெடரல் சட்டங்களின் நிர்வாக சம்பந்தமாக எழும் வழக்குகளை மாத்திரமல்ல, இந்தியாவின் நாற்திசைகளிலிருந்தும் வரும் எல்லா வழக்குகளையும் விசாரிக்கும் முழு அதிகாரமும் பெடரல் கோர்ட்டுக்கு இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

அடுத்தபடியாக, மன்னர்களின் நிலை என்ன என்ற பிரச்னையும் இருக்கிறது. இவ்விஷயமாக மிகுந்த மரியாதையுடனும் தயக்கத் துடனும் நான் ஒரு யோசனை கூறுகிறேன். இந்த மகாநாட்டின் மூலம் நாம் இறுதியில் ஏதாவது ஒரு முடிவு செய்வோமாயின், அந்த முடிவு இந்தியா முழுவதற்கும் பொதுவாகவே இருக்குமென நான் நம்புகிறேன். அம் முடிவு, இந்திய மக்கள் எல்லோருக்கும்,- அவர்கள் சமஸ்தானங்களைச் சேர்ந்தவர்களாயினும், இந்தியாவின் மற்றப் பகுதிகளைச் சேர்ந்தவர்களாயினும்,-பொதுவானதாகவே இருக்கும் என்று நம்புகிறேன். எனவே மக்களின் உரிமைகளுக்குப் பாதுகாவலாக உள்ள சுப்ரீம் கோர்ட்டும் இயல்பாகவே நம் எல் லோருக்கும் பொதுவானதாக இருக்கும். அந்த உரிமைகள் என்ன என்பது பற்றி நான் எதுவுமே சொல்ல இயலாது. அந்த உரிமைகள் என்ன என்பதைக் கூற வேண்டியது முற்றிலும் மன்னர்களின் பொறுப்பாகும். அவர்கள் இந்த மகாநாட்டில் தங்கள் தங்களுடைய ராஜ்யங்களுக்கு மாத்திரமல்ல, தங்கள் தங்களுடைய பிரஜை களுக்கும் பிரதிநிதிகளாக இருக்கும் மகத்தான பொறுப்பை தங் களுக்குத் தாங்களே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தாங் களாக முன் வந்து ஏதாவதொரு திட்டத்தைத் தயாரிக்கும்படி அவர்களை நான் பணிவுடனும் மனப்பூர்வமாகவும் கேட்டுக் கொள்

கிறேன். லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் தங்களுக்கு நேரடியான பிரதிநிதித்துவம் இராவிட்டாலும், போதிய அளவு தங்கள் மன்னர்களின் மூலம் அம் மகாநாட்டிற்கு எட்டி வருகிறதென்று சமஸ்தானப் பிரஜைகள் எண்ணும்படியாக அத் திட்டம் இருக்க வேண்டும்.

**சம்பளங்கள்**

சம்பளத்தைப் பொறுத்த மட்டில் நான் கூறுவது உங்களுக்கு இயல்பாகவே நகைப்பை உண்டாக்கும், செல்வத்திலோ, பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் யானைக்கும் பூனைக்கும் உள்ள வேற்றுமை இருக்கிறது. இந்தியர்களின் சராசரி வருமானம் ஒரு நாளைக்கு மூன்று அணுவாகும். எனவே இங்கே குறிப்பிட்டுள்ள சம்பளங்கள் கொடுக்க இந்தியாவுக்குக் கட்டி வராது. இந்தியாவில் சுயாட்சி ஏற்படுவதாயின், இந்த உயர்ந்த சம்பளங்களை நாம் மறந்து விடவேண்டும். பிரிட்டிஷ் துப்பாக்கிகள் உதவிக்கு இருக்கும் வரையில், மாதம் ரூ. 10,000, ரூ, 5,000, ரூ. 20,000 என்று சம்பளம் கொடுப்பதற்காக மக்களைக் கசக்கிப் பிழிந்து வரிப் பணம் வசூலித்து வரலாம். எனினும் இந்தியாவிலுள்ள கோடிக் கணக்கான மக்களின் வாழ்க்கைக்கு இணங்க தங்களுடைய வாழ்க்கைத் தரத்தையும் அமைத்துக் கொண்டு சீரிய முறையிலும், உண்மையாகவும், நன்ருகவும் இந்தியாவுக்குத் தொண்டு புரிய முன் வரும் போதிய மனிதர்களை உற்பத்தி செய்ய முடியாதவாறு இந்தியா அவ்வளவு தாழ்ந்த நிலையை அடைந்து விடவில்லை என்றே நான் கருதுகிறேன். சட்டத்தில் திறமை வாய்ந்தவர்கள் யோக்கியப் பொறுப்புடன் இருக்க வேண்டுமாயின், அவர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுத்து அவர்களை விலைக்கு வாங்கவேண்டும் என்பதை நான் நம்பவில்லை.

மோதிலால் நேரு, சி. ஆர். தாஸ், மனமோகன் கோஷ், பத்ருதீன் தயாப்ஜி முதலிய மற்றும் பலருடைய பெயர்களும் என் நினைவுக்கு வருகின்றன. அவர்கள் யாதொரு ஊதியமும் பெருமல் இலவசமாகத் தங்கள் சட்டத் திறமையை உபயோகித்து விசுவாசத்துடனும், சிறப்பாகவும் தேசத்திற்குத் தொண்டு புரிந்தனர். அவர்கள் தங்கள் தொழிலில் ஏராளமான தொகை ஈட்டி வந்ததால், தேசத்திற்காக இலவசமாகத் தங்கள் திறமையை உபயோகித்தார்கள் என்று கூறலாம். ஆனல் அந்தக் கூற்றை நான் ஒப்புக் கொள்ள முடியாது. ஏனெனில், அவர்களில் மனமோகன் கோஷைத் தவிர மற்றெல்லோரையும் நான் அறிவேன். அவர்

களிடம் ஏராளமான செல்வம் இருந்தது; அதனுல்தான் அவர்கள் இந்தியாவுக்குத் தேவையான போது தங்களுடைய திறமையை இலவசமாக உபயோகித்தார்கள் என்று கூறுவதற்கில்லை. அவர்கள் ஏழை மக்களைப் போல் போதுமென்ற மனத்துடன் வாழ்ந்ததை நான் பார்த்திருக்கிறேன். தற்போது நிலைமை எப்படி இருப்பினும், மிகுந்த புகழும், திறமையும் வாய்ந்த பல வக்கீல்கள் தேசத்திற்காகத் தொண்டு புரிய முன் வந்திராவிடில் இந்தியா முழுவதும் அவர்கள் இன்று ஹைகோர்ட் நீதிபதிகளாகப் பதவி வகித்துக் கொண்டிருப்பார்கள். நாம் விவரமான விதிகளைத் தயாரிக்கும் போது, தேசபக்தி உணர்ச்சியுடனும், இந்தியாவிலுள்ள கோடிக் கணக்கான மக்களின் பரிதாப நிலையை மனத்திற் கொண்டும் அவ் விதம் செய்வோம்

இன்னும் ஒரு வார்த்தை கூறிவிட்டு நான் முடித்துக் கொள்கிறேன். பெடரல் கோர்ட் அல்லது சுப்ரீம் கோர்ட்தான் மிகவும் உயர்தர நீதிச் சபையாக இருக்கும். இந்தியாவில் வாழும் எவரும் அதைக் காட்டிலும் உயர்ந்த நீதிச் சபை எதற்கும் போக வேண்டியிராது. எனவே அந்த கோர்ட்டின் ஆணைக்கு எல்லையில்லை என்பதே என் அபிப்பிராயமாகும். மன்னர்கள் விரும்பும் அளவுக்கு பெடரல் சட்டங்களை யொட்டி அந்தக் கோர்ட்டுக்கு அதிகாரம் இருக்கும். எனினும் இரண்டு சுப்ரீம் கோர்ட்டுகள் இருப்பதை நான் கற்பனை செய்து கொள்ள முடியாது. அதாவது பெடரல் சட்டங்கள் சம்பந்தமான விவகாரங்களை மாத்திரம் விசாரிக்க ஒரு கோர்ட்டும், பெடரல் நிர்வாக சம்பந்தமான அல்லது பெடரல் அரசாங்க சம்பந்தமான விஷயங்களை விசாரிக்க மற்ருெரு கோர்ட்டும் இருப்பதை என்னல் கற்பனை செய்து கொள்ள முடியாது.

பெடரல் அரசாங்கம் ஒரு சில விஷயங்களில்தான் அக்கறை எடுத்துக் கொள்ளலாம். மிகவும் முக்கியமான மற்ற விஷயங்களை யொட்டி விசாரித்து தீர்ப்புக் கூறும் அதிகாரம் சுப்ரீம் கோர்ட் அல்லது பெடரல் கோர்ட்டுக்கே இருக்க வேண்டும். இந்த பெடரல் கோர்ட்டுக்கு நாம் எவ்வளவுக்கு அதிகாரம் கொடுக்கிருேமோ அவ் வளவுக்கு உலகத்திற்கும் நம் தேசத்திற்கும் நம்மீது அதிக நம்பிக்கை ஏற்படும்படி செய்தவர்களாவோம்.

மகாநாட்டின் இந்த அருமையான நேரத்தை நான் எடுத்துக் கொண்டதற்காக வருந்துகிறேன். பெடரல் கோர்ட் பிரச்னையை யொட்டிப் பேசுவதில் எனக்குச் சிறிதும் விருப்பம் இல்லையென்ருலும், அதையொட்டி நீண்ட காலமாக காங்கிரசிலுள்ள எங்களில் பலரும் கொண்டுள்ள கருத்துகளை நான் உங்களுக்குக் கூற வேண்

டியது அவசியமாகும். அனுகூலமற்ற பயங்கரமான சூழ்நிலையில் நான் இருந்து வருகிறேன். மிகவும் புகழ்பெற்ற வக்கீல்கள் யாவரும் எனக்கு எதிராக அணி வகுத்து நிற்கிறார்கள். நீதிபதி களின் சம்பளங்களையும், இந்தக் கோர்ட்டின் அதிகாரங்களையும் பொறுத்த மட்டில் மன்னர்களும் எனக்கு எதிராக இருந்து வருகிறார்கள். எனினும் பெடரல் கோர்ட் சம்பந்தப்பட்ட வரையில் காங்கிரசும் நானும் கொண்டுள்ள உறுதியான அபிப்பிராயங்களை உங்களுக்கு எடுத்துக் கூறுவிடில் நான் என்னுடைய கடமையை அசட்டை செய்த குற்றத்திற்கு ஆளாவேன்.

## 6

# ஜனநாயகத்திற்கு மாறான நிலை

வட்டமேஜை மகாநாட்டின் சிறுபான்மையோர் கமிட்டி யின் கடைசிக் கூட்டத்தில் காந்திஜி பேசியதன் விவரம் பின்வருமாறு :

பிரதம மந்திரி அவர்களே, சக பிரதிநிதிகளே,

மிகுந்த தயக்கத்துடனும், வெட்கத்துடனும் நான் சிறுபான்மை யோர் பிரச்னை பற்றிய விவாதத்தில் பங்கு எடுத்துக் கொள் கிறேன். சில சிறுபான்மை வகுப்பினரின் சார்பில் பிரதிநிதிகளுக்கு அனுப்பப்பட்ட மகஜரை, அதற்குரிய அக்கறையுடனும் கவனத் துடனும் வாசிக்க என்னால் இயலவில்லை. அந்த மகஜர் இன்று காலையில்தான் எனக்குக் கிடைத்தது. உங்களுடைய அனுமதி யுடனும், உங்களுக்குரிய மரியாதையுடனும் அதைப் பற்றி நான் எனது அபிப்பிராயத்தைக் கூறுமுன், இந்தக் கமிட்டியின் முன்னிலையில் நீங்கள் கூறிய கருத்தை நான் ஆதரிக்கவில்லை என் பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதாவது வகுப்புப் பிரச்னை யைத் தீர்க்க முடியாதது அரசியல் திட்டத்தைத் தயாரிப்பதற்குத் தடையாக இருக்கிறது என்றும், அத்தகைய அரசியல் திட்டம் உருவாகு முன் வகுப்புப் பிரச்னை தீர வேண்டியது அத்தியா வசியம் என்றும் நீங்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடி யாது; அத்தகைய கருத்தை நான் ஆதரிக்க முடியாது என்று இக் கமிட்டியின் ஆரம்ப கட்டத்திலேயே நான் தெரிவித்தேன். அதன் பின் நான் பெற்ற அநுபவமானது, நான் கொண்டிருந்த அந்தக் கருத்தை உறுதிப்படுத்தியிருக்கிறது. வகுப்புப் பிரச்னை முதலில் தீர வேண்டும் என்பதைச் சென்ற வருடம் வற்புறுத்தியதாலும், அதே பல்லவி இந்த வருடத்திலும் திரும்பக் கூறப்பட்டிருப்ப தாலுமே, பல்வேறு சமூகங்களும் தங்கள் தங்கள் கருத்துக்களைப் பிடிவாதமாக வற்புறுத்தத் தொடங்கியுள்ளனர். அது இயல்பே யாகும். அவர்கள் அவ்விதம் வற்புறுத்தாமல் இருந்தால்தான், அது மனித இயற்கைக்கு விரோதமாக இருந்திருக்கும். தங்கள் தங்கள் கோரிக்கைகளை வற்புறுத்த இதுதான் சமயமென அவர்கள் எல்லோரும் எண்ணி விட்டார்கள். அவ்விதம் வற்புறுத்தியதே, வகுப்புப் பிரச்னை தீர வேண்டும் என்ற நம்முடைய நோக்கம்

தோல்வியுறும்படி செய்துவிட்டது. நான் இவ்வாறு கூறுவதற்காக நீங்கள் என்னை மன்னிப்பீர்கள் என்றே நினைக்கிறேன். ஓர் ஒப்பந்தத்திற்கு வரமுடியாமல் நாம் தோல்வியுற்றதற்கு இதுதான் காரணம். இப்போது மூலாதாரமான விஷயம் அரசியல் திட்ட அமைப்பேயன்றி, வகுப்புப் பிரச்னை தீரவேண்டும் என்பதல்ல என சர் சிமன்லால் செதல்வாட் கூறியதை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன்.

வகுப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக நீங்கள் இந்த வட்ட மேஜை மகாநாட்டைக் கூட்டவில்லை; இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக நீங்கள் 6000 மைல்களுக்கு அப்பாலிருந்து எங்களை இங்கே கொண்டு வரவுமில்லை. அரசியல் திட்டத்தை நிர்மாணிப்பதற்கான நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே நாங்கள் அழைக்கப்படுவதாகவும், இந்த மகாநாட்டைக் கூட்டுவதாகவும் நீங்கள் தீர்க்காலோசனையுடன் பிரகடனம் செய்தீர்கள். விருந்தோம்பும் குணமுள்ள உங்கள் நாட்டை விட்டு நாங்கள் செல்லுமுன் இந்தியாவின் விடுதலைக்கான மதிப்பும் கௌரவமும் வாய்ந்த மேலெழுந்தவாரியான ஓர் அரசியல் திட்டம் தயாராகி விட்டதென்ற உறுதி எங்களுக்கு ஏற்படும் என்றும், பின்னர் காமன்ஸ் சபை, லார்டு சபை ஆகிய இரு சபைகளின் அங்கீகாரம் மாத்திரமே பெறவேண்டியிருக்கும் என்றும் நீங்கள் கூறினீர்கள்.

ஆனல் இப்போதோ முற்றிலும் வேருன ஒரு நிலைமை எங்களை எதிர் நோக்கி நிற்கின்றது. அதாவது வகுப்புப் பிரச்னை தீர்ந்து சமரசம் ஏற்படாததால், அரசியல் திட்டத்தைத் தயாரிப்பதற்கில்லை என்பதுதான். எனவே கடைசி வழியாக, அரசியல் சம்பந்தமாகவும், அதன் சம்பந்தமான விஷயங்களையொட்டியும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கையை நீங்கள் அறிவிப்பீர்கள். அது, தம்பட்டமடித்துக்கொண்டும், ஏராளமான மக்களின் மனத்தில் மிகுந்த நம்பிக்கை ஊட்டியும் ஆரம்பமான இம் மகாநாட்டின் துக்ககரமான ஒரு முடிவாக இருக்கும் என்று என்னல் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

இந்தத் திட்டத்தையொட்டி* சர் ஹியூபர்ட் கார் எனக்கு அளித்த நன்றியை நான் ஏற்றுக்கொள்கிறேன். இந்தப் பளுவை

---

* சில்லறைச் சிறுபான்மை சமூகங்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே ஏற்பட்ட 'சமரசத் திட்டத்தை'யே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். சிறுபான்மையோர் பிரச்னை சம்பந்தமாக ஒரு சமரசத்திற்கு வரும் முயற்சியில் காந்திஜி தோல்வியுற்றதாலேயே, சிறுபான்மை சமூகத்தினர்

நான் ஏற்றுக்கொண்டபோது கூறிய வார்த்தைகளும், அவ்விஷ யத்தில் (சமூகப் பிரச்னையில் சமரசம் காணும் விஷயத்தில்) நான் அடைந்த தோல்வியும்தான், அதன் சம்பந்தமாக ஓர் அற்புத மான சமரச ஒப்பந்தத்தைக் கண்டுபிடிக்கத் தமக்கு உதவியாக இருந்தன என்று சர் ஹியூபர்ட் கார் கூறுகிறார். அதை இந்தக் கமிட்டியில் சமர்ப்பித்திருப்பதாயும், பின்னர் அதை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அங்கீகாரத்திற்காக சமர்ப்பிக்கப் போவதாகவும் அவர் கூறுகிறார். அவ்விஷயமாக அவருக்கும் அவரது சகாக் களுக்கும் ஏற்பட்டுள்ள ஆனந்தத்தைக் கெடுக்க நான் விரும்ப வில்லை. எனினும் அவர்கள் பிணத்தின் அருகில் உட்கார்ந்து கொண்டு, அதைத் துண்டு துண்டாக வெட்டிப் பரிசீலனை செய்யும் 'போற்றத் தக்க' செயலில் ஈடுபட்டுள்ளனர் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

### பொறுப்பாட்சி நோக்கம் இல்லை

இந்தியாவிலேயே மிகவும் செல்வாக்கு பொருந்திய ஓர் அரசியல் ஸ்தாபனத்தின் பிரதிநிதி என்ற முறையில் நான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும், சிறுபான்மை சமூகங்களின் பிரதி நிதிகள் என்று குறிப்பிடப்பட்டுள்ள நண்பர்களுக்கும், உண்மை யில் உலகம் முழுவதற்குமே சிறிதும் தயக்கமின்றி ஒன்று கூற விரும்புகிறேன். இந்தத் திட்டம் பொறுப்பாட்சி ஏற்படும் நோக் கத்துடன் தயாரிக்கப்படவில்லை; இப்போதுள்ள அரசாங்கத் துடன் நிர்வாக அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்ளும் நோக்கத் துடனேயே உருவாக்கப்பட்டுளது என்பதில் ஐயமில்லை.

அந்த நோக்கமே இத்திட்டம் முழுவதும் ஊடுருவி நிற்கின் றது. அது அவர்களுடைய நோக்கமாயின் அவர்களுக்கு நான் வாழ்த்துக் கூறுகிறேன். ஆனால் காங்கிரஸ் அதில் எள்ளளவும் பங்கு எடுத்துக்கொள்ள முடியாது. அத்திட்டத்தின் கீழ் பொறுப்பாட்சி அரசாங்கமாகிற வலுவான சுதந்திர விருட்சம் வளர முடியாது. எனவே காங்கிரஸ் அத்தகைய ஒரு திட்டத்தை ஆதரிப்பதைக் காட்டிலும், எத்தனை ஆண்டுகளாயினும் வனாந்தரத் தில் சஞ்சரிப்பதையே விரும்பும்.

தற்காலிகமாகவே இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டிருப்ப தால், இதனால் தேசிய லட்சியத்திற்குக் குந்தகம் எதுவும் ஏற் படாது என்றும், ஆனால் அதற்கு மாறாக பத்து ஆண்டுகளுக்குப்

---

ஒன்றுபட்டனர் என்றும், எனவே அதற்காகத் தாம் காந்திஜிக்கு நன்றி செலுத்துவதாகவும் சர் ஹியூபர்ட் கார் விஷமத்தனமாகக் கூறியதை காந்திஜி தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டிருந்தார்.



லண்டனில் லார்டு சாங்கி தலைமையில் நடந்த வட்ட மேஜை மகாநாட்டில் தலைவருக்கு இடது புறமாக காந்திஜி, பண்டித மாளவியா, ஸ்ரீ ஏ. ரங்கஸ்வாமி ஐயங்கார், சர் தேஜ் பகதூர் சாப்ரு முதலியோரைக் காணலாம்.



22—9—1931-ல் காந்திஜி சினிமா உலகில் அகில உலகமும் புகழ் பெற்ற சார்லி சாப்ளினை கானிங் நகரில் சந்தித்துப் பேசினர்.

பிறகு நாம் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டும், ஒருவர் மடியில் ஒருவர் புரண்டு கொண்டும் இருப்போம் என்றும் சர் ஹியூபர்ட் கார் கூறியதைக் குறித்து நான் மிகவும் வியப்படைகிறேன். எனினும் என்னுடைய அரசியல் அநுபவமானது அதற்கு நேர்மாருன பாடத்தையே எனக்குக் கற்பித்திருக்கிறது. திருப்திகரமான சூழ்நிலையில் பொறுப்பாட்சி ஏற்பட வேண்டுமாயின், துண்டாடும் பரிசோதனைக்கு நாடு உள்ளாகக்கூடாது. ஆனல் இத்திட்டம் நாட்டை அத்தகைய பரிசோதனைக்கு உட்படுத்துவதாக இருக்கிறது. அது, எந்தத் தேசீய அரசாங்கமும் தாங்க முடியாத ஒரு பளுவாகும்.

### தவருன கணக்கு

இந்த அமைப்பிற்கு ஒரு சிகரமும் இருக்கிறது! பிரதம மந்திரி அவர்களே, ஆட்சேபிக்க முடியாத ஓர் உண்மையைப் போல் அதை நீங்கள் கூறியிருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இத்திட்டம், இந்தியாவிலுள்ள 11½ கோடி மக்களால் அல்லது சுமார் 46 சத விகித மக்களால் ஒப்புக் கொள்ளத் தக்கது என்று கருதலாமென நீங்கள் குறிப்பிட்டீர்கள். இந்தப் புள்ளி விவரம் தவறு என்பதை நிரூபிக்க உங்களுக்குத் தகுந்த ஆதாரம் கிடைத்துள்ளது. தங்களுக்கு விசேஷப் பிரதிநிதித்துவம் வேண்டாம் என்று அறவே மறுத்து பெண்களின் சார்பில் உங்களுக்கு விண்ணப்பம் அனுப்பியிருக்கிருர்கள். அது மாத்திரமல்ல. காங்கிரஸ் மிகவும் சக்தி வாய்ந்த ஒரு ஸ்தாபனமாக இராமலிருக்கலாம். எனினும் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவர்கள் மாத்திரமல்ல, இந்தியா முழுவதும் உள்ள மக்களில் 85 அல்லது 95 சத விகிதத்தினருக்கு காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்து வருகிறது என்று ஏற்கனவே கூற நான் தயங்கவில்லை; மீண்டும் அவ்விதமே திருப்பிக் கூற நான் வெட்கப்படவில்லை. காங்கிரஸ் தன்னை இந்தியாலுள்ள விவசாயிகளான மக்களின் பிரதிநிதி ஸ்தாபனம் என்றும் கூறிக்கொள்கிறது. விவசாயிகளுக்குத் தொண்டு செய்ததன் மூலமே காங்கிரஸ் அந்த உரிமையைப் பெற்றிருக்கிறது என்று நான் மிகவும் வற்புறுத்திக் கூறுகிறேன். இவ்விஷயமாக இந்தியாவில் பொதுஜன வாக்கு எடுக்கவேண்டுமென அரசாங்கம் சவால் விடுக்குமாயின், அந்தச் சவாலை நான் ஏற்றுக்கொள்வேன். அவ்விதம் செய்தால், காங்கிரஸ் அவர்களின் பிரதிநிதி ஸ்தாபனமா, அல்லவா என்பதை நீங்கள் உடனடியாகத் தெரிந்துகொள்வீர்கள். நான் மேற்கொண்டு ஒரு அடி செல்லுகிறேன். தற்போது இந்தியாவிலுள்ள சிறைகளின் குறிப்புகளை நீங்கள் பரிசிலனை செய்வீர்களா

யின் அங்கு வைக்கப்பட்ட காங்கிரஸ்வாதிகளிடையே ஏராளமான முஸ்லிம்கள் இருப்பதை நீங்கள் காண்பீர்கள். சென்ற ஆண்டில் காங்கிரஸ் கொடியின் கீழ் பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்கள் சிறைக்குச் சென்ருர்கள். இன்று காங்கிரஸ் அங்கத்தினர் பதிவுப் புத்தகத்தில் பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்களின் பெயர்கள் இருக்கின்றன. அவ்விதமே ஆயிரக்கணக்கான தீண்டாதாரின் பெயர்களும் இருக்கின்றன. காங்கிரஸ் அங்கத்தினர் பதிவுப் புத்தகத்தில் இந்திய கிறிஸ்தவர்களின் பெயர்களும் இருக்கின்றன. காங்கிரஸ் அங்கத்தினர்களாக இல்லாத ஒரு சமூகத்தினர்கூட இந்தியாவில் இல்லை. நிலச்சுவான்தார்கள், மில் சொந்தக்காரர்கள், லட்சப் பிரபுக்கள் ஆகியோருக்குக் கூட காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்து வருகிறது என்பதை, சடாரி நவாபுக்கு மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் மெதுவாகவும், தயக்கத்துடனும் காங்கிரசில் சேர்ந்து வருகிருர்கள். அவர்களுக்கும் தொண்டு புரிய காங்கிரஸ் முயற்சித்து வருகிறது. காங்கிரஸ், தொழிலாளர்களுக்கும் பிரதிநிதித்துவம் வகித்து வருகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே சிறுபான்மையோர் சம்பந்தமாக இப்போது தயாரிக்கப்பட்டுள்ள திட்டம் 11½ கோடி மக்களுக்கு மேற்பட்டவர்களால் ஒப்புக்கொள்ளத் தக்கது என்று கூறுவதை தயக்கமின்றியும், மனப்பூர்வமாகவும் ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது.

**காங்கிரசின் யோசனை**

மேலும் ஒரு வார்த்தை கூறிவிட்டு நான் முடித்துக் கொள்கிறேன். சமூகப் பிரச்னையை யொட்டி காங்கிரஸ் கூறியுள்ள யோசனை உங்களிடம் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது; அங்கத்தினர்களுக்கும் சிற்றறிக்கையின் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. நான் பார்த்த எல்லாத் திட்டங்களுக்குள்ளும் காங்கிரசின் திட்டம் தான் மிகவும் எளிதில் செயல்படக் கூடியதாகும். நான் இவ்விதம் கூறுவது தவருக இருக்கலாம். இந்த மகாநாட்டில் கலந்து கொண்டுள்ள சமூகங்களுடைய பிரதிநிதிகளின் சம்மதத்தையும் ஆதரவையும் அது பெறவில்லை என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனல் அது இந்தியாவிலுள்ள இதே சமூகங்களுடைய பிரதிநிதிகளின் சம்மதத்தையும் ஆதரவையும் பெற்றிருக்கிறது. அது மூளையினல் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு திட்டமல்ல; பல்வேறு முக்கிய கட்சிகளின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு கமிட்டியினல் சிருஷ்டிக்கப்பட்டதாகும். காங்கிரசின் சார்பில் சமர்ப்பிக்கப்பட்ட திட்டம் உங்களிடத்தில் இருக்கிறது. சமூகப் பிரச்னையை பார

யட்சமற்ற மத்தியஸ்தத்திற்கு விடவேண்டும் என்றும் காங்கிரஸ் யோசனை கூறியிருக்கிறது. உலகம் முழுவதும் மக்கள், மத்தியஸ்தத்தின் மூலமே தங்களுடைய வேற்றுமைகளைத் தீர்த்துக் கொண்டிருக்கிறுர்கள். அவ்விஷயமாக ஒரு மத்தியஸ்த நீதிச் சபையின் தீர்ப்பை ஒப்புக்கொள்ள காங்கிரஸ் எப்போதுமே விருப்பத்துடன் இருந்து வருகிறது. இப் பிரச்னையைப் பரிசீலனை செய்து தீர்ப்புக் கூறுவதற்காக அரசாங்கம் ஒரு நீதிச் சபையை நியமிக்கலாமென நானே யோசனை கூறியிருக்கிறேன். இந்த முறைகளில் எதுவும் ஒப்புக்கொள்ளத் தக்கதாக இராவிடில், எத்தகைய அரசியல் திட்டத்தைத் தயாரிப்பதற்கும் முதலில் வகுப்புப் பிரச்னையை தீர்க்க வேண்டியது அத்தியாவசியம் எனில், பின்னர் சர் ஹியூபர்ட் காரும், மற்றவர்களும் தயாரித்துள்ள திட்டத்தை நாங்கள் ஒப்புக்கொள்வதைக் காட்டிலும் பொறுப்பாட்சி இராமல் இருந்து விடுவதே சிறந்ததாகும்.

முன்னர் கூறியதையே நான் மீண்டும் திருப்பிக் கூற விரும்புகிறேன். ஹிந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர்களும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஒரு முடிவை காங்கிரஸ் எப்போதுமே அங்கீகரிக்கத் தயாராக இருக்கிறது. ஆனல் வேறு எந்தச் சிறுபான்மையினருக்கும் விசேஷ ஸ்தானங்கள் ஒதுக்கி வைப்பதையோ அல்லது விசேஷத் தொகுதிகள் ஒதுக்கி வைப்பதையோ காங்கிரஸ் ஒப்புக்கொள்ளாது. ஒவ்வொருவருக்கும் வாக்காளர் ஜாபிதாவில் இடம் பெறவும், பொதுத் தொகுதிகளுக்கு வேண்டுகோள் விடுக்கவும் உரிமை உண்டு. சர் ஹியூபர்ட் கார் தயாரித்துள்ள திட்டம் பொறுப்பாட்சி அரசாங்கத்திற்கும், தேசீயத்திற்கும் நேர்மாறுனது. துண்டு துண்டாகப் பிரிக்கப்பட்ட இந்தப் பல்வேறு விசேஷத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் இந்தியாவில் இருப்பார்களாயின், இந்தியாவைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும். ஐரோப்பியர்களால் மாத்திரமல்ல, எல்லோரும் அடங்கிய பொதுத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐரோப்பியர்கள்தான் இந்தியாவுக்குத் தொண்டு புரிய முடியும்.

### விசேஷ சலுகைகளின் விபரீதம்

சர் ஹியூபர்ட் காரின் திட்டமானது, பொறுப்பாட்சிக்கே சாவு மணி அடித்தாகி விடும்; விசேஷ சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளவர்களுக்கும் பொறுப்பாட்சி அரசாங்கத்துக்கும் எப்போதும் தகராறுகள் இருந்து கொண்டே இருக்கும்; அந்த விசேஷ சலுகைகள் எப்போதும் தேசீய உணர்ச்சிக்கு முரணுகவே இருந்து வரும்;

அதாவது 85 சத விகிதமுள்ள விவசாயிகளுக்கும் விசேஷ சலுகைகள் உள்ளவர்களுக்கும் எப்போதும் முரண்பாடு இருந்துவரும்.

என்னைப் பொறுத்தமட்டில், அத்தகைய நிலைமை மனத்தினால் நினைக்கவும் முடியாதது. பொறுப்பாட்சியை நாம் அமலுக்குக் கொண்டு வரவேண்டுமாயின், நமக்கு உண்மையான விடுதலை கிடைக்க வேண்டுமாயின், நான் ஒரு யோசனை கூறத் துணிகிறேன். அதாவது விசேஷ சலுகைகளுக்கு உரியவை என்று கூறப்படும் வகுப்புகளைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் திறந்த முன்புற வாயிற்படியின் வழியாகவும், தேர்தல் மூலமும், பொதுத் தொகுதிகளிலிருந்தும் சட்டசபைக்குள் வருவது கடமையாகவும், பெருமையாகவும், உரிமையாகவும் இருக்க வேண்டும். வயதுவந்தவர்களுக்கு வாக்குரிமை அளிக்கவேண்டும் என்பதே காங்கிரசின் உறுதியான கொள்கையாக இருந்து இருகிறது. அந்த வாக்குரிமையின் கீழ் வாக்காளர் ஜாபிதாவில் இடம் பெற எல்லோருக்கும் உரிமை உண்டு. அதற்கு மேல் எதுவும் கோர யாருக்கும் உரிமை இல்லை.

### தீண்டாதாரைப் பிரித்து வைக்கும் அநீதி

மற்றச் சிறுபான்மையோரின் கோரிக்கைகளை நான் அறிந்து கொள்ள முடியும். ஆனால் தீண்டாதாரின் சார்பில் விடுக்கப்பட்டுள்ள கோரிக்கைகள் என் உள்ளத்தைப் பிளக்கின்றன. அதாவது தீண்டாதார், எப்போதும் தீண்டாதாராக இருந்து வரவேண்டும் என்பதே அத்திட்டத்தின் அர்த்தமாகும். இந்தியாவுக்கு விடுதலை கிடைப்பதற்காகக் கூட நான் தீண்டாதாரின் மூலாதாரமான நலன்களை விற்க மாட்டேன். என்னை நான், தீண்டாதாரில் மிகப் பெரும்பாலோருடைய பிரதிநிதி என்று கூறிக் கொள்கிறேன். தீண்டாதாரிடையே சர்வ ஜன வாக்கு எடுக்கப்படுமாயின் எல்லோரையும் காட்டிலும் நான்தான் அதிக வோட்டுக்கள் பெறுவேன். இவ்விதம் நான் காங்கிரஸ் சார்பில் மாத்திரம் கூறவில்லை, என் சொந்த சார்பிலும் கூறுகிறேன். தீண்டாதார்களுக்கு உள்ள தடைகளை நீக்குவதற்கு, தனித் தொகுதிகளோ அல்லது விசேஷ ஸ்தானங்கள் ஒதுக்கி வைப்பதோ வழியல்ல என்று தீண்டாதார்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக நான் இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையில் பிரயாணம் செய்யத் தயாராக இருக்கிறேன். இந்தியாவில் தீண்டாதார் சமூகம் இருப்பது தீண்டாதார்களுக்கு அல்ல, வைதிக ஹிந்து தர்மத்துக்கே வெட்கக்கேடாகும். எனவே தீண்டாமை என்ற இந்த களங்கத்தை அகற்ற ஹிந்து சீர்திருத்த வாதிகள் அடங்கிய ஒரு ஸ்தாபனம்

இருந்து வருகிறது என்பதை இந்தக் கமிட்டியும், அகில உலகமும் அறிந்துகொள்ளுமாக. எங்கள் வாக்காளர் ஜாபிதாவிலும், ஜனத் தொகை அறிக்கையிலும் தீண்டாதாரை ஒரு தனிப்பட்ட வகுப்பின ராகக் குறிப்பிடுவதை நாங்கள் விரும்பவில்லை. சீக்கியர் எப்போதும் சீக்கியராக இருக்கலாம்; முஸ்லிம்கள் எப்போதுமே முஸ்லிம்களாக இருக்கலாம்; ஐரோப்பியர்களும் எப்போதுமே ஐரோப்பியர்களாக இருக்கலாம். ஆனால் தீண்டாதார் எப்போதுமே தீண்டாதாராக இருந்து வருவார்களா? தீண்டாமை உயிருடன் இருப்பதைக் காட்டிலும், ஹிந்து மதம் மடிவதையே நான் விரும்புவேன். டாக்டர் அம்பேத்காரிடத்திலும், தீண்டாதார் உயர் நிலையை அடை வதைப் பார்க்கவேண்டும் என்ற அவரது ஆர்வத்திலும், அவரது திறமையிலும் எனக்குப் பூரண மதிப்பு உண்டு. எனினும் இவ் விஷயத்தில் அவர் தவறு செய்துள்ளார் என்றே நான் கூற வேண் டும். எனினும் அவருக்கு ஏற்பட்ட கசப்பான அனுபவங்கள் காரண மாக அவரது பகுத்தறிவு தற்காலிகமாகத் தடுமாற்றம் அடைந் திருக்கலாம். இவ்விதம் கூற என் மனம் வேதனை அடைகின்றது. எனினும் இதை நான் கூறாவிடில், தீண்டாதார் விஷயத்தில் நான் உண்மையுடன் நடந்துகொண்டவனாக மாட்டேன். தீண்டாதாரின் விமோசனம் எனக்கு உயிரைப் போல் அவ்வளவு முக்கியமானது. உலக சாம்ராஜ்யமே கிடைப்பதாக இருந்தால்கூட, அதற்காக நான் தீண்டாதாரின் உரிமைகளைப் பேரம் செய்ய மாட்டேன். இந்தி யாவிலுள்ள தீண்டாதார் எல்லோருடைய சார்பிலும் தாம் பேசுவ தாக டாக்டர் அம்பேத்கார் கூறுகிறார். அவர் அவ்விதம் கூறுவது சரியல்ல. எனது பொறுப்பை நன்கு உணர்ந்தே நான் இவ்விதம் கூறுகிறேன். அவரது கூற்று ஹிந்து மதத்திலேயே பிளவை உண்டாக்கும். அத்தகைய ஒரு விளைவை நான் மகிழ்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. தீண்டாதார், இஸ்லாம் மதத்திற்கோ அல்லது கிறிஸ்தவ மதத்திற்கோ மாற்றப்படுவ தைக் குறித்து நான் கவலைப்படவில்லை. நான் அதைச் சகித்துக் கொள்ளமுடியும். ஒவ்வொரு கிராமத்திலும் இவ்விதம் இரண்டு பிளவுகள் இருப்பதால் எதிர்காலத்தில் ஹிந்து மதத்திற்கு ஏற்படக்கூடிய விளைவை என்னால் சகிக்கமுடியாது. தீண்டா தாரின் அரசியல் உரிமைகளைப்பற்றிப் பேசுவோருக்கு இந்தியா வைப்பற்றி எதுவும் தெரியாது; இந்திய சமூகம் எவ்விதம் உருவாக்கப்பட்டிருக்கிறது என்பதை அவர்கள் அறியவில்லை. எனவே இத்தகைய நிலையை நான் ஒருவனே எதிர்க்கும்படி நேரிட்டால் கூட, என் உயிரைக் கொடுத்தாவது அதை நான் எதிர்ப்பேன் என்பதை அறுதியிட்டுக் கூறுகிறேன்.

# 7

# ராணுவ நிர்வாகம்

வட்டமேஜை மகாநாட்டின் பெடரல் அமைப்புக் கமிட்டியில், இந்தியாவில் ராணுவ நிர்வாக சம்பந்தமாக காந்திஜி பேசிய விவரங்களைக் கீழே காணலாம் :

மிகவும் முக்கியமான இந்தப் பிரச்னையையொட்டி காங்கிரசின் கருத்தைக் கூறுவதில் எனக்குள்ள மகத்தான பொறுப்பை நான் அறிவேன். நான் இந்தக் கட்டத்தில் குறுக்கிட்டிருப்பதற்குக் காரணம், எதுவுமே தெரியாத நவம்பர் மாத மூடுபனிக்கிடையே நான் இருக்கிறேன் என்பதேயாகும். இந்த விவாதத்தின் பலனை ஓர் அறிக்கை வெளியாகுமா அல்லது வெளியாகாதா என்பது எனக்குத் தெரியாது. இந்த ஆலோசனைகள் திடீரென்று முடிவடைந்து விடுமா அல்லது தொடர்ந்து நடைபெறுமா என்பதும் எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்தமட்டில், அவசியமாயின் மாரிகாலத்தை இங்கிலாந்தில் கழிப்பது என்ற உத்தேசத்துடனேயே நான் இங்கு வந்தேன். எனவே நட்பு முறையில் சமரசப் பேச்சின் மூலமோ அல்லது ஆலோசனையின் மூலமோ காங்கிரசின் நோக்கம் நிறைவேறுவது சாத்தியமாக இருக்குமாயின், காலமாவதை நான் பெரிதாகக் கருதவில்லை. கௌரவமான ஒரு சமரசம் செய்துகொள்வதற்காக, சாத்தியமான எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும் என்ற உறுதியான நோக்கத்துடனேயே நான் இங்கு அனுப்பப்பட்டிருக்கிறேன். இந்த மகாநாட்டில் பகிரங்கமாக விவாதித்தோ, அல்லது மந்திரிகளுடனும், பொதுமக்களிடையே செல்வாக்குள்ள பிரமுகர்களுடனும், இந்தியா சம்பந்தப்பட்ட பிரச்னைகளில் அக்கறையுள்ள சகலருடனும் தனித்த முறையில் கலந்து ஆலோசித்தோ ஒரு கௌரவமான சமரசத்திற்கு வரலாம். ஒரு சமரசத்திற்கு வர எல்லா முயற்சிகளும் செய்ய நான் கடமைப்பட்டிருக்கிறேன். காங்கிரசின் மூலாதாரமான கொள்கை என்ன என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரைவில் தன் லட்சியத்தை அடையவேண்டும் என காங்கிரஸ் உறுதிகொண்டிருக்கிறது. எல்லாப் பிரச்னைகளை யொட்டியும் காங்கிரசுக்கு நிர்ணயமான அபிப்பிராயங்கள் உண்டு. மேலும் குறிப்

பிடத்தக்க உண்மை என்னவெனில், பொறுப்பாட்சியிலிருந்து எழும் எல்லாப் பொறுப்புகளையும் வகிக்க இன்று காங்கிரசுக்குத் திறமை உண்டு என்பதுதான்.

### பொறுப்பாட்சியின் சாரம்

அப்படியிருக்க, இப்பிரச்னை சம்பந்தமாக காங்கிரசின் கருத்தை என்னால் இயன்ற வரையில் சுருக்கமாகவும், பணிவுடனும் குறிப்பிடாமல் இந்த முக்கியமான விஷயத்தைப்பற்றிய விவாதம் முடிவுற அனுமதிக்கக் கூடாதென நான் நினைத்தேன்.

முழு நிர்வாகப் பொறுப்பையும் இந்தியாவினிடம் மாற்ற வேண்டும் என்பதே காங்கிரசின் லட்சியம் என்பதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். அதாவது ராணுவமும் வெளிநாட்டு விவகாரங்களும் முற்றிலும் இந்தியர்களின் நிர்வாகத்தின் கீழ் இருக்கவேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். காங்கிரஸ் தீர்மானத்தில் அது சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவற்றைச் சமரசமான முறையில் மாற்றவேண்டும் என்பதும் அத்தீர்மானத்தின் நோக்கமாகும். இந்த மூலாதாரமான விஷயங்களை யொட்டிய நிர்வாகப் பொறுப்பை நாங்கள் கோராமலேயே எங்களுக்குப் பொறுப்பாட்சி கிடைக்கப் போவதாக எண்ணி நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளக் கூடாது ; உலகத்தையும் ஏமாற்றக்கூடாது. தன் சொந்த ராணுவத்திலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் அதிகாரமில்லாத ஒரு தேசம், பொறுப்பாட்சி நிலவும் தேசமாக இருக்க முடியாது என்றே எண்ணுகிறேன். ஒரு தேசத்தின் ராணுவம் அந்த நாட்டிற்கு வெளியில் உள்ளவர்களின் நிர்வாகத்தில் இருக்குமாயின்,—அவர்கள் எவ்வளவு நட்புறவு உள்ளவர்களாயினும்,—அந்த நாட்டில் பொறுப்புள்ள அரசாங்கம் நடைபெறுவதாகக் கூற முடியாது. ஆங்கில உபாத்தியாயர்கள் எண்ணிக்கையற்ற தடவைகளில் நமக்குக் கற்பித்திருப்பது இதுதான். எனவே நாம் பொறுப்பாட்சி பெறுவோம் என்றும், ஆனல் நமது சொந்த ராணுவம் நம்முடைய நிர்வாகத்தில் இராது என்றும் அல்லது அதன் நிர்வாகப் பொறுப்பை நாம் கோர மாட்டோம் என்றும் சில ஆங்கிலேயர்கள் கேள்விப்பட்டபோது அவர்கள் என்னை ஏளனம் செய்தார்கள்.

ராணுவத்திலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் எங்களுக்குப் பூரணமான நிர்வாகப் பொறுப்பு இருக்கவேண்டும் என்று காங்கிரசின் சார்பில் கோரவே நான் இங்கு வந்திருக்கிறேன்.

மிகுந்த தீர்க்காலோசனையின்மீதே நாங்கள் இந்த முடிவுக்கு வந்துள்ளோம். பொறுப்பாட்சி முறையை நாங்கள் மேற்கொள்ளும்போது, ராணுவ நிர்வாகப் பொறுப்பை மேற்கொள்ள நாங்கள் தகுதியற்றவர்கள் என்ற காரணத்தினால் அந்த நிர்வாகம் எங்களிடம் மாற்றப்படவில்லையாயின், பின்னர் அதை ஏற்க நாங்கள் திடீரென்று தகுதிபெறும் காலம் எப்போது வரும் என்பதை என்னால் கற்பனை செய்துகொள்ள முடியவில்லை.

### இன்றைய ராணுவம்

தற்போது இந்த ராணுவத்தின் நிலை என்ன என்பதை இந்தக் கமிட்டி அறிந்து கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இந்த ராணுவத்தில் உள்ளவர்கள் இந்தியர்களாயினும், பிரிட்டிஷாராயினும், இது ஆக்கிரமிப்பு ராணுவமேயாகும். அவர்கள் சீக்கியர்களாயினும், கூர்க்கர்களாயினும், பட்டாணியர்களாயினும், ரஜபுத்திரர்களாயினும் அல்லது சென்னையிலிருந்து வந்தவர்களாயினும், யாராயினும் அதைப்பற்றி எங்களுக்குக் கவலையில்லை. என்னைப் பொறுத்த மட்டில், அவர்கள் அந்த ராணுவத்தில் இருந்துவரும் வரையில் அவர்கள் அந்நியர்களே. அவர்கள் ஓர் அந்நிய சர்க்காரின் கட்டுப்பாட்டில் இருந்து வருகிறார்கள். நான் அவர்களுடன் பேச முடியாது. சிப்பாய்கள் ரகசியமாக என்னிடம் வருகிறார்கள். என்னிடம் அவர்கள் பேசுவதை யாராவது போய்ச் சொல்லிவிடுவார்களோ என்று அவர்கள் என்னுடன் பேசவே பயப்படுகிறார்கள். சாதாரணமாக நாங்கள், சிப்பாய்கள் வைக்கப்பட்டுள்ள இடங்களுக்குச் செல்லுவது முடியாத காரியம். எங்களை அவர்களுடைய தேச மக்களாகக் கருதாமல் இருக்கும்படியும் அவர்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் சாதாரண மக்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இத்தகைய நிலையை உலகிலுள்ள வேறு எந்த நாட்டிலும் காணமுடியாது. இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் உள்ளவர்களுடன் தொடர்பு கொள்ள நான் முயற்சித்து வந்திருக்கிறேன். எனவே எங்களுக்கும் ராணுவ சிப்பாய்களுக்கும் இடையே ஒரு நெடுஞ் சுவர் இருக்கிறது என்பது என்னுடைய சொந்த அனுபவம் மாத்திரமல்ல, பதினாயிரக் கணக்கான காங்கிரஸ் வாதிகளின் அனுபவமாகும்.

எனவே, பிரிட்டிஷ் சிப்பாய்களை ஒதுக்கிவிட்டால்கூட இந்தியர்கள் மாத்திரம் அடங்கிய இந்த ராணுவத்தின் நிர்வாகத்தை உடனடியாக நாங்கள் ஏற்பது மகத்தான ஒரு பொறுப்பாகும் என்பதை நான் முற்றிலும் அறிவேன். இது துரதிருஷ்டவசமான,

வருந்தத்தக்க ஒரு நிலையாகும். இதை நமது ஆட்சியாளர்கள் நமக்காகச் சிருஷ்டித்திருக்கிறார்கள் என்று கூற நான் வருந்துகிறேன். அப்படியிருந்தாலும் கூட, நாம் அந்தப் பொறுப்பை மேற்கொள்ளத்தான் வேண்டும்.

மேலும், ராணுவத்தில் பிரிட்டிஷார் அடங்கிய பிரிவு இருக்கிறது. இந்தப் பிரிவின் நோக்கம் என்ன? அந்நிய நாட்டினரின் தாக்குதலைத் தவிர்ப்பதற்காகவோ அல்லது எதிர்ப்பதற்காகவோ மாத்திரமல்ல, பிரிட்டிஷாரின் நலன்களைப் பாதுகாப்பதற்காகவுமே இந்திய ராணுவத்துடன் பிரிட்டிஷ் ராணுவமும் இருந்து வருகிறது என்பதை இந்தியாவில் ஒவ்வொரு குழந்தையும் அறியும். இதையெல்லாம் கூற வேண்டியிருப்பதற்காக நான் வருந்துகிறேன். ஆனால் இவையெல்லாம் நான் அனுபவத்தின் மூலம் அறிந்துகொண்டவை. எனவே நான் பார்த்த உண்மையையும், எனது உண்மையான அபிப்பிராயத்தையும் நான் கூறாவிடில் என்னுடைய பிரிட்டிஷ் நண்பர்களுக்குக்கூட நான் அநீதி செய்தவனாவேன். மூன்றாவதாக அந்த ராணுவம், பிரிட்டிஷ் அதிகாரத்திற்கு எதிராக எழும் கலகத்தை அடக்குவதற்காகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. முக்கியமாக அந்த ராணுவத்தின் கடமைகள் இவைதான்.

## பிரிட்டிஷ் துருப்புகள் இருப்பதேன்?

எனவே, இந்திய ராணுவ சம்பந்தமாக ஆங்கிலேயர்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. நான் ஓர் ஆங்கிலேயனாக இருந்து, மற்றொரு நாட்டை ஆட்சிபுரிய வேண்டும் என்ற ஆசையும் எனக்கு இருந்தால், நானும் முற்றிலும் அவ்விதமே நடந்து கொள்வேன். அந்த நிலையில் நானும் இந்தியர்களுக்கு ராணுவப் பயிற்சி அளித்து, அவர்களை என்னிடம் விசுவாசத்துடனிருக்கும் சிப்பாய்களாகச் செய்வேன். அப்போது என் கட்டளைக்கும் விருப்பத்திற்கும் இணங்க அவர்கள் யாரை வேண்டுமாயினும் சுட்டுத் தள்ளுவார்கள். ஜாலியன் வாலாபாக்கில் அவர்கள் தங்கள் தேச மக்களையே சுட்டுத்தள்ளவில்லையா?

பல்வேறு பிரிவினரான இந்திய சிப்பாய்களிடையும் சமநிலை கெடாமல் பார்த்துக்கொள்வதும் பிரிட்டிஷ் துருப்புகள் இருப்பதன் நோக்கமாகும். பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும், பிரிட்டிஷாரின் உயிர்களுக்கும் பாதுகாப்பு அளிப்பதும் அதன் கடமையாக இருந்து வருகிறது என்பதில் ஐயம் எதுவும் இல்லை.

இந் நிலையில், சர் தேஜ் பகதூர் சாப்ருவும், பண்டித மதன் மோகன் மாளவியாவும் பதில் அளிக்கமுடியாத கேள்விக்கு நான் பதில் அளிப்பது எளிதேயாகும். தாங்கள் ராணுவ விவகாரங் களில் நிபுணர்கள் அல்லவாதலின், அந்த ராணுவத்தை எந்த அளவுக்குக் குறைக்கவேண்டும் என்று கூறுவது இயலாத காரியம் என அவ்விருவரும் குறிப்பிட்டனர். ஆனல் அவ்விஷயமாக என்ன செய்யவேண்டும் என்ற சங்கடம் எதுவும் எனக்கு இல்லை. அந்நிய ஆட்சியின் சொத்தான பயங்கரமான முட்டுக்கட்டை களுக்கு உட்பட்டவர்களாக நாம் இருந்து வருகிறோம். இந்த நிலை யில், இந்திய அரசாங்கத்தின் நிர்வாகப் பளுவை நான் ஏற்றுக் கொள்ளுமுன், ராணுவ நிர்வாகம் என்னுடைய அதிகாரத்தின் கீழ் வராவிடில், ராணுவம் முழுவதையும் கலைத்துவிட வேண்டும் என்றே நான் வற்புறுத்திக் கூறுவேன்.

### ஒரு முக்கிய நிபந்தனை

எனவே நீங்கள், அதாவது பிரிட்டிஷ் மந்திரிகளும் பிரிட்டிஷ் மக்களும் இந்தியா நலன்பெற வேண்டுமென விரும்புவீர்களாயின், நிர்வாக அதிகாரத்தை நீங்கள் இப்போது எங்கள் கைக்கு மாற்றுவீர்களாயின், ராணுவம் முழுவதும் எங்களுடைய நிர்வா கத்திற்கு மாற்றப்படவேண்டும் என்று நான் கூறுகிறேன்.

எனினும் அவ்வாறு மாற்றுவதால் ஏற்படக்கூடிய அபாயங் களையும் நான் அறிவேன் என்று உங்களுக்குக் கூறியுள்ளேன். ராணுவம் என்னுடைய கட்டளையை அங்கீகரிக்காது. இதை நான் நன்கு அறிவேன். என்னுடைய தலைமையை பிரதம தள பதி ஒப்புக்கொள்ளமாட்டார் என்பதையும் நான் அறிவேன்; சீக்கியர்களோ அல்லது வீரப் பிரதாபமுள்ள ராஜபுத்திரர் களோ எவரும் என்னுடைய தலைமையை விருப்பத்துடன் ஒப்புக் கொள்ளமாட்டார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அப்படியிருந் தாலும் பிரிட்டிஷ் மக்களின் நல்லெண்ணத்தைத் துணையாகக் கொண்டு, ராணுவத்திற்கு நான் தலைமை வகிக்க முடியுமென எதிர்பார்க்கிறேன். ராணுவத் தலைமை மாற்றப்படும்போது அந்தச் சிப்பாய்களுக்கு ஒரு புதிய பாடம் கற்பிக்க பிரிட்டிஷார் அங்கே இருப்பார்கள்; சிப்பாய்கள் தங்கள் சொந்த தேச மக்களுக்குத்தான் பணி புரியப் போகிருர்களேயன்றி வேறு எதுவுமல்ல என்று பிரிட்டிஷார் அவர்களிடம் கூறுவார்கள். "இனி பிரிட்டிஷாரின் நலன்களையும், பிரிட்டிஷாரின் உயிர்களையும் பாதுகாப்பதற்கு அல்ல, அந்நியர்களின் ஆதிக்கத்தை எதிர்த்து இந்தியர்களைப் பாதுகாப்பதற்காகவே நீங்கள் இங்கு இருக்கப்

போகிறீர்கள். நீங்கள் உங்களுடைய சொந்த தேச மக்களுக்குத் தொண்டு புரிவதாகவே, நினைத்துக்கொண்டு, உள் நாட்டுக் கலகங்களையும் எதிர்த்து இந்தியாவுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும்'' என்றும் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சிப்பாய்களிடம் நீங்கள் கூறலாம்.

## என் கனவு

அதுதான் என் கனவாகும். நான் கண்டுவந்துள்ள அந்தக் கனவு இங்கே நிறைவேறப் போவதில்லை என்பதை நான் அறிவேன். அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது. இந்த மகாநாட்டு நடவடிக்கைகளின் பலனை இன்று இங்கே என்னுடைய அந்தக் கனவு நிறைவேறப் போவதில்லை என்று என் முன்னுள்ள சாட்சியமும், என் உணர்வும் கூறுகின்றன. அப்படியிருந்தாலும் அந்தக் கனவை நான் பேணிவர விரும்புகிறேன். என் வாழ்நாட்கள் முடியும் வரையில் அந்தக் கனவைப் பேணிவர நான் விரும்புகிறேன். இதுவே, பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் அல்லது பிரிட்டிஷ் பொது மக்கள் பேணும் லட்சியமாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் அவர்களுடைய மனத்தில் ஊடுருவும்படி இன்றுள்ள சூழ் நிலையில் என்னால் செய்ய முடியாது என்பதை நான் அறிவேன். பிரதம மந்திரியின் பிரகடனத்திற்கும், லார்டு இர்வினின் விருப்பத்திற்கும் நான் கூறும் விளக்கம் அதுதான். நமது சொந்த ராணுவத்தை நிர்வகிப்பதற்கான மர்மங்களை நமக்கு இப்போது கற்பிக்கவேண்டியது, பிரிட்டனுக்குப் பெருமையளிக்கும் ஒரு வாய்ப்பாகவும், ஒரு சிறந்த கடமையாகவும் இருக்கவேண்டும். எங்களுடைய இறக்கைகளை அவர்கள் வெட்டிவிட்டார்கள். எனவே அவர்கள் பறந்து செல்லுவது போல் நாங்களும் பறந்து செல்லுவதற்கு வசதியாக எங்களுக்கு இறக்கைகளை அளிக்கவேண்டியது அவர்களுடைய கடமையாகும். அதுதான் என்னுடைய ஆர்வம். ராணுவ நிர்வாகப் பொறுப்பை நான் பெற முடியாதெனில், அதற்காக உலகம் முடியும் வரையில் கூட நான் காத்திருப்பேன் என்று கூறுகிறேன். ராணுவ நிர்வாக அதிகாரம் இல்லாமலேயே நான் பொறுப்பாட்சி பெறப்போகிறேன் என்று என்னை நானே ஏமாற்றிக்கொள்ள உடன்பட மாட்டேன்.

இந்தியா, தன்னைத்தானே எப்படிப் பாதுகாத்துக்கொள்வது என்பதை ஒரு காலத்திலும் அறியாத ஒரு நாடு அல்ல. தற்காப்பிற்கான எல்லாச் சாதனங்களும் இந்தியாவில் இருக்கின்றன. அங்கே முஸ்லிம்கள், அந்நியர்கள் படையெடுத்து வருவார்களோ

வென்று பயந்துகொண்டிருக்கவில்லை. சீக்கியர்களும் தங்களை எவரும் ஜெயிக்கமுடியும் என்று எண்ண இடம் கொடுக்கமாட்டார்கள். கூர்க்கர்களும், தேசீய ரீதியில் அவர்களுடைய மனம் வளர்ச்சிபெற்ற உடனேயே, "நாங்கள் தனியாகவே இந்தியாவைப் பாதுகாக்க முடியும்" என்று கூறுவார்கள். ஆயிரம் யுத்த வீரர்களுக்குச் சமமானவர்கள் என்று கருதப்படும் ரஜபுத்திரர்களும் இந்தியாவில் இருக்கிறார்கள். இதை நமக்குக் கூறியவர் ஆங்கிலேயரான கர்னல் டெட் ஆவார். எனவே அத்தகையோருக்கு ராணுவக் கலையைக் கற்பிக்க வேண்டியது அவசியமா? பொறுப்பாட்சியை நான் ஏற்றுக்கொள்ளும்போது இவர்களும் என்னுடன் சேர்ந்துகொள்வார்களென நினைக்கிறேன். வகுப்புப் பிரச்னையை யொட்டி நாம் இன்னும் யாதொரு முடிவுக்கும் வராததைக் குறித்து நான் இப்போது வேதனையினால் துடித்துக்கொண்டிருக்கிறேன். வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக எப்போது சமரசம் ஏற்பட்டாலும், முதலில் நாம் ஒருவரை யொருவர் நம்ப வேண்டியது அவசியமாகும். ஆட்சியாளர்களில் பெரும்பாலோர் ஹிந்துக்களாயினும், முஸ்லிம்களாயினும் அல்லது சீக்கியர்களாயினும், அவர்கள் ஹிந்துக்கள் அல்லது முஸ்லிம்கள் அல்லது சீக்கியர்கள் என்ற முறையில் ஆட்சிபுரியமாட்டார்கள்; ஆனால் அவர்கள் இந்தியர்கள் என்ற முறையிலேயே ஆட்சி புரிவார்கள். நாம் ஒருவரை யொருவர் நம்பாவிடில், பின்னர் நாம் ஒருவரையொருவர் கொன்றுவிடாமல் இருப்பதற்காக பிரிட்டிஷார் இந்தியாவிலேயே இருக்க வேண்டுமென நாம் விரும்புவோம்! அவ்விதமாயின், பொறுப்பாட்சியைப்பற்றி நாம் பேசக்கூடாது.

**காங்கிரசின் நம்பிக்கை**

ராணுவ நிர்வாக அதிகாரமின்றி நாம் பொறுப்பாட்சி பெற்றிருப்பதாக வேறு யார் நினைத்தாலும், நான் அவ்விதம் நினைக்க முடியாது. பொறுப்பாட்சியையே காங்கிரஸ் விரும்புகிறது. காங்கிரசுக்குத் தன்னிடத்திலும், பெரும்பாலான மக்களிடத்திலும், தைரியசாலிகளான அந்த ராணுவ வீரர்களிடத்திலும் நம்பிக்கை இருக்கிறது. ஆங்கிலேயர்கள் எப்போதாவது தங்கள் கடமையை உணர்ந்து அரசாங்கத்தின் பூரண நிர்வாகத்தையும் நம்மிடம் மாற்றுவார்கள் என்பதிலும் காங்கிரசுக்கு நம்பிக்கை இருக்கிறது. நாம் பொறுப்பாட்சி பெறுவதாயின், இந்தியாவினிடம் பிரிட்டிஷாருக்கு அன்பு ஏற்படும்படி செய்ய வேண்டும். அப்படியானால் தான், இந்தியா தன் சொந்தக் கால்களால் நிற்பது சாத்தியமாகும், அத்தகைய சக்தி நமக்கு ஏற்பட இன்னும் ஒரு நூற்றாண்டு செல்லுமென பிரிட்டிஷ் மக்கள் எண்ணுவார்களாயின்,

பின்னர் அந்த ஒரு நூற்றாண்டு வரையில் காங்கிரஸ் வனாந்தரத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கவே நேரும். காங்கிரஸ் அத்தகைய பயங்கரமான அக்னிப் பரீட்சையைக் கடந்துதான் செல்ல வேண்டும்; துன்பம், தப்பெண்ணம் ஆகிய புயலினூடே அது செல்லத் தான் வேண்டும். அவசியம் ஏற்பட்டால், அது கடவுள் சித்தமுமாயின், காங்கிரஸ் தோட்டா மாரியையும் கடந்து செல்ல வேண்டும். அவ்விதம் நேர்ந்தால், நாம் ஒருவரையொருவர் நம்ப முடியாமல் இருப்பதும், ஆங்கிலேயர்களும் இந்தியர்களும் வெவ்வேறு நோக்கம் கொண்டவர்களாக இருப்பதுமே அத்தகைய நிலை ஏற்படுவதற்குக் காரணமாக இருக்கும்.

எனது அடிப்படையான நிலை அதுதான். நான் விவரமாகக் குறிப்பிட விரும்பவில்லை. என் திறமைக்கு எட்டிய வரையில் நான் இவ்விஷயத்தை வற்புறுத்திக் கூறியிருக்கிறேன். குறிப்பிட்ட சமூகங்களுக்குப் பாதுகாப்புகளைத் தயாரித்து இச் சபையில் சமர்ப்பிக்கும் ஆற்றல் எனக்கு உண்டு. விருப்பு வெறுப்பற்ற மனம் உடையவர்கள் அவற்றை ஆதரிப்பார்கள். எனினும் பாதுகாப்புகள் இந்தியாவின் நலன்களுக்கு உகந்ததாக இருக்க வேண்டும் என்பதே பொதுவான லட்சியமாக இருக்கவேண்டும். நான் இன்னும் ஒருபடி முன் சென்று, லார்டு இர்வின் என்ன கூறினாரோ அதை ஒப்புக்கொள்கிறேன். அதாவது ஒப்பந்தத்திலுள்ள பாதுகாப்புகள் இந்தியாவின் நலன்களுக்கு உகந்ததாக இருப்பதாய்க் கூறப்பட்டாலும் அவை இந்தியா, இங்கிலாந்து ஆகிய இரு நாடுகளின் பரஸ்பர நலன்களுக்கும் உகந்ததாக இருப்பதாய்க் கருதப்படவேண்டும். இந்தியாவின் நலனுக்காக மாத்திரம் உள்ள ஒரு பாதுகாப்பைக் கூட நான் கற்பனை செய்து கொள்ள முடியாது. அதுபோலவே பிரிட்டனின் நலனுக்கு முரணான ஒரு பாதுகாப்பைக் கூட நான் கற்பனை செய்துகொள்ள முடியாது. ஆனால் இதற்கு ஒரு நிபந்தனை உண்டு. அதாவது இரு நாடுகளும் மனமுவந்து பங்காளிகளாக இருக்க வேண்டும்; முற்றிலும் சம அந்தஸ்துள்ள பங்காளிகளாக இருக்க வேண்டும்.

### வெளிநாட்டு விவகாரங்கள்

ராணுவ நிர்வாக சம்பந்தமான முழுப் பொறுப்பையும் கோருவதற்கு நான் கூறியுள்ள காரணங்களே, வெளிநாடுகள் விவகார நிர்வாக சம்பந்தமான முழு அதிகாரமும் கோருவதற்குப் பொருத்தமானவை.

வெளிநாட்டு விவகாரங்கள் என்றால் உண்மையில் என்ன அர்த்தம் என்பது எனக்கு நன்கு தெரியாது. அவ் விஷயமாக

லண்டன் வட்டமேஜை மகாநாட்டின் அறிக்கைகளில் என்ன குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதையும் என்னுல் அறிந்துகொள்ள இயலவில்லை. எனவே வெளி நாட்டு விவகாரங்கள் என்பதற்கும், வெளிநாட்டு உறவுகள் என்பதற்கும் என்ன அர்த்தம் என்பது பற்றிய முதற் பாடத்தை எனக்குக் கற்பிக்கும்படி நான் எனது நண்பர்களான ஸ்ரீ ஐயங்காரையும்*, சர் தேஜ் பகதூர் சாப்ருவையும் கேட்டேன். அவர்கள் அளித்த பதில் இதோ என் முன்னிலையில் இருக்கிறது. அண்டை நாடுகளுடன் உறவுகள், இந்திய சமஸ் தானங்களுடன் உறவுகள், சர்வதேச விவகாரங்களையொட்டி மற்ற வல்லரசுகளுடன் உறவுகள், டொமினியன் நாடுகளுடன் உறவுகள் ஆகியவை அந்த வார்த்தைகளின் பொருள் என அவர்கள் கூறு கின்றனர். இவைதான் வெளிநாட்டு விவகாரங்கள் எனில், அவற்றை யொட்டிய பொறுப்பை வகிக்கவும், அவை சம்பந்தமான எங்களுடைய கடமைகளைச் செய்யவும் முற்றிலும் எங்களுக்கு ஆற்றல் உண்டு என நான் நினைக்கிறேன். எங்களுடைய உற்ருர் உறவினருடனும், எங்களை அடுத்துள்ள அண்டை நாடுகளுடனும். எங்களுடைய சொந்த மக்களுடனும், இந்திய மன்னர்களுடனும் சமரசப் பேச்சுகள் நடத்த எங்களால் முடியும் என்பதில் ஐய மில்லை. எங்கள் அண்டை நாடுகளுடனும், ஆப்கானியர்களுடனும், கடலுக்கு அப்பாலுள்ள ஜப்பானியர்களுடனும் நாங்கள் தீவிரமான நட்பு உறவுகளை வளர்த்துக்கொள்ள முடியும். டொமினியன் நாடு களுடனும் நாங்கள் சமரசப் பேச்சு நடத்த முடியும் என்பது நிச்சயம். டொமினியன்கள் அங்கே உள்ள எங்கள் தேச மக்களை முற்றிலும் சுய மரியாதையுடன் வாழ விடவில்லையாயின், அந்த நாடுகளுடன் நாங்கள் தகுந்தவாறு நடந்துகொள்ள முடியும்.

நான் மதியீனத்தினுல் இவ்விதம் பேசுவதாக இருக்கலாம். ஆனுல் என்னைப் போன்ற மதியீனர்களான ஆடவர்களும் பெண் களும் காங்கிரசில் ஆயிரக்கணக்கிலும் பதினுயிரக் கணக்கிலும் இருக்கிருர்கள். எனவே அவர்களின் சார்பிலேயே இந்தக் கோரிகையை நான் மரியாதையுடன் குறிப்பிடுகிறேன். நாங்கள் குறிப்பிட்டுள்ள பாதுகாப்புகளுடன் எங்களுடைய கடமைகளை நாங்கள் பூரணமாக நிறைவேற்றுவோம் என மீண்டும் கூறு கிறேன்.

**பாதுகாப்புகள்**

பாதுகாப்புகளை, பண்டித மதன் மோகன் மாளவியா எடுத்துக் கூறியிருக்கிருர். அவர் கூறியதில் பெரும் பகுதியையும் நான் முற்றி

---

* ஸ்ரீ ஏ. ரங்கசாமி ஐயங்காரையே ஸ்ரீ ஐயங்கார் என்று காந்திஜி குறிப் பிட்டிருக்கிருர்.

லும் ஒப்புக்கொள்கிறேன். பாதுகாப்புகள் அவ்வளவுதான் என்பதில்லே. ஆங்கிலேயர்களும் இந்தியர்களும் மனம்விட்டு ஒரே நோக்கத்துடன் தங்கள் அறிவை உபயோகிப்பார்களாயின், இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் கௌரவம் அளிக்கத்தக்க பாதுகாப்புகளே நாம் உருவாக்குவது சாத்தியமே என்பதில் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. ஒவ்வொரு பிரிட்டிஷாரின் உயிருக்கும் பிரிட்டிஷாரின் நலன்களுக்கும் அவை உத்தரவாதமாக இருக்கும். பிரிட்டிஷாரின் உயிரையும் நலன்களேயும் பாதுகாப்பதாக இந்தியா வாக்குறுதி அளிக்கின்றது.

இந்தக் கூட்டத்தின் நேரத்தை எடுத்துக் கொண்டதற்காக நான் ஆயிரம் தடவை மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். எனினும் தினந்தோறும் இங்கே உட்கார்ந்து கொண்டும், இந்த ஆலோசனேகள் எப்படி வெற்றிகரமாக முடியும் என்பது பற்றி இரவு பகலாகச் சிந்தித்துக்கொண்டும் இருக்கும் என் மனத்தில் பொங்கியெழும் உணர்ச்சிகளே நீங்கள் அறிந்துகொள்ள முடியும். ஆங்கிலேயர்களிடத்தில் முற்றிலும் நல்லெண்ணமும், என் தேச மக்களுக்கு எல்லேயற்ற பணி புரிய வேண்டும் என்பதுமே அந்த உணர்ச்சிகளாகும்.

# 8

# வர்த்தகத் துறையில் வேற்றுமை

வட்டமேஜை மகாநாட்டின் பெடரல் அமைப்புக் கமிட்டியில் காந்திஜி பேசியதாவது :

ஸ்ரீ பெந்தாலின் நிதானமான பேச்சிற்காக அவருக்கு நான் எனது வாழ்த்துக்களை கூற விரும்புறேன். எனினும் அவர் இரண்டு கருத்துக்களைக் கூறி தமது அற்புதமான பிரசங்கத்தின் சிறப்பு கெடாமல் இருக்க முயற்சி செய்திருக்கக் கூடாதா என்பதே என் விருப்பமாகும். ஐரோப்பியர்களோ அல்லது பிரிட்டிஷாரோ இந்தியாவுக்குச் சில நன்மைகளைச் செய்திருப்பதன் காரண மாகவே அவர்கள் இப்போது சில உரிமைகளைக் கோருகின்றனர் என்பது அவரது முதல் கருத்தாகும். இந்தக் கருத்தை அவர் வெளியிடாமல் தவிர்த்திருக்கலாம். அவரது கருத்தை சர் புரு ஷோத்தமதாஸ் தாகூர்தாஸ் மரியாதையாக மறுத்தார். அக் கருத்தை இப்போது சர் பிரோஸ் ஸேத்னுவும் மறுத்துள்ளார். சர் தாகூர் தாஸ் அவ்வாறு மறுத்ததைக் குறித்து லார்டு ரீடிங் அவரது ஆச்சரியத்தையும் தெரிவித்திருக்க வேண்டாம். ஒரு பெரிய ஸ்தாபனத்தின் பிரதிநிதி என்ற முறையிலேயே ஸ்ரீ பெந்தால் பேசியுள்ளார். எனவே அவர் தமது பிரசங்கத்தில் உபயோகித்த மிரட்டலையும் தவிர்த்திருக்கலாம். ஐரோப்பிய சமூகத்தினரின் கோரிக்கைகளையும் ஸ்ரீ பெந்தால் குறிப்பிட்டார். அந்தக் கோரிக்கைகளை இந்திய தேசியவாதிகள் ஒப்புக்கொண் டால்தான் ஐரோப்பியர்கள் தேசீயக் கோரிக்கையை ஆதரிப்பார் கள் என்பது ஸ்ரீ பெந்தாலின் நிபந்தனையாகும். சில நாட்களுக்கு முன் அவர்களும் மற்ற பிரிவினைக் குழுவுடன் சேர்ந்து கொண்டு தனித் தொகுதி கோரியதிலிருந்து அவர்களுடைய பிரிவினைப் போக்கு வெளியாயிற்று. அன்று அதைப் பற்றிப் பேச வேண்டியது என்னுடைய வருந்தத் தக்க கடமையாகியது.

### சமத்துவ நிலை சரியா?

சென்ற மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தைப் பரிசீலனை செய்ய நான் முயற்சித்துள்ளேன். அத்தீர்மானத்தை நீங்கள் அறி வீர்களாயினும், அதை மறுபடியும் நான் வாசித்துக்காட்ட விரும்பு

கிறேன். ஏனெனில் அந்த தீர்மானத்தையொட்டி நான் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன்.

"இந்தியாவில் வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள பிரிட்டிஷ் வர்த்தக சமூகம், கம்பெனிகள், வியாபார ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் உரிமைகளுக்கும், இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளுக்கும் இடையே வேற்றுமை இருக்கக் கூடாது என்ற கொள்கை பிரிட்டிஷ் வர்த்தக சமூகத்தினரின் யோசனைக்கு இணங்க, பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது."

தீர்மானத்தின் மற்ற விவரங்களை நான் வாசிக்கவேண்டிய அவசியமில்லை. சர் தேஜ் பகதூர் சாப்ருவிடமும், ஸ்ரீ ஜெயகரிடமும் எனக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. அப்படியிருந்தும்கூட, மொத்தமாகக் குறிப்பிடும் இந்தத் தீர்மானத்தை ஒப்புக்கொள்ள முடியாமல் இருப்பதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். எனினும், இந்தத் தீர்மானத்தில் திட்டவட்டமாக எதுவும் குறிப்பிடப்பிடவில்லை என்றும், இதில் திருத்தங்கள் செய்வதற்கு இடமிருக்கிறது என்றும் நேற்று சர் தேஜ் பகதூர் சாப்ரு ஒப்புக்கொண்டபோது நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன். நீங்கள் கவனமாகப் பரிசீலனை செய்வீர்களாயின், இந்தத் தீர்மானத்தின் பொதுவான தன்மையை நீங்கள் உணருவீர்கள். இந்தியாவில் வியாபாரம் செய்யும் பிரிட்டிஷ் வர்த்தக சமூகம், கம்பெனி, வியாபார ஸ்தாபனம் ஆகியவற்றின் உரிமைகளுக்கும் இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளுக்கும் இடையே வேற்றுமை இருக்கக் கூடாது என்பதே அத் தீர்மானமாகும். அதன் அர்த்தத்தை நான் சரியாக அறிந்து கொண்டிருக்கிறேன் எனில், அத்தீர்மானம் பயங்கரமானது என்றே நினைக்கிறேன். அத்தகைய தன்மை வாய்ந்த ஒரு தீர்மானத்திற்கு காங்கிரஸ் கட்டுப்பட்டிருக்கும்படி நான் செய்ய முடியாது; எதிர்கால இந்திய அரசாங்கத்தையும் கட்டுப்பட்டிருக்கும்படி நான் செய்ய முடியாது.

இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளுக்குச் சிறிதும் ஏற்றத் தாழ்வின்றி சமமாக பிரிட்டிஷ் வர்த்தக சமூகத்தின் உரிமைகள் இருக்க வேண்டும் என்று அத் தீர்மானம் கோருகிறது. என்னுல் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு தூரம் வற்புறுத்தி ஒன்று கூற விரும்புகிறேன். இந்தியாவில் பிறந்த எல்லாப் பிரஜைகளின் உரிமைகளும் சமமாக இருக்கும் அல்லது அவைகளுக்கு உத்தரவாதம் அளிக்கப்படும் என்ற விதியைக் கூட நான் அங்கீகரிக்க முடியாது. அதற்குக் காரணம் என்ன என்பதை இப்போது நான் கூறுகிறேன்.

எல்லோருக்கும் இடையே சமநிலை ஏற்பட வேண்டுமாயின், தற்போதுள்ள அரசாங்கம் செய்யாமல் விட்டதை எதிர்கால இந்

திய அரசாங்கம் இடைவிடாமல் செய்யவேண்டியிருக்கும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். அதாவது பட்டினி கிடக்கும் இந்தியர்களுக்கும் இயற்கையின் அருளாலோ அல்லது அரசாங்கத்தினாலோ செல்வமும் மற்ற பாக்கியங்களும் கிடைக்கப்பெற்றுள்ள இந்தியர்களுக்கும் இடையே எதிர்கால இந்திய அரசாங்கம் வேற்றுமை பாராட்டத்தான் வேண்டியிருக்கும். தொழிலாளர்களுக்கு இலவசமாக ஜாகை வசதிகள் அளிக்க வேண்டிய அவசியம் எதிர்கால இந்திய அரசாங்கத்திற்கு ஏற்படும். இந்தியாவிலுள்ள பணம் படைத்தவர்கள் அப்போது இவ்வாறு கூறலாம்:

"இலவசமான ஜாகை வசதிகள் எங்களுக்குத் தேவையில்லை என்றாலும், அவர்களுக்கு நீங்கள் ஜாகைகள் கொடுத்தால், அதற்குத் தகுந்தாற்போல் எங்களுக்கு நீங்கள் மான்யத் தொகைகள் கொடுக்க வேண்டும்.''

ஆனால் அரசாங்கம் அவ்விதம் செய்வது முடியாத காரியம். அத்தகைய முறை ஏழை மக்களுக்குச் சலுகை அளிப்பதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. அங்நிலையில் தங்களுக்கு எதிராக வேற்றுமை காட்டப்படுவதாகச் செல்வவந்தர்கள் கூறலாம்.

எனவே, எதிர்கால அரசியல் திட்டத்தை உருவாக்குவதில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உதவியளிக்க முயற்சித்துவரும் நாங்கள், மொத்தமாக எல்லோரையும் சமமான நிலையில் வைக்கும் இந்த விதியை இம் மகாநாட்டில் அங்கீகரிப்பது முடியாத காரியமென நான் கூறத் துணிகிறேன்.

இருந்தாலும், இன வேற்றுமை கூடாது என்ற பிரிட்டிஷ் வியாபாரிகளின் நியாயமான கோரிக்கையை நான் பூரணமாக ஆதரிக்க விரும்புகிறேன். மாபெரும் தென்னாப்பிரிக்க சர்க்காரின் நிற வேற்றுமைக் கொள்கையையும், இந்தியர்களுக்கு எதிராக வேற்றுமை பாராட்டும் அவர்களுடைய சட்டத்தையும் எதிர்த்து இருபது ஆண்டுகளுக்கு மேல் போராடிய நான், தற்போது இந்தியாவில் இருப்பவர்களும் அல்லது எதிர்காலத்தில் இந்தியாவுக்கு வர விரும்புபவர்களுமான பிரிட்டிஷ் நண்பர்களுக்கு எதிராக அத்தகைய வேற்றுமை காட்டுவதற்கு ஆதரவு அளிக்க முடியாது. இதை நான் காங்கிரசின் சார்பிலும் கூறுகிறேன். காங்கிரசின் அபிப்பிராயமும் அதுவேதான்.

### ஏழைகளைக் கைதூக்கி விடவேண்டும்

எனவே இதற்குப் பதிலாக நான் ஒரு திட்டத்தைச் சமர்ப்பிக்கிறேன். இனம், நிறம், அல்லது மதம் என்ற காரணத்துக்காக

மாத்திரம் இந்தியாவில் பிறந்த பிரஜைகளுக்கு இல்லாத தகுதியின்மையை, இந்தியாவில் சட்ட பூர்வமாக வசிக்கும் அல்லது இந்தியாவிற்குள் சட்டபூர்வமாகப் பிரவேசிக்கும் யார் மீதும் சுமத்தக் கூடாது. இத்தகைய ஒரு திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவே பல ஆண்டுகள் வரை ஜெனரல் ஸ்மட்ஸை எதிர்த்துப் போராடும் திருப்தியும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தன. இதில் அபிவிருத்தி செய்வதற்கு இடம் இருக்கலாம். இதை இந்தக் கமிட்டி ஆலோசனை செய்ய வேண்டும் என்றே கூறுகிறேன். முக்கியமாக இதை ஐரோப்பிய நண்பர்கள் ஆலோசனை செய்ய வேண்டும் என்று கூறுகிறேன். இந்தத் திட்டம் எல்லோருக்கும் திருப்தி அளிக்கும் என்று எண்ணுகிறேன். எந்த அரசாங்கமும் இந்த அளவுக்குமேல் போக முடியாது. இந்தத் திட்டத்திற்கும், லார்டு ரீடிங்கின் ஊகத்திற்கும் வேற்றுமை உண்டு என்பதை நான் வருத்தத்துடன் கூற வேண்டியவனாக இருக்கிறேன். எந்த பிரிட்டிஷாருக்கும் அல்லது எந்த ஐரோப்பியருக்கும் விரோதமாக வேற்றுமை காட்டுவதற்கு இந்தத் திட்டத்தில் இடமே இல்லை. பிரிட்டிஷாருக்கும் அல்லது மற்ற ஐரோப்பியர்களுக்கும் அல்லது அமெரிக்கர்களுக்கும் அல்லது ஜப்பானியர்களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் பாராட்டும் நோக்கம் எனக்கு இல்லை. பிரிட்டிஷ் காலனிகள் அல்லது பிரிட்டிஷ் டொமினியன்களின் உதாரணத்தை நான் பின்பற்ற மாட்டேன். ஏனெனில் அவைகள் முக்கியமாக நிற, இன வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்ட சட்டத்தைக் கொண்டு வந்து தங்களுடைய சட்ட புத்தகத்தைக் களங்கப்படுத்தியிருக்கின்றன என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். ஆனால் விடுதலை பெற்ற இந்தியா அளிக்கும் பாடம் வேறுவிதமாக இருக்கும், உலகம் முழுவதற்கும் வேறு விதமான உதாரணமாகவே திகழும் என்று எண்ணவே நான் விரும்புகிறேன். இந்தியா எவ்விதமான தொடர்புமின்றி தனித்து நின்று வாழ்வதை நான் விரும்பவில்லை. இந்தியா தன் எல்லைகளில் யாரும் பிரவேசிக்காமல் தடுப்பதையோ அல்லது தன் எல்லைக்குள் வர்த்தகம் செய்ய முடியாமல் தடுப்பதையோ நான் விரும்பவில்லை. தாழ்த்தப்பட்டவர்களையும், வீழ்ச்சியடைந்து கிடப்பவர்களையும் கைதூக்கி விடுவதற்காக இன்னும் பல ஆண்டுகள் வரையில் இந்தியா சட்டங்கள் நிறைவேற்றுவதில் ஈடுபடவேண்டி யிருக்கும். இவர்கள் முதலாளிகளாலும், நிலச்சுவான்தார்களாலும், உயர்ந்த வகுப்பினர் என்று கூறப்படுவோராலும், பின்னர் திட்டம் வகுத்து பிரிட்டிஷாராலும் சேற்றில் அமிழ்த்தி வைக்கப்பட்டுள்ளனர். இவர்களைச் சேற்றி

லிருந்து கைதூக்கிவிட வேண்டுமாயின், இவர்களுக்குத் தொடர்ந்து சலுகை அளிக்கவேண்டியதும், இவர்கள் நசுக்குண்டு வரும் சுமைகளிலிருந்து இவர்களுக்கு விடுதலை அளிக்க வேண்டியதும் இந்திய தேசிய அரசாங்கத்தின் தலையாய கடமையாகும். அப்போதுதான் அந்த அரசாங்கம் ஒழுங்கான முறையில் நடைபெறும். நிலச் சுவான்தார்களும், ஜமீன்தார்களும், செல்வவந்தர்களும், இன்று பல உரிமைகளை அனுபவித்து வருவோரும்,—அவர்கள் ஐரோப்பியர்களாக இருந்தாலும் சரி, இந்தியர்களாக இருந்தாலும் சரி, அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை—தங்களுக்கு எதிராக வேற்றுமை காட்டப்படுவதைக் காண்பார்களாயின், நான் அவர்களுக்காக அநுதாபப்படுவேன்; சாத்தியமாக இருப்பினும், நான் அவர்களுக்கு உதவி புரியக்கூடிய நிலையில் இருக்கமாட்டேன். ஏனெனில், மேலே குறிப்பிட்ட ஏழைகளைச் சேற்றிலிருந்து கைதூக்கி விடுவதில் நான் அவர்களின் (நிலச் சுவான்தார், ஜமீன்தார், செல்வவந்தர்கள் ஆகியோரின்) உதவியை நாடுவேன். அவர்களுடைய உதவியின்றி, அந்த ஏழைகளைச் சேற்றிலிருந்து தூக்கி விடுவது இயலாத காரியமாகும். தீண்டாதாருடைய நிலைமையைப் பாருங்கள். சட்டம் அவர்களுடைய உதவிக்கு வந்து பல மைல் கணக்கான பிரதேசங்களை அவர்களுக்காக ஒதுக்கி வைக்குமாயின், அவர்களின் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படமுடியும். தற்போது அவர்களுக்குச் சொந்தமாக நிலம் இல்லை. முற்றிலும் உயர்ந்த வகுப்பினர் என்று கூறப்படுவோரின் தயவிலும், அரசாங்கத்தின் தயவிலும் அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அகற்றிவிடமுடியும். அதைக் குறித்து அவர்கள் புகார் செய்ய முடியாது, சட்டத்தின் உதவியையும் நாடமுடியாது. எனவே அவர்களை மற்றவர்களுடன் சம நிலையில் வைப்பதே, தேசிய அரசாங்கத்தின் கீழ் முதல் நடவடிக்கையாக இருக்கும். எனவே அவர்களுக்கு இலவசமாக மான்யத் தொகைகள் அளிக்கப்பட வேண்டும்.

### ஒரு போராட்டம்

அந்த மான்யத் தொகைகள் யாரிடமிருந்து வருவது? சொர்க்கத்திலிருந்து வரா. அரசாங்கத்திற்காக சொர்க்கத்திலிருந்து பணம் விழாது. இயல்பாகவே ஐரோப்பியர்கள் உட்பட செல்வவந்தர்களிடமிருந்தே அது வரவேண்டும். இதை, வேற்றுமை பாராட்டுதல் என்று அவர்கள் கூறுவார்களா? அவர்கள் ஐரோப்பியர்கள் என்பதற்காக இந்த வேற்றுமை பாராட்டப்படுவதில்லை என்பதை அவர்கள் அறிந்துகொள்ளலாம். அவர்களிடம் பணம்

இருக்கிறது; மற்றவர்களிடம் பணம் இல்லை. இதுதான் அந்த வேற்றுமைக்குக் காரணம். எனவே இது பணம் இருப்பவர் களுக்கும் பணம் இல்லாதவர்களுக்கும் இடையே உள்ள ஒரு போராட்டமேயாகும்.

இதைக் கண்டு பயப்படுவதாயின், பின்னர் தேசீய அர சாங்கமே உருவாவது முடியாத காரியமாகிவிடும். செல்வம் படைத்த இந்த வகுப்பினரெல்லாம் வாயில்லா ஏழைகளான கோடிக்கணக்கானவர்களின் தலைக்கு நேராகத் துப்பாக்கியைக் காட்டி, "நீங்கள் எங்களுடைய உடைமைகளுக்கும் உரிமை களுக்கும் உத்தரவாதம் அளித்தாலன்றி, உங்களுக்குச் சொந்த மான அரசாங்கம் ஏற்பட முடியாது" என்று கூறுவார்களாயின், தேசீய அரசாங்கம் ஏற்பட வழியே இல்லை.

நான் குறிப்பிட்டுள்ள இத்திட்டத்தின் உட்கருத்துகளையும், இவ்விஷயமாக காங்கிரசின் கொள்கையையும் விளக்க நான் கூறி யுள்ள இவ் விவரங்களே போதுமானவை என்று நினைக்கிறேன். ஆங்கிலேயர்கள் அல்லது ஐரோப்பியர்கள் அல்லது ஜப்பானி யர்கள் அல்லது வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற் காக மாத்திரம் யாரும் வேற்றுமைக்கு உள்ளாகும்படி நேராது என்பதை அவர்கள் அறிந்துகொள்ளலாம். எந்தக் காரணங் களுக்காக அவர்கள் வேற்றுமைக்கு உள்ளாகிறார்களோ அதே கார ணங்களுக்காக இந்தியாவில் பிறந்த பிரஜைகளும் வேற்றுமைக்கு உள்ளாவார்கள்.

### நியாயமான உரிமைகளுக்குப் பாதுகாப்பு

நான் அவசரமாக மற்றொரு திட்டத்தையும் தயாரித்துள் ளேன். லார்டு ரீடிங், சர் தேஜ் பகதூர் சாப்ரூ ஆகியோரின் பிரசங்கங்களைக் கேட்டுக்கொண்டிருந்தபோது நான் இங்கே தான் அத்திட்டத்தைத் தயாரித்தேன். அது தற்போதுள்ள உரிமைகள் பற்றியது:

"நியாயமாக ஆர்ஜிதம் செய்யப்பட்ட தற்போதைய நலன் களிலும், பொதுவாக நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரணாக இல்லாத உரிமைகளிலும் தலையீடு இராது; அப்படியே இருந் தாலும் தலையீடு அவற்றையொட்டிய சட்ட பூர்வமாகவே இருக்கும்."

இன்று பிரிட்டிஷ் அரசாங்கத்தினால் செய்யப்பட்டு வரும் கடமைகளை வரப்போகும் அரசாங்கம் ஏற்றுக்கொள்வதன் சம் பந்தமாக காங்கிரஸ் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதை

நீங்கள் காண்பீர்கள். அதை மனத்திற்கொண்டே இத்திட்டத்தைக் குறிப்பிட்டுள்ளேன். அக்கடமைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ளுமுன் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபை பரிசீலனை செய்ய வேண்டும் என்று நாங்கள் கோருவதைப்போல், தற்போதுள்ள உரிமைகளும், அவசியமாயின் நீதிச் சபையின் பரிசீலனைக்கு உட்படவேண்டும். எனவே அவற்றை மறுப்பதென்ற கேள்வி எழவில்லை; அதற்கு மாருக, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதே பாகும்.

இங்கேயுள்ள எங்களில் சிலர், ஐரோப்பியர்களால் அநுபவிக்கப்பட்டுவரும் சலுகைகளையும், ஏகபோக உரிமைகளையும் பரிசீலனை செய்திருக்கிறோம். ஐரோப்பியர்கள் மாத்திரமல்ல, அத்தகைய வசதிகளை அநுபவித்துவரும் இந்தியர்களும் நிச்சயமாக இருக்கிறார்கள். அத்தகைய பல இந்தியர்களை மனத்தில் வைத்துக்கொண்டே நான் கூறுகிறேன். அவர்களுக்குச் சொந்தமாக நிலங்கள் இருக்கின்றன. நாட்டிற்கு அவர்கள் ஏதோ தொண்டு செய்ததற்காக அவை அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. அரசாங்கத்திற்கு அவர்கள் ஏதோ தொண்டு செய்ததற்காகக் கொடுக்கப்பட்டவை என்றுகூட நான்கூற முடியாது; யாரோ அதிகாரிக்குத் தொண்டு செய்ததற்காகவே அவை கொடுக்கப்பட்டுள்ளன. அந்தச் சலுகைகளையும் உரிமைகளையும் அரசாங்கம் பரிசீலனை செய்யக்கூடாதென்று நீங்கள் கூறுவீர்களாயின், ஏழைகளின் சார்பில் அரசாங்கத்தை நடத்துவது இயலாத காரியமாகிவிடும் என்று நான் மறுபடியும் உங்களுக்குக் கூறுகிறேன். எனவே இங்கே குறிப்பிட்டிருப்பது, ஐரோப்பியர்களை மனத்திற்கொண்டு குறிப்பிடப்படவில்லை. இந்த இரண்டாவது திட்டமானது சர். புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ், சர் பிரோஸ் ஸேத்ன ஆகிய இந்தியர்களைப்போல் ஐரோப்பியர்களுக்கும் பொருந்தும். அப்போதுள்ள அதிகாரிகளுக்கு ஏதோ தொண்டு புரிந்ததற்காக அவர்கள் உடைமைகளும் சலுகைகளும் பெற்றிருப்பார்களாயின், சில மைல்கள் தூரத்திற்கு நிலங்கள் பெற்றிருப்பார்களாயின், என் கைக்கு அரசாங்க நிர்வாகம் வருமாயின் அவர்களுடைய உடைமைகளையெல்லாம் தாமதமின்றி பறிமுதல் செய்துவிடுவேன்; அவர்கள் இந்தியர்கள் என்பதற்காக நான் ஆலோசிக்கமாட்டேன். அது போலவே சர் ஹியூபர்ட் காரும், ஸ்ரீ பெந்தாலும் எவ்வளவு சிறந்தவர்களாயினும், என்னிடம் எவ்வளவு நட்புடன் இருப்பவர்களாயினும், அவர்கள் மேற்கூறிய விதம் உடைமைகளைப் பெற்றிருப்பார்களாயின், அவர்களுடைய உடைமைகளையும் நான் பறிமுதல் செய்துவிடுவேன்.

சட்டத்தின் முன்னிலையில் எல்லோரும் சமமானவர்களே. இவ்வாறு உறுதி கூறும் நான் இதற்குமேல் செல்லுவது முடியாத காரியம். "நியாயமான முறையில் ஆர்ஜிதம் செய்யப்பட்ட" என்பதற்கு உண்மையான பொருள் அதுதான். ஒவ்வொருவருடைய நலனும் சந்தேகத்துக்கு இடமின்றி களங்க மற்றதாக இருக்கவேண்டும். அவையெல்லாம் தேசீய அரசாங்கத்தின் கவனத்திற்கு வரும்போது, அவற்றையெல்லாம் பரிசீலனை செய்யலாமென எதிர்பார்க்கிறோம்.

பின்னர், "நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரணில்லாத" என்றும் அத்திட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறது. சில ஏகபோக உரிமைகளை மனத்திற்கொண்டே நான் அவ்வாறு கூறியிருக்கிறேன். அந்த உரிமைகள் சட்டபூர்வமானவைதான் என்பதில் ஐயமில்லை. எனினும் அவை தேசத்தின் சிறந்த நலன்களுக்கு முரணாகப் பெறப்பட்டவை. இதற்கு ஓர் உதாரணம் கூறுகிறேன். இது ஓரளவு உங்களுக்கு வேடிக்கையாக இருக்கலாம். இருந்தாலும் இது சரியான உதாரணமே. ஊதாரித்தனமான செலவுக்குக் காரணமான புது டில்லியை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் கோடிக்கணக்கான தொகை செலவு செய்யப்பட்டிருக்கிறது. அதை நாங்கள் எதற்காவது பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென எதிர்கால அரசாங்கம் முடிவு செய்வதாக வைத்துக்கொள்ளுங்கள். பழைய டில்லியில் பிளேக் அல்லது வாந்திபேதி நோய் கடுமையாக இருப்பதாகவும், ஏழை மக்களுக்கு ஆஸ்பத்திரிகள் தேவையாக இருப்பதாயும் கற்பனை செய்து கொள்ளுங்கள். நாம் அப்போது என்ன செய்வது? தேசீய அரசாங்கத்தினால் ஆஸ்பத்திரிகள் முதலியன கட்ட முடியுமென நீங்கள் நினைக்கிறீர்களா? அதெல்லாம் முடியாது. அந்தக் கட்டிடங்களையெல்லாம் நாங்கள் எடுத்துக்கொண்டு, பிளேக் நோயினால் கஷ்டப்படும் மக்களை அங்கே வைத்து, அவற்றை ஆஸ்பத்திரிகளாகப் பயன்படுத்திக் கொள்வோம். இந்தக் கட்டிடங்கள் நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரணானவை என்று நான் வாதாடுகிறேன். அவை இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களைக் குறிக்கவில்லை. மேஜைகளுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டிருக்கும் செல்வவந்தர்களை அவை குறிக்கலாம். உதாரணமாக போபால் நவாப் சாகிபையோ, சர் புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸையோ, சர் பிரோஸ் ஸேத்னாவையோ அல்லது சர் தேஜ் பகதூர் சாப்ருவையோ அவை குறிக்கலாம். ஆனால் தூங்குவதற்கு இடம்கூட இல்லாத, ஒரு ரொட்டித் துண்டுக்குக் கூட வழியில்லாத ஏழை மக்களை அவை குறிக்கவில்லை. அத்தகைய உடைமைகள் அவசிய

மில்லாதவை என்ற முடிவுக்கு தேசீய அரசாங்கம் வருமாயின், அவை பறிமுதல் செய்யப்படும்; யாதொரு ஈடுத் தொகையும் கொடுக்காமலேயே அவை பறிமுதல் செய்யப்படும் என்று உங்களுக்கு நான் கூறலாம். ஏனெனில் இந்த அரசாங்கம் ஈடுத்தொகை கொடுக்கவேண்டுமென நீங்கள் விரும்பினால், அது கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்த கதையாக இருக்கும். எனவே அவ்விதம் செய்வது முடியாத காரியம்.

காங்கிரஸ் சித்திரிக்கும் அரசாங்கம் அமுலுக்கு வரவேண்டுமாயின், அத்தகைய கசப்பான மாத்திரையைச் சாப்பிட்டுத்தான் தீரவேண்டும். இங்கிருந்து எதையோ எடுத்துச் செல்லவேண்டும் என்பதற்காக, எதிர்கால அரசாங்கத்தின் கீழ் எல்லாம் சரியாக இருக்கும் என்ற நம்பிக்கை உங்களுக்கு ஏற்படும்படி நான் உங்களை வஞ்சிக்க விரும்பவில்லை. காங்கிரசின் சார்பில் நான் ஒளிவு மறைவின்றி எல்லாவற்றையும் உங்களிடம் கூறிவிட விரும்புகிறேன். நான் எதையும் மனம் விட்டுக் கூறாமல் மறைத்துவைக்கவில்லை. காங்கிரஸின் நிலைமை ஒப்புக்கொள்ளத் தக்கதாக இருக்குமாயின், எனக்கு அதைக் காட்டிலும் மகிழ்ச்சி அளிக்கக் கூடியது வேறு எதுவும் இல்லை. காங்கிரஸின் நிலைமை ஒப்புக் கொள்ளத்தக்கதாக இராவிடில், இன்று நான் உங்கள் உள்ளத்தைத்தொட்டு, நான் கூறுவதை ஏற்றுக்கொள்ளும்படி செய்யமுடியாவிடில், இந்தியாவில் இறுதியாக ஒரு தேசீய அரசாங்கம் ஏற்பட்டுளது என்று இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் நினைக்கும்படி செய்யுமாறு உங்கள் மனத்தை மாற்ற காங்கிரஸ் முயற்சி செய்து வரவேண்டும்.

**கிரிமினல் வழக்குகள்**

இந்தத் தீர்மானத்தின் இறுதியில் காணப்படும் இரண்டு வரிகளை யொட்டி இதுவரையில் யாரும் ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை. "கிரிமினல் வழக்குகள் சம்பந்தமாக இந்தியாவிலுள்ள ஐரோப்பியர் சமூகத்தின் தற்போதைய உரிமைகள் அப்படியே இருந்துவர வேண்டுமென ஒப்புக்கொள்ளப்பட்டுளது" என்பவை தான் அந்த வரிகளாகும்.

அந்த வாசகங்களின் உட்பொருளைப் பரிசீலனை செய்ய நான் இயலாதவனாக இருக்கிறேன் என்பதை நான் ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். சர்ஹியூபர்ட் கார், ஸ்ரீ பெந்தால் ஆகிய மற்றும் சில நண்பர்களுடன் நான் சென்ற சில நாட்களாக அந்தரங்கமாகவும், நட்பு முறையிலும் பேச்சு வார்த்தைகளை நடத்தி வருகிறேன்.

மேற்கண்ட வரிகளுக்கு என்ன அர்த்தம் என்று அவர்களை நான் கேட்டேன். மற்றச் சமூகங்களுக்கு என்ன உரிமைகளோ அதே உரிமைகள் தான் ஐரோப்பியர்களுக்கும் என்று அவர்கள் கூறினர். அதன் பொருள் என்ன என்பதை நான் இன்னும் பரிசீலனை செய்ய வில்லை. மற்றச் சமூகங்களும் தங்கள் சொந்த ஜூரிகளைக் கோர லாம் என்பதே அதன் அர்த்தம் என நான் நினைக்கிறேன். ஜூரி விசாரணையைப் பற்றிக் குறிப்பிடும் இதை நான் ஒப்புக்கொள்ள முடியாதென அஞ்சுகிறேன்.

அத்தகைய சலுகைகளுக்கு நான் இணங்க முடியாது. ஒரு தேசீயஅரசாங்கம் அத்தகைய நிபந்தனைகளால் கட்டுண்டு இருக்க முடியாது. இன்றுள்ள எல்லாச் சமூகங்களும் சேர்ந்தே எதிர்கால இந்தியாவாகும். எனவே எல்லாச் சமூகங்களும் நல்லெண்ணத்துட னும், பரஸ்பரம் நம்பிக்கையுடனும் தொடங்க வேண்டும். நாங்கள் பொறுப்பாட்சி பெற முடியாது என்று கூறப்படுமாயின், அந்த நிலையை எவரும் அறிந்துகொள்ள முடியும். ஆனால் இந்த விசேஷ உரிமைகளும், பாதுகாப்புகளும் இருக்கும் என்று எங்களிடம் கூறப்படுகிறது. பாதுகாப்புகள், அரசாங்கம் முழுவதையுமே விழுங்கிவிடும். அந்தப் பாதுகாப்புகளையெல்லாம் அனுமதிப்ப தாயின், இங்கே நிகழ்ந்து வரும் பேச்சுகள் யாவும் உருவான முறையில் அமுலுக்கு வருமாயின், பின்னர் நாங்கள் பெறும் பொறுப்பாட்சி அரசாங்கம், சற்றேறக் குறைய கைதிகளுக்கு சிறை களில் உள்ள பொறுப்பாட்சிக்கு ஒப்பாகவே இருக்கும். தனி அறைக் கதவு மூடப்பட்டு, சிறைக் காவலாளியும் போய்விட்ட உடனே கைதிகளுக்குப் பூரண சுதந்திரம் இருக்கிறது. கைதிகள் 10 சதுர அடிகள் உள்ள அல்லது 7 அடி நீளமும் 3 அடி அகலமும் உள்ள அறைகளில் பூரண சுதந்திரத்துடன் இருக்கிறார்கள். அத் தகைய பூரண சுதந்திரத்தை நான் கோரவில்லை.

எனவே எங்களுடைய ஐரோப்பிய நண்பர்கள் தங்களுடைய உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்ற எண் ணத்தை விட்டு விடும்படி நான் அவர்களை வேண்டிக் கொள் கிறேன். நான் குறிப்பிட்ட இரண்டு விதிகளையும் ஏற்றுக்கொள் ளும்படி கூறத் துணிகிறேன். அந்த விதிகளை நீங்கள் உங்கள் விருப்பம்போல் திருத்திக் கொள்ளலாம். அதன் வாசகங்கள் திருப்திகரமாக இராவிடில், உங்கள் விருப்பப்படி வேறு வாசகங் களைக் கூறுங்கள். இதைத் தவிர உங்களுக்கு விரோதமான தடை வேறு எதுவும் இல்லை. நீங்கள் இதைக் காட்டிலும் அதிகமாக எது வும் கோர மாட்டீர்கள் என நினைக்கிறேன்; கோரத் துணிய மாட்

டீர்கள் என நான் கூறலாமா? தற்போதைய உரிமைகளையும், எதிர் கால வர்த்தகத்தையும் பற்றி நான் கூறவேண்டியது இவ்வளவு தான்.

## இந்தியாவும் பிரிட்டனும்

முக்கியமான தொழில் துறைகளைப் பற்றி ஸ்ரீ ஜெயகர் பேசிய போது குறிப்பிட்ட கருத்துகளை நான் முற்றிலும் ஒப்புக்கொள் கிறேன். முக்கியமான தொழில் துறைகளின் நிர்வாகத்தை அர சாங்கம் மேற்கொள்ளாவிட்டால், அத்துறைகளின் நிர்வாகத்திலும் வளர்ச்சியிலும் அரசாங்கத்திற்குப் பெரும் அளவு அதிகாரமாவது இருக்க வேண்டும் என்பதே காங்கிரசின் கருத்தாகும்.

இந்தியாவைப் போன்ற வளர்ச்சி பெருத ஓர் ஏழை நாட்டை, மிக மிக வளர்ச்சி பெற்ற பிரிட்டனைப் போன்ற ஒரு தனித் தீவுடன் ஒப்பிட்டு ஒரு முடிவுக்கு வரக் கூடாது. இன்று பிரிட்டனுக்கு எது மிகவும் நலன் அளிக்கக் கூடியதோ அது பல அம்சங்களிலும் இந்தி யாவுக்கு விஷம் போன்றதாகும். இந்தியா அதன் தொழில் துறை களிலும், மற்ற எந்த விஷயத்திலும் அதன் சொந்தப் பொருளாதார நிலை, அதன் சொந்தக் கொள்கை, அதன் சொந்த முறை முதலிய எவ்விஷயத்திலும் வளர்ச்சி பெருத ஒரு நாடாக இருக்கிறது. எந்தத் துறையிலும் அது இனி மேல்தான் வளர்ச்சி பெற வேண் டும். எனவே முக்கியமான தொழில் துறைகளைப் பொறுத்தமட் டில், பிரிட்டிஷார் மாத்திரமல்ல, மற்றும் பலர் தங்களுக்கு நீதி கிடைக்கவில்லை என்று எண்ணுவார்களென அஞ்சுகிறேன்.

## கடற்கரையோரக் கப்பல் போக்குவரத்து

அடுத்தபடியாக, கடற்கரையோரக் கப்பல் போக்குவரத்தைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். அவ்வர்த்தகம் அபிவிருத்தி அடைய வேண்டும் என்ற விருப்பத்தைக் குறித்து காங்கிரஸ் மிக வும் அனுதாபம் கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. ஐரோப் பியர்கள் என்பதற்காக அவர்கள் விஷயத்தில் மேற்கண்ட வர்த்த கத் துறையில் வேற்றுமை பாராட்டும் ஷரத்து ஏதாவது அரசியல் மசோதாவில் இருக்குமாயின், ஐரோப்பியர்களுடன் சேர்ந்து அம் மசோதாவை நானும் எதிர்ப்பேன்; அல்லது ஆங்கிலேயர்கள் என் பதற்காக ஆங்கிலேயர்களுக்கு எதிராக வேற்றுமை காட்டும் யோசனையையும் நான் எதிர்ப்பேன். எனினும் பல ஆண்டுகளாக உருவாக்கப்பட்ட அவர்களுடைய பரந்த நலன்கள் இருக்கின்றன. வங்காளத்திலுள்ள மகத்தான நதிப் பாதைகள் வழியாக நான் அடிக்கடி பிரயாணம் செய்துள்ளேன். பல ஆண்டுகளுக்கு நான்

ஐராவதி (பர்மா) வரையில் பிரயாணம் செய்துள்ளேன். எனவே கடற்கரையோர வர்த்தகத்தைப் பற்றி எனக்கு ஓரளவு தெரியும். சலுகைகள், உரிமைகள், பாரபட்சமான உதவிகள் ஆகியவற்றின் மூலம் இந்த மகத்தான வர்த்தக ஸ்தாபனங்கள் தொழில் துறைகளை உருவாக்கியிருக்கின்றன; கம்பெனிகளை நிர்மாணித்திருக்கின்றன; எதிர்ப்புக்கு இடம் கொடுக்காத வர்த்தகத்தையும் உருவாக்கியிருக்கின்றன.

சிட்டகாங்கிற்கும் ரங்கூனுக்கும் இடையே புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள ஒரு கம்பெனியைப்பற்றி உங்களில் சிலர் கேள்விப்பட்டிருக்கலாம். பாவம், வர்த்தகத்தை உருவாக்குவதற்காகப் போராடிக் கொண்டிருக்கும் சில முஸ்லிம்களே அந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் ஆவர். அவர்கள் ரங்கூனில் என்னை வந்து பார்த்து, நான் ஏதாவது செய்யமுடியுமா என்று கேட்டார்கள். அவர்களிடம் எனக்கு மனப்பூர்வமான அனுதாபம் ஏற்பட்டது. இருந்தாலும் நான் எதுவும் செய்யமுடியவில்லை. என்ன செய்ய முடியும்? அந்த கம்பெனிக்கு எதிராக மிகவும் வல்லமை பொருந்திய பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி கடுமையான போட்டியில் ஈடுபட்டிருக்கிறது; பிரயாணக் கட்டணம் இல்லாமலேயே அது பிரயாணிகளை ஏற்றிச் செல்லுகிறது. அது போன்ற எத்தனையோ சம்பவங்களை நான் எடுத்துக்கூற முடியும். அது ஒரு பிரிட்டிஷ் கம்பெனி என்பதற்காக நான் அவ்விதம் கூறவில்லை. அது ஓர் இந்தியக் கம்பெனியாக இருந்து இவ்விதம் செய்தாலும் அது கண்டிப்பதற்கு உரியதேயாகும்.

இந்தியாவில் தங்களுடைய மூலதனத்தைப் போட்டுவைப்பதற்குப் பதிலாக, இந்தியாவுக்கு வெளியே பிறநாடுகளில் போட்டு வைக்கும் இந்தியர்கள் எங்களிடையே இருக்கிறார்கள். அவர்களைப் போலவே ஓர் இந்தியக் கம்பெனி தன் மூல தனத்தை வெளிநாடுகளில் போட்டுவைப்பதாக வைத்துக்கொள்வோம். ஒரு மாபெரும் இந்திய வர்த்தக ஸ்தாபனம் இருப்பதாகவும், அது தேசீய அரசாங்கத்திற்குப் பயந்தும், தன் மூலதனத்திற்கு யாதொரு குந்தகமும் ஏற்படக்கூடாது என்பதற்காகவும் தன்னிடமுள்ள தொகைகளையும், லாபத்தையும் வெளிநாடுகளுக்குக்கொண்டு போய் விடுவதாகவும் கற்பனைசெய்து கொள்ளுங்கள். இன்னும் மேற்கொண்டு அந்தக் கம்பெனியின் இந்திய டைரக்டர்கள் விஞ்ஞான ரீதியாகவும், மிகச் சிறந்த முறையிலும் திறமை வாய்ந்த ஐரோப்பியர்களை இங்கே கொண்டுவந்து, போராடிக் கொண்டிருக்கும் இந்திய வர்த்தக ஸ்தாபனங்கள் தலைதூக்க விடாமல்

செய்வதாகவும் வைத்துக்கொள்வோம். அதை நான் நிச்சயமாக ஆட்சேபித்து ஏதாவது கூற வேண்டியிருப்பதுடன், சிட்டகாங் கம்பெனியைப் போன்ற கம்பெனிகளுக்குப் பாதுகாப்பு அளிக்க நான் சட்டமும் கொண்டுவர வேண்டியிருக்கும்.

ஐராவதி நதியில் தங்கள் கப்பல்களைக்கூட விடமுடியவில்லை என்று சில நண்பர்கள் கூறினர். அவ்விதம் செய்வது முற்றிலும் அசாத்தியமாகி யிருக்கிறது என்றும் அவர்கள் உதாரணங் களுடன் கூறினர். அவர்கள் லைசன்ஸ் பெறமுடியவில்லை. எவ ருக்கும் உரிய சாதாரணமான வசதிகள்கூடத் தங்களுக்குக் கிடைப்பதில்லை என்றும் அவர்கள் கூறினர். பணமும் செல் வாக்கும் என்னென்ன செய்யும் என்பதை நம்மில் ஒவ்வொரு வரும் அறிவோம். சர் ஜான் கார்ஸ்ட் கூறியதுபோல், இளம் நாற்றுக்களைக் கொல்லுவதற்காக அத்தகைய செல்வாக்கு உப யோகிக்கப்படும்போது, நாற்றுக்களைக் கொல்லும் உயரமான பூண்டுகளை வெட்டிவிட வேண்டியது அவசியமாகிறது. அவை இளம் நாற்றுக்களைக் கொல்லுமாறு விட்டுவிடக்கூடாது. இந்தியக் கடலோர வர்த்தகத்தின் நிலை இன்று அப்படித்தான் இருக் கிறது.

ஒரு பிரஜை என்பதற்கு திட்டவட்டமாகப் பொருள் கூறு வது பயங்கரமான ஒரு வேலையாகும். காங்கிரசுக்கு எது உடன் பாடாக இருக்கும் அல்லது எனக்கு எது உடன்பாடாக இருக்கும் என்பதை இப்போதே உடனடியாகக் கூறுவது என்னால் இய லாத காரியமாகும். இவ்விஷயமாக நான், சர் தேஜ் பகதூர் சாப்ருவுடனும் மற்ற நண்பர்களுடனும் கலந்துபேச விரும்பு கிறேன்; அவர்களுடைய மனத்தில் என்ன நினைக்கிறார்கள் என் பதை அறிந்துகொள்ளவும் விரும்புகிறேன். இந்த விவாதத்தி லிருந்து, இவ்விஷயத்தின் உட்கருத்தை அறிந்துகொள்ள இய லாதவனாக இருக்கிறேன் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இன வேற்றுமை எதையும் நாங்கள் விரும்பவில்லை. இதுதான் காங்கிரசின் நிலை. இதை நான் சிறிதும் சந்தேகத் திற்கு இடமின்றித் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறேன். எனவே 'பிரஜை' என்ற சொல்லின் பொருளைக் குறித்து காங் கிரசின் அபிப்பிராயம் என்ன என்பதுபற்றி நான் இங்கே உட னடியாக எதுவும் கூறுவதற்கில்லை. அதை நான் பிறகு கூற உத்தேசித்திருக்கிறேன்.

இத்துடன் நான் முடித்துக்கொள்ள விரும்புகிறேன். ஐரோப் பிய நண்பர்களுக்குத் திருப்தி அளிக்கக்கூடிய ஒரு பொதுவான

திட்டத்தைக் கண்டுபிடிப்பதில் எனக்குள்ள நம்பிக்கையை நான் இழந்து விடவில்லை. அதன் சம்பந்தமான சமரசப் பேச்சுகளில் கலந்துகொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்துள்ளது. அந்த சமரசப் பேச்சுகள் தொடர்ந்து நடைபெறும் என்றே நினைக்கிறேன். தேவையாயின் நான் அந்தச் சிறிய கமிட்டிக் கூட்டத்திற்கு வருவேன். அந்தக் கமிட்டியை இன்னும் விரிவான முறையில் அமைத்து ஒரு பொதுவான அடிப்படையைக் கண்டுபிடிக்க முற்படவேண்டும். அது, சம்பிரதாயத்திற்காக அமைக்கப்படும் கமிட்டியாக இருக்கக்கூடாது.

நான் கூறிய விஷயத்துக்கே இப்போது நான் மீண்டும் திரும்பி வருகிறேன். நான் புரிந்து கொண்ட வரையில், அரசியல் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளக்கூடிய எந்த விவரமான ஏற்பாட்டையும்பற்றி என்னல் சிந்திக்க முடியவில்லை. எனினும் அது போன்ற ஏதாவதொரு முறையையே அரசியல் திட்டத்தில் சேர்த்துக்கொள்ள முடியும். அத்தகைய ஏதாவதொரு முறையை அடிப்படையாகக் கொண்டே எல்லாவிதமான உரிமைகளும் எழ முடியும்.

### சட்ட பூர்வமான பரிகாரம்

நிர்வாக சம்பந்தமான எத்தகைய நடவடிக்கைகள் பற்றியும் இங்கே எதுவும் குறிப்பிடப்படவில்லை என்பதை நீங்கள் காணலாம். பெடரல் கோர்ட் பற்றியும், சுப்ரீம் கோர்ட் பற்றியும் எனது சொந்த நம்பிக்கையையே நான் குறிப்பிட்டிருக்கிறேன். என்னைப் பொறுத்தமட்டில் பெடரல் கோர்ட், சுப்ரீம் கோர்ட்டேயாகும். அதுதான் இறுதியான அப்பீல் கோர்ட்டாக இருக்க வேண்டும். அதற்குமேல் அப்பீல் செய்துகொள்ளக்கூடிய கோர்ட் வேறு எதுவும் இல்லை. என்னுடைய பிரிவீ கவுன்சில் சுப்ரீம் கோர்ட்தான். அது சுதந்திரத்தின் பாதுகாப்புக் கோட்டையேயாகும். துன்பத்திற்குள்ளான ஒவ்வொருவரும் அந்தக் கோர்ட்டில் முறையிட்டுக் கொள்ளமுடியும்.

பொதுவாக, திரான்ஸ்வாலும் தென்னப்பிரிக்காவும் மிகச் சிறந்த நீதி நிபுணர்களை உற்பத்தி செய்திருக்கிறது. மிகக் கடினமான ஒரு வழக்கையொட்டி திரான்ஸ்வாலில் உள்ள சிறந்த நீதி நிபுணர் ஒருவர் என்னிடம் இவ்வாறு கூறினர்:

"தற்போதைக்கு நம்பிக்கைக்கு இடம் இல்லாமலிருக்கலாம் என்றாலும், ஒரு கொள்கையை நான் எனக்கு வழிகாட்டியாகக் கொண்டிருக்கிறேன் என்று உங்களுக்குக் கூறுகிறேன். அவ்விதம் இல்லாவிடில், நான் ஒரு வக்கீலாக இருக்க முடியாது. சட்ட மன்றத்தில் பரிகாரத்துக்கு வழியில்லாத

தவறு எதுவுமே இல்லை என்று வக்கீல்களான எங்களுக்குச் சட்டம் கற்பிக்கின்றது. எத்தகைய தவருயினும் அதற்குப் பரிகாரம் இல்லை என்று நீதிபதிகள் கூறுவார்களாயின், அந்த நீதிபதிகளை உடனே அப்பதவிகளிலிருந்து விலக்கிவிட வேண்டும்."

லார்டு சான்ஸலர் அவர்களே, உங்களிடம் மிகுந்த மரியாதையுடன் நான் இதைக் கூறுகிறேன்.

எனவே ஐரோப்பியர்களை, எதிர்கால பெடரல் கோர்ட் வெறும் கையுடன் திருப்பி அனுப்பிவிடாது என்று ஐரோப்பிய நண்பர்கள் உறுதியாக நம்பலாமென நான் நினைக்கிறேன். பிரிட்டிஷ் மந்திரிகளே இப்போது மன்னர்களின் ஆலோசகர்களாக இருக்கிருர்கள். எனவே மந்திரிகளின் தயவு எங்களுக்கு இராவிடில், நாங்கள் வெறும் கையுடனேயே திரும்பிச் செல்ல நேரும் என்று கருதுகிருேம். ஆனல் ஐரோப்பியர்கள் வெறும் கையுடன் திரும்பிச் செல்லும்படி பெடரல் கோர்ட் விட்டுவிடாது. நாம் கூறுவதற்கு அவர்கள் செவி சாய்ப்பார்கள் என்றும், அவர்களுடைய நல்ல உள்ளத்தை நாம் தூண்டலாம் என்றுமே நான் இன்னும் நம்பிக்கொண்டிருக்கிறேன். பின்னர் நாங்கள் எங்கள் சட்டைப் பைகளில் கணிசமாக எதையாவது கொண்டு செல்லக் கூடுமென நம்பலாம். எங்கள் சட்டைப் பைகளில் நாங்கள் கணிசமாக எதையாவது கொண்டு சென்ருலும் சரி, செல்லாவிட்டாலும் சரி, நான் கனவு காணும் பெடரல் கோர்ட் அமைக்கப்படுமாயின், ஐரோப்பியர்களும், ஒவ்வொருவரும்,—சிறுபான்மையோர் சகலரும்—என்னைப் போன்ற மெலிந்த ஒரு நபர் அவர்களைக் கைவிட்டாலும், அந்த கோர்ட் கைவிட்டு விடாதென அவர்கள் உறுதியுடன் இருக்கலாம்.

# 9

# நிதி நிர்வாகப் பொறுப்புகள்

பெடரல் திட்ட அமைப்புக் கமிட்டியில் நிதிப் பிரச்னைபற்றி காந்திஜி பேசியதாவது :

நிதிப் பாதுகாப்புகள் என்ற மிகவும் முக்கியமான விஷயத்தை யொட்டிய உங்களுடைய (லார்டு ரீடிங்கின்) பிரசங்கத்தை நான் மிகுந்த கவனத்துடனும், நிச்சயமாக அதற்குரிய மரியாதையுடனும் செவிகொடுத்துக் கேட்டேன். சென்ற ஆண்டில் பெடரல் திட்ட அமைப்புக் கமிட்டி நிதி சம்பந்தமாக வெளியிட்ட அறிக்கையில் அப்பிரசங்கத்தில் குறிப்பிட்ட 18, 19, 20-வது பாராக்களையும் நான் வாசித்தேன். அந்த பாராக்களில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை நான் அங்கீகரிக்க முடியாது என்ற என் அபிப்பிராயத்தை நான் கூற வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். நிதி சம்பந்தமான சுமைகள் என்ன என்பதை நாங்கள் திட்டவட்டமாக அறியாத நிலையில், என்னுடைய கருத்தையும் எங்கள் எல்லோருடைய கருத்தையும் கூறுவது கடினமாக இருக்கிறது.

### பொறுப்புகள் பரிசீலனை

இதை நான் விளக்கிக் கூறுகிறேன். ராணுவ நிர்வாகம் ஒதுக்கப்பட்ட விஷயமாக இருக்குமாயின், இயல்பாகவே அதை நான் ஒரு கோணத்திலிருந்து பரிசீலனை செய்யவேண்டியிருக்கும்; அதுவே இந்தியர்களிடம் மாற்றப்படுமாயின் அதை நான் மற்றொரு கோணத்திலிருந்து பரிசீலனை செய்யவேண்டி யிருக்கும், வரப்போகும் அரசாங்கம் மேற்கொள்ளப்போகும் நிதி சம்பந்தமான பொறுப்புகள், கணக்கு நிபுணர்களின் பரிசீலனைக்கும் பாரபட்சமற்ற பரிசோதனைக்கும் உட்படவேண்டும் என்பதே காங்கிரசின் உறுதியான அபிப்பிராயமாகும். இந்த உண்மை காரணமாகவே, அவற்றைப்பற்றி எனது கருத்தைக் கூறுவது மிகமிகக் கடினமாக இருக்கிறது.

பாரபட்சமற்ற நான்குபேர் சேர்ந்து தயாரித்த ஓர் அறிக்கை இங்கே என் கையில் இருக்கிறது. அவர்களில் இருவர் பம்பாய் ஹைகோர்ட்டில் முன்பு அட்வொகேட் ஜெனரலாக இருந்தவர்கள்.

நான் ஸ்ரீ பகதூர்ஜியையும் ஸ்ரீ புலாபாய் தேசாயையுமே குறிப்பிடுகிறேன். மூன்ருவது பரிசோதகர் அல்லது கமிட்டி உறுப்பினர் பேராசிரியர் ஷா ஆவார். அவர் நீண்டகாலமாக பம்பாய் சர்வ கலாசாலையில் பேராசிரியராக இருந்து வருகிருர். அவர் அகில இந்தியாவிலும் புகழ் பெற்றவர்; இந்தியாவின் பொருளாதார நிலைபற்றி மதிப்பு வாய்ந்த பல நூல்கள் எழுதியுள்ளார். ஸ்ரீ குமரப்பா, கமிட்டியின் நான்காவது அங்கத்தினர் ஆவார். அவர் ஐரோப்பாவில் பட்டங்கள் பெற்றவர். நிதிப் பிரச்னைபற்றி அவரது அபிப்பிராயங்கள் மிகவும் ஒப்புக்கொள்ளத் தக்கவையாகவும், செல்வாக்குள்ளவையாகவும் இருக்கின்றன. இந்த நான்கு கனவான்களும் விவரமான அறிக்கையொன்றைச் சமர்ப்பித்திருக்கிருர்கள். நிதி சம்பந்தமாக இந்தியாவின் பொறுப்புகள் பற்றி பாரபட்ச முறையில் விசாரிக்க வேண்டுமென அவர்கள் அறுதியிட்டுக் கூறியிருக்கிருர்கள் என்றே நான் நினைக்கிறேன். நிதி சம்பந்தமாக இந்தியா வகிக்க வேண்டுமென்று கூறப்படும் சுமைகளில் பல, உண்மையில் இந்தியாவைச் சேர்ந்தவை அல்ல என்பதை அவர்கள் எடுத்துக் காட்டுகிருர்கள்.

தேசியக் கடன்களில் ஒரு பைசாவைக்கூட மறுக்கவேண்டும் என்று காங்கிரஸ் ஒரு காலத்திலும் கூறியதில்லை என்பதை நான் மிகவும் மரியாதையுடன் கூற விரும்புகிறேன். ஆனல் காங்கிரஸ்மீது கெட்ட எண்ணத்துடன் அத்தகைய புகார் கூறப்பட்டு வருகிறது. இந்தியாமீது சுமத்தப்பட்டுள்ள நிதி சம்பந்தமான சில பொறுப்புகளை அவ்விதம் சுமத்தியிருக்கக்கூடாது என்றும், அவற்றை பிரிட்டன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றுமே காங்கிரஸ் கூறியிருக்கிறது. அந்தப் பொறுப்புகள் இந்தத் தொகுப்புகளில் நன்கு பரிசீலனை செய்யப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம். அவற்றையெல்லாம் மீண்டும் எடுத்துக்கூறி இந்தக் கமிட்டிக்குச் சலிப்பு ஏற்படும்படி செய்ய நான் விரும்பவில்லை. இந்த இரண்டு தொகுப்புகளையும் வாசிக்கவேண்டும் என்பதில் அக்கறையுள்ளவர்கள் அப்படியே செய்யலாம். அவற்றை வாசிப்பதால் அவர்கள் மிகுந்த பலனடைவார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. அந்தப் பொறுப்புகளில் சிலவற்றை இந்தியா மீது ஒருபோதும் சுமத்தியிருக்கக் கூடாது என்பதையும் அவர்கள் கண்டுகொள்வார்கள். எனவே, அவ்விஷயமாக எங்களுடைய நிலை என்ன என்பது திட்டவட்டமாகத் தெரிந்தால், நாங்கள் இறுதியான அபிப்பிராயம் கூறுவது சாத்தியமாக

இருக்கும். எனினும் பெடரல் திட்ட அமைப்பு உப கமிட்டி தயாரித்துள்ள இந்த அறிக்கையின் 18, 19, 20-வது பாராக்களில் கூறப்பட்டுள்ள கட்டுப்பாடுகள் அல்லது 'பாதுகாப்புகளைப்' பற்றி நான் ஒன்று கூறத் துணிகிறேன். அதாவது அவை இந்தியாவின் முன்னேற்றத்திற்கு உதவியாக இருப்பதற்குப் பதிலாக, ஒவ்வொரு படியிலும் அதன் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாகவே இருக்கும்.

### இந்தியாவின் நலன்கள்

இந்திய மந்திரிகள் மீது நம்பிக்கை இல்லை என்ற பிரச்னை உங்கள் முன்னிலையில் எழவில்லை என்று நீங்கள் (லார்டு ரீடிங்) மகிழ்ச்சியுடன் கூறினீர்கள். அதற்கு, மாறாக மற்ற மந்திரிகளைப் போல் இந்திய மந்திரிகளும் தங்கள் கடமையை நன்கு செய்வார்கள் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருப்பதாகவும் குறிப்பிட்டீர்கள். ஆனால் இந்திய எல்லைக்கு வெளியே உள்ளவர்கள் போட்டுள்ள மூலதனத்தைப் பற்றியே நீங்கள் அக்கறை கொண்டிருக்கிறீர்கள். இந்தியாவில் மூல தனம் போட்டிருப்பவர்கள், நியாயமான வட்டி விகிதத்துக்குத் தங்கள் பணத்தை இந்தியாவுக்குக் கொண்டு வந்திருப்பவர்கள், இங்கே குறிப்பிட்டுள்ள பாதுகாப்புகள் இராவிடில் திருப்தியடைய மாட்டார்கள் என்று நீங்கள் கூறினீர்கள். இங்கிருந்து இந்தியாவுக்கு மூலதனத் தொகைகள் அனுப்பப்பட்டால், அவை இந்தியாவின் நலன்களுக்கு உகந்ததாக இராது என்று எண்ணுவதற்கு இல்லை என்றும் குறிப்பிட்டீர்கள் என்றே நினைக்கிறேன்.

அதற்கு உதாரணங்களை எடுத்துக் கூறுவீர்கள் என்று நான் காத்திருந்தேன். ஆனால் இவ்விஷயங்களையும், இவ்விஷயமாக உங்கள் மனத்திலுள்ள உதாரணங்களையும் நாங்கள் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்று எண்ணி அவற்றைக் குறிப்பிடவில்லை.

எனினும் நீங்கள் பேசிக்கொண்டிருந்த போது உண்மையில் இதற்கு நேர் மாறான உதாரணங்களே என் மனதில் தோன்றின. அப்போது பின் கண்டவாறு நான் எனக்குள்ளே சொல்லிக் கொண்டேன்:

''இந்தியாவின் நலன்கள் பிரிட்டனின் நலன்களைப் போன்றவை அல்ல. இரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை. எனவே பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்குக் கடன் தொகைகள் வந்த போதெல்லாம் அவை இந்தியாவின் நலன்களுக்கு உகந்

தவை என்று நாங்கள் கூற முடியாது. இதற்கு என் சொந்த அனுபவத்திலிருந்து பல உதாரணங்கள் காட்ட முடியும்''.

உதாரணமாக, பல யுத்தங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். ஆப்கானிஸ்தான் யுத்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஆப் கானிஸ்தான் யுத்தங்களைப் பற்றிய வரலாற்றை காலஞ் சென்ற சர் ஜான் கே எழுதியுள்ளார். நான் இளைஞனாக இருந்த போது அவ்விவரங்களைப் பேரார்வத்துடன் வாசித்தேன். அந்த யுத்தங்களில் பெரும்பாலானவையும் இந்தியாவின் நலனுக்காக நிகழ்ந்தவை அல்ல என்பது நன்றாக நினைவில் இருக்கிறது. அது மாத்திரமல்ல, அந்த யுத்தங்களின் சம்பந்தமாக கவர்னர் ஜெனரல் பெரும் தவறு செய்து விட்டார் என்பதும் என் நினைவில் இருக்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷாரின் நிதிக் கொள்கை பற்றிய வரலாறு, இந்தியாவைச் சுரண்டிய தவறுகளும் குட்டை குழப்புதல்களும் அடங்கிய வரலாறேயாகும் என்பதை இளைஞர் களான எங்களுக்கு, காலஞ்சென்ற தாதாபாய் நௌரோஜி போதித்தார்.

லார்டு சான்ஸலர் ஓர் எச்சரிக்கை விடுத்தார். அந்த எச் சரிக்கைக்கு நீங்களும் (லார்டு ரீடிங்) முத்திரை வைத்தீர்கள். அதாவது நிதிப் பிரச்னை மிகவும் மென்மையான ஒரு விஷயம் என்றும், எனவே அது பற்றிய விவாதத்தில் பங்கு எடுத்துக் கொண்டுள்ள நாம் அவ்விஷயத்தைத் தவறான முறையில் கையா ளாமல் ஜாக்கிரதையாகவும் கவனத்துடனும் இருக்க வேண்டும் என்றும், ஏற்கனவேயே பல கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டி யிருக்கும் நிதி மந்திரிக்குப் புதிய கஷ்டங்களைச் சிருஷ்டிக்கக் கூடாது என்றும் நீங்கள் குறிப்பிட்டீர்கள். எனவே விவரமாக எதுவும் கூற நான் உத்தேசிக்கவில்லை. எனினும் நாணய விகிதத்தின் உயர்வைப்பற்றி நான் ஒரு விஷயத்தைக் கூறாமல் இருக்க முடியாது. அதாவது ரூபாயின் மதிப்பை 16 பென்ஸி லிருந்து 18 பென்ஸாக உயர்த்தியதையே குறிப்பிடுகிறேன். இந்தியர்கள் ஏகமனதாக எதிர்த்தும் கூட அந்த உயர்வு அமுலுக் குக் கொண்டுவரப்பட்டது. காங்கிரசுடன் எவ்விதமான தொடர் பும் இல்லாத இந்தியர்களே அதை எதிர்த்தனர். அவர்கள் சுயேச்சையான அபிப்பிராயம் உள்ளவர்கள். அவர்களில் சிலர் நிதிப் பிரச்னைகளில் மிகவும் நிபுணர்கள் ஆவர். எனவே திட்ட வட்டமாக அறிந்தே அவ்விதம் எதிர்த்தார்கள். தவிர அவ்விஷயத்தில் இந்தியாவின் நலன்களைக் காட்டிலும் வெளி நாடுகளின் நலன்களே முக்கியமானவையாகக் கருதப்பட்டன, ரூபாயின் மதிப்பை, தற்காலிகமாவது ஸ்டர்லிங்குடன் இணைக்காமல்

விட்டிருந்தால், இந்திய விவசாயிகளுக்கு மிகுந்த நன்மை ஏற்பட்டிருக்கும் என்று இங்கே இரண்டு நிதி நிபுணர்கள் ஒப்புக் கொண்டது, என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. எனினும் ரூபாயை ஸ்டர்லிங்குடன் இணைக்காமல் விட்டிருந்தால், ரூபாயின் மதிப்பு 6 அல்லது 7 பென்ஸாகக் குறைந்து இந்தியாவுக்கு ஏதாவது பேரபாயம் ஏற்பட்டிருக்கலாமென அவர்கள் கருதினர். அப்படியே குறைந்திருந்தால் கூட அதனால் இந்திய விவசாயி உண்மையில் எவ்விதத்திலும் பாதிக்கப்பட்டிருப்பார் என்று நான் நினைக்கவில்லை.

அது அப்படியிருக்க, இந்திய நிதி மந்திரி தமது பொறுப்பை யாதொரு தங்கு தடையுமின்றி நிறைவேற்றுவதில் குறுக்கிடும் பாதுகாப்புகளை நான் அங்கீகரிக்க முடியாது. பெரிதும் விவசாயிகளின் நலன்களை முக்கியமாகக் கொண்டே அந்தப் பொறுப்பு உருவாக்கப் பட்டிருக்கிறது.

### இந்தியாவின் எல்லையற்ற செல்வம்

மேலும் ஒரு விஷயத்தைக் குறித்து இந்தக் கமிட்டி கவனம் செலுத்த வேண்டுமென நான் விரும்புகிறேன். இந்தியாவின் நிதி ஒழுங்கான முறையில் நிர்வகிக்கப்படுமாயின், முற்றிலும் இந்தியாவின் நலன்களை அடிப்படையாகக் கொண்டு நிர்வகிக்கப் படுமாயின், வெளி நாட்டுச் சந்தையில், லண்டனில் இன்றுள்ள மோசமான ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுவதற்கு இடமேயில்லை. லார்டு சான்ஸலரும் நீங்களும் (லார்டு ரீடிங்) எச்சரிக்கை செய்தும் கூட நான் இதைக் கூறுகிறேன். நான் அவ்வாறு கூறுவதற்குக் காரணமும் சொல்ல விரும்புகிறேன். சர் டானியல் ஹாமில்டன் எழுதியவற்றில் எனக்கு முதன் முதலாக அறிமுகம் ஏற்பட்ட போது, நான் மிகுந்த கூச்சத்துடனும், தயக்கத்துடனும் அவரை அணுகினேன். இந்தியாவின் நிதிப் பிரச்னையைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. அவ்விஷயம் எனக்கு முற்றிலும் புதிதாகும். சர் டானியல் ஹாமில்டன் தொடர்ந்து எனக்கு அனுப்பி வந்த காகிதங்களை நன்கு வாசிக்கும்படி என்னை அவர் உற்சாகத் துடன் வற்புறுத்தி வந்தார். இந்தியாவில் அவருக்கு ஏராளமான நலன்கள் இருக்கின்றன என்பதை நாம் எல்லோரும் அறிவோம். அவர் பல முக்கிய பதவிகளை வகித்திருப்பதுடன், திறமை வாய்ந்த நிதி நிபுணராகவும் இருக்கிறார். இன்று அவர் தாம் கூறிய சில யோசனைகளைப் பரிசோதனை செய்து வருகிறார். இந்தியாவின் நிதிப் பிரச்னையை அவர் அணுகும் கோணத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்ற அக்கறையுடையவர்கள், அவர் கூறிய யோசனை

களில் ஒன்று மிகவும் கவர்ச்சியாக இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம். அதாவது இந்தியாவின் நிதிப் பிரச்னை தங்கத்தையோ, வெள்ளியையோ அல்லது வேறு ஏதாவது உலோகத்தையோ அடிப்படியாகக் கொண்டிருக்க வில்லை என்றும், இந்தியாவுக்குச் சொந்தமான உலோகம் இருக்கிறது என்றும் அவர் கூறுகிறார். எண்ணிக்கையற்ற கோடிக்கணக்கான தொழிலாளர்களே அந்த உலோகம் என்றும் அவர் கூறுகிறார். இந்தியாவின் நிதியைப் பொறுத்த மட்டில் தாங்கள் பாப்பராகி விட்டதாக பிரிட்டிஷ் அரசாங்கம் பிரகடனம் செய்யவில்லை என்பது உண்மையே. வரவு செலவைச் சரிக்கட்டுவது, அதற்குச் சாத்தியமாகவே இருந்து வருகிறது. எனினும் விவசாயியைக் கசக்கிப் பிழிந்து அவரிடமிருந்து பணம் வசூல் செய்வதால்தான் அது சாத்தியமாகியிருக்கிறது. ரூபாய்களை அடிப்படையாகக் கொண்டு சிந்திக்காமல் இந்திய மக்களை அடிப்படையாகக் கொண்டு இந்திய நிதிப் பிரச்னையை அதிகாரிகள் பரிசீலனை செய்து வந்திருப்பார்களாயின், இந்தியாவின் ஆட்சி நிர்வாகத்தை இன்னும் மிகச் சிறந்த முறையில் அவர்கள் நடத்தி வந்திருப்பார்கள், அவர்கள் வெளி நாட்டுச் சந்தையின் உதவியை நாடும்படி நேர்ந்திராது. இந்தியாவின் நிதி நிலைமை பத்து ஆண்டுகளில் ஒன்பது ஆண்டுகள் வரை திருப்திகரமாகவே இருந்து வந்திருக்கிறது என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்துள்ளனர்; பிரிட்டிஷ் நிதி நிபுணர்களும் அவ்விதமே கூறியுள்ளனர்.

பூமித் தாயின் மூலம் இந்தியா ஏராளமான பொருட்களை உற்பத்தி செய்கிறது; இந்தியா கொடுக்க வேண்டிய கடன் தொகைகளையும், அதற்குத் தேவையான இறக்குமதிப் பொருட்களின் பெறுமானத்தையும் விட அதிகமான தொகை பெறுமானமுள்ள பொருட்களை இந்தியா உற்பத்தி செய்கிறது. உண்மையில் இந்தியாவுக்கு, வெளிநாட்டு மூலதனத்தைக் கோரவேண்டிய அவசியமே இல்லை என்பது எனது உறுதியான அபிப்பிராயம். பிரிட்டிஷ் அதிகாரிகளுக்குக் கொடுக்கவும், இந்திய ராணுவத்தின் பயங்கரமான செலவுக்காகவும் ஏராளமான தொகை சுரண்டப்பட்டு விடுவதாலேயே, இந்தியா வெளிநாட்டு மூலதனத்தின் உதவியை நாடவேண்டியிருக்கிறது. அந்தத் தொகைகளைக் கொடுக்க இந்தியா முற்றிலும் சக்தியற்றதாக இருக்கிறது. அப்படியிருந்தும்கூட நிலவரிகளின் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு அவற்றைச் சமாளித்து வருகிறார்கள். நிலவரிக் கமிஷனர்களில் ஒருவரான காலஞ்சென்ற ராமேஷ் சந்திர தத் நிலவரிக் கொள்கையை மிகவும் வன்மையாகக் கண்டித்தார். இவ்

விஷயமாக அவருக்கும் லார்டு கர்சனுக்கும் வாக்குவாதம் நடந்தது. அந்த வாக்குவாதத்தில் ராமேஷ் சந்திர தத் பக்கத்திலேயே நியாயம் இருந்ததென இந்தியர்களான நாங்கள் முடிவு செய்தோம்.

நான் இன்னும் ஒரு படி முன் செல்ல விரும்புகிறேன். கோடிக் கணக்கான இந்த விவசாயிகள், வருடத்தில் ஆறு மாதங்கள் வரையில் வேலையின்றி சோம்பிக் கிடக்கிறார்கள் என்பது எல்லோரும் அறிந்ததே. இவர்கள் அவ்விதம் வருடத்தில் ஆறு மாதங்கள் வரையில் சோம்பிக் கிடக்கும்படி நேராமல் இருக்க பிரிட்டிஷ் அரசாங்கம் வழி வகை செய்யுமாயின், அவர்களால் உற்பத்தி செய்யக் கூடிய செல்வத்தைக் கற்பனை செய்து பாருங்கள். அப்படியாயின், நாம் வெளிநாட்டுச் சந்தையின் உதவியை நாட வேண்டிய அவசியம் ஏன் ஏற்படவேண்டும்? நான் ஒரு நிதி நிபுணன் அல்ல. எனவே என் சிந்தனைக்கு இந்தியாவின் நிதிக் கொள்கை இந்த ரீதியில் தான் தோன்றுகிறது. இந்த பாமர மக்களைப் பற்றியே இடைவிடாது நினைக்கும் எனக்கு, அவர்களுடைய உணர்ச்சியைப் போல் எனது உணர்ச்சியும் இருக்க வேண்டும் என்று விரும்பும் எனக்கு, நிதிக் கொள்கை முழுவதும் அந்த உருவத்திலேயே என் முன் தோன்றுகிறது. நமக்குத் தேவையான தொழிலாளர்கள் நம்மிடையே இருக்கின்றனர் என்றும், எனவே வெளி நாட்டு மூலதனத்தின் உதவி எதுவும் நமக்குத் தேவையில்லை என்றுமே அவர்கள் கூறுவர். நாம் உழைத்து வரும் வரையில் நம்முடைய உழைப்பின் மூலம் உற்பத்தியாகும் பொருட்களை உலகம் முழுவதும் விரும்பும். நாம் உழைத்து உற்பத்தி செய்யும் பொருட்களை இன்று உலகம் விரும்புகிறது என்பது உண்மையே. உலகம் வலிய முன்வந்து விருப்பத்துடன் நம்மிடமிருந்து எடுத்துக் கொள்ளும் பொருட்களை நம்மால் உற்பத்தி செய்ய முடியும். வெகுகாலமாக இந்தியாவின் நிலைமை அப்படித்தான் இருந்து வந்திருக்கிறது. எனவே இந்தியாவின் நிதி நிலைமை சம்பந்ததாக உங்களுக்கு ஏற்பட்டுள்ள அச்சம் எதுவும் எனக்கு இல்லை. எங்களுடைய சொந்த வாயிற் காவலர்களும், பணப்பையும் யாதொரு நிபந்தனையுமின்றி எங்கள் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தாலொழிய நாங்கள் பொறுப்பை ஏற்றுக் கொள்வது இயலாத காரியம். அவ்விதம் ஏற்றுக் கொள்ளும் பொறுப்பு கவைக்குதவாது.

## பாதுகாப்புகளின் தன்மை

தற்போது நான் எத்தகைய பாதுகாப்புகளையும் பற்றிக் கூறும் நிலையில் இல்லை. ஏனெனில், முதலில் நான் கீழ்க்கண்ட

விவரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். இந்தியாவுக்குப் பூரண பொறுப்பாட்சி கிடைக்குமா? சிவில் சர்விஸ், ராணுவ நிர்வாகம் முற்றிலும் இந்திய அரசாங்கத்தின் கையில் இருக்குமா? இந்தியாவைப் போன்ற ஓர் ஏழை நாட்டுக்கு உகந்த செலவில் இந்தியாவின் விருப்பப்படி குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள சிப்பாய்களையும், சிவில் சர்விஸ் அதிகாரிகளையும் மாத்திரம் வைத்துக்கொள்ள இந்தியாவுக்கு சுதந்திரம் இருக்குமா? இவ்விவரங்களையெல்லாம் நான் அறிந்தாலொழிய, பாதுகாப்புகளைக் குறிப்பிடுவது முற்றிலும் இயலாத காரியமாகும்.

உண்மையில் இவற்றையெல்லாம் ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டு கவனித்தால், எத்தகைய பாதுகாப்புகளுக்கும் அவசியமே இருக்காது. இந்தியாவுக்குத் தன் பளுவைச் சுமக்கும் திறமையிலும், நாட்டின் நிர்வாகத்தை அமைதியாக நடத்தும் திறமையிலும் நம்பிக்கை இராவிட்டால்தான் பாதுகாப்புகள் இருக்க வேண்டிய அவசியம் ஏற்படும். அத்தகைய நம்பிக்கை இராவிடில், நாங்கள் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் அந்த விநாடியிலேயே முற்றிலும் குழப்பமும் ஒழுங்கீனமும் மூண்டுவிடும் என்ற ஓரே அபாயத்தை நான் கற்பனை செய்துகொள்ள முடியும். பிரிட்டிஷாரின் மனத்தை அத்தகைய பீதி பற்றிக் கொண்டிருக்குமாயின், பின்னர் நமக்குள் ஒருமைப்பாடு இருக்க இடமில்லை. கண்ணியமான முறையில் எங்கள் அலுவல்களை நாங்கள் நிர்வாகம் செய்ய முடியும் என்பதில் எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. அதனாலேயே நாங்கள் பொறுப்பாட்சியை மேற்கொள்கிறோம், பொறுப்பாட்சி கோருகிறோம், பொறுப்பாட்சி வேண்டுமென வற்புறுத்துகிறோம். பிரிட்டிஷ் நிர்வாகிகளைக் காட்டிலும் சிறந்த முறையில் நாங்கள் நிச்சயமாக நிர்வாகத்தை நடத்த முடியும் என்று கருதுகிறேன். எங்களைப் போல் சிறந்த முறையில் அவர்கள் நிர்வாகத்தை நடத்த முடியாது. அதற்குக் காரணம், அவர்கள் திறமைசாலிகள் அல்ல என்பதில்லை. எங்களைக் காட்டிலும் அவர்கள் திறமைசாலிகள் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு ஸ்தாபனத்தை உருவாக்கும் திறமை அவர்களுக்கு உண்டு என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அவர்கள் காலடியில் உட்கார்ந்து நாம் அதைக் கற்றுக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆனல் எங்களிடம் ஒரு அம்சம் இருக்கிறது. அதாவது எங்கள் நாட்டை நாங்கள் அறிவோம்; எங்கள் மக்களை நாங்கள் அறிவோம். எனவே எங்களுடைய அரசாங்கத்தை நாங்கள் குறைந்த செலவில் நடத்த முடியும். நாங்கள் சச்சரவுகளையெல்லாம் தவிர்ப்போம். ஏகாதிபத்திய ஆசை எதுவும்

எங்களுக்கு இராததால், ஆப்கானியர்களுடனே அல்லது வேறு எந்த தேசத்துடனே யுத்தத்திற்குச் செல்லமாட்டோம். ஆனல் எல்லா நாடுகளுடனும் நாங்கள் நட்புறவை வளர்த்துக் கொள்வோம். அவைகள் எங்களைக் கண்டு எதற்கும் அஞ்சவேண்டியதில்லை.

இந்தியாவின் நிதியைப் பற்றி நான் எண்ணும் போது, இத்தகைய ஒரு கொள்கை தான் என் மனத்தில் ஊடுருவிப் பாய்கின்றது. உங்களுடைய மனத்திலோ, லார்டு சான்ஸலரின் மனத்திலோ அல்லது பிரிட்டிஷ் மந்திரிகளின் மனத்திலோ தோன்றுவது போல் இந்தப் பிரச்னை எனக்கு அவ்வளவு பெரிதாகவோ அல்லது அபாயகரமானதாகவோ தோன்றவில்லை. அவர்களுடன் இந்தப் பிரச்னை பற்றி விவாதிக்கும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. எனவே இங்கே கூறப்பட்டுள்ள பாதுகாப்புகளை ஆதரிப்பதோ, பிரிட்டிஷ் பொதுமக்களின் மனத்திலோ அல்லது பொறுப்பு வாய்ந்த பிரிட்டிஷ் பிரமுகர்களின் மனத்திலோ எழுந்துள்ள அச்சத்திற்குக் காரணம் உண்டு என்று கூறுவதோ என்னல் இயலாத காரியம் என்பதை நான் மரியாதையுடன் கூற வேண்டும்.

தேசீய அரசாங்கம் ஏற்றுக் கொள்ளும் ஒவ்வொரு பொறுப்புக்கும் ஒரு நாடு சாத்தியமான வரையில் அளிக்கக்கூடிய நியாயமான உத்தரவாதங்கள் அளிக்கப்படும்; சரியான முறையில் உறுதி மொழிகளும் அளிக்கப்படும். எனினும் அந்த உத்தரவாதங்களும் உறுதி மொழிகளும் இந்த பாராக்களில் விவரிக்கப்பட்டிருப்பது போன்ற முறையில் இரா. பிரிட்டன் சம்பந்தப்பட்ட வரையில் நாம் சில பொறுப்புகளை வகிக்க வேண்டியிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. நாம் அந்தப் பொறுப்புகளை வகிப்பதில் தவறு செய்வதாகவும், அவ்விஷயமாக எதுவுமே செய்யாமல் இருந்துவிடுவதாகவும் வைத்துக் கொள்வோம். அப்போது காகிதத்தில் குறிப்பிடும் உறுதிமொழிகள் கவைக்கு உதவாதவையாகிவிடும். அல்லது இந்தியா பொறுப்பாட்சி பெற்றதும், துரதிர்ஷ்டவசமாகப் பருவ மழை உற்ற காலத்தில் பெய்யத் தவறிவிடுவதாக வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் இந்தியாவினிடமிருந்து பணத்தைக் கசக்கிப் பிழிவதற்குற்ற பாதுகாப்பு எதையாவது உருவாக்க முடியுமா என்பது எனக்குத் தெரியவில்லை. இந்த நெருக்கடியான சந்தர்ப்பங்களில், எதிர்பாராத சந்தர்ப்பங்களில், இயற்கை உற்பாதங்கள் ஏற்பட்ட சமயங்களில், எந்த தேசீய அரசாங்கமும் உத்தர வாதங்கள் அளிப்பது முடியாத காரியமாகும்.

இந்தியப் பிரச்னைகளில் அனுபவமுள்ள பல நிர்வாக அதி காரிகளுக்கும் எனக்கும் இடையே கருத்து வேறுபாடு இருக்கிறது. இந்த வட்ட மேஜை மகாநாட்டுக்கு வந்துள்ள என் நாட்டினர் பலருடனும்கூட எனக்குக் கருத்து வேறுபாடு இருக்கிறது. இவற்றையொட்டி என் மனத்தை ஆட்கொண்டுள்ள மிகுந்த வருத் தத்தைத் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடிப்பதைத் தவிர நான் வேறு என்ன செய்யமுடியும்? இருந்தாலும், காங் கிரஸ் பிரதிநிதி என்ற முறையில் நான் எனது கடமையைச் செய்ய வேண்டுமாயின், பிறருடைய அதிருப்தி ஏற்படுவதாக இருந்தாலும் கூட, பல காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கும் எனக்கும் பொதுவாக உள்ள கருத்துகளை நான் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

# 10

# மாகாண சுயாட்சி *

இந்த விவாதத்திற்குப் பொறுப்பாளியான பேராசிரியர் லீஸ்-ஸ்மித்திற்கு நான் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த விவாதத்தை அனுமதித்ததற்காக லார்டு சான்ஸலரான உங்களுக்கும் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ் விவாதத்தை ஆரம்பித்ததன் மூலம் ஸ்ரீ லீஸ்-ஸ்மித் தமக்குள்ள ஆச்சரியகரமான நம்பிக்கையை வெளிப்படுத்தியுள்ளார் என்றே நினைக்கிறேன். பிராண வாயுக் கருவியுடன் வரும் ஒரு டாக்டரைப்போல் அவர் வந்திருக்கிறார். இறக்கும் தறுவாயில் இருக்கும் ஓர் உடலுக்குள் பிராண வாயுவைப் புகுத்த அவர் முயற்சித்து வருகிறார். நாங்கள் இறக்கும் தறுவாயில் உள்ள உடல் போன்றவர்கள் என்று நான் கூறவில்லை. இந்த மகாநாட்டு நடவடிக்கைகள் ஆரம்பமானதிலிருந்தே நான் பணிவுடன் எச்சரிக்கை செய்து வந்திருக்கிறேன். உண்மையற்ற ஒரு நிலை என் மனத்தை வருத்தி வருகிறது என்பதை நான் தெளிவாகக் கூறி வருகிறேன். சென்ற சில நாட்களாக சர் தேஜ் பகதூர் சாப்ருவின் மன நிலையும் இவ்விதமே இருந்து வருகிறது என்பதை நான் அறிவேன். என்னை நான் சர் சாப்ருவின் தோழர்களில் ஒருவராகக் கருதலாமெனில், அவர் மற்ற நண்பர்களையும் தோழர்களையும் போல் என்னையும் ஒருவராகக் கருதி அவரது அந்தரங்கமான அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பை எனக்கு அளித்திருக்கிறார்.

நிர்வாக விஷயங்களில் அவருக்கு உள்ள முதிர்ந்த அனுபவத்தின் பலனாகவும், அரசாங்கத்தில் அவர் உயர்ந்த பதவிகள் வகித்ததன் காரணமாகவும், 'மாகாண சுயாட்சி'யினால் ஏற்படக்கூடிய அபாயத்தைக் குறித்து அவர் எங்களை எச்சரித்துள்ளார். அவர் இத்தகைய எச்சரிக்கை விடுப்பதற்குக் காரணங்கள் உண்டு. குறிப்பாக என்னை மனத்திற்கொண்டே அவர் எச்சரிக்கை விடுத்துள்ளார். ஏனெனில் நான் தான், இந் நாட்டிலுள்ள பொறுப்பு வாய்ந்த பிரமுகர்களான பல ஆங்கில நண்பர்களுடனும் மாகாண சுயாட்சியை யொட்டி விவாதிக்கத் துணிந்தேன். இதைப் பற்றி

* இதுவும் லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கமே யாகும்.

அவர் கேள்விப் பட்டதால், அவர் எனக்குப் போதிய எச்சரிக்கை விடுத்துள்ளார். அந்த தஸ்தாவேஜியில் கையெழுத்திட்டிருப்பவர் களில் நானும் ஒருவனுக இருப்பதற்கு அதுதான் காரணம். லார்டு சான்ஸலரின் முன்னிலேயில் வைக்கப்பட்டுள்ள தஸ்தாவேஜியை நான் குறிப்பிடவில்லே. பத்து நாட்களுக்கு முன் பத்திரிகை களுக்கு விடுக்கப்பட்ட மற்ருெரு தஸ்தாவேஜியையே நான் குறிப் பிடுகிறேன். அது பிரதம மந்திரிக்கு அனுப்பப்பட்டதாகும். அவரும், அவருக்குப் பின் பேசிய மற்றவர்களும், நானும் வெவ் வேறு பாதைகளில் சென்ருலும் ஒரே முடிவுக்கே வந்திருக்கிரேம். இதை இங்கே நான் கூறுவது போல் அவரிடமும் கூறினேன். அரசாங்க நிர்வாகத்தில் எனக்கு நேரடியான அனுபவம் இல்லே. வரப்போகும் சுயாட்சி எனது கற்பனையில் உள்ள சுயாட்சியாக இருக்குமாயின், அந்த பழம் நமது நோக்கத்தைப் பூர்த்தி செய்வதாக இருக்குமா என்பதைப் பரிசீலனே செய்து பார்ப்பதில் ஆட்சேபணே இருக்க முடியாதென நான் கருதினேன். இந்தக் கொள்கையை எதிர்க்கும்நண்பர்களேச்சந்தித்துஅவர்களுடன்விவாதிக்கவும்,அவர் களுடைய சங்கடங்களேத் தெரிந்து கொள்ளவும், அவர்கள் அளிக்க முற்பட்டுள்ள ஆட்சி நம்மை ஒரே இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்குமா என்பதை அறிந்து கொள்ளவும் நான் விரும்பினேன். அந்த நோக்கத்துடனேயே நான் மாகாண சுயாட்சியைப் பற்றி விவாதிக்கத் துணிந்தேன். எனினும் அதைப்பற்றி விவாதித்த போது நான் உடனடியாக ஒன்று தெரிந்துகொண்டேன். அதாவது அவர்கள் அளிக்க உத்தேசிப்பது எனது கற்பனையில் உள்ள மாகாண சுயாட்சி அல்ல என்பதைத் தெரிந்து கொண்டேன். அதனுடன் எவ்விதத் தொடர்புமின்றி என்னேத் தனியாக விட்டு விடுவதுதான் நல்லதென்றும், மாகாண சுயாட்சி என்ற முட் டாள் தனமான ஓர் எண்ணம் காரணமாகவோ, அவசரப்பட்டோ தேசத்தின் நலனே நான் விற்கப் போவதில்லே என்றும் எனது நண்பர்களிடம் கூறினேன்.

நான் மிகுந்த தயக்கத்துடனேயே இத்தனே மைல்களேத் தாண்டி வந்திருக்கிறேன். மனத்தில் ஒளிவு மறைவு எதுவுமின்றி இந்த மகாநாட்டிற்கும், அரசாங்கத்திற்கும் எனது மனப்பூர்வ மான ஒத்துழைப்பை அளிக்க நான் ஆர்வமுள்ளவனுக இருக் கிறேன். எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் முற்றிலும் ஒத்துழைக்க வேண்டும் என்ற ஆர்வம் காரணமாகவே நான் அபாய எல்லேக்கு உள்ளேயும் செல்லத் தயங்கவில்லே. அதனுல் தான் நான் மாகாண சுயாட்சியைப் பற்றிப் பேசவும் விவாதிக் கவும் துணிந்துள்ளேன். என்போன்ற மனப்போக்கு உள்ள ஒரு

வருக்குத் திருப்தி அளிக்கும் வகையில், காங்கிரசுக்குத் திருப்தி அளிக்கும் வகையில், மாகாண சுயாட்சியை மேற்கொள்ளலாம் என்று காங்கிரஸ் சம்மதிக்கும் வகையில், இந்தியாவுக்கு மாகாண சுயாட்சி அளிக்க நீங்களோ அல்லது பிரிட்டிஷ் மந்திரிகளோ உத்தேசிக்கவில்லை என்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன்.

### பயங்கரக் குற்றங்களுக்கு ஒரு மருந்து

நான் கூறுவதன் அர்த்தம் என்ன என்பதைத் தெளிவாகச் சொல்லுகிறேன். என் மீது தப்பெண்ணம் ஏற்படக் கூடாது என்பதில் நான் மிகவும் கவலையுள்ளவனாக இருக்கிறேன். எனவே நான் ஓர் உதாரணம் கூறுகிறேன். எனது உதாரணத்திற்கு நான் வங்காளத்தையே எடுத்துக் கொள்கிறேன். இன்று இந்தியாவில் மிகவும் பாதிக்கப்பட்ட மாகாணங்களில் அது ஒன்றாக இருக்கிறது. வங்காளத்தில் பயங்கரக் கட்சியினர் தீவிரமாக இருந்து வருவதை நான் அறிவேன். அவர்களிடம் எனக்கு எந்த விதத்திலும் சிறிதும் அனுதாபம் இருக்க முடியாது என்பதை இதற்குள் ஒவ்வொருவரும் உணர்ந்திருப்பார்கள் என்பது நிச்சயம். பயங்கரச் செயல் படுமோசமான ஒரு காரியமாகும். அதிலும் இந்தியாவுக்கு பயங்கரச் செயல்கள் எள்ளளவும் பொருந்தா. ஏனெனில் அவை இந்திய மண்ணில் வளர்ந்தோங்குவது முடியாத காரியம். அத்தகைய செயல்களில் ஈடுபடும் இளைஞர்கள், ஒரு நல்ல லட்சியத்திற்காகத் தங்கள் உயிரைக் கொடுப்பதாகக் கருதுகிறார்கள்; அவர்கள் தங்கள் உயிரை வியர்த்தமாக்குகிறார்கள் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். அவ்விதம் செய்வதால் அவர்கள் நாட்டை ஓர் அங்குலம் கூட அதன் லட்சியத்திற்கு அருகில் கொண்டு வந்து விடவில்லை. நாட்டின் லட்சியம் நம் எல்லோருக்கும் பொதுவானது என்றே நான் நம்புகிறேன்.

இன்று வங்காளம் மாகாண சுயாட்சி பெறுவதாக வைத்துக் கொள்வோம். அப்போது வங்காளம் என்ன செய்யும்? பாதுகாப்பில் வைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு கைதியையும் வங்காளம் விடுதலை செய்துவிடும். சுயாட்சி பெற்ற வங்காளம் பயங்கர அரசியல் வாதிகளை வேட்டையாட முற்படாது. ஆனால் அவர்களை அணுகி அவர்களுடைய மனத்தை மாற்ற முற்படும். நான் முழு நம்பிக்கையுடன் அவர்களை அணுகி, வங்காளத்திலிருந்து பயங்கர அரசியல் குற்றங்களை அடியோடு ஒழித்து விடுவேன்.

நான் கூறும் உண்மை உங்கள் மனத்தில் பதியும்படி செய்வதற்காக நான் மேலும் ஒரு படி செல்லுகிறேன். வங்காளம்

மாகாண சுயாட்சி பெறுமாயின், அந்த சுயாட்சியே வங்காளத்திலிருந்து உண்மையில் பயங்கரமான அரசியல் நடவடிக்கைகளை அகற்றி விடும். ஏனெனில், தங்களுடைய செயல்கள் விடுதலைக்குக் குறுக்கு வழி என்றும் இந்த பயங்கர வாதிகள் மடத்தனமாக எண்ணுகின்றனர். எனவே அந்த விடுதலை கிடைத்து விட்டால், பயங்கர அரசியல் குற்றங்கள் நின்றுவிடும்.

பயங்கர அரசியல் குற்றங்களுடன் எத்தகைய தொடர்பும் இல்லாத ஆயிரக்கணக்கான இளைஞர்கள் இருக்கிறார்களென நான் பிரமாணம் செய்யத் துணிகிறேன். அவர்கள் மீது வழக்கு விசாரணை நடைபெற வில்லை, அவர்கள் தண்டிக்கப்படவுமில்லை, அவர்களில் ஒவ்வொருவரும் சந்தேகத்தின் மீது கைது செய்யப் பட்டிருக்கிறார்கள்.

சிட்டகாங்கைப் பொறுத்த மட்டில் இன்று இங்கு வந்துள்ள ஸ்ரீ சென் குப்தா சில விவரங்களைக் கொண்டு வந்திருக்கிறார். அவர் கல்கத்தா மேயராகவும், வங்காள சட்ட சபை உறுப்பினராகவும், மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவராகவும் இருந்தார். அவரது அறிக்கை மிகவும் வேதனையைக் கொடுக்கின்றது. அந்த அறிக்கையில் வங்காளத்திலுள்ள எல்லாக் கட்சிகளையும் சேர்ந்தவர்கள் கையெழுத்திட்டுள்ளனர். சிட்டகாங்கில் ராணுவம் அட்டகாசம் புரிந்திருக்கிறது என்பதே அறிக்கையின் சாரமாகும். இந்தியாவின் படத்தில் சிட்டகாங் முக்கியமல்லாத ஓர் இடம் அல்ல.

கல்கத்தாவில் நடைபெற்றுள்ள கொடி ஆர்ப்பாட்ட விழாவில் கல்கத்தாவிலுள்ள ராணுவப் படைகள் யாவும் ஒன்று திரண்டு கலந்து கொண்டிருக்கின்றன. அந்த ராணுவப் படைகளின் ஊர்வலம் கல்கத்தாவில் பத்து தெருக்களின் வழியாகச் சென்றுள்ளது.

அந்த ஊர்வலம் யாருடைய செலவில் சென்றிருக்கிறது? அதனால் என்ன செய்யமுடியும்? அது பயங்கரவாதிகளைப் பயமுறுத்துமா? அதனால் அவர்களைப் பயமுறுத்த முடியாது என்று உங்களுக்கு நான் உறுதி கூறுகிறேன். சட்ட மறுப்பிலிருந்து காங்கிரசை அதனால் தடுக்க முடியுமா? தடுக்க முடியாது. சட்ட மறுப்பு செய்வதாக காங்கிரஸ்வாதிகள் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறார்கள். துன்பத்திற்கு உள்ளாவதே அவர்களுடைய பட்டயமாக இருந்து வருகிறது. எந்த விதமான துன்பத்தையும் ஏற்க அவர்கள் உறுதி கொண்டிருக்கிறார்கள். எனவே ராணுவத்தினால் அவர்களைப் பயமுறுத்த முடியாது. எங்களுடைய குழந்

தைகள் இந்த ஆர்ப்பாட்டத்தைக் கண்டு நகைப்பார்கள். குழந்தைகள் பயப்படக்கூடாது, பீரங்கிப்படை, துப்பாக்கிகள், விமானப் படை ஆகியவற்றைக் கண்டு அவர்கள் பீதியடையக் கூடாது என்பதை எடுத்துக் காட்டுவதே எங்களுடைய நோக்கமாகும்.

## உண்மையான மாகாண சுயாட்சி

இதிலிருந்து, எனது கற்பனையிலுள்ள மாகாண சுயாட்சி எது என்பதை நீங்கள் அறிந்து கொள்ளலாம். மேலே குறிப்பிட்டவையெல்லாம் நடைபெற முடியாதவை. ஒரு சிப்பாய்கூட வங்காள மாகாணத்திற்குள் பிரவேசிக்க நான் அனுமதிக்கமாட்டேன்.

நான் கட்டளையிட முடியாத ஒரு ராணுவத்தைப் பராமரிப்பதற்காக நான் ஒரு தம்பிடி கூடச் செலவு செய்யமாட்டேன். அத்தகைய ஒரு மாகாண சுயாட்சியில், இந்தப் பாதுகாப்புக் கைதிகளையெல்லாம் நான் விடுதலை செய்யக்கூடிய, சட்டப் புத்தகத்திலிருந்து வங்காள அடக்கு முறைச் சட்டங்களை அகற்றக் கூடிய ஒரு நிலையை வங்காளத்தில் நீங்கள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் உண்மையான மாகாண சுயாட்சி எனில், அது வங்காளத்தின் சுயேச்சையே ஆகும். நேட்டாலில் பொறுப்பாட்சி வளர்ச்சி பெற்று வருவதை நான் பார்க்கிறேன். அது போலவே வங்காளத்திலும் பொறுப்பாட்சி ஏற்பட வேண்டும். நேட்டால் ஒரு சிறிய காலனி என்றாலும், அதற்குச் சுயேச்சையான வாழ்வும், அதற்குச் சொந்தமான ராணுவப் படை முதலியனவும் இருக்கின்றன. ஆனால் வங்காளத்திலோ அல்லது மற்ற மாகாணங்களிலோ அத்தகைய நிலை ஏற்படவேண்டுமென நீங்கள் உத்தேசிக்க வில்லை. அப்போது கூட மத்திய அரசாங்கம்தான் சர்வாதிகார ஆட்சி புரிந்து வரும். ஆனால் எனது சிந்தனையிலுள்ள மாகாண சுயாட்சி அத்தகையதல்ல. அதனால்தான் எனக்கு நீங்கள் உயிர்ப்புள்ள மாகாண சுயாட்சியை அளித்தால், அத்தகைய நிலைமையைப் பரிசீலனை செய்ய நான் தயாராக இருக்கிறேன் என்று கூறினேன். எனினும் மாகாண சுயாட்சி வரப்போவதில்லை என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். அந்த சுயாட்சி வருவதாயின், காலங்கடத்தும் இத்தகைய நடவடிக்கைகளை நாங்கள் பார்க்கும்படி நேர்ந்திராது; நாங்கள் எங்கள் நிர்வாகப் பொறுப்புகளை முற்றிலும் வேறு விதமாக நிறைவேற்றுவோம்.

ஆனால் எனக்கு உண்மையில் மேலும் அதிக வருத்தத்தைக் கொடுப்பது இதுதான்: ஒரே நோக்கத்துடனேயே நாம் எல்லோரும் இங்கே அழைத்து வரப்பட்டிருக்கிறோம். மத்திய அரசாங்

கத்தில் உண்மையான பொறுப்பைப் பற்றி, அதாவது எல்லாப் பொறுப்புகளுடன் கூடிய பெடரேஷனைப் பற்றி விவாதிக்கவும், அதைப்பெறவுமே நான் இங்கே வருவதாகக்கூறி என்னைப் பிரத்தியேகமாக அழைத்து வந்தனர். பெடரேஷன் திட்டத்தில் நிச்சயமாகப் பாதுகாப்புகள் இருக்கலாம். ஆனால் இந்தியாவின் நலன்களுக்காகவே அந்தப் பாதுகாப்புகள் இருக்கவேண்டும். அவசியமான ஒவ்வொரு பாதுகாப்பையும் பற்றி நான் ஆலோசிப்பதாக, இடத்தையோ, காலத்தையோ கவனியாமல் நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். அரசியல் திட்டத்தை நிர்மாணிக்க இத்தனை வருடங்கள் அதாவது மூன்று வருடங்கள் ஆகுமென்று பேராசிரியர் லீஸ்-ஸ்மித்தோ அல்லது வேறு எவரோ கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. இன்னும் பதினெட்டு மாதங்களில் பொறுப்பாட்சி வருமென அவர் நினைக்கிறார். அவ்வளவு காலம் ஆக வேண்டிய அவசியமில்லையென மதியீனனான நான் கருதுகிறேன். மக்கள் மனம் வைத்தால், பார்லிமெண்டு மனம் வைத்தால், மந்திரிகளும் பொது மக்களும் மனம் வைத்தால் இத்தகைய விஷயங்களுக்கு அதிக காலம் ஆகவேண்டிய அவசியமில்லை. ஒரே மனத்துடன் ஈடுபடுவோருக்கு அவை அதிக காலம் ஆவதில்லை என்பதை நான் கண்டிருக்கிறேன். ஆனால் இங்கே ஒரே மனத்துடன் ஈடுபடாமல் ஒவ்வொருவருடைய மனப்போக்கும் ஒவ்வொரு விதமாகவும், பிளவை உண்டாக்கக் கூடிய விதத்திலும் இருக்கிறது. அவ்விதம் இருப்பதால், இந்த விவாதத்தின் பயனாகவும், இந்த மகா நாட்டின் பயனாகவும் மத்திய அரசாங்கத்தில் பொறுப்பாட்சி ஏற்படப் போவதில்லை என்பது மாத்திரமல்ல, உருவான முடிவு எதுவும் கூட ஏற்படப் போவதில்லை. பிரிட்டிஷ் மந்திரிகள், தேச மக்கள், இங்கே வந்துள்ள இந்தியர்கள் ஆகிய எல்லோருடைய அருமையான நேரமும் யாதொரு பயனுமின்றி வீணாவதைக் கண்டு என் மனம் புண் ஆகின்றது, என் மனம் வேதனைக்கு உள்ளாகின்றது. இவ்விதம் பிராண வாயு செலுத்தப்பட்டாலும்கூட பலன் பூஜ்யமாக முடியும் என்றே நான் மிகவும் அஞ்சுகிறேன். எனினும் முடிவில் மாகாண சுயாட்சி நம்மீது திணிக்கப்படும் என்று நான் கூறவில்லை.

அத்தகைய முடிவைக் குறித்து நான் உண்மையில் அஞ்சவில்லை. ஆனால் அதைக் காட்டிலும் ஏதாவது பயங்கரமான முடிவு ஏற்படுமோ என்றே அஞ்சுகிறேன். அதாவது இந்த மகாநாட்டின் மூலம் எத்தகைய பலனும் ஏற்படப்போவதில்லை என்றும்,

ஆனால் இந்தியாவில பயங்கரமான அட்க்குமுறை ஏற்படுமோ என்றுமே அஞ்சுகிறேன்.

**அடக்கு முறையே அரு மருந்து!**

அடக்கு முறையைப் பற்றியும் நான் கவலைப்படவில்லை. அடக்கு முறையினால் நன்மையே உண்டாகும் சரியான சமயத்தில் நாம் அடக்கு முறைக்கு இலக்காகும்படி நேருமாயின், அதையும் இந்த மகாநாட்டின் பலனாக ஏற்பட்ட ஓர் அருமையான முடிவாகவே நான் கருதுவேன். நிலைத்த உறுதியுடன் தன்னுடைய லட்சியத்தை நோக்கிச் சென்று வரும் ஒரு நாட்டிற்கு, அடக்கு முறை காரணமாக ஒரு காலத்திலும் அபாயம் ஏற்பட்டதில்லை. உண்மையில் அடக்கு முறைதான் ஒரு பிராண வாயு மருந்தாகும். எனினும் பேராசிரியர் லீஸ்-ஸ்மித் கொடுத்துள்ள மருந்து அத்தகையதல்ல.

பிரிட்டிஷ் மக்களுடனும், பிரிட்டிஷ் மந்திரிகளுடனும் நான் ஏற்படுத்தியுள்ள மெல்லிய இழை நூல்போன்ற ஒத்துழைப்பு அறுந்து விடக் கூடிய நிலையில் இருக்கிறது. எனவே நான் ஒத்துழையாமை வாதி என்றும், சட்ட மறுப்பு வாதி என்றும் மீண்டும் திட்டவட்டமாகப் பிரகடனம் செய்ய வேண்டும். இந்தியாவின் மீது எத்தனை புகைக் கூடுகள் பறந்தாலும் அல்லது எத்தனை டாங்கிகள் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டாலும், நான் மீண்டும் ஒத்துழையாமைச் செய்தியையும் சட்ட மறுப்புச் செயதியையும் மக்களுக்கு விடுக்க வேண்டும். அவ்விதம் கொண்டு வந்தாலும் யாதொரு பலனும் ஏற்படாது. அவற்றைக் கண்டு இளம் சிறுவர்கள் கூட பீதியடைய மாட்டார்கள். அவர்களைச் சுற்றித் துப்பாக்கித் தோட்டாக்கள் பறந்தால் கூட அவைகள் எல்லாம் பட்டாசு வெடிகள் என நினைத்து அவர்கள் ஆனந்தக் கூத்தாடும்படி அவர்களுக்கு நாங்கள் கற்பித்துள்ளோம். அவர்களுடைய நாட்டின் விடுதலைக்காகத் துன்பத்திற்கு உள்ளாகும்படி நாங்கள் அவர்களுக்குக் கற்பித்துள்ளோம். எனவே அவ்விஷயமாக நான் சோர்வு அடையவில்லை. இங்கே ஒன்றும் கிடைக்கவில்லை என்பதற்காக இந்தியா குழப்பத்தில் ஆழ்ந்துவிடும் என்று நான் நினைக்கவில்லை. காங்கிரஸ் களங்கமில்லாமல் இருக்கும் வரையில், இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரையில் அகிம்சைத் தத்துவத்திற்கு இழுக்கு ஏற்படாமல் இருக்கும்வரையில், இந்தியாவில் யாதொரு விபரீதமும் ஏற்பட்டுவிடாது. இந்த பயங்கரக் குற்றங்களுக்கு காங்கிரஸ்தான் பொறுப்பாளி என்று என்னிடம் அடிக்கடி கூறப்படுகிறது. இந்தக் குற்றச்சாட்டை அறவே மறுக்க இச் சந்தர்ப்பத்தை நான் உபயோகப் படுத்திக் கொள்கிறேன். அதற்கு

மாருக, காங்கிரசின் அகிம்சைக் கொள்கைதான், பயங்கர சக்தி களை இது வரையில் எல்லை மீறிப் போகாமல் தடுத்து வந்திருக் கிறது. இதில் நாங்கள் பூரண வெற்றி அடையாததைக் குறித்து நான் வருந்துகிறேன். என்ருலும், காலம் செல்லச் செல்ல நாங்கள் அதில் வெற்றி பெறுவோமென நம்புகிருேம். இந்த பயங்கரக் குற்றங்கள் இந்தியாவுக்கு விடுதலையை ஈட்டித் தரும் என்பதில்லை. ஸ்ரீ ஜெயகர் விரும்பும் அதே விடுதலையைத் தான் நானும் விரும்பு கிறேன். எனினும் அது மேலும் பூர்ணமாக இருக்க வேண்டும் என்பதே என் விருப்பமாகும். பாமர மக்களுக்குப் பூரண விடுதலை கிடைக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். பயங்கரக் குற்றங்களால் பாமர மக்களுக்கு நன்மை ஏற்படாது என்பதை நான் அறிவேன். பாமர மக்கள் மௌனமாகவும் நிராயுதபாணி களாகவும் இருக்கிருர்கள். எப்படிக் கொல்லுவது என்பது அவர் களுக்குத் தெரியாது. தனிப்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றி நான் பேச வில்லை. ஆனல் இந்தியாவிலுள்ள பாமர மக்கள் அந்தத் திசை யில் ஒரு போதும் சென்றதில்லை.

### உண்மையான பொறுப்பு

பாமர மக்களுக்காக அத்தகைய விடுதலையை விரும்பும் எங்களுக்கு. பயங்கரக் குற்றங்களால் எவ்வித நன்மையும் ஏற்படாது என்பதை நான் அறிவேன். ஒரு புறம் காங்கிரஸ் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தையும், அதனுடைய சட்ட பூர்வமான பயங்கர ஆட்சி யையும் எதிர்த்துப் போராடி வரும். அது போலவே இளைஞர் களின் சட்ட விரோதமான பயங்கரச் செயல்களையும் காங்கிரஸ் எதிர்த்துப் போராடிவரும். எனது ஒத்துழைப்பை அளிக்கவே நான் இங்கு வந்திருக்கிறேன். பேராசிரியர் லீஸ்-ஸ்மித் கூறியது ஒரு புறமிருக்க, இந்தப் பக்கத்தில் சர் தேஜ் பகதூர் சாப்ரூ, ஸ்ரீ ஸ்ரீனிவாச சாஸ்திரி முதலிய மற்றவர்கள் கூறியது ஒரு புற மிருக்க, வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் கூடிய மத்திய அர சாங்க ஆட்சி எனக்குத் திருப்தி அளிக்காது என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அத்தகைய ஆட்சியைப் பற்றியே அவர்கள் பேசினர்கள்.

ஆனல் ராணுவ, நிதி நிர்வாகம் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தில் இருக்கும் பொறுப்பாட்சியையே நான் விரும்பு கிறேன். அந்த அதிகாரத்தை இங்கே நான் பெறப்போவதில்லை என்பதை அறிவேன். அதை அளிக்க ஒரு பிரிட்டிஷ்காரரும் தயா ராக இல்லை என்பதையும் நான் அறிவேன். எனவே நான் திரும் பிச்சென்று, மேலும் துன்பத்தை மேற்கொள்ளுமாறு தேச மக்களை

அழைக்க வேண்டியிருக்கும் என்பதையும் அறிவேன். எனது நிலைமையை முற்றிலும் தெளிவாக்க நான் விரும்பியதாலேயே, இந்த விவாதத்தில் பங்கு எடுத்துக் கொண்டேன். மாகாண சுயாட்சியைப் பற்றித் தனித்த முறையில் நான் நண்பர்களிடம் என்ன சொல்லிக் கொண்டிருந்தேனே அதையே இம் மகாநாட்டில் பகிரங்கமாகக் கூறியிருக்கிறேன். மாகாண சுயாட்சி என்பதற்கு நான் கூறும் பொருள் என்ன என்பதையும், எத்தகைய மாகாண சுயாட்சி எனக்கு உண்மையில் திருப்தி அளிக்கும் என்பதையும் நான் உங்களுக்குக் கூறியிருக்கிறேன். நானும், சர் தேஜ் பகதூர் முதலிய மற்றவர்களின் நிலையில்தான் இருக்கிறேன் என்பதையும் மத்திய அரசாங்கத்தில் பொறுப்பாட்சி இருந்தாலன்றி உண்மையான மாகாண சுயாட்சிக்கு இடமே இல்லை என்பதையும் கூறிக் கொண்டு நான் எனது உரையை முடிக்கிறேன். மாகாண அரசாங்கங்கள் ஆதிக்கம் செலுத்தும் அளவுக்கு பலவீனமான மத்திய அரசாங்கத்தை அமைக்கவும் நீங்கள் தயாராக இல்லை என்பதை நான் அறிவேன். இந்த பெடரல் அரசாங்கம் அமுலுக்கு வரும் போது மத்திய அரசாங்கம் பலவீனமானதாக இருக்கக்கூடாது, பலம் வாய்ந்ததாக இருக்க வேண்டும் என்பதே இந்த மகாநாட்டின் அபிப்பிராயம் என்பதையும் நான் அறிவேன். அந்நியர்களால் நிர்வாகம் செய்யப்படும் பலம் வாய்ந்த ஒரு மத்திய அரசாங்கமும், பலம் வாய்ந்த மாகாண சுயாட்சியும் ஒன்றுக் கொன்று முரணானவை. அதனால்தான், மாகாண சுயாட்சியும், மத்திய அரசாங்கத்தில் பொறுப்பாட்சியும் ஏக காலத்தில் ஏற்பட வேண்டும் என்று நான் கருதுகிறேன். இவ்விஷயமாக நான் திறந்த மனத்தையுடையவனாக இருக்கிறேன். உதாரணமாக வங்காளத்தில் நான் குறிப்பிட்டிருப்பது போன்ற மாகாண சுயாட்சி ஏற்படலாம் என்ற திருப்தி எனக்கு உண்டாகும்படி யாராவது செய்வார்களாயின், நான் அதை இறுகப் பற்றிக் கொள்வேன்.

## 11

## இறுதி வேண்டுகோள்

இன்று மாலை நான் கூறப்போகும் எதுவும் மந்திரி சபையின் தீர்மானத்தை மாற்றிவிட முடியுமென நான் நினைக்கவில்லை. ஒரு வேளை மந்திரி சபையினர் ஏற்கனவேயே ஒரு முடிவுக்கு வந்திருக்கலாம். ஒரு கண்டத்தின் சுதந்திரத்தைப் பற்றிய விஷயங்களை விவாதங்களினாலோ அல்லது சமரசப் பேச்சினாலோகூடத் தீர்மானிக்க முடியாது. சிற்சில சந்தர்ப்பங்களில்தான் சமரசப்

பேச்சுகளுக்கு இடம் உண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களின்றேல், சமரசப் பேச்சுகள் வியர்த்தமாகவே முடியும். இவ்விஷயங்களை யெல்லாம் விவரமாகக் குறிப்பிட நான் விரும்ப வில்லை.

பிரதம மந்திரி அவர்களே, இந்த மகாநாட்டின் ஆரம்பக் கூட்டத்தில் நீங்கள் வாசித்த நிபந்தனைகளுக்கு உட்பட்டே என்னுல் இயன்ற வரையில் பேச விரும்புகிறேன். எனவே இந்த மகாநாட்டில் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை களை யொட்டி முதலாவதாக சில வார்த்தைகள் கூறு கிறேன். ஒவ்வொரு விஷயத்தை யொட்டியும் அது பெரும் பாலோரின் அபிப்பிராயம் என்று பொதுவாக அறிக்கைகளில் குறிப்பிடப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம். சிலர் அதற்கு மாருகவும் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறுர்கள். மாருன அபிப் பிராயம் தெரிவித்துள்ளவர்கள் யார் யார் என்பது குறிப்பிடப் படவில்லை. சாதாரணமாக அனுசரிக்கப்படும் பெரும்பான்மை யோர் விதிக்கு இணங்க யாதொரு முடிவும் செய்யப்படுவதில்லை என்று நான் இந்தியாவில் இருந்தபோது கோள்விப்பட்டேன். இங்கு நான் வந்த பிறகும், பெரும்பான்மை வாக்குகளைக் கொண்டு எத்தகைய தீர்மானமும், தீர்மானங்களும் செய்யப்பட மாட்டா என்றே என்னிடம் கூறப்பட்டது. புகார் கூற வேண்டும் என்ப தற்காக இந்த உண்மையை இங்கே நான் குறிப்பிடவில்லை. ஆனுல் பெரும்பான்மை வாக்குகளை அடிப்படையாகக் கொண்டே இங்கே நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்பது போல் அறிக்கைகள் தயாரிக்கப் பட்டிருக்கின்றன.

நான் இந்த உண்மையைக் குறிப்பிட வேண்டியது அவசிய மாகியிருக்கிறது. ஏனெனில் இந்த அறிக்கைகள் பெரும்பாலான வற்றிற்கும் மாருன கருத்துகளும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. துரதிருஷ்டவசமாக அந்தக் கருத்துகளில் பெரும்பாலானவையும் என்னுடைய கருத்துகளேயாகும். சகாக்களான பிரதிநிதிகளுக்கு மாருக அபிப்பிராயம் தெரிவிப்பது மகிழ்ச்சி அளிக்கக்கூடிய விஷயம் அல்ல. எனினும் எனது மாருன கருத்தை நான் தெரி வித்தாலொழிய நான் காங்கிரசின் உண்மையான பிரதிநிதியாக இருக்க முடியாது என்று தோன்றியது.

நான் இந்த மகாநாட்டின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்பும் மற்றொரு விஷயமும் இருக்கிறது. அதாவது காங்கிரஸ் வெளியிடும் மாருன கருத்துக்குப் பொருள் என்ன என்பதே யாகும். இந்தியாவிலுள்ள ஜனத்தொகையில் 85 சத விகிதத் துக்கு மேற்பட்டவர்களுக்கு, அதாவது இந்தியாவில் வாயில்லாத வர்களும், உழைப்பாளிகளும், அரைப் பட்டினி கிடப்பவர்களு

மான கோடிக்கணக்கான மக்களுக்கு காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனம் என்று கூறி வருகிறதென நான் பெடரல் அரசியல் அமைப்புக் கமிட்டியின் ஆரம்பக் கூட்டங்கள் ஒன்றில் கூறினேன். நான் அதற்கு மேற்கொண்டும் சென்று காங்கிரஸ், மன்னர்களுக்கும், நிலச்சுவான்தார்களுக்கும், கற்றறிந்த வகுப்பினருக்கும்கூட பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது என்று கூறினேன். நான் அவ்விதம் கூறுவதற்காக மன்னர்கள் என்னை மன்னிப்பார்களாக. எனினும் காங்கிரஸ் செய்துள்ள தொண்டைக் கவனிக்கும்போது அதற்கு அவ்வாறு கூற உரிமை உண்டு. அதையே நான் மீண்டும் திருப்பிக் கூற விரும்புகிறேன். இன்று மாலை அதை நான் வற்புறுத்திக் கூறவும் விரும்புகிறேன்.

இந்தக் கூட்டத்தில் உள்ள மற்ற எல்லாக் கட்சிகளும் அந்தந்த இனங்களின் நலன்களுக்காகப் பேசும் பிரதிநிதிகளாக இருக்கிறார்கள். ஆனால் காங்கிரஸ் ஒன்றுதான் இந்தியா முழுமைக்கும் எல்லோருடைய நலன்களையும் பாதுகாக்கும் பிரதிநிதி ஸ்தாபனமாக இருக்கிறது. அது வகுப்பு வாத ஸ்தாபனம் அல்ல. வகுப்பு வாதம் எந்த உருவத்தில் இருந்தாலும் அதற்கு காங்கிரஸ் பரம விரோதியாகும். காங்கிரசுக்கு இன, நிற, சமய வேற்றுமை எதுவும் இல்லை. அதில் எல்லோரும் சேர்ந்து கொள்ளலாம். அக் கொள்கையிலிருந்து காங்கிரஸ் ஒரு போதும் வழுவியதில்லை என்று கூற முடியாமல் இருக்கலாம். நான் அறிந்த வரையில் மனிதர்கள் அடங்கிய ஒரு ஸ்தாபனம் கூட அணுவளவும் அப்பழுக்கின்றி இருந்ததில்லை. எனக்குத் தெரிந்த வரையில், காங்கிரஸ் பல தடவைகளில் தவறியிருக்கிறது. அது மேலும் பல தடவைகளில் தவறியிருப்பதாக அதன் கண்டனவாதிகள் கருதலாம். அது நாளுக்கு நாள் வளர்ந்து வரும் ஒரு ஸ்தாபனம் என்பதையும், இந்தியாவின் மூலை முடுக்கிலுள்ள கிராமங்களில் கூட அதன் செய்தி ஊடுருவியிருக்கிறது என்பதையும், குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் காங்கிரஸ், ஏழு லட்சம் கிராமங்களில் வாழும் மக்களிடையே தனது செல்வாக்கை நிரூபித்திருக்கிறது என்பதையும், காங்கிரசை மிக மிகக் கடுமையாகக் கண்டிப்பவர்கூட ஒப்புக் கொள்வார்.

அப்படியிருந்தும் கூட, இங்கே காங்கிரஸ் பல்வேறு கட்சிகளில் ஒன்றாகவே நடத்தப்பட்டு வருகிறது. எனினும் நான் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அவ்வாறு கருதப்படுவது காங்கிரசுக்கு ஒரு பேரபாயமாகும் என்றும் நான் கருதவில்லை. ஆனால் அது, நாம் என்ன அலுவல் செய்வதற்காக இங்கே கூடியிருக்

கிறேமோ அந்த அலுவலின் நோக்கத்திற்குப் பேரபாயம் விளை விக்கக்கூடியதாகும். காங்கிரசுக்குத்தான் மக்களின் அபிலாஷை களை நிறைவேற்றி அவர்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்யக் கூடிய ஆற்றல் உண்டு என்று, பிரிட்டிஷ் பிரமுகர்கள், பிரிட் டிஷ் மந்திரிகள் ஆகிய எல்லோருடைய மனத்திலும் பதியவைப் பது சாத்தியமாக இருக்கவேண்டும் என்பதே எனது விருப்ப மாகும். காங்கிரஸ், வகுப்புச் சார்பு எதுவுமின்றி இந்தியா முழு வதும் பரந்து விளங்கும் ஒரு தேசீய ஸ்தாபனமாகும். இந்தி யாவிலுள்ள 46 சதவிகித மக்களுக்குத் தாங்கள் பிரதிநிதிகள் என்று இப்போது புகார் கூறியிருக்கும் சிறுபான்மையோருக்கும் காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது. அந்தப் பிரதிநிதிகளின் கூற்று நியாயமற்றது என்பதே எனது அபிப் பிராயமாகும். இந்தச் சிறுபான்மையோர் யாவருக்கும் காங்கி ரசே பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்து வருகிறது.

காங்கிரசின் இந்த நிலை ஒப்புக்கொள்ளப்படுமாயின் இன் றைய நிலைமையில் எவ்வளவு பெரிய மாறுதல் ஏற்படும்! நம் எல்லோருக்கும், இந்த மேஜைக்கு எதிரில் உட்கார்ந்துள்ள ஆங்கி லேயர்களான உங்களுக்கும், இதே மேஜைக்கு எதிரில் உட் கார்ந்து கொண்டுள்ள இந்திய ஆடவர்களும் பெண்களுமான எங்க ளுக்கும் பொதுவான நோக்கம் நிறைவேறுவதற்கு அமைதியான நிலைமை அவசியமாகும். அத்தகைய நிலைமை ஏற்படவேண்டும் என்பதற்காகவே நான் காங்கிரசின் பிரதிநிதித்துவத் தன்மையை வற்புறுத்திக் கூற வேண்டுமென நினைக்கிறேன். நான் அவ்விதம் கூறுவதற்குக் காரணம் இதுதான்: காங்கிரஸ் சக்தி வாய்ந்த ஒரு ஸ்தாபனமாகும். ஒரு போட்டி அரசாங்கத்தை நடத்துவ தாகவோ அல்லது நடத்த விரும்புவதாகவோ காங்கிரஸ்மீது குற்றம் சாட்டப்பட்டு வருகிறது. அந்தக் குற்றச்சாட்டை ஒரு விதத்தில் நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். காங்கிரசின் செயல் முறைகளை நீங்கள் அறிந்துகொள்ள முடியுமாயின், போட்டி அர சாங்கத்தை நடத்தக்கூடிய, மோசமான சூழ்நிலையிலும் படைகள் எதுவுமின்றி அரசாங்கத்தை நடத்துவது சாத்தியம் என்பதைக் காட்டக்கூடிய ஒரு ஸ்தாபனத்தை நீங்கள் வரவேற்பீர்கள்.

ஆனல் அவ்விதம் நீங்கள் செய்யவில்லை. நீங்கள் காங்கிரசை இங்கே அழைத்திருக்கிறீர்கள் என்றாலும், அதை நீங்கள் நம்ப வில்லை. நீங்கள் காங்கிரசை அழைத்திருக்கிறீர்கள் என்றாலும், இந்தியா முழுவதற்கும் அது பிரதிநிதி ஸ்தாபனம் என்பதை நீங்கள் நிராகரிக்கிறீர்கள். அதன் பிரதிநிதித் தன்மையை உல

கத்தின் இந்தக் கோடியில் ஆட்சேபிப்பது சாத்தியமே; அதன் பிரதிநிதித் தன்மையை ருசுப்பிப்பதும் எனக்குச் சாத்தியமல்ல. இருந்தாலும் அதை நான் வற்புறுத்திக் கூறுகின்றேன் எனில், என்மீது மகத்தான பொறுப்பு சுமந்திருக்கிறது என்பதே அதற்குக் காரணமாகும்.

## சமரச வழி

காங்கிரஸ் புரட்சி தத்துவத்தின் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது. சமரசத்தின்மூலம் இந்தியாவின் துன்பங்கள் தீருவதற்குற்ற, எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படும் ஓர் ஒப்பந்தத்திற்கு வருவதற்காகக் கூட்டப்பட்டுள்ள ஒரு மகாநாட்டில் ‘புரட்சி’ என்று மூச்சுக்கூட விடக்கூடாது என்பதை நான் அறிவேன். சமரசத்தின் மூலமும் விவாதத்தின் மூலமும் இந்தியா விடுதலை பெறவேண்டும் என்றும், விவாதத்தின் பயனாக இந்தியாவின் கோரிக்கைக்கு பிரிட்டன் விட்டுக்கொடுக்குமாயின் அது பிரிட்டனுக்கு மகத்தான பெருமையளிப்பதாக இருக்கும் என்றும் இங்கே எழுந்து பேசிய ஒவ்வொருவரும் குறிப்பிட்டார்கள். ஆனால் காங்கிரஸ் அவ்விதம் கருதவில்லை. காங்கிரசுக்கு மாற்று வழியும் இருக்கிறது. அந்த வழி உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதல்ல.

இம் மகாநாட்டில் பலர் பேசியதையும் நான் மிகுந்த கவனத்துடனும் மரியாதையுடனும் கேட்டேன். சட்ட விரோதமான சம்பவங்கள், கலகங்கள், பயங்கரச் செயல்கள் ஆகியவை இந்தியாவை ஆட்கொண்டு விடுமாயின், மிகவும் பயங்கரமான ஆபத்து ஏற்படுமென அவர்கள் கூறினர். சரித்திரத்தை வாசித்திருப்பதாக நான் பாசாங்கு செய்யவில்லை. எனினும் நான் பள்ளிக்கூடச் சிறுவனாக இருக்கும்போது, சரித்திரப் பரீட்சையிலும் நான் தேறவேண்டி யிருந்தது. விடுதலைக்காகப் போராடியவர்களின் உதிரத்தால் சரித்திர நூலின் பக்கங்கள் கறை படிந்துள்ளன என்று நான் வாசித்திருக்கிறேன். நம்பமுடியாத அளவு துன்பத்திற்கு உள்ளாகாமல் தேசங்கள் விடுதலை பெற்றதற்கு ஓர் உதாரணம்கூட இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அரசியல் கொலையாளியின் குத்துவாள், விஷக் கோப்பை, தோட்டாக்கள், ஈட்டிகள் முதலிய எல்லா ஆயுதங்களும் அழிவு முறைகளும் இதுவரை உபயோகிக்கப்பட்டு வந்துள்ளன. விடுதலையையும் சுதந்திரத்தையும் கண்மூடித்தனமாக விரும்பும் நபர்களால் அவை உபயோகிக்கப்பட்டு வந்துள்ளன என்று நான் கருதுகிறேன். எனினும் சரித்திராசிரியர்கள் அவர்களைக் கண்டித்ததில்லை. பயங்கர

வாதிகளின் சார்பில் பேச நான் முன்வரவில்லை. ஸ்ரீ கஜ்னவி தான் பயங்கரவாதிகளையும் கல்கத்தா கார்ப்பொரேஷனையும் பற்றிக் குறிப்பிட்டார். கல்கத்தா கார்ப்பொரேஷனில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைப்பற்றி அவர் குறிப்பிட்டது எனக்கு மனவேதனையை உண்டாக்கியது. மேயரும் கார்ப்பொரேஷனும் தாங்கள் அறியாமல் செய்த தவறுக்காக, அளவுக்கு அதிகமாகவே ஈடு செய்துவிட்டார்கள். அவர்கள் அவ்வாறு ஈடுசெய்ததற்கு கார்ப்பொரேஷனிலுள்ள காங்கிரஸ் உறுப்பினர்களின் தூண்டுதலே காரணமாகும்.

நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ பயங்கர இயக்கத்திற்கு ஆதரவு அளிக்கும் காங்கிரஸ்வாதிகளுக்காக நான் பரிந்து பேசவில்லை. இந்த நிகழ்ச்சியை காங்கிரஸ் அறிந்த உடனேயே அதைச் சீர்படுத்த முற்பட்டது. அந்த நிகழ்ச்சிபற்றிய விவரங்களை அறிவிக்கும்படி காங்கிரஸ் உடனே மேயரைக் கேட்டுக்கொண்டது. கண்ணியமுள்ள மேயரும் உடனடியாகத் தமது தவறை ஒப்புக்கொண்டதுடன், சட்டபூர்வமான எல்லா ஈடுகளும் செய்தார். இவ்விஷயத்தை இந்தக் கூட்டத்தில் நான் அதிகமாக விவரித்துக் கொண்டிருக்கக்கூடாது. கல்கத்தா கார்ப்பொரேஷனால் நடத்தப்படும் நாற்பது பள்ளிக்கூடங்களிலுள்ள குழந்தைகள் ஒரு செய்யுளை ஒப்புவித்ததுபற்றியும் அவர் குறிப்பிட்டார். அவரது பிரசங்கத்திலுள்ள மற்றும் பல தவறான கூற்றுகளை நான் குறிப்பிடமுடியும். ஆனால் அவ்விதம் செய்ய நான் விரும்பவில்லை. இந்த இரண்டு மோசமான தவறுகளையும் நான் கூறுவதற்குக் காரணம், கல்கத்தா கார்ப்பொரேஷனிடத்திலும், சத்தியத்திலும் எனக்குள்ள பெருமதிப்பேயாகும். இந்த மகாநாட்டிற்கு வந்து தங்கள் சார்பில் பேச முடியாதவர்களின் சார்பாகவும் இந்த இரண்டு சம்பவங்களை நான் குறிப்பிட்டுள்ளேன். கல்கத்தா கார்ப்பொரேஷன் பள்ளிக்கூடங்களில் கார்ப்பொரேஷனுக்குத் தெரிந்து அந்தச் செய்யுள் கற்பிக்கப்பட்டதாக நான் ஒரு விநாடி கூட நம்பவில்லை. சென்ற வருடம் பயங்கரமான அந்த நாட்களில் பல சம்பவங்கள் நிகழ்ந்தன. அவற்றிற்காக நாங்கள் வருந்துவதுடன், அவற்றிற்கு ஈடும் செய்துள்ளோம்.

கல்கத்தாவிலுள்ள எங்களுடைய பையன்கள் ஸ்ரீ கஜ்னவி குறிப்பிட்ட அத்தகைய செய்யுள் கற்பிக்கப்பட்டிருப்பார்களாயின், அவர்களுடைய சார்பில் இங்கே நாங்கள் மன்னிப்புக் கோருகிறோம். ஆனால் கார்ப்பொரேஷனுக்குத் தெரிந்தும், கார்ப்பொரேஷனுடைய தூண்டுதலின்மீதும் சிறுவர்கள் அவ்விதம் கற்பிக்கப்

பட்டார்கள் என்பது ருசுவாகவேண்டும் என்பதே என் விருப்ப மாகும். காங்கிரசுக்கு விரோதமாக இத்தகைய குற்றச்சாட்டுகள் எண்ணிக்கையற்ற தடவைகளில் கொண்டுவரப்பட்டிருக்கின்றன; எண்ணிக்கையற்ற தடவைகள் அவை மறுக்கப்பட்டுமிருக்கின்றன. இவற்றையெல்லாம் இச்சந்தர்ப்பத்தில் நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், சுதந்திரத்திற்காக மக்கள் போராடி யிருக்கிறார்கள், தங்கள் உயிரைக் கொடுத்திருக்கிறார்கள், பிறரையும் கொன்றிருக்கிறார்கள், யாரை விரட்ட முயற்சித்தார்களோ அவர்களுடைய கையினல் மரணத்தையும் வரவேற்றிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்கேயாகும்.

பின்னர்தான் காங்கிரஸ் அரங்கிற்கு வந்து, சரித்திரம் அறிந்திராத ஒரு புதிய முறையை உருவாக்கியுள்ளது. அந்த முறைதான் சாத்துவிக சட்டமறுப்பு ஆகும். அந்த முறையைத் தான் காங்கிரஸ் பின்பற்றி வருகிறது. அம் முறையை உலகத்திலுள்ள எந்த அரசாங்கமும் சகித்துக்கொண்டிருக்க முடியாது என்று என்னிடம் கூறப்படுகிறது. பகிரங்கமான கலகத்தையும் எந்த அரசாங்கமும் சகித்துக் கொண்டிருந்ததில்லை. சட்ட மறுப்பை எந்த அரசாங்கமும் சகிக்காமலிருக்கலாம். எனினும் இந்த சக்திகளிடம் அரசாங்கங்கள் அடிபணிந்துதான் தீரவேண்டியிருக்கிறது. இதற்கு முன் பிரிட்டிஷ் அரசாங்கமும் அடிபணிந்துளது; எட்டு வருட சோதனைக்குப் பிறகு டச்சு சர்க்காரும் உண்மைக்கு அடி பணிய நேர்ந்தது; தைரியம் வாய்ந்த தளபதியும், பெரிய ராஜதந்திரியும், மிகவும் கடின சித்தமுள்ளவருமான ஜெனரல் ஸ்மட்ஸ், தங்களுடைய சுயமரியாதையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக மாத்திரமே போராடிய நிரபராதிகளான ஆடவர்களையும், பெண் களையும் மரணத்திற்கு உள்ளாக்கும் எண்ணத்தைக் கண்டு கூட பயத்தால் நடுங்கினர். தாம் ஒரு போதும் விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்று 1908-ல் அவர் பிரதிக்ஞை செய்தார். அவருக்கு அப்போது தளபதி போத்தா பக்க பலமாக இருந்தார். எனினும் 1908-ல் அவர் எதைச் செய்ய மறுத்தாரோ அதையே அவர் 1914-ல் செய்து தீரவேண்டியிருந்தது. சட்டமறுப்பாளர்களை எத்தனையோ சோதனைகளுக்கு உள்ளாக்கியும் கூட அவர் இறுதியில் விட்டுக் கொடுக்கவே நேர்ந்தது. இந்தியாவில் லார்டு செம்ஸ்போர்டும் அவ்விதமே விட்டுக் கொடுக்க வேண்டியிருந்தது. பார்ஸாத்திலும் பார்டோலியிலும் பம்பாய் கவர்னரும் அவ்விதமே செய்ய வேண்டியிருந்தது. பிரதம மந்திரி அவர்களே, உங்களுக்கு ஒன்று கூறுகிறேன். அதாவது இந்தச் சட்ட மறுப்பை எதிர்த்து நிற்கும் காலம் கடந்து விட்டது. அவர்களுடைய முன்னிலையில்

பிரிய வேண்டிய பாதை வந்திருப்பதுதான் எனக்கு மன வேதனை யைக் கொடுக்கின்றது. நம்பிக்கைக்கு இடமில்லாதிருப்பினும், எனது நாட்டிற்காக ஒரு கௌரவமான சமரசம் ஏற்பட எல்லா முயற்சிகளும் செய்து பார்க்க வேண்டுமென்றே நம்புகிறேன். எனது நாட்டிலுள்ள கோடிக்கணக்கான ஆடவர்களையும் பெண் களையும், குழந்தைகளையும் கூட இந்த அக்னிப் பரீட்சைக்கு உட் படுத்தாமல் அவ்விதம் செய்ய முடியுமாயின் அவ்விதமே முயற்சிப் பேன். அவர்களை அத்தகைய போராட்டத்தில் மீண்டும் ஈடு படும்படி செய்வது, எனக்கு மகிழ்ச்சியையும் ஆறுதலையும் அளிக்கக் கூடிய விஷயமாக இருக்க முடியாது. எனினும் மேலும் அக்னிப் பரீட்சையில் ஈடுபடுவது நமது விதியாக இருக்குமாயின், எனக்கு நியாயமென்று தோன்றுவதையே நான் செய்கிறேன், தனக்கு நியாயமென்று தோன்றுவதையே நாடு செய்கிறது என்ற மகத்தான ஆறுதலுடனும் மகிழ்ச்சியுடனுமேயே நான் அந்த அக்னிப் பரீட்சையை அணுகுவேன். அப்போது நாட்டு மக்களுக்கு தாங்கள் பிற உயிர்களை வாங்கவில்லை, தங்களுடைய உயிர்களையே கொடுக்கிறோம் என்ற திருப்தியும், பிரிட்டிஷ் மக்களை நேரடியாகத் துன்பத்திற்கு உள்ளாக்கவில்லை, தாங்களே துன்பத்திற்கு உள்ளா கிறோம் என்ற திருப்தியும் ஏற்படும்.

பேராசிரியர் கில்பர்ட் மர்ரே ஒரு சமயம் என்னிடம் கூறியதை நான் ஒரு போதும் மறக்க முடியாது:

'ஆயிரக்கணக்கான உங்களுடைய தேசமக்கள் துன்பத்திற் குள்ளாவதைக் கண்டு ஆங்கிலேயர்கள் மன வேதனை அடை வதில்லை என்றும், அவர்கள் அவ்வளவு இரக்கமற்றவர்கள் என்றும் ஒரு விநாடி கூட நினைக்காதீர்கள்' என்று அவர் கூறினர். நான் அவ்விதம் நினைக்கவில்லை. நீங்கள் மனவேதனை அடைகிறீர்கள் என்பதை நான் அறிவேன். நான் உங்களுடைய உள்ளங்களைத் தொட விரும்புகிறேன் அல்லவா? அதற்காக உங்கள் மனம் உருகவேண்டும் என்பதே என் விருப்பம். மன தத்துவ ரீதியாக அதுதான் சமரசத்திற்கு உற்ற சந்தர்ப்பமாகும். சமரசப் பேச்சுகளுக்கு எப்போதுமே இடம் உண்டு. சமரசப் பேச்சுகளில் ஈடுபடுவதற்காக நான் இத்தனை மைல்களைக் கடந்து வந்திருக்கிறேன் எனில், அதற்கு காரணம் இதுதான். உங்கள் நாட்டைச் சேர்ந்த லார்டு இர்வின் அவரது அவசரச் சட்டங்களின் மூலம் எங்களைப் போதிய அளவு சோதித்தார்; இந்தியாவிலுள்ள ஆயிரக்கணக்கான ஆடவர்களும், பெண்களும், ஆயிரக்கணக்கான குழந்தைகளும் துன்பத்திற்குள்ளாயினர் என்பதற்கும், அவசரச் சட்டம் இருந்தாலும் இராவிட்டாலும், தடியடி நிகழ்ந்தாலும் நிகழா

விட்டாலும், பொங்கிவரும் காலவெள்ளத்தையும், சுதந்திர வேட்கை கொண்டுள்ள இந்திய ஆடவர்கள், பெண்களின் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளையும் யாராலும் தடுக்க முடியாது என்பதற்கும் அவரிடம் போதிய சாட்சியம் இருக்கிறது என்றே நான் நினைத்தேன்.

**சமரசத்திற்கு வழி இராததேன்?**

இன்னும் சிறிதளவு நம்பிக்கை ஒட்டிக் கொண்டிருக்கும் போதே, காங்கிரசின் கொள்கை என்ன என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன். எனது உயிர் உங்கள் கையில் இருக்கிறது. அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டி, காரியக் கமிட்டி உறுப்பினர்களுடைய உயிரும் உங்கள் கையில் இருக்கிறது. வாயில்லாத இந்தக் கோடிக்கணக்கான மக்களின் உயிர்களும் உங்கள் கையில் தான் இருக்கிறது என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். என்னால் சாத்தியமாக இருக்குமாயின், அந்த உயிர்களைத் தியாகம் செய்ய நான் விரும்பவில்லை. ஒரு வேளை கௌரவமான சமரசம் ஏற்படுவது சாத்தியமாக இருக்குமாயின், அதற்காகச் செய்யும் தியாகம் எதையும் நான் பெரிதாகக் கருதமாட்டேன். இந்தியா உண்மையான சுதந்திரம் அடைந்து தீரவேண்டும் என்பதே காங்கிரசின் அபிலாஷையாகும். இந்த அபிலாஷையை நீங்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்வது என்னால் சாத்தியமாயின், எப்போதும் சமரசம் செய்து கொள்வதில் எனக்குள்ள ஆழ்ந்த விருப்பத்தை நீங்கள் காணலாம்.

ஒரு ரோஜா புஷ்பத்தை நீங்கள் எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அதன் இனிமையான மணம் அப்படியேதான் இருக்கும். நான் விரும்புவது சுதந்திர ரோஜாதான், செயற்கைச் சரக்கு எதுவுமல்ல. உங்களுடைய மனத்திலும், காங்கிரசின் மனத்திலும், இந்த மகாநாட்டுப் பிரதிநிதிகளின் மனத்திலும், பிரிட்டிஷ் மக்களின் மனத்திலும் ஒரே வார்த்தைக்கு ஒரே பொருளாக இருக்குமாயின், பின்னர் சமரசத்திற்கு மிகவும் அதிகமான வாய்ப்பு இருப்பதையும், காங்கிரஸ் எப்போதுமே சமரச மனோபாவத்துடன் இருப்பதையும் நீங்கள் காண்பீர்கள். நீங்களும், நானும், நாமும் உபயோகிக்கும் ஒரே சொல்லையொட்டி ஒரே விதமான மனமும், ஒரே விதமான விளக்கமும், ஒரே விதமான கருத்தும் இராவிடில், சமரசம் ஏற்படுவது சாத்தியமல்ல. நாம் உபயோகிக்கும் ஒரு சொல்லுக்கு நம்மில் ஒவ்வொருவரும் வெவ்வேறான விளக்கம் கொடுப்போமாயின், எப்படி சமரசம் ஏற்படமுடியும்? பிரதம மந்திரி அவர்களே, இந்த

நிலையில் சமரசம் சாத்தியமல்ல என்றும், சமரசம் செய்து கொள்வதற்கு இடமே இல்லை என்றும் மிகப் பணிவுடன் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். சென்ற சில வாரங்களாக நடந்து வரும் விவாதங்கள் சலிப்பை உண்டாக்குபவையாக இருக்கின்றன. நாம் கூறிவரும் சில அடைமொழிகளுக்கு இதுவரையில் நாம் பொதுவான விளக்கம் எதையும் காண முடியவில்லை என்பதைக் கூற நான் மிக மிக வருந்துகிறேன்.

**எங்கள் லட்சியம்**

சென்ற வாரம் ஒரு சந்தேகவாதி எனக்கு வெஸ்ட்மின்ஸ்டர் சட்டத்தை எடுத்துக் காட்டினர். 'டொமினியன் என்பதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கத்தை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?' என்று அவர் கேட்டார். அந்த விளக்கத்தை நான் வாசித்தேன். அதைக் கண்டு நான் குழப்பம் அடையவுமில்லை, அதிர்ச்சி அடையவுமில்லை. 'டொமினியன்' என்ற சொல்லுக்கு அதில் மிகவும் விவரமாக விளக்கம் கொடுக்கப் பட்டிருந்தது. அது ஒரு பொதுவான விளக்கம் அல்ல, குறிப்பிட்ட விளக்கமேயாகும். ஆஸ்திரேலியா, தென்னுப்பிரிக்கா, கானடா முதல் சுயேச்சை ராஜ்யமான அயர்லாந்து ஈருக எல்லாம் 'டொமினியன்' என்ற சொல்லில் அடங்கியுள்ளன என்று அந்த விளக்கம் கூறியது. அந்த ஜாபிதாவில் எகிப்தை நான் காணவில்லை என்றே நினைக்கிறேன். பின்னர், 'உங்களுடைய டொமினியன் என்பதற்கு என்ன பொருள் என்பதை நீங்கள் காண்கிறீர்களா?' என்று அவர் கேட்டார். அவரது கேள்வி என் மனத்தில் எத்தகைய உணர்ச்சியையும் உண்டாக்கவில்லை. என்னுடைய டொமினியன் என்பதற்கோ அல்லது பூரண சுயேச்சை என்பதற்கோ என்ன பொருள் என்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அவர் கூறியது, எனக்கு ஒரு விதத்தில் ஆறுதலாகவே இருந்தது.

ஏனெனில் 'டொமினியன்' என்ற சொல்லைக் குறித்து நான் இப்போது சச்சரவிட வேண்டியதில்லை அல்லவா? அதற்கும் எனக்கும் இனி சம்பந்த இல்லை. நான் விரும்புவது பூரண சுயேச்சையே ஆகும். இருந்தாலும் கூட, "ஆம், நீங்கள் பூரண சுயேச்சை பெற முடியும். ஆனல் பூரண சுயேச்சை என்பதற்கு என்ன பொருள்?" என்று ஏராளமான ஆங்கிலேயர்கள் கேட்கின்றனர். எனவே மீண்டும் நாம் கூறும் விளக்கங்கள் வெவ்வேருக இருக்கின்றன.

உங்களுடைய பெரிய ராஜதந்திரிகளில் ஒருவர் என்னுடன் விவாதித்துக் கொண்டிருந்தார். "பூரண சுயேச்சை என்று நீங்கள் கூறுவதன் அர்த்தம் உண்மையிலேயே எனக்குத் தெரிய

வில்லை'' என்று அவர் கூறினர். அவருக்கு அது தெரிந்திருக்க வேண்டும்; ஆனல் அவருக்குத் தெரியவில்லை. ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் நான் ஒரு பங்காளியாக இருக்க முடியாது'' என்று அவரிடம் நான் கூறியபோது, ''நீங்கள் மேற்கொண்டுள்ள நிலைக்கு தர்க்கரீதியாக அது முடியாத காரியம்தான்'' என்ருர் அவர். ''சாம்ராஜ்யத்தில் ஒரு பங்காளியாக வரவே நான் விரும்புகிறேன். அவ்விதம் கட்டாயப்படுத்தினல் நான் பங்காளியாக இருப்பேன் என்பது அதற்கு அர்த்தமல்ல. பிரிட்டனுடன், பிரிட்டிஷ் மக்களுடன் ஒரு பங்காளியாக இருக்கவே நான் விரும்புகிறேன். எனினும் உங்களுடைய மக்களைப்போல் அதே சுதந்திரம் எனக்கும் இருக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இந்தியாவின் நன்மைக்காக மாத்திரமல்ல, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் பரஸ்பர நன்மைக்காக மாத்திரமல்ல, உலகத்தின் நன்மைக்காகவே நான் அத்தகைய உறவை நாட விரும்புகிறேன். மகத்தான சுமை உலகத்தை அணு அணுவாக நசுக்கி வருகிறது. உலகத்தை நசுக்கிவரும் அந்தச் சுமையை அகற்றவே நான் இந்தப் பங்காளித்துவ உறவை நாடுகிறேன்'', என்று நான் பதில் அளித்தேன்.

பத்து அல்லது பன்னிரண்டு நாட்களுக்குமுன் இது நிகழ்ந்தது. மற்ருெரு ஆங்கிலேயரிடமிருந்தும் எனக்கு ஒரு குறிப்பு வந்தது. இது விசித்திரமாகத் தோன்றலாம். அவரை நீங்கள் அறிவீர்கள். அவரிடம் உங்களுக்கு மதிப்பும் உண்டு. அவர் பல விஷயங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றிற்கிடையே, ''மனித வர்க்கத்தின் சமாதானமும் சந்தோஷமும் நமது நட்பையே பொறுத்திருக்கிறது என்பது எனது ஆழ்ந்த நம்பிக்கையாகும்'' என்று அவர் எழுதியுள்ளார். இதை நான் புரிந்துகொள்ள மாட்டேனே என்பதற்காக, ''உங்கள் நாட்டு மக்களுக்கும் எனது நாட்டு மக்களுக்கும் உள்ள நட்பையே பொறுத்திருக்கிறது'' என்று விளக்கியுள்ளார். மேலும் அவர் கூறியிருப்பதைக்கூட உங்களுக்கு நான் வாசித்துக் காட்டவேண்டும்; ''எல்லா இந்தியர்களிடையேயும் உங்கள் ஒருவரைத்தான் உண்மையான ஆங்கிலேயர்கள் விரும்புகின்றனர், புரிந்துகொள்கின்றனர்.''

என்னை முகஸ்துதி செய்வதற்காக அவர் சொற்களை வீணுக உபயோகிக்கவில்லை. என்னைத் தோத்திரம் செய்யவேண்டும் என்பதற்காகவே இறுதியில் அவர் அவ்விதம் கூறி யிருக்கிருரென நான் நினைக்கவில்லை. அவற்றையெல்லாம் உங்களுடன் நான் பகிர்ந்துகொள்ள முடியுமாயின், அந்த வாக்கியத்தின் கருத்தை நீங்கள் நன்கு அறிந்து கொள்வீர்கள். ஆனல் உங்க

ளுக்கு ஒன்று கூறுகிறேன். அந்தக் கடைசி வாக்கியத்தை அவர் எழுதுகையில், சொந்த முறையில் என்னை மாத்திரம் மனத்திற் கொண்டு அவர் எழுதவில்லை. சொந்த முறையில் எந்த ஒரு ஆங்கிலேயரும் என்னைப் பொருட்படுத்தமாட்டார் என்பதை நான் அறிவேன். எனினும் நான் ஒரு லட்சியத்தின் பிரதிநிதியாக இருப்பதாலேயே சில ஆங்கிலேயர்கள் என்னைப் பொருட்படுத்து கிறார்கள். ஒரு தேசத்தின் பிரதிநிதியாக, ஒரு ஸ்தாபனத்தின் பிரதிநிதியாக இருக்கவே நான் முயற்சிக்கிறேன். அதனால்தான் அவர் அவ்வாறு கூறுகிறார்.

அந்தச் செயல் முறையை அடிப்படையாகக் கொள்வது சாத்தியமாயின் சமரசத்திற்கு தாராளமாக இடம் இருக்கிறது. நான் மன்றாடிக் கேட்பது நட்பு உறவுதான். அடிமைகளின் எஜமானரையும், கொடுங்கோலரையும் கடலில் தள்ளிவிடுவது என் வேலையல்ல. அவ்விதம் செய்வதை எனது தத்துவமானது தடுக்கின்றது. இன்று அந்த தத்துவத்தை காங்கிரஸ் என்னைப்போல் ஒரு சித்தாந்தமாக அல்ல, ஒரு கொள்கையாக ஒப்புக்கொண்டிருக்கிறது. 35 கோடி ஜனத்தொகையுள்ள ஒரு நாட்டுக்கு அதுதான் சரியானது, சிறந்தது என்று காங்கிரஸ் நம்புகிறது.

### எங்களுடைய ஆயுதம்

35 கோடி மக்கள் உள்ள ஒரு நாட்டுக்கு கொலையாளியின் குத்துவாள் தேவையில்லை; விஷம் நிறைந்த கிண்ணம் தேவையில்லை; பட்டாக்கத்தியோ, ஈட்டியோ அல்லது தோட்டாவோ தேவையுமில்லை. அதற்குத் தேவையானது மன உறுதிதான்; 'முடியாது' என்று சொல்லும் ஆற்றல்தான். 'முடியாது' என்று சொல்ல அந்த நாடு இன்று கற்றுக்கொண்டு வருகிறது.

ஆனால் அந்த நாடு இப்போது செய்வது என்ன? ஆங்கிலேயர்களையெல்லாம் வேலையிலிருந்து உடனடியாக விலக்கிவிட வேண்டும் என்கிறதா? இல்லை. ஆங்கிலேயர்களின் மனதை மாற்றுவதே இன்று அதன் லட்சியமாகும். இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இடையேயுள்ள உறவை அறுத்துவிட வேண்டுமென நான் விரும்பவில்லை. அந்த உறவை மாற்றியமைக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். அந்த அடிமைத்தனத்தை எனது நாட்டின் பூரண சுதந்திரமாக மாற்றவே நான் விரும்புகிறேன். அதைப் பூரண சுதந்திரமென்று அழையுங்கள், அல்லது உங்கள் விருப்பப்படி வேறு எப்படி வேண்டுமென்றாலும் அழையுங்கள். அந்த வார்த்தையைக் குறித்து நான் சச்சரவிட மாட்டேன். அந்த

ஸ்தானத்தில் வேறு வார்த்தையை ஏற்றுக்கொண்டதற்காக என் நாட்டினர் என்னுடன் சச்சரவிட்டாலும், அந்த எதிர்ப்பைத் தாங்கி நிற்கும் சக்தி எனக்கு உண்டு. எனினும் நீங்கள் கூறும் வார்த்தையில் அடங்கியுள்ள பொருளும் அந்த வார்த்தையின் பொருளும் ஒன்ருக இருக்கவேண்டும். அதனுல்தான், தற்போது குறிப்பிடப்பட்டுள்ள பாதுகாப்புகள் முற்றிலும் அதிருப்திகரமாக இருக்கின்றன என்று நான் பல தடவைகளில் வற்புறுத்திக் கூறியிருக்கிறேன். அப் பாதுகாப்புகள் இந்தியாவின் நலனுக்கு உகந்தவை அல்ல.

வர்த்தக, கைத்தொழில் பெடரேஷனைச் சேர்ந்த மூன்று நிபுணர்கள், தாங்கள் நிபுணர்கள் என்ற முறையில் தங்களுடைய சொந்த அனுபவங்களை எடுத்துக் கூறினர். அவர்களில் ஒவ்வொருவர் கூறியதும் ஒவ்வொருவிதமாக இருந்தது. நாட்டின் செல்வத்தில் 30 சத விகிதம் மீட்க முடியாத விதத்தில் அடமானம் வைக்கப்பட்டிருக்கும்போது, நிர்வாகப் பிரச்னைகளைச் சமாளிப்பது பொறுப்புள்ள மந்திரிகளுக்கு எவ்வளவு அசாத்தியமாக இருக்கிறது என்பதை அவர்கள் தங்களுடைய அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு எடுத்துக்கூறினர். இந்தியாவைப் பொறுத்தமட்டில், நிதி சம்பந்தமான இந்தப் பாதுகாப்புகளுக்கு என்ன பொருள் என்பதை அவர்கள் தங்களுடைய அறிவின் மிகுதியால் என்னைக் காட்டிலும் நன்ருக எடுத்துக் காட்டியுள்ளனர். இந்தியாவை முற்றிலும் செயலற்றுப் போகும்படி இறுக்குவதே அந்தப் பாதுகாப்புகளின் பொருளாகும். நிதிப் பாதுகாப்புகளைப்பற்றி இந்த மகாநாட்டில் அவர்கள் விவாதித்திருக்கிருர்கள். தற்காப்புப் பிரச்னையும், ராணுவப் பிரச்னையும் அந்தப் பாதுகாப்புகளில் அடங்கியவையே. தற்போது சமர்ப்பிக்கப்பட்டுள்ள பாதுகாப்புகள் அதிருப்திகரமாக இருக்கின்றன என்று நான் கூறும் அதே சமயத்தில், பாதுகாப்புகள் அளிப்பதாகவும், பாதுகாப்புகளை அங்கீகரிப்பதாகவும் காங்கிரஸ் உறுதிமொழி கூறியிருக்கிறது என்று நான் மீண்டும் திருப்பிச் சொல்லத் தயங்கவில்லை. எனினும் அந்தப் பாதுகாப்புகள் இந்தியாவின் நலனுக்கு உகந்தவை என்பது நிரூபிக்கப்பட வேண்டும்.

பெடரல் அரசியல் அமைப்புக் கமிட்டிக் கூட்டம் ஒன்றில் நான் ஒரு விஷயத்தை விவரமாக ஒப்புக்கொள்ளத் தயங்கவில்லை. அதாவது அந்தப் பாதுகாப்புகள் பிரிட்டனின் நலனுக்கும் உகந்தவையாக இருக்க வேண்டுமென நான் கூறினேன். இந்தியாவுக்கு மாத்திரம் பலனளிக்கக்கூடிய, பிரிட்டனின் உண்மையான நலன்களுக்கு முரணை பாதுகாப்புகளை நான்

விரும்பவில்லை. இந்தியாவின் கற்பனையான நலன்களையும், பிரிட்டனின் கற்பனையான நலன்களையும் தியாகம் செய்யத்தான் வேண்டும். அது போலவே சட்டத்திற்கு விரோதமான இந்தியாவின் நலன்களையும், சட்டத்திற்கு விரோதமான பிரிட்டனின் நலன்களையும் தியாகம் செய்துவிட வேண்டும். எனவே அந்த ஒரே வார்த்தைக்கு நாம் எல்லோரும் ஒரே பொருளே கொள்வோமாயின், இந்த மகாநாட்டில் பேசிய ஸ்ரீ ஜெயகர், சர் தேஜ் பகதூர் சாப்ரு ஆகிய மற்றப் பிரமுகர்களும் கூறியதை நான் ஒப்புக்கொள்வேன்.

இவ்வளவு தூரம் கடினமாக உழைத்து முயற்சி செய்த பிறகு நாம் கணிசமான அளவு ஓர் ஒப்பந்தத்திற்கு வந்திருக்கிறோம் என்று நான் அவர்கள் எல்லோருடனும் சேர்ந்து ஒப்புக்கொள் வேன். ஆனால் என் மனச்சோர்வுக்கும், என் மன வருத்தத்துக்கும் காரணம் என்னவெனில், அதே வார்த்தைகளில் அதே பொருளை நான் காணவில்லை என்பதுதான். நான் குறிப்பிடும் பாதுகாப்பு களின் பொருளுக்கும், ஸ்ரீ ஜெயகர் கூறும் பாதுகாப்புகளின் பொரு ளுக்கும் வேற்றுமை இருக்கிறதென நான் மிகவும் அஞ்சுகிறேன். அதுபோலவே நானும் ஸ்ரீ ஜெயகரும் கூறும் அர்த்தத்திற்கும், உதாரணமாக சர் சாமுவேல் ஹோர் கூறும் அர்த்தத்திற்கும் ஒரு வேளை வேற்றுமை இருக்கலாம். இந்தப் பிரச்னையைத் திட்ட வட்டமாகத் தீர்க்கும் கட்டத்திற்கு நாம் உண்மையில் ஒருபோதும் வரவேயில்லை. அப்பிரச்னையை உறுதியுடன் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வரவே நான் இரவு பகலாகப் பெருமுயற்சி செய்து வருகிறேன். நாம் இப்பிரச்னையைத் தீர்க்க மேலும் மேலும் ஏன் நெருங்கி வரவில்லை? சொல்வன்மையிலும், அலங்காரப் பேச்சிலும், விவாதத்திலும், விவாதத்தில் வெற்றிபெறும் போட்டியிலும் நாம் ஏன் காலத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறோம்? என் சொந்தக் குரலைக் கேட்கும் ஆசை எனக்கு இல்லை என்பதைக் கடவுளே அறிவார். எத்தகைய விவாதத்திலும் பங்கு எடுத்துக்கொள்ளும் ஆசையும் எனக்கு இல்லை என்பதைக் கடவுளே அறிவார். சுதந் திரமானது, கடினமான சாதனங்களால் உருவானது என்பதை நான் அறிவேன். இந்தியாவின் சுதந்திரம் மேலும் அதிகக் கடின மான சாதனங்களால் உருவானது என்பதையும் நான் அறிவேன். எந்த ராஜதந்திரியையும் திகைக்க வைக்கக் கூடிய பிரச்னைகள் எங்களிடையே இருக்கின்றன. மற்ற நாடுகள் தீர்க்க வேண்டி யிராத பிரச்னைகளும் எங்களிடையே இருக்கின்றன. எனினும் அந்தப் பிரச்னைகள் என்னைத் திகைக்க வைக்கவில்லை. இந்தியா வின் பண்பாட்டிலும் சூழ் நிலையிலும் வளர்ந்தவர்களை அவை

திகைக்க வைக்க முடியா. அந்தப் பிரச்னைகள் எங்களிடையே இருக்கத்தான் செய்கின்றன. நாங்கள் கொடிய பிளேக் நோயைச் சமாளிக்க வேண்டியிருப்பதைப் போலவே, மலேரியா நோய்ப் பிரச்னையைச் சமாளிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். உங்களைப் போலன்றி நாங்கள் விஷப் பாம்புகள், தேள்கள், குரங்குகள், புலிகள், சிங்கங்கள் பிரச்னையையும் சமாளிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். ஏனெனில், எங்களிடையே அத்தகைய சூழ்நிலை உருவாக்கப்பட்டிருக்கிறது.

அப்பிரச்னைகள் எங்களைத் திகைக்க வைக்கவில்லை. விஷப் பூச்சிகள் முதலிய பல்வேறு பிராணிகளின் கொடுமைகளை நாங்கள் எப்படியோ சமாளித்துக் கொண்டு பிழைத்திருக்கிறோம். அது போலவே இந்தப் பிரச்னைகளையும் நாங்கள் சமாளிப்போம்; இந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான ஒரு வழியைக் கண்டுபிடிப்போம். ஆனால் இன்று நீங்களும் நாங்களும் ஒரு வட்ட மேஜையைச் சுற்றி ஒன்று சேர்ந்திருக்கிறோம். செயல்படக் கூடிய ஒரு பொதுவான திட்டத்தைக் கண்டு பிடிக்க நாங்கள் விரும்புகிறோம்.

காங்கிரசின் சார்பில் நான் இங்கே விடுத்த கோரிக்கையை நான் எள்ளளவும் குறைத்துக் கொள்ளப் போவதில்லை. அந்தக் கோரிக்கையை இப்போது நான் மீண்டும் திருப்பிக் கூற உத்தேசிக்கவில்லை. பெடரல் அரசியல் அமைப்புக் கமிட்டியில் நான் செய்த பிரசங்கங்களிலிருந்து ஒரு வார்த்தையைக் கூட நான் வாபஸ் பெறப் போவதில்லை. இருந்தாலும் நான் சமரசம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறேன் என்பதைத் தயவு செய்து நம்புங்கள். பிரிட்டிஷாரின் யுக்தியினால் தயாரிக்கப்படும் ஒவ்வொரு திட்டத்தையும் பரிசீலனை செய்யவே நான் இங்கே இருக்கிறேன். திரு. சாஸ்திரி, சர் தேஜ் பகதூர் சாப்ரு, திரு. ஜெயகர், திரு. ஜின்னா, சர் முகமது ஷாபி ஆகிய மற்றும் பலரைப் போன்ற அரசியல் திட்ட நிபுணர்களின் யுக்தியினால் தயாரிக்கப்படும் ஒவ்வொரு திட்டத்தையும் பரிசீலனை செய்யவே நான் இங்கே இருக்கிறேன்.

இந்தப் பிரச்னைகளைக் கண்டு நான் கலங்க மாட்டேன். நான் எவ்வளவு காலத்திற்குத் தேவைப் படுகிறேனோ அவ்வளவு காலம் வரையில் இங்கேயே இருப்பேன். ஏனெனில் மீண்டும் சட்ட மறுப்பை ஆரம்பிக்க நான் விரும்பவில்லை. டில்லியில் ஏற்பட்ட தற்காலிகமான சமரசத்தை நிரந்தரமான சமாதான உடன்படிக்கையாக மாற்றவே நான் விரும்புகிறேன். 62 ஆண்டுகள் கடந்த ஒரு மெலிந்த மனிதனுக்கு, கடவுளுக்குப் பயந்

தாவது ஓர் அற்ப சந்தர்ப்பம் கொடுங்கள். அவருக்கும், அவரைப் பிரதிநிதியாகக் கொண்ட ஸ்தாபனத்திற்கும் ஒரு சிறிய மூலையில் இடம் கொடுங்கள். நீங்கள் என்னிடம் நம்பிக்கை வைப்பது போல் தோன்றலாமெனினும், அந்த ஸ்தாபனத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லை. நான் வேறு, ஸ்தாபனம் வேறு என்று ஒரு விநாடி கூட வேற்றுமை பாராட்டாதீர்கள். அந்த ஸ்தாபன மாகிய சமுத்திரத்தில் நான் ஒரு துளியே ஆவேன். அந்த ஸ்தா பனத்தைச் சேர்ந்த நான் அதைக் காட்டிலும் பெரியவனல்ல, அதைக்காட்டிலும் நான் எவ்வளவோ சிறியவன். எனக்கு நீங்கள் ஓர் இடம் கொடுப்பீர்களாயின், நீங்கள் என்னிடம் நம் பிக்கை வைப்பீர்களாயின், காங்கிரசையும் நம்பும் படி உங்களை நான் அழைக்கிறேன். இல்லாவிடில், என்னிடத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கை, ஒடிந்த ஒரு நாணல் குச்சியைப்போல் பலனற்றதாகும். காங்கிரசிடமிருந்து நான் பெற்றுள்ள அதிகாரத் தைத் தவிர எனக்கு வேறு எவ்வித அதிகாரமும் இல்லை. காங் கிரசை நீங்கள் பயன்படுத்திக் கொள்வீர்களாயின், நீங்கள் பின்னர் பயங்கர ஆட்சிக்கு விடை கொடுத்து அனுப்பி விடுவீர்கள். பின்னர் உங்களுக்கு பயங்கர ஆட்சி முறை தேவையாக இராது. ஒழுங்கு படுத்தப்பட்ட, கட்டுக் கோப்பான உங்களுடைய பயங்கர ஆட்சிமுறையைக் கொண்டு நீங்கள் இன்று பயங்கர வாதிகளின் கூட்டத்தை எதிர்த்துப் போராட வேண்டிய வர்களாக இருக்கிறீர்கள். ஏனெனில் நீங்கள் உண்மைகளைக் கவனியாமல் கண்மூடிகளாக இருக்கிறீர்கள். சுவரில் தெளிவாக எழுதி யிருப்பதையும் நீங்கள் கவனிக்க வில்லை. இந்தப் பயங்கர வாதிகள் தங்களுடைய உதிரத்தினால் எழுதி வருகிறார்கள் என் பதை நீங்கள் கவனிக்க மாட்டீர்களா? நாங்கள் கோதுமை ரொட்டியை விரும்பவில்லை, சுதந்திரமாகிற ரொட்டியையே விரும்பு கிறோம் என்பதை நீங்கள் கவனிக்க மாட்டீர்களா? அந்த சுதந் திரமின்றேல் தங்களுக்கோ அல்லது நாட்டிற்கோ அமைதியைக் கொடுப்பதில்லை என்று ஆயிரக் கணக்கானவர்கள் பிரதிக்ஞை செய்திருக்கின்றனர்.

எனவே சுவரில் தெளிவாக எழுதப்பட்டிருக்கும் அதை வாசிக் கும்படி உங்களை நான் வற்புறுத்துகிறேன். பொறுமைக்குப் பெயர் போன ஒரு தேச மக்களின் பொறுமையைச் சோதிக்க வேண்டா மென உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன். சாதுவான ஹிந்துக் களைப் பற்றி நாம் பேசுகிறோம். நல்ல முறையிலோ அல்லது தீய முறையிலோ ஹிந்துக்களுடன் தொடர்பு கொண்டதன் மூலம் முஸ்லிம்களும் சாதுவாகியிருக்கிறார்கள். முஸ்லிம்களைப் பற்றிக்

குறிப்பிடும்போது, திகைக்க வைக்கும் சிறுபான்மையோர் பிரச்னை பற்றியும் நான் குறிப்பிட வேண்டியவனுக இருக்கிறேன். இவ்விஷயமாக இந்தியாவில் கூறியதையே நான் திருப்பிக் கூறு கிறேன். நான் கூறிய அந்த வார்த்தைகளை நான் மறந்து விட வில்லை. அதாவது சிறுபான்மையோர் பிரச்னையைத் தீர்க்கா விடில், இந்தியாவுக்கு சுயராஜ்யம் இல்லை, இந்தியாவுக்கு விடு தலை இல்லை. அப்படி இருந்தும் கூட, இந்தப் பிரச்னைக்கு ஒரு வேளை ஏதாவது ஒரு தீர்வு காணலாம் என்ற நம்பிக்கையுட னேயே நான் இங்கு வந்தேன். சிறுபான்மையோர் பிரச்னையை யொட்டி என்ருவது உண்மையான, நிலையான ஒரு தீர்வு காண லாம் என்பதில் நான் நம்பிக்கை இழந்து விடவில்லை. எனினும் நான் வேருரிடத்தில் கூறியதையே மீண்டும் இங்கு திருப்பிக் கூறுகிறேன். அதாவது அந்நிய ஆட்சி என்ற ஆப்பு ஒரு சமூ கத்துக்கும் மற்றொரு சமூகத்துக்கும் இடையே, ஒரு பிரிவின ருக்கும் மற்றொரு பிரிவினருக்கும் இடையே பிளவை உண் டாக்கி வரும் வரையில் அந்தச் சமூகங்களுக்கிடையே உண்மை யான, நிரந்தரமான தீர்வு காண முடியாது, நிரந்தரமான நட்பு இருக்க முடியாது.

அவ்விதமின்றி தீர்வு ஏற்பட்டாலும், அது ஏட்டளவில் ஒரு தீர்வாக இருக்கும். எனினும் அந்நியர் ஆட்சியாகிற ஆப்பை அகற்றி விட்டால் சமூகங்களிடையே பரஸ்பரமுள்ள தொடர்புகள், ஆசாபாசங்கள், ஒரே நாட்டில் பிறந்தோம் என்ற அறிவு ஆகி யவை கவைக்குதவாதவையாகி விடுமென நீங்கள் எண்ணு கிறீர்களா ?

பிரிட்டிஷாரின் ஆட்சி இந்தியாவில் இராதபோது, அங்கே ஒரு ஆங்கிலேயருடைய முகம் கூட தென்படாமல் இருந்த காலத்தில், ஹிந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர்களும் ஒரு வருக்கொருவர் எப்போதும் சண்டை போட்டுக் கொண்டிருந் தார்களா ? அக்காலத்தில் அவர்கள் முற்றிலும் அமைதியாக வாழ்ந்து வந்தார்கள் என்பதை, ஹிந்து வரலாற்று ஆசிரியர்களும், முஸ்லிம் வரலாற்று ஆசிரியர்களும் ஆதார பூர்வமாகக் குறிப்பிட் டிருப்பதை நாம் காண்கிருேம். கிராமங்களிலுள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இன்று கூட சச்சரவிட்டுக் கொள்வதில்லை. அந்த நாட்களில் அவர்கள் சிறிதும் சச்சரவிட்டுக் கொண்டதாகத் தெரிய வில்லை.

காலஞ் சென்ற மௌலானா முகமது அலி ஒரு வரலாற்று ஆசிரியரே ஆவார். அவர் என்னிடம் அடிக்கடி இவ்வாறு கூறுவது வழக்கம்:

"அல்லா எனக்கு ஆயுளைக் கொடுப்பாராயின், இந்தியாவில் முஸ்லிம் ஆட்சியைப் பற்றி நான் சரித்திர நூல் எழுதப் போகிறேன். அப்போது பிரிட்டிஷ் சரித்திராசிரியர்கள் வர்ணித்துள்ளபடி ஔரங்கசீப் அவ்வளவு வெறுக்கத்தக்கவர் அல்ல என்பதையும், பிரிட்டிஷ் சரித்திர நூல்களில் குறிப்பிட்டுள்ளவாறு இந்தியாவில் மொகலாயர் ஆட்சி அவ்வளவு மோசமாக இருந்ததில்லை என்பதையும் பிரிட்டிஷார் பாதுகாத்து வைத்துள்ள கைச்சாற்றுப் பத்திரங்களின் மூலம் நான் காட்டுவேன்."

அவர் கடவுளைத்தான் அல்லா என்று குறிப்பிடுவது வழக்கம். ஹிந்து வரலாற்று ஆசிரியர்களும் அவ்விதமே எழுதியிருக்கிறார்கள். சமூகங்களிடையே ஏற்பட்டுள்ள இந்த சச்சரவு பழைய சச்சரவு அல்ல. இந்த வெட்கக்கேடு ஆரம்பமானதிலிருந்தே, அதாவது பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் ஆரம்பமானதிலிருந்தே இந்த சச்சரவும் ஆரம்பமாகியது என்று கூற நான் துணிகிறேன். பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் உள்ள துரதிர்ஷ்டவசமான, செயற்கையான, இயற்கைக்கு விரோதமான இந்தத் தொடர்பு இயற்கையான ஒரு தொடர்பாக மாறிய உடனேயே, தன்னிச்சையாக ஏற்படும் பங்காளித்துவ உறவை இரு சாராரில் எவரும் தங்கள் விருப்பப்படி கைவிட்டு விடலாம் என்ற நிலை ஏற்படும் போது, ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ—இந்தியர்கள், கிறிஸ்தவர்கள், தீண்டத்தகாதவர்கள் ஆகிய எல்லோரும் ஒரே மனிதராக ஒருமித்து வாழ்வதை நீங்கள் காண்பீர்கள்.

இந்திய மன்னர்களைப்பற்றி இன்றிரவு நான் அதிகமாக எதுவும் கூற உத்தேசிக்கவில்லை. பெடரேஷனில் சேர்ந்துகொள்ள தாங்கள் கூறும் நிபந்தனைகள் என்ன என்பதைக் குறிப்பிட மன்னர்களுக்கு உரிமை உண்டு. இந்தியாவின் மற்றப் பாகங்களில் வாழ்வோருக்காகப் பாதையை எளிதாக்க வேண்டுமென அவர்களை நான் வேண்டிக்கொண்டிருக்கிறேன். எனவே அவர்கள் சாதகமான முறையிலும், மனப்பூர்வமாகவும் ஆலோசிப்பதற்காக நான் இந்த யோசனைகளை மாத்திரமே கூறமுடியும். சில மூலாதாரமான உரிமைகள் இந்தியாவின் பொதுவான சொத்தாகும் என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டால், அந்த நிலையை அவர்கள் ஒப்புக்கொண்டு அந்த உரிமைகளை கோர்ட்டாரின் சோதனைக்கும்

விட அனுமதித்தால், அவர்களுடைய பிரஜைகளின் சார்பில் அவர்கள் (மன்னர்) பிரதிநிதித்துவம் அளிக்கவும் இணங்கினல், அவர்கள் தங்களுடைய பிரஜைகளைத் திருப்திப்படுத்த வெகு தூரம் சென்றவர்களாவர். அத்தகைய கோர்ட்டும் அவர்களுடைய சிருஷ்டியாகவே இருக்கும். மன்னர்கள் அவ்வாறு செய்வார்களாயின், தாங்கள் ஜனநாயக உணர்ச்சி காரணமாகவே அவ்விதம் செய்திருப்பதாக உலகத்திற்கும், இந்தியா முழுவதற்கும் எடுத்துக்காட்டுவதாக இருக்கும்; கலப்பற்ற எதேச்சாதிகாரிகளாக இருக்கத் தாங்கள் விரும்பவில்லை என்பதையும், ஆனல் பிரிட்டனிலுள்ள ஜார்ஜ் மன்னரைப்போல் தாங்களும் பார்லிமெண்டு முறைக்கு உட்பட்ட மன்னராக இருக்கவே விரும்புவதையும் எடுத்துக் காட்டுவதாக இருக்கும்.

## சுயேச்சையான எல்லை மாகாணம்

இந்தியாவுக்கு எது உரிமையோ, அது உண்மையில் எதை ஏற்றுக்கொள்ள முடியுமோ அது கிடைக்கட்டும். இந்தியாவுக்கு எது கிடைத்தாலும், அது எப்போது கிடைத்தாலும், எல்லை மாகாணத்திற்கு இன்றே சுயாட்சி கிடைக்கவேண்டும். பின்னர் அது இந்தியா முழுவதற்குமே ஒரு நிரந்தரமான முன் மாதிரியாக இருக்கும். எல்லை மாகாணத்திற்கு நாளையே மாகாண சுயாட்சி கிடைப்பதற்கு ஆதரவாக காங்கிரஸின் வாக்குகள் எல்லாம் அதற்குக் கிடைக்கும். பிரதம மந்திரி அவர்களே, நாளைய தினத்திலிருந்து எல்லை மாகாணம் பூரணமான சுயாட்சி பெற்ற ஒரு மாகாணமாகிறது என்ற யோசனையை உங்களுடைய மந்திரிசபை அங்கீகரிக்கும்படி நீங்கள் செய்தால், எல்லை மலைவாசிகளிடையே எனக்கு நல்ல செல்வாக்கு ஏற்படும்; எல்லைக்கு அப்பால் உள்ளவர்கள் கெட்ட எண்ணத்துடன் இந்தியாமீது கண்ணேட்டம் செலுத்துவார்களாயின். அப்போது நான் எல்லைவாசிகளை எனக்குத் துணையாக ஒன்று சேர்ப்பேன்.

## மகிழ்ச்சியளிக்கும் கடமை

கடைசியாக நான் செய்ய வேண்டிய கடமை எனக்கு மகிழ்ச்சி அளிப்பதாக இருக்கிறது. சமரசப் பேச்சுகளுக்காக உங்களுடன் நான் உட்கார்ந்திருப்பது இதுதான் ஒருவேளை கடைசி முறையாக இருக்கலாம். இது கடைசி முறையாக இருக்கவேண்டும் என்பது என் விருப்பமல்ல. நான் இறுதியான போராட்டத்தில் குதிக்குமுன், இதே மேஜையில் உட்கார்ந்து உங்களுடன் அந்த

ரங்கமாக ஆலோசிக்கவும், சமரசப் பேச்சு நடத்தவும், முழந்தாளிட்டு உங்களை வேண்டிக்கொள்ளவுமே விரும்புகிறேன்.

என்னுடைய ஒத்துழைப்பைத் தொடர்ந்து அளிக்கும் நல்ல அதிர்ஷ்டம் எனக்கு இருக்கிறதா அல்லது இல்லையா என்பது என்னைப் பொறுத்ததல்ல. அது பெரிதும் உங்களையே பொறுத்திருக்கிறது. அது உங்களைக்கூட பொறுத்ததல்லாமல் இருக்கலாம். அது பல சந்தர்ப்பங்களைப் பொறுத்ததாகும். அச் சந்தர்ப்பங்கள் உங்களுடைய கட்டுப்பாட்டிற்கோ அல்லது எங்களுடைய கட்டுப்பாட்டிற்கோ அப்பாற்பட்டவை. எனவே இப்போது சக்கரவர்த்தி தம்பதிகள் முதல் லண்டன் ஈஸ்ட் எண்டில் உள்ள மிக மிக ஏழை வரையிலுள்ள எல்லோருக்கும் எனது நன்றியைச் செலுத்தும் மகிழ்ச்சியான கடமையைச் செய்ய எனக்கு அனுமதி கொடுப்பீர்களாக. ஏழைகள் வசிக்கும் ஈஸ்ட் எண்டில்தான் இப்போது நான் ஜாகை எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

ஏழை மக்களின் பிரதிநிதி ஸ்தானமாக விளங்கும் ஈஸ்ட் எண்டிலுள்ள அந்தப் பிரதேசத்தில் நான் அவர்களில் ஒருவனுகியிருக்கிறேன். அவர்கள் என்னை அவர்களில் ஒருவனுக, அவர்களுடைய குடும்பத்தில் அபிமானத்திற்குரிய ஒருவனுக அங்கீகரித்திருக்கிருர்கள். இது, என்னுடன் நான் எடுத்துச் செல்லும் விலையிலாப் பொக்கிஷங்களில் ஒன்ருக இருக்கும். இங்கேயும், நான் தொடர்பு கொண்ட எல்லோரும் என்மீது சொரிந்த மரியாதையையும் உண்மையான அன்பையும் தவிர நான் வேறு எதையும் காணவில்லை. நான் பல ஆங்கிலேயர்களுடன் தொடர்பு கொண்டுள்ளேன். அது விலை மதிக்கமுடியாத எனது பாக்கியமேயாகும். அவர்கள் நான் கூறியதைக் கவனமாகக் கேட்டார்கள். நான் கூறியவை பெரும்பாலும் அவர்களுக்கு அதிருப்தியளித்திருக்க வேண்டும். எனினும் நான் கூறியவை உண்மையே யாகும். இவற்றையெல்லாம் அவர்களுக்கு எடுத்துக் கூறுவது எனது கடமையாகியது. அப்படியிருந்தும் நான் கூறியதைக் குறித்து அவர்கள் சிறிதளவும் பொறுமையிழக்கவில்லை; அதைச் சிறிதும் தொல்லையாக நினைக்கவில்லை. இவற்றையெல்லாம் மறப்பது என்னுல் முடியாத காரியம். எனக்கு என்ன நேர்ந்தாலும், இந்த வட்டமேஜை மகாநாட்டின் அதிர்ஷ்டம் எப்படியாயினும், ஒரு விஷயம் மாத்திரம் என் மனத்தைவிட்டு அகலாது. அதாவது உயர்ந்தவர்களிலிருந்து தாழ்ந்தவர்கள் வரையில் எல்லோரும் என்னிடம் காட்டிய மட்டற்ற மரியாதையையும் மட்டற்ற அன்பையும் தவிர நான் வேறு எதையும் காணவில்லை. இந்த மனிதாபி

மானத்தைக் காண்பதற்காகவாவது நான் இங்கிலாந்துக்கு வந்தது மிகவும் பலனளிக்கத்தக்க தென்றே கருதுகிறேன். பெரும் பாலும் உங்களுடைய பத்திரிகைகளே மாசுபடுத்தும் பொய்களேயே ஆங்கில ஆடவர்களும் பெண்களும் வாசித்து வந்திருக்கிறார்கள். லங்காஷயர் மக்கள் என்மீது ஒருவேளை கோபப்படுவதற்கும் காரணம் உண்டு. அப்படியிருந்தும்கூட லங்காஷயரிலுள்ள தொழிலாளர்கள்கூட என்மீது வெறுப்போ, கோபமோ அடையவில்லை. அந்தத் தொழிலாளர்களான ஆடவர்களும் பெண்களும் என்னைத் தழுவிக்கொண்டார்கள்; அவர்களில் ஒருவனாகவே என்னை நடத்தினார்கள். அதை ஒரு காலத்திலும் நான் மறக்கமாட்டேன். இவையெல்லாம் மனித இயல்பில் எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையை அதிகப்படுத்தி யிருக்கிறது, பலப்படுத்தியிருக் கிறது.

பதினாயிரக்கணக்கான ஆங்கிலேயர்களுடைய நட்புறவுடன் நான் இந்தியாவுக்குத் திரும்பிச் செல்லுகிறேன். அவர்களை நான் அறியேன். எனினும் உங்கள் தெருக்களின் வழியாக நான் காலையில் உலாவச் சென்றபோது அவர்களுடைய கண்களில் அன்பு ததும்புவதை நான் கண்டேன். துரதிர்ஷ்டமான என் நாட்டிற்கு என்ன நேர்ந்தாலும், இந்த விருந்தோம்பலும் இந்த அன்பும் என் நினைவிலிருந்து ஒரு காலத்திலும் அகலாது. உங்களுடைய பொறுமைக்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

# 12

# விடைபெற்றுக் கொள்கிறேன்

வட்டமேஜை மகாநாட்டின் இறுதிக் கூட்டத்தில் காந்திஜி நன்றி கூறுகையில் பேசியதாவது :

பிரதம மந்திரி அவர்களே, நண்பர்களே, தலைவருக்கு நன்றி கூறும் பொறுப்பும் வாய்ப்பும் எனக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் பொறுப்பையும் வாய்ப்பையும் நான் அளவற்ற மகிழ்ச்சியுடன் மேற்கொண்டிருக்கிறேன். கூட்டத்தில் எடுக்கப்படும் முடிவுகளையோ அல்லது தலைவர் கூறும் முடிவுகளையோ கூட்டத்தில் கலந்துகொண்டவர்கள் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், கூட்ட நடவடிக்கைகளைக் கண்ணியமாகவும் மரியாதையுடனும் நடத்தும் ஒரு தலைவர் எப்போதும் நன்றிக்கு உரியவராகிறார்.

ஐயா, உங்களுடையது இரட்டிப்புக் கடமை என்பதை நான் அறிவேன். நேர்மையுடனும், கண்ணியமாகவும், பாரபட்சமின்றியும் நீங்கள் கூட்ட நடவடிக்கைகளை நடத்தவேண்டியிருந்தது என்பது மட்டுமல்ல, பல சமயங்களில் நீங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முடிவுகளையும் இந்த மகாநாட்டில் அறிவிக்க வேண்டியிருந்தது.

இந்த மகாநாட்டின் யோசனைக்கு வந்த பல விஷயங்களையொட்டியும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தீர்க்காலோசனையுடன் கூடிய முடிவை அறிவிப்பதே உங்களுடைய இறுதியான கடமையாக அமைந்துள்ளது. உங்கள் கடமையின் இந்த அம்சத்தை நான் விட்டுவிட உத்தேசிக்கிறேன். எனக்கு அதிக மகிழ்ச்சி அளிக்கக்கூடிய அம்சம், கூட்ட நடவடிக்கைகளை நீங்கள் எவ்விதம் நிர்வகித்து வந்தீர்கள் என்பதுதான். நேரத்தின் முக்கியத்தைப் பற்றி நீங்கள் எங்களுக்குப் பாடம் கற்பித்ததற்காக நான் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். பெரும்பாலும் அக்கிராசனர்கள் தங்களுக்குள்ள இந்த மூலாதாரமான கடமையை அசட்டை செய்து விடுகிறார்கள். எனது நாட்டில் இந்தக் கடமையை அலுப்புத் தட்டும் விதத்தில் ஒழுங்காக அசட்டை செய்து வருகிறார்கள்! எனவே நான் இந்தியாவுக்குத் திரும்பிச் சென்றதும், நேரத்தின் முக்கியத்தை யொட்டிய விஷயத்தில் பிரிட்டிஷ் பிரதமர்

என்ன செய்தார் என்பதை என் தேச மக்களுக்குக் கூற வேண்டி யது என்னுடைய இனிய, அத்தியாவசியமான கடமையாகும்.

நீங்கள் அறிவுறுத்திய மற்றொரு அம்சம், உங்களுடைய ஆச்சரி யப்படத்தக்க சுறுசுறுப்பேயாகும். ஓய்வு என்றால் என்ன என் பதையே நீங்கள் அறியவில்லை; ஓய்வு என்றால் என்ன என்பதை நாங்கள் அறிந்து கொள்ளவும் நீங்கள் எங்களுக்கு இடம் கொடுக்க வில்லை. என்னுடைய நண்பரும், பெருமதிப்பிற்குரிய சகோதரரு மான பண்டித மதன் மோகன் மாளவியாவைப் போன்ற வயோதி கர்கள், அது போலவே என்னைப் போன்ற வயோதிகர்கள் உள்பட எங்களில் ஒவ்வொருவரிடமிருந்தும் நீங்கள் இரக்கமின்றி வேலை வாங்கினீர்கள்.

என்னுடைய நண்பரும், பெருமதிப்பிற்குரிய தலைவருமான சாஸ்திரி சோர்வுறும் வரையில் வேலை வாங்கினீர்கள். இத்தகைய இரக்கமற்ற தன்மை உங்களைப் போன்ற ஒரு ஸ்காட்லந்து வாசிக் குத் தகுதியேயாகும். சாஸ்திரியின் உடல் நிலையை நீங்கள் அறிந்திருந்தும் கூட, கடமை உணர்ச்சி காரணமாக அத்தகைய சொந்தக் காரணங்களை நீங்கள் பொருட்படுத்தவில்லை என்று நேற்று எங்களிடம் தெரிவித்தீர்கள். அது மதிப்பிற்குரிய உங்க ளுடைய பெருமையையே காட்டுகிறது. உங்களுடைய வியக்கத் தக்க இந்தச் சுறுசுறுப்பையும் உழைப்பையும் ஒரு பொக்கிஷமாக நான் கருதுவேன்.

இவ்விஷயமாக நான் ஒன்று கூறுகிறேன். நான் சற்றேறக் குறைய பூமத்திய ரேகையின் எல்லையில் இருக்கும் செழுமையான கால நிலையுள்ள பிரதேசத்தைச் சேர்ந்தவன். அப்படியிருந்தா லும் கூட சுறுசுறுப்பாக உழைப்பதில் அங்கே நாங்கள் உங்களு டன் போட்டி போடுவது சாத்தியமாக இருக்கலாம். எனினும் அது ஒரு பெரிய விஷயம் அல்ல. உங்களுடைய பார்லிமெண்டுக் கூட்டம் சிற்சில சமயங்களில் இருபத்துநான்கு மணி நேரமும் நடக் கிறது. நேற்று நீங்கள் காட்டிய சுறுசுறுப்பு உங்களுடைய அத்த கைய ஆற்றலுக்கு ஒரு முன்னுதாரணமாக இருக்குமாயின், நீங்கள் தான் வெற்றி பெறுவீர்கள்.

எனவே இந்த நன்றித் தீர்மானத்தைக் கொண்டு வருவதில் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். எனக்கு அளிக்கப் பட்டுள்ள இந்தப் பொறுப்பை ஏற்கவும், இதை ஒரு பாக்கியமாகக் கருதவும் மற்றொரு காரணமும் இருக்கிறது. அதுதான் மிகவும் முக்கியமான காரணம் என்றும் கூறலாம். உங்களுடைய பிரக டனத்தை ஒரு முறை, இரண்டு முறை, மூன்று முறை, மேலும்

எத்தனை முறை அவசியமோ அத்தனை முறையும் அதிலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் சீர்தூக்கிப் பார்க்க நான் விரும்புகிறேன்; பரிசிலனை செய்ய நான் விரும்புகிறேன்; அதில் ரகசிய அர்த்தம் இருக்குமாயின், அந்த ரகசிய அர்த்தத்தையும் நான் வாசிக்க விரும்புகிறேன். அதன் பின், இப்போது நான் வந்துள்ள முடிவைப் போலவே, என்னைப் பொறுத்த வரையில் நாம் பிரிந்து வெவ்வேறு பாதையில் செல்லும் கட்டத்திற்கு வந்திருக்கிறோம் என்ற முடிவுக்கு நான் வரலாம்.

நாம் வெவ்வேறு பாதையில் செல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம் என்பதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. அது எப்படியாயினும் இருதய பூர்வமான, அந்தரங்க சுத்தமான நன்றிக்கு நீங்கள் உரியவர்களாகி யிருக்கிறீர்கள். நம்முடைய சமுதாயத்தில், ஒருவருக்கொருவர் மரியாதை காட்டுவதற்கு பரஸ்பரம் கொள்கையில் ஒருமைப்பாடு இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை; ஒருவருடைய அபிப்பிராயத்தை மற்றொருவர் முற்றிலும் மதித்து நடக்கவேண்டும் என்றோ, எப்போதும் பரஸ்பரம் விட்டுக் கொடுக்கவேண்டும் என்றோ எதிர்பார்ப்பதற்கில்லை. அதற்கு மாறாக வாழ்க்கையின் சூறாவளியை எதிர்த்து நிற்பதே மனித இயல்பின் மாண்பாகும். சிற்சில சமயங்களில் உடன் பிறந்த சகோதரர்கள்கூட தங்கள் தங்கள் சொந்தமான வெவ்வேறான வழிகளில் செல்ல வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய சச்சரவின் இறுதியில் அவர்களுக்குள் பரஸ்பரம் துவேஷம் இல்லையென்றும், அவர்கள் ஒரு கனவானைப் போலவும், ஒரு வீரனைப் போலவும் நடந்து கொண்டதாகவும் அவர்கள் சொல்லக் கூடுமாயின், அது தான் மனித இயல்பின் சிறப்பாகும். பிரதம மந்திரி அவர்களே, இந்த அத்தியாயத்தின் இறுதியில் நான் உங்களிடமும் உங்கள் தேச மக்களிடமும் அவ்விதமே கூறுவது சாத்தியமாயின், நாம் நல்ல முறையிலேயே பிரிந்துள்ளோம் என்று நான் சொல்லுவேன். நான் செல்லவேண்டிய வழி எந்தத் திசையில் இருக்கிறது என்பதை நான் அறியேன். அது எந்தத் திசையில் இருந்தாலும் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் நேர்மாறான திசையில் செல்லும்படி நேர்ந்தாலும்கூட, என்னுடைய உள்ளத்தின் ஆழத்திலிருந்து வரும் நன்றித் தீர்மானத்திற்கு நீங்கள் உரியவர்களாகியிருக்கிறீர்கள்.

# 1

# காந்திஜியின் கண்டனம்

1931-ல் நடந்த வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக காந்திஜி லண்டனுக்குப் புறப்பட்டதிலிருந்து திரும்பி வரும் வரையில் (1931 செப்டம்பரிலிருந்து டிசம்பர் மாதம் வரையில்) நிகழ்ந்த பல்வேறு சம்பவங்களையுமொட்டி ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய குறிப்புகள் 1932-ல் அப்போதைக்கப்போது 'எங் இந்தியா'வில் வெளியாயின. அக் குறிப்புகளில் சில இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன :

லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக காந்திஜி கப்பலேறும் வரையில் அவர் லண்டனுக்குச் செல்லுவாரென யாரும் நம்பவில்லை. 'அமைதியைக் கெடுப்பவரும்' 'சங்கடத்தைக் கொடுப்பவருமான' அவர் லண்டனுக்குப் புறப்பட்டதைக் குறித்து ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகளின் சிம்லா நிருபர்கள் பெருமூச்சு விட்டார்கள். அவ்விதமாக அவர்களின் பெருமூச்சு, அதிகாரவர்க்க உலகத்தின் உணர்ச்சிகளையும் எதிரொலித்தது! இடைவிடாது கண்காணிப்புடன் இருப்பது அதிகாரத்தில் இருப்பவர்கள் சகிக்கக் கூடாத ஒரு விஷயமாகும். ஆனால் இடைவிடாத கண்காணிப்பு காந்திஜியின் உயிர்நாடி அல்லவா? தாம் லண்டனுக்குச் சென்றாலும், கண்காணிப்பை காங்கிரஸ் கைவிடாது என காந்திஜி ஆகஸ்டு 27-ல் உள்துறை மந்திரிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். இந்தியாவில் என்ன நேருமோ என்று தாம் நடுக்கத்துடனும், பீதியுடனும் செல்லுவதாகவும் காந்திஜி அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

பம்பாய் துறைமுகத்திலிருந்து ராஜ்புதானா கப்பல் புறப்பட்ட போது காந்திஜிக்கு வந்த ஏராளமான தந்திச் செய்திகள் அவரிடம் கொடுக்கப்பட்டன. அந்தத் தந்திகளில் வைஸ்ராயிடமிருந்து வந்ததும் ஒன்றாகும். அவரது யாத்திரை ஆனந்தமாக இருக்க வேண்டும் என்றும், அவர் மேலும் அதிக மகிழ்ச்சியுடன் திரும்பி வர வேண்டும் என்றும் அவருக்கு வாழ்த்துக் கூறி பல நண்பர்களும் சக ஊழியர்களும் தந்திச் செய்திகள் அனுப்பியிருந்தனர். அவர் இந்தியாவில் இராத சமயத்தில் தேசீயக் கொடி தொடர்ந்து கம்பீரமாகப் பறந்து கொண்டிருக்கும் என்றும்

அவர்கள் காந்திஜிக்கு உறுதி கூறியிருந்தனர். அவற்றில் இரண்டு தந்திகள் சரியான முறையில் அமைந்தன. 'இறைவனின் ஒளி உங்களுக்கு வழிகாட்டுமாக' என்று ஒரு தந்தி கூறியது. 'நீங்கள் வெற்றி பெற்ருலும் அல்லது தோல்வியுற்ருலும் அது மகத்தான வெற்றியாகவோ அல்லது தோல்வியாகவோ இருக்கும். நீங்கள் வெற்றி பெற கடவுள் துணைபுரிவாராக' என்று மற்ருெரு தந்தி கூறியது.

ஆனல் நம்முடைய இளம் கவிஞரான மேகனி குஜராத்தியில் அனுப்பிய வழியனுப்பு உபசாரக் கவிதைதான் தமது நிலையைச் சரியாகவும் தெளிவாகவும் வர்ணிப்பதாக இருக்கிறதென காந்திஜியே கூறினர். ஆகஸ்டு மாதம் 13ங் தேதி சமரசப் பேச்சுகள் முறிந்ததிலிருந்து சென்ற பதினைந்து நாட்களாக காந்திஜியின் மனத்திலுள்ள எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் அந்தரங்கமாக அறிந்து கொண்டது போல் அந்தக் கவிதை அமைந்திருந்தது. அந்தக் கவிஞர் கூறியதாவது: 'கசப்பான பல மருந்துகளை நீங்கள் குடித்திருக்கிறீர்கள். இப்போது நீங்கள் விஷம் நிறைந்த கடைசிக் கிண்ணத்தைக் குடிக்கச் செல்லுங்கள். பொய்க்கு எதிராக வாய்மையையும், துவேஷத்திற்கு எதிராக அன்பையும், மோசடிக்கு எதிராக நேர்மையான நடவடிக்கையையும் மேற் கொண்டு வந்திருக்கிறீர்கள். உங்களுடைய கொடிய விரோதியிடம் கூட அவநம்பிக்கை கொள்ள நீங்கள் மறுத்து வந்திருக்கிறீர்கள். எனவே மேலும் உங்களுக்காகக் காத்திருக்கும் மிக மிகக் கசப்பான மருந்தை அடியோடு குடித்துத் தீர்ப்பதற்காகச் செல்லுங்கள். எங்களுடைய துன்பத்தையும் துரதிர்ஷ்டத்தையும் பற்றிய சிந்தனை காரணமாக நீங்கள் தயங்க வேண்டாம். மகிழ்ச்சியுடன் துன்பத்தை ஏற்க நீங்கள் எங்களுக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள். எங்களுடைய மென்மையான உள்ளங்களை நீங்கள் எஃகு போல் உறுதி வாய்ந்ததாகச் செய்திருக்கிறீர்கள். நீங்கள் வெறுங்கையுடன் திரும்பி வந்தால்தான் என்ன? நீங்கள் அங்கு செல்லுவதொன்றே நன்மை பயக்கும். உங்களுடைய அன்புச் செய்தியை, சகோதரத்துவ செய்தியை மனித வர்க்கத்திற்குப் பிரகடனம் செய்யுங்கள். சொல்ல முடியாத நோய்களால் துன்புற்று வரும் மனித வர்க்கம் அவற்றைக் குணப்படுத்தும் ஔஷதத்திற்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறது. அந்த ஔஷதத்தை நீங்கள் உங்களுடன் கொண்டு செல்லுகிறீர்கள் என்பதை அது அறிந்திருக்கிறது.'

எல்லாவற்றிற்கும் தாழ்ந்த வகுப்பில் எங்களுக்காக ஐந்து டிக்கெட்டுகள் வாங்கும்படி காந்திஜி ஒரு நண்பருக்குத் தந்தி

கொடுத்திருந்தார். அந்தக் கப்பலில் இரண்டாவது வகுப்பிற்குக் குறைந்த வகுப்பு இல்லை. எனவே நாங்கள் இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்யலானோம். காந்திஜிக்குச் சிறிது அவகாசம் கிடைத்ததும், அவரது கழுகுக் கண்கள் நாங்கள் சென்ற அறையில் இருந்த சாதனங்களைப் பரிசீலனை செய்யத் தொடங்கின. அதிர்ஷ்டவசமாக நாங்கள் இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்தோம். 'டெக்'கில் பிரயாணம் செய்யும்படி நேர்ந்திருந்தால், அந்த ஒரு 'வாகன்' சாதனங்களையும் எங்கே போடுவது?'

'நாங்கள் ஒரு சில மணி நேரத்தில் பிரயாணத்திற்கு ஆயத்தம் செய்யவேண்டியிருந்தது' என்று எங்களில் ஒருவர் சமாதானம் கூறினர்.

'இந்தத் தோல் பெட்டிகளை யெல்லாம் நாங்கள் கடனாக வாங்கிக் கொண்டோம். நாங்கள் திரும்பி வந்ததும், அவற்றை யெல்லாம் திருப்பிக் கொடுத்து விடுவோம்' என்று மற்றொருவர் கூறினர்.

'ஏராளமான நண்பர்கள் இந்தப் பெட்டிகளை யெல்லாம் கொண்டு வந்து திணித்து விட்டுப் போய்விட்டார்கள். அவர்களை நாங்கள் தடுக்க முடியவில்லை' என்பது மூன்ருவது சமாதானமாகும்.

இந்த விளக்கங்கள் காரணமாக எங்களுடைய நிலைமை மேலும் மோசமாகியது. இவையெல்லாம் விசேஷ சப்பைக்கட்டுகளாக அவருக்குத் தோன்றியது. எனவே காந்திஜிக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டது. நாட்டில் மிக மிக ஏழை மக்கள் பிரதிநிதியின் தோழர்கள் விலையுயர்ந்த பெட்டிகளை எடுத்துச் செல்லுவதா? அவை இனமாகக் கிடைத்தாலும் சரி அல்லது கடனாகக் கிடைத்தாலும் சரி, அது ஒரு பெரிய விஷயம் அல்ல. எனவே எங்களில் ஒவ்வொருவரும் அவரவர் பங்கிற்கு கண்டனத்திற்கு ஆளானோம்.

"பிரயாணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய நேரமில்லை என்று கூறுவது நல்லதல்ல. ஏற்பாடுகள் எதுவும் அவசியமில்லை. கைக்குக் கிடைத்ததையெல்லாம் வாரிக் கொண்டு வருவதற்குப் பதிலாக, அவைகள் உங்களுக்கு அவசியமில்லை என்று நீங்கள் உங்களுடைய நண்பர்களிடம் கூறியிருக்கலாம்; ஜீரஜானியின் கதர் பண்டசாலையிலிருந்து நீங்கள் சில கம்பளி, பருத்தி உருப்படிகளை எடுத்துக் கொண்டு வந்திருக்கலாம். ஆனல் நீங்களோ இங்கிலாந்தில் ஐந்து வருடங்கள் வரையில் தங்கப் போவதாக எண்ணிக் கொண்டு உங்கள் கைக்குக் கிடைத்ததை

பெல்லாம் எடுத்துக் கொண்டு வந்து விட்டீர்கள்! நமக்குத் தேவை யானதெல்லாம் அங்கே கிடைக்குமென்றும், நாம் திரும்பும் போது அவற்றையெல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்து விடலாம் என்றும் நான் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். அந்தத் தோல் பெட்டி களை நீங்கள் திருப்பிக் கொடுத்து விடுவதாக உறுதி கூறுவதன் மூலம், நீங்கள் செய்த குற்றம் குறைந்து விடாது. இவற்றை எல்லாம் நீங்கள் எப்போதும் வைத்துக் கொண்டிருப்பீர்களென நான் ஒரு போதும் எதிர்பார்க்கவில்லை. எனினும் இந்தப் பெட்டி களை யெல்லாம் நீங்கள் ஒப்புக் கொள்ளத் தயங்கவில்லை என்ற உண்மை, வறுமை பற்றியும், உடைமைகளை வைத்துக் கொள்ளாமை பற்றியும், உங்களுடைய கருத்தை ஓரளவு எனக்கு எடுத்துக் காட்டு கிறது. அவைகளில் சில பழைய பெட்டிகள் என்றும், நண்பர் களிடம் மிதமிஞ்சிக் கிடந்தவை என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். இவ்விதம் கூறுவதன் மூலம் நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள் கிறீர்கள் அல்லது என்னை ஏமாற்றுகிறீர்கள். அவை மிதமிஞ்சிக் கிடந்தவையாயின், அவற்றை அவர்கள் தூக்கி எறிந்திருப்பார்கள். உங்களுக்கு அவை தேவையாக இருக்கின்றன என்று நீங்கள் கூறியிருந்தாலொழிய, அவற்றை அவர்கள் உங்களிடம் கொடுத் திருக்கமாட்டார்கள். அவர்களுடைய ஆலோசனைக்கு இணங்க நீங்கள் நடந்து கொண்டதாகக் கூறுவது அர்த்தமற்றது. அவர் களுடைய ஆலோசனையை நீங்கள் ஏற்றுக் கொள்வதாயின், நீங்கள் அவர்களுடன் இருக்கவேண்டும். இப்போது நீங்கள் என்னுடன் இருக்கிறீர்கள். ஆகையால் நீங்கள் என்னுடைய ஆலோசனையின் படியே நடந்து கொள்ளவேண்டும்.''

இவ்விதம் பல நாட்கள் வரையில் காந்திஜி கண்டித்துக் கொண்டிருந்தார். மயக்கம் வராமல் கப்பலில் செல்ல நாங்கள் அனுபவம் பெற்றவர்களாக இருந்திருந்தால் கூட, ஒருவரை தலை சுற்றும்படி செய்யவோ அல்லது நோயுறும்படி செய்யவோ இந்தக் கண்டனம் போதுமானதாக இருந்தது. பின்னர் நாங்கள் எங்க ளுக்குத் தேவையான சாதனங்களும், தேவையில்லாத சாதனங்க ளும் அடங்கிய ஒரு ஜாப்தாவைத் தயாரித்தோம். தேவையில்லாத சாதனங்களை ஏடனிலிருந்து திருப்பி அனுப்பிவிடத் தீர்மானித் தோம். உடனடியாக நாங்கள் மேற்கொண்ட வேலை இதுதான்!

முதல் மூன்று நாட்கள் வரையில் இந்த வேலையே சரியாக இருந்தது. நான்காவது நாள் நாங்கள் அந்த ஜாப்தாவை காந்தி ஜியினிடம் சமர்ப்பிக்கத் தயாராக இருந்தோம். அதைப் பார்த்து காந்திஜி கூறியதாவது :

'நீங்கள் சிம்லாவில் உள்ள தெருக்களில் எவ்வாறு செல்லுவீர்களோ அவ்விதமே லண்டன் தெருக்களிலும் செல்ல வேண்டும் என்பதே என் விருப்பம். இருந்தாலும் இப்போது உங்களுடைய ஜாப்தாவில் நான் குறுக்கிடப் போவதில்லை. சிம்லாவில் நீங்கள் ஒரு வேஷ்டி, ஜிப்பா, ஒரு ஜோடி பாதரட்சைகளுடன் செல்ல முடியுமாயின், இங்கிலாந்திலும் நீங்கள் அவ்விதமே செய்வதற்கு யாதொரு தடையும் இருப்பதற்கில்லை. நீங்கள் தகுதியான முறையில் உடை உடுத்திக் கொள்ளவில்லை என்பதை நான் கண்டால், நானே உங்களை எச்சரித்து மேலும் அதிகமான கம்பளி உடைகளை வாங்கிக் கொள்ளும்படி கூறுவேன். நீங்கள் வேறு விதமாக உடை உடுத்தினல், மக்கள் அதிர்ச்சி அடைவார்கள் என்ற கற்பனையான பயம் காரணமாக நீங்கள் உடை உடுத்திக்கொள்ள வேண்டுமா? ஆனல் உங்களிடமோ அல்லது என்னிடமோ உள்ள டம்பமான தோல் பெட்டிகளைப் பார்த்தால்தான் அவர்கள் அதிர்ச்சி அடைவார்கள்.'

உற்பத்தியாளர்கள் கம்பெனியொன்று இலவசமாக அனுப்பியிருந்த ஒரு சொகுசான தோல் பையைச் சுட்டிக் காட்டி காந்திஜி கூறியதாவது :

'இந்தியாவில் உங்களுக்கு ஒரு கதர் பை போதுமானதாக இருக்குமாயின், இங்கிலாந்திலும் அது ஏன் போதுமானதாக இருக்க முடியாது? அங்குள்ள மக்கள் இதைப் போன்ற சொகுசான தோல் பைகளில் தங்களுடைய முக்கியமான காகிதங்களை எடுத்துச் செல்லுவதாக நீங்கள் எண்ணுகிறீர்களா? இல்லவே இல்லை.

'லம்பார்ட் தெருவில் உள்ள பெரிய பாங்கர்கள் அல்லது வியாபாரிகளின் கையிலும், அல்லது முக்கியமான அரசாங்க தஸ்தாவேஜுகளை எடுத்துச் செல்லும் ராஜதந்திரிகளின் கையிலும் தான் ஒரு வேளை அத்தகைய பைகளை நீங்கள் காணலாம். உங்கள் கைகளில் அந்தப் பைகள் நகைக்கத் தக்கவையாகவே இருக்கும்.'

ஒரு நண்பர் வற்புறுத்திக் கொடுத்த தூரதிர்ஷ்டிக் கண்ணுடி ஒன்றும் அவ்விதமே காந்திஜியின் கண்டனத்திற்கு உள்ளாயிற்று. சாதாரணமாக நமக்கு வைத்துக் கொள்ள முடியாத விலையுயர்ந்த சாதனங்களை நாம் வைத்துக் கொள்ளக் கூடாது என்பதே காந்திஜியின் கொள்கையாகும்.

காந்திஜியின் இந்தக் கண்டனம் நியாயமானதே என்பதை ஓர் உண்மையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அதாவது அதன்

பலனாக நாங்கள் ஏழு தோல் பெட்டிகளையும், 'டிரங்கு' களையும் ஏடனிலிருந்து இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பி விட்டோம்!

கடல் கொந்தளிப்பாக இருந்ததால், பலரும் காந்திஜியுடன் முக்கியமான விஷயத்தை யொட்டிப் பேசவோ அல்லது விவாதிக்கவோ இன்னும் தயாராகவில்லை. எனினும் 'ராஜபுதானா' கப்பலில் யாதொரு சிரமமுமின்றிப் பிரயாணம் செய்ததில் காந்திஜிக்குத்தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். இரண்டாவது வகுப்பின் மேற்தளத்தில் காந்திஜி ஒரு மூலையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு பகலிலும் இரவிலும் பெரும் பகுதியை அங்கேதான் கழிக்கிறார். 'எங்களை அப்பால் ஓடிவிடும்படி செய்வதற்காக நீங்கள் வேண்டு மென்றே இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. பிரார்த்தனை நடக்கும் போது ஒரு சில நிமிடங்கள் கூட இங்கே உட்கார்ந்து கொண்டிருப்பது எங்களுக்குக் கஷ்டமாக இருக்கிறதே" என்று பிர்லாஜி காந்திஜியினிடம் கூறினர்.

இந்தியப் பிரயாணிகளில் பெரும்பாலோர் கப்பல் பிரயாணக் கிறு கிறுப்பை சமாளித்து குணமடைந்திருக்கிறார்கள். அதன் பலனாக, நேற்று மாலை நடந்த பிரார்த்தனைக் கூட்டத்திற்கு 22 நபர்கள் வந்திருந்தனர். தினசரி காந்திஜியின் வழக்கமான அலுவல்கள் யாதொரு குந்தகமுமின்றி நடைபெற்று வருகின்றன. அவர் வழக்கம்போல் குறித்த நேரத்தில் படுக்கையை விட்டு எழுந்திருக்கிறார். குறிப்பிட்ட நேரத்தில் படுக்கச் செல்லுகிறார். வழக்கம் போல் அவரது அலுவல்கள் யாவற்றையும் செய்து வருகிறார்.

காந்திஜியிடம் மாத்திரமல்ல, எங்களிடமும் கப்பலிலுள்ள எல்லா அதிகாரிகளும் நடந்து கொள்ளும் விதம் மிகவும் போற்றத் தக்கதாக இருக்கிறது. கதர் வேஷ்டி, சட்டை, குல்லாய்களுடன் கப்பல் நெடுகத் திரிந்து கொண்டிருக்கும் எங்களிடம்கூட அவர்கள் எல்லை மீறி மரியாதை காட்டுகிறார்கள். பி. அண்ட் ஓ. கப்பலில் நிற வேற்றுமையும் இன வேற்றுமையும் தாண்டவமாடுவதாக இந்தியப் பிரயாணிகள் புகார் கூறுவது உண்டு. ஆனால் இந்தக் கப்பலில் எங்களுடைய பிரயாணத்தின் போது அத்தகைய வேற்றுமை இருப்பதாகவே தெரியவில்லை.

# 2
# ஏடனில் வரவேற்பு

பம்பாயிலிருந்து புறப்பட்ட பின் எங்கள் கப்பல் நின்ற முதல் துறைமுகம் ஏடன் ஆகும். அது பம்பாயிலிருந்து 1660 மைல் தூர மிருக்கிறது. கப்பல் ஏடன் துறைமுகத்துக்கு வந்ததும் ஏடனிலுள்ள இந்தியர்கள் காந்திஜிக்கும் வட்ட மேஜை மகாநாட்டிற்குச் செல்லும் மற்றப் பிரதிநிதிகளுக்கும் வரவேற்பு உபசாரம் அளிக்க விரும்பினர். ஆனால் வரவேற்புக் கூட்டத்தில் இந்தியாவின் தேசீயக் கொடியைப் பறக்க விடுவதாயின், தாம் கூட்டத்தை அனுமதிக்க முடியாது என்று ரெசிடெண்ட் கூறிவிட்டார். அத்தகைய நிபந்தனை விதிப்பதாயின் தாம் அக்கூட்டத்திற்கு வர முடியாது என்றும், இந்திய அரசாங்கத்துக்கும் காங்கிரசுக்கும் சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பதால் சமாதான ஒப்பந்தம் நீடிக்கும் வரையிலாவது தேசீயக் கொடியை அரசாங்கம் ஆட்சேபிக்கக் கூடாது என்றும் ரெசிடெண்டுக்கு டெலிபோன் மூலம் அறிவிக்கும்படி காந்திஜி வரவேற்புக் கமிட்டித் தலைவரான ஸ்ரீ பிரேம்ரோஸ் கவாஸ்ஜி டின்ஷாவுக்கு யோசனை கூறினர். கடைசியாக, ஏடன் வாசிகள் காந்திஜிக்கு வரவேற்பு உபசாரப் பத்திரம் வாசித்து அளித்த இடத்தில் தேசீயக் கொடியைப் பறக்கவிடுவதற்கு ரெசிடெண்டு இசைந்ததன் பலனாக அவரால் விபரீதமான ஒரு நிலைமை தவிர்க்கப்பட்டது. அந்த வரவேற்புக் கூட்டத்தில் ஏடனிலுள்ள அராபியர்களும் கலந்துகொண்டார்கள். குஜராத்தியிலும் அரபி மொழியிலும் காந்திஜிக்கு உபசாரப் பத்திரங்கள் வாசித்து அளிக்கப்பட்டன. எனவே அங்குள்ள அராபியர்களுக்கும் ஒரு செய்தி விடுக்கும் சந்தர்ப்பம் காந்திஜிக்குக் கிடைத்தது.

உபசாரப் பத்திரத்திற்குப் பதிலளித்தும், தமக்கு அளிக்கப்பட்ட பணமுடிப்பிற்காக நன்றி கூறியும் காந்திஜி பேசியதாவது :-

"நீங்கள் எனக்கு அளித்த கௌரவத்திற்காக நன்றி செலுத்துகிறேன். இது எனக்காகவோ அல்லது என்னுடைய நண்பர்களுக்காகவோ அல்ல, காங்கிரசுக்கு அளிக்கப்பட்ட கௌரவமேயாகும். வட்ட மேஜை மகாநாட்டில் நான் காங்கிரசின் பிரதிநிதியாக இருக்க முடியுமென நம்புகிறேன். தேசீயக் கொடி சம்பந்தமாக இங்கே ஒரு தகராறு ஏற்பட்டதென்பதை

நான் அறிந்துகொண்டேன். இந்தியர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில், அதிலும் குறிப்பாக தேசீயத் தலைவர்கள் அழைக்கப் படும் ஒரு கூட்டத்தில் தேசீயக் கொடி பறக்கவிடாமல் இருப் பதை என்னால் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை. தேசீயக் கொடியைப் பாதுகாப்பதற்காக பலர் தடியடிகளுக்கு உள்ளாயினர், பலர் உயிரிழந்தனர் என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்திய தேசீயக் கொடியை கௌரவிக்காமல் நீங்கள் ஒரு தேசீயத் தலைவரைக் கௌரவிக்க முடியாது. மேலும் அரசாங்கத்துக்கும் காங்கிரசுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இப்போது காங்கிரஸ் அரசாங்கத்துக்கு விரோதமாக இல்லை, அரசாங்கத்துடன் நட்பாகவே இருக்கிறது. எனவே காங்கிரஸ் கொடியை அனுமதிப்பதோ அல்லது சகித்துக் கொண்டிருப் பதோ மாத்திரம் போதாது; காங்கிரஸ் பிரதிநிதிகள் அழைக்கப் படும் இடத்தில் அதற்கு கௌரவமான ஸ்தானமும் கொடுக்க வேண்டும்.

"காங்கிரசின் சார்பில் நான் உங்களுக்கு ஓர் உறுதி கூறு கிறேன். தனியாக ஒதுங்கி நிற்கும் சுதந்திரம் காங்கிரசின் கொள்கையல்ல. அத்தகைய சுதந்திரம் உலகத்துக்கே ஓர் அபாயமாகிவிடலாம். சத்தியத்தையும், அகிம்சையையும் சித் தாந்தமாகக் கொண்ட காங்கிரஸ் உலகத்திற்கு அபாயமாக இருக்க முடியாது. மானிட வர்க்கத்தின் ஐந்தில் ஒரு மடங்கு தொகையைக் கொண்ட இந்தியா அகிம்சையின் மூலமும் சத்தியத் தின் மூலமும் சுதந்திரம் பெற்றால், அது மானிட வர்க்கம் முழு வதற்குமே தொண்டு புரியும் ஒரு பெரிய சக்தியாக விளங்கும் என்பதே எனது உறுதியான கொள்கையாகும். அதற்கு மாறாக இன்று தன் சொந்த நிர்வாக விஷயங்களில் தனக்கு அதிகார மில்லாத இந்தியாதான் உலகத்திற்கு ஓர் அபாயமாக இருக் கிறது. திக்கற்ற நிலையிலிருக்கும் இந்தியா, மற்ற நாடுகளின் பொறாமைக்கும் பேராசைக்கும் காரணமாக இருந்து வருகிறது. இந்தியாவைச் சுரண்டித்தான் அந்த நாடுகள் வாழவேண்டியதாக இருக்கிறது. இந்தியா, பிறநாடுகள் தன்னைச் சுரண்டுவதற்கு இடம் கொடுக்க மறுத்து, தன்னைத் தானே நன்கு பாதுகாத்துக் கொள்ளும் சக்தியைப் பெறும்போது, சத்தியத்தின் மூலம் சுதந் திரத்தைப் பெறும்போது குழம்பிக்கிடக்கும் நம்முடைய இந்த உலகில் அகிம்சைதான் அமைதியான சூழ்நிலையை உண்டாக்கும் சக்தி வாய்ந்ததாக இருக்கும்.

"எனவே இந்தக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்வதில், இந்தியர்களுடன் அராபியர்களும் மற்றவர்களும் கலந்து

கொண்டது இயல்பேயாகும். அமைதியை விரும்பும் யாவரும் அமைதி நீடிப்பதற்காக ஒன்று சேர வேண்டும். முகமது நபியும் இஸ்லாமும் பிறந்த இடமான இந்தப் பெரிய தீபகற்பமானது, ஹிந்து-முஸ்லிம் பிரச்னையைத் தீர்க்க உதவி புரியக் கூடும். நமக்குள்ளேயே வேற்றுமை இருந்து வருகிறது என்பதை ஒப்புக் கொள்ள எனக்கு வெட்கமாக இருக்கிறது. கோழைத்தனத் தினாலும் பீதியினாலும் நாம் ஒருவர்மீது ஒருவர் பாய்கிறோம். கோழைத்தனத்தினாலும் பீதியினாலும் ஹிந்துக்கள் முஸ்லிம்கள் மீது அவநம்பிக்கை கொள்கின்றனர். அதுபோலவே கோழைத் தனமும், கற்பனையான பீதியும் காரணமாக முஸ்லிம்கள் ஹிந்துக் கள் மீது அவநம்பிக்கை கொள்கின்றனர். சரித்திர காலம் நெடுக இஸ்லாம் இணையற்ற பராக்கிரமத்திற்கும் அமைதிக்கும் சின்ன மாக விளங்கி வந்திருக்கிறது. எனவே ஹிந்துக்களைக் கண்டு அஞ்சுவது முஸ்லிம்களுக்குப் பெருமையளிக்கும் விஷயமல்ல. முஸ்லிம்களுக்கு உலகிலுள்ள முஸ்லிம்கள் யாவரும் உதவி அளிப் பதாக இருந்தால் கூட, அவர்களைக் கண்டு ஹிந்துக்கள் அஞ்சு வது ஹிந்துக்களுக்குப் பெருமையளிக்கும் விஷயமல்ல. நம்முடைய சொந்த நிழல்களைக் கண்டு அஞ்சும்படியான அவ்வளவு தாழ்ந்த நிலைக்கு நாம் வீழ்ச்சியடைந்து விட்டோமா? பட்டாணியர்கள் நம்முடன் அமைதியாக வாழ்ந்து வருகிறார்கள் என்பதைக் கேட்க நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். சென்ற போராட்டத்தின் போது அவர்கள் நம்முடன் தோளோடு தோள் நின்று, சுதந்திர பலி பீடத்தில் தங்கள் இளைஞர்களைத் தியாகம் செய்தார்கள். நபி நாயகம் பிறந்த நாட்டைச் சேர்ந்த நீங்கள், இந்தியாவிலுள்ள ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே அமைதியை ஏற் படுத்துவதற்கு உங்கள் பங்கைச் செய்ய வேண்டுமென நான் விரும்புகிறேன். நீங்கள் அதை எப்படிச் செய்ய வேண்டுமென நான் உங்களுக்குக் கூறமுடியாது. ஆனால், மனம் இருந்தால் வழி உண்டு என்பதை உங்களுக்கு நான் நினைவூட்டலாம். அரேபியா விலுள்ள அராபியர்கள் எங்களை விடுவிக்கவும், எங்களுக்கு உதவி புரியவும் வரவேண்டுமென நான் விரும்புகிறேன். ஹிந்துக்களுக்கு உதவி புரிவதை முஸ்லிம்கள் ஒரு கௌரவமாகவும், அதுபோலவே முஸ்லிம்களுக்கு உதவி புரிவதை ஹிந்துக்கள் ஒரு கௌரவமாகவும் கருதும்படியான ஒரு நிலைமை ஏற்படும்படி அராபியர்கள் முயற் சிக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

“உங்களுடைய வீடுகளில் நீங்கள் நூற்கவேண்டும், நெசவு செய்யவேண்டும் என்ற செய்தியையும் உங்களுக்கு நான் கூறு கிறேன். கலீபாக்களில் சிலர் நடத்திய வாழ்க்கை எளிமைக்கே

உதாரணங்களாகத் திகழ்ந்தன. உங்களுக்குத் தேவையான துணி களை நீங்களே நூற்று நெசவு செய்து கொள்வதில் இஸ்லாமுக்கு இழுக்கான விஷயம் எதுவுமில்லை. அடுத்தபடியாக மதுபானப் பிரச்னையும் இருக்கிறது. இங்கே ஒரு துளி மது கூட இருக்கக் கூடாது. ஆனால் இங்கே மற்ற சமூகங்களும் இருப்பதால், அவர் களையும் மது பானத்தைக் கைவிடும்படி அராபியர்கள் நல் வார்த்தை கூறி, ஏடனில் மது விலக்கு அமுலுக்கு வரும்படி செய்ய வேண்டும். நமக்குள் பரஸ்பர உறவு மேலும் சிறப்பாகவும் நெருக்க மாகவும் வளர்ச்சி பெறுமென நம்புகிறேன்."

## 3

# காந்திஜியின் இறுதிச் சாஸனம்

இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபை வகுத்த முறைகளின் மூலம் இந்தியா அரசியல் சுதந்திரம் பெற்றபின் இரண்டாகப் பிளந்து விட்டது. என்றுலும் காங்கிரஸ் அதன் தற்போதைய உருவத்திலும் அமைப்பிலும் அதாவது ஒரு பிரசார சாதனம் என்ற முறையிலும், பார்லிமெண்டு முறைக்குரிய ஒரு கருவி என்ற முறையிலும் அதன் உபயோகம் தீர்ந்து விட்டது. இந்தியா, இன்னும் சமுதாய, தார்மிக, பொருளாதார சுதந்திரத்தைப் பெற்ருக வேண்டும். இந்தியாவின் நகரங்கள் அல்ல, அதன் ஏழு லட்சம் கிராமங்கள் அத்தகைய சுதந்திரத்தைப் பெறவேண்டும். இந்தியா அதன் ஜனநாயக லட்சியத்தை நோக்கி முன்னேறிச் செல்லும்போது, ராணுவ அதிகாரத்தின் மீது சிவில் அதிகாரம் ஆதிக்கம் செலுத்துவதற்கான போராட்டம் ஏற்பட்டுத்தான் தீரும். அதன் விளைவாக, அரசியல் கட்சிகளுடனும் வகுப்பு ஸ்தாபனங்களுடனும் விபரீதமான போட்டி ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எனவே இதுபோன்ற மற்றும் பல காரணங்களால், தற்போதைய காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கலைத்து விடுவதென்றும், அதன் ஸ்தானத்தில் கீழ்க்கண்ட விதிகளுடன் ஒரு லோக சேவக் சங்கத்தை அமைப்பதென்றும் அ. இ. கா. கமிட்டி தீர்மானிக்கிறது. அவசியம் ஏற்பட்டால், அந்த விதிகளை மாற்ற அதிகாரம் உண்டு.

கிராமவாசிகளான அல்லது கிராமத்தில் மனநாட்டமுள்ள வய்து வந்த ஐந்து ஆடவர்களும் பெண்களும் அடங்கிய ஒவ்வொரு பஞ்சாயத்தும் ஒரு தொகுதியாக இருக்கும்.

அடுத்தடுத்துள்ள அத்தகைய இரண்டு பஞ்சாயத்துகள் சேர்ந்தது தான் ஒரு செயற்குழுவாக அமையும். அவர்களிடையிருந்தே அதற்கு ஒரு தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார்.

அத்தகைய பஞ்சாயத்துகளில் நூறு அமைக்கப்பட்டதும், அந்தப் பஞ்சாயத்துகளின் உறுப்பினர்களிடையே இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஐம்பது முதல் வரிசைத் தலைவர்கள் தங்களிடையே இருந்து ஒரு இரண்டாவது வரிசைத் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். முதல் வரிசைத் தலைவர்கள் இரண்டாவது வரிசைத் தலைவரின் கீழ் வேலை செய்து வருவார்கள். இந்தியா

முழுவதும் பூர்த்தியாகும் வரையில், இருநூறு பஞ்சாயத்துகள் கொண்ட சம தொகுதிகள் தொடர்ந்து அமைக்கப்பட்டு வரும். அடுத்து வரும் பஞ்சாயத்துகள் அடங்கிய தொகுதி ஒவ்வொன்றும் மேற்கண்டவாறு இரண்டாவது வரிசைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும். இரண்டாவது வரிசைத் தலைவர்கள் யாவரும் சேர்ந்து இந்தியா முழுவதற்கும், தனித்தனியாக அவரவர் பிரதேசங்களுக்கும் தொண்டு புரிவார்கள். இரண்டாவது வரிசைத் தலைவர்கள், தங்களுக்கு அவசியமெனத் தோன்றும்போதெல்லாம் அவர்களிடையிருந்து ஒரு பிரதம தலைவரைத் தேர்ந்தெடுக்கலாம். அந்தப் பிரதம தலைவர் அவரது விருப்பத்திற்கிணங்க எல்லாத் தொகுதிகளையும் ஒழுங்கு செய்வதுடன், அவற்றிற்குக் கட்டளைகளும் பிறப்பிப்பார்.

(மாகாணங்கள் அல்லது ஜில்லாக்களின் அமைப்பு இன்னும் நிச்சயமற்ற நிலையில் இருப்பதால், இந்த ஊழியர்களின் தொகுதியை, மாகாண அல்லது ஜில்லா சபைகளாகப் பிரிக்க முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட எந்தக் காலத்திலாவது அமைக்கப்படும் பிரிவு அல்லது பிரிவுகளிடம் இந்தியா முழுவதற்குமான அதிகாரம் ஒப்புவிக்கப்படும். ஊழியர்கள் அடங்கிய இந்தக் குழுவினர் தங்களுடைய எஜமானனை இந்தியா முழுவதற்கும் முணுமுணுக்காமலும், புத்திசாலித்தனமாகவும் தொண்டு செய்வதன் மூலமே, தங்களுடைய அதிகாரத்தையும் வலிமையையும் பெறுகின்றனர் என்பதைக் கவனத்திற் கொள்ள வேண்டும்.)

1. ஒவ்வொரு ஊழியரும் தாமே நூற்ற அல்லது அகில இந்திய நூற்போர் சங்கத்தால் அத்தாட்சிப் பத்திரம் பெற்ற ஆடையை வழக்கமாக உடுத்துபவராக இருக்க வேண்டும்; மதுபானத்தை அறவே ஒழித்தவராக இருக்க வேண்டும். அவர் ஒரு ஹிந்துவாக இருப்பாராயின், தம் சொந்த விஷயத்திலும், குடும்பத்திலும் தீண்டாமையை எவ்விதத்திலும் ஒழித்தவராக இருக்க வேண்டும். சமூகங்களுக்குள் ஒற்றுமை, எல்லா மதங்களிடத்திலும் சமமான மரியாதையும் மதிப்பும் காட்டுவது என்ற கொள்கையில் நம்பிக்கையுடையவராக இருக்க வேண்டும்; இன, மத, ஆண், பெண் வேற்றுமையின்றி எல்லோருக்கும் சமமான சந்தர்ப்பமும் அந்தஸ்தும் அளிப்பதிலும் நம்பிக்கையுடையவராக இருக்க வேண்டும்.

2. அவரது அதிகார எல்லைக்கு உட்பட்ட ஒவ்வொரு கிராமவாசியுடனும் அவர் நேரடியான தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும்.

3. கிராமவாசிகளிடையேயிருந்து அவர் ஊழியர்களைச் சேர்த்து அவர்களுக்கு (ஊழியர்களுக்கு) பயிற்சி அளிப்பதுடன், அவர்களடங்கிய பதிவுக் குறிப்பும் வைத்துக் கொள்ள வேண்டும்.

4. தினந்தோறும் அவர் செய்யும் வேலைக்கு ஒரு குறிப்பு வைத்துக்கொள்ள வேண்டும்.

5. கிராமங்கள் அவற்றின் விவசாயத்தின் மூலமும் கைத் தொழில்கள் மூலமும் சுய ஆதரவும் சுயதேவைப் பூர்த்தியும் பெறும் படி அந்த ஊழியர் கிராமங்களை அமைக்க வேண்டும்.

6. துப்புரவு, சுகாதாரம் ஆகியவற்றைக் குறித்து அவர் கிராம மக்களுக்குக் கற்பிக்க வேண்டும்; அவர்களிடையே ஆரோக் கியக் கேடும் நோயும் ஏற்படாமல் தடுப்பதற்கான எல்லா முறை களையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

7. நயீ தலீம் முறைகளை அனுசரித்தும், ஹிந்துஸ்தான் தலீமி சங்கத்தின் கொள்கையைப் பின்பற்றியும், பிறப்பிலிருந்து இறக்கும் வரையில் கிராம மக்களுக்குக் கல்வி அளிப்பதற்கான வசதிகளை ஏற்படுத்த வேண்டும்.

8. சட்ட பூர்வமான வாக்காளர் ஜாபிதாவில் யாருடைய பெயர்கள் வரவில்லையோ அவர்களுடைய பெயர்கள் அந்த ஜாபிதா வில் பதிவாகும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

9. வாக்காளர் ஜாபிதாவில் இடம்பெற சட்டபூர்வமான பகுதி பெருதவர்களை, வாக்குரிமையை உபயோகிப்பதற்காக அதைப் பெறும்படி ஊழியர் தூண்ட வேண்டும்.

10. மேற்கண்ட நோக்கங்களுக்காகவும், மேலும் அப் போதைக்கப்போது ஏற்படும் மற்ற காரணங்களுக்காகவும் ஊழியர், அவரது கடமையைச் செய்வதற்காக சங்கம் வகுத்துள்ள விதி களின்படி பயிற்சி பெற்று தம்மைத் தகுதி வாய்ந்தவராகச் செய்து கொள்ள வேண்டும்.

சங்கம் கீழ்க்கண்ட சுயேச்சையான ஙிறுவனங்களைத் தன் னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

1. அகில இந்திய நூற்போர் சங்கம்
2. அகில இந்திய கிராமக் கைத்தொழில்கள் சங்கம்
3. ஹிந்துஸ்தானி தலீமி சங்கம்

4. ஹரிஜன சேவா சங்கம்
5. கோ சேவா சங்கம்

**நிதி :** சங்கம், தனது லட்சியம் பூர்த்தியடைவதற்கான தொகைகளை கிராமவாசிகளிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் வசூல் செய்ய வேண்டும்; குறிப்பாக ஏழைகளிடமிருந்து பைசாவாக வசூல் செய்வதே விசேஷமாக வற்புறுத்தப்படுகின்றது.

புது டில்லி, *29. 1. 1948* மோ. க. காந்தி

## 4

# பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சிற்பிகள்!

ஈட்டன் நகர் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சிற்பிகளை உருவாக்கும் நாற்றங்காலாகத் திகழ்ந்து வருகிறது. ஐந்நூறு ஆண்டுகளாக ஈட்டனிலுள்ள பள்ளிக்கூடத்தில் வருங்கால பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சிற்பிகள் உருவாகி வந்திருக்கிறார்கள். உலகத்தைத் தங்கள் ஆட்சியின் கீழ் கொண்டுவருவது எப்படி, பல்வேறு நாடுகளிலுமுள்ள 'அநாகரிக' மக்களை ஆட்சி புரிவது எப்படி, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நிர்மாணிப்பது எப்படி என்பதையெல்லாம் அந்தப் பள்ளிக்கூடத்தில் உயர்தர வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் கற்று வருகிறார்கள். இங்கிலாந்தின் வளர்ச்சியிலும், சுபிட்சத்திலும் ஈட்டன் பள்ளிக்கூடத்திற்குப் பங்கு உண்டு என்றும் கருதப்பட்டு வருகிறது. அந்தப் பள்ளிக்கூடத்தில் வாசித்த பல சிறுவர்கள் பிற்காலத்தில் இங்கிலாந்தின் புகழ் பெற்ற பிரதம மந்திரிகளாகவும், சிறந்த ராஜதந்திரிகளாகவும் விளங்கினார்கள் என்ற பெருமை அந்தப் பள்ளிக்கூடத்திற்கு உண்டு. அதில் வாசித்த கிளாட்ஸ்டன், ஸாலிஸ்பரி, ரோஸ்பரி, பால்பர் ஆகியோர் பின்னர் இங்கிலாந்தின் பிரதம மந்திரிகளாகப் பதவி வகித்தார்கள். இந்தியாவில் வைஸ்ராய் பதவி வகித்த வெல்லெஸ்லி, மெட்காப், ஆக்லண்ட், எல்லன்பிரோ, கானிங், எல்ஜின், டப்பரின், லாண்ட்ஸ்டௌன், கர்ஸான், இர்வின் ஆகியோரும் மற்றும் கவர்னர் பதவி வகித்த பலரும் அந்தப் பள்ளிக்கூடத்தில் வாசித்தவர்களே. வெல்லிங்டன், ராபர்ட்ஸ், புல்லர் ஆகிய வரலாற்றுப் புகழ்பெற்ற பிரிட்டிஷ் ராணுவ தளபதிகள் ஈட்டன் பள்ளியில் பயின்றவர்களே யாவர். எனவே அத்தகைய ஒரு பள்ளியின் தலைமை ஆசிரியரின் அழைப்பை காந்திஜி நன்றியுடன் ஏற்றுக்கொண்டு அங்கு சென்றிருந்தார். அங்கு காந்திஜி பிரசங்கம் எதுவும் செய்யவில்லை. கேள்விகள் கேட்டால் விடை அளிப்பதாக காந்திஜி அவர்களிடம் கூறினார். அதற்கிணங்க கூட்டத் தலைவர் கேட்ட கேள்வியாவது:

"முஸ்லிம்களின் கோரிக்கைகள் என்ன என்பதை மௌலானா ஷவுகத் அலி எங்களுக்கு எடுத்துக் கூறினார். ஹிந்துக்களின் கோரிக்கைகள் என்ன என்பதை நீங்கள் எங்களுக்கு விளக்கிக் கூறுவீர்களா?"

கேள்விகள் கேட்கும்படி காந்திஜி மாணவர்களைக் கேட்டுக் கொள்ளவே, மாணவர்களில் ஒருவர் அதே கேள்வியையே திருப்பிக் கேட்டார்.

அந்தக் கேள்விக்கு காந்திஜி பின்வருமாறு ப்தில் அளித்தார் :

"நீங்கள் இங்கிலாந்திலுள்ள ஒரு பெரிய இடத்தில் இருந்து வருகிறீர்கள். உங்களில் சிலர் எதிர்காலத்தில் பிரதம மந்திரி களாகவும், தளபதிகளாகவும் பதவி வகிப்பீர்கள். உங்களுடைய குணங்களும் ஒழுக்கமும் உருவாகி வரும் இச்சமயத்தில் உங்கள் உள்ளங்களில் பதியும்படி நான் விஷயங்களை எடுத்துக் கூறுவது எளிதாக இருக்கும். உங்களுக்குப் போலி வரலாற்றைப் போதிப் பதே சம்பிரதாயமாக இருந்து வருகிறது. எனவே அதற்கு மாருன சில உண்மைகளை உங்கள் முன்னிலையில் நான் எடுத்துக் கூறவேண்டும். உயர்தர அதிகாரிகளிடையே அறியாமையையே நான் காண்கிறேன். அந்த அறியாமைக்குக் காரணம் அறிவு இராததல்ல, போலி ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்ட அறிவேயாகும். எனவே உங்கள் முன்னிலையில் உண்மையான ஆதாரங்களை எடுத்துக் கூற நான் விரும்புகிறேன். உங்களை நான் சாம்ராஜ்ய சிற்பிகளாகக் கருதவில்லை; பிற நாடுகளைச் சுரண்டு வதை நிறுத்தி, ஆயுத பலத்தினுலன்றி தார்மிக பலத்தினுல் உலக அமைதியைப் பாதுகாக்கும் காவலராக விளங்கப்போகும் ஒரு நாட்டைச் சேர்ந்தவர்களாகவே கருதுகிறேன். அப்படியாயின், ஹிந்துக்களின் கோரிக்கை என்று எதுவும் இல்லையென உங்க ளுக்கு நான் கூறுகிறேன். நீங்கள் எப்படி ஹிந்து அல்லவோ அது போல் நானும் என் நாட்டின் விடுதலைப் பிரச்னையைப் பொறுத்த மட்டில் ஒரு ஹிந்து அல்ல. ஹிந்து மகாசபைப் பிரதிநிதிகள் தான் ஹிந்துக்களின் கோரிக்கைகளை எடுத்துக் கூறியிருக்கிருர்கள். அவர்கள் தாங்கள் ஹிந்துக்களின் மனநிலையை அறிந்துகொண் டிருப்பதாகக் கூறுகின்றனர். ஆனல் உண்மையில் அவர்கள் அவ்விதம் அறிந்து கொள்ளவில்லை என்பதே எனது அபிப்பிராய மாகும். தாங்கள் தேசீயவாதிகளாதலின் தேசீய அடிப்படையில் அப்பிரச்னையைத் தீர்க்கவேண்டுமென அவர்கள் கூறுகிருர்கள். அவ்விதம் அவர்கள் கூறுவதற்குக் காரணம், அது அவர்களுடைய சுயநலனுக்கு உகந்ததாக இருப்பதேயாகும். அவர்களுடைய போக்கை நாசகரமான தந்திரம் என்றே நான் கூறுகிறேன். அவர்கள் பெரும்பான்மை சமூகத்தின் பிரதிநிதிகளாக இருப்ப தால், அவர்கள் சிறுபான்மை சமூகங்கள் கோருவதை விட்டுக் கொடுத்துவிட வேண்டும். அப்போது மந்திர சக்தியினல் போல சூழ்நிலையில் தெளிவான மாறுதல் ஏற்பட்டுவிடும். ஹிந்துக்களில்

மிகப் பெரும்பான்மையோர் என்ன நினைக்கிறார்கள் என்பதும், அவர்கள் விரும்புவது என்ன என்பதும் யாருக்கும் தெரியாது. இத்தனை ஆண்டுகளாக அவர்களுடன் பழகி வருவதாக உரிமை கொண்டாடும் நான் நினைப்பது என்னவெனில், இந்த அற்ப விஷயங்களைப்பற்றி, அவர்கள் கவலைப்படவில்லை என்பதும், தேர்தல் ஸ்தானங்கள், நிர்வாகப் பதவிகள் ஆகியவைபற்றி அவர்கள் தங்கள் மனத்தைச் சிறிதும் அலட்டிக் கொள்ளவில்லை என்பதும்தான்.

வகுப்புவாதமாகிற இந்தப் பூச்சாண்டி நகரங்களில் மாத்திரமே தாண்டவமாடி வருகிறது. எனினும் நகரங்கள் இந்தியா அல்ல. அவைகள் லண்டனையும். மற்றுமுள்ள மேநாட்டு நகரங்களையும் காப்பியடிக்கும் ஒத்துக் காகிதங்களே. அந்நகரங்கள் தெரிந்தோ, தெரியாமலோ கிராமங்களை இரையாகக் கொண்டு வருகின்றன; இங்கிலாந்தின் கமிஷன் ஏஜண்டுகளாக இருந்து கொண்டு, அந்தக் கிராமங்களைச் சுரண்டுவதில் உங்களுடன் பங்கு போட்டு வருகின்றன.

இந்தியாவின் விடுதலை என்ற மகத்தான பிரச்னையின் முன்னிலையில் வகுப்புப் பிரச்னை முக்கியமானதல்ல. ஆனால் அந்த மகத்தான பிரச்னையைத் தீர்க்க பிரிட்டிஷ் மந்திரிகள் மனமில்லாதவர்களாக இருந்து வருகிறார்கள். அதிருப்தி கொண்டு புரட்சி செய்யும் இந்தியாவில் தாங்கள் நீண்டகாலம் தாக்குப் பிடிக்க முடியாது என்பதை பிரிட்டிஷ் மந்திரிகள் மறந்து விடுகிறார்கள். நம்முடைய புரட்சி அஹிம்சைப் புரட்சி என்பது உண்மையே. இருந்தாலும் அது புரட்சிதான் அல்லவா? சில சமூகங்களின் பகுதிகளை அரித்துத் தின்றுவரும் வகுப்புவாத நோயைக் காட்டிலும் இந்தியாவின் விடுதலை எவ்வளவோ மேலான விஷயம் அல்லவா? அரசியல் பிரச்னை திருப்திகரமாகத் தீர்க்கப்படுமாயின், வகுப்புவாதக் கோளாறு உடனடியாக மறைந்துவிடும். அந்நியரின் குறுக்கீடு அகற்றப்பட்ட அந்த வினாடியிலேயே பிரிந்து கிடக்கும் சமூகங்கள் ஒன்றுபட்டுவிடும் என்பது நிச்சயம். எனவே ஹிந்துக்களின் கோரிக்கை என்று எதுவுமில்லை. அப்படி ஏதாவது இருந்தால், அந்தக் கோரிக்கையை ஒழித்துக் கட்டிவிட வேண்டியதுதான். எனினும் இந்தப் பிரச்னையை நீங்கள் பரிசீலனை செய்வதால் உங்களுக்கு லாபம் எதுவும் இல்லை. இந்தப் பிரச்னை சம்பந்தமான விவரங்களை நீங்கள் ஆராயமுற்பட்டால் உங்களுக்கு ஆத்திரமே ஏற்படும். அப்போது, நாங்கள் தேம்ஸ் நதியில் மூழ்கடிக்கப்படுவதைப் பார்க்கவே நீங்கள் விரும்புவீர்கள்!

''வகுப்புப் பிரச்னை ஒரு பெரிய விஷயம் அல்ல என்றும், அதைக் குறித்து நீங்கள் மனத்தை அலட்டிக்கொள்ள வேண்டாம் என்றும் நான் கூறுவது கடவுள் சாட்சியாக உண்மையேயாகும். நீங்கள் வரலாற்றை ஆராய்ச்சி செய்ய விரும்புவீர்களாயின், அதைக் காட்டிலும் மிகப் பெரிய பிரச்னையை ஆராய்ச்சி செய்ய முற்படுங்கள். அதாவது கோடிக்கணக்கான மக்கள் அகிம்சையை மேற்கொள்ள எப்படி மனத்தை திடப்படுத்திக் கொண்டார்கள்? அவர்கள் அகிம்சை வழியில் எப்படி உறுதியுடன் நின்றார்கள்? இதையெல்லாம் பரிசீலனை செய்ய முன் வாருங்கள். மனிதனுள் இருக்கும் மிருக இயல்பையும், அவன் காட்டு மிருகங்களின் வழியைப் பின்பற்றி நடப்பதையும் ஆராய்ச்சி செய்யாதீர்கள்; அதற்கு மாறாக, மனிதனின் மகோன்னதமான அருமை பெருமைகளை ஆராய்ச்சி செய்யுங்கள். வகுப்புவாதப் போராட்டங்களில் ஈடுபடுவோரை பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருப்பவர்களுக்கு உதாரணமாகக் கூறலாம். எனவே நாட்டின் விடுதலைக்காகப் பிறருக்குத் துன்பம் விளைவிக்காமல் தங்கள் உயிர்களைப் பலி கொடுக்கும் மனிதர்களின் நிலையை, தன் உயர்ந்த இயல்புகளைப் பின்பற்றும், அன்பு வழியைப் பின்பற்றும், மனிதரின் நிலையை ஆராய்ச்சிசெய்து பாருங்கள். அப்போதுதான் நீங்கள் உங்களுடைய பாரம்பர்யத்தை அபிவிருத்தி செய்து கொண்டவராவீர்கள். எங்களுடைய நாட்டை உங்கள் நாடு ஆட்சி புரிவதைக் குறித்து நீங்கள் பெருமை அடைவதற்கில்லை. ஒருவன் தன்னைத் தானே பிணைத்துக்கொள்ளாமல், ஒரு அடிமையைச் சங்கிலியால் பிணைக்க முடியாது. ஒரு நாடு, தான் அடிமை நாடாகாமல் பிற நாட்டை அடிமைத்தனத்திற்கு உள்ளாக்க முடியாது. இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இடையே தற்போதுள்ள தொடர்பு ஒரு பாவமான தொடர்பாகும், முற்றிலும் இயற்கைக்கு விரோதமான தொடர்பாகும். எனவே நாங்கள் இங்கே வந்துள்ள லட்சியத்திற்கு நீங்கள் ஆசி கூற வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். ஏனெனில் விடுதலை பெறுவது எங்களுடைய இயற்கையான உரிமையாகும். சுதந்திரம் எங்களுடைய பிறப்புரிமை. அதற்காக நாங்கள் தவம்புரிந்தும், துன்பத்திற்கு உள்ளாகியும் வந்திருக்கிறோம். எனவே விடுதலைபெற எங்களுக்கு இரட்டிப்பு உரிமை உண்டு. நீங்கள் வயது வந்தவர்களாகும்போது, பிறநாட்டைச் சுரண்டும் பாவத்திலிருந்து உங்களுடைய நாட்டை நீங்கள் விடுவிப்பதன் மூலம் நீங்கள் உங்களுடைய நாட்டுக்கு இணையற்ற பெருமையைத் தேடிக் கொண்டவர்களாவீர்கள்; மனித வர்க்கத்தின் வளர்ச்சிக்கும் உங்கள் பங்கைச் செய்தவர்களாவீர்கள்.

## 5

# ஏன் வாங்க வேண்டும்?

காந்திஜி லண்டனில் இருந்தபோது இந்தியாவைப்பற்றி பிரிட்டிஷாரிடையே நிலவி வந்த பல தவருன கருத்துகளை அகற்ற வேண்டி யிருந்தது. பிரிட்டிஷ் பார்லிமெண்டிலுள்ள தொழிற் கட்சி உறுப்பினர்கள் அடங்கிய விசேஷக் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியபோது கூறியதாவது:

"கற்றறிஞர்களான பிரிட்டிஷ் பிரமுகர்கள்கூட இந்தியா வைப்பற்றிய உண்மை நிலையை அறிந்து கொள்ளவில்லை. போலி வரலாறு அவர்களுக்குக் கற்பிக்கப்பட்டிருப்பதே அதற்குக் காரணம். இந்தியாவைப்பற்றிய தவருன கருத்துகளால் அவர் களுடைய மனம் கல்லாகி யிருக்கிறது. பிரிட்டனிலுள்ள மிகமிக ஏழையான தொழிலாளர்களுக்கு நீங்கள் பிரதிநிதிகளாக இருக் கிறீர்கள். எனவே நீங்கள்தான் மிகவும் உயர்ந்தவர்கள். எனி னும் இந்தியப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் உங்களுக்கும் மற்றக் கட்சிகளுக்கும் இடையே என்ருல் யாதொரு வேற்றுமை யையும் காண முடியவில்லை. இந்தியாவின் சார்பில் நான் எல் லாக் கட்சிகளின் ஆதரவையும் பெற படாதபாடு படவேண்டி யிருக்கிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஆட்சியைக் குறித்து இந்தியாவிலுள்ள பாமர மக்கள் பரவசம் அடைந்திருக்கிருர்கள் என்ற தவருன எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து அகற்றி விட வேண்டுமென நான் விரும்புகிறேன். உண்மை என்ன வெனில், பிரிட்டிஷ் நுகத்தடியை உதறித் தள்ள வேண்டுமென அவர்கள் துடித்துக் கொண்டிருக்கிருர்கள். அதற்குக் காரணம் என்ன? அவர்கள் பட்டினி கிடக்க விரும்பவில்லை, அவ்வளவு தான். இந்தியாவைக் காட்டிலும் மிகவும் அதிக சுபிட்சமான உங்கள் நாட்டின் பிரதம மந்திரி சராசரி, ஒரு பிரிட்டிஷாரின் வருமானத்தைக் காட்டிலும் 50 மடங்கிற்கு மேல் அதிகச் சம்பளம் வாங்கவில்லை. ஆனல் இந்தியாவிலோ வைஸ்ராய் ஓர் இந்தி யரின் சராசரி வருமானத்தைவிட 5000 மடங்கு அதிகச் சம்பளம் பெறுகிருர். இந்நிலையில் இந்திய மக்கள் வறுமையால் வாடு வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? இந்தியரின் சராசரி வருமானம் மிகவும் குறைவு எனில், ஏராளமான மக்களுக்கு யாதொரு வருமானமும் இல்லை என்பதை நீங்கள் அறிந்து

கொள்ள முடியும். லங்காஷயர் துணிப் பிரச்னையைப்பற்றியும், உங்களிடையே இருக்கும் வேலையற்றோரைப்பற்றியும் நீங்கள் எப்போதும் சிந்தித்து வருகிறீர்கள். இந்தியா தனக்கு வேண்டிய துணியை தான் உற்பத்தி செய்துகொள்ளக் கூடிய நிலையில் இருக்கும்போது, லங்காஷயர் துணியை வாங்க இந்தியா தார்மிக ரீதியாகக் கடமைப்பட்டிருக்கிறதா என்பதைக் கூறுங்கள். இந்தியாவின் அழிவுதான் லங்காஷ்யரின் சுபிட்சத்துக்குக் காரணம். அப்படியிருக்க லங்காஷயர், தான் செய்த பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டாமா?''

அக்கூட்டத்திலிருந்த யாருக்கும் காந்திஜியின் மேற்கண்ட கேள்விக்கு பதில் கூற முடியவில்லை.

''எங்களுடைய துணியை நீங்கள் வாங்காவிடில், உங்களுடைய தேயிலையையோ அல்லது சணலையோ நாங்கள் வாங்க மாட்டோம்'' என்று அவர்களில் ஒருவர் பிரிட்டிஷாருக்குரிய அப்பட்டமான முறையில் கூறினர்.

''வேண்டாம், நிச்சயமாக வாங்க வேண்டாம். அவற்றை வாங்குவதும் வாங்காததும் முற்றிலும் உங்களுடைய விருப்பத்தைப் பொறுத்ததாகும். எங்களுடைய தேயிலையையோ அல்லது சணலையோ வாங்கித்தான் தீரவேண்டுமென நாங்கள் உங்களை வற்புறுத்தவில்லையே'' என்றார் காந்திஜி.

## 6

# அடிமையாக்கும் பாதுகாப்புகள்

கன்சர்வேடிவ், லிபரல், தொழிற் கட்சிகள் ஆகிய மூன்று கட்சிகளையும் சேர்ந்த உறுப்பினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில் காந்திஜி பேசுகையில், இந்தியா கோருவது பூரண சுயேச்சை தான் என்று குறிப்பிட்டார். அவர் பேசியதாவது :

"ராணுவத்திலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் அதிகாரம் இல்லாத ஒன்றை பூரண சுயேச்சை என்றோ அல்லது சுயாட்சி என்றோ கூற முடியாது. அது சாரமற்ற சக்கையாகவே இருக்கும். பிரிட்டிஷ் பாதுகாப்பு இல்லாவிடில், எல்லைப்புற வழியாக இந்தியாமீது படையெடுப்பார்கள் என்ற கூற்று அர்த்தமற்றதாகும். இந்தியா முன்பு எத்தனையோ படையெடுப்புகளைச் சமாளித்திருக்கிறது. எனவே எதிர்காலத்திலும் அத்தகைய படையெடுப்புகளைச் சமாளிக்கும் ஆற்றல் இந்தியாவுக்கு உண்டு. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் என்பது சற்றேறக்குறைய கற்பனையேயாகும். பிரிட்டிஷ் இந்தியாவைக் காட்டிலும் சுதேச மன்னர்களின் இந்தியாவில் இந்திய மக்கள் அதிக அமைதியுடன் வாழ்கிறார்கள். எனவே, நீங்கள் இல்லாவிட்டால் நாங்கள் தற்கொலை செய்து கொள்ளும்படி நேருமென்றோ அல்லது நாங்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு அழிந்துவிடுவோம் என்றோ நினைக்காதீர்கள். எனினும் சுயேச்சை ஆட்சி என்றால், ஒவ்வொரு பிரிட்டிஷ் சிப்பாயையும், பிரிட்டிஷ் அதிகாரியையும் திருப்பி அனுப்பி விடுவோம் என்று பொருள் அல்ல. எங்களுக்குத் தேவையான பிரிட்டிஷாரை நாங்கள் வைத்துக் கொள்வோம். எனினும் அவர்கள் எங்களுடைய நிபந்தனைகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். ஆனால் பிரிட்டிஷ் சிப்பாயோ அல்லது பிரிட்டிஷ் சிவில் அதிகாரியோ ஒருவர்கூட ஒருபோதும் எங்களுக்குக் கீழே வேலை செய்ய மாட்டார் என்று கூறப்படுகிறது. உண்மையில், இந்த இன மமதையை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. நாங்கள்—காங்கிரஸ் மாத்திரமல்ல, எல்லாக் கட்சிகளும்—ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். அதாவது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் நிர்வாகச் செலவு தாங்கமுடியாத அளவுக்கு அதிகம் என்பதும், ராணுவச் செலவு நாட்டையே நசுக்கிக் கொன்று வருகிறது என்பதுமே அம் முடிவாகும். எங்களுக்கு

ஓரளவு சுயேச்சை கிடைப்பதாக இருந்தால்கூட, ராணுவ நிர்வாகம் எங்கள் அதிகாரத்தின் கீழ் வருமா என்பதே அதற்கு உற்ற சோதனையாக இருக்கும். தற்போதைய அடிப்படையில் சிவில் சர்விஸ் அதிகாரிகள் சம்பந்தமான நிர்வாகம்கூட 'பாதுகாப்புகள்' என்ற விஷயத்தின்கீழ் வருகிறது. அதைப்பற்றிய உண்மை என்னவெனில், இந்த சிவில் சர்விஸ் அதிகாரிகள் எவ்வளவு திறமைசாலிகளாக இருப்பினும், எவ்வளவு உழைப்பாளிகளாக இருப்பினும், எவ்வளவு ஆற்றல் படைத்தவர்களாக இருப்பினும், அவர்களால் மிதமிஞ்சிய செலவு ஏற்படுமாயின் நமக்கு அவர்களால் பலனில்லை. இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் ஆயுள் முழுவதும் யாதொரு சிறந்த வைத்திய உதவியுமின்றி காலந்தள்ளுவதைப் போல், நிபுணர்களான உங்களுடைய உதவியின்றியே நாங்கள் எங்களுடைய நிர்வாக அலுவல்களைச் செய்து கொள்வோம். அவர்களுக்கு மிகவும் அதிகமான சம்பளங்கள் கொடுப்பது, லஞ்சத்தையும் ஊழலையும் தடுக்கும் ஒரு பாதுகாப்பாக இருக்குமென்று கூறப்படுகிறது. எனினும் அது லஞ்சத்தையும் ஊழலையும் தடுப்பதற்காகக் கொடுக்கும் மிதமிஞ்சிய விலையேயாகும்.

"தற்போதுள்ள பாதுகாப்புகளின்படி, நாட்டின் வருமானத்தில் 80 சதவிகிதம் அந்நியர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. எங்களுக்கு மிச்சப்படுவது 20 சதவிகிதம் தான். அதைக் கொண்டு நாங்கள் கல்வி, சுகாதாரம் ஆகிய பல்வேறு இலாகாக்களையும் நிர்வகிக்க வேண்டியவர்களாகவும் இருக்கிறோம். எனவே அத்தகைய சுயேச்சையை நான் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன். ஐந்து அல்லது பத்து வருடங்களில் நிச்சயமாக பாப்பராகி விடக்கூடிய ஓர் அரசாங்கத்தின் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்வதைக் காட்டிலும் நான் கட்டாய அடிமைத்தனத்தில் இருந்து கொண்டு, என்னை அந்த அடிமைத்தனத்தை எதிர்த்து நிற்கும் ஒரு கலகக்காரனாகவே பிரகடனம் செய்து கொள்ள விரும்புகிறேன். சுயமரியாதையுள்ள எந்த இந்தியரும், அத்தகைய ஒரு சுயேச்சையை ஒப்புக்கொள்ள மாட்டார் என்பதை உங்களுக்கு நான் கூறத் துணிகிறேன். ஓர் அடிமை என்ற முறையில் உங்களுடன் ஒத்துழைப்பதாகப் பாசாங்கு செய்ய வேண்டும் என்பதே குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு பாதுகாப்புகளின் பொருள் என்பது எனது பணிவான அபிப்பிராயமாகும். அவ்வாறு பாசாங்கு செய்வதைக் காட்டிலும் நீங்கள் என்னைச் சிறைக்கு அனுப்புவதையும், நான் தடியடிக்கு இலக்காக நேருவதையுமே விரும்புவேன்."

# 7

# ஏழை மக்களிடையே வாசம்

காந்திஜி லண்டனில் இருந்தபோது ஏழை பிரிட்டிஷ் மக்கள் வாழும் ஈஸ்ட் எண்ட் பிரதேசத்திலேயே தமது இருப்பிடத்தை அமைத்துக் கொண்டிருந்தார். மாளிகைகளும் ஹோட்டல்களும் இருக்கும் இடத்திலிருந்து அவரது இருப்பிடம் வெகு தூரத்தி லிருந்ததால், அருகிலுள்ள ஓரிடத்தில் அவரது ஜாகையை வைத் துக் கொள்ளும்படி பலரும் வற்புறுத்தினர். லண்டன் வட்ட மேஜை மகாநாடு நடந்த செயின்ட் ஜேம்ஸ் மாளிகைக்கு அரு கில் ஜாகையை வைத்துக் கொள்ளும்படி காந்திஜியைப் பல பிரமுகர்களும் அழைத்தனர். எனினும் ஏழை மக்கள் வசிக்கும் இடம்தான் தம்முடைய வீடு என்று காந்திஜி கூறி அவர்களுடைய அழைப்புக்கு இணங்க மறுத்து விட்டார். தங்களுடைய வீடு களில் அவருடைய (காந்திஜியின்) அலுவலகத்தை வைத்துக்கொள் ளும்படி சில இந்திய நண்பர்களும் காந்திஜியிடம் கூறினர். ஆனல் ஈஸ்ட் எண்ட் பிரதேசத்திலுள்ள தம்முடைய பிரிட்டிஷ் நண்பர்களை விட்டு வரமுடியாதென்று காந்திஜி கூறிவிட்டார். அவ்விஷயமாக ஒரு நாள் காந்திஜி கூறியதாவது: எனக்கு ஏழை மக்கள் வசிக்கும் இந்தப் பிரதேசம்தான் வட்டமேஜை மகாநாடாகும். எனக்கு உண்மையான வட்டமேஜை மகாநாட்டு அலுவல்கள் இங்கே தான் இருக்கின்றன. என்னுடைய உப யோகத்திற்காக வீடுகளைக் கொடுக்க நண்பர்கள் தயாராக இருக் கிறார்கள் என்பதை நான் அறிவேன். எனினும் ஸ்ரீமதி லெஸ் டரின் வீட்டில் வசிப்பதுதான் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக் கிறது. ஏனெனில் நான் எத்தகைய வாழ்க்கையை நடத்தி வர வேண்டுமென்று பிரதிக்ஞை செய்திருக்கிறேனே அத்தகைய வாழ்க்கை முறையை இங்கேதான் நான் காண்கிறேன். எனக் காக ஸ்ரீமதி லெஸ்டருக்கு விசேஷச் செலவு எதுவும் ஏற்படவில்லை. செலவில்லாத இந்தக் காரியத்தை எவரும் செய்ய முடியும். என்றாலும் ஸ்ரீமதி லெஸ்டரும் அவரது சக ஊழியர்களும் எனக்காக தங்களுடைய வசதிகளை மிகவும் குறைத்துக் கொண்டிருக்கிறார்கள். எனக்காக அவர்கள் அதிக வேலைகளை ஏற்றுக்கொண்டிருக்கிறார் கள். நான் இருக்கும் அறைகளை அவர்கள் காலி செய்து விட்டு வராந்தாவில் தூங்குகிறார்கள். எனக்காகவும் என் சக ஊழியர் களுக்காகவும் அவர்கள் அதிகமான வேலைகளைச் செய்ய வேண்டி யிருக்கிறது. அந்த வேலைகளை அவர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். எனவே இத்தகைய சூழ்நிலையிலிருந்து நான் எவ்வாறு துணிந்து பிய்த்துக் கொண்டு செல்ல முடியும்?

# பொருட் குறிப்பு அகர வரிசை

**(எண் - பக்கத்தைக் குறிக்கும்)**

